ராஸ லீலா



18.12.1953-இல் திருவாரூர் மாவட்டத்தில் திருத்துறைப்பூண்டிக்குப் பக்கத்தில் உள்ள இடும்பாவனம் என்ற ஊரில் பிறந்தார். வளர்ந்ததும் பள்ளிப் படிப்பும் நாகூரில். கல்லூரிப் படிப்பு காரைக்கால், திருச்சி, தஞ்சாவூர். கல்லூரிப் படிப்பை முடிக்கவில்லை. சென்னையில் ஒரு ஆண்டு சிறைத் துறையில் எழுத்தர் பணி. 1978-இலிருந்து 1990 வரை தில்லி நிர்வாகம் – சிவில் சப்ளைஸ் துறையில் ஸ்டெனோ. பின்னர் பனிரண்டு ஆண்டுகள் தமிழ்நாடு அஞ்சல் துறையில் பணி. 2012-இலிருந்து முழுநேர எழுத்து.

எகனாமிக் டைம்ஸ் நாளிதழின் அகில இந்தியப் பதிப்பில், 1990 - 2000 என்ற பத்தாண்டுகளின் சாதனையாளர் பட்டியலில் தமிழகத்திலிருந்து இடம்பெற்ற இரண்டு பேர்களில் ஒருவர் சாரு நிவேதிதா. (மற்றொருவர், ரஜினிகாந்த்.)

இவரது நாவல் ‘ஸீரோ டிகிரி’ Jan Michalski சர்வதேசப் பரிசுக்குப் பரிந்துரைக்கப்பட்டது. ஹார்ப்பர் காலின்ஸ் தொகுத்த, இந்தியாவின் ஐம்பது முக்கிய புத்தகங்களில் ஒன்றாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டது.

ஆங்கிலப் பத்திரிகைகளில் இவர் எழுதும் கட்டுரைகள் சர்வதேச அளவில் கவனம் பெற்றவை. லண்டனிலிருந்து வெளியாகும் P.S. Publication-இன்

Exotic Gothic தொகுதியில் இவர் ஆங்கிலத்தில் எழுதிய Diabolically Yours என்ற பேய்க் கதை வெளியாகி உள்ளது.

இவரது எழுத்தை ஆங்கில விமர்சகர்கள் விளதிமீர் நொபக்கோவ், வில்லியம் பர்ரோஸ், கேத்தி ஆக்கர் போன்ற எழுத்தாளர்களோடு ஒப்பிடுகிறார்கள். உலகின் முக்கியமான transgressive வகை எழுத்தாளர்களில் ஒருவராகக் கருதப்படுகிறார் சாரு நிவேதிதா.

நன்றி

இந்த நாவலைக் கணினி உதவியின்றி காகிதங்களிலேயே எழுதினேன். இதன் கையெழுத்துப் படியை ஒவ்வொரு பக்கமாக வாசித்து செப்பனிட்டுக் கொடுத்தவர் தினமலர் ரமேஷ். அவரது எடிட்டிங் இருந்திராவிட்டால் நாவல் இப்போதைய நேர்த்தியான வடிவத்தில் இருந்திருக்காது. அவருக்கு என் உளம் கனிந்த நன்றி.

இந்த நாவல் பிரசித்திபெற்ற மலையாள வாரப் பத்திரிகையான கலா கௌமுதியில் இரண்டரை ஆண்டுகள் வெளிவந்தது. அவர்களுக்கும், இதைத் தமிழிலிருந்து மலையாளத்தில் மொழிபெயர்த்த T.D.ராமகிருஷ்ணனுக்கு என் உளப்பூர்வமான நன்றி.

# உள்ளே

# பித்தனின் கதை
# (முதல் பதிப்பின் முன்னுரை)

1978-இலிருந்து 1990 வரை பனிரெண்டு ஆண்டுகள் தில்லியில் வசித்தேன். அந்தக் காலகட்டம் முழுவதும் சினிமா, இசை, நாடகம், சங்கீதம் என்றே கழிந்தன. அத்தனையும் மண்டி ஹவுஸிலுள்ள ஒரு டஜன் அரங்குகளில் கிடைக்கும். லத்தீன் அமெரிக்க சினிமா, ரஷ்யாவின் போல்ஷாய், மராட்டி நாடகம், ஜெர்மானிய நடனம் என்று உலகின் அத்தனை மூலையிலிருந்தும் கலைக் குழுக்கள் மண்டி ஹவுஸுக்கு வந்து செல்லும்.

ஒரு ஆண்டில் 300 நிகழ்ச்சிகள். பத்தாண்டுகளில் 3000 நிகழ்ச்சிகள். இப்படி, விழித்திருந்த நேரமெல்லாம் சினிமா, நாடகம், இசை என்று வாழ்ந்து அந்த அனுபவம் அத்தனையும் ரத்தமாக ஓடுகிறது என்னுள். இந்த ரத்தத்தை எடுத்துப் பரிசோதித்தால் அதில் பெர்க்மன், டர்க்காவ்ஸ்கி, பஸோலினி, விக்தோர் ஹாரா, ஷாப் ஹாஸ்னி போன்ற கலைஞர்களின் சாரத்தை உங்களால் காணமுடியும். மேலும் என் எழுத்தைக் கூர்ந்து கவனிப்பவர்களுக்குத் தெரியும். தங்களது கலை வெளிப்பாட்டில் உடலின் மொழியைப் பற்றி ஆய்வு செய்பவர்களையே நான் தொடர்ந்து கவனப்படுத்தி வருகிறேன். மார்க்கி தெ ஸாத் (Marquis de Sade), ஜார்ஜ் பத்தாய் (Georges Bataille), வில்லியம் பர்ரோஸ், கேத்தி ஆக்கர் போன்ற எழுத்தாளர்கள். இவர்களில் கேத்தி ஆக்கர் இரண்டாவது பர்ரோஸ் என்று அழைக்கப்படுவர். மிஷெல் பூக்கோ, ஜான் பொத்ரியார் (Jean Baudrillar) போன்றவர்களின் நெருங்கிய தோழி. இதேபோல் சினிமாவில் கேத்ரீன் ப்ரேயா (Catherine Breillat). இவர்களோடு சேர்க்கூடிய ஒரு கலைஞன்தான் Marshall Bruce Mathers III என்ற எமினெம்.

1972ஆம் ஆண்டு கான்ஸாஸ் நகரில் பிறந்தவர் மார்ஷல். விவாகரத்து செய்துகொண்ட தாயிடம் தனியாக வளர்ந்தார். பிறந்தது கான்ஸாஸ் என்றாலும் வளர்ந்ததெல்லாம் டெட்ராய்ட் நகரின் சேரிகளில்தான்.

மார்ஷலின் இளமைப் பருவம் கொடுமையான வறுமையில் கழிந்தது. மார்ஷலுக்கு படிப்பில் நாட்டம் செல்லவில்லை. எண்பதுகளில் பிரபலமாக இருந்த Rap இசையிலேயே அவரது முழுக் கவனமும் சென்றது. பள்ளிப் படிப்பு பாதியிலேயே நின்று போனது.

துவக்கத்திலிருந்து இன்றுவரை Rap இசை கறுப்பின மக்களின் இசையாகவே இருந்து வருகிறது. இந்த நிலையில் வெள்ளை நிறத்தவரான மார்ஷலுக்கு அவரது நிறமே பெரும் தடையாக இருந்தது. இருந்தும், தனது பதினான்காம் வயதிலேயே நடன விடுதிகளில் பாட ஆரம்பித்துவிடுகிறார் மார்ஷல்.

24-ஆம் வயதில் Infinite என்ற முதல் ஆல்பம் Eminem என்ற பெயரில்

வெளிவருகிறது. மார்ஷல் மாதர்ஸ் என்ற பெயரை M & M என்று சுருக்கி அதையே எமினெம் என்று மாற்றிக்கொண்டார். முதல் ஆல்பத்திற்கு சரியான வரவேற்பு கிடைக்கவில்லை. கடும் எதிர்ப்பே எதிர்வினையாக இருந்ததால் மிகவும் ஏமாற்றத்துக்குள்ளான எமினெம் The Slim Shady EP என்ற அடுத்த ஆல்பத்தை வெளியிட்டார். முதல் ஆல்பத்தைப் போல் இல்லாமல் இதற்குப் பெரிய வரவேற்பு கிடைத்தது. கூடவே சில பிரச்னைகளும் எழுந்தன. பிரபல பாப் பாடகியான ப்ரிட்னி ஸ்பியர்ஸ் தன் பாடல்களைப் பிரபலப்படுத்துவதற்காக ஒரு எம்.டி.வி நபரோடு ஓரல் செக்ஸில் ஈடுபட்டார் என்கிறது எமினெம்மின் ஒரு பாடல். அதை எதிர்த்து நீதிமன்றத்தில் வழக்குத் தொடர்ந்தார் ப்ரிட்னி. இதுபோல் பல வழக்குகளை எமினெம் எதிர்கொள்ள வேண்டியிருந்தது.

இன்றைய Rap இசையுலகில் முதன்மை இடத்தைப் பெற்றிருக்கும் எமினெம்மின் ஆல்பம் ஒன்று 20 லட்சம் பிரதிகள் விற்பனை ஆகின்றன. என்றாலும், ஆபாசம் என்ற குற்றச்சாட்டின் பேரில் சில நாடுகளில் இவரது பாடல்கள் தடை செய்யப்பட்டுள்ளன. ஸ்தாபனத்திடமிருந்து கடுமையான எதிர்ப்பை எதிர்கொண்டாலும் மாணவர்களாலும் இளைஞர்களாலும் பெரிதும் கொண்டாடப்படுகிறார் எமினெம்.

ஒருமுறை ‘கிம்’ என்ற தலைப்பில் ஒரு பாடல் எழுதினார் எமினெம். கிம் என்ற பெண்ணை அவளது கணவன் மார்ஷல் கொன்று விடுவதாக முடிகிறது பாடல். Bitch, fuck போன்ற வார்த்தைகள் பாடலின் ஒவ்வொரு வரியிலும் இடம் பெறுகின்றன. எமினெம்: Bullshit you bitch don't fucking lie to me... what the fuck's this guy's problem on the side of me?... Fuck you asshole... you think I'am ugly, don't you? கிம் : It's not that.

எமினெம்: no you think I'am ugly, get the fuck away from me, don't touch me... I hate you... I hate you... I swear to god I hate you... Oh my God I love you... How the fuck could you do this to me.

தனக்கு துரோகம் செய்துவிட்டு மற்றொருவனோடு உறவு கொண்டு விட்டதாகக் கூறி துவேஷத்தின் உச்சத்தில் துப்பும் வார்த்தைகள் தொடர்கின்றன. அடுத்து, கிம்மின் கழுத்தை அறுத்துக் கொல்கிறான் மார்ஷல்.

NOW BLEED BITCH BLEED... BLEED BITCH BLEED... BLEEEEEED!!! BITCH YOU DID ME SO WRONG.. I DONT WANNAA GO ON... LIVIN'IN THIS WORLD WITHOUT YOU... என்று முடிகிறது பாடல்.

எமினெம்மின் மனைவியின் பெயரும் கிம்தான் என்பதால், இப் பாடலிலுள்ள schizophrenic imagination-ஐப் புரிந்து கொள்ளாமல் இதை லௌகீக எதார்த்தமாக எடுத்துக்கொண்டு தற்கொலை முயற்சியில் ஈடுபட்ட கிம் அதிர்ஷ்டவசமாக உயிர் தப்பினார். பிரதியில் வரும் நான், லௌகீக வாழ்வின் நான் என்ற இரண்டையும் பற்றி கேத்தி ஆக்கர் கூறுகிறார்: ‘என் எழுத்தில் வரும் நான் என்பது நான் அல்ல. எழுத்து என்பது ஒரு நாடகம். அதில் நான் ஒரு நடிகை. எனக்கென்று உள்ள பாத்திரத்தை ஏற்று நான் நடிக்கிறேன். அவ்வளவுதான்.’

எமினெம்மின் பாடல்களில் வரும் சம்பவங்களைப் போன்ற உச்சபட்ச மனப்பிறழ்வு நிலைகள் கேத்தி ஆக்கரின் புனைகதைகளிலும் உண்டு.

சொல்லப்போனால், கேத்தியின் எழுத்தின் theoretical paradigm என்பதே schizophreniaதான். எமினெம் பயன்படுத்தும் பெரிய எழுத்துக்களைக்கூட (capital letters) கேத்தியிடம் அப்படியே காணமுடியும். திடீர் திடீரென்று பெரிய எழுத்துக்களைப் போடும் கேத்தி, உச்சகட்ட வெறியுடன் எழுத்தை விட்டுவிட்டு தனது கனவுகளின் வரைபடங்களை வரைய ஆரம்பித்துவிடுகிறாள். அதுவும் களைத்த பிறகு அரபி மொழியில் எழுதத் துவங்குகிறாள். அவளது புனைவுலகில் இன்னும் என்னவெல்லாமோ நடக்கிறது. இது எல்லாம்தான் எமினெம்மில் ஊளையாகவும், பகடியாகவும், குரூர வார்த்தைகளாகவும், அவரது நடனத்தில் உடலின் மொழியாகவும் வெளிப்படுகிறது.

(கேத்தி ஆக்கர் தன் வாழ்நாளில் பல்வேறு Rap இசைக் குழுக்களுடன் தன்னை இணைத்துக்கொண்டவள் என்பது இங்கே மற்றொரு முக்கியமான தகவல்.)

எமினெம்மின் புகழ் பரவப் பரவ, அவரது அன்றாட வாழ்க்கையின் பிரச்னைகளும் அதிகரிக்க ஆரம்பித்தன. தற்கொலை முயற்சிக்குப் பிறகு எமினெம்மை விவாகரத்து செய்கிறார் கிம். மட்டுமல்லாமல், தங்கள் மகள் ஹெய்லியை எமினெம் சந்திக்கக்கூடாது என்றும் தடை செய்தார். அதே காலகட்டத்தில், எமினெம்மின் பாடல்கள் தன்னை இழிவுபடுத்துவதாகக் கூறி அவர் மீது மானநஷ்ட வழக்குத் தொடுத்தார் எமினெம்மின் தாய்.

Subversive எழுத்து என்பதற்கு மிகச் சரியான உதாரணம், எமினெம்மின் பாடல்கள். சில ஆண்டுகளுக்கு முன்பு ‘We are American’என்ற பாடலில் ‘I don't rap for dead Presidents, I'd rather see tha president dead’ என்று எழுதியதற்காக சி.ஐ.ஏ விசாரணைக்கு உட்படுத்தப்பட்டார் எமினெம்.

பலமுறை க்ராமி விருது பெற்றுள்ள எமினெம் ஒருமுறை எல்ட்டன் ஜானோடு டூயட் பாடினார். எல்ட்டன் ஜான் ஒரு ஓரினச் சேர்க்கையாளர் என்பது பகிரங்கமாக அறியப்பட்ட விஷயம். ஜானை மேடையிலேயே கட்டிப்பிடித்து ஆடினார் எமினெம்.

உடல் துய்ப்பையும், மனப் பிறழ்வு சார்ந்த அழகியலையும் (schizoid aesthetics), கலக மொழியையும் எமினெம் அளவுக்கு இசையில் முன்வைத்தவர்கள் யாரும் இல்லை என்றே சொல்லலாம். மதம், அரசு, குடும்பம், மொழி போன்ற அனைத்து அதிகார மையங்களையும் உடைத்து நொறுக்குபவை அவரது பாடல்கள்.

மர்க்கி தெ ஸாத்-க்குப் பிறகு அவரளவுக்குத் தீவிரமான எதிர் அழகியலைப் பதிவு செய்தவர்களுள் மிக முக்கியமானவர் எமினெம் என்பது என் கருத்து. தன் வாழ்நாளின் பெரும்பகுதியை சிறையில் கழித்தவர் ஸாத். ஆனால் இரண்டு நூற்றாண்டுகள் கடந்துவிட்டன. இப்போது எழுத்துக்காக ஒருவரை சிறையில் அடைப்பது அவ்வளவு சுலபமல்ல. இருந்தாலும், ஃபத்வா கொடுக்கலாம். நீதிமன்றத்துக்கு இழுத்தடித்துத் துன்புறுத்தலாம். கவிதையின் அழகியலை எதார்த்த உலகோடு தொடர்புபடுத்தி குற்றச்சாட்டுகளை அள்ளி வீசலாம். எமினெம் இதையெல்லாம் எதிர்கொள்ள வேண்டியிருந்தது. அதன் காரணமாகவே அதிக போதை மருந்துகளையும், மதுவையும் உட்கொள்ள ஆரம்பித்தார். ‘I don't know how long I am going to be on this planet, So while I am here, I might as well make the most of it’என்று ஒருமுறை கூறினார் எமினெம். ஒரு டஜன் வாழ்நாளுக்கான

துயரத்தையும், கொண்டாட்டத்தையும் தனது முப்பத்திரண்டே வயதில் வாழ்ந்து விட்ட எமினெம் ஒருமுறை தற்கொலை செய்து கொள்ளவும் முயற்சி செய்தார்.

இந்தச் சந்தர்ப்பத்தில் நான் இவ்வளவு விரிவாக எமினெம் பற்றி எழுதியதற்குக் காரணம், என் கலை சிருஷ்டியை உருவாக்கும் பித்த நிலையைப் பற்றி நானே புரிந்துகொள்வதற்காகத்தான். உலகில் எல்லா கலைஞர்களும் இப்படித்தான் இருந்திருக்கிறார்கள். உதாரணமாக, புண்டரீக முனி என்று ஒருவர். இவருக்கு ‘மனத்துள்ளான், மாகடல் நீருள்ளான்’ என்று பேயாழ்வார் கூறியுள்ளபடி, திருப்பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் திருமாலைப் பார்க்கவேண்டும் என்ற ஆவல். கூப்பிட்டால் வரமாட்டான். எனவே கடலிலுள்ள நீரை ஒரு கூடையால் மொண்டு மொண்டு ஊற்ற ஆரம்பிக்கிறார். இப்படியே ஊற்றினால் ஒரு கட்டத்தில் கடல் நீர் வற்றித்தானே ஆக வேண்டும்? அப்போது திருமாலைப் பார்த்துவிடலாம் என்பது அவர் திட்டம். இதைப் பார்த்தான் திருமால். ‘ஆகா, இப்படிப்பட்ட ஒரு பித்தனுக்கல்லவா நாம் காட்சி தர வேண்டும்?’ என்று எண்ணி ஆதிசேஷனையும் விட்டுவிட்டு கடற்கரை ஏகினான். ஏகியவன் புண்டரீக முனிவனுக்கு ஒரு முதியவர் வடிவில் காட்சி தந்தான்.

மகாபலிபுரத்தில் உள்ள திருக்கடல்மல்லை என்று அழைக்கப்படும் இத்தலம் வைணவர்களின் 108 திவ்ய தேசங்களில் ஒன்று. இங்குள்ள திருமால், ஆதிசேஷன் இல்லாமல் வெறும் தரையில் அனந்தசயன நிலையில் காட்சியளிக்கிறான். (ஸ்தல சயனத்துறைவார் என்பது பெயர்).

> கம்பன் தனது ராமாயணத்தின் தற்சிறப்புப் பாயிரத்தில் இவ்வாறு கூறுகிறான்:
>
> முத்த மிழ்த்துறை யின்முறை போகிய
>
> உத்த மக்கவி கட்கொன் றுணர்த்துவென்
>
> பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
>
> பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவவோ.

மகாகவியான கம்பனே தன்னைப் பித்தன் என்று கூறிக்கொள்ளும் போது, அவன் வழியில் வந்த பித்தனிலும் பித்தனான நான் எங்ஙனம் சொல்லிக்கொள்வது? இந்த ராஸ லீலாவும் ஒரு பெருமாளின் கதைதான். பித்தன் எழுதிய பித்தனின் கதை. வாருங்கள். அந்தப் பித்த வெளிக்குள் சென்று விளையாடுவோம்.

சாரு நிவேதிதா

சென்னை-92

31.8.2006

# பாகம்: ஒன்று

கண்ணாயிரம் பெருமாளின்
நாற்பது கதைகளும்
சில பின்குறிப்புகளும்

Let us have madness openly,
O men of my generation.
Let us follow
The footsteps of this
slaughtered age:
See it trail across Time's dim
land
into the closed house of
eternity
With the noise that dying has
With the face that dead things
wear
nor ever say
we wanted more; we looked to
find
An open door, an utter deed of
love,
Transforming day's evil
darkness;
but we found extended hell & fog
upon the earth,
& within the head
A rotting bog of lean huge
graves.

# முன் குறிப்பு : 1

இந்த ஊரை விட்டு ஓடிவிட வேண்டும் என்பது மட்டுமே அவனுடைய எண்ணமாக இருந்தது. எங்கு பார்த்தாலும் பன்றிகள். சாக்கடை. சுடுகாட்டிலிருந்து வரும் பிணவாடை. முற்கள் மண்டிக்கிடக்கும் கருவேல மரங்கள். பன்றிகளுக்கு பயந்துகொண்டே மலம் கழிக்கவேண்டிய நிலை. கொஞ்சம் அசந்தால் அவை நம் புட்டத்தைக் கடித்துவிடும். என்ன செய்வது. பன்றிகளின் பசி பன்றிகளுக்குத்தானே தெரியும்.

ஆனால் பெருமாளின் பிரச்னை இந்தச் சூழல்கூட அல்ல. அவனுடைய உடம்புதான் அவனுடைய பிரச்னை. தலையாய பிரச்னை. தீயாய் பற்றியெறியும் காமம். கோடி வீட்டில் குடி வந்திருக்கும் நாச்சியார் வீட்டுக் கடைக்குட்டிப் பெண்ணிலிருந்து பெரியம்மாவின் மகள் மணிமேகலை வரை பல பெண்களோடும் அவனுக்குத் தொடர்பு இருந்தது. ஆனாலும் தீ அடங்கவில்லை. காலையில் கண் விழித்ததிலிருந்து இரவு கண்ணுறங்கும்வரை பெண்கள் பெண்கள் என்று பேயாய்ப் பறக்கும் மனமும் உடலும். அப்போது obsession என்ற வார்த்தை அவனுக்குப் பரிச்சயமாகியிருக்கவில்லை.

கன்னி வேட்டையில் கவனம் சிதறியதால் கல்லூரித் தேர்வுகளில் பூஜ்யங்களாக வாங்கி அந்த அவமானம் வேறு சேர்ந்து கொண்டது. இதெல்லாம் போதாதென்று அவனுக்கும் மணிமேகலைக்கும் இருந்த தேக சம்பந்தம் வேறு வீட்டில் தெரிந்து, தன் வீட்டுக்கே திருடனைப்போல் மறைந்து மறைந்து வர வேண்டியதாயிற்று. காலையில் வெளியே சென்றால் இரவு வீடு திரும்ப பதினொன்று ஆகிவிடும். அப்படியே வந்து வீட்டுத் திண்ணையில் படுத்துக்கொள்வான் பெருமாள்.

இதுபோன்ற காரணங்களால் அவனுக்குத் தன் வீடு, தன் ஊர் என்ற எண்ணங்கள் குறைந்து, தன்னை யாராலும் அடையாளம் கண்டுபிடிக்க முடியாத வேறோர் இடத்துக்கு ஓடிவிட வேண்டும் என்ற எண்ணம் வலுக்கலாயிற்று.

தமிழ்நாடு பப்ளிக் சர்வீஸ் கமிஷன் க்ரூப் - 4 தேர்வுக்கு விண்ணப்பம் செய்தான். குமாஸ்தா வேலை. விண்ணப்பிக்கும்போதே எந்தத் துறை என்பதையும் தேர்ந்தெடுக்க வேண்டும்; பெருமாளுக்குப் பெரிய எழுத்தாளனாக வேண்டும் என்ற எண்ணம் இருந்ததால் சிறைத்துறையைத் தேர்ந்தெடுத்தான். திருடர்களோடு பழகினால் எழுத்தாளனாகிவிடலாம் என்று எப்படி அவனுக்குள் ஒரு எண்ணம் புகுந்ததென்று இப்போது அனுமானிக்க முடியவில்லை. ஆனால் அந்தப் பிராயத்தில் அவனுக்கு ஜான் ஜெனே பற்றி எதுவும் தெரிந்திருக்கவில்லை என்பதை மட்டும் என்னால் உறுதியாகச் சொல்ல முடியும்.

ஒரு ஜெயிலில் குமாஸ்தாவாக இருந்து கைதிகளோடு பழகி

எழுத்தாளனாவதைவிட, தானே திருடனாகி எழுத்தாளனாவது இன்னும் சிலாக்கியமென்று அவனுக்குத் தோன்றினாலும் அதற்கான தைரியம் அவனிடமில்லை.

ஒரே ஒரு முறை ஏகாதசி இரவன்று நண்பர்களுடன் சுரைக்காய் திருடச் சென்றபோது நடந்த சம்பவம் இன்றைக்கு நினைத்தாலும் அவனுக்கு லஜ்ஜையை ஏற்படுத்தக்கூடியதாக இருந்தது. உடன், மூன்று நண்பர்கள். பெருமாள் கோவில் மேல வீதியிலுள்ள ஒரு வீட்டை ஏற்கெனவே தேர்ந்தெடுத்து வைத்திருந்தார்கள். நள்ளிரவில்கூட வீட்டில் உள்ளவர்கள் திருடர்களை எதிர்பார்த்தும், ஏகாதசி இரவன்று கண் விழித்தால் புண்ணியமென்றும் தாயம் விளையாடியபடி கண்விழித்துக்கொண்டிருப்பார்கள். ஆனால் என்னதான் கண் விழித்தாலும் விடிகாலை மூன்று மணியளவில் கண்ணயர்ந்து விடும் என்பதால் சரியாக மூன்று மணிக்கு அந்த வீட்டின் முள் வேலியை அகற்றிவிட்டு தோட்டத்துக்குள் புகுந்தனர் பெருமாளும் நண்பர்களும். என்ன ஒரு துரதிருஷ்டம்! அந்த வீட்டுக்காரர்கள் அந்த நேரத்திலும் விழித்துக்கொண்டு இருந்தார்கள். சத்தம் கேட்டதும் டார்ச் லைட்டை அடித்தபடி ஒரு படையே வந்துவிட்டது. முட்கள் உடம்பில் கீற விழுந்தடித்துக்கொண்டு ஓடி மறைந்தது 'திருடர்' கூட்டம். பயத்தில் மூத்திரம்தான் வருமென்றால் பெருமாளுக்கு ஸ்கலிதமேயாகியிருந்தது.

திருட்டிலும் காதலைப்போலவே ஒரு த்ரில் இருப்பதை அப்போது உணர்ந்தான் பெருமாள். ஆனால் தன்னைப் போன்ற கோழைகள் திருட்டுத் தொழிலுக்கு லாயக்கில்லை என்பதும் அப்போது அவனுக்குத் தெரிந்துபோயிற்று.

சர்வீஸ் கமிஷன் பரீட்சையில் தேர்வு பெற்றதும் பெருமாள் நினைத்தபடி அவனுக்கு ஜெயிலில் வேலை கிடைக்கவில்லை. ஜெயில்களையெல்லாம் மொத்தமாக நிர்வாகம் செய்யும் தலைமையிடத்திலேயே ஒரு குமாஸ்தாவாக நியமிக்கப்பட்டான் பெருமாள்.

ஒரு வருட காலம் குமாஸ்தாவாக சென்னை நகரில் வேலை பார்த்த பெருமாள் செய்தது என்ன? செக்கு இழுக்கும் மாடு என்ன செய்கிறதோ அதுவேதான். காலையில் மெதுவாக எழுந்து மேன்ஷனின் கழிவறையும், குளியலறையும் எப்போது காலியாகிறதோ அப்போது காலைக் கடன்களை முடித்துவிட்டு பத்து மணிக்கு ஆபீஸ் கிளம்புவான். சிறைக் கைதிகள் - இல்லை, அப்படி எழுதக் கூடாது. சிறைவாசிகள் என்றுதான் எழுத வேண்டும் என உத்தரவிடுவார் சூப்ரண்ட் அண்ணாசாமி - சரி, சிறைவாசிகளுக்குத் தர வேண்டிய பீடிகள் விவகாரமாக ஒவ்வொரு ஜெயில் சூப்ரண்டுக்கும் சிறைத்துறை தலைமையகத்துக்கும் இடையே நடக்கும் வருடக்கணக்கான கடிதப்போக்குவரத்துச் சாகரத்துக்குள் மாலை ஐந்து மணி வரை மூழ்கிப்போவான் பெருமாள். பீடியைப் போலவே, சிறைவாசிகளுக்குத் தேவையான உணவுப் பொருள்கள், சீருடை மற்றும் இன்னோரன்ன விஷயங்களுக்காகவும் தனித்தனியே செக்‌ஷன்கள் இருந்தன. உதாரணமாக, கேழ்வரகு செக்‌ஷன், பருப்பு செக்‌ஷன், மூட்டை செக்‌ஷன், ஸானிடரி நாப்கின் செக்‌ஷன் (பெண்கள் சிறைக்காக), எட்ஸெட்ரா. ஆனால் சிறைவாசிகளுக்கு ஹெட்ரோசெக்ஸ் தடை செய்யப்பட்டிருப்பதால் ஆணுறைகள் வழங்கப்படுவதில்லை.

பெருமாள் இருந்தது பீடி செக்ஷன். அவன் அந்த அலுவலகத்தில் வேலை செய்த ஒரு வருட காலத்திலும் அவனை ஆச்சரியத்தில் ஆழ்த்திய ஒரு விஷயம் - அவனது சக குமாஸ்தாக்கள் யாரும் தமக்குள் ஒருவரோடு ஒருவர் பேசிக்கொண்டதையோ பேசிச் சிரித்துக்கொண்டதையோ அவன் பார்த்ததேயில்லை என்பதுதான்.

பதினொன்றரை மணிக்கு ஒரு எவர்சில்வர் தூக்கில் காப்பி கொண்டு வருவான் ஒரு பொடியன். அப்போது மட்டும் தங்கள் இருக்கையிலிருந்து எழுந்து பக்கத்திலுள்ள காப்பி அறைக்குச் சென்று காப்பியைக் குடித்தபடியே ரகசியம் பேசும் குரலில் கிசுகிசுத்துக்கொள்வார்கள் சிறைத்துறைத் தலைமையக ஊழியர்கள். கொஞ்சம் சத்தம் போட்டுப் பேசினாலும் ஐ.ஜி காதில் விழுந்துவிடும். விழுந்தால்? உடனடியாக ஏதோ ஒரு ஜெயிலுக்கு மாற்றப்பட்டுவிடுவார் அந்த குமாஸ்தா. ஸ்கூலில் படித்துக்கொண்டிருக்கும் அவர் குழந்தைகளின் படிப்பு என்னாவது? கல்வியாண்டு முடிந்த பிறகு மனைவி மற்றும் குழந்தைகளை அழைத்துக்கொள்ளலாம் - அதுவரை தான் மட்டும் மாற்றப்பட்ட ஊரில் வேலை பார்க்கலாம் என்றால் அரசாங்கம் கொடுக்கும் சொற்ப ஊதியம் இரண்டு எஸ்டாப்ளிஷ்மெண்ட்டுகளுக்குப் போதுமானதாக இராது. ஆக, வேற்றூருக்கு மாற்றும் உத்தரவு என்பது ஒரு குமாஸ்தாவைப் பொறுத்தவரை வேலை நீக்க உத்தரவைப் போன்றதுதான். இதெல்லாம் சக குமாஸ்தாக்களிடமிருந்து பெருமாள் கேட்டறிந்துகொண்ட தகவல்கள். கிசுகிசு குரலில்தான்.

அது மட்டுமல்ல. ஜெயிலுக்கு குமாஸ்தாவாகப் போனால் அந்த ஜெயில் சூப்ரண்ட்டுக்கு நீங்கள் ஒரு கொத்தடிமையைப்போல் ஊழியம் செய்ய வேண்டும் என்றார்கள் குமாஸ்தாக்கள். அப்படியென்றால்?

சூப்ரண்ட்டின் மனைவியின் உள்பாவாடையைக்கூட துவைத்துக் கொடுக்க வேண்டியிருக்குமாம். ஒருவேளை அந்த சூப்ரண்ட் ஸ்த்ரீலோலராக இருந்து, நீங்கள் ஒரு பெண்ணாக இருந்தால்?

இதோ இந்தப் பத்திரிகைச் செய்தியைப் படித்துப் பாருங்கள் :

...(ஊர்ப் பெயர்) மத்தியச் சிறையின் கண்காணிப்பாளரான ராஜமாணிக்கத்தின் வீட்டுக்கதவு ஒரு நாள் அதிகாலையில் தட்டப்பட்டு அவருக்கு சஸ்பென்ஷன் உத்தரவு வழங்கப்பட்டது. ஓய்வுபெற ஐந்து மாதமே இருக்கும் நிலையில் ஏன் சஸ்பென்ஷன் உத்தரவு என விசாரித்தபோது கேள்விப்பட்ட விஷயங்கள்:

‘சார்... இந்த ஆள் லேசுப்பட்டவர் இல்லை. அவர், ஜெயிலுக்குள்ள ரவுண்ட்ஸ் வர்றப்ப எந்தக் கைதியாவது தெரியாத்தனமா எதிர்ல வந்தாப் போதும்... அவங்க கதி அவ்ளோதான்... அடிச்சி மிதிச்சி குப்பையா அள்ளிப்போட்ருவாரு. சேலத்தில் சிறை அதிகாரியா இருந்தப்பவும் சும்மா இருக்காம இறந்துபோன தலைமை வார்டன் ஒருத்தரின் மகளான வனிதாவை வளைச்சார். வாரிசு அடிப்படையில் வேலை வாங்கி, லவ் மேரேஜூம் பண்ணிக்கிட்ட பொண்ணு அது. ஒரு டைப்பிஸ்ட் பொண்ணையும் கீப்பா வச்சிருந்த அவர், அவ மூலமா வனிதாவை வளைச்சார். அந்த வனிதா தற்கொலை பண்ணிக்கிட்டு செத்துப்போய்ட்டா. அப்படிப்பட்ட கொலை பாதகன் சார் அந்த ஆள்...’

‘இங்க சிறை மருத்துவமனைல ஒரு நர்சம்மா இருந்தாங்க. ரொம்ப நல்ல டைப். அவங்களை தினம் சாயந்தர நேரத்துல வந்து தனக்கு பிரஷர் செக்கப் செய்யணும்னு ஆர்டர் போட்டார் அவர். அப்படி அவங்க போற நேரத்தில் ரெட்டை அர்த்த வசனம் பேசி அவங்களை வளைக்க முயற்சி செஞ்சார். அவங்க எதுக்கும் பிடிகொடுக்கலை. இந்த நிலையில் ஒரு நாள் சூப்ரண்ட் ரூம்ல இருந்து அவங்களோட அலறல் சத்தம் கேட்க சிறை வார்டன்கள் ஓடிப்போய் பார்த்தா... அங்க அந்த நர்ஸ் தரையில் மயக்கமா கிடந்திருக்காங்க. பிறகு அவுங்க ட்ரான்ஸ்ஃபர் வாங்கிக்கிட்டுப் போயட்டாங்க. இது மட்டும் இல்லீங்க. பெண்கள் பகுதி லேடி வார்டன் ஒருத்தர்ட்டயும் சில்மிஷம் பண்ணிக்கிட்டிருந்தார்.’

இதுபோல் சிறைக் கண்காணிப்பாளர்கள் தமது அதிகாரத்தின் கீழுள்ள சிறைக் கைதிகளைப் பார்க்க வரும் அவர்களது மனைவிமார்களை பயமுறுத்தி - அல்லது அந்த சிறைக் கைதிகளுக்கு பலவிதமான சலுகைகளை வழங்கி - வளைத்துப் போட்டு தேக சம்பந்தம் செய்துகொள்ளும் சம்பவங்களை நான் எழுதப் புகுந்தால் இந்த நாவல் முன்குறிப்புகளிலேயே முடிந்துபோய்விடும் என்பதால் அவ்விபரங்களை இங்கே தவிர்த்துவிட்டு மேலே செல்கிறேன்.

சரி. ஸ்த்ரீலோலராக இருந்தால் இப்படி... Gayயாக இருந்தால்?

இது தவிர, தலைமையகத்திலிருந்து ஒரு மத்தியச் சிறைக்கு மாற்றம் செய்யப்பட்ட குமாஸ்தா ஒருவர் ஜெயில் சூப்ரண்டின் மனைவிக்கு உள்பாவாடை துவைத்துக்கொடுத்து, ஸானிடரி நாப்கின் வாங்கிக் கொடுத்து அப்படியே அவர் வீட்டு பெட்ரூம் வரை முன்னேறிவிடவே, இந்த விஷயம் தெரிந்துபோன சூப்ரண்ட் அவரைக் கொலை செய்து அந்தக் கொலையை தன் செல்வாக்கைப் பயன்படுத்தி தற்கொலை என்று நம்ப வைத்துவிட்டாராம். இப்படி பல கதைகள்.

இதையெல்லாம் உத்தேசித்துத்தான் பெருமாளின் சக குமாஸ்தாக்கள் தலைமையக அதிகாரிகளின் குண்டிகளை நக்கிக்கொண்டிருந்தார்கள்.

பதினொன்றரை மணிக்குக் கிடைக்கும் ஐந்து நிமிட காப்பி நேரம் கழிந்த பிறகு திரும்பவும் சிறைவாசிகளுக்குத் தரப்படும் பீடிக்கட்டுகளைப் பற்றிய ரிமைண்டர் லெட்டர்களில் மூழ்கி ஒரு மணிக்கு எழுந்தால் இரண்டு மணிவரை லஞ்ச் ப்ரேக். பிறகு இரண்டு மணியிலிருந்து ஆறு மணி ஏழு மணியென்று அண்ணாசாமிக்கு எப்போது மூட் வந்து போகச் சொல்கிறாரோ அதுவரை ரிமைண்டர்களை எழுதிக்கொண்டிருப்பான் பெருமாள்.

மேன்ஷன் ரூம் வாழ்க்கை பற்றி என்ன சொல்ல? சாந்தி மேன்ஷன் என்பது அதன் பெயர். லொகேஷன்: கீழ்ப்பாக்கம் மில்லர்ஸ் ரோட் முனை. இந்த மேன்ஷனுக்கென்று தனிப்பட்ட விசேஷ குணங்கள் ஏதும் கிடையாது. நாற்பது வயதுவரை திருமணமாகாதவர்கள், திருமணமாகி குழந்தை பெற்ற பிறகு ட்ரான்ஸ்ஃபர் காரணமாக சென்னைக்கு வந்த நடுத்தர வயதைத் தாண்டியவர்கள் என்ற இரண்டு ரகத்தினர்தான் எல்லா மேன்ஷன்களிலும் மெஜாரிட்டியாக இருந்தவர்கள்.

பெருமாளின் ரூம் மேட் முதல் ரகத்தைச் சேர்ந்தவர். பெருமாளும் அவரும் அந்த ஒரு வருட காலத்தில் ஓரிரண்டு வார்த்தைகள் கூடப் பேசியதில்லை.

லேசான புன்னகையுடன் சரி. அதைவிட ஆச்சரியம், அவருடைய பெயர்கூட பெருமாளுக்குத் தெரியாது என்பதுதான்.

## முன் குறிப்பு: 2

அப்போதெல்லாம் அரசு அலுவலக வேலை நாட்கள் ஆறாக இருந்தன. ஆனால் பெருமாளின் சக ஊழியர்கள் ஏழு நாட்களும் வேலைக்கு வந்து கொண்டிருந்தனர். ‘ஆ.ஃபீஸுக்கு வர்றதே நல்லாருக்கு சார். வீட்ல இருந்தா பொண்டாட்டி புள்ளைங்களோட தொல்ல தாங்க முடியல’ என்றார் பெருமாளின் பக்கத்து சீட் ஹெட் க்ளார்க் கனகசபை. பெருமாளையும் ஞாயிற்றுக்கிழமை ஆ.ஃபீஸ் வரச்சொல்லி சொல்லிக்கொண்டிருந்தார் அண்ணாசாமி. எல்லாவற்றுக்கும் பூம் பூம் மாடு மாதிரி தலையாட்டிக்கொண்டிருந்த பெருமாள் இதற்கு மட்டும் சம்மதிக்கவில்லை. வர முடியாது என்று பிடிவாதமாக மறுத்துவிட்டான்.

‘லீவுல ரூம்ல இருந்துகிட்டு என்னா சார் பண்ணப்போறீங்க? ஆ.ஃபீஸுக்கும் உங்க ரூமுக்கும் பத்து நிமிச நடை. நாங்கள்ளாம் பாருங்க. தாம்பரத்துலேர்ந்தும் செங்கல்பட்லேர்ந்தும் வர்றோம். உங்களுக்கு அப்படியா? அஞ்சு நிமிசத்துலெ நடந்தே வந்திர்லாம்’ என்று குழைவாக சொல்லிப்பார்த்தார் அண்ணாசாமி.

‘அதுக்கு பதிலா ஒர்க்கிங் டேஸ்ல இன்னும் ஒரு மணி நேரம் அதிகமா இருந்துட்றேன். ஞாயித்துக்கிழமை வர்றது எனக்குக் கஷ்டம்’ என்று இறுக்கமான குரலில் பதில் சொல்வான் பெருமாள். இந்த உரையாடல் பெருமாளின் சிறைத்துறை குமாஸ்தா வாழ்வில் மாதம் ஒருமுறை தவறாமல் இடம்பெற்று வந்தது. கனகசபை கூட முயற்சி செய்து பார்த்தார். எதற்கும் மசியவில்லை பெருமாள்.

பெருமாளின் பிடிவாதத்தைப் பார்த்ததும் அந்த மண்டுகளுக்கு வேறு ஒரு சந்தேகம் வந்துவிட்டது - பையன் ஏதாவது பெண் விவகாரத்தில் சிக்கியிருக்கிறானோ என்று. சாடைமாடையாகக் கேட்டுப்பார்த்தார் கனகசபை.

‘வயித்தெரிச்சலைக் கிளப்பாதீங்க சார்’ என்று ஒரே வார்த்தையில் முடித்துவிட்டான் பெருமாள். (சார் என்ற வார்த்தையை உபயோகப்படுத்தும்போது அவனுக்கே கூனிக்குறுகிப்போனது. தானும் அவர்களைப் போலவே ஆகிவிட்டோமோ என்று ஒருகணம் பயந்து போனான்.)

அந்த மண்டுகள் சந்தேகப்படுவதைப்போல் நிஜத்தில் நடந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று நினைத்துக்கொண்டான். உலகில் - அதாவது, புரசைவாக்கம் மற்றும் கீழ்ப்பாக்கத்தில் - எத்தனையோ பெண்கள் இருந்தும் தனக்கு மட்டும் ஒரு பெண் கூட கிடைக்காமல் போவதன் காரணம் உண்மையிலேயே அவனுக்குப் புரியவில்லை.

இப்போது இதை எழுதிக்கொண்டிருக்கும் 2005க்கு முப்பது ஆண்டுகள் முன்பும்கூட புரசைவாக்கம் ஏரியா இப்போது இருப்பதைப்போலவேதான்

ஜனநெருக்கடி மிகுந்ததாக இருந்தது. கீழ்ப்பாக்கம் எப்போதுமே மேட்டுக்குடி வர்க்க ஏரியா என்பதால் அங்கே கூட்டத்தை எதிர்பார்க்க முடியாது. ஆனால் புரசைவாக்கத்தில் கண்ணெதிரே இவ்வளவு பெண்கள் போய்க்கொண்டும் வந்துகொண்டும் இருந்தாலும் அவனை ஒரு பெண்கூட திரும்பிப் பார்ப்பதாக இல்லை.

அந்த ஒரு வருட காலமும் அவனுடைய உலகம் ஆண்களின் உலகமாகவே இருந்தது.

இந்த கனகசபையைப் பார்த்தால் பெருமாளுக்கு வேடிக்கையாக இருக்கும். எப்போதுமே அதிகாரிகளிடம் குழைந்து குழைந்து பேசி அவருடைய பேச்சும் பாடி லேங்வேஜூம் கிட்டத்தட்ட ஒரு கழைக்கூத்தாடியின் குரங்கைப்போல் மாறிப்போயிருந்தது. ம்ஹூம் அந்தக் குரங்கிடம்கூட ஒரு இயல்புத்தன்மை இருக்கும். ஆனால் கனகசபையின் ஒவ்வொரு அங்கத்திலும் மனித இயல்புக்கு மாறானதொரு செயற்கைத்தன்மை தெரிந்தது. அவர் அண்ணாசாமியிடம் குட்மார்னிங் சொல்லும்போதும் பேசும்போதும் அவர் செய்யும் அங்க சேஷ்டைகளைப் பார்க்க வேண்டுமே... தெருக்கூத்தில் வரும் விதூஷகன் தோற்றுப் போவான். கனகசபை மட்டுமல்ல; அந்த அலுவலகத்திலுள்ள அத்தனை பேருடைய நடையுடை பாவனைகளும் ஒரே அச்சில் வார்த்ததுபோல் ஒன்று போலவே இருந்தன என்பதுதான் ஆச்சரியமான விஷயம்.

இதில் மற்றொரு ஆச்சரியம் என்னவென்றால், இந்த குமாஸ்தா கூட்டத்திற்கும் பெருமாளின் ரூம் மேட்டுக்கும் இருந்த ஒற்றுமை. ஒரு சவுக்கை எடுத்து அத்தனை பேரையும் விளாசித்தள்ள வேண்டும்போல் ஒரு வெறி பிறக்கும் பெருமாளுக்கு. அதிலும் அவர்களுடைய சிரிப்பு இருக்கிறதே... ‘எந்த விலங்கினாலும் சிரிக்க முடியாது; சிரிப்பு என்பது மனிதனுக்கு மட்டுமே வழங்கப்பட்ட கடவுளின் பரிசு’ என்றெல்லாம் அவன் கேள்விப்பட்டிருக்கிறான். அப்படிச் சொல்பவர்கள் இந்த குமாஸ்தாக்களின் சிரிப்பைப் பார்க்க வேண்டும். ஒரே பஞ்ச்சில் இவர்களின் மூக்கை உடைக்க வேண்டும்போல் தோன்றும் அவனுக்கு. அதோடு, இவர்களின் உலகில் கோபம் என்ற ஒரு உணர்வுக்கு இடம் உண்டா என்பதும் அவனுக்குச் சந்தேகமாக இருந்தது. ஆட்டு மந்தைக் கூட்டம்...

இந்தக் கூட்டத்தில் ஒருவரையொருவர் பெயர் சொல்லி அழைத்துக்கொள்வதில்லை என்பதையும் இங்கே வந்து சேர்ந்த ஒரு சில தினங்களில் கவனித்து வைத்துக்கொண்டான் பெருமாள். எல்லோரையும் பெயர் சொல்லிக் கூப்பிடும் உரிமை ஒரே ஒருவருக்குத்தான் இருந்தது. அது ஜ.ஜி. மற்றவர்களெல்லாம் ஒருவரையொருவர் ஏவொன் சார், ஏட்டூ சார், பீவொன் சார், பீட்டூ சார் என்றுதான் அழைத்துக்கொண்டனர். பெண்களாக இருந்தால் ஏவொன் மேடம், ஏட்டூ மேடம், பீவொன் மேடம், பீட்டூ மேடம்...

சூப்ரண்டுகள் மட்டும் தமது சபார்டினேட்டுகளை அவர்களின் பெயரோடு சார் சேர்த்து அழைத்தனர். அதுகூட எப்போதாவதுதான். மற்றபடி அவர்களும் ஏவொன் சார், ஏட்டூ சார், பீவொன் சார், பீட்டூ சார்தான்.

தன் பெயர் இப்படி ஒரு நம்பராக மாறிவிட்டது பற்றி மிகுந்த மனோவியாகூலத்திற்கு உள்ளானான் பெருமாள்.

ஞாயிற்றுக்கிழமைகளும்கூட பெருமாளின் வாழ்வில் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தவில்லை. விடுமுறை நாள் என்பதால் சற்று அதிக நேரம் தூங்கலாம் என்பதுகூட அவனுக்கு சாத்தியமில்லாமல் போனது. காரணம் - சுய போகம்.

இது விஷயத்தில் அலோபதி மருத்துவர்கள் கூறுவதில் அவனுக்குச் சிறிதும் உடன்பாடு இல்லை. இந்திரியத்தை அவர்கள் உமிழ்நீரோடு ஒப்பிடுகிறார்கள். உமிழ்நீரைத் துப்பினாலும் அது மேலும் மேலும் சுரப்பதுபோல் இந்திரியமும் வெளியேற வெளியேற சுரந்துகொண்டே இருக்கும் என்பது அவர்கள் தியரி. இது சரியா தவறா என்பதெல்லாம் பெருமாளுக்குத் தெரியாது. ஆனால்... பொறுங்கள். அதற்கு முன்னால் ஒன்று சொல்ல வேண்டும்.

பெண்களே இல்லாத பெருமாளின் அந்த ஒரு வருட கால மேன்ஷன் வாழ்க்கையில் சுய போகம் மட்டுமே அவனது சரீர இச்சையைத் தீர்த்துக்கொள்ளக் கிடைத்த ஒரே உபாயமாக இருந்தது. ‘தீர்த்துக்கொள்ள’ என்ற வார்த்தையை பெருமாள் ஆட்சேபிக்கக்கூடும். சுய போகத்தினால் அவனது சரீர இச்சை கூடியதே தவிர குறைந்ததென்று சொல்ல முடியாது. ஆனால் அந்த நேரத்திற்கு ஒரு சிறிய ஆறுதல். பஞ்சத்தில் அடிபட்ட சென்னை நகரக் கால்நடைகள் சுவரொட்டிகளைத் தின்பது போல் (இதற்கு சுவரொட்டிகளில் காய்ந்து கிடக்கும் பசை ஒரு காரணமோ என்னவோ), வயிறு காய்ந்த சில தெரு நாய்கள் காய்ந்து உலர்ந்துபோன நரகலைத் தின்பதுபோல்தான் வாய்த்தது பெருமாளுக்கு அந்த சுய போகம்.

ஒரு நாள் அலுவலகத்தில் சேலம் ஜெயிலில் பீடி வாங்கிய செலவினங்களை தலைமையகத்துக்கு இன்னும் அனுப்பாதது பற்றிய ஏழாவது ரிமைண்டரை எழுதிக்கொண்டிருக்கும்போது விரைகளில் தாங்க முடியாததொரு வலி உண்டாகி அது நொடிக்கு நொடி படு பயங்கரமான வேகத்தில் அதிகரித்துக்கொண்டிருப்பதை உணர்ந்தான் பெருமாள். கிட்டத்தட்ட அலறி ஆர்ப்பாட்டம் செய்யும் அளவுக்குப் பெருகிவிட்டது வலி. அவ்விடத்தில் தடியால் தாக்கப்பட்டதுபோல் உணர்ந்தான். எங்கேயும் அடிப்பட்டதாகவும் ஞாபகமில்லை. காலையிலிருந்து இரண்டு மணி நேரமாக பீடிக்கட்டுகளுக்கு ரிமைண்டர் எழுதியது தவிர அவன் வேறெதுவும் செய்திருக்கவில்லை. இப்படியொரு வலி இதற்கு முன்பு வந்ததும் இல்லை.

அண்ணாசாமியிடம் அனுமதி வாங்கிக்கொண்டு மருத்துவரைப் பார்த்தான் பெருமாள். மருத்துவரோ அவனைப் பார்த்து சிரித்தார்.

‘இதற்கு மருந்து எதுவும் இல்லை தம்பி. அளவுக்கு அதிகமாக இந்திரியம் சேகரமானால் இப்படி வலி வந்துவிடும். Blue balls என்று சொல்வார்கள். சுய போகம் அல்லது திருமணம் - இதை விட்டால் இந்த வலியைப் போக்க வேறு வழியில்லை’ என்றார் மருத்துவர்.

இப்படிப்பட்ட ஒரு படு கேவலமான நிலைமையில் இருந்தது பெருமாளின் சரீர வேட்கை சம்பந்தமான விவகாரம்.

ஆக, சுய போகம் Blue balls என்ற அந்தக் கொடுமையான வலியிலிருந்து தப்பிக்க உதவியது என்றாலும் அதில் ஈடுபட்டால் இரவில் நித்திரை கலைந்து கலைந்துபோயிற்று. சுய போகம் இவ்வாறு அவனுடைய

நிம்மதியான உறக்கத்தைக் கவர்ந்துகொண்டதன் விளைவாக காலையில் எழுந்தால் கண்கள் சிவந்து கலங்கி எரிந்தன. கூடவே கண்ணீரும் கொட்டியது. பீடி ரிமைண்டர் எழுதிக்கொண்டிருக்கும்போதே உறக்கம் சிரசுக்கு ஏறி சிரசை அங்குமிங்கும் அலைக்கழித்தது. எழுத்துகள் கோடுகோடாக எங்கெங்கோ ஊர்ந்ததில் ரிமைண்டர்களைத் திரும்பத் திரும்ப எழுத நேர்ந்தது. மொத்தத்தில், சுய போகம் அவனுடைய இரவையும் கெடுத்து பகலையும் கெடுத்துக் கொண்டிருந்தது.

பெருமாளின் சுய போக இரவுகளின் கற்பனாவுலகில் நடமாடிய ஒரே பெண் - அந்த ஆ.ஃபீஸிலிருந்த ஒரே ஒரு ஸ்டெனோவாகிய புவனேஸ்வரி. சற்றே குள்ளமான உருவம். பளீர் வெள்ளை. பிருஷ்டங்களுக்குக் கீழே பின்னங்கால்களைத் தொடும் நீண்ட கூந்தல். கவர்ச்சிகரமான ஸ்தனங்கள். பிருஷ்டங்களைப் பற்றி எழுதினால் இப்பத்திரிகையின் ஆசிரியர் சென்ஸார் செய்துவிடுவார் என்று நிச்சயமாகத் தெரிவதால் அதை உங்களுடைய கற்பனைக்கே விட்டுவிடுகிறேன். போஸ்ட் மார்டன் ஃபிக்ஷனில் வாசகர்களும் சிருஷ்டிகர்த்தாக்களாமே... அதன்படி நீங்களே பிருஷ்ட ரூபம், பிருஷ்ட லாகிரி பற்றியெல்லாம் சிருஷ்டித்துக்கொள்ளலாம். ஆனால் ஒன்றே ஒன்றை மட்டும் சொல்லாமல் இருக்க முடியாது. பெருமாள் தனது நித்திராலோக சல்லாபங்களில் புவனேஸ்வரியின் பிருஷ்டங்களை ஒரு நாள்கூட கடிக்காமல் விட்டதில்லை.

வளர்த்திக்கொண்டு செல்ல விரும்பவில்லை. இது வெறும் முன் குறிப்புதானே... பெருமாளின் அந்த ஒரு வருட கால சிறைத்துறைத் தலைமையக குமாஸ்தா வாழ்வு ஒரு நாள் முடிவுக்கு வந்தது. அது ஒன்றும் திடீரென்று வரவில்லை. கொஞ்சம் கொஞ்சமாகவே ஆரம்பித்து ஒரு நாள் உச்சக்கட்டத்தை எட்டியது. அதன் விபரம்:

பெருமாள் மட்டும் அந்த ஆ.ஃபீஸை ஒரு கல்லூரியைப் போலவே பாவித்து வருவதாக நினைத்தார் அண்ணாசாமி. அதைப் பெருமாளிடமும் அவ்வப்போது வருத்தத்துடன் தெரிவித்து வந்தார். ஒரு நாள் அவனை அழைத்து இவ்வாறு கூறினார்:

'நீங்க இன்னும் ஸ்டூடண்ட் இல்ல ஏட்டு சார். ஒரு ரெஸ்பான்ஸிபிள் கவர்மெண்ட் சர்வண்ட். இன்னும் கொஞ்ச நாள்ள உங்களுக்கு மேரேஜ் ஆயிடும். பிறகு கொழந்த குட்டிங்கன்னு பொறுப்பு ஜாஸ்தியாயிடும். ஸோ... இப்பவே நீங்க தயாராயிடணும்.'

'அப்படீன்னா?'

'அதான் ஏட்டு சார்... நீங்க இன்னும் ஸ்டூடண்ட் இல்லேங்றேன்' என்று ஆரம்பித்து முன்பு சொன்னதையே திரும்பவும் ஏற்ற இறக்கங்களுடன் சொல்லி முடித்தார்.

அப்போதும் அவனுக்கு அவர் என்ன சொல்ல வருகிறார் என்று புரியவில்லை. கேட்டால் கீறல் விழுந்த ரெகார்டைப் போல் திரும்பவும் அதையே சொல்வார் என்று தோன்றியதால் மௌனமாக இருந்துவிட்டான். ஆனால் அவர் சொல்ல வந்ததன் பொருள் அன்று மாலை அவனுக்குப் புரிந்தது.

அன்று சனிக்கிழமை. பொதுவாக மாலை ஏழு மணிக்குள் அவனை

விட்டுவிடுவார் அண்ணாசாமி. காரணம், அவர் வீடு தாம்பரத்தில் இருக்கிறது. ஆனால் அன்றைய தினம் ஏழு மணியாகியும் அவனைக் கூப்பிட்டு ஃபைல் கட்டுகளைக் கொடுத்துக்கொண்டேயிருந்தார். அவ்வளவுக்கும் ரிமைண்டர் எழுத வேண்டும். எவ்வளவு விரைவாக எழுதினாலும் ஒன்பது மணி ஆகிவிடும் என்பதால் துணிச்சலை வரவழைத்துக்கொண்டு 'நான் கிளம்புறேன் சார்' என்றான் பெருமாள்.

'ஓ யெஸ். கிளம்புங்க ஏட்டு சார். மீதி ஃபைலை நாளைக்கு வந்து முடிச்சிடுங்க. சாவகாசமா ஒரு பதினோரு மணிக்கு வந்தாப் போறும்.'

'சார்... நாளைக்கு ஸண்டே!'

'அதனாலென்ன ஏட்டு சார்? ஒரு கவர்மெண்ட் சர்வண்ட்டுன்னா டொண்ட்டி ஃபோர் அவர்ஸும் கவர்மெண்ட் சர்வண்ட்டுதான். ரூல் நம்பர் ஒண்ணாட்டு ஏ என்னா சொல்லுதுன்னா...'

அண்ணாசாமி நீண்டதொரு லெக்சருக்குத் தயாராக இருப்பது போல் தோன்றியதால் பெருமாள் குறுக்கிட்டான்.

'கரெக்ட் சார். நான் பதினொரு மணிக்கு வந்துர்றென் சார்.'

ஆனால் மறுநாள் பதினொரு மணிக்கு அவன் ஆஃபீஸ் போகவில்லை. அது மட்டுமல்ல. மறுநாளும் போகவில்லை. ஒரு வாரம் மெடிகல் லீவ் எழுதி தபாலில் அனுப்பிவிட்டு ஊருக்குப் போய்விட்டான்.

மெடிகல் லீவ் அனுமதிக்கப்படவில்லை என்றும், உடனே வந்து தலைமையகத்தில் ரிப்போர்ட் செய்யும்படியும் கூறி பெருமாளின் வீட்டு விலாசத்துக்குத் தந்தி வந்தது. தந்தியைப் பார்த்து வீட்டில் உள்ளவர்கள் பயந்துபோனார்கள்.

ஆனாலும் ஒரு வாரம் கழித்துத்தான் வேலைக்குப் போனான் பெருமாள். 'எங்கே மெடிகல் சர்ட்டிஃபிகேட்?' என்றார் அண்ணாசாமி.

'மெடிக்கல் லீவ்தான் ஸாங்ஷன் ஆகலேன்னு தந்தி வந்ததே. அதான் கொண்டுவர்லே.'

அண்ணாசாமி அதற்கு மேல் எதுவும் பேசவில்லை. ஒரு மணி நேரத்தில் அவனுக்கு ஒரு மெமோ கொடுக்கப்பட்டது. அலுவலகத்திலிருந்து முன் அனுமதி பெறாமல் ஹெட்குவாட்டர்ஸை விட்டு வெளியே போனது தவறு என்றும், ரூல் நிர் - 420(உ)யின்படி ஏன் அதற்குரிய நடவடிக்கை எடுக்கப்படக்கூடாது என்று மூன்று தினங்களுக்குள் விளக்கம் தரும்படியும் அந்த மெமோவில் கண்டிருந்தது.

ஒரு அரசு ஊழியனைப் பொறுத்தவரை மெமோ என்பது அவனது உத்தியோக வாழ்வில் விழும் மிகப் பெரிய கரும்புள்ளியாக ஊழியர் வட்டாரத்தில் கருதப்பட்டதால் பெருமாளுக்கு மெமோ கொடுக்கப்பட்டது அந்த அலுவலகத்தில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. இதுவரை அவனை ஒரு பொருட்டாகவே கருதாத சக ஊழியர்கள் அவனைப் பார்த்து இப்போது துக்கம் விசாரிப்பதுபோல் பேசினார்கள். புவனேஸ்வரிகூட அவனை இரக்கத்துடன் பார்ப்பதுபோல் தோன்றியது.

மெமோ கொடுத்ததிலிருந்து அண்ணாசாமியின் போக்கில் ஒரு மாற்றம் தென்பட்டதைக் கவனித்தான் பெருமாள். அவனை அவர் ஒரு

பியூனைப்போல் நடத்த ஆரம்பித்தார். டைப் செய்யப்பட வேண்டிய ஃபைல்களைக் கொடுத்து புவனேஸ்வரியிடம் கொடுக்கச் சொன்னார். பேனாவைக் கொடுத்து அதற்கு இங்க் போடச் சொன்னார்.

மூன்று தினங்கள் கழிந்தும் பெருமாள் மெமோவுக்கு பதில் எதுவும் கொடுக்கவில்லை. உடனே அவனுக்கு இரண்டாவது மெமோ கொடுக்கப்பட்டது. முதல் மெமோவுக்கு பதில் கொடுக்காததால் குற்றச்சாட்டுக்கு அவனிடம் பதில் எதுவும் இல்லை எனக் கருதப்பட்டு அடுத்த கட்ட நடவடிக்கை எடுக்கப்பட இருப்பதாகக் கூறியது அந்த மெமோ. வாங்கி அதை அண்ணாசாமியின் கண்ணெதிரிலேயே கிழித்துக் குப்பைக்கூடையில் போட்டான் பெருமாள்.

அந்த நேரம் பார்த்து தில்லியிலிருந்து மத்திய அரசு வேலை ஒன்றில் சேரும்படி பெருமாளுக்கு அப்பாய்ண்ட்மெண்ட் ஆர்டர் வந்து சேர, சிறைத்துறை அலுவலகத்தில் எதுவும் தெரிவிக்காமலேயே தில்லி போய்ச் சேர்ந்தான்.

சினிமாவில் ஒரு டைட்டில் காண்பிப்பார்களே ‘பத்து ஆண்டுகள் கழித்து’ என்று. அதுபோல் பத்து ஆண்டுகள் கழித்து ஏதோ ஒரு துரதிர்ஷ்டத்தின் விளைவாக மறுபடியும் சென்னை வந்து சேர்ந்தான்.

தில்லியிலிருந்து தமிழக தபால்துறைக்கு மாற்றல் உத்தரவு கிடைத்தது. வேலூர் கோட்ட தபால்துறைக் கண்காணிப்பாளர் அலுவலகத்தில் ஸ்டெனோவாகப் பணியில் சேர்ந்தான் பெருமாள்.

# முன் குறிப்பு : 3

அப்படியெல்லாம் பத்து வருட வாழ்வை ஒரே தாண்டாகத் தாண்டக் கூடாது என்று நண்பர்கள் அபிப்பிராயப்படுவதால் அதுவும் எனக்கு நியாயமாகவே தோன்றுவதால் கண்ணாயிரம் பெருமாளின் தில்லி வாழ்விலிருந்து ஒரே ஒரு கதையை இங்கே விவரிக்கிறேன்.

பம்பாய்க்கு காமாட்டிபுரா. கல்கத்தாவுக்கு ஸோனார் கலி. தில்லிக்கு ஜி.பி ரோட். விபச்சாரத்துப் பெயர் பெற்ற திருத்தலங்கள். ஜி.பி ரோட்டிலுள்ள ரேஷன் கடைக்கு இன்ஸ்பெக்ஷனுக்காகப் போகும்போது அங்குள்ள வேசிகளோடு பழக்கம் ஏற்பட்டது பெருமாளுக்கு. பிறகு வாரம் ஒரு முறையாவது அங்கு சென்று வருவதை வழக்கமாகக் கொண்டான்.

சென்னையில் காய்ந்துபோய்க் கிடந்ததை அடிக்கடி நினைத்துப் பார்த்துக்கொள்வான். பெருமாளின் ஜி.பி.ரோட் சல்லாப வாழ்வில் அவனுக்குக் கிடைத்த ஒரு தோழி பிருந்தா.

வழக்கமாகச் செல்வது போலவே பிருந்தாவிடமும் சென்றான். கொஞ்சம் பயந்தபடியே 'நான் இன்றைக்கு மாத விலக்கு' என்றாள் அந்தப் பெண். உடனே பெருமாள் 'அப்படியா? சரி' என்று சொல்லிவிட்டு உறங்கிப்போனான். காலையில் எழுந்தபோது பிருந்தா கூறினாள் - இப்படி ஒரு ஆளைத் தான் பார்த்ததேயில்லை என்று.

'எப்படி?'

'மாத விலக்கு என்றதுமே உடனே திரும்பிப் படுத்துத் தூங்கிய ஆளை...'

'அதில் ஒன்றும் விசேஷமில்லை. எனக்கு ரத்தம் என்றால் பயம். அவ்வளவுதான்.'

கடைசியில் பிருந்தா தான் மாத விலக்கு என்று சொன்னது பொய் என்றும் அப்படி ஒரு பொய் சொல்ல நேர்ந்ததன் பின்னணியையும் கூறினாள்.

தமிழ்நாட்டு நகரம் ஒன்றில் பி.ஏ., ஆங்கில இலக்கியம் படித்துக் கொண்டிருந்த ஒரு பணக்கார வீட்டுப் பெண் பிருந்தா. அப்பா பங்குச் சந்தை வியாபாரத்தில் முக்கியப் புள்ளி. அம்மா சமூக சேவகி. பெண்ணைக் கல்லூரியில் கொண்டுபோய்விட்டு அழைத்துக்கொண்டு வரும் வேலை டிரைவர் மாணிக்கத்தினுடையது.

அப்பா உள்ளூரில் இருக்கும் நாட்கள் அபூர்வம். அதோடு அவருக்கு சென்னையில் வேறொரு வீடும் குடும்பமும் இருப்பதாக அரசல்புரசலாகக் கேள்வி. ஆனால் அம்மா அது பற்றிக் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. அவளுடைய கவலையெல்லாம் லடாக் பகுதி மக்கள் எப்படி கம்பளிப்பூச்சியை உணவாக உட்கொள்கிறார்கள் என்பது பற்றித்தான்.

'அது எப்படி? கம்பளிப்பூச்சியைப் பார்த்தாலே நம் உடம்பெல்லாம்

கூசுகிறது. தப்பித் தவறி உடம்பில் பட்டுவிட்டால் தடித்துவிடுகிறது. அதைப்போய் எப்படிச் சாப்பிடுகிறார்கள்?' என்று எல்லோரிடமும் விசாரித்துக்கொண்டிருப்பாள்.

'அது ஒன்றும் ஆச்சரியம் இல்லையம்மா... இங்கேகூட சிலர் ஈசலை வறுத்து கூடையில் போட்டு விற்பதைப் பார்க்கலாம். ஒரு மாகாணி ஒரு ரூபாய். தாது புஷ்டிக்கு நல்லது' என்று விளக்கம் சொல்வான் மாணிக்கம்.

'வாவ்... ஈசலா... தாது புஷ்டியா?' என்று ஆச்சரியப்படுவாள் அம்மா.

இந்தக் காலகட்டத்தில்தான் டிரைவர் மாணிக்கத்தின் நடவடிக்கைகள் பிருந்தாவைப் பதற்றம் கொள்ளச் செய்தன.

காரின் முன் சீட்டில் அவளை அமரச் செய்து அவள் அங்கங்களின் மீது தனது கையைப் படரவிட்டான். அந்தச் சமயங்களில் பிருந்தாவின் உடல் நடுங்கியது. பதறியது. அவன் கையை உதறித் தள்ளிவிட்டு ஓடிவிட வேண்டும்போல் தோன்றியது.

ஆனால் முடியவில்லை. ஏதோ ஒன்று தடுத்தது. அதற்குள் அவன் கை பாம்பு போல் உடம்பில் சரசரவென்று எங்கெங்கோ ஊர்ந்து சென்றுவிடும்.

அந்த நேரத்து சுகமும் குறுகுறுப்பும் அவளை எதுவுமே செய்ய விடாமல் கட்டிப்போட்டது. தனியாக இருக்கும்போது யோசித்துப் பார்த்தாள் பிருந்தா. தப்பு என்று தோன்றும். அம்மாவிடம் சொல்லி விடலாமா என்று தவிக்கும். எப்படிச் சொல்வது?

அவள்தான் வீட்டிலேயே தங்குவதில்லையே? பிருந்தாவுக்கு எதுவுமே பிடிக்கவில்லை. இந்த உலகில் தான் ஒரு அனாதை என்ற எண்ணம் தோன்றிக்கொண்டே இருந்தது. மாணிக்கம் ஒருத்தன்தான் தனக்கென்று இருப்பவன்... டிரைவராக இருந்தால் என்ன? நமக்கென்று இருக்கும் ஒரே ஆத்மா. நம்முடையவன். நம்மோடு இருப்பவன். நம்மைப் புரிந்துகொண்டவன். மாணிக்கத்தோடு இருக்கும் பொழுதுகள் மட்டுமே அவளுக்கு மகிழ்ச்சி தருவதாக இருந்தன. மற்ற நேரங்களில், அவனோடு இருந்த நேரத்தைப் பற்றி யோசித்துக்கொண்டிருப்பது சுகம். படிக்காதவனாக இருந்தால் என்ன? படித்தவர்களையெல்லாம்விட பண்புள்ளவன்; வாழ்க்கையைப் பற்றி சரியாகப் புரிந்துகொண்டிருப்பவன்.

'பணம், பொருள், புகழ் எதிலும் ஒன்றுமே இல்லை. மனசுக்கு வேண்டியது நிம்மதியும் சந்தோஷமும். அது உனக்கு எதில் கிடைக்கிறதோ அதில் ஈடுபடு. தயங்காதே' என்றது பிருந்தாவின் உள்மனம்.

வீட்டில் இருந்த ரொக்கம், நகை என்று கையில் கிடைத்ததை எடுத்துக்கொண்டு ஒரு சுப தினத்தில் மாணிக்கமும் பிருந்தாவும் தில்லிக்குப் புறப்பட்டார்கள். மூன்று மாதங்கள் கடந்தன. ஒரே வார்த்தையில் சொல்ல வேண்டுமானால் சொர்க்கம். வீட்டிலேயே இருந்தான் மாணிக்கம்.

'வேலை?'

'சீக்கிரம் ஒரு ஆட்டோ வாங்கி ஓட்டலாம் என்று இருக்கிறேன். அதுவரை கொஞ்சம் ஜாலியாக இருப்போமே?'

சாப்பாடு, தூக்கம், செக்ஸ் என்றே பொழுதெல்லாம் கழிந்தது. சலிக்கவே

இல்லை.

‘ஆட்டோ ஓட ஆரம்பித்துவிட்டால் ஐயாவை நீ பிடிக்கவே முடியாது. அதனால் இப்போதே பார்த்துக்கொள்’ என்றான்.

மூன்றாவது மாதம் லைசென்ஸ் எடுக்க வேண்டும் என்று கொஞ்சம் அலைந்தான்.

அப்போது ஒருநாள் ‘ஒரு நண்பரின் வீட்டுக்குப் போகலாம் வா, பிருந்தா’ என்று அழைத்துச் சென்றான். தில்லியில் இப்படிக்கூட இடங்கள் உண்டா என்று அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவ்வளவு அசுத்தமாகவும் குப்பையாகவும் இருந்தது. ஏதோ ஒரு இடத்தில் இறங்கி, ஆட்டோ புக முடியாத முடுக்குச் சந்தில் ஒரு பர்லாங் தூரம் அவளை அழைத்துச் சென்றான் மாணிக்கம். எல்லோருமே கூட்டுக் குடும்பமாக வாழ்வார்கள்போல் தெரிந்தது. அவ்வளவு நெருக்கமாகவும் இரைச்சலாகவும் இருந்தது. மாடிக்கு மேல் மாடி. மாடிப் படிகள் வீட்டுக்கு வெளியே இருந்தன. கிட்டத்தட்ட தெருவில் எது வீடு எது தெரு என்றே பிரித்துப் பார்க்க முடியாதபடி எல்லாம் கலைந்து கிடந்தன. அந்தி மயங்கும் நேரம். குழந்தைகள் குறுக்கிலும் நெடுக்கிலும் ஓடிக்கொண்டிருந்தன. பெண்கள் மிகவும் வித்தியாசமாக இருந்தார்கள். அந்த இடத்தைப் போலவே மற்றொரு விஷயம், அவர்களின் மார்பகங்கள் அளவுக்கு அதிகமாகத் திறந்து கிடந்தன. பிருந்தாவுக்கு அதைப் பார்க்க லஜ்ஜையாக இருந்தது. இன்னும் எவ்வளவு நேரம் இந்தக் காட்சிகளைப் பார்த்துக்கொண்டுபோக வேண்டும் என்று நினைத்தபோது ஒரு வீட்டின் உள்ளே பிருந்தாவை அழைத்துப் போனான் மாணிக்கம். ஒரே இருட்டாக இருந்தது. ஏதோ ஒரு பயத்தில் மாணிக்கத்தின் கையை இறுகப் பற்றிக்கொண்டாள். இரண்டு மூன்று கட்டுக்களைத் தாண்டிச் சென்ற பிறகு ஒரு விசாலமான ஹால் தெரிந்தது. அலங்கார விளக்குகள் தொங்கிக்கொண்டிருந்தன. நடுத்தர வயது மதிக்கத்தக்க ஒரு பெண்மணி ஹூக்கா புகைத்தபடி அமர்ந்திருந்தாள். அவள் அருகே நின்றுகொண்டிருந்த இரண்டு பெண்கள் இவர்களைப் பார்த்ததும் உள்ளே சென்றார்கள்.

‘ஆவோ மணிக்காம்ஜி... ஆவோ... பைட்டோ’ என்று சொல்லியபடி பிருந்தாவைப் பார்த்து புன்னகைத்தாள் அந்த ஹூக்கா பெண்.

பிறகு இரண்டு பேரும் இந்தியில் பேசிக்கொண்டது பிருந்தாவுக்கு புரியவில்லை. பஹூத் அச்சா... பஹூத் படியா... என்று சில வார்த்தைகளே புரிந்தன. எதையோ மிகவும் பாராட்டிப் பேசிக்கொண்டிருந்தாள். பிருந்தாவைப் பார்த்து இடையிடையே சிரித்தாள். இவளைப் பற்றித்தான் சொல்லிக்கொண்டிருக்கிறாளோ என்று தோன்றியது. மாணிக்கத்திற்கு இவ்வளவு நன்றாக இந்தி பேசத் தெரியும் என்பதே பிருந்தாவுக்கு ஆச்சரியமாக இருந்தது.

‘கொஞ்சம் வெயிட் பண்ணு பிருந்தா... இதோ வந்துவிடுகிறேன்.’

இதுதான் பிருந்தாவிடம் மாணிக்கம் பேசிய கடைசி வார்த்தைகள். இதுதான் பிருந்தாவின் வாழ்க்கையைத் தீர்மானித்த வார்த்தைகள். அதற்குப் பிறகு மாணிக்கம் அவள் வாழ்க்கையிலிருந்து காணாமல் போனான். இரண்டு தினங்களில் பிருந்தாவுக்கு எல்லாம் புரிந்து போனது.

மாணிக்கம் ஒரு பெண் தரகன் என்பதும், வெகு சாமர்த்தியமாக பிருந்தாவை ஏமாற்றி தில்லி ஜி.பி.ரோட்டிலுள்ள விபச்சார விடுதி ஒன்றில் விற்று விட்டான் என்பதும்...

ஒரு மாதம் அந்த நரகக் குழியில் பிருந்தா அனுபவித்த கொடுமைகளை வார்த்தைகளில் விவரிக்க இயலாது. ஆனால், அதெல்லாம் பிருந்தாவை ஒன்றும் செய்யவில்லை. மாணிக்கம் அவளை ஏமாற்றியது, அவன் செய்த துரோகம், அவள் அவனுக்கு என்ன தீங்கு செய்தாள்? அவள் வாழ்க்கையையே தீர்த்துக்கட்டிவிட்டானே? அவளால் அதைத் தாங்க முடியவில்லை. அந்த வலியில் மற்றதெல்லாம் ஒன்றுமில்லாமல் ஆகிவிட்டது. எவ்வளவு நாட்கள் சென்றன என்று தெரியவில்லை. உறக்கத்தில் நடப்பவளைப் போலவே இருந்தாள் பிருந்தா. ஒரு மாதம் ஆகியிருக்கும். அப்போதுதான் பெருமாளை அவள் சந்தித்தது. பிறகு பெருமாள் அவனுடைய அதிகாரி கன்னாவிடம் சொல்லி அவருடைய நண்பரான போலீஸ் டி.ஸி கைலாஷ் சந்தரிடம் பேசி பிருந்தாவை அங்கிருந்து விடுவித்தார்கள். கன்னாவிடம் ஒரு நல்ல குணம். உதவி என்று போனால் நிச்சயமாகச் செய்வார். பிறகு பிருந்தா ஒரு கிறிஸ்துவ இல்லத்தில் சேர்ந்து படித்து ஸிஸ்டர் எஸ்தராக மாறி செஞ்சிலுவைச் சங்கத்தில் பணியாற்றிக்கொண்டிருக்கிறாள். அவ்வப்போது பெருமாளுக்குக் கடிதம் எழுதுவாள்.

ஸெர்பிய போஸ்னியப் போரின்போது அங்கிருந்து அவனுக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தாள். குண்டு வீச்சிலும் வெடிகளிலும் மாட்டிக்கொண்டு நூற்றுக்கணக்கான குழந்தைகள் ஊனமுற்று விடுவதைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தாள். மூன்று மாத சிசு ஒன்று குண்டு வீச்சில் உயிர் தப்பி அதன் கால் ஒன்றை வெட்டி எடுக்கும்படி ஆகிவிட்டதாம். தான் ஊனமுற்றதையே அறிய முடியாத பச்சிளம் குழந்தை. இதையெல்லாம் பார்க்கும்போது மனிதர்கள் மீதும் வாழ்வின் மீதும் நம்பிக்கையற்றுப்போய் விடுவதாக எழுதியிருந்தாள். இதெல்லாம் கண்ணாயிரம் பெருமாளின் சிந்தனை எல்லைக்கு அப்பாற்பட்டது. அவனைப் பொறுத்தவரை தேவடியாள் வீடுகளுக்குப் போனால்கூட நற்காரியங்கள் செய்ய முடியும்.

## கதை: 1

முன்குறிப்புகள் போதும் என்று நினைக்கிறேன். இனி கதைகள்.

சென்னை அண்ணா நகரிலுள்ள திருமங்கலம் என்ற பகுதியில் இருந்தது கண்ணாயிரம் பெருமாளின் வீடு. குமாஸ்தா என்றால் சென்னையிலேயே போஸ்டிங் கிடைத்திருக்கும். ஸ்டெனோ என்பதால் வேலூரில் வேலை. தானமாகக் கிடைத்தது. குறை சொல்ல முடியாது.

காலையில் ஏழேகாலுக்கு சென்ட்ரல் ரயில் நிலையத்திலிருந்து கிளம்பும் பிருந்தாவன் எக்ஸ்பிரஸில் கிளம்பி ஒன்பதரை மணிக்கு காட்பாடியில் இறங்கி அங்கிருந்து வேலூர் போகும் டவுன் பஸ் பிடித்து வேலூர் பஸ் ஸ்டாண்டை அடுத்த ராஜா தியேட்டர் ஸ்டாப்பை அடைய பத்தரை மணியாகும். ராஜா தியேட்டருக்கு எதிரேதான் வேலூர் பிரிவு தபால்துறைக் கண்காணிப்பாளர் அலுவலகம்.

ஒன்பதே காலுக்கு ஆ்ஃபீஸ் என்றாலும் அங்கே வேலை நேரம் பற்றிய கெடுபிடிகள் கிடையாது. காரணம், குமாஸ்தாக்கள் அனைவரும் இரவு எட்டு மணிவரைகூட வேலை செய்து கொண்டிருப்பார்கள். சனி ஞாயிறுகளிலும் ஆ்ஃபீஸே கதியென்று பழியாய்க் கிடப்பார்கள்.

ஏழேகால் பிருந்தாவனைப் பிடிக்க திருமங்கலத்தில் ஆறு மணிக்கு 7c பஸ்ஸைப் பிடிக்க வேண்டும். சென்ட்ரல் என்றால் பார்க் ஸ்டேஷன் எதிரேதான் பஸ் நிறுத்தம். அங்கிருந்து ஒரு கிலோ மீட்டர் ஓடினால் பிருந்தாவன் எக்ஸ்பிரஸின் வாலைப் பிடிக்கலாம். ஆனால் முறையான டிக்கட் உள்ளவர்கள் மட்டுமே எந்தப் பெட்டியிலும் ஏற முடியும். பெருமாளைப் போல் தினமும் சென்னையிலிருந்து வேலூர் சென்றுவரும் கூட்டம் தினசரி இரண்டு வேளையும் டிக்கட் எடுக்க முடியுமா? எனவே மாதாந்திர சீஸன் டிக்கட்தான். சீஸன் டிக்கட்டை வைத்துக்கொண்டு எக்ஸ்பிரஸ் ரயில்களில் ஏற முடியாது. ஏறினால் தண்டனைக்குரிய குற்றம். ஐநூறு ரூபாய் அபராதமோ மூன்று மாத சிறைத்தண்டனையோ அல்லது இரண்டும் சேர்த்தோ கொடுக்கப்படும் என்று ஒவ்வொரு பெட்டியிலும் எழுதியிருந்தது.

அப்படியானால் தினமும் வேலூரில் இருக்கும் ஆ்ஃபீஸுக்குப் போவது எப்படி? சட்டத்திற்குப் புறம்பாக எக்ஸ்பிரஸிலேயே போக வேண்டியதுதான். ஆக, இந்தப் பயணமே சட்டத்திற்குப் புறம்பானதாக இருக்கும்போது வால் பக்கமிருக்கும் ரிஸர்வ்ட் பெட்டிகளில் ஏற முடியுமா? தலைப்பக்கம் இருக்கும் ஜென்ரல் கோச்சுக்குத்தான் போக வேண்டும். வாலிலிருந்து தலைவரை அரை கிலோமீட்டர் ஓட வேண்டும். அநேகமாக ஆண்டு முழுவதுமே ஜென்ரல் கோச்சில் மக்கள் புளி மூட்டையாய் அடைந்து கிடப்பார்கள். எப்படியும் கக்கூஸுக்கு அருகில் நெருக்கியடித்துக்கொண்டு உட்கார்ந்துவிடுவான் பெருமாள். பல

சமயங்களில் கக்கூஸுக்குச் செல்பவர்கள் காலை வைக்கத் தரையில் இடமில்லாமல் தவிப்பார்கள். கீழே உட்கார்ந்திருப்பவர்களுக்கோ அவர்கள் காலை வைத்துப்போக ஏதுவாக தொடையை நகர்த்தவும் இடமிருக்காது. பெருமாளின் தொடை மீது கால் வைத்து ஏறிச் செல்வதைத் தவிர வேறு வழியிருக்காது.

ஒரு போர் நடக்கும்போது பங்க்கருக்குள் பதுங்கிக் கிடக்கிறோம். அப்போது பாத்ரூம் வசதியையெல்லாம் எதிர்பார்க்க முடியுமா? அது மாதிரிதான்.

வீட்டில் ஐந்து மணிக்கு எழுந்து அவசர அவசரமாகக் கிளம்பும்போது மலஜலமெல்லாம் சரியாகப் போயிருக்க முடியாது. நம்முடைய உணவில் ஐரோப்பியர்களின் உணவைப்போல் நார்ச்சத்து இல்லையாதலால் அவர்களுடைய மல வெளியேற்றத்துக்கும் நம்முடைய மல வெளியேற்றத்துக்கும் எக்கச்சக்கமான வித்தியாசம் உள்ளது. அவர்களுக்கு அது இரண்டு நிமிட வேலை. நமக்கோ உட்கார்ந்து முக்கு முக்கென்று முக்க வேண்டும். அதனால் ரயில் கிளம்பியதும் ஒவ்வொருவராக கக்கூஸை நோக்கிப் படையெடுப்பார்கள். அதில் பெருமாளும் சேர்த்திதான்.

இன்னொரு விஷயம். இப்படி பெருமாளைப்போல் சென்னையிலிருந்து வேலூர் சென்று வேலை பார்க்கும் கூட்டத்தில் சுமார் நானூறு பேர் இருப்பார்கள்; அல்லது ஐநூறாகவும் இருக்கலாம். இவர்களில் பல ரகம் உண்டு - டாக்டர்கள், எஞ்ஜினியர்கள், வங்கி ஊழியர், குமாஸ்தாக்கள் என்று. இந்த நானூறு பேரில் இருநூறு பேர் பெண்கள். கூட்டத்தில் பாதி பேர் காலை ஆறு மணிக்குக் கிளம்பும் கோவை எக்ஸ்பிரஸில் கிளம்பிவிடுவார்கள். அவர்களெல்லாம் சரியான நேரத்தில் ஆ.்.பீஸில் இருக்க வேண்டிய கெடுபிடியான இடங்களில் வேலை செய்பவர்கள். உதாரணமாக, வங்கிகள். அவர்கள் ஐந்து மணிக்கே முதல் பஸ்ஸைப் பிடித்துக் கிளம்ப வேண்டியிருக்கும்.

மற்றொரு முக்கிய விஷயம். இவர்கள் எல்லோருமே காலை உணவு, மதிய உணவு இரண்டையுமே கையோடு எடுத்துக்கொண்டு செல்பவர்கள்.

இதில் கோவையில் செல்பவர்களின் மனைவிமார்கள்தான் உண்மையில் பாவப்பட்டவர்கள். ஐந்து மணிக்கு வீட்டை விட்டுக் கிளம்புகிறவர்களுக்காக காலை உணவும், மதிய உணவும் தயார் செய்ய வேண்டுமானால் அவர்கள் எத்தனை மணிக்கு எழுந்துகொள்ளவேண்டும் என்று யூகித்துக் கொள்ளுங்கள். சரி. இப்படி சென்னையிலிருந்து வேலூர் செல்லும் கூட்டத்தில் சரிக்குச் சரி பெண்கள் என்று சொன்னேன். அப்படியானால் கோவையில் செல்லும் நூறு பெண்களின் நிலை? ஆண்களுக்காவது மனைவிமார்கள் செய்து கொடுத்துவிடுவார்கள். இந்தப் பெண்கள் மூன்று மணிக்கே எழுந்து தங்கள் காலை உணவு, மதிய உணவு இரண்டையும் தயார் செய்து கொண்டு ஐந்து மணிக்குக் கிளம்ப வேண்டும்!

நல்லவேளை, பெருமாள் பிருந்தாவனில் செல்பவன். பத்தரையிலிருந்து பதினொரு மணிக்குள் அலுவலகம் சேர்ந்து வருகைப் பதிவேட்டில் கையெழுத்துப் போட்டுவிட்டு அதற்குப் பிறகுதான் காலை உணவு. ஆனாலும் அது அன்றைக்கான பசியின் வீரியத்தைப் பொறுத்தது. பசி அதிகமாக இருந்தால் கக்கூஸ் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டே இட்லிகளை விண்டு விண்டு வாயில் போட்டுக்கொண்டு கைகளை

கர்ச்சீஃபால் துடைத்துக்கொள்வான்.

மாலையில் இந்த அவதி இல்லை. ஏழேகாலுக்குத்தான் பிருந்தாவன் காட்பாடிக்கு வரும். பத்து மணிக்கு சென்ட்ரல். எப்படியும் பதினோரு மணிக்கு வீட்டை எட்டிவிடலாம்.

பதினோரு மணிக்கு வீட்டுக்கு வந்து சேரும்போது உங்கள் உடலும், மனமும் எப்படியிருக்கும் என்பதை ஒரே ஒருகணம் கற்பனை செய்துகொள்ளுங்கள்.

பத்து மணிக்கு சென்ட்ரலில் இறங்கி ஒவ்வொரு ஆணும் பெண்ணும் தலை தெறிக்க ஓடுவார்கள். கடைசி பஸ்ஸை விட்டால் நைட் பஸ்ஸில் போக வேண்டும். நைட் பஸ் எப்போது வரும் என்று சொல்ல முடியாது.

இதற்கிடையில் இன்னொரு விஷயத்தையும் சொல்ல வேண்டும். வேலூரின் காய்கறி மார்க்கெட் தமிழ்நாட்டில் பிரசித்தி பெற்ற ஒன்று. அதற்கு இரண்டு காரணம்: ஒன்று, மலிவான விலை. இரண்டு, தரம்.

வேலூர் முள்ளுக் கத்தரிக்காயைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? சாப்பிட்டிருக்கிறீர்களா? இல்லையானால் வாழ்வில் ஒரு முறையாவது அதை சாப்பிட்டுப் பார்க்க வேண்டும். தேன் தோற்றுவிடும். அப்படி ஒரு சுவை.

சென்னையிலிருந்து வேலூர் சென்று வேலை பார்த்துவரும் கூட்டத்துக்கு எப்போதுமே தங்கள் வீட்டுப் பெண்மணிகள் மீது தனிப் பரிவு உண்டு. இரவு பதினோரு மணிக்கு வந்து காலை ஐந்து மணிக்கு கிளம்பிச் செல்லும் தங்களுக்காக நடு ராத்திரியில் சமையல் செய்யும் பெண்மணிகள் மீது யாருக்குத்தான் பரிவு வராது. அந்தப் பரிவு முள்ளுக் கத்திரிக்காயாக மாறும். இன்னும் என்னென்னவாகவோ மாறும். ஒவ்வொருத்தர் கையிலும் ஒரு பை நிறைய காய்கறிகள் இருக்கும். வாரம் ஒரு முறையோ, இரண்டு முறையோ வாங்கினால் போதும்.

பிருந்தாவனிலிருந்து இறங்கி கடைசி பஸ்ஸைப் பிடிக்க ஓடும் இவர்கள் காய்கறிப் பையையும் தூக்கிக்கொண்டே ஓடுவார்கள்.

உங்களுக்கு ஒரு சந்தேகம் ஏற்படலாம். ஏன் இப்படி இவர்கள் அவதிப்பட வேண்டும்? வேலூரிலேயே தங்கிவிடலாமே?

எலிக்குப் பயந்து பூனை வளர்த்த சாமியார் கதைதான். சென்னையில் ஒரு வீடு, வேலூரில் ஒரு வீடு என்று இரண்டு எஸ்டாப்ளிஷ்மெண்ட்டுகளைத் தாங்க ஒரு சம்பளம் போதுமா?

பெருமாளின் இந்த ரயில் பயண வாழ்க்கையில் அவன் காயத்ரி என்ற பெண்மணியைச் சந்தித்ததும் அவளைக் காதலித்ததும் ஒரு ரசமான விஷயம். காதல் என்ன காதல்? சரீரக் கவர்ச்சிதான். அந்த காலகட்டத்தில் பெருமாளுக்கும் எக்ஸுக்கும் சரீர சம்பந்தம் எதுவும் இல்லாதிருந்தது. விவாகரத்து பெற்றுக்கொள்ளலாமா என்று யோசித்துக்கொண்டிருந்தாள் எக்ஸ். காரணம்? பெருமாளின் ஆண்மை எக்ஸைப் பொறுத்தவரை செத்துப்போயிருந்தது. ஆண் - பெண் உறவைத் தீர்மானிப்பது அந்த ஒன்றரை இஞ்ச் அளவுள்ள சதைத் துணுக்கு மட்டும்தான் என்பது பெருமாளின் திண்ணமான கருத்து. இப்படி பச்சையாகச் சொன்னால் யாரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். ஆனால் உண்மை அதுதான். சில

விதிவிலக்குகள் இருக்கலாம். அது பெருமாளின் சிந்தனை எல்லைக்கு அப்பாற்பட்டது.

மற்ற நேரங்களில் உடம்பே மாபெரும் லிங்கமாக எழுந்து நிற்கும். ஆனால் எக்ஸை நெருங்கினால் ஐஸ் கட்டியாய் செத்துப்போகும். இரண்டு காரணங்கள். 1. மனம் 2. உடல். இருவருக்கும் ஒருவர் மீது ஒருவர் காதலோ அன்போ பரிவோ பாசமோ இல்லை. அது தவிர, கலவியின்போது கிணற்றில் வாளி போடுவது போல் இருந்தால் அச்செயலின் மீது எப்படி ஈடுபாடு வரும்?

ஒரு பெண்ணைப் பார்த்தால் உங்கள் உடலும் உள்ளமும் கிளர்ந்தெழுந்து வெறியில் பற்றியெறிய வேண்டாமா? எக்ஸிடம் பெருமாளுக்கு அந்தக் கிளர்ச்சி ஏற்படவில்லை. ஆனால் காயத்ரியிடம் ஏற்பட்டது.

மஞ்சள், வெண்மை, இளம் பச்சை எல்லாம் கலந்த ஒரு நிறத்தில் இருந்தாள் காயத்ரி. வயது முப்பது இருக்கும். கணவர் கல்கத்தாவில் வேலை பார்க்கிறார். அமைதியானவள். யாரிடமும் அநாவசியமாகப் பேச மாட்டாள். எப்போதும் தேவி மகாத்மியம் படித்துக்கொண்டிருப்பாள். அவளைத்தான் ஒரு நாள் மாலை காட்பாடி ரயில் நிலையத்தில் Dog Squad என்றழைக்கப்படும் போலீஸின் மோப்ப நாய்கள் துரத்தின. பார்த்தவுடன் பெருமாளுக்குப் புரிந்துவிட்டது. செக்கிங் ஸ்க்வாட் வந்திருக்கிறார்கள். ஓடி வந்த வேகத்தில் தடுமாறி விழுந்திருப்பாள். பெருமாள்தான் தாங்கிப் பிடித்தான். நல்லவேளை அந்த நாய்கள் அவர்கள் மீது விழுந்து பிடுங்கவில்லை. பிடுங்கியிருந்தால் அரைக் கிலோ கறிக்குக் குறையாமல் அதுகளின் வாய்க்குப் போயிருக்கும். போலீஸ் நாய்கள் என்பதால் துரத்திப் பிடிப்பதோடு சரி. கடித்துப் பிடிப்பதென்றால் வேறு விதமான உத்தரவுகள். சொற்களின் ஒலியை வைத்து அவைகள் உத்தரவுகளைப் புரிந்துகொள்கின்றன.

எக்ஸ்பிரஸ் ரயில்களில் சீசன் டிக்கட்காரர்கள் ஏறுவதைத் தடுக்க அவ்வப்போது செக்கிங் ஸ்க்வாட் என்ற கிரிமினல்கள் வருவது வழக்கம். ஆமாம். கிரிமினல்கள்தான். ஏனென்றால் தங்கள் வேலையின் நிமித்தம் வேலூர் செல்லும் இந்த குமாஸ்தாக்களை, டாக்டர்களை, எஞ்ஜினியர்களை ஏதோ பயங்கரவாதிகளைப் பிடிப்பதுபோல் கொலைவெறி கண்களில் மின்ன ஓட ஓட விரட்டிப் பிடிப்பார்கள் இந்த ரயில்வே துறை சோதனை அதிகாரிகள்.

சீசன் டிக்கட்டை வைத்து பாஸஞ்சர் ரயிலில் வேலூர் போய் வர முடியுமா? காட்பாடி போய்ச் சேரவே மதியமாகிவிடுமே?

அப்போது ஜார்ஜ் ஃபெர்னான்டஸ்தான் ரயில் மந்திரியாக இருந்தார். அவர் பதவியேற்றதும் முதல் நாள் ரயில் பவனுக்குள் சென்றபோது 'நீங்கள் யார்' என்று கேட்டு காவலாளிகள் அவரை வாசலிலேயே நிறுத்திவிட்டார்கள் என்று பத்திரிகைகளில் முதல் பக்கத்தில் கட்டம் கட்டி செய்தி போட்டிருந்தார்கள். வெறும் கதர் குர்த்தா, கதர் பைஜாமா, காலில் சாதாரண செருப்பு... என்ன ஒரு எளிமை!

இந்தியாவில் ஒரு வேடிக்கை என்னவென்றால் கீழிருந்து மேலே வருபவர்களால்தான் அதிகக் கஷ்டம். அதிகப் பிரச்னை. ஜார்ஜ் ஒரு சோஷலிஸ்ட் என்பதால் வித்தவுட்டுகளாகிய அந்த சீசன் டிக்கட்

கும்பலுக்கு ஏதாவது நன்மைகள் செய்வார் என்று எதிர்பார்த்தான் பெருமாள். ஆனால் அவரோ அவர்கள் முகத்தில் குசுதான் விட்டார்.

இந்த வித்தவுட்டுகளெல்லாம் சேர்ந்து ஒரு சங்கம் அமைத்திருந்தார்கள். சங்கம் என்றால் அதற்கு ஒரு பெயர் இருக்க வேண்டுமே? 'வித்தவுட்டுகள் சங்கம்' என்று யோசனை சொன்னான் பெருமாள். அது எடுபடவில்லை. டாக்டர்களையும் எஞ்ஜினியர்களையும் வித்தவுட் என்று கூறுவது அவர்களை அவமதிப்பது போலாகுமாம்.

இந்தியத் திருநாட்டில் எத்தனையோ ஏற்றத்தாழ்வுகள் இருக்கலாம். ஒருவருக்கு மாத வருமானம் ஒரு கோடியாகவும், மற்றொருவருக்கு ஆயிரம் ரூபாயாகவும் இருக்கலாம். ஆனால் பிருந்தாவன் எக்ஸ்பிரஸ் ஜெனரல் கோச்சைப் பொறுத்தவரை அந்த கோச்தான் ஜனநாயகத்தின் சின்னமாகவும் சோஷலிசத்தின் எடுத்துக்காட்டாகவும் விளங்கியது. டாக்டரும் வித்தவுட், எஞ்ஜினியரும் வித்தவுட். ஒரு ஆஃபீஸில் எடுபிடியாக வேலை செய்பவரும் வித்தவுட்.

'ரயில் பயணிகள் சங்கம்' என்று நாகரிகமாகப் பெயர் சூட்டப்பட்டு சந்தாவும் வசூலிக்கப்பட்டது. ஒவ்வொரு வித்தவுட்டும் மாதம் நூறு ரூபாய் தர வேண்டும். செக்கிங் ஸ்க்வாட் அதிகாரிகளிடம் பேசி, சமரசம் செய்து மாதம் இரண்டு மூன்று முறை அபராதம் கட்டிவிடுவதாக முடிவு செய்யப்பட்டது.

இப்படியே வண்டி சமரசமாய் சென்றுகொண்டிருந்த வேளையில்தான் ஜார்ஜ் ஃபெர்னான்டஸ் ரயில் மந்திரியாகப் பதவியேற்றார்.

பதவியேற்றதும் இந்தியா ஏழை நாடாக இருப்பதற்கும் ரயில்வே துறை நட்டத்தில் இயங்குவதற்கும் இந்த வித்தவுட்டுகள்தான் காரணம் என்று கண்டுபிடித்து ரயில்வே அதிகாரிகளுக்கு கடுமையான உத்தரவுகளைப் போட்டார் ஜார்ஜ் ஃபெர்னான்டஸ். யாருமே சீசன் டிக்கட்டை வைத்துக்கொண்டு எக்ஸ்பிரஸ் ரயில்களில் ஏறக்கூடாது. ஏறினால் அபராதம். கட்டத் தவறினால் சிறை.

இதுதான் பின்னணி. இந்த வகையில் பார்த்தால் காயத்ரியை போலீஸாரின் வேட்டை நாய்கள் துரத்தியதற்கும், அதற்குப் பின் காயத்ரிக்கும் பெருமாளுக்கும் ஏற்பட்ட காதலுக்கும் அன்றைய ரயில் துறை மந்திரி ஜார்ஜ் ஃபெர்னான்டஸ்தான் காரணம் என்பதில் சந்தேகமே இல்லை.

காயத்ரிக்கு மிகவும் வெட்கமாகப் போயிற்று. நாய் என்றால் அவளுக்கு பயம். சிறுமியாக இருக்கும்போது நாய் கடித்துவிட்டதால் ஏற்பட்ட பயம் அப்படியே தங்கிவிட்டது.

நாய் துரத்தியதற்கு மறுநாள் - பெருமாளும் காயத்ரியும் நீண்ட நேரம் பேசுவதற்கும் ரயில்வே அதிகாரிகள் வசதி செய்து கொடுத்தார்கள்.

ஆமாம். முதல் நாள் ஐம்பது பேருக்கு மட்டுமே அபராதம் கட்டிவிட்டு எல்லா வித்தவுட்டுகளும் ரயில் ஏறிவிட்டதால் அதிகாரிகளுக்குக் கோபம். மறுநாள் இன்னும் நிறைய போலீஸோடும், நாய்களோடும் வந்து அந்த வித்தவுட்டுகளைக் காட்பாடி ரயில் நிலையத்தில் உட்கார்த்தி வைத்து 'அத்தனை பேருக்கும் அபராதம் கட்டினால்தான் ஆயிற்று, இல்லாவிட்டால் சிறை. மாலை வரை டைம் கொடுக்கிறோம்' என்று

சொல்லிவிட்டனர்.

எல்லோரும் ப்ளாட்ஃபார நிழலில் தரையில் அமர வைக்கப்பட்டிருந்தனர். டாக்டர்களைப் பார்க்கத்தான் பாவமாக இருந்தது. இவர்களும் ஏன் இப்படி? அரசாங்க வேலையில் இருக்கும் அனுகூலங்கள்! அதுதான் இவ்வளவு அவமானங்களையும் சகித்துக்கொள்ளச் செய்கிறது.

பெருமாள் தன் வழக்கம்போல் ஒரு ஓரத்தில் அமர்ந்து புத்தகத்தைப் பிரித்தான். அவன் பொதுவாக யாரிடமும் எதுவும் பேசுவதில்லை. தான் உண்டு, புத்தகம் உண்டு என்று படித்துக்கொண்டிருப்பான். படிப்பது அவனுக்குப் பிடித்தமான விஷயம். ஆனால் பலருக்கும் அது பிடிக்கவில்லை என்று தெரிந்துகொண்டான். ‘இப்படி விழுந்து விழுந்து படிக்கிறீர்களே, ஏதாவது பரீட்சையா?’ இந்தக் கேள்வியை அவனிடம் கேட்காதவர்களே இல்லை என்று சொல்லலாம்.

அவனை அவர்கள் மனநிலை சரியில்லாதவன் என்றே நினைத்திருக்க வேண்டும். அல்லது, ஏதோ வேற்றுக் கிரகத்து ஜீவி என்று நினைத்திருக்கலாம். யாரும் அவனோடு பேசுவதில்லை. புன்முறுவல்கூட செய்வதில்லை. ஆனால் அவர்களுக்கு ராஜகோபாலோ அவரது நண்பர்களோ அசாதாரணமாகத் தெரியவில்லை என்பது ஆச்சரியம்தான். இந்த பிருந்தாவன் வித்தவுட்டுகளான 250 பேர்களில் ராஜகோபால் நிச்சயமாக ஒரு கேரக்டர்தான்.

நான்கு அடி உயரம். மீசை மழிக்கப்பட்ட முகம். நெற்றியில் நீண்ட துலக்கமான திருமண். பார்த்தாலே பக்திப் பரவசம் ஏற்படும் தோற்றம். ஆனால் நீங்கள் அவரை விஷ் பண்ணினால் என்ன செய்வார் தெரியுமா? வலது கை ஆள்காட்டி விரலையும் கட்டை விரலையும் சேர்த்து வட்டமாக ஆக்கிக் காண்பித்து ‘குட்மார்னிங்’ என்பார்.

பெருமாளுக்கு வெகு நாட்களாக அதன் அர்த்தம் விளங்காமல் இருந்தது. ‘இவருடைய மேனரிஸம் போலும்’ என்று நினைத்து சும்மா இருந்துவிட்டான். பிறகுதான் புரிந்தது அந்த யோக முத்திரையின் பொருள் யோனி என்று. அதனால்தான் பெண்கள் அவருக்கு ‘விஷ்’ பண்ணுவதேயில்லை.

பெருமாளுக்கு ஒரு சந்தேகம். ராஜகோபால் ஒரு அரசு அலுவலகத்தில் வேலை பார்க்கிறார். அப்படியானால் அங்கேயும் இதே ‘முத்திரை’யுடன்தான் வணக்கமா? அதிகாரிகள் தொலைத்துவிடுவார்களே? ஆனால் அப்படியும் தீர்மானமாகச் சொல்ல முடியாது. பெருமாளின் அலுவலகத்தில் முருகன் என்று ஒரு குமாஸ்தா இருக்கிறார். வயது முப்பது இருக்கும். ஆனால் தண்ணி, கஞ்ஜா, அபின் என்று சகலமும் அத்துப்படி. காலையிலேயே முன்னூறு மில்லியை இறக்கிவிட்டுத்தான் அலுவலகம் வருவார். வேலை பார்ப்பதோ அஞ்சல்துறைக் கண்காணிப்பாளர் அலுவலகம். வேலூர் மாவட்டத்திலுள்ள அத்தனை தபால் நிலையங்களுக்கும் தலைமையகம். அதன் கௌரவம் என்னாவது?

சூப்ரண்ட் சொல்லிச் சொல்லிப் பார்த்துவிட்டு ஒரு நாள் முருகனை சஸ்பெண்ட் செய்துவிட்டார். ஆனால் முருகனுக்கே அது புதையல் கிடைத்ததுபோல் ஆகிவிட்டது. வேலை செய்யாமலேயே சம்பளம். அது

மட்டுமல்ல, வேலையில் இருந்தபோது அந்தப் பிடித்தம், இந்தப் பிடித்தம் என்று சம்பளத்தில் முக்கால்வாசியைப் பிடித்துக் கொண்டுவிடுவார்கள். வெறும் இருநூறு ரூபாய் சம்பளம் வாங்கிக் கொண்டு செல்பவர்களெல்லாம் உண்டு. மறுநாள் ஜீப்பியெ஁ப் போட்டு எடுத்துக்கொள்வார்கள். அந்தப் பணத்தில்தான் குடும்பம் ஓடும். அதுவும் இரண்டு வாரம்தான் தாங்கும். பிறகு அஞ்சலகக் கூட்டுறவு வங்கியில் கடன் வாங்கிக்கொள்வார்கள்.

இந்தக் கூட்டுறவு வங்கி மட்டும் இல்லாதிருந்தால் முக்கால்வாசி அஞ்சல் ஊழியர்கள் தற்கொலை செய்துகொண்டு மாண்டு போயிருப்பார்கள். அந்த அளவுக்கு அஞ்சல் ஊழியருக்கு ஒரு லட்சம் வரை கடன் கொடுப்பார்கள். ஆர்ட்டிகிள் லோன், மெடிக்கல் லோன், ஸ்கூல் லோன், பர்ஸனல் லோன் என்று பல வித லோன்கள் உண்டு. லோன் பணத்தை மாதச் சம்பளத்தில் பிடித்துக் கொள்வார்கள். அதனால்தான் பலருக்கும் 200, 300 என்று சம்பளம். ஆனால் ஒரு ஊழியர் சஸ்பெண்ட் செய்யப்பட்டுவிட்டால் அவருக்குக் கொடுக்கப்படும் பாதிச் சம்பளத்தில் எவ்விதப் பிடித்தமும் செய்யப்படுவதில்லை. அதனால் இருநூறு ரூபாய் சம்பளம் வாங்கிக்கொண்டிருந்த முருகன் சஸ்பெண்ட் ஆனவுடன் பாதிச் சம்பளமான 2500 ரூபாயை சுளையாக வாங்கிக்கொள்ளும் நல்லதிருஷ்டம் கிட்டியது.

கள்ளச் சாராயத்துக்கு பதிலாக சீமைச் சாராயம் குடிக்கும் அளவு முருகனின் வாழ்நிலையில் முன்னேற்றம் ஏற்பட்டது. இதைத் தெரிந்துகொண்ட சூப்ரண்ட் சும்மா இருப்பாரா? சஸ்பென்ஷன் உத்தரவை ரத்து செய்து முருகனை சத்துவாச்சாரி அஞ்சல் நிலையத்துக்கு மாற்றினார். சூப்ரண்ட்டின் துரதிருஷ்டம்... சத்துவாச்சாரி ஒரு ரெஸிடென்ஷியல் ஏரியா. ஆண்கள் அனைவரும் அலுவலகம் போய்விட பெண்கள்தான் போஸ்டா஁பீஸுக்கு வருவார்கள். முருகன்தான் காலையிலேயே குவார்ட்டரை இறக்கிவிட்டுக் கிளம்பும் ஆளாயிற்றே? பெண்களிடம் கவுண்ட்டரில் வம்பு தும்பு. அவர்களில் ஒரு பெண் பெரிய அதிகாரி ஒருவரின் மனைவி. சென்னைக்குப் பறந்தது புகார். இப்படி வில்லங்கமான ஆட்களை முக்கியமான இடத்தில் நியமித்ததற்காக சூப்ரண்ட் வேலூரிலிருந்து உடனடியாக திருநெல்வேலிக்கு மாற்றப்பட்டார். முருகன் திரும்பவும் சூப்ரண்ட் ஆ஁பீஸுக்கே வந்து சேர்ந்தார்.

புதிதாக வந்த சூப்ரண்ட்டினால் முருகனின் லூட்டியைத் தாங்க முடியாமல் அவரை சஸ்பெண்ட் செய்வதற்கு பதிலாக சென்னையிலுள்ள தலைமை அலுவலகமான ஸர்க்கிள் ஆ஁பீஸுக்கு சரண்டர் செய்தார். ஸர்க்கிள் ஆ஁பீஸில் முருகனின் அருஞ்செயல்கள் பற்றிய செய்திகள் நாள்தோறும் வேலூருக்கு வந்தவண்ணம் இருந்தன. காலையில் ஆ஁பீஸ் வந்தவுடன் கஞ்சாத் தூளை எடுத்து உள்ளங்கையில் வைத்துப் பொடித்து நசுக்கி சிகரெட்டுக்குள் வைத்து ஊதினால், ஸர்க்கிள் ஆ஁பீஸ் முழுவதுமே கஞ்சா மணம் பரவி விடுகிறதாம். சூப்ரண்டுக்கு கடும் ‘டோஸ்’ விட்டு முருகனை வேலூருக்கே திருப்பி அனுப்பிவிட்டனர் ஸர்க்கிள் ஆபீஸ் அதிகாரிகள். அதன் பிறகு யாருமே முருகனின் பக்கம் செல்வதில்லை.

சரி, நாம் ராஜகோபாலிடம் திரும்புவோம். பிருந்தாவனுக்கு முதல் முதலில் வந்து சேர்கிற ஆள் ராஜகோபால். ஏழேகால் ரயிலுக்கு

ஆறரைக்கே வந்துவிடுவார். வந்ததும் முதல் வேலையாக எதிர் எதிரே இருக்கும் இரண்டு வரிசைகளில் புத்தகங்களைப் போட்டு இருக்கைகளை ரிசர்வ் செய்துவிடுவார். என்ன புத்தகங்கள் தெரியுமா? சல்லிசான விலையில் கிடைக்கும் செக்ஸ் புத்தகங்கள். அட்டையைப் பார்த்ததுமே அனைவரும் தூரப் போய்விடுவார்கள். ராஜகோபாலின் நண்பர்களுக்கு மட்டுமே அந்த இடங்கள்.

ஏழு மணிக்குத் துவங்கும் சீட்டுக் கச்சேரி ரயில் காட்பாடியை நெருங்கும்போதுதான் முடியும். ஒரு சில சமயங்களில் பெருமாளுக்கு அவர்கள் அருகில் தரையில் அமரும் சந்தர்ப்பம் ஏற்படும். அப்போது ராஜகோபாலின் பேச்சைக் கேட்டு பெருமாளுக்கு ஆச்சரியமாக இருக்கும். அந்த அளவுக்கு அவர் பேச்சில் செக்ஸ் விளையாடும். அவர் - நார்மல். பெருமாள் - அப்நார்மல். காரணம், புத்தகங்கள். பரீட்சை எதுவுமில்லாமல் என்ன படிப்பு? துணிச்சலான பேர்வழிகள் சிலர் புத்தகத்தை வாங்கிப் பார்த்துவிட்டு ஒன்றும் புரியாமல் திருதிருவென விழித்துவிட்டு திருப்பிக் கொடுத்துவிடுவார்கள்.

அப்படித்தான் காட்பாடி ரயில் நிலையத்தில் போலீஸாரால் சுற்றி வளைக்கப்பட்டு, தரையில் உட்கார வைக்கப்பட்டபோதும் பெருமாள் ஒரு புத்தகத்தில் ஆழ்ந்திருந்தான். பறவை ஆய்வாளர் சலீம் அலியின் சுயசரிதை. அப்போது யாரோ தன்னைக் கூர்ந்து கவனிப்பதுபோல் உணர்ந்து தலையை நிமிர்த்திப் பார்த்தான்.

எதிரே சற்று தூரத்தில் அமர்ந்திருந்த காயத்ரிதான் பெருமாளையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அந்தக் கணம் பெருமாளுக்குள் பொறி தட்டியது - இவளை ஒரு தடவையாவது போகித்துவிட வேண்டும் என்று.

இதற்கிடையில் வித்தவுட் பயணிகள் சங்கத் தலைவர் தன் தங்கச் சங்கிலியையும் மற்ற சில நண்பர்களின் சங்கிலிகளையும் அடகு வைத்து அனைவருக்கும் அபராதம் கட்டி அனைவரையும் விடுவித்தார்.

அன்றைய தினம் மாலை காயத்ரி எப்போதும் அவள் அமர்ந்திருக்கும் சிமெண்ட் பெஞ்சை விட்டுவிட்டு மாடிப் படிக்கட்டுகளின் அருகே நின்றுகொண்டிருந்தாள்.

மான் வேட்டையும் பெண் வேட்டையும் ஒரு விதத்தில் ஒரே மாதிரியானதுதான். துள்ளிக்கொண்டு ஓடும் மான் 'ஸர்ச் லைட்'டை அடித்ததும் அந்த ஒளியில் மிரண்டுபோய் நின்ற இடத்தில் நின்று கொண்டிருக்கும். ஒரே ஷாட். சுருண்டு விழுந்துவிடும். பெண்களுக்கான 'ஸர்ச் லைட்' என்ன என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும். ஒரு பெண்ணுக்கு அடித்த லைட்டையே இன்னொரு பெண்ணுக்கும் அடித்தால் வேட்டை கிட்டாமலும் போகலாம். பெருமாள் இதில் கை தேர்ந்தவனாக இருந்ததால் ஓரிரு தினங்களில் காயத்ரியை வீழ்த்திவிட்டான். இதற்கென்று பெரிய திறமையெல்லாம் தேவையில்லை. இஷ்டத்திற்கு ஆஹா ஓஹோ என்று புளுகித்தள்ள வேண்டும். ஒரு சிறிதும் லஜ்ஜையே பார்க்கக் கூடாது. அதோடு, உருகோ உருகு என்று உருக வேண்டும். அவர்கள் உளறுவதையெல்லாம் சகித்துக்கொள்ள வேண்டும். எல்லாவற்றையும் விட முக்கியம், அவர்கள் மீது உங்களுக்கு செக்ஷுவல் இன்டென்ஷன்

இருப்பதை - ஒரு சிறிதும் வெளிக்காட்டிக்கொள்ளக்கூடாது. அவ்வளவுதான் விஷயம்.

காயத்ரியும் பெருமாளும் நெருங்கிப் பழக ஆரம்பித்ததும், அதுவரை அவனை ஏதோ ஒரு வினோத ஜந்துவைப் போல் பார்த்துக்கொண்டிருந்தவர்கள் இப்போது ஒரு முக்கிய பிரமுகரைப்போல் நடத்த ஆரம்பித்தார்கள். ஒரு நாள்கூட அவனைத் தரையில் அமர விடுவதேயில்லை. காயத்ரிக்கு ஒரு சீட். அவளுக்குப் பக்கத்தில் பெருமாளுக்கு ஒரு சீட்.

இதற்கிடையில் பெருமாளின் அலுவலகத்தில் நிலைமை தலைகீழாய் மாறியது. காரணம் - புதிதாக வந்த சூப்ரண்ட் சுந்தரமூர்த்தி. நெடு நெடுவென்று ஆறரை அடி உயரம். எப்போதும் வளவளவென்று பேசிக்கொண்டேயிருக்கும் வாய். ஊருக்கே கேட்கும் குரல். ஊழலுக்குப் பஞ்சமேயில்லை. ஒவ்வொரு வேலைக்கும் ஒவ்வொரு விலை. புது போஸ்ட்டிங் வேண்டுமா? அதற்கு ஒரு விலை. ட்ரான்ஸ்ஃபரா? கையாடல் செய்துவிட்டு மாட்டிக்கொண்ட குமாஸ்தாவைக் காப்பாற்ற வேண்டுமா? எல்லாவற்றுக்கும் தனித்தனி விலை. சூப்ரண்ட் அறைக்கு வெளியே விலைப் பட்டியல் மாட்டி வைக்காத குறைதான்.

ஈ.டி. போஸ்ட்டிங்கில்தான் சுந்தரமூர்த்திக்கு நல்ல வருமானம். ஈ.டி. என்றால் எக்ஸ்ட்ரா டிபார்ட்மென்டல். தினக்கூலி முறையில் சம்பளம் வாங்கும் தபால்காரர். அவர்களை நியமிப்பதில் செம்மையாகக் காசு பார்த்துவிடுவார் சுந்தரமூர்த்தி.

பெருமாளுக்கு அவர் ஒரு இடையூறு செய்தார். அதாவது, அவர் எங்கெல்லாம் இன்ஸ்பெக்ஷனுக்குச் சென்றாரோ அங்கெல்லாம் அவருடைய ஸ்டெனோ என்ற முறையில் அவனையும் அழைத்துக்கொண்டு போக ஆரம்பித்தார். இதனால் பெருமாளுக்குப் பல தினங்களில் பிருந்தாவனைப் பிடிக்க முடியாமல் போயிற்று.

வேலூர் கோட்டத்தில் பல அஞ்சல் நிலையங்கள் மலைப் பகுதிகளில் இருந்தன. அங்கெல்லாம் போய் இன்ஸ்பெக்ஷன் செய்ய வேண்டும்.

இன்ஸ்பெக்ஷன் என்றால் என்ன?

அது ஒரு வருடாந்திர திவசம். உதாரணமாக இரண்டு சம்பவங்கள்.

தொங்குமலை என்று ஒரு மலைக்கிராமம். குறிப்பிட்ட தூரம் வரை ஜீப்பில் சென்று அங்கிருந்து சிறிது தூரம் மலையில் நடக்க வேண்டும். அந்த மலையில் ஒரு போஸ்ட்டாஃபீஸ். ஒரு போஸ்ட் மாஸ்டர். ஒரு ஈ.டி.

அங்கே வாழும் மக்கள் யாரும் கடிதம் எழுதும் வழக்கம் உடையவர்கள் அல்ல. காரணம், எழுதப் படிக்கத் தெரியாது. அவர்கள் பேசும் தமிழே ஒரு மாதிரி வித்தியாசமாக இருக்கும். மிகவும் கூர்ந்து கவனித்தால்தான் புரியும்.

எழுதப் படிக்கவே தெரியாத மக்கள் வாழும் அந்தப் பகுதியில் போஸ்ட்டாஃபீஸ் எப்படி வந்தது? ஊரில் ஒரு பெரிய மனிதருக்கு இது கௌரவப் பிரச்னையாகத் தோன்றவே தபால்துறை அதிகாரிகளிடம் பேசி போஸ்ட்டாஃபீஸைக் கொண்டுவந்து விட்டார்.

‘நீங்களே கவனித்துக்கொள்ளுங்கள்’ என்று சொல்லிவிட்டது தபால்துறை.

இப்போது அந்தப் பெரிய மனிதர்தான் போஸ்ட்டா∴பீஸை கவனித்துக் கொள்கிறார்.

சரி, கடிதப் போக்குவரத்தே இல்லாமல் எப்படி ஒரு போஸ்ட்டா∴பீஸ் இயங்க முடியும்?

அதற்கு ஒரு வழி இருக்கிறது. தொங்குமலையிலிருந்து மூன்று மலைகள் தாண்டி இருக்கும் கரடி மலையில் ஒரு போஸ்ட் ஆ∴பீஸ் உள்ளது. அந்தக் கரடி மலை போஸ்ட் மாஸ்டர் இந்தத் தொங்குமலை போஸ்ட் மாஸ்டருக்கு வாரம் ஒரு போஸ்ட் கார்ட் போடுவார். அதேபோல் தொங்குமலையும் கரடி மலைக்கு ஒரு போஸ்ட் கார்ட் போடும். இதற்கு தபால்துறை அகராதியில் ‘ஜஸ்டி∴பிகேஷன்’ என்று பெயர். இதற்கு ஒரு இன்ஸ்பெக்ஷன்!

இன்ஸ்பெக்ஷன் என்றால் என்ன?

நன்கு வடிகட்டிய தூய்மையான நாட்டுச் சாராயத்தைக் குடித்துவிட்டு கோழிக்கறியுடன் சாப்பாடு. தூக்கம். காலையில் எழுந்து போஸ்ட் மாஸ்டர் காண்பிக்கும் காகிதத்தில் கையெழுத்துப் போட்டுவிட்டுக் கிளம்ப வேண்டியது.

‘சரி, இங்கே பள்ளிக்கூடம் இருக்கிறதா?’

‘ஓ... அதோ தெரிகிறது பாருங்கள். இரண்டாவது மலை. அங்கே இருக்கிறது.’

‘பசங்க படிக்கிறாங்களா?’

இதற்கு ஈ.டி. ஒரு விளக்கம் சொன்னார்.

குறைந்தபட்சம் இருபது பசங்கள் படித்தால்தான் ஜஸ்டி∴பிகேஷன். அஞ்சு வகுப்புகளுக்கும் சேர்த்து இருபது பசங்கள். ஒரு டீச்சர். அவரே ஹெட்மாஸ்டரும். இருபது பேரில் ஒரு தலை குறைந்தால்கூட டீச்சருக்கு வேலை போய்விடும். அதாவது, பள்ளிக்கூடம் இருக்காது. ஆனால் இருபது பசங்களைப் பிடிப்பதுதானே பெரிய வேலை!

‘என்ன, பிடிப்பதா?’

‘இல்லேன்னா அமுக்குறதுன்னு வச்சுக்குங்க. பசங்க இஸ்கூலுக்குப் போகாம டிமிக்கி குடுத்துருவானுங்க. டீச்சர் அஞ்சாம்ப்பு பசங்களோட வந்து சின்னப் பசங்கள பன்னி புடிக்கிற மாதிரி புடிச்சிக்கிட்டுப் போயிருவாங்க. அஞ்சாம்ப்பு பசங்கதான் பெரிய பசங்க. அவுனுங்கள வச்சுத்தான் புடிக்கிறது. பன்னி வேட்ட மாதிரிதான்.’

‘எப்படி பசங்க ரெண்டு மலை தாண்டி ஸ்கூல் போறானுங்க?’

‘அது பெரிய தமாசு... வெளயாடிக்கிட்டே போவானுங்க. வண்ணாத்திப் பூச்சி புடிச்சிக்கிட்டு, புளியாம்பளம் பொறுக்கிக்கிட்டு, மரத்துல ஏறி வெளயாடிக்கிட்டு போனானுங்கன்னா மத்தியானத்துக்குள்ற இஸ்கூலு வந்துரும். அங்க ஊத்துற கஞ்சியக் குடிச்சிட்டு ரெண்டு எளுத்தப் படிச்சிட்டு கெளம்பிருவானுங்க. இருட்றதுக்குள்ள திரும்பணுமில்ல?’

இந்தப் பள்ளிக்கூடத்தையும் இன்ஸ்பெக்ஷன் செய்ய அதிகாரிகள் வருவார்கள். அவர்களுக்கும் நாட்டுச் சாராய, நாட்டுக் கோழி உபசரிப்பு

நடக்கும்.

இன்ஸ்பெக்ஷன் என்றால் சூப்ரண்ட்டுடன் செல்வதற்கு நான் நீ என்று போட்டி போடுவார்கள். நாட்டுக் கோழிக் குழம்பு கசக்குமா என்ன? ஆனால் பெருமாளுக்குக் கசந்தது. இன்ஸ்பெக்ஷனுக்குக் கிளம்பினால் இரண்டு தினங்களுக்கு காயத்ரியைப் பார்க்க முடியாது. அது மட்டுமல்லாமல் அவள் தினமும் பெருமாளுக்காக கோவைக்கு பதிலாக பிருந்தாவனிலேயே வர ஆரம்பித்திருந்தாள்.

முதல் முறை சுந்தரமூர்த்தி பெருமாளைத் திடுதிப்பென்று இன்ஸ்பெக்ஷனுக்கு அழைத்துச் சென்றுவிட்டபோது காயத்ரிக்கு தகவல்கூட சொல்ல முடியாமல் போனது. மாலையில் காயத்ரி பெருமாளின் அலுவலகத்துக்கே வந்து விசாரித்திருக்கிறாள்.

'யார் சார் அவுங்க? நீங்க இல்லேன்னதும் முகமே சுண்டிடிச்சு... உங்க லவ்வரா?'

பெருமாள் சிரித்தான். விஷயம் அலுவலகம் முழுக்கப் பரவிவிட்டது.

அதன் பிறகு சுந்தரமூர்த்தி பெருமாளை எக்கச்சக்கமாக துன்புறுத்த ஆரம்பித்தார். வேலூர் ஹெட் போஸ்ட்டா.ஃபீஸ் இன்ஸ்பெக்ஷன் நோட்ஸ் என்று நான்கைந்து தினங்களுக்கு டிக்டேஷன் கொடுப்பார். டைப் செய்தால் முழு நீளத் தாளில் நிச்சயமாக நூறு பக்கம் வரும்.

நாக்கில் நுரை தள்ள அந்த நூறு பக்கத்தையும் டைப் செய்து கொடுப்பான் பெருமாள். சுந்தரமூர்த்தி சொன்னபடி ஒரு பிழையில்லாமல் அடித்துக் கொடுப்பான். அதை வாங்கி அந்த ஆள் ஒவ்வொரு பக்கத்திலும் கோழி கிளறியதுபோல் கன்னாபின்னாவென்று பச்சை மையினால் திருத்தங்கள் செய்து 'திரும்ப அடித்துக் கொடுங்கள்' என்று கொடுப்பார். வேண்டுமென்றே மாலை ஐந்து மணிக்குக் கொடுத்து 'காலை பத்து மணிக்கு வேண்டும்; ப்பீயெம்ஜி கேட்கிறார்' என்பார்.

PMG என்றால் தபால்துறையைப் பொறுத்தவரை கடவுள் என்று பொருள். அவர் நினைத்தால் அவரது அடிமைகளை என்ன வேண்டுமானாலும் செய்யலாம்.

முருகனை அந்தக் கடவுளால் என்ன செய்ய முடிந்தது என்று நீங்கள் சமத்காரமாகக் கேட்கலாம். அதில் ஒரு சின்ன சூட்சுமம் இருக்கிறது. முருகனைத் தமிழ்நாட்டில் எந்த இடத்திற்கு மாற்றல் செய்தாலும் அவர் போவார். அவருக்குக் குழந்தை குட்டி, குடும்பம் எதுவும் கிடையாது. ஆனால் ஒரு குமாஸ்தாவை, ஒரு ஸ்டெனோவை ராமநாதபுரம் டிவிஷனுக்கு மாற்றினால் அவர் நிலை என்னவாகும்?

அதை உத்தேசித்தே அந்த நூறு பக்கங்களையும் பெருமாளுக்கு அன்றைய இரவே அடித்து முடிக்க வேண்டியிருந்தது.

ஆனால் கலையரசன் அவனுக்கு ஒரு பக்கபலம். டிவிஷன் ஆ.ஃபீஸின் ஸ்டோர் கீப்பர். அப்படிப்பட்ட சமயங்களில் பெருமாளை அழைத்துக்கொண்டு சினிமாவுக்குச் செல்வார்.

'டைப் அடிக்க நூறு பக்கம் இருக்கும்போது சினிமாவா?' என்பான் பெருமாள்.

'நீ கம்னு வா பெருமாள். கவலப்படாதே. சினிமா பார்த்துட்டு வந்து உக்காந்து அடிச்சா தெம்பா அடிக்கலாம். நானும் கூட இருக்கேன்.'

சினிமா பார்த்துவிட்டு இருவரும் பிரியாணி சாப்பிடுவார்கள். வேலூரின் சிறப்புகளில் ஒன்று, அங்கே ஓட்டல்களில் கிடைக்கும் சாப்பாடு. அந்த ஊர் பிரியாணியைப்போல் தமிழ்நாட்டில் வேறெங்கும் கிடைக்காது என்றே சொல்லவேண்டும். குவார்ட்டர் பிரியாணி சாப்பிட்டால் மேலும் சாப்பிடத் தோன்றும். அப்போது 'குஸ்கா' என்று கொடுப்பார்கள். கறி இல்லாத பிரியாணி. பிரியாணி பதினைந்து ரூபாய் என்றால் குஸ்கா மூன்று ரூபாய்.

அசைவம் மட்டுமல்ல, சைவமும் அட்டகாசமாக இருக்கும். சந்தேகமிருந்தால் அந்த ஊர் இட்லியை நீங்கள் சாப்பிட்டுப் பார்க்க வேண்டும். எங்கேயிருந்துதான் அந்த மென்மையைக் கொண்டு வருகிறார்களோ தெரியவில்லை. வழவழவென்று மழிக்கப்பட்ட நிதம்பத்தைப் போல் அவ்வளவு மிருதுவாக இருக்கும். தொட்டுக் கொள்ள வடைகறி.

ஒரு நாள் இரவு, சினிமாவுக்குப் போய்விட்டு, பிரியாணியும் குஸ்காவும் சாப்பிட்டுவிட்டு இரவு முழுவதும் டைப் செய்தான் பெருமாள். துணைக்கு கலையரசன். வீட்டுக்குப்போய் மனைவியிடம் சொல்லிவிட்டு வந்தார்.

அப்போதெல்லாம் கம்ப்யூட்டர் கிடையாது. மாங்குமாங்கென்று முதுகு வலிக்க டைப் செய்ய வேண்டும். கம்ப்யூட்டர் கிடக்கட்டும். ஒரு எலக்ட்ரானிக் டைப்ரைட்டர்கூட கிடையாது.

இரவு முழுவதும் கலையரசன் பெருமாளின் பக்கத்தில் அமர்ந்து பக்கம்பக்கமாக படித்துக்கொண்டே இருந்தார். காலியில் நூறு பக்கத்தையும் அடித்து முடித்தபோது ஒன்பது மணி.

இவ்வளவு செய்தும் சுந்தரமூர்த்திக்குத் திருப்தியாகவில்லை.

'அவன் ஒரு ஸேடிஸ்ட்டுபா. அப்படித்தான் இருப்பான். நீ கண்டுக்காத' என்று அடிக்கடி சொல்லி பெருமாளுக்கு தைரியம் கொடுப்பார் கலையரசன்.

ஒரு நாள் பெருமாளுக்கு உடம்பு சரியில்லாமல் போனது. காலையில் ஐந்து மணிக்கு எழுந்துகொள்ள முடியவில்லை. 'சரி, ஒரு நாள் லீவு போட்டுவிடலாம்' என்று நினைத்தான். ஆனால் அன்றைய தினம் அவசரமாக ஒரு சி.ஆர். அனுப்பியாக வேண்டும்.

மத்திய அரசு அலுவலகங்களில் இது ஒரு வருடாந்திர திவசம். சி.ஆர். என்பது Confidential Report-இன் சுருக்கம். அதாவது அதிகாரியாகப்பட்டவர் தனக்குக் கீழுள்ள அனைவருடைய வேலைத்திறன் மற்றும் நடவடிக்கைகளைப் பற்றிய மதிப்பீட்டை எழுதி வைப்பார். பெருமாள் நன்கு வேலை செய்பவனா? நேரம் தவறாமல் அலுவலகம் வருகிறானா? அதிகாரிக்குக் கீழ்படிந்து நடக்கிறானா? அலுவலகத்தில் ஏதாவது தில்லுமுல்லு செய்கிறானா? அவனுடைய தனிநபர் ஒழுக்கம் எப்படிப்பட்டது? இந்த ரீதியில் ஐம்பது கேள்விகள் கேட்கப்பட்டிருக்கும். எல்லாவற்றுக்கும் பதில் எழுதி ஒரு ஃபைலில் போட்டு ரகசியமாக சூப்ரண்ட் தன் பக்கத்திலேயே உள்ள பீரோவில் வைத்துக்கொள்ள வேண்டும். இப்படி எல்லா ஊழியர்களுக்கும் ஒரு ரகசிய ஃபைல் உண்டு. இந்த ரிப்போர்ட்டை ஒரு அதிகாரியானவர் ஆண்டு தோறும் எழுத

வேண்டும்.

இதனால் என்ன பயன்?

மலம்கூட எருவாகக் கூடும். ஆனால் இதுபோன்ற காரியங்களால் ஒரு பயனும் கிடையாது. குமாஸ்தாக்களுக்கும் ஸ்டெனோக்களுக்கும் அவர்களது முழு சர்வீஸிலும் உத்தியோக உயர்வு என்பதே கிடையாது. வாழ்நாள் பூராவும் குமாஸ்தா குமாஸ்தாதான். அப்புறம் என்ன மயிறுக்கு ரகசிய ஃபைல் வேண்டிக்கிடக்கிறது?

உத்தியோக உயர்வு இல்லாவிட்டாலும் குமாஸ்தாக்களுக்கு ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை சம்பள உயர்வு உண்டு. பெரிதாக ஒன்றுமில்லை. ஏதோ நூறோ இருநூறோ இருக்கும். அதற்காக சி.ஆர். ஃபைலை மேலிடத்துக்கு அனுப்ப வேண்டும். அதன்படிதான் அன்று ஒரு குமாஸ்தாவின் சி.ஆர் ஃபைலை அனுப்ப வேண்டியிருந்தது. இதை வேறு யாரும் செய்யக் கூடாது. ஸ்டெனோ மட்டுமே செய்ய வேண்டும்.

மறுநாள் போயும் அனுப்ப முடியாது. அந்த ஊழியரின் சம்பள உயர்வு பற்றிய அதிகாரிகளின் மீட்டிங் நாளை மறுநாள் இருந்தது. அதற்குள் இந்த ஃபைல் அனுப்பப்பட்டாக வேண்டும். முந்தின தினமே சாவகாசமாக அனுப்பியிருக்கலாம். சுந்தரமூர்த்தியின் தவறு. சென்ற ஆண்டுக்கான சீயாரையே இன்னும் அவர் எழுதவில்லை. ‘நாளை எழுதலாம்’ என்று சொல்லி விட்டார்.

எழுதிக் கிழிப்பதற்கு என்ன இருக்கிறது? ஐம்பது கேள்விகளுக்கும் ஆமாம், ஆமாம் என்று எழுதிக் கையெழுத்துப் போட வேண்டும்.

எழுந்து குளித்தான். பஸ்ஸில் போய்விட முடிவு செய்தான். சென்னையிலிருந்து வேலூர் பஸ் பயணம் இருக்கிறதே... அது ஒரு நரகம். அந்தச் சாலையில் எப்போது பயணம் செய்தாலும் சாலையோரங்களில் லாரிகளும், பேருந்துகளும் தலை குப்புறக் கவிழ்ந்து கிடப்பதைக் காணலாம்.

டிரைவர்களுக்கு இந்த ஆபத்து புரிவதில்லை. ஆபத்திலேயே வாழ்வதால் அது மரத்துப்போயிருக்கலாம். அதனால்தான் பேய் வேகத்தில் பறக்கிறார்கள். ஆனால் இடையில் ஏதாவது ஒரு ஊரில் சாப்பிடுவதற்கென்று போட்டுவிடுவார்கள். அதுவும் அரை மணி நேரத்திற்கும் மேல்.

பெருமாள் ஏறிய பஸ் டிரைவரும் இதற்கு விதிவிலக்கல்ல. ஒன்பது மணிக்கு ஏறினான். வழக்கம் போலவே பேய் வேகத்தில் பறந்து இடையில் இரண்டு முறை தேநீருக்காக நிறுத்தி ஆற்காடு சுற்றி வேலூரை அடைந்தபோது மதியம் மணி ஒன்று.

வேர்க்க விறுவிறுக்க சூப்ரண்ட்டின் அறைக்கு ஓடினான் பெருமாள். சி.ஆர். ஃபைலை எடுத்து, சென்ற வருடத்து சீயாரை எழுதச் செய்து, சீல் வைத்து அனுப்பியாக வேண்டும். ஒரு மணி நேர வேலை.

உள்ளே நுழைந்ததும் பெருங்குரலில் கத்தினார் சுந்தரமூர்த்தி.

‘ஏய்யா... இதுதான் ஆஃபீஸ் வர்ற நேரமா?’

‘இல்ல சார். இன்னிக்கு எனக்கு உடம்பு சரியில்லை. லீவ் லெட்டர்

குடுத்திர்றேன். அவசரமா சி.ஆர் ஃபைலை அனுப்ப வேண்டியிருந்ததால் வந்தேன்.'

'இன்னிக்கு உனக்கு சம்பளம் கிடையாது. Dies non.'

'ங்கோத்தா... மரியாதையாப் பேசுடா நாயே' என்று மனசுக்குள் சுந்தரமூர்த்தியைத் திட்டிக்கொண்டான் பெருமாள்.

'டைஸ் நான்' என்பது மிகப் பெரிய தண்டனை. அன்றைய தினம் அவனுடைய உத்தியோகத்தில் ஒரு ப்ரேக். அதாவது அன்று அவன் உத்தியோகத்தில் இல்லை என்று பொருள். இத்தனை ஆண்டுகள் வேலை பார்த்த சீனியாரிட்டியெல்லாம் போய் இன்றுதான் வேலையில் சேர்ந்ததைப் போன்ற கணக்காகிவிடும்.

சி.ஆர் ஃபைலை அனுப்பிவிட்டு வெளியே வந்தான். மிகவும் சோர்வாக உணர்ந்தான். சுந்தரமூர்த்தி சொன்னதோடு நிற்கவில்லை. ஏ.எஸ்.பியை அழைத்து பெருமாளுக்கு அன்று 'டைஸ்-நான்' என்று சொல்லிவிட்டார். ஏ.எஸ்.பி என்பவர் அஸிஸ்டெண்ட் சூப்ரண்ட். ஏ.எஸ்.பி. நல்ல மனிதர்தான். ஆனால் அவரால் சுந்தரமூர்த்தியைப் பகைத்துக்கொள்ள முடியாதே?

பெருமாள் தன் அறைக்கு வந்து அமர்ந்தான். எதிர் சீட்தான் கலையரசனுடையது. அன்றைக்கு அவர் லீவ் என்று சொன்னார்கள்.

அசோக் குமாருக்கு ஃபோன் செய்யலாமா என்று தோன்றியது. கலையரசனுக்கு அடுத்தபடியாக பெருமாளின் ஆப்த நண்பர் அசோக் குமார். வேலூர் கோட்ட அஞ்சல் துறை ஊழியர்களின் சங்கத் தலைவர். அழைத்ததும் வந்தார் அசோக் குமார். விஷயத்தைச் சொன்னான். 'ஒரு நிமிஷம் இருங்க' என்று சொல்லிவிட்டு சுந்தரமூர்த்தியின் அறைக்குள் நுழைந்தார். என்ன சொன்னார், என்ன செய்தார் என்று தெரியவில்லை. வேர்க்க விறுவிறுக்க பதற்றத்துடன் வெளியே வந்தார் சுந்தரமூர்த்தி.

பெருமாளிடம் வந்து அவன் தோளைத் தொட்டு 'என்ன பெருமாள் இது? ஏதோ வெளையாட்டுக்குச் சொன்னா அதைப் போய் அசோக் குமார்ட்ட சொல்லி சீரியஸாக்கிட்டீங்க' என்றார்.

பெருமாள் பதில் ஏதும் சொல்லவில்லை.

'டைஸ் நான்ல கையெழுத்துப் போட்டா என் கையை வெட்டிருவேன்னு வந்து நிக்கிறாரு இந்த அசோக்குமார். ஏன் அசோக், உங்களுக்காவது தெரிய வேண்டாமா? இந்த டிவிஷன்ல ரெண்டு சூப்ரண்ட். ஒண்ணு, நானு. ரெண்டாவது, நீங்க. உங்களை மீறியா நான் கையெழுத்துப் போட்ருவேன்?'

ஒரு குமாஸ்தாவான அசோக் குமாரை கைகால்கள் நடுங்க 'சூப்ரண்ட்' என்று சுந்தரமூர்த்தி சொன்னபோது அவரது குரலில் பச்சையான ஒரு வேசித்தனம் தெரிந்தது. ஆசாமி ரொம்பவே பயந்துபோயிருந்தார்.

அதற்கு மேல் சுந்தரமூர்த்தி பெருமாளிடம் தன் கைவரிசையைக் காண்பிப்பதில்லை.

***

**பின்குறிப்புகள்:**

1. பெருமாள் - காயத்ரி உறவு பெருமாள் சென்னை ஸர்க்கிள் ஆஃபீஸுக்கு மாற்றப்பட்டவுடன் முடிவுக்கு வந்தது. அதன் பிறகு அவன் அவளைப் பார்க்கவே சந்தர்ப்பம் வாய்க்கவில்லை.
2. சென்னை - காட்பாடி ரயில் பயணத்தின்போது பெருமாள் பிருந்தாவன் ஜென்ரல் கோச்சின் கக்கூஸ் அருகே தரையில் அமர்ந்து சென்ற நாட்களில் அவனருகே ஒருவர் பயணம் செய்வார். பெருமாளைப் போலவே அவரும் ஒரு குமாஸ்தாதான். ஆனால் அவரை பெருமாளால் என்றும் மறக்க முடியாது. காரணம்: அவர் ஒரு அலுமினிய முக்காலி ஒன்றை எடுத்து வருவார். குடைபோல் மடக்கக்கூடிய அந்த முக்காலியை விரித்துப்போட்டு அதன் மேல்தான் அமர்வார். பெருமாள் எவ்வளவு இடத்தை ஆக்ரமித்திருக்கிறானோ அதைவிடக் குறைவான இடத்தில் அம்முக்காலியின் மூலம் அதைவிட வசதியை அனுபவித்தவர் அவர். காட்பாடி வருவதற்குள் மூன்று நான்கு சிகரெட்டுகளும் புகைத்துவிடுவார். அதற்கென்று ஆஷ்ட்ரேயும் எடுத்து வருவார். இது தவிர, தூக்கம் வந்தால் தூங்குவதற்கு கண்களை மறைத்துக்கொள்ள வசதியாக ஒரு அழகான கறுப்புத் துணிப்பட்டையும் வைத்திருப்பார். வாழ்வுதான்...

***

# கதை: இரண்டு

தபால் துறையில் நிலவும் பல தமாஷான விஷயங்களில் ஒன்று, ஆர்.ட்டி. எனப்படும் ரொட்டேஷனல் ட்ரான்ஸ்ஃபர். நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறை சுழற்சி முறையில் நடக்கும் ட்ரான்ஸ்ஃபர்.

சுழற்சி முறையென்றால்? நல்ல சுட்டெரிக்கும் அக்னி நட்சத்திர உச்சி வெய்யிலில் நின்றால் மண்டை சுழலும் இல்லையா? அதைப் போன்றதுதான் இந்த ‘சுழற்சிமுறை’ என்பதும்.

செங்கல்பட்டு டிவிஷனில் வேலை பார்க்கும் ஒரு பெண் அந்த இடத்தில் நான்கு வருடம் வேலை பார்த்துவிட்டால் பிறகு அவர் அங்கிருந்து திருநெல்வேலி டிவிஷனுக்கு மாற்றப்பட்டுவிடுவார். இந்தப் பிரச்னையெல்லாம் குமாஸ்தாக்களுக்குக் கிடையாது. ஸ்டெனோக்களுக்கு மட்டும்தான்.

குமாஸ்தாவுக்கும் ‘ஆர்ட்டி’ உண்டு என்றாலும், அவர்களை மூன்றாம் மாடியிலிருந்து நான்காம் மாடிக்குத்தான் மாற்ற முடியும். அல்லது, அதே மாடியில் ஒரு பிரிவிலிருந்து மற்றொரு பிரிவுக்கு.

இது தபால் துறையின் தலைமை அலுவலக நிலவரம். இதுவே போஸ்ட்டாஃபீஸாக இருந்தால், ஒரு குமாஸ்தாவை அமிஞ்சிக்கரையிலிருந்து அண்ணாநகருக்குத்தான் மாற்றமுடியும். டிவிஷன் விட்டு டிவிஷன் மாற்ற முடியாது. ஆனால் ஸ்டெனோவை எங்கே வேண்டுமானாலும் தூக்கி அடிக்கலாம். அப்படித்தான் தாம்பரத்திலிருந்து அரக்கோணம் டிவிஷனுக்கு மாற்றப்பட்டாள் சாந்தி. நடுத்தர வயதுப் பெண்மணியான சாந்தி இந்த ட்ரான்ஸ்ஃபரைத் தடுத்து நிறுத்த எவ்வளவோ முயன்றாள். தலைமை அலுவலகத்துக்கு நாயாய் அலைந்து ப்பீயெம்ஜீயை நேரில் பார்த்து முறையிட்டாள்.

‘இதிலெல்லாம் ஆண் பெண் வித்தியாசம் கிடையாது. நீங்கள் ஒரு பெண் என்பதால்தான் அரக்கோணம் கொடுத்திருக்கிறேன். இல்லாவிட்டால் திருப்பத்தூர்தான்.’

ஆனால் இந்த ‘ஆர்ட்டி’ விதிமுறைக்கெல்லாம் அடங்காமல் இதே சென்னை அலுவலகத்தில் பத்து ஆண்டுகளாகக் கொட்டை போட்டுக் கொண்டிருப்பவர்களும் உண்டு. அவர்களில் ஒருவன், காமாட்சி. தலைமை அலுவலகத்தில் ஒரு டஜன் ஸ்டெனோக்கள் இருந்தனர் என்றால் அவர்களெல்லாம் நிரந்தரமானவர்கள் அல்ல. நான்கு வருடத்தில் எங்கோ சென்றுவிடக்கூடியவர்கள். காமாட்சி மட்டும் அப்படிப்பட்டவன் அல்ல. அவனை எந்த ‘ஆர்ட்டி’யும் எதுவும் செய்ய முடியாது.

தனக்கென்று வந்தால் ஊசி முனையிலும் ஒட்டகத்தை நுழைத்து விடுவான் காமாட்சி. ஆனால் பிறருக்கென்றால் ஒட்டகம் அளவு ஓட்டை இருந்தாலும் அதில் ஊசிகூட நுழைய முடியாதபடி செய்துவிடுவான்.

சாந்தி ப்பீயெம்ஜீயைச் சந்தித்து முறையிட வந்தபோது சந்திக்கவே விடாமல் மூன்று நாட்கள் அவளை அலைய விட்டவனும் காமாட்சிதான். ஸ்டெனோ மனது வைத்தால்தான் ப்பீயெம்ஜீயைச் சந்திக்க முடியும். இதெல்லாம் ஒரு அதிகாரிக்கும் அவரது ஸ்டெனோவுக்கும் உள்ள உறவைப் பொறுத்திருக்கிறது.

எவ்வளவு முசுடான, முரடான அதிகாரியாக இருந்தாலும் அவரைக் கைக்குள் போட்டுக்கொள்வான் காமாட்சி. எப்படியென்றால், முதலில் அந்த அதிகாரியின் மனைவியைக் குறி வைப்பான் அவன்.

காய்கறியில்தான் ஆரம்பிக்கும் அட்டாக். அந்த மாதிரி பச்சைப் பசேல் காய்கறியைப் பார்த்திருக்கவே மாட்டார் அதிகாரியின் மனைவி. அப்படியிருக்கும் காமாட்சியின் தேர்வு. அவனுக்கென்று எங்கேயிருந்துதான் கிடைக்குமோ! ‘தோட்டத்துக் காய்... மாமா வீட்டிலிருந்து வந்தது; மச்சான் வீட்டிலிருந்து வந்தது’ என்று ஏதாவது சொல்லிக் கொடுத்துவிடுவான்.

சென்னை நகரில் கிடைப்பதற்கு அரிதான பொருள்களாக வாங்கிக் கொடுப்பான். குறுமிளகைக் கொத்துக்கொத்தாக எலுமிச்சைச் சாறில் மிதக்கவிட்டு கண்ணாடி பாட்டிலில் போட்டுக் கொடுப்பான். அதேபோல் இஞ்சி ஊறுகாய், ஆந்திராவின் கோங்குரா என்று வகைவகையாய் எடுத்துச் செல்வான்.

இது மட்டுமல்லாமல் வேறு பல வேலைகளும் செய்து தருவான். அதிகாரி பிஸியாக இருப்பார். சினிமாவுக்கெல்லாம் மனைவியுடன் சென்று வர அவருக்கு நேரம் இருக்காது. அதனால் மேடத்துடன் காமாட்சியே துணைக்குப் போவான். தப்புத்தண்டா எதுவும் கடுகளவும் இருக்காது. மனசு ரொம்பச் சுத்தம். அடிக்கொரு தடவை ‘மேடம்; மேடம்’ என்று வாய் கொள்ளாமல் அழைப்பான். அந்த அழைப்பிலிருந்தே பார்ப்பவர்களுக்கு இந்த ஆள் மேடத்தின் பணியாள் என்று தெரிந்துவிடும்.

துளிக்கூட அவர்களுக்குச் சமானமாய் நடந்துகொள்ள மாட்டான். கால்களுக்குக்கூட சாதாரண ரப்பர் செருப்புதான்.

ஒரே வார்த்தையில் சொல்வதானால், காமாட்சி இல்லாவிட்டால் அதிகாரியின் வீட்டில் எதுவுமே இயங்காது என்ற அளவுக்கு அந்த வீட்டோடு இரண்டறக் கலந்துவிடுவான். அப்புறமென்ன? மேடத்தையே மடக்கிவிட்ட பிறகு அதிகாரி என்ன பிசாத்து? ஆனாலும், வரம்பு மீற மாட்டான். அதிகாரியிடமும் ஒரு அடிமையைப் போலவே நடந்துகொள்வான்.

ஒரு உதாரணம் -

அது ஒரு பென்ஷன் அதாலத் சந்திப்பு. தபால் துறையில் பென்ஷன் வாங்குபவர்கள் தங்கள் குறையை அதிகாரியிடம் தெரிவிக்கும் ஒரு சுபதினம்!

அதிகாரியின் பக்கத்தில் அமர்ந்து குறிப்புகள் எடுத்துக்கொண்டிருந்த காமாட்சி, திடீரென்று குறிப்பேட்டை வைத்துவிட்டு கீழே குனிந்து அதிகாரியின் ஷூ லேஸைக் கட்டிவிட ஆரம்பித்தான்.

அங்கிருந்தவர்களுக்கு ஒருகணம் தம் கண்களையே நம்ப முடியவில்லை.

அதிகாரிக்கே ஒரு மாதிரி ஆகிவிட்டது. வீட்டில் தன் மனைவியிடம் சொன்னார்.

‘இந்தக் காமாட்சி இன்னிக்கு மீட்டிங்ல என்ன பண்ணினான்னு கேளு.’

காமாட்சிக்கு எந்தத் தயக்கமும் இல்லை. தான் சரியான காரியத்தையே செய்தோம் என உறுதியாக இருந்தான்.

‘மேடம்... நீங்களே சொல்லுங்கள். சாரோட ஷூ லேஸ் அவிழ்ந்து கிடந்தது. எழுந்து நடக்கும்போது தடுக்குமா இல்லியா? இதை அவ்வளவு பேர் எதிரில் சாரிடம் எப்படிச் சொல்வது? அதனால்தான் நானே கட்டிவிட்டேன். என்ன தப்பு மேடம்?’

கலகலவென்று சிரித்தாள் மேடம். தன் கணவர் தடுக்கி விழும் காட்சி, அவள் மனக்கண் முன் வந்து போனதுதான் காரணம்.

இந்த நிலையில், ஒரு முறை நாசர் உசேன் என்பவர் தபால் துறைத் தலைவராக நியமிக்கப்பட்டபோது காமாட்சியின் ஆட்டம் க்ளோஸ் என்று எல்லோராலும் கருதப்பட்டது. காரணம், முட்டையையே அசைவம் என்று நினைக்கக்கூடிய தீவிர சைவனான காமாட்சி நாசர் உசேனுக்காக என்ன செய்ய முடியும் என்பதுதான்.

என்ன செய்தான் தெரியுமா?

மலேஷியாவிலிருந்து Avacado என்ற பழத்தைத் தருவித்துக் கொடுத்தான். நாசர் உசேனின் மனைவிக்கு எப்போது பார்த்தாலும் தசைப் பிடிப்பு, உடம்பு வலி, உடல் சோர்வு, தளர்ச்சி, பலஹீனம் போன்ற சரீர உபாதைகள் உண்டு. அவகாதோ ஒரு சர்வ ரோக நிவாரணி. அவகாதோ சாப்பிட்டதும் அம்மணிக்கு இதுவரையில்லாத புத்துணர்வு உண்டாகிவிட்டது.

அது மட்டுமல்லாமல் சென்னை கடற்கரையிலுள்ள ராணி மேரி கல்லூரிக்குப் பின்னாலுள்ள லாயிட்ஸ் ரோட் மீன் சந்தைக்கும் கிளம்பிவிட்டான் காமாட்சி. வங்காள விரிகுடாவில் வாழும் அத்தனை வகை மீன்களும் அந்த மீன் சந்தையில் கிடைக்கும். சங்கரா, சுறா, வஞ்சிரம், வெளவால் போன்ற ரகங்கள்தான் சென்னை வாழ் பொது ஜனங்களுக்குப் பொதுவாகக் கிடைக்கக் கூடியவை. ஆனால் லாயிட்ஸ் ரோட் சந்தையில் திருக்கை, கணவாய், லாப்ஸ்டர் போன்றவைகூட கிடைக்கும்; ஆக, நாசர் உசேனும் காலி!

பெரிய அதிகாரிகள் வீட்டில் பணிவிடை செய்வதற்காக ஈ.டி தபால்காரர்கள் நியமிக்கப்பட்டிருப்பார்கள். அவர்கள் மூலமாகவே இத்தகவல்களெல்லாம் வெளியே கசிந்து வந்தன.

நாசர் உசேனையும் மடக்கிய பிறகு காமாட்சியின் போக்கில் பெரிய மாறுதல் ஏற்பட்டது. தானே ப்பீயெம்ஜி என்பதுபோல் நடந்து கொண்டான். அவருடைய காரில்தான் வருவது போவது எல்லாம்.

இந்தக் காலகட்டத்தில்தான் வேலூரிலிருந்து சென்னைக்கு ‘ஆர்ட்டி’யில் வர இருந்தான் கண்ணாயிரம் பெருமாள். இதில் கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்று உண்டு. ‘ஆர்ட்டி’ தானாக வரும் என்று விட்டுவிட்டால் சென்னையிலுள்ள ஏதாவதொரு பாடாவதி டிவிஷனில் போட்டு வாழ்க்கையையே கெடுத்துவிடுவார்கள். அதாவது, டிவிஷன் சூப்ரண்ட்டுக்கு ஸ்டெனோவாகப்பட்டவர் ஒரு வைப்பாட்டியைப் போல்

நடந்துகொள்ள வேண்டியிருக்கும். தலைமை அலுவலகமான ஸர்க்கிள் ஆ.ஃபீஸில் அவ்வளவு பிரச்னை இல்லை. தலைமை அலுவலகம் என்பது ரெட் லைட் ஏரியா மாதிரி. அவ்வளவு கூட்டத்தில் நீங்கள் ஒரு ஆள் தப்பித்துக்கொள்ள வாய்ப்பிருக்கிறது. அங்கே இந்த நிலப்பிரபுத்துவ தாசி வேலையெல்லாம் கஷ்டம்.

***

**பின்குறிப்புகள்:**

1. காமாட்சியை நன்கு காக்கா பிடித்து ஸர்க்கிள் ஆ.ஃபீஸுக்கே மாற்றல் வாங்கிக்கொண்டான் பெருமாள். காமாட்சி இந்த மாதிரி காக்காவுக்கெல்லாம் மயங்குகிற ஆள் இல்லை. அவனுடைய தொழில் நுணுக்கத்தை அவனிடமே பிரயோகிப்பது அவ்வளவு சுலபமா என்ன? பெருமாளுக்கு காமாட்சி ஸர்க்கிள் ஆ.ஃபீஸில் மாற்றல் வாங்கிக்கொடுத்ததன் காரணம்: ஸர்க்கிள் ஆ.ஃபீஸிலுள்ள சக ஸ்டெனோக்கள் அனைவரும் காமாட்சிக்கு விரோதமாக இருந்ததுதான். அதனால் தனக்கென்று ஒரு நம்பிக்கையான கை வேண்டும் என்று கருதினான் காமாட்சி.
2. காமாட்சி பல 'ஆர்ட்டி'களுக்கு டிமிக்கி கொடுத்துவிட்டு ஸர்க்கிள் ஆ.ஃபீஸிலேயே தன்னை தக்க வைத்துக்கொண்டிருப்பதைப் போல், பெருமாள் தில்லியில் வேலை பார்த்த சிவில் சப்ளைஸ் ஆ.ஃபீஸுக்கு அருகிலிருந்த எக்ஸ்சேஞ்ச் ஸ்டோர் போஸ்ட்டா.ஃபீஸிலும் ஒரு பெண்மணி பத்து ஆண்டுகளாக எந்த மாற்றலுமின்றி அதே எக்ஸ்சேஞ்ச் ஸ்டோர் போஸ்ட்டா.ஃபீஸிலேயே வேலை பார்த்து வந்ததைப் பார்த்து பெருமாள் ஆச்சரியப்பட்டிருக்கிறான். கவுண்டடரில் அமர்ந்து எப்போதுமே தூங்கிக் கொண்டிருப்பாள் அந்த கட்வால் (Garwal) பெண்மணி. பெருமாள் தமிழ்நாட்டிலுள்ள சில சிறு பத்திரிகைகளில் தொடர்ந்து எழுதி வந்ததால் அவற்றைத் தபாலில் அனுப்புவதற்காக அடிக்கடி அந்த போஸ்ட்டா.ஃபீஸுக்குப் போய் அந்த கட்வால் பெண்மணியின் தூக்கத்தைக் கெடுத்திருக்கிறான்.

   பெருமாளிடம் 'போஸ்ட்டா.ஃபீஸ் என்றால் என்ன?' என்று ஒரு கேள்வியைக் கேட்டால் 'அது ஒரு வதைக் கூடம்' என்றுதான் பதில் சொல்லுவான். போலீஸ் ஸ்டேஷனைப் போன்ற நேரடி வதைக் கூடம் அல்ல. உளவியல் ரீதியான வதைக் கூடம்.

   சந்தேகமிருந்தால் ஒரு போஸ்ட்டா.ஃபீஸுக்குச் சென்று பதிவுத் தபால் ஒன்றை அனுப்பிப் பாருங்கள். முதலில் ஒரு வரிசையில் நின்று அதற்கு எடை போட வேண்டும். இந்த வாக்கியத்தை நீங்கள் ஒரு க்ஷணத்தில் படித்துவிடலாம். ஆனால் அதை வாழ்ந்து பார்ப்பது எவ்வளவு கடினமானது தெரியுமா? வெறும் ஆறு பேர் மட்டுமே நிற்கும் அந்த வரிசை நகர சமயங்களில் பதினைந்து நிமிடங்கள் கூட ஆகும்.

   இந்தியர்களைப் பற்றி சீனர்கள் ஒரு பழமொழி சொல்வார்கள். எடை தூக்க வேண்டுமென்றால் சீனர்கள் இரண்டு சுமைகளை ஒரு மூங்கிலில் கட்டி அதன் நடுப் பகுதியை தங்கள் தோளில் வைத்துக்கொள்வார்கள். இரண்டு சுமைகளுக்கு ஒரு சீனன். ஆனால்

இந்தியர்கள் எப்படியென்றால்: மூங்கிலின் இரண்டு முனைகளிலும் இரண்டு நபர்கள்: நடுவில் சுமை. ஒரு சுமைக்கு இரண்டு இந்தியர்கள்.

வரிசை ஆமை வேகத்தில் நகரும். நம்முடைய முறை வரும்போது நமது தபாலுக்கு எடை போட மறுத்துவிடுவார் அந்த ஊழியர். காரணம் - கவர் ஒட்டப்பட்டிருந்தால் மட்டுமே எடை போடப்படும். எனவே ஒட்டிக்கொண்டு வாருங்கள்.

ஒட்டுவது என்ன அவ்வளவு சுலபமா? அது தமிழர்களின் கலாச்சாரத்தோடு சம்பந்தப்பட்ட விஷயம் ஆயிற்றே?

பெருமாளின் கதைகள் பெரும்பாலும் செக்ஸை அடிப்படையாகக் கொண்டவை. ஆனால், தமிழர்கள் ஐரோப்பியர்களின் போர்னோ படங்களைவிட வெளிப்படையான செக்ஸ் மூவ்மெண்ட்டுகளைக் கொண்ட பாடல் காட்சிகளை சினிமாவில் குழந்தை குட்டிகளுடன் சேர்ந்து பார்ப்பதை வழக்கமாகக் கொண்டவர்களெனினும் மற்ற விஷயங்களில் - குறிப்பாக, இலக்கியத்தில் - செக்ஸ் கலப்பதை அடியோடு வெறுப்பவர்கள் என்பதால், அந்த வெகுஜன பொதுப்புத்திக்கு சற்றும் மாறுபடாத தமிழ் இலக்கியவாதிகளும் பெருமாளின் கதைகளை உடனுக்குடன் திருப்பி அனுப்பிவிடுவது வழக்கம். அப்படித் திருப்பி அனுப்புவதற்கு ஏதுவாக கவருக்குள் அதற்குரிய ஸ்டாம்புகளை இணைத்து வைத்திருக்க வேண்டும். அதன் காரணமாகவே கவரை ஒட்டாமல் எடை போடச் செல்வான் பெருமாள். கவுண்ட்டரில் இருக்கும் நபரிடம் தமிழ்க் கலாச்சாரம் குறித்த இவ்வளவு முக்கியமான விஷயத்தை பெருமாள் விளக்கிக்கொண்டிருக்கும் சமயத்தில் வரிசையின் பின்னால் நிற்பவர்கள் அவனைத் திட்ட ஆரம்பித்துவிடுவார்கள். அதையும் பொறுத்துக்கொண்டே கவுண்ட்டர் நபரிடம் விளக்குவான் பெருமாள். ம்ஹூம் அதற்கெல்லாம் தபால் இலாகா அசைந்து கொடுக்காது. தபால் இலாகாவுக்கும் தமிழ்க் கலாச்சாரத்துக்கும் என்ன சம்பந்தம்?

கவுண்ட்டர் நபர் பிடிவாதமாக மறுப்பதைப் பார்த்து கவரை எடுத்துக்கொண்டு கோந்து தேடிச் செல்வான் பெருமாள். அது ஒரு தனிக்கதை. மைதா மாவைக் காய்ச்சி தயாரிக்கப்பட்ட ஒரு வித கோந்து அது. ஒரு மணி நேரத்தில் கல்லாய் இறுகி விடும். பிராமணர்கள் அரிசி மாவில் வடாம் போடுவார்களே, அதுபோல் காய்ந்துபோய் கிடக்கும் அந்த கோந்து. ஆனால் தபால் இலாகாவினர் மனிதாபிமானிகள். பொதுஜனத்தின் இந்தப் பிரச்னையை உத்தேசித்தே பக்கத்தில் ஒரு நீர்ப் பாத்திரம் வைக்கப்பட்டிருக்கும்.

என்ன செய்வது? இந்தியா ஒரு மூன்றாம் உலக நாடு என்பதால், ஒன்று, அந்த நீர்ப் பாத்திரம் காலியாக இருக்கும்; அல்லது, கோந்து காலியாக இருக்கும். பிறகு அதற்குரிய ஊழியர்களைத் தேடிப் பிடித்து - அவர்கள் வேறு உங்களை நாயை விரட்டாத குறையாக விரட்டுவார்கள். - அவர்களைக் கெஞ்சிக் கூத்தாடி கோந்தையோ தண்ணீரையோ கொண்டுவந்து வைக்கச் செய்ய வேண்டும்.

ஒரு மணி நேரத்தில் கல்லாக மாறிவிடும் கோந்து. ஒரு வேளை முந்தின தினம் வைக்கப்பட்டதாக இருந்தால் அந்த கோந்துக் கட்டியில் தண்ணீரை ஊற்றி தேய்த்துக்கொண்டேயிருக்க வேண்டும்.

விதியின் நற்பயனாக அந்த கோந்து கரைந்து கவரை ஒட்டிக்கொண்டு சென்றால் வரிசையில் நிற்பவர்கள் பெரும் அராஜகவாதிகளாக இருப்பார்கள். உங்களை மீண்டும் வரிசையின் பின்னால் போய் நின்று வரச் சொல்வார்கள். 'நான் ஏற்கெனவே நின்றிருக்கிறேன்' என்று சொன்னால் 'நான் கூடத்தான் நேற்று வரிசையில் நின்றேன்' என்று நக்கலடிப்பான் ஒருவன். ஏதோ பழக்கதோஷத்தில் 'ன்' விகுதி போட்டுவிட்டேன். மற்றபடி பெண்கள் ஆண்களைவிட பெரும் அராஜகவாதிகள். இவ்விஷயத்தில் அலிகள் மட்டுமே அன்பானவர்கள் எனலாம். இரண்டு கையையும் தட்டி ஒருவித கரகரப்புக் குரலில் 'நீ போ, நீ போ, ஐ லவ் யூ' என்று சொல்வார்கள். ஆனால் என்ன செய்வது? அலிகளின் எண்ணிக்கை சமூகத்தில் மிகவும் கம்மி. மட்டுமல்லாமல் அவர்களை போஸ்ட்டாஃபீஸ் பக்கமும் காண முடிவதில்லை.

மீண்டும் வரிசையில் நின்று ஒட்டிய கவருக்கு எடை போட்டு அதற்குரிய ஸ்டாம்ப் எவ்வளவோ அதை இரண்டாக வாங்க வேண்டும். இது அடுத்த பிரச்னை. 13 ரூபாய் 15 பைசா ஸ்டாம்ப் என்றால் இதையே இரண்டாக வாங்க வேண்டும். ஒன்று, கவரில் ஒட்ட. இரண்டாவது, கவருக்குள் போட. கவுண்ட்டர்காரருக்கு இது புரியாது. 'இரண்டு 13 ரூபாய் ஸ்டாம்ப், இரண்டு 15 பைசா ஸ்டாம்ப் தாருங்கள்' என்றால் கவுண்ட்டரில் அமர்ந்துள்ள மரமண்டைகள் எல்லாமே சொல்லி வைத்தாற்போல் கீழ்க்கண்ட பதிலைத்தான் சொல்லுமே தவிர நாம் கேட்ட ஸ்டாம்புகளைத் தராது.

'இந்த கவருக்கு 13 ரூபாய் 15 பைசா ஸ்டாம்ப் போதும்.'

இதற்கு பெருமாள் 'இன்னொரு 13 ரூபாய் 15 பைசா ஸ்டாம்ப்பை கவருக்குள் வைக்க வேண்டும்' என்பான்.

'ஒட்டியிருக்கிறதே? எப்படி வைக்க முடியும்?'

'அட, கூமுட்டை... நீதானேடா ஒட்டச் சொன்னாய்?' என்று மனசுக்குள் திட்டியபடி தமிழ்க் கலாச்சாரத்தைப்பற்றி கவுண்ட்டர்காரருக்கு மீண்டும் ஒரு முறை விளக்க ஆரம்பிப்பான் பெருமாள்.

கவுண்ட்டர்காரர் பொறுமையிழந்து பெருமாளுக்கு ஸ்டாம்ப்புகளைக் கொடுக்க ஆரம்பிப்பார். 13 ரூபாய், 15 பைசாவுக்கு பூக்காரிகள் உதிரி மல்லிகைப்பூ கொடுப்பது போல் ஒரு கூடை நிறைய கிடைக்கும் ஸ்டாம்ப்புகள். கேட்டால் 'பத்து ரூபாய் ஸ்டாம்ப் ஸ்டாக் இல்லை' என்ற உடனடி பதில் கிடைக்கும்.

அவ்வளவு ஸ்டாம்ப்புகளையும் அள்ளிக்கொண்டு வந்து ஒவ்வொன்றாக எண்ணி எண்ணி ஒட்டி - மீண்டும் கோந்து பிரச்னை. ஸ்டாம்ப்பில் ஏற்கெனவே தடவப்பட்டுள்ள கோந்தில் தண்ணீரையோ, தண்ணீர் இல்லாவிட்டால் எச்சிலையோ தடவி ஒட்டினால் ஒட்டின கையோடு ஒட்டிக்கொண்டு வந்துவிடும் ஸ்டாம்ப். 'ச்சே... masturbate பண்ணித்தான் ஒட்டணும்போல. பாஸ்ட்டர்ட்ஸ்' என்று முனகிக்கொள்வான் பெருமாள்.

ஸ்டாம்ப்புகளை ஒட்டும்போது மட்டும் மிகக் கவனமாக இருக்க வேண்டும். லேசாக ஒட்டப்பட்டிருந்தால் தபால்காரர்கள் அந்த ஸ்டாம்ப்புகளை தங்கள் சொந்த உபயோகத்துக்கு எடுத்துக்கொண்டு

விடுவார்கள். ஸ்டாம்ப் குறைவான நிலையில் அபராதத் தொகையும் விதிக்கப்பட்டு பத்திரிகைக்குச் சேர்ந்தால் பத்திரிகை ஆசிரியர் அதைப் பெருமாளுக்கே திருப்பி அனுப்ப பெருமாளே அபராதத் தொகையும் கட்டி கவரையும் திரும்பப் பெற்றுக்கொள்ள வேண்டிவரும்.

ஒட்டிய கவருக்குள் ஸ்டாம்புகளைப் போடுவதற்கு பெருமாள் ஒரு உபாயம் கண்டுபிடித்தான். அதற்கு அவனே ஒரு பெயரும் சூட்டினான்: CAMOUFLAGE. யுத்தகாலத்தில் சிப்பாய்கள் இலைப் பச்சை சீருடை அணிந்து மரஞ்செடிகளோடு மரஞ்செடிகளாக மறைந்திருந்து தாக்குவார்களே அதைப்போல, கவரை ஒட்டுவதுபோல் ஒட்டி கவுண்ட்டர் தடியன் அல்லது தடிச்சி எடை பார்த்ததும் கவரைப் பிரித்து ஸ்டாம்புகளை உள்ளே போட்டு மீண்டும் ஒட்டும் யுக்தியே அது.

இந்தச் சடங்குகளெல்லாம் முடிந்த பிறகு இந்தக் கவரை பதிவு செய்வதற்காக மீண்டும் ஒரு வரிசையில் நிற்க வேண்டும்.

இது தவிர, அக்னாலெட்ஜ்மெண்ட் கார்ட் என்ற பூதம் ஒன்று இருக்கிறது. பதிவுத் தபாலை சேர்க்க வேண்டிய இடத்தில் சேர்த்துவிட்டு அதைப் பெற்றுக்கொண்டதற்கான கையெழுத்தை அந்தக் கார்டில் வாங்கி அதை அனுப்பியவரிடம் சேர்த்து விடுவது.

படிக்க நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் இதனால் பெருமாள் ஒருமுறை தனது ஆண்மையையே இழக்க இருந்தான் என்றால் நம்ப முடிகிறதா?

அக்னாலட்ஜ்மெண்ட் கார்டை கவரோடு சேர்த்து ஸ்டாம்ப்பிள் செய்யக்கூடாது என்கிறது தபால் இலாகா விதி. ஊசி நூல் கொண்டுதான் தைக்க வேண்டும். சில போஸ்ட்டாஃபீஸில் ஊசி நூல் இருக்கும். பல போஸ்ட்டாஃபீஸ்களில் இருக்காது. எனவே ஊசி நூல் வாங்கி கால் சராய் பாக்கெட்டுக்குள் போட்டுக்கொண்டு போனான் பெருமாள். துரதிருஷ்டவசமாக அந்த ஊசி பெருமாளின் பெரிய ஊசியைக் குத்திவிட்டது. இன்னும் சற்றும் ஆழமாகப் பாய்ந்திருந்தால் விபரீதமாயிருக்கும்.

இந்தப் பிரச்னையெல்லாம் ப்பீயெம்ஜீக்களுக்குத் தெரியும் என்றா நினைக்கிறீர்கள்? ம்ஹூம். வாய்ப்பேயில்லை. அவர்களெல்லாம் நன்கு குளிரூட்டப்பட்ட அறைகளில் வறுத்த முந்திரி கொறித்தபடி தபால் இலாகாவின் சேவையை உயர்த்துவது எப்படி என்று சக அதிகாரிகளுடன் மீட்டிங் போட்டுப் பேசிக் கொண்டிருப்பார்கள்.

இந்த மீட்டிங் என்பது தனிக் கதை. கதை நிர்-13இல் இதை விவரிக்கிறேன்.

இதெல்லாம் பழைய கதை, இப்போதுதான் கொரியர் வந்து விட்டதே என்று சிலர் கூறலாம். ஆனால் மனைவியோ, குழந்தை குட்டியோ, போலீசோ, வீட்டின் சொந்தக்காரரோ கொடுக்காத துன்பத்தை ஒரு கொரியர் பையன் உங்களுக்குக் கொடுக்க முடியும். அது பற்றி கதை நிர்-19இல் காண்க.

***

# கதை : மூன்று

ஸர்க்கிள் ஆ.்.பீஸில் கண்ணாயிரம் பெருமாள் வேலை பார்த்த போது ரங்கராஜன் என்று ஒரு ப்பீயெம்ஜி இருந்தார். பொதுவாக ப்பீயெம்ஜிக்களுக்கு சீனியர் ஸ்டெனோக்களே நியமிக்கப்படுவது வழக்கம். சீனியர் ஸ்டெனோவுக்கு தனி அறை உண்டு. பெருமாள் போன்ற ஜூனியர்கள் ஸ்டெனோஸ் ப்பூல் என்ற இடத்தில் நான்கைந்து பேராக அமர்த்தப்பட்டிருப்பார்கள். எந்தெந்த அதிகாரியிடமிருந்து தொலைபேசி அழைப்பு வருகிறதோ அவர்களிடம் போக வேண்டும். இது தவிர, ப்பீயெம்ஜிக்களின் ஸ்டெனோக்கள் விடுப்பில் சென்றால் அவர்கள் திரும்ப வந்து பணியில் சேரும் வரை அவர்களின் வேலையைச் செய்துவர வேண்டும். தற்காலிக விடுப்பு என்றால் ஓரிரண்டு நாட்கள். வேறுவித விடுப்பு என்றால் ஓரிரண்டு மாதங்கள். இம்மாதிரி சந்தர்ப்பங்களில்தான் வகையாக மாட்டிக் கொள்வான் கண்ணாயிரம் பெருமாள். அப்படித்தான் ஒருமுறை ரங்கராஜனிடம் மாட்டினான். முதலில் அவன் பெயரைக் கேட்டு விட்டு 'என்னய்யா இது பெயர், கண்ணாயிரம் பொன்னாயிரம் என்று. வேறு யாரும் நல்ல ஆளா ஸ்டெனோஸ் ப்பூல்ல இல்லியா?' என்று கோபத்துடன் கத்தினாராம் ரங்கராஜன் ப்பீயெம்ஜி. காமாட்சி சொன்னான்.

அந்த நேரத்தில் ஸ்டெனோஸ் ப்பூலில் வேறு யாரும் இல்லை. ஒருவர் ஏற்கெனவே விடுப்பில் சென்றிருந்தார். மற்ற இரண்டு பேரும் இரண்டு டீப்பீயெஸ்களிடம் (டைரக்டர் ஆ.்.ப் போஸ்டல் சர்விஸஸ்) இணைக்கப்பட்டிருந்தனர்.

பெருமாளை நேரில் வரச் சொல்லியதாக ரங்கராஜனின் ஆர்டர்லி வந்து சொன்னான். பிடித்தது சனி என்று நினைத்துக்கொண்டு ரங்கராஜனின் அறைக்குச் சென்றான் பெருமாள்.

அறை என்று சொல்லக் கூடாது; ச்சேம்பர் என்றுதான் சொல்ல வேண்டும். ச்சேம்பர் வாசலில் சில ஜோடி செருப்புகள் கிடந்தன.

அந்தக் காலத்தில் ராஜாக்களிடம் பேசிவிட்டுத் திரும்பும்போது முதுகைக் காட்டாமல் பின்னோக்கி நடந்தே திரும்பவேண்டும். இல்லாவிட்டால் கொதிக்கும் எண்ணெய்க் கொப்பரையில் போட்டு விடுவார்கள். இது 21ஆம் நூற்றாண்டு என்பதால் எண்ணெய்க் கொப்பரைக்குப் பதிலாக நாகர்கோவில், திருநெல்வேலி என்று தொலைதூர ட்ரான்ஸ்.்.பர்.

பாதிக்கப்பட்டவர் அரசியல்வாதிகளையும் நாட முடியாது. மத்திய அரசு அலுவலகம் என்பதால் லோக்கல் அரசியல்வாதிகளுக்கு இங்கே செல்வாக்கு கிடையாது. பிரதம மந்திரி, தபால் துறை ம்ந்திரி அளவுக்குச் செல்வது ஒரு ஸ்டெனோவுக்கு கற்பனையிலும் எட்டாத விஷயம்.

யூனியனையும் அணுக முடியாது. ஏனென்றால், ஸ்டெனோக்களுக்கு யூனியன் கிடையாது. புதிதாக அமைக்கலாம் என்றால் இந்தியா முழுவதும்

தபால் துறையில் வேலை பார்க்கும் ஸ்டெனோக்களை ஒன்று திரட்டி - பெரிய அறப்போராட்டமெல்லாம் தேவையில்லை; வெறும் கையெழுத்து வாங்க வேண்டும். அவ்வளவுதான்.

ஆனால் அது அவ்வளவு சுலபமானதாக இல்லை. ஜம்மு கஷ்மீரிலிருந்து கூட கையெழுத்துப் பட்டியல் வந்துவிட்டது. பீகாரிலிருந்து வரவில்லை.

எழுதிக் கேட்டும் பயனில்லை. ஒரு பதிலும் இல்லை. பத்துப் பன்னிரண்டு பதிவுத் தபாலும், பல தந்திகளும் கொடுத்த பிறகு பதில் வந்தது. வெறும் துண்டுக் காகிதம் ஒன்றில் இந்தியில் கோழி கிறுக்கியதுபோல் கிறுக்கியிருந்தது.

இந்தி மொழி வளர்ச்சிக்கென்று தபால் துறையில் ஒரு அதிகாரியும் ஒரு குமாஸ்தாவும் உண்டு. ஆண்டில் ஒரு முறை - அதாவது, இந்தி வாரத்தில் - அவர் எல்லா குமாஸ்தாக்களிடமும் சென்று சொல்வார்: ‘இனிமேல் குட்மார்னிங் என்று சொல்லக்கூடாது. அது ஆங்கிலம். நாம் ஆங்கிலேயரை விரட்டியடித்துவிட்டோம். இனியும் எதற்கு ஆங்கிலம்? நமஸ்தே என்று சொல்லுங்கள்...’

கண்ணாயிரம் பெருமாளும், மற்ற பெருமாள்களும் மறுநாள் முதல் அவரைப் பார்த்தால் ‘நமஸ்தே சார்’ என்று சொல்லி ஹா, ஹா என்று பல்லைக் காட்டுவார்கள். அவர் உடனே ‘நமஸ்தே ஜீ’ என்று சொல்லி ஜீயில் ஒரு அழுத்தம் கொடுப்பார்.

இந்தி வாரம் முடிந்ததும் அவர் யாரோ, இவர்கள் யாரோ. ஒரே லி◌ஃப்ட்டில் போனால்கூட ஒருவரையொருவர் கண்டுகொள்ள மாட்டார்கள். அந்த இந்தி அதிகாரியிடம் சென்று ‘நமஸ்தே ஜீ’ சொல்லி பீகார் கடிதத்தைக் காண்பித்தான் பெருமாள். ஏனென்றால் அவன்தான் இந்த யூனியன் விஷயத்தில் சற்று மும்முரமாக இருந்தவன்.

வாங்கிப் பார்த்துவிட்டு ‘இது இந்தியே இல்லை’ என்று சொல்லித் திருப்பிக் கொடுத்துவிட்டார் இந்தி அதிகாரி. ‘இந்தி எழுத்துக்கு மேல் கோடு இருக்குமே, அந்தக் கோடுகூட இல்லை’ என்று சுட்டிக் காட்டினார்.

அப்போது அவருடைய குமாஸ்தா ஓடிவந்து கடிதத்தை வாங்கிப் பார்த்தார். அவர் நீண்ட காலம் தில்லியில் வேலை பார்த்தவர். இந்தி அதிகாரியைவிட இந்தி நன்கறிந்தவர்.

‘கிறுக்கு எழுத்தில் எழுதும்போது மேலே கோடெல்லாம் போட மாட்டார்கள்’ என்றவர் கடிதத்தைப் படித்து அர்த்தம் சொன்னார். ‘நீங்கள் அனுப்பிய ஆங்கில கடிதம் விளங்கவில்லை. தயவுசெய்து இந்தியில் எழுதவும்.’

இதன் பிறகு, பெருமாளும் மற்றொரு ஸ்டெனோவும் நேரிலேயே பார்த்துவிட்டு வருவதென்று பீகார் கிளம்பினார்கள்.

பாட்னா போய்ப் பார்த்த பிறகுதான் புரிந்தது. ஸ்டெனோக்கள் யூனியன் அமைப்பது என்றைக்குமே சாத்தியமில்லை என்று.

கடிதம் எழுதியிருந்தவர் பெயர் நந்த்லால். அவர்தான் அங்கே பீகார் மாநில தபால் துறைத் தலைவரின் ஸ்டெனோ.

காலை பதினோரு மணி ஆகியும் அலுவலகத்தில் ஆள் நடமாட்டம்

ஏதுமில்லை. ஏதோ ஒரு வெற்றிலைப்பாக்கு கடை மாதிரி இருந்ததே ஒழிய, அரசாங்க அலுவலகம் என்பதற்கான எந்த அடையாளமும் அங்கே தெரியவில்லை. மூலைக்கு மூலை புளிச் புளிச் என்று வெற்றிலை எச்சிலைத் துப்பி வைத்திருந்தனர். மேலே மேலே துப்பி சுத்தம் செய்யப்படுவதற்கு வழியேயில்லாமல் ஒவ்வொரு சுவர் மூலையும் ஏதோவொரு வரலாற்றுச் சின்னம் போல் காட்சியளித்தது.

பதினோரு மணிக்கு மேல்தான் மனித உருவங்கள் தென்பட ஆரம்பித்தன. அநேகமாய் எல்லோருமே வாயில் வெற்றிலையைக் குதப்பியபடி, எச்சில் மற்றவர் மேல் தெறித்துவிடாத வண்ணம் ஜாக்கிரதையாக அண்ணாந்து பார்த்தே பேசியபடி வந்தனர்.

பத்து ஆண்டுகள் தில்லியில் வேலை பார்த்தும், பெஹன் ச்சூத், மாதர் ச்சூத் போன்ற வார்த்தைகள்தான் அவனுக்குப் பரிச்சயமாகியிருந்ததே தவிர மற்றபடி இந்தி அவ்வளவாக வராது. இந்த நிலையில் வெற்றிலையைப் போட்டு குதப்பிக்கொண்டு பேசினால் என்ன புரியும்?

எப்படியெப்படியோ விசாரித்து நந்த்லாலின் வீட்டைக் கண்டு பிடித்தனர். பாட்னாவிலிருந்து சுமார் 25 கி.மீ தூரத்திலுள்ள ஒரு கிராமத்தில் இருந்தது அவருடைய வீடு. மூன்று பஸ் மாறி ஐந்து கி.மீ நடந்து சென்றுதான் அங்கே போய்ச் சேர முடிந்தது.

சேர்ந்தபோது, இரவு மணி எட்டு. ஒரு திண்டில் சாய்ந்து கொண்டிருந்தார் நந்த்லால். பக்கத்தில் வெற்றிலைப் பணிக்கம்.

நந்த்லாலின் கால்களைப் பிடித்துவிட்டுக்கொண்டிருந்தார் வேலைக்காரரைப் போலிருந்த ஒருவர். அவ்வப்போது நந்த்லால் எச்சிலைத் துப்புவதற்காக சைகை காண்பிக்கும்போது, குவளையை கையில் எடுத்து நந்த்லாலின் வாயருகே கொண்டுபோனார் வேலைக்காரர்.

‘எப்படி இங்கிருந்து தினமும் பாட்னா செல்கிறீர்கள்?’ என்று கேட்டான் பெருமாள்.

‘தினமும் எப்படிப் போக முடியும்? வாரம் ஒரு தடவைதான்.’

‘மற்ற தினங்கள்?’

‘மற்ற தினங்களும் அங்கே போய்விட்டால், இங்கே போஸ்ட்டா∴பீஸை யார் கவனிப்பது?’

பிறகுதான் கவனித்தனர்... வீட்டிலேயே ஒரு போஸ்ட்டா∴பீஸ் இருந்தது.

‘நாமே தபால் துறையில் வேலை பார்க்கும்போது நாமே எப்படி ப்ராஞ்ச்சா∴பீஸ் வைக்க முடியும்?’

‘மதறாஸி என்றால் சரியாகத்தான் இருக்கிறது. இங்கே போஸ்ட் மாஸ்டர் யார் தெரியுமா? என் மனைவிதான்’ என்று பதில் சொல்லி வெடிச்சிரிப்பு சிரித்தார் நந்த்லால்.

பிறகு மனைவியை அழைத்து இவர்களை அறிமுகப்படுத்தி ‘மதறாஸிலிருந்து வந்திருக்கிறார்கள். அங்க்ரேஜ்’ என்றார்.

அவரைப் பொறுத்தவரை ஆங்கிலம் பேசுவோர் ஆங்கிலேயர்.

பிறகு, சற்று நேரம் முன்பு தனக்கு கால் அமுக்கி விட்டவரை அறிமுகம்

செய்தார். அவர்தான் போஸ்ட்மேன்.

'நன்றாக வேலை செய்வான். நடந்து வந்து களைப்பாய் இருப்பீர்கள். உங்களுக்கும் கால் அமுக்கி விடச் சொல்லவா?' என்றார் நந்த்லால்.

இந்த பீகார் பயணத்துக்குப் பின் யூனியன் அமைக்கும் திட்டத்தைக் கைவிட்டான் பெருமாள்.

***

**பின்குறிப்புகள்:**

1. ரங்கராஜனிடம் ஒரு மாத காலம் வேலை பார்த்தான் பெருமாள்; ஒவ்வொரு தினமும் ஒவ்வொரு சம்பவம் நடந்தது. அவற்றில் மாதிரிக்கு சில:

   அவர் தலைமையலுவலகத்தை விட்டு வெளியே எங்கு சென்றாலும் அது அலுவலக வேலையாகவே மாற்றப்படும். காரணம், கைப் பணத்தைச் செலவு செய்ய வேண்டியதில்லை. வாகனம், நட்சத்திர ஓட்டல் வசதியுடன் கெஸ்ட் ஹவுஸ், சாப்பாடு எல்லாம் அரசாங்கச் செலவு. ஒரு முறை தன் மைத்துனியைப் பார்க்க பெங்களூர் சென்று வந்தார் ரங்கராஜன். பெங்களூரிலிருந்து திரும்பியபின், அங்கேயே கெஸ்ட் ஹவுஸில் ஒரு பொருளை விட்டுவிட்டு வந்தது தெரிந்தது.

   அது ஒரு வாட்டல் பாட்டில். சாதாரண வாட்டர் பாட்டில் என்று விட்டுவிட முடியாது. ரங்கராஜனின் மனைவிக்கு அது ஒரு சென்ட்டிமென்ட்டலான பொருள். கிளம்பும்போதே அது பற்றி எச்சரித்தும் இருந்தாள்.

   பெங்களூருக்கு ஒரு பத்து பதினைந்து எஸ்டீடி கால் போட்டு ஐ.க்யூ இன்ஸ்பெக்டரைப் பிடித்தான் பெருமாள். கெஸ்ட் ஹவுஸின் மறுபெயர் இன்ஸ்பெக்ஷன் க்வார்ட்டர்ஸ். அதை கவனித்துக்கொள்ள ஒரு இன்ஸ்பெக்டர்.

   அவர் அந்த வாட்டர் பாட்டிலை எடுத்து அங்கிருந்து வரும் ப்ருந்தாவன் எக்ஸ்பிரஸின் ஆரெம்மெஸ் கோச்சில் வைத்துக் கொடுத்தனுப்பினார். பிறகு ஸர்க்கிள் ஆ.ஃபீஸிலிருந்து சென்ட்ரல் ஸ்டேஷனுக்கு கார் அனுப்பப்பட்டு அந்த காரில் ஸர்க்கிள் ஆ.ஃபீஸ் வந்து சேர்ந்தது பத்து ரூபாய் பெறுமானமுள்ள அந்த வாட்டர் பாட்டில்.

   ரங்கராஜனைப் பற்றி நினைக்கும்போதெல்லாம் பெருமாளுக்கு Pol Pot ஞாபகம் வரும். கம்ப்பூச்சியாவில் சிவப்பு முண்டாசு கட்டிய இளைஞர் பட்டாளம் பச்சிளம் சிறார்களை காலைப் பிடித்துத் தூக்கி மரத்தில் தலையை வீசியடித்துக் கொன்ற காட்சிகள் அவன் மனக்கண் முன்னே ஓடும். அதே சமயம் மிலன் குந்தேராவின் வார்த்தைகளும்...

   The bloody massacre in Bangladesh quickly covered over the memory of the Russian invasion of Czechoslovakia, the assassination of Allende drowned out the groans of Bangladesh, the war in the Sinai Desert made people forget Allende, the Cambodian massacre made people forget Sinai, and so on and so forth until ultimately everyone lets everything the forgotten.

(The Book of Laughter and Forgetting)

2. புத்தாண்டு வருவதற்கு சில தினங்கள் முன்பாக பெருமாளுக்கு ஒரு வேலை கொடுத்தார் ரங்கராஜன். அதாவது: ஒவ்வொரு ஆண்டும் தபால் துறைக்கென காலண்டரும், டைரியும் வெளியிடப்படுவது வழக்கம். அந்தக் காலண்டரில் நூறு, டைரியில் நூறு - இந்த இரண்டையும் ஒவ்வொன்றாக தனித்தனியே கவரில் போட்டு ஒட்டச் சொன்னார். காலண்டரை ஒட்டுவது தனிக் கலை. காலண்டர் மடங்கிவிடாமல் அதைச் சுருட்டி ஒட்டிக் கட்ட வேண்டும் - உள்ளுக்குள் வேஸ்ட் காகிதங்களை நிரப்பிவிடாமல் பிறகு, நூறு முகவரிகளைக் கொடுத்து ஒவ்வொன்றிலும் எழுதச் சொல்லி, பதிவுத் தபாலில் அனுப்பச் செய்தார். மொத்தம் 200 பதிவுத் தபால் பார்சல்கள். அத்தனை முகவரியும் அவரது நண்பர்கள் மற்றும் உறவினர் முகவரி. அவ்வளவும் அலுவலகச் செலவில்.

3. சென்னைக்குப் பிறகு கல்கத்தா ஸர்க்கிளுக்கு மாற்றப்பட்டார் ரங்கராஜன். கல்கத்தா என்றதும் பேயறைந்தது போலான ரங்கராஜன் யார் யார் சிபாரிசுக்காகவோ அலைந்து கடைசியில் இலாகா மந்திரியைப் பார்த்தார். மந்திரியும் இவரது வேண்டுகோளை மதித்து 'சரி, கல்கத்தா வேண்டாம், ஜம்மு கஷ்மீருக்கு மாற்றி விடுகிறேன்' என்று சொல்ல, துண்டைக் காணோம் துணியைக் காணோம் என்று கல்கத்தாவுக்கே சென்று வேலையை ஒப்புக்கொண்டார் ரங்கராஜன்.

கல்கத்தா கல்கத்தாதான். ஒரே வாரத்தில் ரங்கராஜனின் பெயர் தேசிய தினசரிகளில் பெட்டிச் செய்தியாக வெளிவந்துவிட்டது.

விஷயம் இதுதான்: ஆரெம்மெஸ் ஆ்ஃபீஸில் ஈடி ஊழியர் ஒருவர் பீடி குடித்துக்கொண்டிருப்பதைப் பார்த்து அவரை அந்த இடத்திலேயே சஸ்பெண்ட் செய்துவிட்டார் ரங்கராஜன். உடனே ஊழியர் அனைவரும் ஒன்றுசேர்த்து ரங்கராஜனை ஒரு அறையில் போட்டு பூட்டிவிட்டனர்.

லாங் லீவ் போட்டுவிட்டு சென்னைக்கு ஓடி வந்த ரங்கராஜன் நேராக பெருமாளின் அறைக்கு வந்து (அவர் அவனுடைய அதிகாரியாக இருந்தவரை பெருமாளின் அறைக்கே வந்ததில்லை) அவன் பக்கத்தில் அமர்ந்து 'தம்பி... ஒரு அப்ளிகேஷன் அடிச்சுக் குடுப்பா... நீ நல்லா கதையெல்லாம் எழுதுவேன்னு கேள்விப்பட்டிருக்கேன். வெரிகுட்' என்று சொல்லி மத்திய மந்திரிக்கு ஒரு விண்ணப்பத்தை டிக்டேட் செய்ய ஆரம்பித்தார்.

'மதிப்பிற்குரிய ஐயா, என் மனைவி இருதய நோயாளி என்பதால் என்னால் மேற்கு வங்காளத்தில் வேலை செய்ய இயலவில்லை. தயவுசெய்து எனக்கு சென்னைக்கே மாற்றல் தரும்படி தங்களைத் தாழ்மையுடன்...'

***

## கதை : நான்கு

தபால் இலாகாவின் தில்லித் தலைமை அலுவலகத்திலுள்ள உயரதிகாரிகள் மாதம் ஒரு முறையோ அல்லது இரண்டு முறையோ தமிழ்நாடு ஸர்க்கிளுக்கு விஜயம் செய்வது வழக்கம். உயரதிகாரி என்றாலே தம் அதிகாரத்துக்குக் கீழுள்ள பகுதிகளுக்கு சோதனை விஜயம் செய்ய வேண்டும் என்பது இலாகாவின் கடுமையான விதிகளுள் ஒன்று.

இந்த சோதனை விஜயத்தின் பொருட்டு சென்னை வரும் அதிகாரிகள் பெரும்பாலும் பிராமணர்களாகவே இருப்பதால் அவர்களது வருகையின் பிரதான நோக்கம் ஸர்க்கிள் இன்ஸ்பெக்ஷனுக்கு பதிலாக காஞ்சீபுரம் செல்வதாகவே இருக்கும். அப்படிச் செல்லும்போது அவருடன் கூட 'ஐப்பீவோ' என அழைக்கப்படும் இன்ஸ்பெக்டர் ஒருவரும், ஒரு ஸ்டெனோவும் செல்வது வழக்கம். பயணத்தின்போது அதிகாரியின் தேவைகள் அனைத்தையும் கவனித்துக்கொள்ள வேண்டிய பொறுப்பு 'ஐப்பீவோ'வினுடையது. 'ஐப்பீவோ' என்றால் பின்னாளில் 'ஏப்பியெம்ஜி' வரை பதவி உயர்வு பெறக்கூடிய சந்தர்ப்பம் இருக்கிறது. எனவே இன்றைய செலவு நாளைய வரவுக்கான மூலதனம்.

பிராமணர்கள் என்பதால் அதிக மூலதனம் தேவையிராது. போண்டா, வடை, பஜ்ஜி... அவ்வளவுதான். ஆனால் சிலபேர் இந்த அய்ட்டங்களையே மணிக்கு ஒருமுறை உள்ளே தள்ளி 'ஐப்பீவோ'வின் மூலதனச் செலவை அதிகப்படுத்திவிடுவதும் உண்டு. அப்படி ஒரு அதிகாரி இருக்கிறார். அவரது பட்டப் பெயரே போண்டாதான்.

சிலருக்கு போண்டா, வடை, பஜ்ஜி பிடிக்காது. விஸ்கி, பிராந்தி போன்ற மது வகைகள்தான் பிடிக்கும். அப்படியானால் இரண்டு மூன்று ஐப்பீவோக்கள் சேர்ந்துகொள்வார்கள்.

இதெல்லாம் சரி. சில ஆத்மாக்கள் மதுவும் வேண்டும், மாதுவும் வேண்டும் என்று கேட்கும். அப்போதுதான் 'ஐப்பீவோ'க்களின் பாடு என் பாடு உன் பாடு ஆகிவிடும்.

சமயங்களில் இந்த 'ஐப்பீவோ'க்களின் பணியை ஸ்டெனோக்களும் ஏற்றுச் செய்ய வேண்டியிருக்கும். அப்படி ஒரு நாள் சுந்தரேசன் என்ற மெம்பரிடம் மாட்டிக்கொண்டான் பெருமாள். தபால் இலாகாவின் ஆகப் பெரிய அதிகாரியின் பதவிப் பெயர்: மெம்பர்.

இந்த சுந்தரேசனை பல ஆண்டுகளுக்கு முன்பே பெருமாளுக்கு தெரியும். அப்போது அவர் தமிழ்நாடு ஸர்க்கிளில் 'ப்பீயெம்ஜி'யாக இருந்தார். பெருமாள் தில்லி சிவில் சப்ளையிலிருந்து தபால் இலாகாவுக்கு மாறி தமிழ்நாடு ஸர்க்கிளுக்கு வர பல உதவிகள் செய்தவர். இப்போது தில்லியில் மெம்பராக இருக்கிறார்.

பெருமாளுக்கு சுந்தரேசனைத் தெரியும் என்பதால் ஒரு சில சௌகரியங்களும் அசௌகரியங்களும் ஏற்படுவதுண்டு. சௌகரியம், சக ஊழியர்கள் மத்தியில் அவனுடைய மதிப்பு சற்று அதிகமாகக் கூடியிருந்தது. அசௌகரியம், மைதிலி. அதாவது, மைதிலியின் கணவரும் தபால் இலாகாவில்தான் பணி புரிகிறார். ஆனால், எட்டு ஆண்டுகளாக அவர் தஞ்சாவூரிலும், மைதிலி சென்னையிலுமாக இருக்கிறார்கள். எவ்வளவு முயன்றும் இருவருக்கும் ஒரே ஊரில் பணியிடம் கிடைக்கவில்லை. பெருமாள் மனது வைத்தால் மெம்பரிடம் சொல்லி ட்ரான்ஸ்ஃபர் வாங்கிக் கொடுத்துவிடலாம்; அவளுடைய வாழ்க்கையே அவனுடைய கையில்தான் இருக்கிறது. பார்க்குபோதெல்லாம் பெருமாளை இவ்வாறு நச்சரித்துக்கொண்டிருந்தாள் மைதிலி.

ஒரு வருடத்திற்கு முன்னால் சுந்தரேசன் ஸர்க்கிள் ஆஃபீஸ் வந்திருந்தபோது நடந்த சம்பவம் அவன் ஞாபகத்திற்கு வந்தது.

பெருமாளை அழைத்துக்கொண்டு ஒரு போஸ்ட்டாஃபீஸுக்குக் கிளம்பினார் சுந்தரேசன். போஸ்ட்மாஸ்டரின் வீடும் அலுவலகமும் ஒரே கட்டிடத்தில்தான் இருந்தது.

மதியம் சுமார் ஒரு மணி இருக்கும். கோடைக்காலம். ஆள் நடமாட்டமே இல்லாமல் தெரு வெறிச்சோடிக் கிடந்தது.

காரை தெருவின் முனையிலேயே நிறுத்தச் சொல்லிவிட்டு இறங்கி நடக்க ஆரம்பித்தார் சுந்தரேசன்.

‘சார்’ என்று ஏதோ சொல்ல வாயெடுத்தான் பெருமாள்.

‘ஒன்றும் பேச வேண்டாம்’ என்று சைகை செய்துவிட்டு பெருமாளையும் கூடவே வரச் சொன்னார் சுந்தரேசன்.

போஸ்ட்டாஃபீஸின் கதவும், ஜன்னலும் உட்புறம் தாளிடப்பட்டிருந்தது.

அலுவல் நேரம் முடிந்துவிட்டிருந்தது. பூனைபோல் நடந்து சென்ற சுந்தரேசன் கதவை லேசாகத் தட்டினார்.

கதவைத் திறந்த போஸ்ட்மாஸ்டர் இவர்களைப் பார்த்ததும் பேயைக் கண்டதுபோல் வெளிறிப்போனார். சுந்தரேசன் மெம்பராவதற்கு முன்பு இங்கே ப்பீயெம்ஜியாக இருக்கும்போதே அவர் முகம் இலாகா ஊழியர்களிடம் நன்கு பரிச்சயமாகியிருந்தது.

போஸ்ட்மாஸ்டரை லேசாக ஒதுக்கிவிட்டு அதிரடியாக உள்ளே நுழைந்தார் சுந்தரேசன்.

உள்ளே நடுத்தர வயதுள்ள ஒர் அழகான பெண்மணி வெளி நாட்டு பார்சல் ஒன்றை உடைத்துப் பிரித்துக்கொண்டிருந்தாள். போஸ்ட் மாஸ்டரின் மனைவி. பார்சலிலிருந்து இரண்டு மூன்று புடவைகள் வெளியே விழுந்து கிடந்தன.

போஸ்ட்மாஸ்டரிடம் ஒப்புதல் வாக்குமூலம் எழுதி வாங்கிக் கொண்டு கிளம்பினார் சுந்தரேசன்.

மாலை ஆறு மணி அளவில் சுந்தரேசனைப் பார்க்க ஸர்க்கிள் ஆஃபீஸ் வந்தார் போஸ்ட்மாஸ்டர். முகத்தில் பீதி அப்பிக் கிடந்தது.

ஸர்க்கிள் ஆ.ஃபீஸ் வளாகத்திலேயே இருந்த இன்ஸ்பெக்ஷன் குவார்ட்டர்ஸில் தங்கியிருந்தார் சுந்தரேசன்.

வாசலில் செருப்பைக் கழற்றிப் போட்டுவிட்டு உள்ளே நுழைந்து நெடுஞ்சாண் கிடையாக சுந்தரேசன் காலில் விழுந்தார் போஸ்ட் மாஸ்டர்.

‘சார், எப்படியாவது என் குடும்பத்தைக் காப்பாற்றுங்கள் சார்...’

எழுந்து வெளியே நடக்க ஆரம்பித்த பெருமாளை ‘நீ இரு’ என்றார் சுந்தரேசன்.

‘இங்கே பாருங்கள். நீங்கள் செய்திருக்கும் காரியத்துக்கு உங்கள் வேலையே போயிருக்கும். தப்பிக்கலாம் என்றால் ஒரே ஒரு வழிதான் இருக்கிறது...’

‘சொல்லுங்கள் சார். நீங்கள் என்ன சொன்னாலும் கேட்கிறேன். வேலை போய்டுச்சுன்னா என் குடும்பமே தற்கொலை செஞ்சுக்க வேண்டியதுதான் சார்.’

‘சரி, அப்படீன்னா உங்க ஒய்.ஃபை ஒரு நாள் என்னோட தங்க வைக்கணும்.’

இதை கேட்டதும் பெருமாளே ஒருகணம் அதிர்ச்சியில் உறைந்து போனான்.

மறுபடியும் சுந்தரேசன் காலில் விழுந்தார் போஸ்ட்மாஸ்டர்.

‘வேறு என்ன வேண்டுமானாலும் சொல்லுங்கள் ஐயா. என் உயிரையே எடுத்துக்கொள்ளுங்கள். குடும்பத்தை விட்டுவிடுங்கள்...’

‘லுக் மிஸ்டர்... எனக்கு உங்ககிட்ட அதிக நேரம் பேச நேரமில்லை. பேரம் பேசறதுக்கு இது காய்கறி மார்க்கெட் இல்லை. ஒரு நாள்தான் கேட்கிறேன். விஷயம் யாருக்கும் தெரியாது. இவர் (பெருமாளைச் சுட்டிக்காட்டி) நம்பிக்கையானவர். யார்கிட்டேயும் சொல்ல மாட்டார். அதுக்கு மேல் உங்க இஷ்டம். ஐம் நாட் கம்பெல்லிங் யூ...’

இரண்டு தினங்களுக்குப் பிறகு சுந்தரேசன் பெருமாளைக் கூப்பிட்டு ஒரு புகார் கடிதத்தைத் தயாரிக்கச் சொன்னார்: அந்தக் குறிப்பிட்ட போஸ்ட்டா.ஃபீஸுக்கு வெளிநாட்டு பார்சல்கள் அடிக்கடி கிழிந்த நிலையில் வருவதாக போஸ்ட்மாஸ்டர் ப்பீயெம்ஜிக்கு புகார் தருவதாக.

போஸ்ட்மாஸ்டரை வரவழைத்து அக்கடிதத்தில் கையெழுத்து வாங்கிக்கொண்டு அவரிடம் முன்பு வாங்கியிருந்த ஒப்புதல் வாக்குமூலத்தைக் கிழித்துப் போட்டுவிட்டார் சுந்தரேசன்.

பெருமாள் இந்த விஷயத்தை யாரிடமும் சொல்லவில்லை. போதையில்கூட உளறவில்லை. ஆனாலும் டிபார்ட்மெண்ட் முழுக்கவும் பரவிவிட்டது.

அந்தச் சம்பவத்துக்குப் பிறகு போஸ்ட்மாஸ்டரின் மனைவி அவரை ஒரு அடிமையைப் போல் நடத்துவதாகவும் கேள்விப்பட்டான் பெருமாள்.

சுந்தரேசன் தில்லியிலிருந்து சென்னை வரும்போதெல்லாம் இப்படி ஏதாவது ஒரு சம்பவம் நடந்துகொண்டேயிருந்தது. டிபார்ட்மெண்ட்டில் எந்த ஒரு அழகான பெண்ணைப் பார்த்தாலும் போதும், முயற்சி செய்ய ஆரம்பித்தார். சில முயற்சிகள் கைகூடின. சில தோல்வியடைந்தன.

ஆண் அதிகாரிகளின் கதை இப்படியென்றால் பெண் அதிகாரிகளின் கதை வேறு மாதிரி இருந்தது. அவர்களுக்கு ஸானிடரி நாப்கின் வாங்கி வருவதிலிருந்து குற்றாலம் அருவியில் குளிக்க வைப்பதுவரை பெருமாளின் வேலைதான்.

ஒரு முறை ஒரு பெண் அதிகாரி குற்றாலம் சென்றபோது பெருமாளும் உடன் செல்ல வேண்டி வந்தது. அந்தப் பெண் அதிகாரி அருவியில் குளிக்கச் சென்றபோது, அவர் எடுத்துச் சென்ற மார்க்கச்சை கீழே விழுந்துவிட்டதைப் பின்னால் வந்துகொண்டிருந்த பெருமாள் கவனித்துவிட்டான். ஒருகணம் அவனுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. அப்படியே கண்டுகொள்ளாமல் போய்விட்டால் பின்னால் இதுவே பெரிய பிரச்னையாகிவிடலாம்.

‘மேடம், மேடம்’ என்று கத்தினான். ஆனால் அது அந்த அதிகாரியின் காதில் விழவில்லை. அதைக் கையால் எடுத்துச் செல்லவும் அவனுக்குக் கூச்சமாக இருந்தது. அதனால் அவன் ஜேபியிலிருந்த பேனாவை எடுத்து அதன் மூலமாகவே அந்த மார்க்கச்சையைத் தூக்கிக்கொண்டு போய் அவரிடம் கொடுத்தான்.

குற்றாலம் பயணிகள் கூட்டமே இதை வேடிக்கை பார்த்தது.

**பின் குறிப்புகள்:**

1. எல்லா அழகான பெண்களையும் ஒருமுறை சுகித்துவிட வேண்டும் என்று அடிக்கடி சொல்லுவார் சுந்தரேசன். பெருமாளுடைய விருப்பமும் அதேதான். ஆனால் சுந்தரேசன் அப்படிச் சொல்வதோடு நிறுத்தாமல் அதைச் செயல்படுத்தியும் வருகிறார். பெருமாள் மனத்தில் வைத்துப் புழுங்கிக்கொண்டிருக்கிறான்.
2. The only way to get rid of a temptation is to yield to it.

- ஆஸ்கார் ஒயில்ட்

***

# கதை : ஐந்து

கண்ணாயிரம் பெருமாளின் நண்பன் மணியின் மூலமாகப் பெருமாளுக்கு சிநேகிதனானவன் ஃபங்குலா. இயற்பெயர் வஸீம்.

தஞ்சாவூர் சொந்த ஊர். ஏழெட்டு தலைமுறைகளுக்கு உட்கார்ந்து சாப்பிடும் அளவுக்கு சொத்து இருக்கிறது. ஃபங்குலாவின் கதை பல சம்பவங்களால் ஆனது. அவை:

1. ஃபங்குலாவிடம் பென்ஸ், BMW, Camri, ஸொனாட்டா என்ற ரீதியில் ஒரு டஜன் கார்கள் உள்ளன. இருந்தாலும் அவனுக்குக் கார்கள் மீது தீராத மோகம். புதிதுபுதிதாக வாங்கிக்கொண்டே இருப்பான்.

அப்போது டாட்டா ஸியர்ரா அறிமுகமான புதிது. ஷோரூமில் நின்றுகொண்டிருந்த அந்த வெள்ளை நிற டாடா ஸியர்ராவைப் பார்த்தான் ஃபங்குலா. வாங்க வேண்டுமென்று தோன்றியது. கடை நிர்வாகியிடம் விருப்பத்தைச் சொன்னான். ‘இப்போது பதிவு செய்து வைத்தால், கிடைக்க மூன்று மாதமாகும்’ என்றான் கடைக்காரன். ‘அப்படியா, சரி... காரை ஸ்டார்ட் பண்ணிப் பார்க்கலாமா?’ என்று கேட்டான் ஃபங்குலா. ‘ஓ, பார்க்கலாமே...’ என்றபடி கார் சாவியை ஃபங்குலாவிடம் கொடுத்தான் கடைக்காரன். காருக்குள் சென்று அமர்ந்த ஃபங்குலா காரை ஸ்டார்ட் செய்தான். பிறகு நடந்தது, நீங்கள் அடிக்கடி இந்திய சினிமாவின் சண்டைக் காட்சிகளில் ஹீரோவும் வில்லனும் கண்ணாடித் தடுப்புகளை உடைத்துக்கொண்டு பாயும் காட்சி.

ஷோரூமின் கண்ணாடித் தடுப்பை உடைத்துக்கொண்டு காரைக் கிளப்பி வீட்டுக்கு வந்துவிட்டான் ஃபங்குலா. கடைக்காரர்கள் அதிர்ச்சியிலிருந்து மீண்டு ஃபங்குலாவின் வீட்டுக்கு வருவதற்குள், அவன் வேறு வேலையாக வீட்டிலிருந்து கிளம்பிவிட்டான்.

ஃபங்குலா வீட்டு வாசலிலேயே காத்திருந்தனர் கடைச் சிப்பந்திகள். நான்கு நாட்கள் கழித்து வீட்டுக்கு வந்தான் ஃபங்குலா. மொட்டையடித்திருந்ததால் சிப்பந்திகளுக்கு சட்டென்று அடையாளம் புரியவில்லை. விறுவிறுவென்று உள்ளே சென்று குளிக்கப் போய்விட்டான் ஃபங்குலா. சிப்பந்திகளுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. அழைப்பு மணியை அழுத்தியபோது ஃபங்குலாவின் மனைவி வந்தாள். அவளிடம் ‘சாரைப் பார்க்கணும்’ என்று சொன்னபோது, ‘இப்போதுதானே வந்தார்? பார்க்கவில்லையா நீங்கள்?’ என்று ஆச்சரியப்பட்டாள். ‘சார் எங்களைக் கவனித்ததாகவே தெரியவில்லை. அவர் பாட்டுக்கு உள்ளே போய்விட்டார்.’

‘ஓ... குளிக்கப் போயிருக்கிறார். வந்ததும் சொல்கிறேன்.’

ஃபங்குலாவிடம் விஷயம் தெரிவிக்கப்பட்டது. காருக்கு ஆறு லட்சமும்,

உடைந்த கண்ணாடிக்கு ஒரு லட்சமுமாக ஏழு லட்சத்துக்கு செக் கொடுத்துவிட்டான் ஃபங்குலா.

2. ஒரு நாள் குடித்துவிட்டு வந்து வீட்டில் படுத்திருந்தான் ஃபங்குலா. காலையில் கண்விழித்துப் பார்த்தபோது எதிரேயிருக்கும் தொலைக்காட்சி பெட்டியைக் காணவில்லை. மனைவியை அழைத்துத் திட்டினான்.

'ஏன்டி... ஒரு நாள் நான் வெளியூர் போய்ட்டு வர்றதுக்குள்ளே டீவியை வித்துட்டியாடி? உனக்கெல்லாம் நான் லாயக்கில்லடி. என் தாத்தாதான் சரி...'

கடைசியில் பார்த்தால், ஃபங்குலாதான் போதையில் தலைகீழாகப் படுத்திருக்கிறான். டீவி பெட்டி அவனுடைய தலைமாட்டுப் பக்கம் இருந்ததை அவன் மனைவி தலையில் அடித்துக்கொண்டே சுட்டிக்காட்டினாள்.

3. ஃபங்குலாவிடம் அவன் தாத்தாவின் அம்சங்கள் பல ஒட்டிக்கொண்டிருந்ததால் அவரைப் பற்றியும் கொஞ்சம் சொல்லிவிடுகிறேன். தாத்தாவின் பொழுதுபோக்கு: துப்பாக்கி சுடுதலும், வேட்டையும். வேட்டைக்குச் செல்லாத நேரத்தில் வீட்டிலேயே மனைவி மற்றும் வேலைக்காரர்கள் தலையில் ஆப்பிள் வைத்துச் சுடுவார்.

ஒரு நாள் ஃபங்குலா, தாத்தாவுக்குப் போட்டியாக வேலைக்காரனின் தலையில் ஒரு குத்தூசியை வைத்து விரல்களால் பிடித்துக்கொள்ளச் செய்து குத்தூசியின் முனையைக் குறி தவறாமல் சுட்டான்.

இதைப் பார்த்துவிட்டு தாத்தாவும் குத்தூசியை வைத்துச் சுட, குறி தவறி வேலைக்காரன் இறந்துவிட்டான். பிறகு, 'துப்பாக்கியில் குண்டு இருப்பது தெரியாமல் வேலைக்காரன் அதைத் துடைத்துச் சுத்தம் செய்யும்போது குண்டு பட்டு செத்து விட்டான்' என்பதாக போலீஸ் ரெக்கார்ட் மூடப்பட்டது.

இந்த விஷயத்தில் தாத்தாவுக்குச் சற்று மனவருத்தம்தான் - தன் குறி தவறிவிட்டதே என்று. தாத்தாவின் குறி மற்றொரு தடவையும் தவறிவிட்டது. ஆனால் இந்த முறை அதனால் ஒரு மரணம் தவிர்க்கப்பட்டது.

தாத்தாவுக்கு சிவப்பு என்றால் பிடிக்காது. இது அந்த வீட்டில் அனைவருக்கும் நன்கு தெரியும். ஒரு முறை அவர் வெளியூர் சென்றுவிட்டுத் திரும்பியபோது சோஃபாவில் சிவப்பு நிறத்தில் அலங்காரத் துணி தைக்கப்பட்டிருந்தது.

'யார் இதைச் செய்தது?' என்று கர்ஜித்தார் தாத்தா.

எல்லோரும் பாட்டியைக் காட்டினார்கள்.

நேராக மாடிக்குச் சென்ற தாத்தா, தன் Double barrel துப்பாக்கியை எடுத்து வந்து மனைவியின் நெஞ்சைக் குறி வைத்துச் சுட்டார்.

நல்ல வேளை, முதல் நாள் இரவு முழுவதும் அவர் குடித்திருந்த முழு போத்தல் ப்ளூ லேபிள் ஜானி வாக்கர்தான் பாட்டியைக் காப்பாற்றியது. Double barrel துப்பாக்கியைத் தூக்கிச் சுட்டபோது கடும் போதையும், வயோதிகமும் அவர் கையை அசைத்துவிட, குண்டு, பாட்டியின் நெஞ்சைத் துளைக்காமல் இடது கையை உரசிக்கொண்டு சென்றுவிட்டது.

கட்டுப் போட்டிருந்தாள் பாட்டி.

எவ்வளவு போதையாக இருந்தாலும் குறி தவறாமல் சுடக்கூடிய தன் திறமை என்னாயிற்று என்று தனக்குள்ளாகவே அடிக்கடி கேட்டுக்கொள்ள ஆரம்பித்தார் தாத்தா.

4. பல வருடங்களுக்கு முன்பு நடந்தது இந்தச் சம்பவம். தஞ்சாவூரில் கட்டப்பட்ட ஒரு பாலத்தைத் திறந்து வைப்பதற்காக முதலமைச்சர் வருவதாக இருந்தார். காலை எட்டு மணிக்குத் திறப்பு விழா. இதைக் கேள்விப்பட்டார் தாத்தா. காரைக் கிளப்பிக்கொண்டு பாலத்திற்குச் சென்றார். பாலத்தின் இரு மருங்கிலும் வரிசையாக போலீஸ்காரர்கள். தாத்தாவைப் பார்த்து ஸல்யூட் அடித்தார் எஸ்ப்பி. தாத்தா எஸ்ப்பியிடம் ‘ஏய்யா... இது என் ஊர். இங்கே பாலம் தொறக்குறீங்க. இதைத் தொறக்கறதுக்கு வெளியூர்லேர்ந்து ஸீயெம் வரணுமா? கட்டுங்கய்யா ரிப்பனை...’ என்றார்.

எஸ்ப்பி ஏதோ சொல்ல வாயெடுத்தார். அதற்குள் சில போலீஸ்காரர்கள் ரிப்பனைக் கட்டியே விட்டார்கள். ஒரு போலீஸ்காரர் பவ்யமாகக் கத்தரிக்கோலை நீட்ட அதை வாங்கி ரிப்பனை வெட்டிவிட்டு, பாலத்தின் மேல் தன் காரை விரைவாக ஓட்டிக்கொண்டு சென்றார் தாத்தா.

5. ஒரு முறை சென்னை பார்க் ஷெரட்டனிலுள்ள டப்ளின் என்ற டிஸ்கோவில் லஜ்ஜாவதியே என்ற பாட்டை போடச் சொன்னான் ஃபங்குலா. ‘நட்சத்திர ஓட்டல்களில் பிராந்திய மொழிப் பாடல்களைப் போடுவதில்லை’ என்றார்கள். உடனே அந்த ஓட்டல் வாசலில் தன் காரை நிறுத்தி, காரின் எல்லாக் கதவுகளையும் திறந்துவிட்டு, கார் ஸ்டீரியோ மூலம் முழு வால்யூமில் அந்தப் பாட்டைப் போட்டான் ஃபங்குலா. C.D. முழுவதுமே அந்தப் பாட்டைப் பதிவுசெய்து வைத்திருந்ததால், ஒரு மணி நேரம் திரும்பத் திரும்ப அதே பாட்டே ஒலித்துக்கொண்டிருந்தது. பிறகு மணியும் மற்ற நண்பர்களும் வந்து அவனைக் கிளம்பிய பிறகுதான் கிளம்பினான். யாரும் அவனை அன்று காரோட்ட அனுமதிக்கவில்லை. மணிதான் காரோட்டினான். ஆனால் கார் கதவை மூட மறுத்துவிட்ட ஃபங்குலா running board - இலேயேதான் அமர்ந்துகொண்டு வந்தான்.

6. ஒரு நாள் இரவு இரண்டு மணிக்கு வீட்டுக்குத் திரும்பினான் ஃபங்குலா. ஹாரன் அடித்தும் வாட்ச்மேனுக்குக் கேட்க வில்லை. ஆழ்ந்து தூங்கிவிட்டான் போலும். பங்குலா கவலைப் படவில்லை. கேட்டை காரினாலேயே இடித்துத் தள்ளிக் கொண்டு உள்ளே போய்விட்டான். அது ஒரு பென்ஸ் கார்.

7. ஏதோ வேலையாக திண்டுக்கல் சென்றான் ஃபங்குலா. அப்போது காலை மணி பத்தரை. சென்னையிலிருந்த அவன் தோழி ஒருத்தி ஃபோனில் கூப்பிட்டு ‘உன்னைப் பார்த்து நாளாகிறது. இப்போதே பார்க்க வேண்டும் போலிருக்கிறது’ என்று சொல்ல, 10.35க்கு திண்டுக்கல்லிலிருந்து கிளம்பி சென்னைக்கு 3.30க்கு வந்துவிட்டான். திண்டுக்கல்லிலிருந்து சென்னை - 420 கி.மீ.

8. தாத்தாவைப் போலவே ஃபங்குலாவும் அடிக்கடி வேட்டைக்குச் செல்வது வழக்கம். இந்தியாவில் மான் வேட்டை தடை செய்யப்பட்டிருப்பதால், இதற்காகவே ஃப்ரான்ஸுக்குச் சென்று வருவான் ஃபங்குலா. ஒரு முறை

பெருமாளும் ஃபங்குலாவுடன் ஃப்ரான்ஸுக்குச் சென்றிருக்கிறான். ஒரு ஹெலிகாப்டரை வாடகைக்கு எடுத்துக் கொண்டு ஃப்ரெஞ்ச் விமானி ஓட்டிக்கொண்டு வர, காடுகளின் மீது பறந்து பறந்து சென்று மான் வேட்டையாடினான் ஃபங்குலா. மற்றபடி, தென்தமிழ்நாட்டுப் பகுதியிலுள்ள காடுகளுக்கு ஃபங்குலாவும் நண்பர்களும் வேட்டைக்குச் செல்வது வழக்கம். எப்போதாவது பெருமாளும் அவர்களோடு சேர்ந்துகொள்வான்.

காட்டின் எந்தப் பகுதிக்கு வேட்டைக்குச் செல்கிறார்களோ, அங்கே, இவர்கள் செல்வதற்கு இரண்டு தினங்கள் முன்பாகவே பணியாளர் கூட்டம் ஒன்றும் சென்றுவிடும். கூடவே அவர்களோடு பின் வரும் சாமான்களும் போகும்:

Gas Stove

ஜெனரேட்டர்

அரிசி, பருப்பு, உளுந்து, உப்பு, புளி, தேங்காய், மிளகாய் போன்ற மளிகைச் சாமான்கள்

வெட் க்ரைண்டர்

மிக்ஸி

மினி ஃப்ரிட்ஜ்

25 லிட்டர் தண்ணீர் கேன் - 20

குறிப்பிட்ட இடத்துக்கு மேல் 4 வீலர் ஜீப் போகாது என்பதால் இது எல்லாவற்றையும் தலைச்சுமையாக எடுத்துச் சென்று விடுவார்கள்.

கூடவே சில ரேஞ்சர்களும் துணைக்கு வருவார்கள்.

நண்பர்கள் கூட்டத்தில் குறைந்தது 10 பேர் இருப்பார்கள். அவ்வளவு அடர்ந்த காட்டில், காலையில், அவ்வளவு பேருக்கும் சுடச் சுட தோசை கிடைக்கும். இரவு உணவுக்குக் காட்டுப் பன்றி, முயல் என்று வேட்டையில் கிடைப்பதைச் சாப்பிடுவார்கள். ஃபங்குலா ஒரு சாகஸ விரும்பி என்பதால் அவன் காரணமாக எந்தப் பிரச்னையிலும் மாட்டிக்கொள்ளக் கூடாது என்பதற்காக, அவனிடம் இரண்டு நிபந்தனைகள் விதிக்கப்படும்.

1. ஜீப் ஓட்டக் கூடாது.

2. துப்பாக்கியைத் தொடக் கூடாது.

ஒருமுறை இந்த வேட்டை கோஷ்டியுடன் பெருமாள் சென்றிருந்தபோது நடந்த சம்பவம் இது:

வேட்டைக்குரிய இடத்தை அடைய இரண்டு ஆறுகளைக் கடக்க வேண்டும். முதல் ஆற்றைக் கடக்கும்போது, தண்ணீர் ஜீப்பின் சீட்வரை வந்துவிட்டது, ஆற்றின் கீழே முழுக்கவும் கூழாங்கற்களாகவே இருந்ததால் ஜீப் தூக்கித் தூக்கிப் போட்டபடிதான் செல்லும். அடுத்த ஆற்றைக் கடக்கும்போது, நீர் ஜீப்பின் ஹெட் லைட் வரை வந்துவிட்டது. கொஞ்சம் கவனப் பிசகாக ஓட்டினாலும், ஜீப் கவிழ்ந்துவிடும் என்பதால் ரேஞ்சர்தான் ஃபங்குலாவின் ஜீப்பை ஓட்டிக்கொண்டு சென்றார்.

முதல் ஆற்றைக் கடந்துவிட்டார்கள். இரண்டாவது ஆற்றைக் கடக்கும்

போது ‘நான்தான் ஜீப்பை ஓட்டுவேன்’ என்று அடம்பிடிக்க ஆரம்பித்தான் ஃபங்குலா. அப்போது சமீபத்தில் தனக்கு நேர்ந்த ஒரு அனுபவத்தைக் கூறினார் ரேஞ்சர்.

இதே ஆற்றில் ஒரு யானையின் மீது அமர்ந்து வந்து கொண்டிருந்திருக்கிறார் ரேஞ்சர். நதியில் பாதி தூரத்தைக் கடந்ததும் யானை மேற்கொண்டு செல்ல மறுத்திருக்கிறது. எவ்வளவோ சொல்லிப் பார்த்தும் முன்னே போகாமல் பின்னாலேயே செல்ல முயற்சி செய்துள்ளது. பிறகு, வேறு வழியில்லாமல் ஆற்றைக் கடக்காமலேயே யானையைத் திருப்பிக்கொண்டு வந்துவிட்டார் ரேஞ்சர். முக்கால் மணி நேரத்தில், ஆற்றில் வெள்ளம். பெரிய பெரிய மரங்களெல்லாம் அடித்துக்கொண்டு வந்துள்ளது.

‘எனவே, காட்டு விலங்களுக்கு நுண்ணறிவு அதிகம். அதே போல், காட்டில் இருப்பவர்களுக்குத்தான் காட்டின் மொழி தெரியும். வீரப்பன் பட்சிகளின் சப்தத்தை வைத்தே போலீஸ் எவ்வளவு கல் தொலைவில் இருக்கிறது என்று அறிந்துகொண்டிருக்கிறான். அதனால் பொறுப்பை என்னிடம் விட்டுவிட்டு அமைதியாக வாருங்கள்...’ என்று ரேஞ்சர் சொன்னார்.

பெருமாளுக்குத் தன் இளம் பிராயத்தில் நடந்த ஒரு சம்பவம் ஞாபகம் வந்தது.

அது ஒரு கடுமையான கோடைக்காலம். திண்ணையில் அமர்ந்து அவ்வாவும் பெருமாளும் தாயம் விளையாடிக்கொண்டிருந்தனர். அப்போது சுவர் ஓரத்தில் பிள்ளையார் எறும்புகள் சீனியை எடுத்துக்கொண்டு சாரிசாரியாகச் சென்றுகொண்டிருந்தன. அதைப் பார்த்துவிட்டு ‘இரண்டு நாளில் பெரு மழை வரும்’ என்றார்கள் அவ்வா. அதைக் கேட்ட அத்தையும் மற்றவர்களும் ‘என்னது, மழையா? வெய்யில் போட்டுக் கொளுத்துகிறது. இப்போது எப்படி மழை வரும்?’ என்று அவ்வாவைக் கிண்டல் செய்தார்கள்.

ஆனால், அவ்வா சொன்னபடியே இரண்டு நாளில் மழை பிய்த்துக்கொண்டு கொட்டியது. வானத்துக்கும் பூமிக்கும் நீர்த்தூண் அமைத்ததுபோல் ஒரு வாரத்திற்கு விடாமல் கொட்டியது மழை. அவ்வா பேச்சைக் கேட்காமல் வறட்டியையும், விறகையும் வீட்டுக்குள் எடுத்து வைத்துக்கொள்ளாத தனது மதியீனத்தை மிகவும் நொந்து கொண்டார்கள் அம்மா. (‘எறும்புக்கு இருக்குற அறிவுகூட மனுசனுக்கு இல்லாமப் போச்சு.’)

மூன்று தினங்கள் காட்டில் இருந்துவிட்டுத் திரும்பும்போது அந்த ஆற்றில் ஒரு சம்பவம் நடந்தது.

ஆற்றைக் கடந்து அக்கரையை அடைந்தாலும் பெருமாளுக்கு அந்த ஆற்றில் குளிக்க வேண்டும்போல் இருந்தது. நண்பர்களுக்கும் ஆசை தொற்றிக்கொண்டது. ஆற்றின் நடுவிலுள்ள ஒரு பாறையின் மேல் அமர்ந்து நீரோட்டத்தை ரசித்துக்கொண்டிருந்தான் ரவி. அப்போது, யாரும் சற்றும் எதிர்பாராத விதத்தில் ஆற்றின் நீர் வரத்து திடீரென்று அதிகமாகியது. அணையில் நீரைத் திறந்து விட்டிருக்க வேண்டும். இலை தழைகளும் குப்பைக் கூளங்களும் நீரில் அடித்துக்கொண்டு வந்தன.

கரையிலிருந்து ரவியை நோக்கி எல்லோரும் கத்தினார்கள். நீர்ப் பெருக்கின் சத்தத்தில் ரவிக்கு அது காதில் விழவில்லை. அதோடு, எல்லோருமே கடும் போதையில் இருந்தார்கள். ரவியும் நீர்ப்பெருக்கை

கவனித்ததாகத் தெரியவில்லை. பாறையின் விளிம்பில் அமர்ந்து ஆற்றுநீரைக் காலால் அளந்துகொண்டிருந்தவனின் இடுப்பு வரை திடீரென்று நீர் ஏறியதும் சுய நினைவு பெற்றவனாக பீதிகொண்டு எழுந்துகொள்ளும்போது பாறையிலிருந்து வழுக்கி மற்றொரு பாறையில் விழுந்து, உயிருக்குப் பயந்து நீச்சலடித்து கரைக்கு வந்து சேர்ந்தான் ரவி. விலாப் பக்க சிராய்ப்பிலிருந்து ரத்தம் கசிந்து கொண்டிருந்தது.

அந்த வெள்ளத்திலும் அக்கரையிலிருந்த சாமான்களை எடுத்துக் கொண்டு வந்தார் ரேஞ்சர். அதற்கு மேல் ஃபங்குலாவினால் பொறுக்க முடியவில்லை. ‘இது என் ஜீப். என்னால் எந்த வெள்ளத்திலும் அக்கரைக்குப் போய் வர முடியும். நீங்கள் யாரும் வர வேண்டாம்’ என்று சொல்லிவிட்டு ஜீப்பை எடுத்துக்கொண்டு போய்விட்டான். உயிரோடு திரும்புவான் என்று யாருக்கும் நம்பிக்கையில்லை.

‘இப்படி நடக்கும் என்று தெரிந்திருந்தால் மலைப்பாதையிலேயே சென்றிருக்கலாமே. 20 கி.மீ அதிகமாகச் சுற்ற வேண்டும் என்றுதானே இந்த வழியில் வந்தேன்’ என்று புலம்பிக்கொண்டிருந்தார் ரேஞ்ஜர்.

ஒரு முறையல்ல, இரண்டு முறை அக்கரைக்குச் சென்று வந்தான் ஃபங்குலா. மீண்டும் ஒருமுறை செல்லாமல் தடுக்க மணி ஒரு யோசனை சொன்னான். அவன் இரண்டாவது முறையும் அக்கரை சென்று வெற்றியுடன் திரும்பியதும் நண்பர்கள் அனைவரும் எழுந்து நின்று கரகோஷம் செய்து ஃபங்குலாவைப் பாராட்டினர். அத்துடன் அன்றைக்கான தன் சாகஸத்தை நிறுத்திக்கொண்டான் ஃபங்குலா.

9. டிஸ்கோக்களுக்குச் சென்று வந்தால் ஒரே இரவில் ஃபங்குலாவுக்கு 20,000 ரூ., 30,000 ரூ. என்று செலவாகியது. இது மற்ற நண்பர்களுக்கு மிகவும் குழப்பத்தை ஏற்படுத்தியது. காரணம். டிஸ்கோவுக்கான நுழைவுக் கட்டணம், மது வகையறாக்களுக்கான செலவு எல்லாமே மற்ற நண்பர்களுடையது. போதையில் ஃபங்குலாவுக்கு கணக்கு தெரியாது என்பதற்காக எல்லோரும் செய்த ஏற்பாடு இது. இருந்தும் எப்படி அவனுக்கு இவ்வளவு செலவாகிறது? காரணம் புரியாததால் நண்பர்கள் வேறு ஒரு ஏற்பாடு செய்தனர். ஃபங்குலாவிடம் பணமே இருக்க வேண்டாம். இருப்பதால்தானே இந்தப் பிரச்னை?

ஒரு நாள் டிஸ்கோவுக்குக் கிளம்பும்போது மேற்கண்ட ஏற்பாட்டின்படி அவன் கையிலிருந்த 8,000 ரூ. பணம் பெற்றுக்கொள்ளப்பட்டது. வாங்கி வைத்துக்கொண்டவன் ரவி.

இரவு மணி பன்னிரண்டைத் தாண்டியிருக்கும். ஃபங்குலா எல்லோருக்கும் முன்னிலையில் ‘ரவி, என் பணத்தைக் கொடு’ என்று கேட்டான்.

‘உனக்கு எதுக்கு இப்போ பணம்? காலையில் தர்றேன்.’

‘அது என் பணம். அதை இப்போது என்னிடம் கொடுக்கப் போகிறாயா, இல்லையா?’

மறுபேச்சு பேசாமல் ரூபாய் எட்டாயிரத்தையும் ஃபங்குலாவிடம் கொடுத்துவிட்டான் ரவி. காலையில் ரவியிடம் முந்தின தினம் மாலை அவன் தன்னிடமிருந்து வாங்கி வைத்துக்கொண்ட ரூபாய் எட்டாயிரத்தையும் திருப்பிக் கேட்டிருக்கிறான் ஃபங்குலா. ‘அடப் பாவி, நேற்று இரவுதான் டிஸ்கோவில் அதைக் கேட்டு வாங்கிக் கொண்டாயே?’

என்று ரவி சொன்னதற்கு ஃபங்குலா கூறிய பதில்: 'அப்படியா? இருக்காதே. நான் உன்னிடமிருந்து வாங்கியதாக ஞாபகம் இல்லையே... நீ போதையில் மறந்துவிட்டுப் பேசுகிறாய்...'

10. வேறொரு நாள், ஃபங்குலா மற்றும் நண்பர்களுடன் பெருமாளும் வேட்டைக்குச் சென்றபோது ஒரு காட்டு பங்களாவில் தங்க நேர்ந்தது. அப்போதுதான் பெருமாள் தன்னுடைய நீண்ட நாள் ஆசையைத் தீர்த்துக்கொண்டான்.

பெருமாளுக்கு பெண்களின் மீது எவ்வளவு மோகமோ அதே அளவு மோகம் துப்பாக்கிகளின் மீதும் இருந்தது. ஆனாலும் அது பில்லியர்ட்ஸ், பியானோ, கால்ஃப், வாட்டர் ஸ்கேட்டிங் போன்ற மேட்டுக் குடியினருக்குரிய வர்க்கச் சார்பு கொண்டிருந்ததால் பெருமாளுக்கு அந்த ஆசை கைகூடாததாகவே இருந்தது. கடவுளின் சிருஷ்டியான பெண்களைக் கவர, மூன்றே மூன்று வார்த்தைகளைக் கொண்ட ஒரு பொய்யை மூலதனமாக்கினால் போதும் (நீ மிகவும் அழகாயிருக்கிறாய்!) என்ற நிலையில், after all இந்த மனித சிருஷ்டியான துப்பாக்கி இவ்வளவு தூரம் எட்டாப் பொருளாக இருப்பதன் irony கண்ணாயிரம் பெருமாளுக்குப் புரியவேயில்லை. துப்பாக்கியைத் தொடாததால் தான் இன்னும் ஒரு வர்ஜினாக இருப்பதுபோலவே உணர்ந்தான். ஒருவேளை அவனிடம் உறைந்துள்ள 'பெண்தன்மை'தான் இதற்குக் காரணமோ, என்னவோ? யாருக்குத் தெரியும் இந்த சைக்காலஜி விஷயமெல்லாம்?

பெருமாள் துப்பாக்கியைத் தொடக்கூடாது என்பதில் குறியாக இருந்தான் மணி. காரணம், பெருமாளின் கைராசி அப்படி. ஒரு வேளை அவன் துப்பாக்கியைக் கையாளும்போது அது வெடித்து ஃபங்குலா வீட்டு வேலைக்காரனுக்கு நடந்ததுபோல் ஏதாவது நடந்துவிடக் கூடாதே என்ற பயம் மணிக்கு.

எனவே, மணி அரை போத்தல் ஜானி வாக்கரை அடித்துவிட்டு தூங்கிக்கொண்டிருந்த நேரத்தில் பெருமாளும் ஃபங்குலாவும் அந்தக் காட்டு பங்களாவின் மொட்டை மாடிக்கு நழுவினார்கள்.

முதன்முதலாகத் துப்பாக்கியைத் தொட்டபோது, ஒருவிதமான ஹோமோசெக்ஷுவல் திருப்தியை அடைந்தான் பெருமாள்.

அது ஒரு .22 சைஸ் ரைஃபிள். ஜெர்மன் மேக். அதோடுகூட ஒரு பிஸ்டலும் வைத்திருந்தான் ஃபங்குலா.

'அது சரி. பிஸ்டலுக்கும் ரிவால்வருக்கும் என்ன வித்தியாசம் ஃபங்குலா? அல்லது, இரண்டும் ஒன்றுதானா?'

ஏனென்றால், பிஸ்டலில் குண்டுகளைப் போட்டு அதை அதன் குண்டியிலிருந்து தட்டி உள்ளே அமுக்குவதாக இருந்தது. ஆனால், சினிமாக்களில், குண்டுகளைப் போட்டு சுழற்றிவிடுகிறார்களே?

'ஆமாம், அதுதான் வித்தியாசம்' என்றன ஃபங்குலா.

அன்றைய தினம் பாறைகளை குறி வைத்துச் சுட்டதில் 40 புல்லட்டுக்களைக் காலி செய்தான் கண்ணாயிரம் பெருமாள். வைத்த குறியில் பத்துக்கு ஏழு சரியாக இருந்தது.

***

**பின்குறிப்பு:**

1. இப்போது ஃபங்குலா, வேலைக்காரர்களின் தலையில் குத்தூசிக்குப் பதிலாக தீக்குச்சியை வைத்து குச்சியின் முனையிலுள்ள கந்தகத்தைக் குறி பார்த்துச் சுடுவதில் வல்லவனாகியிருக்கிறான்.

   தற்செயலாக ஃபங்குலாவுக்குத் தோன்றியது, தானும் மணியைப்போல் ஒரு பிஸினெஸ்மேன் ஆக வேண்டுமென்று. ஏழு வெவ்வேறு பிஸினெஸ்களில் கால் வைத்து அதை வெற்றிகரமாக நடத்திக் கொண்டிருப்பவன் மணி. அதையே தனது ஆதர்சமாகக் கொண்டு, சென்னை அண்ணாசாலையில் ஒரு இடத்தைப் பிடித்து 'ஒரு ஏற்றுமதி நிறுவனத்தைத் தொடங்கினான் ஃபங்குலா. முதல் வியாபாரம்: சீனாவுக்குத் தோல் பொருட்கள் ஏற்றுமதி.

   ஒரே வாரத்தில் ஒன்றரை கோடி ரூபாய் நஷ்டம். ஃபங்குலாவின் தந்தையர் அவனை அழைத்துக் கூறினார்:

   'தம்பீ... நீ எப்போதும்போல் கார் ஓட்டினால் மாதம் பத்து பதினைந்து லட்சம்தான் செலவு. வருஷத்துக்கு ஒன்றரை கோடி ஆகும். ஆனால் ஒரே வாரத்தில் ஒன்றரை கோடி என்றால் அது கொஞ்சம் ஜாஸ்தி... அதனால் நீ கார் ஓட்டிக் கொண்டிருந்தாலே போதும்...'

***

# கதை : ஆறு

அரசு அலுவலகங்களைப் பற்றி எத்தனையோ நகைச்சுவைத் துணுக்குகளைப் பத்திரிகைகளில் படித்திருப்பீர்கள் - அரசு ஊழியர் குறட்டை விட்டுத் தூங்குவது, பேப்பர் படிப்பது, இத்யாதி, இத்யாதி என்று. ஆனால் அந்த அலுவலகத்தைப் பார்த்தால் யாரும் அப்படித் துணுக்கு எழுத முடியாது. ரயில் மூலம் அனுப்பப்படும் கடிதங்களை ஊர்வாரியாகப் பிரித்து அனுப்பும் ‘ஆரெம்மெஸ்’ என்ற அஞ்சல் பிரிவின் நிர்வாக அலுவலகம் அது.

அங்கே ஓரிரண்டு ஆண்டுகள் வேலை பார்த்தான் பெருமாள். அது அலுவலகம் அல்ல; ஒரு வதை முகாம். வதை முகாமின் கண்காணிப்பாளர் திரு. மாயநாதன், ஹெட் க்ளார்க். தலைவர்: பரமானந்த், அய்ப்பீயெஸ்.

அந்த அலுவலகத்தின் ஒரு டஜன் குமாஸ்தாக்களின் குடுமியையும் தன் கையில் வைத்திருப்பவர் ஹெட் க்ளார்க் மாயநாதன். ஒன்பதேகால் மணி ஆஃபீஸுக்கு எட்டரைக்கே வந்துவிடுவார். அதுவும் அம்பத்தூரிலிருந்து தாம்பரம் வர வேண்டுமென்றால், அவர் வீட்டிலிருந்து குறைந்தபட்சம் ஏழு மணிக்கே புறப்பட்டாக வேண்டும். மாயநாதனுக்கு ஐம்பது வயது ஆகியும் குழந்தை இல்லை என்பதால்தான் அவர் இந்த அலுவலகத்தை வதை முகாமாக மாற்றிவிட்டார் என்ற ‘தியரி’யும் அலுவலகத்தில் உலவிக்கொண்டிருந்தது.

அலுவலகத்துக்கு யார் தாமதமாய் வருகிறார்களோ அவர்கள் வருகைப் பதிவேட்டில் கையெழுத்திட முடியாதபடி அதை ஒளித்து வைத்துவிட்டு, அவர்கள் அதைக் கேட்கும்போது தன் விளாசலை ஆரம்பிப்பார் மாயநாதன். சவுக்கடியாய் வந்து விழும் சொற்கள். மற்ற குமாஸ்தாக்கள் மும்முரமாக வேலை செய்வது போல் பாவனை செய்தபடி அந்தத் ‘துயர’ நாடகத்தை ஓரக்கண்ணால் கவனித்துக் கொண்டிருப்பார்கள். அது மாயநாதனுக்கும் தெரியும். அதனாலேயே சவுக்கடியின் விசையும் அதிகமாக இருக்கும்.

‘ஒண்ணாந்தேதி பொறந்தா சொளையா வாங்குறீங்கள்ள சம்பளம்? அப்புறம் ஆஃபீஸ் வர்ரதுன்னா மட்டும் ஏன் வலிக்குது? ரேஷன் கடைன்னா ஒன்னவுர் முன்னால் போய் நிக்கிறீங்கள்ள? ஒங்களைச் சொல்லி குத்தமில்ல. மிலிட்ரி கவர்மெண்ட் வரணும். லேட்டா வர்றவங்களையெல்லாம் டிஸ்மிஸ் பண்ணி வீட்டுக்கு அனுப்பணும். அப்பதான் உங்களுக்கெல்லாம் புத்தி வரும்...’

இப்படியே அரை மணி நேரம் தொடரும் கச்சேரி. தாமதமாக வந்த குமாஸ்தா, மாயநாதனின் முன்னே கூனிக் குறுகி நின்று கொண்டிருப்பார் அந்த அரை மணி நேரமும்.

அப்படியானால் ஒழுங்காக ஆஃபீஸ் வந்து தன் வேலையை சீராகச் செய்யும் ஒருவருக்கு பாராட்டு கிடைக்குமா என்றால் அதுவுமில்லை.

அவர் பாடுதான் இன்னும் ஆபத்தானது.

‘என்னா வேல செய்யறீங்க? ஏதோ இம்ப்போசீஷன் எழுதுறா மாதிரி எழுதுகிக்கிட்டே இருக்கீங்க. உங்களையெல்லாம் வச்சுக்கிட்டு மாரடிக்க வேண்டியிருக்கு...’

பதிலுக்கு ஏதாவது முறைத்தால், தீர்ந்தது கதை. அதிகாரியிடம் வத்தி வைத்து உங்களை காலி பண்ணிவிடுவார். ‘எதிர்த்துப் பேசினார்’ என்று மெமோ கொடுக்கப்படும். அதைத் தொடர்ந்து ‘உங்கள் பதில் திருப்தியளிக்கவில்லை’ என்று சொல்லி சஸ்பெண்ட் செய்யப்படுவீர்கள்.

விஷச் சாராயத்தினால் 60 பேர் மண்டையைப் போட்டாலும் 6 போலீஸார்தான் சஸ்பெண்ட் செய்யப்படுவார்கள். ஆனால், இங்கே மாயநாதனை முறைத்தால் போதும், கைமேல் கிடைக்கும் சஸ்பென்ஷன் உத்தரவு.

மாயநாதனின் மற்றொரு விசேஷம், ஃபோன். எங்கிருந்தாவது ஒரு குமாஸ்தாவுக்கு ஃபோன் வரும். ‘சீட்டில் இல்லை’ என்று சொல்லி ஃபோனை வைத்துவிடுவார்.

இதனால் ஒருமுறை ஒரு உயிரே போயிருக்கிறது. டைப்பிஸ்ட் காந்தாமணிக்கு ஒரு ஃபோன் வந்துள்ளது. வழக்கம்போல் ‘சீட்டில் இல்லை’ என்று சொல்லிவிட்டார் மாயநாதன். பிறகு மறுபடியும் ஃபோன் செய்து, காந்தாமணியின் கணவருக்கு ஹார்ட் அட்டாக் என்று சொல்லியிருக்கிறார்கள். மாயநாதன் அசரவில்லை. யாரோ காந்தாமணியிடம் பேச விரும்பி சில்மிஷம் செய்கிறார்கள் என்று நினைத்து மீண்டும் அதே பதிலைச் சொல்லி பேச்சை முடித்து விட்டார். எதிர்ப்பக்கத்தில் திரும்பத் திரும்ப அழைக்கவே ஒரு கட்டத்தில் ரிசீவரை எடுத்து வைத்துவிட்டார்.

மற்றவர்கள் தத்தம் வேலையில் மூழ்கியிருந்ததால் பெருமாள்தான் இதைக் கவனித்தான். யாருக்கு வந்த ஃபோனோ என்ற கவலையுடன் மாயநாதனைப் பார்த்தான். அவன் பார்த்ததைக் கவனித்துவிட்ட மாயநாதன் ‘எவனோ ஒருத்தன் திரும்பத் திரும்ப ஃபோன் பண்ணி டெலிஃபோன் எக்ஸ்சேஞ்ஜான்னு கேட்டுகிட்டே இருக்கான்’ என்று சலிப்புடன் சொன்னார்.

பிறகு மறுநாள்தான் நடந்த விபரம் தெரியவந்தது. காந்தாமணியின் கணவர் ஒரு இருதய நோயாளி. அன்றைய தினம் சோர்வாக இருப்பதாகச் சொல்லி விடுப்பு எடுத்து வீட்டில் இருந்திருக்கிறார். திடீரென்று நெஞ்சுவலி வந்து மயக்கமாகிவிட்டார். உடனே பக்கத்து வீட்டுக்காரர்கள் காந்தாமணிக்கு ஃபோன் செய்திருக்கின்றனர். மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றபோது காரியம் கைமீறிப் போய்விட்டது.

இது எதுவுமே தெரியாமல் காந்தாமணி சாவகாசமாக மறுநாள் சமையலுக்கு வேண்டிய கீரையெல்லாம் வாங்கிக்கொண்டு வீட்டுக்குச் சென்றபோதுதான் விஷயமே தெரிந்துள்ளது.

மறுநாள் மாயநாதன் சொன்னார்... ‘நான் என்ன வேண்டுமென்றா செய்தேன்? நம் ஆட்கள் ஃபோன் பேச ஆரம்பித்தால் சாமான்யத்தில் முடிப்பார்களா என்ன? அரை மணி நேரத்திற்குக் கடலை போட்டு விட்டுத்தானே ஃபோனை வைக்கிறார்கள்? அதிலும் என்னென்ன

அசிங்கமான பேச்சு... ஃபோனிலேயே குடும்பம் நடத்தி குழந்தையும் பெற்றுவிடுவார்கள் போலிருக்கிறதே?' நாள் பூராவும் இதே ரீதியில் புலம்பிக்கொண்டிருந்தார் மாயநாதன்.

ஆனால், என்ன இருந்தாலும் பரமானந்தின் முன்னால் உறைபோடக் காண மாட்டார் மாயநாதன். பார்ப்பதற்கு கல்லூரி மாணவனைப் போல் இருப்பார் பரமானந்த். வயதும் அதிகமில்லை. சிவில் சர்விஸ் பரீட்சை எழுதி தேர்வு பெற்று இப்போதுதான் இந்த அலுவலகத்துக்கு முதல் போஸ்டிங். அந்தப் பரீட்சையில் மதிப்பெண் குறைவாக வாங்கினால் தர வரிசைப்படி அஞ்சல் துறைக்கு அனுப்பிவிடுவார்கள். அதனால், அய்யேயெஸ்ஸாக இருந்திருக்க வேண்டியவர் அய்ப்பீயெஸ்ஸாக ஆகிவிட்டார். இந்தியன் போஸ்டல் சர்விஸ் என்கிற இந்த அய்ப்பீயெஸ்ஸினால் போலீஸ் அதிகாரிகளுக்கு சற்று மன வருத்தம் உண்டு; தங்களுடைய இந்தியன் போலீஸ் சர்விஸ் என்கிற கம்பீரமான பட்டத்தை இந்த சீருடை அணியாத போஸ்டல் அதிகாரிகளும் போட்டுக்கொள்கிறார்களே என்று.

இதற்கெல்லாம் கவலைப்பட முடியுமா? நகைக்கடை செக்யூரிட்டி கூடத்தான் போலீஸ் யூனிஃபார்மில் அசத்துகிறார்... என்ன செய்வது?

ஆனால் அய்யேயெஸ்ஸோ, அய்ப்பீயெஸ்ஸோ, அடுத்த மனிதனை தெரு நாயைப்போல் கருதுவதில் இரண்டு பேருக்கும் எந்த வித்தியாசமுமில்லை.

ஒரு நாள் மீனம்பாக்கம் ஆரெம்மெஸ்ஸிலிருந்து க்ரூப்-டி என்று அழைக்கப்படும் கடைநிலை ஊழியரான கருணாகரன் என்பவர் இந்த அலுவலகத்துக்குத் தபால் கொண்டுவந்தார். அப்போது அலுவலக வாசலில் நின்றுகொண்டிருந்திருக்கிறார் பரமானந்த். ஏற்கெனவே சொன்னேன். பரமானந்த் ஒரு அரசு அதிகாரியைப் போல் இருக்க மாட்டார். ஜீன்ஸ், டீ ஷர்ட் சகிதம் இந்தி சினிமா ஹீரோ மாதிரிதான் இருப்பார்.

கருணாகரன் அவரை நெருங்கி 'சார், இங்கே பரமானந்தம் சார்ங்கிறது யாரு சார்?' என்று கேட்டிருக்கிறார்.

இங்கே ஒரு விஷயம். தபால் துறையில் பணிக்குச் சேர்ந்தாலே முதுகு லேசாக முன்னோக்கி வளைந்துவிடும். குரலில் ஒரு நடுக்கம் சேரும். யாரைப் பார்த்தாலும் ஒருவித பய உணர்வு உண்டாகும். வார்த்தைக்கு வார்த்தை 'சார்' என்ற வார்த்தை வாயிலிருந்து எச்சில் தெறிப்பதைப்போல் தெறிக்கும். அதற்கெல்லாம் கருணாகரனும் விதிவிலக்கல்ல. அதனால்தான் அவர் பேசிய ஆறு வார்த்தைகளில் மூன்று வார்த்தைகள் சார்.

பரமானந்துக்குக் கோபம் வந்துவிட்டது. காரணம்? ஆறு வார்த்தையுமே 'சார்' என்றுதான் இருக்க வேண்டும் என்று தோன்றியது அவருக்கு. அப்படியானால் பேச்சு மொழி என்ற தகவல்தொடர்பு சாதனத்தில் ஒரு பிரச்னை உண்டாகுமே? யாருக்கு அதைப் பற்றி கவலை? அதெல்லாம் அய்ப்பீயெஸ் பயிற்சியில் கற்பிக்கப்படவில்லை.

கோபத்தை உள்ளுக்குள் அடக்கிக்கொண்டு 'நீ யார்?' என்று உறுமினார் பரமானந்த்.

'கருணாகரன் சார்...'

‘ஏய்... நீ என்ன பெரிய ப்ரைம் மினிஸ்ட்ரா? திரும்பத் திரும்ப பேரையே சொல்றே? நீ யார்யா? என்ன வேல செய்றே?’

‘க்ரூப் டீ சார்...’

‘என்னது, க்ரூப் டீயா? ஏய்யா யூனிஃபாம் போடல? என்னய்யா நெனச்சுட்ருக்கே? பரமானந்தம்னு பேர சொல்ற? அதுவும் தப்பு தப்பா? விட்டா ப்பீயெம்ஜீயையே பேர் சொல்லி குப்புடுவே போல்ருக்கே?’

ப்பீயெம்ஜீ என்ற வார்த்தையைக் கேட்டதும் நடுங்கிவிட்டார் கருணாகரன்.

‘ஐயோ... இல்லை சார்... பேர் சொல்லல சார்... சார்னுதான் சார் கேட்டேன்...’

ம்ஹூம். இனி எந்த விளக்கமும் பயன்படாது. தபால் துறையைப் பொறுத்தவரை ஒருவருடைய பெயரைக் குறிப்பிடுவதென்பது மனிதர்கள் சிறுநீர் கழிக்கவும், காம விடாயைத் தீர்த்துக்கொள்ளவும், தங்கள் இனத்தை விருத்தி செய்யவும், சிலருடைய ஜீவனோபாயத்துக்கும் உபயோகமாய் இருக்கின்ற மர்ம உறுப்புகளின் பெயரைக் குறிப்பிடுவதற்குச் சமம். மற்றபடி பதவிப் பெயரோடு சார் சேர்த்துக் குறிப்பிடுவதே வழக்கம். பெருமாளுக்கு தன்னை எல்லோரும் ஸ்டெனோ சார், ஸ்டெனோ சார் என்று அழைக்கும்போது பற்றிக்கொண்டு வரும். அதிலும் மாயநாதன் வெறுமனே ‘ஸ்டெனோ’ என்று குறிப்பிடும்போது அவருடைய குரல்வளையைக் கடித்து ரத்தத்தைக் குடிக்க வேண்டும்போல் தோன்றும்.

‘ஸ்டெனோ, இங்க வாங்க... இந்த ஃபைலை டென் மினிட்ஸ்ல டைப் பண்ணிட்டு வாங்க பாப்பம்.’

இந்த வாக்கியத்திலுள்ள ‘ஸ்டெனோ’ என்பதைவிட ‘பாப்பம்’ என்ற வார்த்தையும், இதுபோல் மாயநாதன் அவ்வப்போது பயன்படுத்தும் ஒரு நூறு வார்த்தைகளும்தான் பெருமாளை நரமாமிசப் பட்சிணியாக மாற்ற முனைந்துகொண்டிருந்தது. ஆனால் இந்தக் கோபமெல்லாம் மனதுக்குள்தான்; வெளியே, பெருமாளும் மற்றவர்களைப்போலவே மகுடிக்குக் கட்டுப்பட்ட பாம்பாகத்தான் குழைந்து குழைந்து ஆடுவான்.

கருணாகரன் ஏற்கெனவே கடுமையான சர்க்கரை வியாதிக்காரர். படுத்த படுக்கையாகி, பிழைத்ததே மறுபிழைப்பாய் எழுந்தவர். ஆளைப் பார்த்தால் எலும்புக்கூடு நடந்து வருவதைப்போல் தோன்றும்.

அன்றைய தினம் தன் லீவை நீட்டிப்பதற்காகவும், மருத்துவச் சான்றிதழைக் கொடுப்பதற்காகவும்தான் இந்த அலுவலகத்திற்கு வந்திருக்கிறார். மீனம்பாக்கம் ஆரெம்மெஸ்ஸூம் பரமானந்தின் ஆட்சி எல்லைக்குள் வருவதுதான். தான் வேலை செய்யும் மீனம்பாக்கம் அலுவலகத்திலேயே சான்றிதழையும், விண்ணப்பத்தையும் கொடுத்துவிட்டுப் போயிருக்கலாம். ஆனால் நீண்ட கால விடுப்பாக இருப்பதால், நேரில் பார்த்துக் கொடுத்தால் நல்லது என கருணாகரனை அவருடைய ஹெட் க்ளார்க் இங்கே அனுப்பி வைத்திருந்தார் - கூடவே சில அலுவலகத் தபால்களையும் கொடுத்து.

யாரைக் குற்றம் சொல்வது? கருணாகரனுக்கு நேரம் சரியில்லை. உடனடியாக சஸ்பெண்ட் செய்யப்பட்டார். சீருடை அணியாமல் அலுவலகம் வந்தது (சீருடை இல்லாமல் அலுவலக தபால்களைக் கையில் வைத்திருப்பது குற்றம்), அய்ப்பீயெஸ் அதிகாரியிடம் தகாத

முறையில் நடந்துகொண்டது போன்றவை அவர் செய்த குற்றங்கள்.

இதை வாசிக்கும் நீங்கள் நினைப்பதுபோல் பரமானந்த் ஒன்றும் அவ்வளவு கெடு சித்தம் கொண்டவர் அல்ல. அவருடைய ஒரே சிந்தனை, இந்தியா. இந்த நாடு ஒரு வல்லரசாக வேண்டும்; ஜப்பானைப் போல் முன்னேறிய நாடாக மாறவேண்டும்; ரயில்கள் குறித்த நேரத்தில் வர வேண்டும்; தபால் பட்டுவாடாவில் ஒரு பிழைகூட நேரக்கூடாது; சாலைகளில் குப்பைக் கூளம் இருக்கக்கூடாது; பிச்சைக்காரர்கள் உடல் உழைப்பில் ஈடுபடுத்தப்பட வேண்டும்; குற்றவாளிகள் ஒரே வாரத்தில் தண்டிக்கப்படவேண்டும்; இத்யாதி, இத்யாதி என பல கனவுகளைக் கொண்டிருந்தார் பரமானந்த்.

இதெல்லாம் பெருமாளுக்குத் தெரிய வந்தது எப்படியென்றால், பரமானந்துக்குப் பெருமாளை மிகவும் பிடித்துப்போய்விட்டதால்தான். பெருமாளின் வேலைத் திறமையால் அல்ல; தினமும் அவன் முகச்சவரம் செய்துகொண்டதே அதற்குக் காரணம்.

தபால் துறையைப் பொறுத்தவரை தினசரி முகச்சவரம் என்பது குமாஸ்தாக்களின் சாத்திய எல்லைக்கு அப்பாற்பட்டதாகவே இருந்தது. எல்லோருமே எப்போதுமே ஐந்து நாள் தாடியோடு இருப்பது எங்ஙனம் சாத்தியமென்பது பெருமாளுக்கு சற்று ஆச்சரியத்தை அளித்த விஷயம். கறாராகப் பார்த்தால் அதை தாடி என்று சொல்வது இலக்கணப் பிழையாகவே அமையும். வறண்ட பூமியில் கோரைப் புல் முளைத்ததுபோல் முள்முள்ளாக நீட்டிக்கொண்டிருக்கும் அதற்குத் தமிழில் இன்னும் ஒரு பெயர் சூட்டப்படவில்லை.

ஆனால் குமாஸ்தாக்களின் பக்கமும் நியாயம் இல்லாமல் இல்லை; அய்ப்பீயெஸ் என்றால், அலுவலகத்திலிருந்து ஒரு கிலோமீட்டரில் வீடு. அலுவலகம் சென்று வர இலாகா அளித்துள்ள கார். அதற்கு டிரைவர். அப்படியே தாமதமாகப் போனாலும் வருகைப் பதிவேடோ, அதைக் கண்காணிக்கும் ஹெட் க்ளார்க்கோ கிடையாது. அப்படிப்பட்ட தனிக்காட்டு ராஜாக்களினால் மட்டுமே தினசரி சவரம் சாத்தியம். குமாஸ்தாக்களுக்கு அப்படியில்லை.

ஆனால் கண்ணாயிரம் பெருமாளை எவ்வளவு நெருக்கடிகள் வந்தாலும் தினசரி சவரம் செய்துகொள்வதிலிருந்து தடுக்க முடியாது.

தேசம் நன்றாக இருக்க வேண்டும் என்றால் முதலில் நமது தோற்றம் நன்றாக இருக்க வேண்டும் என்பது பரமானந்தின் கருத்து. இந்த விஷயத்தில் அவருக்கு மாயநாதனின் மீதுகூட சிறிது வருத்தம் உண்டு. மிகக் கடுமையான உழைப்பாளி. இவரைப்போல் பத்து பேர் இருந்தால் போதும்; இந்த ஆரெம்மெஸ்ஸைத் துப்புரவாக்கி விடலாம். ஆனால், தோற்றத்தில் அக்கறை காட்ட மாட்டார். தினசரி சவரம் செய்துகொள்வதற்குக் கூடவா ஒருவரைக் கட்டாயப்படுத்த முடியும்?

பெருமாள் ஸ்மார்ட்டாக இருக்கிறார். வேலையில்தான் ஈடுபாடில்லை. ஆனால் சொல்லி வேலை வாங்க முடியும். அந்த வகையில் பரவாயில்லை.

அந்த அலுவலகத்தின் அருகில் எந்தக் கட்டிடங்களும் இல்லை - அதன் இடது கைப்பக்கத்தில் சற்றுத் தள்ளியிருந்த ரயில் நிலையத்தைத் தவிர.

மற்ற திசைகளில் வெறும் பொட்டல் காடு என்பதால், ரயில் நிலையத்துக்கு வந்துபோகும் மக்கள் சிறுநீர் கழிப்பதற்கு உபயோகப்படுத்திக்கொண்டது அந்த அலுவலகத்தின் பக்கவாட்டுச் சுவர்களைத்தான். இந்தியாவின் கட்டுக்கடங்காத ஜனத்தொகையையே அந்தச் சுவர்களும் பிரதிபலித்துக்கொண்டிருந்தன.

அலுவலகக் கட்டிடத்தின் முதல் மாடியில் சுவரையொட்டியுள்ள அறைதான் பெருமாளுடையது. பெருமாளின் நாசிக்கு முகரும் தன்மை மிகவும் குறைவு என்பதால் சுவாசிக்கும் பணிக்கு மட்டுமே நாசி பயன்படுகிறது என்றாலும், அதையும் மீறி 'குப், குப்' என்று வந்து நாசியை அடைத்தது மூத்திர நாற்றம். பரமானந்திற்கு இந்தப் பிரச்னை இல்லை. அவருடைய அறை குளிர்சாதனம் பொருத்தப்பட்டு எப்போதும் மூடியே இருக்கும்.

அலுவலகத்தைச் சீர்திருத்தும் முதற்கட்டமாக, வராந்தா நெடுகிலும் பூந்தொட்டிகள் அமைக்க வேண்டுமென முடிவு செய்த பரமானந்த், பெருமாளை அழைத்துக்கொண்டு பூந்தொட்டி வாங்கப் புறப்பட்டார். நசநசவென்று அன்றைய தினம் மழை பெய்துகொண்டிருந்தது. 'மழை நின்றதும் நாளைக்குப் போகலாமே?' என்று சொல்லிப் பார்த்தான் பெருமாள். இதுபற்றி நெப்போலியன் போனபார்ட் கூறிய புகழ்பெற்ற வாசகத்தை அவனிடம் கூறினார் பரமானந்த்.

சமீபத்தில்தான் பரமானந்துக்கு திருமணம் ஆகியிருந்தது. இருந்தும் இந்தியாவை வல்லரசாக்கும் அவரது முயற்சியில், இடையில் குறுக்கிட்ட மணவாழ்வு எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்த முடியவில்லை. எனவே, மூன்றாவது செட் என்று அழைக்கப்படும் நடு இரவு ஷி.்ப்ட்டைக் கண்காணிப்பதற்காக மீனம்பாக்கம் ஆரெம்மெஸ்ஸுக்குப் போய்விடுவார் பரமானந்த். அதிலும், வாரத்தில் மூன்று நான்கு தினங்கள்! செட் முடிய காலை ஐந்து மணி ஆகும். ஆனால், காலையில் பார்த்தால் ஒன்பது மணிக்கெல்லாம் அலுவலகத்தில் அமர்ந்து .்பைல்களைப் பார்த்துக்கொண்டிருப்பார்.

இதற்கெல்லாம் பெருமாள் தன்னுடன் வருவதில்லை என்று ஒரு குறை பரமானந்துக்கு இருந்தது. ஸ்டெனோ என்றால் எப்போதும் அதிகாரியின் கூடவே இருக்க வேண்டாமா? நாளாக நாளாக இந்த விஷயமே அவர்கள் உறவில் விரிசலை ஏற்படுத்தியது. மேலும், இந்த அலுவலகத்திற்குத் தனியாக ஒரு டைப்பிஸ்ட் தேவையில்லை என்று அவரைத் திருப்பி அனுப்பிவிட்டு, டைப் செய்யப்பட வேண்டிய .்பைல்களையெல்லாம் பெருமாளுக்கே அனுப்பச் சொல்லிவிட்டார் பரமானந்த்.

மாயநாதனுக்கு அடித்தது யோகம். இதுவரை பரமானந்துக்கு மட்டுமே கட்டுப்பட்டிருந்த பெருமாள், இப்போது எல்லா .்பைல்களுக்கும் மாயநாதனுக்கு பதில் சொல்ல வேண்டி வந்தது. 20 பக்கம், 30 பக்கமென்று டைப் செய்யப்பட வேண்டிய காகிதக் கற்றைகளைக் கொடுத்து அரை மணியில் வேண்டும், ஒரு மணியில் வேண்டும் என்று பெருமாளை விரட்டிக் கொண்டிருந்தார் மாயநாதன்.

இதனால் அலுவலகம் முடிந்த பிறகும் பெருமாள் வீட்டுக்குக் கிளம்ப முடியவில்லை. 'ப்பீயெம்ஜீ இந்த .்பைலுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார். இப்போதே இது ஸர்க்கிள் ஆ.்பீஸ் போக வேண்டும்'

என்பார் மாயநாதன். அடித்து முடிக்க இரவு எட்டரை ஆகும்.

ஆனால் அந்த ஃபைலினால் தபால் துறைக்கோ, இந்திய மகாஜனங்களுக்கோ எந்தப் பயனும் இருக்காது.

***

**பின்குறிப்புகள்:**

1. அலுவலக வராந்தாவில் பரமானந்த் வைத்த பூந்தொட்டிகளிலிருந்து வந்த மணம், அலுவலகத்தின் வாசலைத் தவிர்த்து மற்ற மூன்று பக்கச் சுவர்களிலிருந்தும் வந்த மூத்திர நாற்றத்தோடு கலந்து ஒரு தினுசாய் வீச ஆரம்பித்தது. வாயிறபக்கம் மூத்திரம் அடிப்பதை மக்கள் நாகரிகம் கருதித் தவிர்த்துவிட்டனர். மொத்தத்தில், அரை போத்தல் ஓல்ட் மாங்க்கைக் குடித்துவிட்டு வாந்தியெடுத்தால் எப்படி நாறுமோ அப்படி நாறிக்கொண்டிருந்தது அந்த ஆஃபீஸ். அதன் பிறகு, கண்ணாயிரம் பெருமாளுக்கு புஷ்பத்தைப் பார்க்கும்போதெல்லாம் அந்த மூத்திர நாற்றத்தின் ஞாபகமே வந்தது. Uninary infection போல urinary obsession!

2. ஒரு நாள் சிறுநீர் கழிப்பதற்காக கழிப்பறைக்குச் சென்றிருந்தான் பெருமாள். அவன் சிறுநீர் கழிப்பதில் ஒரு விசேஷ அம்சம் என்னவென்றால், சிறுநீர் கழித்து முடிக்க அவனுக்கு நீண்ட நேரம் ஆகும். அந்தக் குறிப்பிட்ட தினத்தில் பெருமாள் கழிப்பறையில் தன் சாதனத்தைப் பிடித்தபடி நின்றுகொண்டிருந்தபோது, அவன் அறையிலிருந்த தொலைபேசி மணி அடித்தது. அந்தத் தொலைபேசியின் ‘எக்ஸ்டென்ஷன்’ பரமானந்தின் அறையிலிருந்தது. அதிகாரிகளுக்கு வரும் எந்தத் தொலைபேசி அழைப்பையும் அவர்கள் எடுக்க மாட்டார்கள். ஸ்டெனோதான் அதை எடுத்து, பேசுபவர் யார் என விசாரித்து, அதிகாரியின் ‘பஸ்ஸரை’ அழுத்தி, ‘இன்னார் பேசுகிறார், இணைப்பைத் தரலாமா?’ என்று கேட்டு, தரலாம் என்றால் தரலாம்; வேண்டாம் என்றால் ‘அதிகாரி வெளியே சென்றிருக்கிறார்’ அல்லது ‘மீட்டிங்கில் இருக்கிறார்’ என்பதுபோல் சமயோஜிதமாக ஏதாவது சொல்லிச் சமாளிக்க வேண்டும்.

   பெருமாள் தன் இருக்கையில் வந்து அமர்ந்தபோது பரமானந்தின் அழைப்புமணி அடித்தது. அந்த மணிச் சத்தத்துக்குச் செல்ல வேண்டியது அவருடைய ஆர்டர்லி. உள்ளே சென்ற ஆர்டர்லி நேரடியாக பெருமாளிடம் வந்து ‘உங்களைத்தான் கூப்பிடுகிறார்’ என்றான்.

   பெருமாள் நோட்டுப் புத்தகத்தையும் பேனாவையும் எடுத்துக் கொண்டு உள்ளே சென்றபோது பரமானந்த் கடுகடுத்த முகத்துடன் கேட்டார்.

   ‘என்ன பெருமாள், உங்கள் ஃபோன் வேலை செய்யவில்லையா?’

   ‘செய்கிறதே சார்.’

   ‘அப்படியா, ரொம்ப நேரம் அடித்துக்கொண்டே இருந்ததே, எங்கே போயிருந்தீர்கள்?’

பெருமாள் இதற்கு பதில் எதுவும் சொல்லவில்லை.

ஆனால் ஒரு ஆண்டு காலம் அலுவலகம் பக்கமே அவன் தலை காட்டவில்லை. முறையாக, விடுப்புக்கான விண்ணப்பமும் அனுப்பவில்லை...

***

# கதை : ஏழு

கண்ணாயிரம் பெருமாள் தனது நண்பர்கள் மணி, ரவி, பாலு, கோபாலகிருஷ்ணன், கல்யாண், அ்ஃப்ஸல் முதலியோரைச் சந்திக்கும் ஸ்தலம், மெரீனா பீச்சிலுள்ள கலங்கரை விளக்கத்தின் கீழேயுள்ள கட்டைச் சுவர். இவர்களைத் தவிர மேலும் ஒரு டஜன் நண்பர்கள் உண்டு. அவர்கள் இந்த நாவலில் இடம்பெறாதபடியால், பெயர்கள் தவிர்க்கப்பட்டன என அறிக. கட்டைச் சுவரின் உயரம் ஒரு அடிதான் என்பதால் வரிசையாக அமர்ந்து பேசவும் குடிக்கவும் வசதியாக இருக்கும்.

ஃபங்குலா மேற்கண்ட ஸ்தலத்துக்கு ஒருமுறைகூட வந்ததில்லை. காரணம், பீச் கோஷ்டி வேறு, டிஸ்கோ கோஷ்டி வேறு. இரண்டும் சேர்ந்தால் குழப்பமாகிவிடும். அதற்காக டிஸ்கோ கோஷ்டியென்று தனியாக ஒன்று இருப்பதாக அர்த்தமில்லை. ரவி, பாலு, கல்யாண், அஃப்ஸல் இவர்களோடு ஃபங்குலாவும் சேர்ந்தால் அதுதான் டிஸ்கோ கோஷ்டி. இவர்களோடு பெருமாளும் அவ்வப்போது சேர்ந்துகொள்வான். ரவி, பாலு, அஃப்ஸல் மூவருக்கும் தோழிகள் அதிகமுண்டு.

சனிக்கிழமை இரவே டிஸ்கோ செல்வதற்கு உகந்த தினம் என்பதால் அன்றைய தினம் டிஸ்கோ கோஷ்டியினர் பீச்சில் மூச்சு முட்டக் குடிப்பதில்லை. மரியாதை நிமித்தம் ஒரே ஒரு போத்தல் பியர் அருந்துவார்கள். அதுவும்கூட மிகத் தாமதமாகவே துவங்கப்படும். பத்தரை மணியளவில், தூக்கம் வருவதைப் போல் கொட்டாவி விட்டுவிட்டு, ஏதோ அன்றைய இரவு முடிந்துவிட்டதைப்போல் அவரவர் இருப்பிடத்துக்குக் கிளம்புவதான பாவனையில் புறப்படுவார்கள்.

இந்த இடத்தில் சென்னையிலுள்ள டிஸ்கோக்கள் எங்கெங்கு உள்ளன என்று அறிந்துகொள்வது நலம். அவ்விபரம்:

| டிஸ்கோ பெயர் | ஓட்டல் பெயர் |
|---|---|
| டப்ளின் | பார்க் ஷெரட்டன் |
| பாஷா(உச்சரிப்பு: ப்பாஷா) | தெ பார்க் |
| ஸ்பார்க்ஸ்ச் | வேரா |
| ஃப்ளேம்ஸ் | லெ மெரிடியன் |
| பைக் அண்ட் பேரல்ஸ் | நியு ரெஸிடென்ஸி |

நண்பர்கள் முதலில் செல்வது, டப்ளின். அங்கே ஆடிக் களைத்த பிறகு, பன்னிரண்டு மணிக்கு மேல், பாஷா. பொதுவாக ஸ்பார்க்ஸ் மற்றும் ஃப்ளேம்ஸை நண்பர்கள் தவிர்த்துவிடுவதே வழக்கம். ஸ்பார்க்ஸ் மிகவும் சல்லிசாக இருப்பதால், வரும் கூட்டமும் அதற்குத் தகுந்தாற்போலவே

இருக்கும். ஃப்ளேம்ஸ், அதற்கு நேரெதிர். பெரும் செல்வந்தர்களின் புத்திர புத்திரிகளே வருவதால் அடிக்கடி சண்டை சச்சரவுகள் நிகழும். கண்ணாடிக் கோப்பைகள் உடைபடும்.

அதிலும், ஃபங்குலா ஃப்ளேம்ஸுக்குள் நுழைந்துவிட்டால் கேட்கவே வேண்டாம். சச்சரவில்லாமல் அங்கிருந்து கிளம்பியதேயில்லை. எவனாவது ஃபங்குலாவை இடித்துவிட்டு ஸாரி சொல்லியிருக்க மாட்டான். அல்லது, கூட்ட நெரிசலில் அவன் கோப்பையிலிருந்த மது இவன் மேல் ஒரு துளி சிந்தியிருக்கும்.

யார் என்று பார்த்து வைத்துக்கொள்வான். சரக்கைக் கோப்பையில் போட்டுக்கொண்டு அவன் பக்கத்தில் போய் நின்று ஆடாமல் அசையாமல் கோப்பையைக் கைகளிலிருந்து விடுவிடுப்பான். ஜலீரென்று விழுந்து சுக்குநூறாய் உடையும் கோப்பை.

ஃப்ளேம்ஸில் ஒரு லார்ஜ் ஜானி வாக்கர் - ரூ.1900/- அதைப் பற்றி யாருக்குக் கவலை? பைக் அண்ட் பேரல்ஸ் பரவாயில்லை நடுத்தரம்.

பெருமாளுக்கு அந்தச் சூழலே மிகவும் போதையூட்டக்கூடியது என்பதால் (சூழலுக்கு பாடபேதம் 'பெண்கள்' என வாசிக்க), மற்ற விஷயங்களை அவன் சரியாக கவனிப்பதில்லை. ஆனால் கல்யாண் அப்படியில்லாமல் அந்தச் சூழலை நன்கு அவதானித்துக் கூறிய விஷயங்கள் பின் வருமாறு:

1. டப்ளினில் வரும் பெண்கள் அத்தனை பேரும் வெள்ளைத் தோலாக இருந்தாலும் ஆண்களில் பாதிப்பேர் கறுப்புத் தோலாக உள்ளனர். ஆனால் பாஷாவில் அப்படியில்லை. எல்லோருமே வெள்ளைத் தோல்.

2. டிஸ்கோக்களுக்கு வரும் ஆண், பெண் இருபாலரும் அப்பன் காசைக் கரியாக்கும் பேர்வழிகள். சொந்த உழைப்பு கிடையாது. சேட்டுகள், திரையுலகப் பெரும்புள்ளிகள், அய்யேயெஸ், அய்ப்பீயெஸ் அதிகாரிகள், சென்னையின் பிரபல மருத்துவர்கள், இந்திய அரசுக்கு கோடி கோடியாய் வரி பாக்கி வைத்திருப்பவர்கள், வருமான வரி கட்டாமல் அந்தப் பணத்தைச் செலவு செய்யும் வழி தேடுவோர் போன்றவர்களின் புத்திர, புத்திரிகளே இவ்விடங்களுக்கு வருகிறவர்கள். ஆனால் இந்த ஸ்தலங்களில் தொலைக்காட்சி நடிகர்களை மட்டும் உள்ளே சேர்ப்பதில்லை. காரணம்: அவர்கள் பெண்களோடு (சக நடிகைகள்) வருவது மிகவும் எளிது என்பதால் சுலபமாக உள்ளே நுழைந்துவிடுவார்கள். ஆனால் இரவு முழுவதும் ஒரே பியரை சாப்பிட்டு அந்த நட்சத்திர ஓட்டல்களே போண்டியாகிற மாதிரி செய்துவிடுவார்கள். ஒரு நடிகர் மூன்று பெண்களுடன் வந்து இரவு முழுவதும் ஆடிவிட்டு ஆயிரம் ரூபாய் பில் கொடுப்பார்! அதனால் தொலைக்காட்சி நடிகர் என்றால் தந்திரமாகத் தவிர்த்து விடுவார்கள். ஒரு முறை கல்யாண் 26,000 ரூபாய்க்கு பில் கொடுத்ததாகக் கூறினான். பணம் செலுத்தும்போது காலை மணி ஏழு!

ஆனால் மற்றவர்களுக்குத்தான் 26,000. கல்யாண் அங்கே உறுப்பினர் என்பதால் அவனுக்கு 16,000தான்.

'டிப்ஸ் எவ்வளவு கொடுத்தாய்?' என்று கேட்டான் பெருமாள்.

'பத்து சதவிகிதம். 1600 ரூபாய்.'

அப்போதுதான் பெருமாளுக்குப் புரிந்தது, அவனையும் அவனுடைய

இலக்கிய நண்பர்களையும் கண்டால் ஏன் லெதர் பார் சிப்பந்திகள் நெளிந்தவண்ணம் ஓடி ஒளிகிறார்கள் என்று.

3. இந்த டிஸ்கோக்களிலும், பார்களிலும் கூடும் கூட்டம் அளவுக்கு மிஞ்சி விடுவதால் பார் பணியாளர்களால் சமாளிக்க முடிவதில்லை. சாப்பிடுவதற்கான உணவு வகைகள் கேட்டால் உடனேயே மறுத்து விடுகின்றனர். 'ஆளுக்கு ஒரு லார்ஜ்' என்று ஆர்டர் கொடுத்தால் 'ஒரே தடவையில் நாலு லார்ஜ் கொடுத்துவிடுகிறோம். எல்லோரையும் கவனிக்க வேண்டியிருக்கிறது' என்கிறார்கள். நடன அரங்கில் கூட்டம் பிதுங்கி வழிகிறது.

4. பெண்களின் ஆடைகளைப் பார்த்தால் லாஸ் வேகாஸ் பிச்சை வாங்க வேண்டும் போலிருக்கிறது.

5. பின்வருவதுதான் கல்யாணின் மிக முக்கிய அவதானம்: இங்கே வருபவர்களில் 25 சதவிகிதத்தினர்தான் ஆண்கள். 75 சதவிகிதம் பெண்கள்! ஜோடியாக ஆட ஆண்கள் இல்லாமல் தனியாக ஆடிக் கொண்டிருக்கின்றனர்! தென்னிந்திய சினிமாவின் பாடல் காட்சிகளில் நடனமாடும் பெண்களைக் கவனித்திருக்கிறீர்களா? அவர்களைப் போன்றே இந்தப் பெண்களுக்கும் தொப்பை விழுந்திருக்கிறது. காரணம்: அதிகமான குடி.

6. இது எண்: 5ஐ விட முக்கியத்துவம் வாய்ந்த அவதானம்; டப்ளின், பைக் அண்ட் பேரல் போன்ற இடங்களில் மதியம் ஒரு மணிக்கே வந்து பார் கவுண்டர் அருகே உள்ள உயரமான தனி இருக்கைகளில் அமர்ந்து குடிக்கின்றனர் பெண்கள்; 18 வயது முதல் 25 வரையிலான பெண்கள். தனியாகவே வருகிறார்கள். குடித்தபடியே படிக்கிறார்கள். குடிப்பது, ஸ்க்ரூ ட்ரைவர் போன்ற காக்டெய்ல் சரக்குகள்.

7. குடி, டான்ஸ், பேச்சு, உணவு, சிகரெட் என்று இரவு மூன்று மணி வரை போகிறது. அதற்கு மேல் கிளம்பிவிடுகிறார்கள்.

'செக்ஸ்?' என்று கேட்டான் பெருமாள்.

'அது அவரவர் சாமர்த்தியம். பெரும்பாலும் யாரும் அப்படிச் செல்வதாகத் தெரியவில்லை. வார விடுமுறையில் குடிக்க வேண்டும். டான்ஸ் ஆட வேண்டும். அவர்களுக்கு அது போதும்' என்றான் கல்யாண்.

இதைச் சொல்லும்போது அவன் முகத்தில் இனம் புரியாததொரு கைப்புணர்வு தெரிந்தது. ஒருவேளை அது பெருமாளின் கற்பனையாகவும் இருக்கலாம்.

ஆனால் இந்த விஷயத்தில் ரவி கில்லாடி. அவன் சென்ற வாரம் ஒரு வோல்வோ கார் வாங்கியிருக்கிறான். இதுவே ராமாக இருந்தால் நண்பர்களை அழைத்து ஒரு பார்ட்டி கொடுத்திருப்பான். ஆனால் ரவி செய்தது வேறு. ஒவ்வொரு தோழியிடமும் 'புதுக் கார் வாங்கியதும் உன்னிடம்தான் முதல்முதலாகச் சொல்கிறேன். உன்னோடு ஒரு லாங் ட்ரைவ் போக வேண்டும்' என்று சொல்லியிருக்கிறான். தோழிக்கும் ஆசை வராதா என்ன? இப்படி ஒரு புதுக் கார் வாங்கினால் பத்து பெண்களோடு லாங் ட்ரைவ் செல்வான். லாங் ட்ரைவ் போய்விட்டு உடனே திரும்ப முடியுமா? ஒரு நாள் அங்குள்ள பீச் ரிஸார்ட்டில் தங்கி 'சிரம பரிகாரம்' செய்துகொண்டுதானே திரும்ப வேண்டும்?

8. இப்பேர்ப்பட்ட நட்சத்திர ஓட்டல்களில்கூட நாம் கவனமாக இருக்க வேண்டிய விஷயம் ஒன்று உண்டு. அது உணவு. உதாரணமாக பிரியாணியை ஆர்டர் செய்யவே கூடாது.

ஒரு புகழ்பெற்ற ஆங்கிலேயே கிரிக்கெட் ஆட்டக்காரர் சென்னையின் பிரபலமான நட்சத்திர ஓட்டலில் பிரியாணி கேட்டிருக்கிறார். வந்த பிரியாணி வெளியே சூடாகவும், உள்ளே குளிர்ந்தும் இருந்திருக்கிறது. முதல் நாள் செய்து மீந்துபோனதைக் குளிர்பதனப் பெட்டியில் வைத்திருந்து மறுநாள் சூடேற்றிக் கொடுத்திருக்கின்றனர். இதற்கு ஒரு சில விதிவிலக்குகளும் உண்டு. அதில் ஒன்று; சோளா ஓட்டல் பெஷாவரி உணவகம். மணக்கும் பிரியாணி இங்கே எப்போதும் சூடாகக் கிடைக்கும். மீந்ததை சூடாக்கிக் கொடுப்பதில்லை.

ஒரு நாள் பெஷாவரியில் அமர்ந்து கண்ணாயிரம் பெருமாளும் கல்யாணும் இது பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். அப்போது ‘தாஜ் ஓட்டல் காஃபி ஷாப்பில் கிடைக்கும் கில்லி பிரியாணியும் நன்றாக இருக்கும்’ என்றான் கல்யாண். அச்சமயம் அங்கே வந்த ‘கேப்டன்’ நரசிம்மன் (பெஷாவரி செஃப் நரசிம்மனைக் கேப்டன் என்ற அடைமொழியோடுதான் அழைப்பது வழக்கம்) ‘எத்தனை மணிக்கு சாப்பிட்டீர்கள்?’ என்று கேட்டார்.

‘காலை நான்கு மணி இருக்கும்’ என்றான் கல்யாண்.

‘சார், அந்த நேரத்தில் சாப்பிட்டால் எந்த பிரியாணியும் நன்றாகத்தான் இருக்கும்’ என்று ஒரே போடாகப் போட்டார் நரசிம்மன்.

***

சென்னையிலுள்ள டிஸ்கோக்களைப் பற்றிய மேற்கண்ட குறிப்பை எழுதிவிட்டு மணியிடம் சொன்னான் பெருமாள். ‘ஆகா, அப்படியானால் படித்துப் பார்க்க வேண்டுமே?’ என்றான் மணி.

பார்க் ஷெரட்டனின் வெஸ்ட் மின்ஸ்ட்டர் பாரில் பெருமாளும் மணியும் வழக்கமாக அமரும் இடத்தில் - அதாவது, நீச்சல் குளத்துக்கு எதிரில் - வேறு ஒரு பருமனான மனிதர் அமர்ந்திருந்தார். அது பிரச்னையல்ல. ஆனால் அவர் கைத்தொலைபேசியை வைத்துக்கொண்டு தொடர்ந்து கத்திக்கொண்டே இருந்ததுதான் தலைவலியாய் இருந்தது. மட்டுமல்ல, அவர் பேச்சை நிறுத்தினாலும், அழைப்பு வந்த வண்ணமாக இருந்தது. ஒரு கட்டத்தில் மணி எழுந்து பாருக்குப் பின்புறமிருந்த வாசல் வழியே நீச்சல் குளத்தின் அருகே சென்று அமர்ந்தான். குளிப்பவர்கள் வந்து ஓய்வெடுக்கும் சாய்வான இருக்கை அது. எனவே ஒரு காலை மடித்துத்தான் அமர முடியும். அப்போது பார் பணியாளர் செந்தில் வந்து ‘இங்கே வேர்க்குமே?’ என்றார். ‘பரவாயில்லை. அந்த மனிதரின் கூச்சல் தாங்க முடியவில்லை’ என்றான் மணி.

‘அவர் வரும்போதெல்லாம் இப்படித்தான் புகார் வருகிறது. அவரிடமும் அதைத் தெரிவித்தோம். அதற்குப் பிறகுதான் கொஞ்சம் கம்மியாகி இருக்கிறது.’ இது செந்திலின் பதில்.

ஒரு வெள்ளைக்காரப் பெண் தடாலென்று குளத்தில் குதித்தார். சுற்றுமுற்றும் பார்த்தான் பெருமாள். பத்து பதினைந்து வெள்ளைக்காரப்

பெண்கள். நீச்சல் உடையில் பார்த்தும் அவனுள் எந்தச் சலனமும் இல்லை. ‘அடடா, திருந்திவிட்டோம் போலிருக்கிறதே’ என்று தன்னையே மெச்சிக்கொண்டான். ஆனால் ஒரு சந்தேகம் எழுந்தது. இப்படி நீச்சல் குளத்தின் அருகே அமர்ந்து குடிக்கலாம் என்றால் பாரிலுள்ள அத்தனை பேரும் இங்கே வந்துவிடுவார்களே?

மணியிடம் கேட்டான்.

‘அடப்பாவி... நாம் இங்கே வரும்போது நடந்ததை கவனிக்கவில்லையா?’ என்றான் மணி.

பிறகு அவன் விளக்கியதும்தான் விஷயம் புரிந்தது. பெருமாளும் மணியும் நீச்சல் குள வளாகத்தினுள் நுழையும்போதே அதன் பொறுப்பாளர் மணியிடம் ஏதோ சொல்ல ஓடி வந்தார். ஆனால் செந்தில் அவரைத் தடுத்துவிட்டார். அது என்னவென்றால், ‘இங்கே அனுமதி இல்லை’ என்று சொல்லவே அந்தப் பொறுப்பாளர் வந்திருக்கிறார். அதற்குத்தான் செந்தில் ‘இவர்களைத் தடுக்காதே’ என்று கூறியிருக்கிறார். ஆக, இந்தச் சலுகை இவர்களுக்கு மட்டும்தான்.

அப்போது பெருமாளுக்கு எதையோ குறித்துக்கொள்ள பேனா தேவைப்பட்டது. மணியிடம் சொல்லிவிட்டு அவர்கள் முன்பு அமர்ந்திருந்த இருக்கைக்கு வந்தான். வந்த இடத்தில் ஒரு அற்புதக் காட்சி! அவர்களின் இருக்கைக்குப் பக்கத்து இருக்கைகளில் இரண்டு தேவதைகள்... சே. சற்று முன்னர் நாம் திருந்திவிட்டோம் என்று நினைத்ததுதான் எவ்வளவு தவறு என்று நினைத்துக்கொண்டான் பெருமாள். வெள்ளைத்தோல் என்பதால்தான் ஈர்ப்பு ஏற்படவில்லை என்று புரிந்தது. இதோ... அவன் முன்னே அமர்ந்திருந்த கோதுமை நிற அழகுதான் என்னமாய் அவனை வீழ்த்துகிறது!

ஓடோடி வந்தான் மணியிடம். விஷயத்தைக் கூறி ‘வா, உள்ளே போய்விடலாம்’ என்றான்.

‘ஐயோ... ஐயோ... உட்கார்ரா பெருமாள்’ என்று தலையில் அடித்துக்கொண்டான் மணி.

பெருமாளின் கவனம் முழுக்க உள்ளேயே இருந்தது. அடிக்கொரு தடவை ‘இங்கே வேர்க்கிறது மணி’ என்று சொல்லிக்கொண்டிருந்தான். (நிஜமாகவே வேர்த்தது. அதிலும் அந்த தேவதைகளை நினைத்தபோது புழுக்கம் சற்று அதிகமானதுபோல் தோன்றியது).

‘சரி, இனிமேல் உன்னைச் சமாளிக்க முடியாது’ என்று சொல்லிக் கொண்டே எழுந்தான் மணி.

ஒரு தேவதைக்கு வயது 25 இருக்கும். மற்றொரு தேவதைக்கு அதைவிட இரண்டு மூன்று வயது குறைவாக இருக்கும். இருவரும் புகைத்தபடி குடித்துக்கொண்டிருந்தனர். செந்திலை அழைத்து ‘அந்தப் பெண்கள் குடிப்பது என்ன சரக்கு?’ என்று சன்னமான குரலில் வினவினான் பெருமாள்.

‘வோட்கா’ என்றார் செந்தில், சிரித்தபடி.

ஆனால் ஒரு ஆச்சரியம்... மூன்று மணிக்கு பெருமாளும் மணியும் கிளம்பும்வரை அந்தப் பருமனான மனிதரின் கூச்சல் அவர்கள் காதுகளை

எட்டவே இல்லை. ‘பெண்ணுக்குத்தான் எத்தனை சக்தி! ஒரு மைல் தூரம் கேட்கக்கூடிய குரலையே கேட்க முடியாத அளவுக்கு எங்கள் செவிகளை immune ஆக்கிவிட்டதே... இப்படிப்பட்ட அற்புதத்தை சிருஷ்டித்த கடவுளே, உனக்கு நன்றி!’ என்று மனத்துக்குள் சொல்லிக்கொண்டான் பெருமாள்.

***

**பின்குறிப்புகள்:**

1. டிஸ்கோக்களில் ஆண்களைப் பெண் துணையின்றி அனுமதிப்பதில்லை. "Stags not allowed' என்று சொல்லி மறுத்துவிடுகிறார்கள். பாலு, ரவி மற்றும் அஃப்ஸலுக்கு நிறைய தோழிகள் உண்டென்பதால் இந்த கோஷ்டிக்குப் பிரச்னையில்லை. ஆனால் கண்ணாயிரம் பெருமாள்தான் இதில் வழிதவறிய ஆட்டுக் குட்டியைப்போல் ‘ஙே’ என்று விழித்துக்கொண்டு நிற்பான். ஆரம்பத்தில் அவன் இந்த ஆட்டுக்குட்டி பிம்பத்தை உடைக்கவே முயன்றான். ஆனால் எவ்வளவு முயற்சிக்கிறானோ அந்த அளவுக்கு ‘ஙே’ அதிகமாகிறது என்று புரிந்ததும் அம்முயற்சியைக் கைவிட்டு விட்டான்.

2. Dancing is the normal prelude to intercourse.

Sylvia Plath: The Journals

***

# கதை : எட்டு

ஆண் அதிகாரிகளைவிட பெண் அதிகாரிகளிடம் மாட்டுவதுதான் மிகப் பெரிய சோதனை என்பது கண்ணாயிரம் பெருமாளின் அனுபவம். அந்தச் சோதனை அவன் அஞ்சல் பொருள் கிடங்கு என்ற அலுவலகத்தில் வேலை பார்த்தபோது இந்திராணி என்ற சூப்ரண்ட் வடிவத்தில் வந்தது.

நான்கு அடி ஒன்பது அங்குல உயரம். கருப்பு நிறம். மினு மினுப்பே இல்லாத வறண்ட சருமம். மூன்று இஞ்ச் உயர ஹை ஹீல்ஸ். உள்ளாடை தெரியும் மெல்லிய பருத்திப் புடவை. கணுக்காலுக்கு ஒரு சாண் மேலேயே நின்றுவிடும் உள்பாவாடை. கருத்த சருமத்துக்குச் சற்றும் பொருத்தமில்லாமல் அப்பிய முகப்பவுடர். இப்படி ஒரு அலங்காரத்துடன், தன்னை ஏதோ ஒரு ஆஃப்ரிக்க நாட்டின் முடிசூடா ராணியென எண்ணிக்கொண்டு வலம் வந்தார் அந்த இந்திராணி. அஞ்சல் பொருள் கிடங்கில் பதவியேற்ற முதல் தினமே நான்கு கடைநிலை ஊழியர்களுக்கு சஸ்பென்ஷன் கொடுத்து தனது அதிரடி நிர்வாகத்தைத் துவக்கி வைத்தார்.

இந்த அஞ்சல் பொருள் கிடங்கு அமைந்திருக்கும் கட்டிடம் ஒரு பூத் பங்களாவையே ஞாபகப்படுத்துவதாக இருந்தது. அவ்வளவு புராதனமான கட்டிடம். யாரோ சுல்தானைப் போன்ற ஒரு ஜமீன்தார் இங்கே வாழ்ந்திருக்க வேண்டும். ஒரு அரண்மனைக்கு உண்டான அத்தனை அடையாளங்களும் அங்கிருந்தன. உயரமான மேற்கூரை. சுமார் நூறு அறைகள். சரியான பராமரிப்பின்றி அவ்வறைகள் இப்போது வவ்வால்களின் குடியிருப்புகளாகி விட்டன. அந்த வவ்வால்களைத் துரத்திவிட்டு தபால் நிலையங்களுக்குத் தேவையான பலவிதமான படிவங்களையும் (Corr22, Corr7, Ack form, MO form, Money Paid Receipt, SRI, GPF withdrawal form, GPF advance form, SB form, etc...), எழுதுபொருள்களையும் (ஸெராக்ஸ் பேப்பர், ரோனியோ பேப்பர், கார்பன் பேப்பர், ஸ்டென்ஸில் பேப்பர், இங்க், ஸ்டாம்ப் பேட், இன்ன பிற) இந்த அறைகளில் பாதுகாத்து வைப்பதே அஞ்சல் பொருள் கிடங்கில் பணியாற்றும் 40 கடைநிலை ஊழியர்களின் வேலை.

இந்த வேலைக்கு எண்ணி நான்கு பேர் போதும். இருந்தாலும் என்ன செய்வது? மெம்பரே நினைத்தாலும் ஊழியர் எண்ணிக்கையைக் குறைக்க முடியாது. ஏன் என்பதெல்லாம் கண்ணாயிரம் பெருமாளுக்குப் புரியாத சமாச்சாரங்கள். ஒரு உதாரணம் சொல்லுகிறேன். இந்த நாடு குடியரசு நாடாக அறிவிக்கப்பட்டதிலிருந்து இந்தியப் பிரதம மந்திரிகளின் குடியரசு தின உரைகளை கவனித்துக் கேட்டுப் பாருங்கள். அல்லது, ஜனாதிபதி, மக்களுக்கு ஆற்றும் உரைகளைக் கேட்டுப்பாருங்கள். அச்சு அசல் நக்ஸல்பாரி போராளிகளின் பேச்சு போலவே இருக்கும். நாட்டில் நிலவும் பஞ்சம், வறுமை, கோடிக்கணக்கில் வரி பாக்கி வைத்திருக்கும் பணக்காரர்கள், அரசியலில் புகுந்துவிட்ட கிரிமினல்களை ஒடுக்க

வேண்டியதன் அவசியம், வேலையில்லாத் திண்டாட்டம், ஜாதிக் கொடுமை, பெண்ணடிமைத்தனம் என்று பல பிரச்னைகளைப் பற்றி நக்ஸல்பாரிகளின் மொழியிலேயே பேசியிருப்பார்கள். ஜனாதிபதி மற்றும் பிரதம மந்திரிகளின் உரையைத் தயாரித்துக்கொடுக்கும் அவர்களது காரியதரிசிகள் ஒருவேளை பழைய எம்மெல் ஆட்களோ என்றுகூட பெருமாளுக்கு சந்தேகமாக இருக்கும். அது போகட்டும். நம்முடைய கிடங்குக்கு வருவோம்.

இந்தக் கட்டிடம் 20 ஏக்கர் நிலப்பரப்பின் மையத்தில் கட்டப்பட்டுள்ளது. சுற்றிவர நாகலிங்க மரங்கள் மற்றும் பூவரசு மரம், ஆலமரம், வேல மரம், வேப்ப மரம், நுணா மரம், நாவல் மரம், கொய்யா மரம், பலா மரம் என்று பலவிதமான மரங்கள். மழைக்காலத்தில் நாவல் மரங்களிலிருந்து பழங்கள் எக்கச்சக்கமாய் கொட்டும். புதர்களிலிருந்து அவ்வப்போது பாம்புகள் எட்டிப் பார்க்கும்.

எல்லாவற்றையும்விட பெருமாளை வசீகரித்தது அங்கிருந்த நாகலிங்க மரங்கள். அங்கே செல்வதற்கு முன் பெருமாள் நாகலிங்க மரத்தைப் பார்த்ததில்லை. ‘பணத் தோட்டம்’ படத்தில் எம்ஜியார் ‘ஜவ்வாது மேடையிட்டு’ என்று பாடுவாரே, அந்தப் பாட்டின் மூலம்தான் நாகலிங்க மரத்தைப் பற்றி அறிந்திருந்தான்.

நாகலிங்கப் பூவில் அதன் பெயருக்கேற்றாற்போல் ஒரு லிங்கமும், அதன் மேல் குடை போல் நாகம் படமெடுத்து நிற்பது போலவும் இருக்கும். குமாஸ்தாக்கள் அதைப் பூஜைக்காக எடுத்துச் செல்வார்கள். அந்தப் பூவைவிட அதன் காய்தான் பெருமாளின் மனதைக் கவர்ந்தது. இரும்பு நிறத்தில் உருண்டை வடிவத்தில் கால்பந்தை விட பாதி அளவில் இருந்த அந்தக் காய் பெருமாளுக்கு பீரங்கிக் குண்டுகளை ஞாபகப்படுத்திக் கொண்டிருந்தது.

குமாஸ்தாக்களின் பூஜைக்கான பூக்களை வழங்கிக்கொண்டிருந்த அந்த தெய்வாம்சம் பொருந்திய மரமே ஒரு பெண்ணின் வேலைக்கு உலை வைத்த சம்பவமும் நிகழ்ந்தது. மேரி ஒரு ஈ.டி. 55 வயது இருக்கும். ஆனால், பார்க்க 70 வயதுபோல் தெரியும். மேரியின் கணவன், இதே அலுவலகத்தில் இதே வேலையில் இருக்கும்போது காசநோய் வந்து இறந்துபோக, அந்த வேலை மேரிக்குக் கிடைத்தது.

இவ்வளவு பெரிய அலுவலகத்தையும், இத்தனை பெரிய தோப்பு துரவுகள் சூழ்ந்த சுற்றுப்புறத்தையும் கூட்டிப் பெருக்குவதென்றால் காச நோய் வராமல் என்ன செய்யும்?

மேரிகூட அடிக்கடி மயக்கம் போட்டு விழுந்துவிடும். இரண்டு நாள் கழித்து தலையிலும், கையிலும் கட்டுப் போட்டுக்கொண்டு வரும். ரத்த அழுத்த நோய்.

அந்த மேரிக்குத்தான் ஒரு நாள் சஸ்பென்ஷன் உத்தரவை டைப் செய்து கொடுத்தான் பெருமாள். மேரி செய்த தவறு: ஒரு நாள் இந்திராணி தன் காரிலிருந்து இறங்கி அலுவலகத்தைச் சுற்றி ஒரு பார்வை பார்த்திருக்கிறார். எங்கு பார்த்தாலும் பழுத்த இலைகள் தரையே தெரியாதபடி விழுந்து கிடந்தன.

விறுவிறுவென்று தன் அறைக்குப் போனார் இந்திராணி. இந்த இடத்தில்

இந்திராணியின் நடையைப் பற்றிச் சொல்லாவிட்டால் நான் அவருடைய ஆளுமைக்கு நியாயம் செய்யாதவனாகி விடுவேன். அவருடைய நடை, ஒரு சிப்பாயின் நடையை ஒத்திருக்கும். ஆனால் அவரது உயரம் ஐந்தடிக்கும் குறைவு என்பதாலும், சிப்பாய் நடைக்கு ஹை ஹீல்ஸ் செருப்பு உகந்ததல்ல என்பதாலும் அந்த வீர நடை வீர உணர்வை எழுப்புவதற்குப் பதிலாக நகைச்சுவையுணர்வையே ஏற்படுத்துவதாக இருந்தது.

அறையில் போய் அமர்ந்தவர் வியர்வையில் கரைந்து வழிந்த பவுடரை தன் உள்ளங்கை அகல கைக்குட்டையால் ஒற்றி எடுத்துவிட்டு, மீண்டும் பவுடரால் டச்-அப் செய்துகொண்டு, (இதற்கென்றே அவரது அறையில் ஒரு முகக் கண்ணாடி பொருத்தப்பட்டு ஒப்பனை சாதனங்களும் வைக்கப்பட்டிருந்தன) பெருமாளை அழைத்து சப்தமான குரலில் கேட்டார்.

‘ஏன் மேரி ஆ.்.பீஸைப் பெருக்கவில்லை? எங்கே பார்த்தாலும் ஒரே இலை. நீங்களாவது சொல்லக் கூடாதா? இது உங்கள் வேலையில்லையா?’

‘மேடம்... ஸாரி மேடம்... இனிமேல் கவனிச்சுக்கிறேன் மேடம்...’ என்றான் பெருமாள்.

‘என்ன ஸாரி? நீங்கள்ளாம் இப்படி பொறுப்பில்லாம இருக்கிறதுனாலதான் நம் நாடு இப்படி குட்டிச்சுவராயிட்டு இருக்கு...?

பெருமாளுக்குப் புரிந்துவிட்டது. அது இலையுதிர்காலம். காலையிலிருந்து மேரி இரண்டு முறை பெருக்கியும் இலைகள் உதிர்ந்த வண்ணமாய் இருக்கின்றன. தைரியத்தை வரவழைத்துக் கொண்டு இந்திராணியிடம் விஷயத்தைச் சொன்னான் பெருமாள்.

‘என்னது, இலையுதிர்காலமா? கொலையுதிர்காலமா மாத்திடுவேன் ஜாக்கிரதை. ஏன் அவளை டிஸ்மிஸ் பண்ணாம சஸ்பெண்ட் பண்றேன் தெரியுமா? கத்தியால குரல்வளையை அறுத்து அப்படியே பாதீல நிறுத்திர்ணும். உயிர் போயிரக் கூடாது. அப்படி கொல உயிரும் குத்துயிருமா நின்னாத்தான் புத்தி வரும்...’

இந்த உரையாடலை அப்படியே வந்து ராகவனிடம் சொன்னான் பெருமாள்.

‘அவள் ஆளவந்தாள். அப்படித்தான் பேசுவாள்’ என்று ஏக வசனத்தில் பேசினான் ராகவன்.

பெருமாளுக்குப் புரியவில்லை.

‘என்னப்பா நீ? புரியலியா? மனிதன் பாதி... அனிமல் பாதி...’ என்று ராகமாக இழுத்தான்.

இவ்வளவு மோசமான சூழலிலும், ராகவன் இருந்தால் அந்த இடம் சற்று கலகலப்பாக இருக்கும்.

எல்லோருக்கும் பட்டப் பெயர் வைப்பான் ராகவன். சுந்தரம் என்று ஒரு குமாஸ்தா இருக்கிறார். எப்போது பார்த்தாலும் பில்லும் கையுமாகவே அலைவார். அவர் பெயர் பில் லாடன்.

மற்றொருவர், நாகராஜன். எப்போதும், எந்த வேலையைக் கொடுத்தாலும் அதை கணினியில் கொடுத்து, கட்டம் கட்டமாகப் போட்டு, பட்டியல் தயாரித்துக் கொடுத்து விடுவார். இப்படி எப்போதும் கட்டம்

கட்டிக்கொண்டிருப்பதால் அவர் பெயர் கட்டபொம்மன்.

அருந்ததி என்று ஒரு க்ரூப் டீ இருந்தாள். அவள் பெயர், கே.எஸ். அதாவது, காம சூத்ரா. எப்போதும் காம சூத்ரா ஆணுறையைத் தன் கைப்பையில் வைத்திருப்பாள் என்பதால் அந்தப் பெயர். அருந்ததி ஒரு விதவை.

வசந்தி என்ற க்ரூப் டீயின் பட்டப் பெயர் ட்ரிப்ளெக்ஸ். பெருமாளுக்கு வசந்தியை மிகவும் பிடிக்கும். வசந்தியும் ஒரு விதவை. எப்போதும் சிரித்தபடியேதான் பேசுவாள். வயது 55 இருக்கும். பேச்சில் செக்ஸ் துள்ளி விளையாடும். பச்சை பச்சையாகப் பேசுவாள். அவளைப் பார்க்கும்போது பெருமாளுக்கு தன்னையே கண்ணாடியில் பார்த்துக்கொள்வது போல் இருக்கும். யாரைப் பற்றியும் தீது சொல்ல மாட்டாள்.

ஒரு நாள் இந்த ஆ◌ஃபீஸிலேயே பின்புறத்திலுள்ள ஒரு ஹாலில் அவள் புடவையைத் தூக்கியபடி, மேஜையில் இரண்டு கைகளையும் வைத்து புட்டத்தைத் தூக்கிக் காட்ட, ஐந்து பேர் வரிசையில் நின்று அவளோடு 'பசுநிலை'யில் கலவி செய்தனர் என்று ஆ◌ஃபீஸ் முழுவதும் பேச்சாய்க் கிடந்தது.

மேரியை சஸ்பெண்ட் செய்ததோடு பிரச்னை தீரவில்லை. வேறு இரண்டு ஆட்களைப் போட்டு, இலைகள் உதிர உதிர அவைகளைக் குவித்து எரிக்கச் சொன்னார் இந்திராணி. இலைகள் எரிவதால் அந்தப் பிராந்தியமே புகை மண்டலமாயிற்று. யாரும் வேலை செய்ய முடியவில்லை. கண்கள் எரிந்தன. சில ஊழியர்கள் இந்திராணியைச் சந்தித்து சிரமத்தை விளக்கினர். ஆனாலும் பயனில்லை.

***

**பின்குறிப்புகள்:**

1. இந்திராணி அறைக்குள் செருப்புகள் வைப்பதற்கென்று தேக்கு மரத்தில் ஒரு ஸ்டாண்ட் செய்யப்பட்டது. அந்த அலுவலகத்தில் தினக்கூலித் தச்சர்களும் உண்டு. பல தபால் நிலையங்களிலிருந்து வரும் உடைந்த நாற்காலி, மேஜை, பீரோ போன்ற பொருட்களிலிருந்து அதிகாரிகளின் வீடுகளுக்கு வேண்டிய மரச் சாமான்களை உருவாக்குவதே இத்தச்சர்களின் வேலை. பழமையான மரச் சாமான்கள் என்பதால் அவை தேக்கு போன்ற உயர்தர மரங்களால் செய்யப்பட்டவையாகவே இருக்கும்.

   இப்படி வரும் பொருட்களை ஏலம் விடுவது மூலமும் அதிகாரிகள் நிறைய பணம் பார்ப்பதுண்டு. ஆனால் இந்திராணியின் கை சுத்தம். லஞ்சம் வாங்க மாட்டார்.

   இந்திராணியின் செருப்பு ஸ்டாண்டில் மொத்தம் 7 ஜதை செருப்புகள் இருந்தன.

2. To survive you had to give up hope... Hope was a complete denial of reality. Hope was a lie with sedative properties. To overcome it we had to prepare for the worst everyday. Those who did not understand this sank into a violent and fatal despapir. How could these men abandoned by everyone be made to believe that this hole was only a parenthesis in their lives, that this ordeal would have an end, and that they would emerge from it stronger,

# கதை : ஒன்பது

ரங்கனிடமிருந்து பெருமாளுக்கு ஃபோன் வந்தது. உடனே வர வேண்டுமாம்; மாதவனின் அறையில் இருக்கிறானாம்.

ரங்கன் இப்படித்தான். எதையுமே திட்டமிட்டுச் செய்வது அவனுக்குப் பிடிக்காது. ரங்கன் பெருமாளின் நெருங்கிய சிநேகிதன். பாண்டிச்சேரி செல்லும்போதெல்லாம் ரங்கனைப் பார்த்து ஒரு மணி நேரமாவது பேசிவிட்டு வருவதுதான் பெருமாளின் வழக்கம். சமயங்களில் இருவரும் சின்ன காலாப்பட்டில் இருக்கும் ரங்கனின் தென்னந்தோப்புக்குச் சென்றுவிடுவார்கள். அங்கே சில மரங்களில் கள் இறக்குவது உண்டு.

தமிழ்நாட்டில் கள் தடை செய்யப்பட்ட பானம் என்பதால் கள்ளின் மீது பெருமாளுக்கு அலாதி மோகம். ரங்கனின் மோட்டார் சைக்கிளில் காலை ஆறரை மணிக்குக் கிளம்பி தோப்புக்குச் சென்றுவிடுவார்கள். ஏழு மணிக்கு ஆரம்பித்தால் பேசிக்கொண்டே எட்டு மணிக்கு முடிப்பார்கள்.

‘மெதுவா சாப்பிடுங்க மிஸ்ஸே... அய்யிரு வந்திட்டுப் போய்ட்டாரு’ என்பார் கள் இறக்கும் பெரியசாமி. அவருக்கு அய்யருக்கும், அய்யங்காருக்கும் வித்தியாசம் தெரியாது. எல்லோரும் அய்யர்தான். அவர் குறிப்பிடுவது ரங்கனின் அப்பாவை.

ரங்கனின் அப்பாவுக்கு 70 வயது இருக்கும். திடகாத்திரமாக இருப்பார். தபால் துறையில் வேலை பார்த்து ஓய்வு பெற்றவர். கள் இறக்கும் சீசனில் - பாண்டிச்சேரியில் எப்போதுமே கள் இறக்குவார்கள் என்றாலும் மார்கழி, தை மாதங்களில் கள்ளின் ருசி கூடியிருக்கும் - அதிகாலையிலேயே வந்து இரண்டு சொம்பு குடித்துவிட்டுப் போய்விடுவார். அதைத்தான் சொல்கிறார் பெரியசாமி.

மரத்திலிருந்து இறக்கியவுடன் நுரையோடு அந்தக் கள்ளைப் பார்க்கும்போது பூமி தரும் தாய்ப்பால் என்று தோன்றும் பெருமாளுக்கு.

பிறகு, பக்கத்திலுள்ள முந்திரித் தோப்புக்குச் சென்று பேசிக் கொண்டிருந்துவிட்டு பதினோரு மணி வாக்கில் அங்கிருக்கும் கிணற்றிலேயே குளித்துவிட்டு வீட்டுக்குத் திரும்புவார்கள். மணக்க மணக்கத் தயாராக இருக்கும் தளிகை. அதற்குள் கள்ளின் வாசம், போதை எல்லாம் காணாமல் போயிருக்கும்.

ரங்கன் தன் தகப்பனாரின் தோப்பு, துரவுகளைக் கவனித்துக்கொள்வதோடு சரி, வேறு எந்த வேலைக்கும் போகவில்லை.

35 வயதாகியும் திருமணம் செய்துகொள்ளவில்லை. காரணம் கேட்டால், ‘மைத்துனன் என்ற கொடுமையான பயல்களை எப்படிச் சமாளிப்பது? அவன்களுடைய அசட்டுப் பேச்சைக் கேட்டு ஹீ, ஹீ என்று இளித்து தலையாட்டிக்கொண்டு... சே...’ என்பான்.

‘சரி, சகோதரன் இல்லாத பெண்ணாகப் பார்க்க வேண்டியதுதானே?’

‘அப்படிப் பார்த்தாலும் பிரச்னைதான்’ என்று சொல்லிவிட்டு ஒவ்வொன்றாக அடுக்குவான்.

திருமணம் செய்துகொண்டால், வருகிற பெண்டாட்டி முதலில் குடிக்கத் தடை போடுவாள். வீடு கட்டச் சொல்லுவாள். அதற்காக வேலைக்குப் போக வேண்டும். இன்னொருத்தனுக்கு அடிமைச் சேவகம் செய்வதெல்லாம் நமக்கு ஆகாது. இதையெல்லாம்விடக் கொடுமை, குழந்தை 20 மார்க் எடுத்துக்கொண்டு வரும். அதை மற்றவர்களிடம் 100 மார்க் என்று கூசாமல் பொய் சொல்ல வேண்டும். தேவையா?

‘எனக்கு ஒன்றும் அப்படி ஆகவில்லையே?’

‘நீ பண்ணியது லவ் மேரேஜ்... அதனால் அப்படி ஆகவில்லை.’

‘நீயும் லவ் பண்ணித் தொலைக்க வேண்டியதுதானேடா?’

‘நம்மைப் பார்த்தால் ஒருத்தியும் லவ் பண்ண மாட்டேங்கிறாளே?’

எப்படிப் பண்ணுவாள்? இவனுக்கு கிருத்திருமம் ஜாஸ்தி. தீபாவளி சமயத்தில் மேலே விட வேண்டிய ராக்கெட்டைப் படுக்கைவாட்டில் கொளுத்தி பக்கத்து வீட்டுப் பெண்ணின் மீது விட்டால் எவள் லவ் பண்ணுவாள்?

ரங்கன் பெருமாளை ஃபோனில் அழைத்தபோது இருவரும் சந்தித்து இரண்டு ஆண்டுகள் ஆகியிருந்தன. காரணம் என்று எதுவுமில்லை. அலுவலகச் சூழ்நிலையின் விளைவாக பெருமாளுக்கு ஏற்பட்ட மன உளைச்சலால் நண்பர்களைச் சந்திப்பதற்கான உந்துதல் குறைந்திருந்தது. ரங்கனின் அம்மாவுக்கு உடல்நிலை சரியில்லாததால் அவனும் சென்னைப் பக்கம் வரவில்லை.

‘எப்படியும் இன்று பார்க்க வேண்டும். உடனே கிளம்பி வருகிறாய்’ என்று சொல்லி ஃபோனை வைத்துவிட்டான்.

அப்போது நேரம் காலை பத்தரை மணி. பாவி, நேற்றே சொல்லியிருந்தால்கூட இன்றைக்கு முழு நாளாக லீவ் போட்டிருக்கலாம்.

இந்திராணியிடம் சென்று ஏதேதோ பொய்களைக் கூறி, உடம்பை அஷ்டகோணலாக்கி, வளைத்து நெளித்து, தலையைச் சொறிந்து அனுமதி வாங்கிக்கொண்டு சென்றான்.

மாதவனின் அறை ஜாம்பஜார் போலீஸ் ஸ்டேஷனுக்குப் பக்கத்தில் துர்கா மேன்ஷனில் இருந்தது. காலையிலேயே கச்சேரி ஆரம்பமாகியிருந்தது. ரங்கன், செல்வா, மணிவண்ணன் மற்றும் ஒரு ஃபுல் ஓல்ட் மாங்க். கூடிய விரைவில் மாதவனும் வந்து சேர்ந்துகொள்வான் என்றார்கள். கச்சேரி இரவு ஏழு மணி வரை நீண்டது. இலக்கியம், இசை என்று ஏதேதோ பேச்சு. இடையில் பிரியாணியும், தயிர் சாதமும் வந்தன. ரங்கன் மாமிசம் சாப்பிட மாட்டான். மாதவனும், மற்றொரு நண்பன் முத்துக்குமாரும் வந்து சேர்ந்தனர்.

அப்போது ஆனந்தனைப் பற்றிய பேச்சு வந்தது. பெருமாளின் இதுவரையிலான எழுத்துக்கள் அனைத்தையும் தானே எழுதிக் கொடுத்ததாக ஆனந்தன் ஒரு பத்திரிகையில் எழுதியிருந்தான். இதற்கு

பெருமாள் யாதொரு பதிலும் எழுதாததால் ஆனந்தனின் கூற்றை பெருமாள் ஒத்துக்கொண்டான் என்பதாகவே ஆகும் என்றான் ரங்கன். ‘ஆனந்தன் செய்தது ஒரு கொலை. கொலைகாரர்களிடம் விவாதிப்பதில் எனக்குச் சம்மதமில்லை?’ என்றான் பெருமாள்.

‘என்ன இப்படிச் சொல்கிறாய் பெருமாள்? உன் சமீபத்திய நாவலில் கூட 20 சதவிகிதம் நான் எழுதிக்கொடுத்ததுதானே?’

பெருமாளுக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லை.

‘என்ன சொல்கிறாய் நீ?’

திரும்பவும் அழுத்தம் திருத்தமாக முன்பு சொன்னதையே சொன்னான் ரங்கன்.

அடுத்த கணம், ரங்கனின் கன்னத்தில் பலமாக ஒரு அறை விட்டான் பெருமாள். தொடர்ந்து இருவரும் கட்டிப் புரண்டனர். ரங்கனின் சார்பாக முத்துக்குமாரும், பெருமாளின் சார்பாக மணிவண்ணனும் சண்டையிட்டனர். செல்வா நடுநிலை வகித்தான். திடீரென்று பெருமாளுக்கு என்ன தோன்றியதோ, தன் ஆடைகள் அவ்வளவையும் கழற்றிப் போட்டுவிட்டு பிறந்த மேனியாக சண்டையிட்டான். அந்த நிலையிலும் செல்வா பெருமாளையே ‘ஸ்கீஸோ∴ப்ரீனிக்’ என்று சொன்னது அவன் காதில் விழுந்தது.

***

**பின்குறிப்புகள்:**

1. அந்தச் சம்பவத்துக்குப் பிறகு ரங்கன் மிகவும் வருத்தப்பட்டதாகவும், போதையில் உளறியதைப் பெரிதுபடுத்த வேண்டாம் என்றும் நண்பர்கள் பெருமாளிடம் எடுத்துக் கூறினர். அன்றைய தினம் வழியெல்லாம் ரங்கன் அழுதுகொண்டே சென்றான் என்றும் கேள்விப்பட்டான் பெருமாள்.

   பிறகு ரங்கன் பெருமாளைப் பல முறை ∴போனில் அழைத்தான். ஆனால் அவன் குரலைக் கேட்டதுமே ∴போனை வைத்துவிடுவான் பெருமாள். அவனுக்குத் தன்னை நினைத்தே அதிகம் பயமாயிருந்தது.

   அன்றைய தினம் அவன் அவிழ்த்துப் போட்ட ஆடைகளைத் திரும்ப உடுத்திக்கொள்ளாமல் போயிருந்தால் பெருமாளை நீங்கள் தெருவில் ஆடையின்றித் திரியும் ஒரு பைத்தியக்காரனாகப் பார்த்திருக்கலாம். ஒரு கணம் அந்த நிலைக்குச் சென்று திரும்பிவந்து விட்டதுபோல் இருந்தது அவனுக்கு.

2. Thou art the thing itself: unaccommodated man is no more but such a poor, bare, fork'd animal as thou art. off off you lendings! come, unbutton here. (Tearing off his cloths.)

   Shakespeare: King Lear: ActIII, SceneIV, 108112

3. சண்டையின்போது பெருமாள் யாரும் எதிர்பாராத விதமாக ஆடைகளைக் களைந்து நிர்வாணமானபோது செல்வா ‘இது என்ன உனக்கு இவ்வளவு சின்னதா இருக்கு?’ என்று பெருமாளின்

பிறப்புறுப்பைக் காட்டி வினவினான். ரங்கனோடு சண்டையிட்டுக்கொண்டே ‘டேய் முட்டாள்... அது விறைச்சா வாழைக்காய் சைஸுக்கு ஆயிடுண்டா’ என்று கத்தினான் பெருமாள். ஆனால் இப்படிச் சொன்னதற்காகப் பிற்பாடு ரொம்பவே வருத்தப்பட்டான் அவன். தான் இவ்வளவு Didactic-ஆகப் பேசியிருக்க வேண்டாம் என்று அவனுக்குத் தோன்றியது.

4. சம்பவம் நடந்து ஒரு மாதம் கழித்து ஒரு நாள் நள்ளிரவு ரங்கனும் மற்ற நண்பர்களும் பெருமாளின் வீடு தேடி வந்தனர். எல்லோரும் நன்கு குடித்திருந்தனர். பெருமாளை அன்புடன் அணைத்து முத்தமிட்டான் ரங்கன். ‘உன்னோடு குடிக்க வேண்டுமென்றுதான் இவ்வளவு தூரம் வந்தோம். கிளம்பி வா’ என்றான். ‘நிச்சயம் நாளை வருகிறேன். அவசியம் சந்திப்போம்’ என்றான் பெருமாள். நண்பர்கள் ஏமாற்றத்துடன் திரும்பிச் சென்றனர். ஆனால், சொன்னபடி மறுநாள் அவர்களைச் சந்திக்க பெருமாள் செல்லவில்லை. மட்டுமல்ல, அதற்கு மேல் அந்த இலக்கிய நண்பர்களைப் பெருமாள் சந்திக்கவேயில்லை.

***

# கதை : பத்து

இந்திராணி திடீரென்று ஒரு நாள் அஞ்சல் பொருள் கிடங்கில் எமர்ஜென்ஸியைப் பிரகடனம் செய்தார். அதன்படி அலுவலகத்தில் இருந்த எல்லாத் தொலைபேசி இணைப்பையும் துண்டித்தார். தன் அறையில் மட்டும் ஒரே ஒரு தொலைபேசி.

'ஊழியர்கள் அனைவரும் எக்கச்சக்கமாக சொந்தக் கதை பேசி அரசுக்கு அதிகச்செலவு வைத்து கஜானாவை காலி செய்கிறார்கள்; அதனால்தான் அதிக வரிகள் போட வேண்டியிருக்கிறது' என்று கண்டுபிடித்தார் இந்திராணி.

இந்திராணியின் இந்த உத்தரவால் அதிகம் பாதிக்கப்பட்டது பெண்கள். அவர்கள்தான் தங்கள் குழந்தைகள் பள்ளியிலிருந்து திரும்பிவிட்டார்களா என்று ஃபோன் செய்து தெரிந்துகொள்ள வேண்டியிருந்தது.

ஐந்தாறு ஊழியர்கள் இந்திராணியிடம் முறையிடலாம் என்று அவரது அறைக்குள் நுழைந்தார்கள். அவ்வளவுதான். இந்திராணிக்குக் கடும் கோபம் வந்துவிட்டது. எல்லோரையும் 'கெட் அவுட்' என்று சொல்லி வெளியேற்றிவிட்டு அழைப்பு மணியை அழுத்தினார். உடனே உள்ளே போனார் திருப்பதி. அவர்தான் இந்திராணியின் ஆர்டர்லி.

'ஸ்டெனோவைக் கூப்பிடு.'

குரல் அலுவலகம் எங்கும் அதிர்ந்தது.

பெருமாள் நோட்டுப் புத்தகத்துடன் உள்ளே நுழைந்தான்.

'இவங்கள்ளாம் மனசுல என்ன நெனச்சிட்ருக்காங்க? நான் ஒரு லேடி. என் ச்சேம்பருக்குள் தனியா உக்காந்திட்ருக்கேன். என் அனுமதியில்லாம இத்தனை பேர் உள்ளே நுழைஞ்சு என்னை...'

ஏதோ அவர்கள் எல்லாம் சேர்ந்து இவரை பலாத்காரம் செய்ய முயன்றதுபோல் இருந்தது அவரது பேச்சு. கோபத்தில் மூச்சு வாங்கியது.

பெருமாளுக்குக் குழப்பமாக இருந்தது. உள்ளே நுழைந்த ஆறு பேரும் முப்பது வருடங்கள் குமாஸ்தாவாகவும், க்ரூப்-டீயாகவும் இருந்து தங்களின் சகலவித உணர்வுகளையும் இழந்தவர்கள். பிறர் திட்டினால்கூட பதிலுக்குத் திட்டாமல் முனகிவிட்டுச் செல்லக் கூடியவர்கள். அப்படிப்பட்ட பூச்சிகள் இந்த அதிகாரியை என்ன செய்திருக்க முடியும்?

ஆறு பேரில் ஒருவருக்கு சஸ்பென்ஷன். ஐந்து பேருக்கு மெமோ. அந்த ஒருவர் செய்த குற்றம் இந்திராணியிடம் விரலை நீட்டிப் பேசியது. 'இந்திராணி ஒருவேளை விரலை குறியீடாக நினைத்து விட்டாரோ என்னவோ!' என நினைத்துக்கொண்டான் பெருமாள்.

விரலை நீட்டிப் பேசுவதுதான் அந்த ஆளின் பழக்கம். அதை இந்திராணியிடம் யார் போய்ச் சொல்வது? சொல்பவரையும் சஸ்பெண்ட் செய்துவிட்டால் என்ன செய்வது? அலுவலகத்தில் அவசரகால நிலை பிரகடனப்படுத்தப்பட்டிருந்தபோதிலும், தொலைபேசிக் கட்டணம் மாதம் 40,000 ரூ. என்று வந்து கொண்டிருந்தது மேனேஜர் சீனிவாசனைக் குழப்பத்தில் ஆழ்த்தியது.

ஆனால் பெருமாளுக்கு அதன் காரணம் தெரியும். ஒரு உதாரணம்:

தஞ்சாவூரிலுள்ள தன் உறவினருக்கு ஒரு பதிவுத் தபால் அனுப்பினார் இந்திராணி. அனுப்பும்போது அக்னாலட்ஜ்மெண்ட் கார்ட் வைக்க மறந்துவிட்டார். உடனே தஞ்சாவூர் போஸ்ட்டா∴பீஸுக்கு ∴போன் போட்டு முகவரி மற்றும் தகவல்களைக் கொடுத்து, முகவரிதாரருக்கு அந்தத் தபால் கிடைத்துவிட்டதா என்று தனக்கு ∴போன் செய்யும்படி இந்திராணியிடமிருந்து உத்தரவு பறந்தது.

கண்ணாயிரம் பெருமாள் கிட்டத்தட்ட இந்திராணியின் அந்தரங்கக் காரியதரிசியாகவே மாறியிருந்தான். அவர் குடும்பத்தினருக்கு ரயில் மற்றும் பஸ் டிக்கட் முன்பதிவு செய்து கொடுப்பது, வங்கிக்குச் சென்று வருவது, மருந்து மாத்திரைகள் வாங்கிக் கொடுப்பது, ஜவுளி மற்றும் நகைக் கடைகளுக்குத் துணையாகச் செல்வது, ரயில் சீசன் எடுத்துக் கொடுப்பது, இத்யாதி, இத்யாதி. இவற்றில், வங்கி வேலை மட்டும் பெருமாளை மிகவும் இம்சைப்படுத்தியது. காரணம்: இந்திராணி தினந்தோறும் இருபதாயிரம், முப்பதாயிரம் என்று பணக் கத்தைகளைக் கொண்டுவருவார். அவ்வளவு தொகையையும் பெருமாள்தான் எண்ண வேண்டும். எண்ணும்போது இந்திராணியின் அறைக்கு வெளியே சிவப்பு விளக்கு எரியும். சிவப்பு விளக்கு எரியும்போது யாரும் அறைக்குள் நுழையக்கூடாது. ஆனால், இந்திராணி முகத்துக்கு பவுடர் தடவிக்கொள்ளும்போதுகூட சிவப்பு விளக்கைப் போடுவது வழக்கம். அதோடு, பல சமயங்களில் அதை அணைக்கவும் மறந்துவிடுவார். அதனால் அநேக தினங்களில் நாள் முழுவதுமே சிவப்பு விளக்கு எரிந்துகொண்டிருக்கும்.

ஊழியர்களுக்குப் பணப் பட்டுவாடா செய்யும் பொருட்டு அவசரமாக கையெழுத்து வாங்குவதற்காக இந்திராணியின் அறை வாசலிலேயே நின்றுகொண்டிருப்பார் கேஷியர் - எதேச்சையாக இந்திராணி வெளியே வரும்போதாவது கையெழுத்து வாங்க முடியுமா என்று.

பெருமாளுக்கு ரூபாய் நோட்டுக்களை சரிவர எண்ணத் தெரியாது. மேலும், இந்திராணி கொண்டுவரும் நோட்டுகள் சாராயக் கடையிலிருந்து கலெக்ஷனாகி வருவதைப்போல் கசங்கியிருக்கும்.

இந்திராணியின் கணவர் ஒரு டாக்டர். ஒரு டாக்டரின் ஒரு நாள் வருமானம் இவ்வளவா இருக்கும்? இந்திராணி ஒரு கணினி மையம் வைத்திருக்கிறார். அந்த வருமானமும் சேர்ந்து இருக்கலாம்.

அவசரநிலைக் கால கட்டத்தில் கண்ணாயிரம் பெருமாள் செய்த அடுத்த முக்கியமான பணி, இந்திராணி வைத்திருக்கும் கணினி மையம் சம்பந்தமான கடிதப் போக்குவரத்துகளுக்கு டிக்டேஷன் எடுத்து டைப் செய்து கொடுப்பது. அடுத்து, இந்திராணிக்கு வரும் அழைப்பிதழ்களுக்கு

வாழ்த்துக் கடிதங்கள் டிக்டேட் செய்வார். தினசரி நான்கைந்து அழைப்பிதழ்கள் வரும். காது குத்து, கிரகப்பிரவேசம், வரவேற்பு, திருமணம், வளைகாப்பு, இத்யாதி என்று. அது ஒவ்வொன்றுக்கும் தனித்தனியாக டிக்டேட் செய்யப்பட்ட வாழ்த்துக் கடிதத்தை டைப் செய்து, இந்திராணியிடம் கையெழுத்து வாங்கி, கவர் வாங்கி, அதில் முகவரியை டைப் செய்து - ‘எழுதக் கூடாது, டைப் பண்ணினால்தான் அழகாக இருக்கும்’ - வாழ்த்துக் கடிதத்தை உள்ளே போட்டு கவரை ஒட்டி இந்திராணியிடம் காண்பித்துவிட்டு, கவரைத் தபாலில் சேர்க்க மாட்டான் பெருமாள். வீட்டுக்கு எடுத்துக்கொண்டுபோய் கிழித்துப் போட்டுவிடுவான்.

இந்திராணியிடம் வேலை பார்த்த ஆறு மாதங்களில் அவர் இதுபற்றி பெருமாளிடம் ஒரு முறைகூட கேட்டதில்லை என்பது அவனுக்கு ஆச்சரியமாகவே இருந்தது.

திடீரென்று இந்திராணிக்கு வீட்டிலிருந்து தானே சாப்பாட்டைத் தூக்கிக்கொண்டு வருவது தன் சுய கௌரவத்துக்கு இழுக்கு என்று தோன்றுகிறது. எனவே இனி திருப்பதியே இந்திராணி வீட்டுக்குச் சென்று மதிய உணவு கேரியரை எடுத்து வர வேண்டும் என்று உத்தரவிட்டார்.

இந்திராணியின் வீடு கௌரிவாக்கத்தில் உள்ளது. கௌரிவாக்கம், தாம்பரத்திலிருந்து மேடவாக்கம் செல்லும் சாலையில் உள்ளது. திருப்பதி சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து ஒரு மணி நேரம் ரயிலில் சென்று அங்கிருந்து இறங்கி 5 கி.மீ தூரம் சைக்கிளில் சென்றால் வரக்கூடிய ஏதோ ஓர் குக்கிராமத்தில் வசிக்கிறார். ஆந்திரா பார்டர். அங்கிருந்து சென்ட்ரல் வந்து - தாம்பரம் வரை ரயிலில் சென்று - பிறகு பஸ் பிடித்து கௌரிவாக்கம் சென்று லஞ்ச் கேரியரைத் தூக்கிக்கொண்டு மீண்டும் பஸ் பிடித்து தாம்பரம் ரயில் நிலையம் வந்து - ரயிலில் சேத்துப்பட்டு வரை வந்து - அங்கிருந்து பூந்தமல்லி நெடுஞ்சாலை வரை நடந்து வர வேண்டும்.

கேரியர் திருப்பதி உயரத்தில் பாதி இருக்கும். ஆறு பேர் சாப்பிடலாம். ஆனால் டப்பாக்களின் உள்ளே அய்ட்டங்கள் ஒவ்வொரு ஸ்பூன் அளவுதான் இருக்கும் என்பார் திருப்பதி.

கேரியர் பயணம் அதோடு முடியவில்லை. இந்திராணி சாப்பிட்டு முடித்ததும் கேரியரை எடுத்துக்கொண்டு திரும்பவும் பூந்தமல்லி நெடுஞ்சாலையிலிருந்து சேத்துப்பட்டு ரயில்வே ஸ்டேஷன் வந்து அங்கிருந்து தாம்பரம் சென்று தாம்பரத்திலிருந்து கௌரிவாக்கம் பஸ் பிடித்து இந்திராணி வீட்டுக்குச் சென்று கேரியரை ஒப்படைத்து விட்டு திரும்பவும் பஸ் பிடித்து தாம்பரம் வந்து அங்கிருந்து சென்ட்ரல் வரை ரயிலில் சென்று பிறகு சென்ட்ரலில் வேறொரு ரயில் பிடித்து ஒருமணி நேரப் பயணத்துக்குப் பின் வரும் அந்தக் குறிப்பிட்ட ஸ்டேஷனில் இறங்கி அங்கே வைத்துள்ள சைக்கிளை எடுத்துக்கொண்டு 5 கி.மீ மிதித்து தன் சொந்த கிராமத்துக்குச் செல்ல வேண்டும்.

பெருமாள் கணக்குப் போட்டுப் பார்த்தான். இந்திராணியின் லஞ்ச் செலவு: மாதம் 7000 ரூ.

ஒவ்வொரு மாதமும் யூனியன் ஆட்களோடு நடக்கும் சந்திப்பை இந்திராணி முழுமையாகத் தவிர்த்தார். அவர்கள்தானோ அல்லது வேறு யாரோ ஸர்க்கிள் ஆ.்.பீஸுக்கு ‘நாட்டு ராணியின் காட்டு தர்பார்’ என்ற

தலைப்பிட்டு ஒரு மொட்டை கடுதாசி எழுதிப் போட்டு விட்டார்கள். ஸர்க்கிள் ஆ∴பீஸ் இந்தக் கடிதத்தை இந்திராணிக்கு அனுப்பி வைத்து அது பற்றி அவருடைய கருத்தைக் கேட்டது.

கடிதத்தைப் பார்த்ததுமே அதை எழுதியது யார் என்று இந்திராணிக்குத் தெரிந்துவிட்டது. இவ்வளவு எதுகை மோனையோடு பெருமாளைத் தவிர வேறு யார் எழுத முடியும்? அவன்தானே எழுத்தாளன்?

அன்றைய தினத்திலிருந்து இந்திராணி பெருமாளோடு பேசுவதில்லை. டிக்டேஷனுக்கும் கூப்பிடுவதில்லை.

பின்குறிப்பு:

> அஞ்சல் ஊழியர் யாருக்காவது ஏதாவது பிரச்னை என்றால் அதை ஸர்க்கிள் ஆ∴பீஸுக்கு முறையாக எழுதிப் போட்டால் எந்த நடவடிக்கையும் எடுக்காமல் அப்படியே குப்பைத் தொட்டியில் போட்டுவிடுவார்கள். ஆனால் ஒரு குப்பைக் காகிதத்தை எடுத்து கோணல்மாணலாகக் கிறுக்கி ‘நலம் விரும்பி’ என்று கையெழுத்திட்டு அனுப்பினால் உடனடியாக நடவடிக்கை எடுக்கப்படும். நடவடிக்கையின் முதற்கட்டமாக, மொட்டைக் கடுதாசியில் குறிப்பிடப்பட்டுள்ள அதிகாரிக்கே அதை அனுப்பி வைத்து கருத்துக் கேட்பார்கள்.

***

# கதை : பதினொன்று

பாலு என்ற பாஸ்கர் அய்யேயெஸ். இதுதான் பாலுவை நண்பர்களிடையே அடையாளப்படுத்தும் பெயர். வெறும் பாலு என்றால் யாருக்கும் தெரியாது.

பாலுவுக்கு அய்யேயெஸ் ஆக வேண்டுமென்பது நீண்ட நாள் கனவு. ஆனால் அந்தப் பரீட்சை எழுத பட்டப்பட்டிப்பு முடித்திருக்க வேண்டுமே? அய்யாவோ ஒன்பதாம் வகுப்பிலேயே ஃபெயில். அதுவும் ஒரு வருடம் அல்ல. இரண்டு வருடம். காரணம்? காதல்.

பிறகு எப்படியோ கஷ்டப்பட்டு ஒன்பதாம் வகுப்பிலிருந்து பத்தாவது வந்து அங்கேயும் இரண்டு ஆண்டுகள் தோல்வி. ஆக, இப்படி ஒவ்வொரு வகுப்பிலும் இரண்டிரண்டு ஆண்டுகள் தங்கிப் படித்ததில் ஆசாமி பதினொன்றாம் வகுப்புக்கே வர முடியவில்லை.

இப்படியாகத்தான் பாலுவின் அய்யேயெஸ் கனவு தகர்ந்துபோனது. 'அதனாலென்ன, நாம் எல்லோரும் அவனை அய்யேயெஸ் என்று அழைத்தால் போயிற்று' என்றான் பெருமாள். அன்றிலிருந்துதான் பாலுவின் பெயரோடு அய்யேயெஸ் ஒட்டிக்கொண்டது. படிப்பில்தான் இப்படி. ஆனால் வேறொரு விஷயத்தில் ஆள் அசகாய சூரன். காதலிப்பதில் காஸனோவாவையும் விஞ்சிவிடுவான். தற்சமயம் மட்டும் அவனுடைய தோழிகளின் எண்ணிக்கை: 50. எல்லோருமே 25 வயதுக்கு உட்பட்டவர்கள். பலர், கல்லூரி மாணவிகள். பெரும்பாலும் ஹாஸ்டலில் தங்கிப் படிக்கும் வெளி மாநிலப் பெண்கள். கப்ஸா இல்லை. பெருமாளே பேசியிருக்கிறான்.

ஒரு நாள் காரில் சென்றுகொண்டிருந்தபோது, பாலு தன் தோழி ஒருத்தியோடு தொலைபேசியில் பேசிக்கொண்டு வந்தான். திடீரென்று அவனிடம் 'ஷ்ரேயா, இதோ என் நண்பன் பெருமாளிடம் பேசு' என்று சொல்லி தொலைபேசியைப் பெருமாளிடம் கொடுத்தான். அதேசமயம் பெருமாளின் காதில் 'என்னை பாலு என்று சொல்லாதே. குமார் என்று சொல்' என்று கிசுகிசுத்தான். பெருமாளுக்கு ஒருகணம் ஒன்றுமே புரியவில்லை. அந்தப் பெண்ணின் கொஞ்சும் குரலோ அவன் மதியை மயக்குவதாக இருந்தது. சமாளித்துக்கொண்டு பேசினான். ஆமாம். என் பெயர் பெருமாள். எழுத்தாளன். இல்லை, தமிழில் எழுதுகிறேன். ஆங்கிலத்தில் எழுதுவதில்லை. ஆமாம். குமார் எனக்கு நீண்ட நாள் நண்பன். உங்களை நான் அறிவேன். குமார் சொல்லியிருக்கிறான். ம்... உங்கள் குரல் மிக இனிமையாக இருக்கும் என்று சொல்வான். பரவாயில்லை. எதற்கு நன்றி? உண்மையைத்தானே சொன்னான்? நீங்கள் என்ன படிக்கிறீர்கள்? ஓ... வழக்கமாக ஆண்கள்தான் ஊசி குத்துவார்கள். இப்போது பெண்களும் குத்த ஆரம்பித்துவிட்டீர்களா? சே சே I did not mean anything dirty. ஆண்கள் குத்தினால் முரட்டுத்தனமாக இருக்கும்; பெண்களே குத்தினால் மென்மையாக இருக்கும் என்றேன். அவ்வளவுதான். என்ன,

மறுபடியும் அசிங்கமா? சரி, விடுங்கள் ஷ்ரேயா. வேறு ஏதாவது பேசுவோம். ஓ... ஃப்ளேம்ஸுக்கு வருகிறீர்களா? குமார் என்னை அழைத்தால் வருகிறேன். ஓ, நீங்கள் அழைக்கிறீர்களா? சரி. குமாருடன் வருகிறேன்.

கொஞ்ச நேரம் கழித்து நஃபீஸா என்றொரு பெண்ணை அழைத்துப் பேசிவிட்டு தொலைபேசியை பெருமாளிடம் கொடுத்து 'என் பெயர் கோபால் என்று சொல்' என்று காதில் கிசுகிசுத்தான் அந்த பாலு என்ற பாஸ்கர் அய்யேயெஸ்.

நஃபீஸாவிடமும் பேசினான் பெருமாள், கோபாலின் ஆப்த நண்பனாக. இந்தப் பெண்களை ஏமாற்றுகிற சமாச்சாரத்தைப் போல் லகுவான விஷயம் இந்த உலகில் வேறு எதுவுமே இல்லையோ என்று தோன்றியது. எடுத்ததற்கெல்லாம் ஏதோ மாபெரும் நகைச்சுவையைக் கேட்டதுபோல் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தார்கள்.

ஷ்ரேயா மும்பையைச் சேர்ந்தவள். சென்னையிலுள்ள விடுதியில் தங்கி மருத்துவம் படிக்கிறாள். நஃபீஸா தில்லியைச் சேர்ந்தவள். மருத்துவ மாணவி. பிறகு குஜராத்தைச் சேர்ந்த பாயல். இங்கே சென்னையில் ஏதோ வாயில் நுழையாத ஒரு படிப்பு படிக்கிறாள். இவளிடம் 'ரவி'யின் நண்பனாக அறிமுகமானான் பெருமாள். பின்பு. பூஜா. தமிழ்ப்பெண். சென்னையிலுள்ள ஒரு நட்சத்திர ஓட்டலின் வரவேற்பாளினி. இவளிடம் மட்டும் பாலுவின் நண்பனாகவே அறிமுகம். ஏனென்றால், பூஜா பாலுவுக்கு மிகவும் நெருக்கமாம்.

ஒரு நாள் சனிக்கிழமை பின் மதியம் மூன்று மணிக்கு மணியிடமிருந்து பெருமாளுக்குத் தொலைபேசி அழைப்பு. திருச்சிக்கு இரவு பத்து மணிக்குள் வரமுடியுமா என்று கேட்டு. கரும்புத் தின்னக் கூலியா என்று நினைத்தபடி உடனே கிளம்பினான் பெருமாள்.

ஆனால் போய்ச் சேருவதற்குள் இரவு பதினொன்று ஆகிவிட்டது. காலையில்தான் திருச்சி வந்ததன் காரணமே தெரிந்தது. நண்பர் மீரானின் தம்பிக்குத் திருமணம். பெருமாளின் பிறந்த ஊரான நாகூரில் முஸ்லிம் திருமணம் என்றால், இரவில்தான் நடக்கும். பத்து மணிக்கு மேல் ஆகிவிடும். திருமண உடன்படிக்கையில் கையெழுத்திட்டு முடித்தவுடன் மாப்பிள்ளையானவர் பெண்ணைத் தனது இரண்டு கைகளாலும் தூக்கிக்கொண்டு முதலிரவு அறைக்குள் செல்ல வேண்டும். அப்போது பெண்களெல்லாம் சேர்ந்து குலவையிடுவார்கள்.

பெண்ணை முன்கூட்டியே பார்க்கும் வாய்ப்பு மாப்பிள்ளைக்கு இல்லை என்பதால், 'பெண்ணைத் தூக்க முடியுமா? இல்லையா?' என்பது பற்றிய படபடப்புடனேயே இருப்பார் மாப்பிள்ளை. பெண்ணைத் தெரிந்த யாராவது மாப்பிள்ளையிடம் சொன்னால்தான் ஆயிற்று.

மீரான் வீட்டுத் திருமணம் நாகூர்த் திருமணம் போல் இல்லை. பகல் பனிரண்டு மணிக்குத் திருமணம். நண்பர்கள் மணியின் கேம்ரியில் சென்றுகொண்டிருந்தார்கள். மணி ஏதோ பேச்சினிடையே, 'பிரியாணி இன்விடேஷன்' என்றான். நாகூர் வழக்குக்கும் அவன் சொன்னதற்கும் இருந்த ஒற்றுமையைக் கவனித்தான் பெருமாள். இரவு பதினோரு மணிக்கு நடக்கும் திருமணச் சடங்கில் அநேகமாக நெருங்கிய உறவினர்கள் மட்டுமே உடனிருப்பார்கள். மற்றபடி திருமண நிகழ்வு

என்றால் பிரியாணிதான்.

திருச்சியிலிருந்து 40 கி.மீ தூரத்தில் திருச்சி, திண்டுக்கல், மதுரை தேசிய நெடுஞ்சாலையில் இருக்கிறது அந்த ஊர். அங்குள்ள கற்பகம் தியேட்டருக்குப் பக்கத்தில் திருமண மண்டபம். கற்பகம் தியேட்டரைக் கண்டுபிடிப்பது சற்று சிரமமாகவே இருந்தது. யாரைக் கேட்டாலும் ‘இதோ பக்கத்தில்தான்’ ‘அதோ அங்கேதான்’ என்று வழி சொன்னார்கள். கடைசியில் ஒரு ஆட்டோக்காரரிடம் கேட்டபோதுதான் ‘இந்தத் தெருவுக்குள் செல்லுங்கள், 200 மீட்டர் தூரத்தில் உள்ளது’ என்று தெளிவாகச் சொன்னார்.

தெரு முனையிலேயே நண்பர்களை வரவேற்றார் ஒருவர். நீங்கள் யார் என விசாரித்தபோது... ‘மீரானோட ஸிஸ்டரோட ஒ ஃப்’ என்றார். திருமண வரவேற்புப் பதற்றத்தில் இருந்தார். புரிந்தது. மீரானின் தமக்கையின் கணவர். அதோடு அவரை விடக் கூடாதா? பக்கத்திலிருந்த அஃப்ஸல், அவர் கூறியதற்கு விளக்கவுரை வேறு கூறினான். ‘ஓ... மீரானோட ஸிஸ்டரோட ஹஸ்பண்ட்னு சொல்றீங்க?’

இதைக் கேட்டதும் அவருக்கும் மிகவும் லஜ்ஜையாயிற்று. ‘என்னப்பா இது? கார்கிலில் போய் போரிட்டு வந்த வீரர், அவரைப் போய் இப்படி கலாய்க்கிறாயே?’ என்று அவர் சென்ற பிறகு அஃப்ஸலிடம் கேட்டான் மணி.

மீரானுக்கும் இவர்களைக் கண்டதும் சற்று பதற்றம்; நண்பர்கள் மிகவும் முன்னதாக வந்துவிட்டார்கள். திருமணம் பனிரண்டு மணிக்குத்தான்! அப்போது பத்து மணியே ஆகியிருந்தது; இரண்டு மணி நேரத்தை என்ன செய்வது?

கேம்ரியை அந்த நெடுஞ்சாலையிலேயே செலுத்தியபடி ஏதாவது ஒதுக்குப்புறமான, நிழலான இடம் இருக்கிறதா என்று தேடினார்கள். 6 கி.மீ தூரம் வந்த பிறகு, பிரதான சாலையிலிருந்து வலதுபுறம் பிரிந்து ஏதோ ஒரு கிராமத்தை நோக்கிச் சென்றது ஒரு குறுக்குச் சாலை. அதன் முகப்பில் ஒரு கல்லறை. அதை ஒட்டி ஒரு பெரிய ஆலமரம். சரக்கு அடிப்பதற்கு ஏற்ற இடம். ஆலமர நிழலில் வண்டியை நிறுத்திவிட்டு ‘கச்சேரி’யை ஆரம்பித்தது நண்பர் கூட்டம். அப்போது அந்த ஆலமரத்தைப் பார்த்து ‘இது என்ன வில்வ மரமா?’ என்று கேட்டான் நரேன். சென்னையிலேயே பிறந்து சென்னையிலேயே வளர்ந்தவன். எனவே அவன் அப்படிக் கேட்டதில் தவறில்லை. ‘ஆலமரம்தான்’ என்று பதில் சொன்னான் பெருமாள். ஆனாலும், நரேனுக்கு சந்தேகம் தீரவில்லை. ‘ஆலமரம் என்றால் விழுது இருக்குமே? இதற்கு இல்லையே?’ என்று கேட்டான். பிறகு அவனுக்குப் புரிகிறாற்போல் ‘பத்து வயது சிறுமிக்கு கொங்கைகள் இருக்குமா? அதற்கென்று ஒரு வயது வந்தால்தானே வரும்? அதேபோல்தான் ஆலமரமும். ஆனால் ஆலமரத்துக்கு வயது அதிகம்’ என்றான் பெருமாள்.

கூட்டம் அதிகமாக இருக்கும் என்பதால் பிரமுகர்களின் திருமணங்களுக்கு மணி செல்வதில்லை. அதேபோல், பிரமுகரோடும் திருமணங்களுக்குச் செல்வது தவறு என நினைத்துக்கொண்டான் பெருமாள். நினைத்த இடம்: பிரியாணி சாப்பிட்டுக்கொண்டிருந்த பந்தி. நாகூரில் முஸ்லிம் இல்லத் திருமணங்களில், நான்கு நான்கு பேராக ஒரு பெரிய தட்டைச் சுற்றி அமர்வார்கள். ஆசாரமான இந்துக்கள் இதைச் சற்றே முகச்சுளிப்புடன்

பார்ப்பார்கள். ஆனால், பெருமாளுக்கு மிகவும் பிடித்தமான வழக்கம் அது. ஏழை, பணக்காரன், உயர் ஜாதி, கீழ் ஜாதி என்ற பாகுபாடுகள் இல்லாத சமத்துவத்தைக் குறிக்கும் ஒரு சம்பந்தி விருந்து. ஆனால், மீரான் வீட்டுத் திருமணத்தில் அதற்கு எதிராக நடந்துகொண்டிருந்தது.

முதலில் பெருமாளுக்குப் புரியவில்லை. அவன் இலையில் விழுந்த பிரியாணி வெண் பொங்கலைப் போல் இருந்தது. ஆனால், பிரியாணி வாசனை. ஒன்றும் புரியாமல் சாப்பிட்டுக்கொண்டிருந்தான். அவனுக்கு நாலைந்து இலை தள்ளி அமர்ந்திருந்தான் மணி. பிரியாணித் தட்டைக் கையில் வைத்திருந்தவர் அவனிடம் சென்று, 'இன்னும் பீஸ் எடுத்துக் கொள்ளுங்கள்' என்று அடிக்கடி சொல்லி, வற்புறுத்தி, கறித் துண்டுகளை அவன் இலையில் சரித்துக்கொண்டிருந்தார். அப்போதுதான் அது வெண் பொங்கல் அல்ல, பிரியாணி என்று பெருமாளுக்குப் புரிந்தது. மணிக்கோ ஆட்டுக்கறி அவ்வளவாகப் பிடிக்காது. பெருமாளுக்கோ ஆட்டுக்கறி என்றால் உயிர். பக்கத்து இலையாக இருந்தாலாவது அவனிடமிருந்து துண்டுகளை லவட்டிக் கொள்ளலாம். ஆட்டுக்கறி இல்லாமல் வெறும் ஆட்டுக்கறி வாசனையோடு பிரியாணியைச் சாப்பிடுவது அவனுடைய சுயக் கட்டுப்பாட்டுக்கு விடுவிக்கப்பட்ட பெரும் சவாலாக இருந்தது. சவாலில் நாக்கு வென்றது. பரிமாறிக்கொண்டிருந்த அன்பரை அழைத்து சிறிதும் லஜ்ஜையின்றி, 'கொஞ்சம் பீஸ் வையுங்கள்' என்றான். 'இதோ' என்று சொல்லி நிறையவே சரித்தார். துண்டங்களைத் தேடினான். ஒரு துண்டு அகப்பட்டது. எடுத்துக் கடித்தான். ஆட்டுக் கொம்பையெல்லாமா பிரியாணியில் போடுவார்கள்? பரிமாறும் அன்பரைத் தேடினான். அவர் மணியின் முன்னே நின்றுகொண்டு, 'பீஸ் எடுத்துக் கொள்ளுங்கள்' என்று துண்டங்களை எடுத்துப் போட, 'வேண்டாம்' என மறுத்துக்கொண்டிருந்தான் மணி.

கல்யாணத்தில் கலந்துகொண்டுவிட்டு மீண்டும் திருச்சி வந்து, கேம்ரியிலேயே சேலம் சென்றது நண்பர் கூட்டம். பாலு என்ற பாஸ்கர் அய்யேயெஸ் தன் காதல் கதைகளைச் சொல்லிக்கொண்டு வந்தான். பயணம் வெகு சுவாரசியமாக இருந்தது.

சேலத்தில் மணியின் கெஸ்ட் ஹவுஸுக்கு எதிரே ஒரு பெண்கள் தங்கும் விடுதி உள்ளது. அதில் பணிபுரியும் ஒரு பெண், காலையும், மாலையும் இரண்டு நேரங்களில் வருவாள். 20 வயது இருக்கலாம். வந்தவள், வேலையில் இடையிடையே கெஸ்ட் ஹவுஸை நோக்கி உற்று உற்றுப் பார்ப்பாள். எனவே, 'Canine reflex' மாதிரி பெருமாளும் உற்று உற்றுப் பார்ப்பான். அந்தத் தடவை பாலு என்ற பாஸ்கர் அய்யேயெஸ்ஸிடம் அவளைக் காண்பித்தான் பெருமாள். அவன் ஒன்றும் சொல்லாமல் அமைதியாக இருந்தான். எனவே, கெஸ்ட் ஹவுஸின் Chef-ஆன ப்ரகாஷுக்குப் புரிந்துவிடக் கூடாது என்பதற்காக, சற்றே குரலைத் தாழ்த்தி 'Have you seen her?' என்று கேட்டான் பெருமாள். பாலு என்ற பாஸ்கர் அய்யேயெஸ்ஸும் கிசுகிசுக்குரலில், 'I will seen her' என்றான்.

இதுதான் பாலு என்ற பாஸ்கர் அய்யேயெஸ்ஸின் மற்றொரு விசேஷ குணாம்சம். அவனுக்கு ஆங்கிலம் தெரியாது. இந்தக் காலத்தில் தமிழ்நாட்டில் ஆங்கிலம் தெரியாவிட்டால் ஏதோ குஞ்சாமணியே இல்லாததுபோல் அல்லவா கதறுகிறார்கள்? அந்த வேலை மட்டும் பாலு என்ற பாஸ்கர் அய்யேயெஸ்ஸிடம் நடக்காது. நீங்கள் ஆங்கிலத்தில்

என்ன கேட்டாலும் சற்றும் தயங்காமல் படு ‘கேஷுவலாக’ பதில் கூறுவான். உங்களுக்கு எப்படி ஸ்பானிஷோ, ஜெர்மனோ தெரியாதோ அதேபோல் அவனுக்கு ஆங்கிலம் தெரியாது. தகவல் பரிமாற்றத்துக்குப் பேச்சு மொழி ஒரு சாதனம், அவ்வளவுதான். பாலு என்ற பாஸ்கர் அய்யேயெஸ் இந்த மனோ நிலையை வந்தடைய முக்கியக் காரணம், மணி. அமெரிக்க உச்சரிப்புடன் ஆங்கிலம் பேசத் தெரிந்த மணி, பாலுவுடன் பாலுவின் ஆங்கிலத்திலேயே பேசிப் பேசி, அவனை இந்த அளவுக்குத் தேற்றி விட்டான்.

மணிக்குத் தொண்டையில் ஏதோ பிரச்னை. அது பற்றி மணியும் பாலுவும் உரையாடிக்கொண்டிருந்தனர். அந்த உரையாடல் இது: ‘பாலு, ஐயாம் நாட் கமிங் டு ஹொகனேக்கல், யூ பீப்ள் கோ...’

‘ஒய்?’ - பாலு

‘மை த்ரோட் இஸ் நாட் ஆல்ரைட்’

‘த்ரோட்’ என்றதும், பாலுவுக்குச் சற்றுக் குழப்பமாகிவிட்டது. ஆனாலும் ஆள் அசரவில்லை.

‘வாட் மீனிங் த்ரோட்?’ என்றான்.

‘த்ரோட் மீனிங் தொண்டை!’

‘ஓ... தொண்டை நாட் ஆல்ரைட், ஓகே... ஓகே... வீயாம் கோயிங்.’

மேட்டூரில் காலை ஏழரை மணிக்கு இருக்கவேண்டும் என்பது திட்டம்; ஆனால், கூடவந்த ஒரு நண்பனின் ‘ஆசனவாய்த் தொந்தரவினால்’ சேலத்திலிருந்து கிளம்பும்போதே ஒரு மணி நேரம் தாமதம். மேட்டூர் போய்ச் சேர்ந்தபோது மணி பத்து. ஏழரையை உத்தேசித்து, மேட்டூர் பொதுப்பணித் துறையினர் தயாரித்து வைத்திருந்த இட்லி, தோசை, மீன் குழம்பு, மீன் வருவல், கோழிக் குழம்பு எல்லாம் ஆறி ஜில்லிட்டுப்போயிருந்தன. ஆறின கஞ்சி பழங்கஞ்சி. தோசையெல்லாம் வறட்டு வறட்டென்று காய்ந்துபோயிருந்தது. ஆனால் மீன் வறுவல் ஆறிப் போயும் ருசியாக இருந்தது. காவிரியிலிருந்து பிடித்து அப்படியே சமைத்தது. ஐஸில் வைக்கப்பட்ட சென்னை மீனுக்கும் இதற்கும்தான் எத்தனை வித்தியாசம். இதைச் சுடச்சுட சாப்பிட்டிருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும். ‘ஆசனவாய்ப் பிரச்னை’ நண்பரைச் சபித்துக்கொண்டே சாப்பிட்டான் பெருமாள்.

மீனின் பெயர் கேட்டான்... ‘Rogue’ என்றார்கள். வெறும் பெயரல்ல, காரணப் பெயர். ரவுடித்தனமாக மற்ற சிறிய மீன்களைப் பிடித்துச் சாப்பிட்டுவிடும் என்பதால் இந்தப் பெயர்.

பாவம் சங்கரா மீன். எவ்வளவு பெரிய மீனாக இருந்தாலும் சங்கரா மீன் அது பாட்டுக்கு சிவனே என்று கடலில் கிடக்கும். எந்த சக மீன்களுக்கும் எந்த இடைஞ்சலையும் தராது. அப்படிப்பட்ட அப்பாவி மீனுக்கா சங்கரா மீன் என்று வைக்க வேண்டும்? இந்த ‘ரோக்’ மீனுக்கல்லவா அந்தப் பெயர் பொருத்தமாக இருக்கும்? ஆனால், ரோக் மீன் ருசியில் கிட்டத்தட்ட Trout மீனைப் போல் இருந்தது. Trout மீனுக்குத் தமிழ் வார்த்தை இல்லை. நன்னீர் மீன் என்று சொல்லலாம். ஸ்படிகம் போன்ற தூய்மையான தண்ணீரில் வளர்க்கப்படும் மீன். காஷ்மீரில் சாப்பிட்டிருக்கிறான் பெருமாள். அதற்குப்

பிறகு அதை உண்ணும் சந்தர்ப்பம் வரவில்லை.

அது கிடக்கட்டும், உடும்பு என்ன ஆயிற்று? முன்கூட்டியே தனக்கு உடும்புக் கறி வேண்டும் என்று சொல்லியிருந்தான் பெருமாள். அவன் ஒரு ஆளுக்குத்தான். வேறு யாரும் அதைச் சாப்பிட முன்வரவில்லை.

ஆனால் உடும்பு கிடைக்கவில்லை என்ற தகவல் கிடைத்தது. ஏமாற்றமடைந்தான் பெருமாள்.

மேட்டூரிலிருந்து ஹொகனேக்கலுக்கு 1942-இல் தயாரிக்கப் பட்ட ஒரு விசைப்படகில் கிளம்பினார்கள். டீசலில் இயங்கும் படகு அது. மணி 10.30. ஐந்து மணி நேரப் பயணம். அதுவும், நதியின் போக்குக்கு எதிர்த்திசையில். படகுக்குள் சென்றதுமே காலணிகளைக் கழற்றிவிட்டான் பெருமாள். காலணிகளோடு நீச்சலடிப்பது கடினம். சுற்றிவரப் பார்த்தான். சமுத்திரத்தைப் போல் கண்காணாதவரை நிறைத்திருந்தது காவிரி. கரையே தெரியவில்லை. அவனுக்கு நீச்சல் தெரியும்தான். ஆனால் இவ்வளவு தூரத்தையும் கடக்க அவன் ஒன்றும் நீச்சல் காளி இல்லையே?

நீச்சல் காளியை அவன் தனுஷ்கோடியில் சந்தித்தான். தனுஷ்கோடியிலிருந்து ஸ்ரீலங்காவின் தலைமன்னார் வரை - 40 கி.மீ தூரம் - வெகு அனாயாசமாக நீந்திக் கடந்துகொண்டிருந்தவர் அவர். தனுஷ்கோடியில் குதித்து, 12இலிருந்து 14 மணி நேரம் இடைவிடாமல் நீந்தித் தலைமன்னார் சேர்ந்து, தனுஷ்கோடி வந்து சேருவாராம். இங்கே கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்று உண்டு. சமீபத்தில்கூட ப்யூலா சௌத்ரி என்ற நீச்சல் வீராங்கனை தனுஷ்கோடியிலிருந்து தலைமன்னார் வரை நீந்தியிருக்கிறார். ஜிப்ரால்டர் ஜலசந்தியைக் கூட நீந்திக் கடந்தவர் இந்த ப்யூலா. ஆனால் இதுபோன்ற நீச்சல் வீரர்களுக்கும், நீச்சல் காளிக்கும் முக்கியமான ஒரு வித்தியாசம் உள்ளது. நீச்சல் வீரர்களோடு, கூடவே பாதுகாப்புக்காக விசைப்படகுகளில் ஆட்கள் செல்வார்கள். மின்விளக்கு வசதி, வழிகாட்டுவதற்கு 'கைட்' போன்ற எல்லா வசதிகளும் உண்டு. அதோடு, தண்ணீரிலேயே நீண்ட நேரம் இருப்பதால் உடம்பில் சுளுக்கு, பிடிப்பு எதுவும் ஏற்பட்டுவிடாமல் இருக்க உடம்பு பூராவும் 'க்ரீம்' தடவிக்கொள்வார்கள் நீச்சல் வீரர்கள். இது எல்லாவற்றையும்விட அவர்களுக்குள்ள அதிமுக்கியமான வசதி என்னவென்றால், நீந்தமுடியவில்லையென்றால் நீச்சலை ரத்து செய்துவிட்டு படகில் ஏறிவிடலாம். ஆனால், நீச்சல் காளிக்கு இதுபோன்ற வசதிகள் ஏதும் கிடையாது. களைப்பு ஏற்பட்டாலும் நீச்சலை நிறுத்தமுடியாது. நிறுத்தினால் மரணம். மூச்சைப் பிடித்துக்கொண்டு தலைமன்னார்வரை நீந்தியே ஆகவேண்டும்; ஒற்றை ஆளாக... 40 கி.மீ... 14 மணி நேரம்...

'வழியில் திமிங்கலம் போன்ற கடல் மிருகங்களால் ஆபத்து ஏற்படாதா?' என்று அவரைச் சந்தித்தபோது கேட்டான் பெருமாள்.

'அதெல்லாம் நிலத்தில் உள்ளவர்களின் கேள்வி தம்பி.. அதுங்க பாட்டுக்கு அதுங்க வேலயப் பார்த்துக்கிட்டு போவும். நம்மள அண்டாது...' என்றார் சிரித்துக்கொண்டே. பெரும் கானகங்களில் மூர்க்க விலங்குகளோடு வாழும் துறவிகளின் பதிலைப் போலிருந்தது நீச்சல் காளியின் பதில். இதில் 'மூர்க்க விலங்குகள்' என்ற பதமே பெருமாளைப் போன்ற சராசரிகளினுடையது.

மிஞ்சிப் போனால் அந்தக் காவிரியில் ஒரு மணி நேரம் நீந்தலாம் என்று நினைத்துக்கொண்டான். ம்ஹூம்... அதற்கும் வாய்ப்பில்லை. கூட வந்தவர்களுக்கு நீச்சல் தெரியாதாம்.

'பெருமாள், என்னை நீ காப்பாற்றாவிட்டால் உன்னைக் கொன்று விடுவேன்' என்றான் நரேன். அந்த வாக்கியத்தில் இருந்த இலக்கணப் பிழையை எண்ணி ரசித்தான் பெருமாள்.

ஆனால் பாலு down to earth மனிதன். நேரடியாக விஷயத்துக்கு வந்தான்.

'தோ பார். கரய வுட்டுக் கெளம்பி வந்து அர அவர்தான் ஆவுது. பேசாம படகத் திருப்பிவிடுவோம். பை ரோட் போய்க்கலாம்... எனக்கு நீச்சல் தெரியும். ஆனா ஒன் அவர்தான் நீஞ்ச முடியும். அதுக்கே வாய்ல நுரை தள்ளும்...'

ஆனால் இதெல்லாம் வெற்று பயம் என்று தெரிந்தது. காரணம் படகின் மேலேயே ஒரு பரிசல் இருந்தது.

இருந்தாலும் அந்த ஐந்து மணி நேரப் பயணத்தில் பெருமாள் மது அருந்தவில்லை. போதையுடன் நீச்சல் அடிக்க முடியாதே!

நதியின் நீரோட்டம் வாளைக்குமரி ஒருத்தியின் திமிறும் உடற்கட்டை ஞாபகப்படுத்தியது. காமவுணர்வை வெகுவாகத் தூண்டும் காட்சியாக இருந்தது.

மரண பயம்... காம உணர்வு... திரும்பவும் Georges Bartailleஇன் தத்துவார்த்தப் பிரச்னைக்கு வந்து சேர்ந்துவிட்டோம். மரணம் - காமம் - மரணம் - ஜனனம்... இது ஒரு வட்டச் சுழற்சி எனத் தோன்றியது.

எதைப் பற்றியும் கவலைப்படாமல் ஒரு ஓரத்தில் உறங்கிக் கொண்டிருந்தான் பாலு. அவன் பேச்சை யாரும் கேட்கவில்லை. ஆசாமி தூங்கிவிட்டான். தூக்கமும் ஒரு வகையில் மரணம்தானே? ஆனால், ஒரு நிச்சயம் இருக்கிறது, 'எழுந்துவிடுவோம்' என்று. மரணத்தில் அப்படியில்லை. மறு பிறவி பற்றி அவ்வளவு நிச்சயமில்லை. 'பிறவாதிருத்தல் வேண்டும்...' எல்லா ஞானிகளும் இதையேதான் சொல்கிறார்கள். பிறவாமை வேண்டும்... பிறவித் துன்பம்... மனித வாழ்க்கை அவ்வளவு துயரகரமானதா என்ன?

பாலு விழித்துக்கொண்டுவிட்டான். மேட்டூரிலிருந்து கிளம்பி மூன்று மணி நேரம் ஆகியிருக்கும். இப்போது பெருமாளுக்கு பயம் நீங்கி விட்டது. காரணம், காவிரி அங்கே குறுகியிருந்தது. கரையில் ஓரிரு குடிசைகள் தெரிந்தன. ஒரு குடிசையிலிருந்து மற்றொரு குடிசைக்கு இரண்டு கி.மீ தூரமாவது இருக்கும். குடிசைக்குப் பக்கத்தில் ஒன்றிரண்டு ஆடுமாடுகள். வேடிக்கை பார்த்துக்கொண்டே வந்துகொண்டிருந்தார்கள். படகின் முன்பக்கம் நரேன் இருந்தான். பெருமாளும், பாலுவும் வால் பகுதியில். அப்போது... கரையில் ஒரு குடிசை. குடிசையின் வாசலில் 25 வயது மதிக்கத்தக்க ஒரு பெண். அக்கம்பக்கம் கண்ணுக்கெட்டிய தூரம் யாருமில்லை. மின்சாரம் இல்லை, தொலைக்காட்சி இல்லை, புத்தகங்கள் இல்லை. அந்தப் பெண்ணுக்கு எழுதப் படிக்கத் தெரியுமா என்பது சந்தேகமே.

அவள் அமர்ந்திருந்தது ஒரு ஓவியத்தைப்போல் இருந்தது. ஒரு சிறிய

பாறையில் அமர்ந்து கன்னத்தில் கைவைத்தபடி எதையோ வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் எதையும் பார்க்கவில்லை. சூன்யத்தில் நிலைத்திருந்தது அவள் பார்வை. அவள் மனதில் இப்போது எதைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பாள்?

திடீரென்று பாலு அந்தப் பெண்ணைப் பார்த்து கையசைத்தான் அந்தப் பெண்ணும் அதைக் கவனித்துவிட்டாள். அவள் கண்களில் ஒரு மின்னல் பொறி. இவர்கள் சற்றும் எதிர்பாராத வண்ணம் சட்டென்று அவளும் பாலுவைப் பார்த்து கையசைத்தாள். (இதைப் பற்றி பாலு பின்னர் விவரிக்கும்போது, 'அவள் ஒன்றும் உடனே கையசைத்துவிடவில்லை. கொஞ்ச நேரம் பொறுத்து aim பண்ணி, நல்ல பர்ஸனான்னு பார்த்துத்தான் கையசைத்தாள்' என்றான்.) ஆனால், என்ன ஒரு கொடுமை... அவளுக்கும் படகுக்கும் நடுவே ஒரு குன்று வந்து குறுக்கிட்டது. அவளை மீண்டும் பார்க்க முடியுமா என இவர்கள் மனம் பதற்றம் கொண்டது.

நல்ல வேளை... படகு ஓரிரு நிமிடங்களில் அந்தக் குன்றைச் சுற்றி வந்தபோது மீண்டும் அவள் தெரிந்தாள். அதற்குள் அவள் வேறு ஓர் இடத்திற்கு ஓடி வந்திருந்தாள். இப்போது பாலு தாமதிக்கவில்லை, உடனே கொடுத்தான் ஒரு பறக்கும் முத்தம்.

என்னடா இது வாழ்க்கை. அதை என்னவென்று சொல்வது? அவளும் கொடுத்துவிட்டாள் ஒரு பறக்கும் முத்தம்.

கிட்டத்தட்ட ஒரு பரவச நிலையில் இருப்பவளைப் போலிருந்தாள் அவள். காலங்காலமாக மனித முகத்தையே பார்த்திராதவளைப் போலிருந்தது அவளது பரவசம். ஒரு வேளை இப்படி ஒரு விசைப்படகை இப்போதுதான் பார்க்கிறாள் போலும்.

அவளுடைய அடுத்த கட்ட நடவடிக்கைதான் இன்னும் ஆச்சரியமானது. தான் இருந்த இடத்தைவிட்டு படகு தன் பார்வையைவிட்டு மறையாதவாறு ஓடி வந்தபடியே கையினால் 'வா, வா' என்று பாலுவை நோக்கி சைகை காண்பித்தாள். அவள் உடல் அசைவுகள் அவளது பதற்றத்தையும், ஆர்வத்தையும், தனிமையின் துயரத்தையும், அத்தனிமையிலிருந்து விடுபட்டு மனித முகங்களைக் கண்ட வெறிகொண்ட சந்தோஷத்தையும் கலந்த அந்த அபூர்வம் - அந்தக் கொந்தளிப்பு இன்னும் ஓரிரு கணங்களில் தன்னை விட்டுப்போய்விடுமோ என்ற அடிவயிற்றுக் கதறலையும் வெளிப்படுத்திக்கொண்டிருந்தன.

பாலு படகை விட்டு வெளியே வந்து நின்று, 'இங்கே படகில் ஆட்கள் இருக்கிறார்கள். என்னால் வர முடியாது' என்பதுபோல் சைகை காட்டினான்.

பெருமாள் விக்கித்துப்போய் பார்த்துக்கொண்டிருந்தான்.

ஆனால், அந்தப் பெண் விடவில்லை. இவர்கள் பார்வையிலிருந்து மறையும்வரை அவள் படகின் திசையில் ஓடி வந்துகொண்டிருந்தது தெரிந்தது.

இவ்வளவு சுருக்கமான - இவ்வளவு தீவிரமான - ஒரு காதல் கதையை பெருமாள் அதுவரை கண்டதுமில்லை, கேட்டதுமில்லை.

மூன்றரை மணிக்கு ஹொகனேக்கல் போய்ச் சேர்ந்தது படகு. ஒரு

மரத்தடியில் சாப்பிட அமர்ந்திருந்தார்கள். மேட்டூரிலிருந்தே பொதுப்பணித் துறையினர் மீன் குழம்பு, மீன் வறுவல், கோழி, சோறு என்று பலவிதமாகக் கொடுத்தனுப்பியிருந்தனர்.

மரத்தடியில் ஒரு ஆள் படுத்துக் கிடந்தான். உயிர் இல்லாத சவம் போல் கிடந்தான் அவன். சுவாசம் இருப்பதற்கு அறிகுறியான மார்பின் ஏற்ற இறக்கம்கூடத் தெரியவில்லை.

'இல்லை... தெரிகிறது...' என்றான் நரேன்.

உணவு பரிமாறப்பட்டது. காலையில் சாப்பிட்ட அதே மீன். பெருமாள் ஒரு தலையை வாங்கி, கண், மூளை என்று உறிய ஆரம்பித்தான். அப்போது பாலுவின் குரல், 'என்ன, சாப்பிடுகிறாயா?' என்று கேட்டது.

அந்த ஆள் மீன் வாசனையில் எழுந்துவிட்டான் போலும். பெருமாளுக்கு முதுகுப்புறத்தில் இருந்தான் அவன். திரும்பிப் பார்த்தான்; 25 வயது இருக்கும். குடித்ததுபோல் இல்லை அவன் முகம். பசியால் பஞ்சடைந்து கிடந்தது.

'இந்தா ப்ரகாஷ், அந்த ஆளுக்கு ஒரு ப்ளேட்ல சாப்பாடு எடுத்து வை!'

'மீன் சாப்பிடுவியா?'

என்ன ஒரு கரிசனை, கவனிப்பு என்று நினைத்துக்கொண்டான் பெருமாள். ஒருவேளை அவன் சைவமாக இருந்துவிட்டால்? இவர்களிடம் சைவ உணவும் இருந்தது.

நட்சத்திர ஓட்டல் பாணியில் ஒன்றிரண்டு ஸ்பூன் சோற்றைத் தட்டில் தள்ளினார் ப்ரகாஷ்.

'ப்ளேட் நிறையப் போடு ப்ரகாஷ்'

'ம்ஹூம். கோபுரம் மாதிரி போடு.'

அப்புறம்தான் ப்ரகாஷுக்குப் புரிந்தது. குழம்பு ஊற்றி குழம்பு மீன் போட்டுக் கொண்டுபோய்க் கொடுத்தார் ப்ரகாஷ்.

'வறுத்த மீன் வை.'

'இன்னொரு துண்டு வை'

அப்போது அங்கே பாலு மட்டும் இருந்திராவிட்டால் அந்தப் பரிதாபத்திற்குரிய ஜீவனுக்கு உணவு கிடைத்திருக்காது.

அருவியை வேடிக்கை பார்த்துவிட்டு அவர்கள் வேனை நோக்கிச் சென்றுகொண்டிருந்தனர். பெருமாள் தனியே நடந்துகொண்டிருந்தான். அப்போது ஒரு இளம் பெண் - கிராமத்து அழகி - ஒரு நீரோடையின் அருகே நின்றுகொண்டிருந்தாள். வசியப்படுத்தும் அழகு. பெருமாள் நின்று நிதானித்து அவளையே பார்த்தான். சேலை நனைந்துவிடாமல் சற்றே மேலே தூக்கி இடுப்பில் செருகியிருந்தாள். கால்களினூடே ஓடை நீர் சலசலத்துச் சென்றுகொண்டிருந்ததை ரசித்துக்கொண்டிருந்தாள். அவன் பார்ப்பதை அவளும் பார்த்தாள். ஏதோ ஒன்றைச் சொல்ல விரும்புவதுபோல் இருந்தது அவள் பார்வை.

படகில் வரும்போது படகுடனேயே ஓடி வந்த அந்தப் பெண்ணைப் பற்றி பாலு கூறியது அவனுக்கு ஞாபகம் வந்தது. 'பாவம் பெருமாள், அவள்

கணவன் திரும்பி வரும்வரை அவள் என்ன செய்வாள்? யாரோடு பேசுவாள்? இப்போது நான் அங்கே போனால்... அடடா... அந்தக் கலவி சுகம் எப்படி இருக்கும் தெரியுமா?'

(அவன் சென்னைத் தமிழில் கூறியது இங்கே பொதுத் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது).

அந்தப் பெண்ணைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே பாலுவும், நரேனும் இருந்த இடத்தை நோக்கி நடந்தான் பெருமாள். அவனருகே யாரோ வரும் ஓசை கேட்டது. திரும்பினால் அந்தப் பெண், அந்த அழகி!

அவனுக்கு மிகப் பக்கத்தில் வந்து, 'நான் போய்ட்டு வரேன். உங்க ஆளுங்க கிட்டயும் சொல்லிடுங்க' என்று சொல்லிவிட்டு விடு விடுவென்று நடந்தாள்.

அவனால் நம்ப முடியவில்லை, அவனிடம்தான் சொன்னாளா? ஆம்... அந்த வார்த்தைகள் அவன் செவிகளில் ஸ்பஷ்டமாக ஒலித்துக்கொண்டிருந்தன.

பாலு அவனிடம் வந்து, 'அவள் என்ன சொன்னாள்?' என்று கேட்டான். அவன் குரலில் எந்த ஆர்வமும் இல்லை என்பதுதான் பாலுவின் விசேஷம். ஏதோ, 'நரேன் என்ன சொன்னான்?' என்று கேட்பதைப் போலிருந்தது அவன் தொனி.

அவள் சொன்னதைச் சொல்லிவிட்டு, 'என்ன நடந்தது?' என்று கேட்டான் பெருமாள். அவளுக்கு முன்னால் வந்துகொண்டிருந்த பாலு அவளைப் பார்த்து, ஒருவருக்கொருவர் கண்களால் பேசி, அதன் பிறகு - அவன் செய்து காட்டியதை சொற்களால் விவரிப்பது கடினம்.

அவ்வளவு கூட்டத்திலும், யாரும் அறியாமல், தன் இடது கரத்தினால் - கையை மேலே தூக்காமல் - விரல்களை மட்டும் லேசாக அசைத்து தான் நினைத்ததை அவளுக்குத் தெரியப்படுத்தியிருக்கிறான். 'நாம் தனியே சந்திக்கலாமா?'

அதற்கு அவளும் சளைக்காமல், கையை உயரே தூக்காமல் யாரும் அறியாமல், விரல்களாலேயே பதில் கூறியிருக்கிறாள்... 'என்னுடன் ஒரு கூட்டமே வந்திருக்கிறது. நான் என்ன செய்ய?'

'யோவ் பாலு, என் குருவே! அவள் செய்ததுபோல் எனக்குச் செய்து காட்டு ஐயா' என்றான் பெருமாள்.

பாலு செய்து காண்பித்தான்.

அதை வார்த்தைகளால் விவரிக்க முடியவில்லை. உங்கள் கற்பனைக்கே விட்டுவிடுகிறேன். தனிமையில் அமர்ந்து செய்து பாருங்கள்.

***

சேலத்திலிருந்து மறுநாள் கிளம்பினார்கள். சொந்த வேலை காரணமாக அஃப்ஸல் இவர்களோடு கிளம்பவில்லை. விடைபெறும் தருணம். அஃப்ஸல் பாலுவிடம் ஆங்கிலத்தில் கூறினான்:

'என்ன பாலு இது? எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டாய்? ப்ரகாஷிடம் கைகூட கொடுத்தாய். என்னிடம் சொல்லிக்கொள்ளவே இல்லையே?'

இதற்கு பாலுவின் பதில்:

‘மை ஹார்ட் யூ...!’

நாங்கள் கிளம்புவது அறிந்து எதிரே பெண்கள் விடுதியின் பணிப்பெண் வந்து எங்களை ஜாடையாகப் பார்த்தாள். பாலுவிடம் திரும்பவும் கேட்டான் பெருமாள்.

‘Have you seen her?’

‘I will seen her!’

‘How is she?'

‘which no girl there, she ok!’

***

சென்னை செல்லும் வழியில் தலைவாசலில் 2.50 ரூபாய் கொடுத்து ஒரு குவளை கம்மங்கூழ் குடித்தான்.

சென்னையிலிருந்து சேலம் போகும்போது, விழுப்புரம் மாவட்டம் முடிந்து, சேலம் மாவட்டத்தின் நுழைவாயிலில் உள்ள ஊர் தலைவாசல். காரணப்பெயர்.

சேலத்திலிருந்து சென்னை வரும் வழியிலெல்லாம் பெண்களைப் பார்த்து கை அசைத்துக்கொண்டே வந்தான் பெருமாள்.

ம்ஹூம்... ஒரு பெண்கூட பதிலுக்குக் கை காட்டவில்லை. பாலுவிடம் என்ன காரணமென்று கேட்டான். பாலு பதில் எதுவும் சொல்லவில்லை. மணி மட்டும் சொன்னான் இப்படி:

‘உண்மையிலேயே நீதான் உன் கதைகளை எழுதுகிறாயா அல்லது உனக்காக Ghost writer யாரையாவது வைத்திருக்கிறாயா?’

பின்குறிப்பு:

> ‘மும்பையைச் சேர்ந்த ஷ்ரேயா, தில்லியைச் சேர்ந்த நஃபீஸா, குஜராத் பாயல் போன்ற தோழிகளோடெல்லாம் எப்படி பாலு உரையாடுகிறாய்? அவர்களின் நவ நாகரீக ஆங்கிலத்தைக் கேட்டு நான் திணறினேன்...’ என்று பாலுவிடம் கேட்டான் பெருமாள்.
>
> ‘Problem no... I was spoke! Girls was understand... ok? God... you know? He help!' இது பாலுவின் பதில்
>
> ‘God help... yes... only Balu... Not my’ என்று தனக்குள் சொல்லிக் கொண்டான் பெருமாள்.

***

# கதை : பன்னிரண்டு

‘ஆர் யூ கம் ஃபார் லஞ்ச்?’

பலத்த குரலில் குமார் இந்தக் கேள்வியைக் கேட்கும்போதெல்லாம் பெருமாளுக்கு அளவு கடந்த எரிச்சல் ஏற்படும்.

‘ஆங்கிலத்தில் பேசாதே என்று எத்தனை தடவை சொல்வது?’ என்று கேட்பான் பெருமாள்.

‘பேசிப் பேசித்தானே பழக வேண்டும்? பேசாமலேயே இருந்தால் பிறகு எப்படிப் பேச வரும்?’

காலையில் வருகைப் பதிவேட்டில் கையெழுத்துப் போட்டுவிட்டு வந்து அமர்ந்ததும் ‘ஒரு முக்கியமான விஷயம் பேசணும் பெருமாள்... டீக்கடைக்குப் போகலாமா?’ என்பான்.

‘வந்ததுமே வெளியே செல்வதா? இந்திராணி மெமோ கொடுத்து விட்டால் என்ன செய்வது?’ என்று தயங்கினால் ‘சும்மா வா பாஸ்...’ என்று இழுப்பான்.

‘பாஸ்’ என்பதை குமார் சொல்லும் விதமே நீர்யானை கொட்டாவி விடுவது போல் ஆபாசமாக இருக்கும்.‘Baaaaas’ என்று சொல்லிப் பாருங்கள், புரியும்...

கடைசியில் பார்த்தால் அந்த முக்கியமான விஷயம் - அவனுடைய புத்திர சிகாமணி எல்லாப் பாடங்களிலும் ஒற்றைப்படை மதிப்பெண்களாகவே வாங்கி வந்திருப்பதாக இருக்கும்.

‘நல்லா அடிச்சிட்டேன் பாஸ்... அவனை நினைச்சாதான் கவலையா இருக்கு...’

குமாருக்கு இவ்வளவு கவலையை ஏற்படுத்தும் அவனுடைய புதல்வன் படிக்கும் வகுப்பு என்ன என்று கேட்டபோது அவன் கூறிய பதில்:

‘எல்கேஜி.’

அந்த எல்கேஜி புதல்வனுக்காகத்தான் குமார் இவ்வளவு சிரமப்பட்டு ஆங்கிலம் பேசிப் பழகுவதும்...

ஒரு நாள்-

குமார் தன் இருக்கையில் அமர்ந்தபடி தீவிரமான யோசனையில் இருந்தான். ‘என்ன குமார் யோசனை?’ என்று கேட்டபோது அவன் கூறிய பதில்:

‘பையனுக்கு இன்று மன்த்லி டெஸ்ட். அதான் பயமா இருக்கு...’

‘எந்த ஸ்கூலில் படிக்கிறான்?’

‘ஆக்ஸ்ஃபோர்ட் இங்கிலீஷ் ஸ்கூல்.’

சொல்லும்போதே குமாரின் குரலில் ஒரு கம்பீரம் தெரிந்தது. ஆனால் கீழ்ப்பாக்கத்தில் அப்படி ஒரு பள்ளியைப் பெருமாள் கேள்விப்பட்டதில்லை. பிறகுதான் தெரிந்தது, அது ஐந்தாம் வகுப்பு வரை மட்டுமே உள்ள ஒரு டப்பா ஸ்கூல் என்று.

‘ஏதாவது ஒரு பெரிய ஸ்கூலில் சேர்க்க வேண்டியதுதானே?’

‘பெரிய ஸ்கூலெல்லாம் ஒரே ஃப்ராடு பாஸ். பயங்கரமா காசு புடுங்குவானுங்க...’

ஒரு நாள் ஃபைலில் ஏதோ எழுதிக்கொண்டிருந்தவன், திடீரென்று பெருமாளைப் பார்த்து ‘பாஸ்... நீ ஒரு பத்திரிகை நடத்தினா என்ன?’ என்றான்.

‘என்னது பத்திரிகையா?’

‘ஆமாம் பாஸ்... பத்திரிகை.’

‘என்ன விளையாடுறியா குமார்? அதுக்கு கோடிக்கணக்கா பணம் வேணும்ப்பா...’

‘இப்படியெல்லாம் ஆரம்பத்திலேயே தடங்கலா பேசக் கூடாது. சின்ன அளவுல ஆரம்பிச்சா அது பாட்டுக்கு பெருசா வளந்துட்டுப் போவுது. வீஜீப்பீ தெரியும்ல... ஆரம்பத்துல வீட்டுக்கு வீடு பேப்பர் போட்ற பையனா இருந்துதான் இன்னிக்கு இவ்ளோ பெரிய கோடீஸ்வரனா ஆயிருக்காரு...’

ஒரு நாள், மேனேஜர் சீனிவாசன் இரண்டு மாத விடுப்பில் சென்றார். அலுவலகத்தில் எல்லோருடைய முகத்திலும் மலர்ச்சி. அலுவலகமே விழாக்கோலம் பூண்டதுபோல் மாறியது. காரணம்: அஞ்சல் துறையிலுள்ள எல்லா குமாஸ்தாக்களும் ஒரே அச்சில் வார்க்கப்பட்டதுபோல் ஒரே மாதிரிதான் இருந்தார்கள். அதைப் போலவேதான், அஞ்சல் துறையிலிருந்த எல்லா ஹெட் க்ளார்க்குகளும், எல்லா மேனேஜர்களும், எல்லா அய்ப்பீவோக்களும், எல்லா அய்ப்பீயெஸ்களும், எல்லா க்ரூப் டீக்களும் ஒரே அச்சில் வார்த்தது போல் ஒன்றுபோலவே இருந்தனர்; ஒரே மாதிரி பேசினர்.

சீனிவாசனுக்கு சொந்த வேலை இருந்தால் எல்லாவற்றையும் முடித்துக் கொண்டு சாவகாசமாக மதியம் ஒரு மணிக்கு ஆஃபீஸ் வருவார். ஆனால் மற்ற குமாஸ்தாக்கள் பத்து நிமிடம் தாமதமாக வந்தால்கூட அரை நாள் விடுப்பைக் கழித்துவிடுவார். பெருமாள் கணக்கில் எப்போதுமே விடுப்பு இருக்காதாகையால் அது அவனுக்கு அரைநாள் சம்பள வெட்டாக ஆகிவிடும்.

யாரோ ஒருவர் எதிர்த்துக் கேட்டார்.

‘இது என்ன உங்க சொந்த கம்பெனியா?’

‘ஆமாம், கம்பெனிதான். சீனிவாசன் அண்ட் கம்பெனி. உன்னால் என்ன பண்ண முடியும்? பண்ணிக்கோ...’ என்றார் மேனேஜர் சீனிவாசன்.

இப்படிப்பட்ட ஜென்மம் நீண்ட விடுப்பில் போகிறதே என்றுதான் கொண்டாட்டத்தில் இருந்தது ஆஃபீஸ். சீனிவாசனுக்கு அடுத்தபடியான சீனியர் என்பதால் குமார் தற்காலிக மேனேஜராக ஆக்கப்பட்டான். ஆனால் ஆச்சரியகரமாக குமாரும் சீனிவாசனைப் போலவே மாறிப்போனான்.

பெருமாளை ‘பாஸ்’ என்று அழைப்பதை நிறுத்தினான். அவனுக்கு பெருமாள் ‘குட்மார்னிங்’ சொல்லி ‘பாஸ்’ என்று அழைக்க வேண்டுமென்று எதிர்பார்ப்பதைப் போலிருந்தன அவனுடைய நடவடிக்கைகள்.

திடீரென்று ஒரு நாள் பெருமாளிடம் வந்து ‘ஒரு வாரத்துக்கு முன்பு நீங்கள் ஒரு நாள் வரவில்லை. அதற்கு ஏன் அப்ளிகேஷன் கொடுக்கவில்லை?’ என்று மிரட்டும் தோரணையில் கேட்டான் குமார்.

வருகைப் பதிவேட்டைப் பார்த்தபோது அதில் அன்றைய தினம் பெருமாள் அலுவலகம் வந்ததற்கான அடையாளமாக அவனுடைய கையொப்பம் இருந்தது. அதை எடுத்து குமாரிடம் காட்டினான் பெருமாள்.

பதில் ஒன்றும் சொல்லாமல் போய்விட்டான் குமார். அன்றைய தினம் அலுவலகத்தில் வேறு ஒரு விஷயமும் நடந்தது. அது பற்றிய கிசுகிசுப்பு அலுவலகம் முழுக்கவும் பரவியிருந்தது.

ஐந்து பெண் ஊழியர்கள் காலை பதினோரு மணியிலிருந்து அலுவலகத்தில் காணவில்லை.

ஐந்து பேரும் அலுவலகத்துக்குப் பக்கத்திலுள்ள ஒரு தியேட்டருக்கு படம் பார்க்கப் போயிருந்தனர் என்பதே விஷயம்.

குமார் ஒரு ஜொள்ளுப் பேர்வழி என்பதால் அவனே தியேட்டருக்குப் போய், டிக்கட் வாங்கிக் கொடுத்து அனுப்பி வைத்திருக்கிறான் என்று அலுவலகத்தில் பேசிக்கொண்டனர்.

ஐந்து பெண்களும் அலுவலகம் திரும்பியபோது, மணி நான்கு.

இதற்கு மறுநாள், பெருமாள் அலுவலகத்தில் நுழைந்ததும் நுழையாததுமாக அவனிடம் கேட்டான் குமார்:

‘எங்கே அப்ளிகேஷன்? நேற்றே கேட்டேனே?’

‘நான் லீவு போடவில்லை. போடாத லீவுக்கெல்லாம் அப்ளிகேஷன் தர முடியாது.’

‘நான் செக் பண்ணியாச்சு. நீங்க ஒரு நாள் லீவு. அதுக்கு அப்ளிகேஷன் வேணும்.’

உயர்ந்த குரலெடுத்து கத்தினான் குமார். ஆறடி உயரமும், ஒல்லியான உருவமும், கூன் விழுந்த முதுகுமாக அவன் எழுந்து நின்று கோபத்தில் கத்தியதைப் பார்க்க வினோதமாக இருந்தது.

‘அப்படியானால் நேற்று அந்த அஞ்சு பேர் கிட்டவும் அப்ளிகேஷன் வாங்கிட்டுத்தான் சினிமாவுக்கு அனுப்பினீங்களா?’

‘அதிகப்படியா பேச வேணாம். அப்ளிகேஷன் தரலைன்னா டிஸிப்ளினரி ஆக்ஷன் எடுப்பேன்.’

‘போடா பொறம்போக்கு. இன்னும் மூணு நாள்ள பார்டா. உன் வீட்லயோ என் வீட்லயோ எழவு விழும்...’

**பின்குறிப்பு:**

> கண்ணாயிரம் பெருமாளுக்கும் குமாருக்கும் சண்டை நடந்த இரண்டாவது நாள் பெருமாளின் தாயார் காலமானார்.

# கதை : பதின்மூன்று

கண்ணாயிரம் பெருமாளுக்கு ஆ்ஃபீஸுக்குப் போவதே பிடிக்கவில்லை. ஆ்ஃபீஸா அது. மென்ட்டல் அஸைலம். மென்ட்டல் பயல்களையெல்லாம் எப்படி ஆ்ஃபீஸராகப் போடுகிறார்கள். அது சரி. அவன்களுக்கு மேல் உள்ளவன்களும் மென்ட்டல் பயல்கள்தானே. அப்படித்தான் தாமஸ் வர்கீஸ் என்ற மென்ட்டலிடம் மாட்டிக் கொண்டான் பெருமாள். வர்கீஸ் பார்ப்பதற்கு இந்தி சினிமா ஹீரோவைப்போல இருப்பான். என்ன... திரும்பத் திரும்ப இதே உதாரணத்தைச் சொல்கிறேனா. என்ன செய்வது. அய்யேயெஸ் அதிகாரிகளில் முக்காலே மூணு வீசம் பேர் அப்படித்தான் இருக்கிறார்கள். குமாஸ்தாக்களோ சினிமாவில் வருகிற சிரிப்பு நடிகன்களைப்போல் மாபெரும் தொப்பையுடனும் கடைநிலை ஊழியர்கள் சோகக் கதாபாத்திரங்களைப் போலவும் இருக்கிறார்கள். இது பற்றி கண்ணாயிரம்பெருமாள் யோசித்துப் பார்த்தபோது அவனுக்குத் தோன்றியது, இந்த குமாஸ்தாக்களின் தொப்பை போலீஸ்காரர்களின் தொப்பை இவற்றையெல்லாம் கிண்டலடித்துக் கொண்டிருக்க முடியாது என்று. தொப்பையில்லாமல் ட்ரிம்மாக இருக்க வேண்டுமானால் அதற்கெல்லாம் ஒரு லை்ஃப் ஸ்டைல் தேவை அய்யா. அய்யேயெஸ் அதிகாரி காலையில் எழுந்து கீழ்ப்பாக்கம் பக்கத்திலிருக்கிற ஷெனாய் நகர் பார்க்கில் வாக்கிங் போய் விட்டு வீட்டுக்கு வந்து சாவகாசமாக பேப்பர் படித்துவிட்டு குளித்து சாப்பிட்டுவிட்டு டிரைவர் வண்டி ஓட்ட மூன்று கிலோமீட்டர் தூரத்திலுள்ள ஸர்க்கிள் ஆ்ஃபீஸுக்கு ஒன்பது மணிக்கே வந்துவிடலாம். உணவையும் சுமந்து செல்ல வேண்டிய அவசியமில்லை. ஆர்டர்லியே மதிய உணவைப் பன்னிரண்டரை மணிக்குக் கொண்டுவந்துவிடுவான். ஆனால் குமாஸ்தாக்களின் நிலை அப்படியில்லை. பரபரவென்று காலில் வெந்நீரைக் கொட்டிக்கொண்டு ஓட வேண்டும். ஆ்ஃபீஸுக்குக் கிளம்பும் ஒவ்வொரு தினமும் மீரா எனக்கு இன்னும் சாவு வரவில்லையே என்றுதான் புலம்புவாள். வேறு வழியில்லை. காலை ஆறு மணிக்கு எழுந்து டீ போட்டு குடித்துவிட்டு சமைத்து ஒரே புதல்வன் கார்த்திக்கை பள்ளிக்கு அனுப்பிவிட்டு குளித்து ப்ரேக்்ஃபாஸ்ட் டப்பாவையும் லஞ்ச் டப்பாவையும் தண்ணீர் பாட்டில்களையும் - ஆ்ஃபீஸில் வரும் தண்ணீரில் புழுக்கள் நெளியும். குடித்தால் காலராவும் வாந்தி பேதியும் வரும் - தனித்தனிப் பைகளில் திணித்துக்கொண்டு பஸ் ஸ்டாண்டை நோக்கித் தலை தெறிக்க ஓட வேண்டும். காதணி, கைக்கடிகாரம் எல்லாவற்றையும் தூக்கி தோள் பையில் போட்டுவிட்டு ஓடினால்தான் சின்மயா நகரிலிருந்தே கிளம்பும் 8.40 பஸ்ஸைப் பிடிக்க முடியும். ஓடிப்போய் பஸ் படிக்கட்டில் காலை வைப்பதற்கும் டிரைவர் எடுப்பதற்கும் சரியாக இருக்கும். ஒரே ஒரு நிமிடம் முன்னால் போனால் உட்கார சீட் கிடைக்கும். அந்த 8.40ஐ விட்டால் அப்புறம் ஒன்பதேகாலுக்கு கோயம்பேட்டிலிருந்து வரும் பஸ்தான். அதில்

மக்களும் காய்கறிக் கூடைகளும் வித்தியாசமின்றி நிரம்பி வழிவார்கள். அது அல்ல பிரச்னை. ஆடைகளைக் கழற்றாமலேயே ஒரு மைனர் ரேப்பே அங்கு நடந்துவிடும். விறைத்த ஆண்குறியைப் பெண்களின் புட்டத்தில் வைத்து தேய்த்துத் தேய்த்தே தண்ணி கக்கிவிடும் காலிப்பயல்கள் பஸ்களில் பிக்பாக்கெட் கும்பலைவிட அதிகம். பிக்பாக்கெட்காரன் என்றால் அவனை ஒரு ரகத்தில் அடக்கிவிடலாம். சேரிப் பகுதியில் வாழ்பவன், சிறைக்குச் சென்று வந்தவன், அல்லது செல்லத் தயாராக இருப்பவன் என்று. ஆனால் ஆடை அவிழ்க்காமலேயே ரேப் செய்யும் காலிகளை எந்த ரகத்திலும் சேர்க்க முடியாது. குடிசையில் இருப்பவன். மத்தியதர வர்க்கத்தைச் சேர்ந்தவன். லுங்கி கட்டியவன். வேஷ்டி கட்டியவன். பேண்ட் போட்டவன். பதினைந்து வயதுப் பையன். அறுபது வயதுக் கிழம். இப்படி எல்லா ரகத்தையும் சேர்ந்தவனாயிருப்பான் அவன். வாயால் சொல்லியும் நகராதவன்களின் கால்களை செருப்பின் ஹீல்ஸ் பகுதியால் நன்கு பலம் கொண்ட மட்டும் வைத்து அழுத்தி ரணகளப்படுத்தியிருகிறாள் மீரா. சமயங்களில் ஊசி. கதறிக்கொண்டு ஓடியிருக்கிறான்கள் தேவடியாப்பயல்கள். எதற்கும் தோதுப்பட்டு வரவில்லையென்றால் சட்டைக் காலரைப் பிடித்து நாலு சாத்து சாத்துவதற்கும் தயங்கியதில்லை அவள். ஒரு பெண்ணே ஒருத்தனை அடிக்க ஆரம்பித்தால் மற்றவர்கள் சும்மா இருப்பார்களா. அவன்களும் தர்ம அடி போடுவார்கள். அவன்களே வேறொரு பக்கத்தில் நின்று இப்படித் தேய்த்துக் கொண்டிருப்பவன்கள்தான். ஆனால் தங்களை நல்லவன்களாக காட்டிக்கொள்வதற்காக அகப்பட்டுக் கொண்டவனை வெளுத்து வாங்குவான்கள். அதனால்தான் 8.40ஐப் பிடிக்க அவ்வளவு அவசரமாக ஓடுவது. அதில் உட்கார இடம் கிடைக்காவிட்டாலும் கொஞ்சம் ஒதுக்குப்புறமாக நின்று கொள்ளலாம். இதெல்லாம் பரவாயில்லை என்று ஆகிவிடும் மாலை நேரங்கள். ஐந்தே முக்காலுக்கு ஆ.ஃபீஸ் முடிந்து இரண்டு சிக்னல்களையும் உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு கடந்து - ஒரு சிக்னல் மவுண்ட் ரோட் மசூதி. மற்றொரு சிக்னல் எல்லய்சி எதிரில் - எல்லய்சி நிறுத்தம் வரை வந்து முக்கால் மணி நேரமோ ஒரு மணி நேரமோ நின்று 17-ஏ பிடித்து வீடு வந்து சேர மீராவுக்கு இரவு எட்டு மணி ஆகிவிடும். அபூர்வமாக பஸ் சீக்கிரமே வந்துவிட நேர்ந்தால் கோடம்பாக்கம் மேம்பாலத்தில் ட்ரா.ஃபிக் ஜாமில் மாட்டிவிடும். மேம்பாலத்திலிருந்து லிபர்ட்டி தியேட்டர் வருவதற்கே அரை மணி ஆகிவிடும். அப்போதும் வீடு வந்து சேர வழக்கம்போல் எட்டு மணிதான். இது போக ஆ.ஃபீஸில் சாவகாசமாக வேலை செய்யலாம் என்றால் அதுவும் முடியாது. பாராளுமன்றக் கேள்வி என்ற ஒரு கழுத்தறுப்பு இருக்கிறது. எவனாவது ஒரு யம்ப்பீ பொழுது போகாமல் ஏதாவது ஒரு கேள்வி கேட்டு வைப்பான். அதற்கு பதில் தயாரிப்பதற்குள் தாலி அறுந்துவிடும். உதாரணமாக: எத்தனை தபால் நிலையங்கள் நவீனப்படுத்தப்பட்டுள்ளன. எத்தனை தபால் நிலையங்களில் கணினி வசதி செய்யப்பட்டுள்ளது. ஸ்பீட் போஸ்ட் ஆரம்பிப்பதற்கு ஒரு தபால் நிலையம் என்னென்ன தகுதிகளைக் கொண்டிருக்க வேண்டும். (இந்த கேள்விக்கான பதிலை தில்லியிலுள்ள Directorate என்று அழைக்கப்படும் தபால் துறைத் தலைமையலுவலகமே கொடுத்துவிட முடியும். இருந்தாலும் கேள்வி பிராந்திய அலுவலகத்தை நோக்கியே பாயும்.) சமயங்களில் தமிழ்நாட்டுத் தபால் நிலையங்களில் மொத்தம் எத்தனை Stamp Padகள் உள்ளன என்ற கேள்விகூட கேட்கப்படும்.

(யாராவது கொலைக் குற்றச்சாட்டில் ஜெயிலுக்குப்போய் பெயிலில் வந்திருக்கும் பீகார் யம்ப்பீ கேட்ட கேள்வியாக இருக்கும்.) இதே கேள்விகளுக்குச் சென்ற மாதம்தான் பதில் தயாரித்து அனுப்பப்பட்டிருக்கும். இருந்தாலும் மறுபடியும் புறப்பட்டு வரும் கேள்வி. அதிலும் இரண்டு மணி நேரத்தில் பதில் அனுப்பப்பட வேண்டும். இல்லையென்றால் அது பாராளுமன்ற அவமதிப்பு ஆகிவிடும். சம்பந்தப்பட்ட குமாஸ்தாவிலிருந்து அதிகாரிவரை சஸ்பென்ஷன் உத்தரவு வாங்கிக்கொண்டு வீட்டுக்குப் போக வேண்டியதுதான். ஏனென்றால் பாராளுமன்றம்தான் எல்லாவற்றையும் விட உசத்தியானது. உங்களைவிட உங்கள் மனைவியைவிட உங்கள் குழந்தையை விட உங்கள் பெற்றோரை விட. விட விட விட விட விட விட விட விட விட விட விட விட விட விட விட விட விட விட. நான் ஒன்றும் காரணமில்லாமல் சொல்வதாக நினைத்து விடக்கூடாது. உதாரணமாக அப்துல் ரஸாக் என்கிற பாகிஸ்தானியக் கைக்கூலி பாராளுமன்றத்தைத் தாக்க முனைந்தான் என்று வைத்துக் கொள்ளுங்கள். உங்களுடைய பெயர் எதேச்சையாக அப்துல் ரஸாக் என்று இருந்தாலோ அல்லது அந்தப் பாகிஸ்தானியக் கைக்கூலியின் முப்பாட்டனும் உங்களுடைய முப்பாட்டனும் ஒன்று விட்ட சகோதரர்களாக இருந்துவிட்டாலோ - இந்தியப் பிரதமர் பாகிஸ்தானில் பிறந்தவர். பாகிஸ்தான் அதிபர் இந்தியாவில் பிறந்தவர். ஆனால் இரண்டு தேசங்களுக்கும் இடையில் அடிக்கடி போர் மூண்டு இரு தரப்பிலும் ஆயிரக்கணக்கில் உயிர்ச்சேதம் ஏற்படவில்லையா. அதைப்போலவேதான் அந்தப் பாகிஸ்தானியக் கைக்கூலியின் முப்பாட்டனும் உங்களுடைய முப்பாட்டனும்கூட ஒன்று விட்ட சகோதரர்களாயிருக்க சாத்தியமுண்டு - இப்படி ஏதோ ஒரு சாத்தியம் இருந்தாலே போதுமானது. நீங்கள் ஒரு தேசத்துரோகி என்று நிரூபணமாக. தேசத்துரோகத்துக்கு என்ன தண்டனை. மரணம். ஆனாலும் உங்கள் தேசப்பற்றை நிரூபித்துக்கொள்ள ஒரே ஒரு வழியிருக்கிறது. என்னவென்றால் நீங்கள் தேசத்துக்காகத் தீக்குளிக்க வேண்டும். ஆனால் அப்துல் ரஸாக் என்கிற பாகிஸ்தானியக் கைக்கூலியின் நாமத்தைத் தாங்கியிருக்கும் நீங்கள் உங்களுடைய தேசப்பற்றை நிரூபிக்கும் விதத்தில் தீக்குளிக்கவில்லையென்றாலும் உயிர் போய்விடும். Catch 22 நிலைமைதான். என்ன செய்ய? தேசம் முக்கியம். பாராளுமன்றம் முக்கியம். ஆக இப்பேர்ப்பட்ட முக்கியத்துவம் வாய்ந்த பாராளுமன்றத்திலிருந்து ஒரு கேள்வி வருகிறதென்றால் பயத்தில் உங்கள் கொட்டை உள்ளே போய்விட வேண்டும். பெண்களுக்கு அந்த உறுப்பு இல்லை என்ற அளவுக்குத்தான் எனக்குத் தெரியுமேயொழிய அவர்களின் அனாட்டமியில் நான் ரொம்ப வீக். கொஞ்சம் சந்து கிடைத்தால் பெண்களின் அனாட்டமிக்குப் போய்விடுகிறது பாருங்கள் இந்தப் புத்தி. இதை அங்கிருந்து கிளப்பி பாராளுமன்றத்துக்கு இழுத்துக்கொண்டு வாருங்கள். பாராளுமன்றம் நடைபெறாத நாட்களில் மட்டும் இந்தக் குமாஸ்தாக்கள் சாவகாசமாக இருந்துவிட முடியும் என்று நினைக்கிறீர்களா? ம்ஹூம்... பாராளுமன்றம் என்றால் என்ன? மக்களாட்சி. இந்தியாவில் நடந்துகொண்டிருப்பது மக்களாட்சிதான் என்பதில் யாருக்குச் சந்தேகமிருக்க முடியும். மக்களே எஜமானர்கள். எனவே பாராளுமன்றத்தைப் போலவே தபால் துறை அதிகாரிகள் மிகுந்து முக்கியத்துவம் அளிப்பது Dak Adalat என்று சொல்லப்படுகிற மக்கள் குறை

தீர்க்கும் மன்றம். மக்களில் யார் யாருக்குத் தபால் துறையில் புகார்கள் நிலுவையில் இருக்கிறதோ அவர்களை அதிகாரிகள் சந்திக்கும் நாள். பெரும்பாலும் புகார்கள் போஸ்டல் லை**ஃ**ப் இன்ஷூரன்ஸ், சேவிங்ஸ் பாங்க், பதிவுத் தபால் பற்றியதாக இருக்கும். ஆனால் எல்லாப் புகார்களின் மீதும் ஏற்கெனவே நடவடிக்கை எடுத்து முடிக்கப்பட்டிருக்கும் என்பதால் வெறும் வடை பஜ்ஜி கா**ஃ**பி குடித்துவிட்டுக் கலையும் சடங்காகவே அமைந்துபோகும் இந்தக் கூட்டம்.1 இம்மாதிரி அதிமுக்கியத்துவம் வாய்ந்த பிரச்னைகளையெல்லாம் கையாள்வதற்கு மீரா போன்ற sincere and dedicated ஆட்களைத்தான் அதிகாரிகள் தேர்ந்தெடுப்பார்கள். அதனால் நாலு பேர் வேலை ஒரே ஆள் தலையில் விழும். ஆ**ஃ**பீஸ் கிளம்பும் ஒவ்வொரு தினமும் எனக்கு இன்னும் சாவு வரவில்லையே என்று மீரா புலம்புவதன் காரணம் இதுதான். இப்படியெல்லாம் லோல் படாமல் இஷ்டப்பட்ட நேரத்துக்கு ஆ**ஃ**பீஸ் போய்க்கொண்டு இஷ்டப்பட்ட நேரத்துக்கு கிளம்பிக்கொண்டு இஷ்டப்படி லீவ் எடுத்துக்கொண்டு - இந்த லீவ் கணக்கில் வராத லீவ் - ஆ**ஃ**பீஸ் வாழ்க்கையை எஞ்ஜாய் பண்ணலாம் என்றால் அதற்கு சில அதிகாரிகளை அனுசரித்துப் போக வேண்டும். அப்படியெல்லாம் அனுசரித்துப் போயிருந்தால் நான் இந்த குப்பை டிபார்ட்மெண்ட்டில் வந்து இப்படி சீரழிந்து கொண்டிருக்க மாட்டேன். இந்நேரம் பென்ஸ் காரில் போய்க்கொண்டிருப்பேன் என்பாள் மீரா. கொள்கைவாதி. என்ன செய்ய? பெண்களுக்காவது இப்படி ஒரு சாய்ஸ் இருக்கிறது. கொள்கையா அனுசரணையா என. ஆனால் கண்ணாயிரம் பெருமாள் போன்ற ஆண் குமாஸ்தாக்களுக்கு அதுவுமில்லை. காலையில் எழுந்து கறிகாய் நறுக்குவது, குழம்பு தாளிப்பது, மீரா குளிக்கும்போது அடுப்பில் எதுவும் தீய்ந்துவிடாமல் கவனித்துக் கொள்வது, குழம்பை இருவருக்காகவும் பாட்டிலில் ஊற்றுவது - சூடாக ஊற்றினால் பாட்டில் வெடித்துவிடும். அதனால் அகலமான ஒரு பாத்திரத்தில் தண்ணீரை ஊற்றி அதன் மேல் குழம்புப் பாத்திரத்தை வைத்து சூடு ஆறியதும் குழம்பை பாட்டிலில் ஊற்ற வேண்டும். இப்படி பெருமாளுக்குப் பல எடுபிடி வேலைகள் உண்டு. பணிப்பெண் வராவிட்டால் உபரியாகப் பாத்திரம் கழுவும் வேலையும் சேரும். அந்த அவசரத்தில் கக்கூஸும் வராது. அதோடயேதான் காலை உணவையும் முடித்துக்கொள்ள வேண்டும். இந்தக் கக்கூஸ் விவகாரத்தைப் பற்றி வேறொரு அத்தியாயத்தில் விரிவாக உள்ளது என்பதால் இங்கே தவிர்க்கப்படுகிறது. மீராவைப்போல் பெருமாள் காலை உணவையும் ஆ**ஃ**பீஸுக்குத் தூக்கிச் செல்வதில்லை. அட்டெண்டென்ஸில் கையெழுத்துப் போட்டவுடனேயே யாராவது அதிகாரி டிக்டேஷனுக்குக் கூப்பிட்டுவிட்டால் என்ன செய்வது? அவனால் கக்கூஸ் போகாமல்கூட இருக்க முடியும். ஆனால் சாப்பிடாமல் இருக்க முடியாது. அஞ்சல் பொருள் கிடங்கு மேனேஜர் சீனிவாசனுக்கு அதில் ஒரு அலாதி இன்பம். யாராவது சரியான நேரத்துக்கு ஆ**ஃ**பீஸ் வந்து அவரிடம் மாட்டாமல் அவருக்குத் திட்டுகிற இன்பத்தைத் தராமல் போனால் அவர்கள் காலைச் சிற்றுண்டியைச் சாப்பிடும்போது பிடித்துவிடுவார். ஏன் வீட்டிலேயே சாப்பிட்டுவிட்டு வர முடியாதா. இது என்ன ஆ**ஃ**பீஸா ஓட்டலா இன்ன பிற. காலையில் வீட்டிலேயே கக்கூஸ் போகாமல் போனால் அன்றைய தினம் பெருமாளுக்கு நரகம். அந்த ஆ**ஃ**பீஸிலிருந்த கழிப்பறையில் மலஜலம் போவதென்பது அவ்வளவு சாதாரணமானதல்ல. பொதுவாக ஆண்கள் சிறுநீர் கழிப்பதென்றால் அங்கேயே புதர்களுக்குள்

மறைந்து விடுவார்கள். அல்லது சுவரோரம். நூறு ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்ட பழைய கட்டிடம் என்பதால் புதர்களுக்கும் மரங்களுக்கும் இடிந்துபோன சுவர்களுக்கும் அங்கே பஞ்சமில்லாமல் இருந்தது. ஆனால் மலம் கழிக்க வேண்டுமானால் கக்கூஸுக்குத்தான் போக வேண்டும். பல வருடங்களாக வெட்டப்படாத புதர்ச் செடிகள் மண்டிக்கிடந்த அந்த ஒற்றையடிப் பாதையில் உயிரைக் கையில் பிடித்துக்கொண்டுதான் போக வேண்டும். பாம்புக் கூட்டம் அவ்வளவு அதிகம். அந்த சர்ப்ப கண்டத்தைத் தாண்டிச் சென்றால் முதலில் வருவது பெண்கள் கக்கூஸ். அதைத் தாண்டி ஆண்கள் கக்கூஸ். வெயிலிலும் மழையிலும் கரைந்துபோன செங்கல் சுவர்கள். மேலே கூரை கிடையாது. ஒருவர் மட்டுமே அமரக்கூடிய ஒரு சிறு பொந்துதான் கக்கூஸ். அப்படியே அமர்ந்தாலும் புட்டம் பின்புறம் இடிக்கும். அந்தப் பொந்தில் தண்ணீர்க் குழாய் கிடையாது. வெளியேதான் வர வேண்டும். ஆனால் ஊழியர்களின் வசதிக்காக மேனேஜர் அங்கு ஒரு பழைய பெயிண்ட் டப்பாவை வைத்திருந்தார். நல்லவேளை அதில் பிடி இருந்தது. கக்கூஸ் வரும் திருவாளர்கள் யாருமே அந்தப் பொந்தில் தண்ணீர் ஊற்றுவது கிடையாது. பெருமாள்தான் கக்கூஸ் வாசலுக்கும் உள்ளுக்குமாக நாலைந்து தடவை பெயிண்ட் டப்பாவைத் தூக்கிக்கொண்டு செல்ல வேண்டும். அஞ்சல் பொருள் கிடங்கிலுள்ள அந்தப் பொந்துக் கக்கூஸின் மற்றொரு முக்கிய விசேஷம் அதற்குக் கதவு கிடையாது. எனவே கக்கூஸ் போகிறவர்கள் பாடிக்கொண்டோ அல்லது வார்த்தை என்று எதுவுமில்லாமல் சத்தமிட்டுக்கொண்டோதான் அங்கே அமர்ந்திருக்க வேண்டும். கண்ணாயிரம் பெருமாளுக்குப் பாட வராது என்பதால் இடைவிடாமல் செருமிக்கொண்டேயிருப்பான். மலங்கழித்துக்கொண்டே செருமுவதிலோ அல்லது இருமுவதிலோ ஒரு முக்கியப் பிரச்னை உள்ளது. மலங்கழிப்பதெனும் வேலையோ மூச்சை முக்கி பிள்ளைத் தாய்ச்சிகள் பிரசவ சமயத்தில் பிள்ளையை வெளித்தள்ளுவது போல் செய்யப்பட வேண்டிய ஒன்று. ஆனால் இருமுவதோ அல்லது செருமுவதோ அதற்கு எதிரானதொரு செயல்பாடு. ஒன்று மூச்சைப் பிடிப்பது. மற்றொன்று மூச்சை வெளிவிடுவது. இந்த இரண்டுக்குமிடையில் போராடிக்கொண்டிருக்கும்போது கதவில்லாத அந்தக் கக்கூஸுக்குள் யாராவது புகுந்துவிடுவார் கள். ம்... என்ன ஒரு மானக்கேடு. ஆனால் அதையெல்லாம் பார்த்தால் முடியுமா. தேவடியாள் வேஷம் போட்டுவிட்டு ஆண்குறியைக் கண்டு பயப்பட முடியுமா. இப்படித்தான் கண்ணாயிரம் பெருமாள் அந்த ஆ∴பீஸிலிருந்த அத்தனை ஆண் ஊழியர்களின் குறியையும் பார்த்துத் தொலைக்க நேர்ந்தது. அந்த அஞ்சல் பொருள் கிடங்கில் மொத்தம் 70 பேர் வேலை செய்தார்கள். அதில் பாதி பேர் ஆண்கள். அவ்வளவு பேருக்கும் அந்த ஒரு பொந்துதான் கக்கூஸ். அந்த ஆ∴பீஸின் தலைமையதிகாரியான கண்காணிப்பாளருக்கு மட்டும் ஒரு அதிநவீனக் கழிப்பறை அவரது ச்சேம்பருக்குப் பின்னே இருந்தது. இடிந்து விழும் ஸ்திதியிலிருந்த அந்தக் கட்டிடம் ஒரு நாள் இடிந்து விழக்கூடாதா என அடிக்கடி நினைத்துக் கொள்வான் பெருமாள். ஸர்க்கிள் ஆ∴பீஸில் இந்தப் பிரச்னை இல்லை என்றாலும் அங்கேயிருந்த பெரும்பாலான அல்லது அத்தனை அதிகாரிகளும் மனநோயாளிகளைப் போலவே நடந்துகொண்டதால் பெருமாளுக்கு ஆ∴பீஸ் போவது என்றாலே ஏதோ தூக்கு மேடைக்குப் போவதுபோல் இருந்தது. ஒரு வருடத்தின் 365 தினங்களில் வாராவாரம் சனி, ஞாயிறு விடுமுறை. Earned லீவ் ஆண்டுக்கு

30 நாள். தற்காலிக விடுப்பு 8 நாள். Restricted விடுப்பு 2 நாள். மருத்துவ விடுப்பு 10 நாள். உலகத்திலேயே இந்தியாவில்தான் பல மதங்களும் பல மகாத்மாக்களும் தோன்றியிருப்பதால் தீர்க்கதரிசிகள் மற்றும் மகாத்மாக்களின் பிறந்த நாட்களுக்கு விடப்படும் விடுமுறைகளைச் சேர்ந்து அரசு விடுமுறை தினங்கள் 16. மற்றும் 104 சனி ஞாயிறுகள். எல்லாவற்றையும் சேர்த்து 164. 365இல் 164 போக 201 நாட்கள்தான் அவன் ஆ.ஃபீஸ் போக வேண்டியிருந்தது. என்றாலும் அதெல்லாம் தப்புக் கணக்காகவே தோன்றியது. சரியான கணக்கு என்னவென்றால் 60 நொடி ஒரு நிமிடம். 60 நிமிடம் ஒரு மணி. 24 மணி நேரம் ஒரு நாள். ஆக 60 x 60 x 24 x 201 = 1,73,66,400 நொடிகளுமே அவன் ஒரு குமாஸ்தாவாக வாழ்வதாகவே உணர்ந்தான். அதனால் பெரும்பாலான நாட்களில் அலுவலகம் போகாமல் நேராக பாருக்குப் போய்விடுவான். ஒரு நாள் ஆ.ஃபீஸ் போகாவிட்டால் மறுநாள் போய் முதல் நாள் வராததை எப்படிச் சமாளிப்பதென்ற குழப்பத்தில் அடுத்த நாளும் போகாமலிருந்து விடுவான். இப்படியே அந்த வாரம் முழுவதும் டிமிக்கி கொடுத்துவிட்டு திங்கட்கிழமை காலை நல்ல பிள்ளை போல் சாதுவாகப் போய் நிற்பான் கண்ணாயிரம் பெருமாள். கன்னாபின்னாவென்று கத்துவார் அதிகாரி. ஆனால் எப்போதாவது ஒரு லக்கி ப்ரைஸ் அடிப்பதுண்டு. யாராவது ஒரு பெரிய அரசியல் தலைவர் மண்டையைப் போட்டால் திடீர் விடுமுறை விடுவார்களே அப்போது. இயற்கை மரணமோ அல்லது துர்மரணமோ எதுவாக இருந்தாலும் சரி. இதற்காகவே செய்தித்தாள் படிக்க காலையில் நேரமிருக்காது என்றபோதிலும் மேலோட்டமாக முதல் பக்கத்தை ஒரு நோட்டம் விடும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டான் பெருமாள். பெரிய பெரிய அரசியல் தலைவர்கள் பிரதம மந்திரி ஜனாதிபதி என்று எத்தனை பேர் இருக்கிறார்கள். அதிலும் இந்தியாவில் எண்பது வயதைத் தாண்டி நடப்பதற்கே தள்ளாடும் காலத்தில்தானே பெரிய பதவி கிடைக்கிறது. அப்படி பதவியிலிருந்து யாரேனும் ஒருவர் மண்டையைப் போட்டு தனக்கு இன்றைய தினம் இந்த ஆ.ஃபீஸ் நரகத்திலிருந்து விடுதலையளிக்க மாட்டார்களா என்று தினந்தோறும் ஏங்குவான் கண்ணாயிரம் பெருமாள்.

***

சிலருடைய வாழ்க்கை வரலாற்றை ஒரு ஸ்டாம்ப் சைஸில் அடக்கிவிடலாம். அதே போன்றதுதான் கண்ணாயிரம் பெருமாளின் வாழ்க்கையும். இல்லை. அதைவிடவும் கம்மி. இவனுடைய வாழ்க்கையை ஒரே சொல்லில் அடக்கிவிடலாம். அந்தச் சொல்: மலம். ஆம். இது பற்றி பெருமாள் தன்னுடைய பல கதைகளிலும் போதும் போதுமென்கிற அளவுக்கு எழுதியிருக்கிறான். சிறு வயதில் தன் சாதியைச் சேர்ந்த கூட்டாளிகள் வீடுவீடாகச் சென்று எடுப்பு கக்கூஸிலிருந்து கூடையில் அள்ளி வந்த மலத்தை பீ சந்து என்று அழைக்கப்படுகிற சந்தில் ஒன்றாகச் சேர்ந்து - இதற்கென்று தள்ளு வண்டிகளுடன் கூடிய பீப்பாய்கள் உண்டு - அதை மல லாரியில் - எங்கே வாய்விட்டுச் சொல்லிப் பாருங்கள். மல ராலி மல ராலி மல லாலி. ம்ஹூம். மல ராமல ராலி மல லாரி. ம்... இந்த மல லாரி என்ற வார்த்தையைக்கூட மலச்சிக்கல் கொண்டவன் முக்குவதைப்போல் முக்கி முக்கித்தான் எழுத வேண்டியிருக்கிறது. எனவே பெருமாளும் நண்பர்களும் பீ ராலி - சே மறுபடியும் அதேபோல் வந்து தொலைக்கிறது - மல லாரியை பீ லாரி என்றே நாவுக்குச் சுலபமாக

அழைத்து வந்தனர் - அந்தப் பீ லாரியில் ஏற்றுவார்கள்.

இது நடந்து இப்போது 35 ஆண்டுகள் கழிந்த பிறகும் நித்திரையில் திடீர் திடீரென்று பெருமாளை இந்த மல நாற்றம் அமுக்கிவிடுகிறது. மூச்சுவிட முடியாமல் திணறி குமட்டிக் கொண்டு எழுந்து பார்த்தால் பக்கத்தில் மீரா படுத்திருப்பாள். நீங்கள் self pity என்று சொல்வீர்களோ அல்லது வேறு என்ன சொல்வீர்களோ பெருமாளுக்கு மிகவும் ஆயாசமாக இருக்கும்; இந்தப் பீக்கனவிலிருந்து தனக்கு என்றுமே விடுதலை கிடையாதா என்று. ஆனால் தண்ணியடித்துவிட்டுப் படுக்கும் நாட்களில் மட்டும் இந்தப் பிரச்னை இருக்காது. அதற்காக தினமுமா தண்ணியடிக்க முடியும். விடுங்கள். இந்தப் பீ distribution வேலை மட்டுமல்ல. அந்த ஊரில் அவன் குடியிருந்த சேரிப் பகுதிகளில் எடுப்புக் கக்கூஸும் கிடையாது. ஆணோ பெண்ணோ கருவேல மரங்களுக்கிடையே ஒதுங்க வேண்டியதுதான்.

இந்திய ஏழைகளின் உணவில் பழங்களோ நார்ச்சத்துள்ள காய்கறிகளோ கிடையாது என்பதால் அநேகமாக அனைவருக்குமே மலச்சிக்கலும் அதன் விளைவான மூலமும் இருக்கும். அதற்கு கண்ணாயிரம் பெருமாளும் விதிவிலக்கு அல்ல என்பதால் ஒவ்வொரு நாள் மலங்கழிக்கப் போகும்போதும் அவனுக்கு அது ஒரு கடினமான பிரசவமாகத்தான் இருக்கும். பற்களை நறநறவென்று கடித்து முக்குகிற முக்கில் கண்களில் பூச்சி பறக்கும். பிரசவத்தை சற்றே லகுவாக்கும் பொருட்டு இரண்டு பெரிய கற்களைத் தேடி எடுத்து வந்து - செங்கற்களாக இருந்தால் உத்தமம் - அதன் மேல் ஏறி அமர்ந்து மலம் கழிக்கும் வழக்கத்தை மேற்கொண்டான் பெருமாள். அதனால் தானோ என்னவோ அவனது புட்டங்கள் ஸ்த்ரீகளுடையதைப் போல் பெருத்து நடையும் அவர்களைப் போலவே ஆகிவிட்டது. சிறு வயதில் அவனுக்கு மற்ற பையன்கள் வைத்த பட்டப் பெயர்: சூத்தாட்டி.

கிட்டத்தட்ட இந்த மூலப் பிரச்னை அவனை முப்பது வயதுவரை துரத்தியது. பல சமயங்களில் வலி தாங்க முடியாமல் பாத்ரூம் குழாயைத் திறந்துவிட்டு அந்தத் தண்ணீரில் ஆசனவாயைக் காட்டியபடி குனிந்து நின்றதும் உண்டு. இதைப் பற்றி விலாவாரியாக எக்ஸிஸ்டென்ஷியலிசமும் ஃபேன்ஸி பனியனும் நாவலில் எழுதியிருக்கிறான். குறிப்பாக இந்தச் சம்பவத்தைப் படித்துத்தான் மணி, பெருமாளுக்கு நண்பனானான். ஆனால் என்ன ஒரு மூடத்தனம் என்று இப்போது தோன்றுகிறது. காரணம், பெருமாள் இப்போது மூல ஸ்பெஷலிஸ்ட் ஆகிவிட்டான். வலியெடுத்தால் ஒரு பேசினில் இதமான வெந்நீரை நிரப்பி அதில் ஒரு ஐந்து நிமிடம் அமர்ந்திருந்தால் வலி போய்விடும். என்ன செய்வது. பெருமாள் இந்த விஷயத்தில் அப்போது ஒரு கத்துக்குட்டிதானே. பிறகு ஒரு சித்த வைத்தியர் மூலமாகத்தான் மூலம் அவனுக்கு குணமாயிற்று. இனிமேல் உங்களுக்கு இந்தப் பிரச்னையே வராது என்று உறுதியளித்தார் அவர். ஒரு பதினைந்து வருடங்கள் இன்பமாய்க் கழிந்தது. சாப்பிடும்போது இரண்டு பச்சை மிளகாயைக் கடித்துக்கொள்வான். சிகரெட்டாக ஊதித்தள்ளுவான். விடிய விடியப் படிப்பான். எழுதுவான். குடிப்பான். எதற்குமே எட்டிப் பார்க்கவில்லை மூலம். அப்படியே இருந்திருக்கலாம். துரதிருஷ்டம் யாரை விட்டது. திடீரென்று அவனுக்குத் தன்னை இளமையாக்கிக்கொள்ள வேண்டுமென்று தோன்றியது. எனவே தனது நண்பரான நாதமுனி என்ற

பெயர் கொண்ட சித்த வைத்தியரிடம் சென்று தன்னை rejuvenate பண்ணிக்கொள்ள வேண்டுமென்று கூறினான். அவர் கொடுத்த மருந்தை ஒரு மண்டலம் சாப்பிட்டான் பாருங்கள். முடிந்தது கதை. அந்த மருந்தினால் அவனது உடம்பில் இரண்டு மாற்றங்கள் நிகழ்ந்தன.

1. செக்ஸைப் பொறுத்தவரை அசுர வீர்யம் கூடியது. மணிக்கணக்கில் கலவி கொள்ள முடிந்தது.

2. அவனை விட்டு விலகியிருந்த மூலம் திரும்பவும் வந்து ஒட்டிக்கொண்டது.

வலி என்றால் இந்த வலி அந்த வலி அல்ல. தற்கொலையே செய்துகொள்ளலாம் என்று எண்ண வைக்கும் வலி. அப்போது பார்த்து ஒரு நாள் தினசரியில் படித்த செய்தி வேறு அவனை வெகுவாக பீதியுறச் செய்தது. மூலவியாதியினால் வலி தாங்க முடியாமல் தற்கொலை செய்துகொண்ட ஒருவனைப் பற்றிய செய்தி அது.

காலையில் மலங் கழிக்கப் போவது பற்றி நாள் பூராவும் பயமாக இருந்தது. ஆசனவாயைக் கண்ணாடியால் கீறுவதுபோலவும் ஊசியால் குத்துவதுபோலவும் வலித்தது. நாள் பூராவும் இடைவெளியேயில்லாமல் இப்படிக் கிழித்துக்கொண்டும் குத்திக்கொண்டும் இருந்தது கண்ணாடியும் ஊசியும். நாதமுனியிடம் மீண்டும் சென்றான். அவர் சிங்கப்பூர் சென்றிருந்தார். வர நாட்களாகும் என்று தெரிந்தது. அதற்குள் நண்பர்களும் தெரிந்தவர்களும் விதவிதமான கதைகள் சொன்னார்கள். ஒருத்தர் சொன்னார். கக்கூஸ் போனாராம். ரத்தமாய்க் கொட்டியதாம். அதைப் பார்த்து கக்கூஸிலேயே மயக்கம் போட்டு விழுந்துவிட்டாராம். உள்ளே போய் நீண்ட நேரமாகியும் அன்னார் வெளியே வராததால் வீட்டில் உள்ளவர்கள் கதவை உடைத்து அவரை வெளியே எடுக்க வேண்டியிருந்ததாம். அதைக் கேட்டதிலிருந்து பெருமாள் கக்கூஸ் கதவைத் தாளிட்டுக் கொள்ளாமலேயே போக ஆரம்பித்தான்.

பெருமாளின் நண்பன் ரஞ்சன் ஒரு கதை சொன்னான். ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு நடந்த கதை. மூலத்தால் அவஸ்தைப்பட்டு ராயப்பேட்டை ஆஸ்பத்திரிக்குப் போயிருக்கிறான். மூலவியாதிக்காரர்களுக்கென்றே ஒரு தனிப்பிரிவு. அதில் நீண்டதொரு கியூ. இவனுடைய முறை வருவதற்கு ஒரு மணி நேரம் ஆகியிருக்கிறது. ஆனால் இவன் முறை வரும்போது இவனுக்கு பின்னால் ஒரு ஐம்பது பேர்.

அந்த ஒரு மணி நேரமும் வலியில் துடித்தபடியே நின்றிருக்கிறான். பக்கத்தில் துணைக்கு அவன் அப்பா.

காக்கி நிறத்தில் அரைக்கால் நிக்கரும் பனியனும் போட்ட முரட்டு ஆசாமிகள் மூன்று பேர். இவனுடைய ஆடைகளைக் கழற்றச் சொல்கிறார்கள். ஆடைகளைக் கழற்றிவிட்டு அத்தனை பேர் முன்னிலையில் ஜட்டியை கழற்றக் கூச்சப்பட்டு நின்றிருக்கிறான் இவன்.

ஜட்டியையும் கழட்டு உனக்கு மட்டும் ஸ்பெஷலா வாய்லயா வந்திருக்கு பைல்சு என்று ஒரு காக்கிச் சட்டை கத்த இவன் ஜட்டியையும் கழற்றியிருக்கிறான்.

பக்கத்தில் ஒரு பெஞ்ச். அது பூராவும் ஒரே ரத்தவெள்ளம். அதன் மேல் மல்லாந்து படுக்கச் செய்து இவனுடைய இரண்டு காலையும் இரண்டு

காக்கிச் சட்டைகள் வலுவாகப் பிடித்துக் கொள்ள ஒரு காக்கிச் சட்டை கையிலிருந்த ஆபரேஷன் கத்தியால் இவனுடைய குதத்தைப் பிடித்து பிதுக்கி... சர்ர்ரக்.. ஒரே அறு...

ஐயோ ஐயோ சொல்லாதே சொல்லாதே கேட்கும்போதே செத்து விடுவேன் போலிருக்கிறது. என்னடா இது கசாப்புக் கடையா ஆஸ்பத்திரியா நிஜமாத்தான் சொல்றியா என்று அலறினான் பெருமாள்.

நிஜம்தான். நூற்றுக்கு நூறு நிஜம். அது மட்டுமல்ல. அந்த நேரம் பார்த்து அவன் அப்பா டீ குடிக்கப் போய்விட்டாராம். பாவம். முதியவர். அவரும் இவனோடு சேர்ந்து எத்தனை நேரம்தான் க்யூவில் நிற்பார்.

லுங்கியைக்கூட உடுத்திக்கொள்ள முடியாமல் அடிமைப் பெண் எம்ஜியார் பாணியில் இரண்டு கைகளையும் பக்கவாட்டில் ஆட்டியபடி தாங்க முடியாத வலியும் அதிர்ச்சியுமாக வெளியே வந்திருக்கிறான் ரஞ்சன்.

ஆனால் இரண்டு ஆண்டுகள் கழித்து மீண்டும் அதே பிரச்னை. வலி, ரத்தம். இந்த முறை அரசாங்க ஆஸ்பத்திரிக்குப் போகவில்லை. அவன் அப்போது வேலையில் இருந்ததால் தனியார் மருத்துவமனைக்குப் போயிருக்கிறான். அன்பான கவனிப்பு. அழகான செவிலியர். மயக்க ஊசி போட்ட பிறகே ஆபரேஷன்.

ஆனாலும் பயனில்லை. திரும்பவும் வந்துவிட்டது மூலம். இப்போது சித்த வைத்தியத்தின் பக்கம் வந்து நத்தை பஸ்பம் நாக பஸ்பம் என்று சாப்பிட்டுக்கொண்டிருக்கிறான்.

மற்றொரு நண்பர் சொன்னார். நத்தை சாப்பிட்டால்மூலம் ஓடிப்போகும் என்று.

உயிருடனா சமைத்தா.

நல்ல வேளை சமைத்துதான்.

உயிருடன் சாப்பிட வேண்டும் என்று சொல்லியிருந்தால்கூட சாப்பிட்டிருப்பான். அந்த நிலைமையில் இருந்தான் பெருமாள். நத்தைக்கு இந்த நகரத்தில் எங்கே போவது. (அதனால் கிராமத்திலிருந்து ஆ∴பீஸுக்கு வரும் கடைநிலை ஊழியர்கள்தான் பெருமாளுக்காக வயல் நத்தையைக் கொண்டுவந்து கொடுத்தார்கள். அது செத்து விடாமலிருக்க ஒரு சிறிய வாளியில் தண்ணீரை நிரப்பி அதில் அந்த நத்தைகளைப் போட்டு வைத்திருப்பான் பெருமாள். நத்தைகள் வாளியை விட்டு வெளியே வந்து ஆ∴பீஸில் அங்குமிங்கும் ஊர்ந்து கொண்டிருக்கும். அதை அவ்வப்போது பிடித்து வந்து மீண்டும் வாளியிலேயே போட்டு சாயங்காலம் கிளம்பும்போது எல்லாவற்றையும் ஒரு ப்ளாஸ்டிக் பையில் போட்டு எடுத்துச் செல்வான். ஆனால் நத்தையாலும் ஒன்றும் செய்ய முடியவில்லை). சிலர் துத்திக்கீரை என்றார்கள். சிலர் பாதாம் பிசின் என்றார்கள். சிலர் பேயன்பழம் என்றார்கள் (ஒரு டஜன் 60 ரூபாய்). சிலர் கருணைக் கிழங்கு என்றார்கள். இப்படிப் பலவித இயற்கை வைத்திய ஆலோசனைகள் இலவசமாய்க் கிடைத்தன.

எனக்கு பேசின் பூராவும் ரத்தமாய்க் கொட்டியது. பன்றிக் கறி சாப்பிட்டதும் சரியாகிவிட்டது என்றார் ஒருத்தர். மீராவிடம் சொன்னான். அவள் அய்யங்கார் சமூகத்தைச் சேர்ந்தவள் என்றாலும் பெருமாளுக்காக விரால்

மீனே சமைக்கக்கூடியவள்.

விரால் மீன்தான் மீன்களிலேயே உயர்ந்த ரகம். மீன்களெல்லாம் ஐஸ் கட்டியில் உறைந்து கிடக்கும்போது விரால் மீன் மட்டும் பீப்பாய் தண்ணீரில் துள்ளிக்கொண்டு கிடக்கும்.

ஒருநாள் பெருமாள் ஆஃபீஸ் விட்டு வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தபோது சில பொடியன்கள் விரால் மீன்களைத் தெருவில் வைத்து விற்றுக்கொண்டிருந்ததைப் பார்த்தான். மீன்கள் உயிரோடு இருந்தன. விலையோ கொள்ளை மலிவாயிருந்தது. வீட்டுக் கிணற்றிலிருந்து பிடித்துக்கொண்டு வந்தார்களாம். ஒரு மீன் நாற்பது ரூபாய். முழங்கை நீளம் இருந்தது. மார்க்கெட்டில் நிச்சயம் 200 ரூபாய் இருக்கும்.

பொதுவாக விடுமுறை தினங்களில்தான் அசைவம் சமைப்பது. அன்றோ செவ்வாய்க்கிழமை. இப்போது இந்த மீனை வாங்கிக்கொண்டு போனால் மீராவுக்கு வீண் சிரமம் என்று தோன்றியது. ஆனால் விலையோ அவன் ஆசையைத் தூண்டியது.

ஆனால் பொடியன்களிடம் மீன் வியாபாரிகளிடம் இருப்பது போன்ற கத்தி எதுவும் இல்லை. அதனால் வெட்டாமல் உயிர் மீனாகவே பாலிதீன் கவரில் போட்டுக் கொடுத்துவிட்டார்கள்.

வீட்டுக்கு வந்து அந்தப் பெரிய விரால்மீனைக் கொல்வதற்கு முயற்சி செய்தான். மீனை நறுக்கி கழுவி வைத்துவிட்டால் மீரா வந்தவுடன் சமைப்பதற்கு வசதியாக இருக்கும் என்பது அவனுடைய எண்ணம்.

பையின் முனையை இறுகப் பிடித்துக்கொண்டு கட்டையால் மீனை அடித்தான். ம்ஹூம். வழுக்கிக்கொண்டு வெளியே விழுந்து துள்ளியது. அதை எப்படிக் கொல்வது என்று யோசித்துக்கொண்டிருந்தபோது ஆஃபீஸிலிருந்து வந்து சேர்ந்தாள் மீரா.

பெருமாளையும் மீனையும் பார்த்துப் புரிந்துகொண்ட அவள் இந்துவிடம் கேட்டுப் பாருங்களேன் என்றாள்.

அதுவும் சரிதான் என்று சொல்லிவிட்டு இந்துவின் வீட்டுக்குக் கிளம்பினான்.

இந்து அவன் தம்பி மனைவி. மீனவர் சமூகத்தைச் சேர்ந்தவள். காதல் திருமணம். அவர்கள் வீடு பெருமாள் வீட்டுக்குப் பக்கத்தில் இருந்தது.

யாரிடமாவது நறுக்கி எடுத்து வாருங்கள், சமைத்துத் தருகிறேன் என்றாள் இந்து.

அவளுக்கு சங்கரா மீனே நறுக்கத் தெரியாதாம். எங்கே விராலை நறுக்குவது.

சமைப்பது என்றால் மீராவே பிரமாதமாகச் செய்வாளே என்று நினைத்துக்கொண்டு திரும்பினான் பெருமாள். மீராவிடம் விஷயத்தைச் சொன்னான். அப்படியா என்றவள் புடவையை சற்று இழுத்து இடுப்பில் செருகிக்கொண்டு மீனின் கழுத்தை ஒரே பிடியில் பிடித்தாள்.

பாம்பின் கழுத்தை வாகாகப் பிடிக்கும் பாம்பு பிடிப்பவர்களின் ஞாபகம் வந்தது பெருமாளுக்கு.

மற்றொரு கையால் அதன் வால் பக்கத்தைப் பிடித்து அரிவாள் மனையில் வைத்து தலையை அறுக்க ஆரம்பித்தாள் மீரா.3 ஒரு அய்யங்கார் பெண் செய்கிற வேலையா இது. போன ஜென்மத்தில் மீனவர் சமூகத்தில் பிறந்திருப்பாய் போலிருக்கே என்றான் பெருமாள்.

அரிவாள்மனையிலிருந்து பார்வையை விலக்காமல் ம்க்கும்... பேச்சில் ஒன்றும் குறைச்சல் இல்லை என்றாள் அவள்.

சமைத்து முடித்து வறுத்த மீனும் குழம்பும் இந்து வீட்டுக்கும் கொடுத்து அனுப்பினாள் மீரா.

நீயும் கொஞ்சம் சாப்பிட்டுப் பாரேன், அற்புதமா இருக்கு என்றான்.

வேண்டாம் என்று மறுத்துவிட்டாள் வழக்கம்போல.

ஒரு நாள் என்ன காரணம் என்று கேட்டான்.

என் பெற்றோருக்குத் தரும் மரியாதை என்றாள்.

சரி. விரால் நந்தையெல்லாம் சமைக்கலாம். பன்றி சமைப்பாயா.

அதெல்லாம் பிரச்னையில்லை. என்னைப் பொறுத்தவரை மாமிசம் சமைப்பதே பெரிய விஷயம். இதில் ஆட்டுக்கும் பன்றிக்கும் ஒரு வித்தியாசமும் இல்லை. எல்லாம் மாமிசம்தான் என்றாள் மீரா.

பன்றிக்கறி ஃபூட் வேர்டில் கிடைக்கும் என்றார்கள். வாங்கி வந்தான்.

வெகு ருசியாய் சமைத்திருந்தாள் மீரா. ஆனால் அதிலும் எந்தப் பலனும் தெரியவில்லை. ரத்தம் கொட்டுவதும் நிற்கவில்லை. வலியும் குறையவில்லை. அதற்குள் நாதமுனி ஊரிலிருந்து திரும்பிவிட்டதால் அவரிடமிருந்து வாங்கிய மருந்துகளையும் சாப்பிட்டான். கூடவே அவரும் பன்றிக்கறியை சிபாரிசு செய்தார்.

பன்றிக்கறியில் ஒன்றும் குணம் தெரியவில்லை டாக்டர் என்றான். எங்கே வாங்கினீர்கள் என்றார். சொன்னான்.

அடடா தவறு செய்துவிட்டீர்கள். அது கொழுப்பு நீக்கிய கறி. மூலத்துக்கு நல்லது பன்றியின் கொழுப்பு. அதனால் லோக்கலாக வாங்கிப் பாருங்கள். கொழுப்பை வார்னு சொல்லுவாங்க என்றார். லோக்கலாக கோயம்பேடு அருகில் கிடைக்கும் என்று தெரிந்தது. அவன் வீடு இருக்கும் சின்மயா நகரிலிருந்து பக்கம்தான்.

தேடிக் கண்டுபிடித்துப் போனான். நல்ல வெண்பன்றி. கோயம்பேடு போலீஸ் ஸ்டேஷனிலிருந்து சற்றே தள்ளி சாலையின் ஓரத்தில் அமர்ந்து இருந்தனர் அந்த இருவரும். இருபத்தைந்து வயது மதிக்கத்தக்க ஒரு பெண். அவள் தந்தையைப்போல் தோற்றமளித்த ஒரு முதியவர். இருவரும் தெலுங்கில் பேசிக்கொண்டார்கள்.

ஒரு கிலோ ஐம்பது ரூபாய். ஆச்சரியமாக இருந்தது. ஏழையின் பிழைப்பு இப்படித்தான் இருக்கும். வார் வேணுமா ஐயா என்றாள்.

ஆமாம் என்றான்.

மூலத்துக்கு நல்லது என்று சொல்லி பட்டை பட்டையாக இருந்த வாரைப் பிய்த்து எடுத்துக் கொடுத்தாள். அன்றைய தினம் வீட்டுக்கு கண்ணனும் அவன் மனைவி பானுவும் வந்திருந்தனர். கண்ணன் அவனுடைய கடைசித்

தம்பி. மீரா கறி சமைப்பதைப் பார்த்துவிட்டு என்ன கறி இது, எலும்பே இல்லாம நல்லா இருக்கே என்று ஆச்சரியப்பட்டாள் பானு. விஷயத்தைக் கேட்டதும் அலறி அடித்துக்கொண்டு ஓடினாள் பானு. காரணம் அவள் முஸ்லிம். பலன் ஆச்சரியமாக இருந்தது. ஒரே நாளில் குணம் தெரிந்தது. தொடர்ந்து சாப்பிட்டதில் பூரண குணம்.

நாதமுனி கொடுத்த மருந்தில் ஏன் குணமாகவில்லை என்ற குழப்பமும் கடைசியில் தீர்ந்தது. அவர் குறித்துக் கொடுத்திருந்த ஒரு முக்கியமான மருந்தை அவன் மருந்து கடையிலேயே விட்டுவிட்டு வந்துவிட்டான்.

இதற்குப் பிறகு பெருமாளுக்கு மூலத்தைப் பற்றிய ஒரு தெளிவான பார்வை கிடைத்தது. உடல் உஷ்ணமும் மலச்சிக்கலும்தான் மூலத்துக்குக் காரணம் என்பதைப் புரிந்துகொண்டு அவற்றிலிருந்து தன் தேகத்தைப் பாதுகாத்துக்கொள்ள ஆரம்பித்தான். அப்யங்கம் என்று சமஸ்கிருதத்தில் சொல்லப்படுகிற எண்ணெய்க் குளியலை வாரத்தில் மூன்று தினங்கள் மேற்கொண்டான். எண்ணெய்க் குளியல் என்றால் சாதா எண்ணெய்க் குளியல் அல்ல. அந்த எண்ணெயைக் கீழ்காணும் விதமாக தயாரிக்க வேண்டும்.

சோற்றுக் கற்றாழைக் கீற்றுகளை எடுத்து கத்தியால் அதன் வயிற்றுப் பகுதியை ஒரு பக்கத்தில் வகுந்தெடுக்க வேண்டும். பிரித்தால் புத்தகத்தைப் பிரிப்பதுபோல் இருக்கும். அதனுள்ளே வெந்தயத்தை நிரப்பி கீற்றை நூலால் கட்டி மூன்று நாட்கள் வீட்டினுள் நிழலில் வைத்தால் வெந்தயம் முளை கட்டிவிடும். இப்போது அதை சில தினங்கள் வெய்யிலில் காய வைத்து நன்கு சருகாகக் காய்ந்ததும் நூலை நீக்கிவிட்டு எல்லாவற்றையும் மிக்ஸியில் போட்டுப் பொடியாக்கிக் கொள்ளவேண்டும். பிறகு நல்லெண்ணெய் தேங்காய் எண்ணெய் ஆமணக்கெண்ணெய் மூன்றையும் சம அளவு எடுத்து சூடாக்கி ஆற வைத்து கலந்து அதில் இந்தப் பொடியைக் கலக்கி விட வேண்டும். இந்த எண்ணெயைத் தேய்த்தால் முடி காடாக வளரும் என்பதால் உடம்புக்கு ஆலிவ் ஆயில் உசிதம். ஒரு மணி நேரம் ஊற விட்டுக் குளித்தால் தேகம் மலர்ந்துவிடும்.

மூலத்தை விரட்ட கண்ணாயிரம் பெருமாள் கண்டுபிடித்த வேறு சில வழிமுறைகளாவன:

> அ. இரவில் உறங்கச் செல்லும் முன்னர் ஆமணக்கெண்ணெயை இடது கை நடு விரலிலோ ஆட்காட்டி விரலிலோ நன்கு தடவி அதை ஆசனவாய்க்குள் விட்டு எடுக்க வேண்டும். கிட்டத்தட்ட பெண்கள் சுயபோகம் செய்வது போல். இதற்கு ஆங்கிலத்தில் dilation என்று சொல்வர்.
>
> ஆ. உணவுக்குப் பிறகு கொய்யா திராட்சை ஆப்பிள் போன்ற பழங்களைச் சாப்பிட வேண்டும். அதிலும் திராட்சை முதன்மையான மலமிளக்கி. பேயம்பழத்தைத் தவிர மற்ற எந்த ரக வாழைப்பழமும் மலச்சிக்கலைப் போக்க உதவாது. மூலத்துக்கு வாழைப்பழத்தைப் பரிந்துரை செய்யும் school of thought-உடன் பெருமாளுக்குச் சற்றும் உடன்பாடு இல்லை.

பழம் என்றதும் எனக்கு புளியம்பழம்தானே பிடிக்கும் என்று

விதண்டாவாதம் செய்யக்கூடாது. மேற்கண்ட விஷயங்களெல்லாம் கண்ணாயிரம் பெருமாள் தன் உடலையே சோதனை எலியாக்கி பல்வேறு சொல்லொணாத் துயரங்களை அனுபவித்து சுயமாகக் கண்டுபிடித்தவை. Plagiarise செய்து கொடுக்கும் சரக்கு அல்ல.

இப்போதெல்லாம் அவன் தன் காலை உணவாக வெறும் பழங்கள் மட்டுமே எடுத்துக்கொள்கிறான்.4 திராட்சை கொய்யா பப்பாளி அத்திப்பழம் Apricot போன்றவை அந்தப் பட்டியலில் உள்ள பழங்கள். உலரவைத்த அத்திப்பழம் மருந்துக் கடைகளில் கிடைக்குமென்றாலும் அது விலை அதிகம். புத்தம் புதிய பழமென்றால் அது சென்னையில் ஒரே ஒரு கடையில்தான் கிடைக்கிறது. ஜவுளிக்கடை மற்றும் ஹோட்டல்களைப் போல் அந்தக் கடைக்கும் சென்னையில் நாலைந்து ப்ராஞ்ச்சுகள் உண்டு. அதிலேயே காய்கறிப் பிரிவும் உள்ளது. அங்கே வரும் பெண்களைப் பார்க்கவே வாரத்தில் இரண்டு முறை அங்கு செல்வதை வழக்கமாகக் கொண்டிருக்கிறான் பெருமாள். நிச்சயமாக அந்தப் பெண்கள் யாரும் தமிழ்ப்பெண்கள் அல்ல. தமிழர்களுக்குப் பழம் சாப்பிடும் வழக்கம் இல்லையோ என்னவோ. பெருமாளுக்கு அதைப் பற்றியெல்லாம் அக்கறையில்லை. அவன் கவலை அவன் மூலம். அப்பர் மிடில் க்ளாஸ் மற்றும் அப்பர் க்ளாஸைச் சேர்ந்த தெலுங்கு, கன்னடம், மலையாளம் மற்றும் வட இந்திய முகங்களையே அங்கு காண முடிந்தது. தமிழ் இரண்டு சதவிகிதம் இருக்கலாம். இப்படி இது ஒரு பூர்ஷ்வா கடையாக இருந்தாலும் விலை என்னவோ மற்ற இடங்களைவிட மலிவுதான். மேலும் இந்தக் கடையில் பெருமாள் அவதானித்த ஒரு முக்கிய விஷயம் என்னவென்றால் இங்குள்ள பணிப்பெண்கள் யாவருக்கும் முலைகளே இல்லை என்பது. தயவுசெய்து இதைப் பாலியல் பிரச்னை ஆக்காதீர்கள். இது முழுக்க முழுக்க வர்க்க முரண்பாடுகள் சம்பந்தப்பட்ட பிரச்னை. அந்தப் பணிப்பெண்கள் ஏன் இப்படி நறுங்கிப்போய் கிடக்கிறார்கள் என்பதை Communist Manifestoவையும் மக்ஸீம் கார்க்கியின் தாயையும் படித்துவிட்டு யோசியுங்கள். அந்தக் கடையின் அண்ணா நகர் ப்ராஞ்ச்சில் மட்டும் அப்படியில்லை. மைலாப்பூர் ப்ராஞ்ச்சிலும் இதே நிலைமைதான். ஆனால் இந்தக் கடையில் பழங்களும் காய்கறிகளும் வாங்க வரும் பெண்களுக்கோ முலைகள் கறவை மாட்டு மடிகளைப்போல் இருக்கக் காரணம் என்ன? அவர்களைப் பார்க்கும்போதெல்லாம் பெருமாளுக்கு ரோஜா படத்தில் மனீஷா கொய்ராலா அர்விந்த் சாமியைப் பார்க்க ஓடி வருவாளே அந்த ஸீன்தான் ஞாபகம் வந்து தொலைக்கிறது. பெர்க்மெனையும் ஃபெலினியையும் கோதாரையும் பார்த்து என்ன. ரோஜாவில் அந்த ஸீனில் மனீஷா கொய்ராலா ஓடி வரும்போது தியேட்டரில் விசில் சத்தம் காதை பிளக்கிறதே... அந்த ரசிகர்களுக்கும் தனக்கும் என்ன வித்தியாசம் என்று ஒருகணம் நினைத்துப் பார்ப்பான் பெருமாள். மறுகணமே கலையை காமம் வென்றுவிடும். காமமும் கலைதானே என்கிறீர்களா? அப்படியானால் இப்படி மாற்றிக்கொள்ளலாம். கலையை ஆபாசம் வென்றுவிடும்.

மேற்படி பழக்கடை மட்டுமல்ல. தி.நகரிலுள்ள ஒரு பிரபல ஜவுளிக் கடையிலும் இதே நிலைமைதான். பழக்கடையாவது பரவாயில்லை. பழக்கடை. பழத்துக்கும் முலைக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. கவிஞர்களை விட்டுத்தள்ளுங்கள். Poor souls. அவர்களுடைய கற்பனையைப் பற்றி யாருக்கு என்ன கவலை. ஆனால் கச்சைகளை விற்கும் கடைக்கும் முலைகளுக்கும் சம்பந்தம் உண்டுதானே.

வாஸ்தவத்தில் கச்சைகளைக் குறித்து சென்னைவாழ் பெண்கள் நன்றி கூற வேண்டுமானால் அந்தக் கடைக்குத்தான் கூற வேண்டும். அறுபதுகளில் நவீன ரகக் கச்சைகளை முதன் முதலில் அறிமுகம் செய்தது அந்தக் கடைதான். அங்கே ஒருமுறை ப்ளவ்ஸ் அளவு கொடுக்க மீராவுடன் சென்றபோது ஒரு சிறிய கலாச்சார அதிர்வுக்கு ஆட்பட்டுவிட்டான் பெருமாள். வருகிற பெண்களையெல்லாம் மானாங்கன்னியாக அளவெடுத்துக் கொண்டிருந்தவர் அதை நோட்டுப் புத்தகத்தில் குறிப்பெடுத்துக் கொண்டிருந்த பெண்ணிடம் சத்தம் போட்டுச் சொல்லிக் கொண்டிருந்தான்.

13, 36, 18, நெக் - 7, 30, ஸ்லீவ் லெங்க்த் - 6 1/2 லூஸ் - 6 1/2 8

12, 32, 18, நெக் - 6, 32, ஸ்லீவ் லெங்க்த் - 5 1/2 லூஸ் - 5 1/2 8

10, 28, ...

இந்த 28ஐக் கேட்டதும் ஒருகணம் நிமிர்ந்து பார்த்தான் பெருமாள். யாரோ கல்லூரி மாணவி. பெருமாளுக்கு ஒரே லஜ்ஜையாகப் போயிற்று. மீரா இதனாலெல்லாம் பாதிக்கப்படாதவளைப்போல் அளவு ப்ளவ்ஸை எடுத்துக் கொடுத்தாள். ம்ஹூம்... நான் சொல்ல வந்தது இது அல்ல. அந்தக் கச்சை விற்கும் கடையில் வேலை செய்யும் ஒரு நூறு பெண்களில் - ஆம். நான்கைந்து மாடிகளைக் கொண்ட பிரும்மாண்டமான கடை அது - யாருக்குமே கச்சை தேவையில்லாமல் இருந்தது. அந்த அளவுக்கு முலை வற்றிக் கிடந்தார்கள் அவர்கள். கண்ணாயிரம் பெருமாளின் வாழ்வைப் பாதித்த மிக முக்கியமான துயரக் காட்சிகளில் அதுவும் ஒன்று.

அத்திப் பழத்தில் ஆரம்பித்தோம் இவ்வளவும். அதற்கடுத்து Apricot. கலி.ஃபோர்னியாவில் பெருமளவு கிடைக்கிறது. இதை சூரியமுட்டை என்பார்கள். மரத்திலேயே முழுமையாகப் பழுத்த பிறகுதான் இதைப் பறிக்க வேண்டும். பறித்த உடனே சாபிட்டுவிட வேண்டும். அதனால் பாடம் பண்ணிய பிறகே மற்ற இடங்களுக்கு அனுப்பப்படுகிறது.

சுருக்கமாகச் சொன்னால், உணவு நார்த்தன்மை கொண்டதாக இருந்தால் மூலமே நெருங்காது. ஆனால் இதற்கெல்லாம் ஒரு லை.ஃப் ஸ்டைல் தேவை என்று பார்த்தோம் இல்லையா. அது பெருமாளுக்கு தபால் இலாகாவிலிருந்து ராஜினாமா கொடுத்து விட்டு விலகிய தினத்திலிருந்து கிட்டியது.5

**பின்குறிப்புகள்:**

1. கூட்டம் பற்றிய பிற கதைகளை அத்தியாயம் நிர் - 27இல் காண்க.
2. இந்திராணி கண்ணாயிரம் பெருமாளுக்கு சனி ஞாயிறுகளில் கூட .ஃபோன் போட்டு சில கடிதங்களை டிக்டேட் செய்வது வழக்கம். அவற்றை அவன் திங்கட்கிழமை ஆ.ஃபீஸ் வந்ததும் டைப் செய்து கொடுக்க வேண்டும். கேட்டால் ஒரு அரசு ஊழியர் 24 மணி நேரமும் அரசு ஊழியர்தான் என்பார். அப்படியானால் உங்கள் கணவர் உங்களைப் புணர்ந்துகொண்டிருக்கும்போதுகூட நீங்கள் அரசு ஊழியர்தானா என்று அவனுக்குக் கேட்கத் தோன்றும்.
3. ‘Behind your face I saw something purer and deeper, in which I was reflected. It was you I saw, in a dimension that included all the time I have left to live. All those years were these,

but also all those I lived without knowing you, waiting to know you.'

அந்தோனியோனியின் 'இரவு' படத்தில் எழுத்தாளனாக வரும் ஜியோவான்னி என்ற பாத்திரம் தன் மனைவி லிதியாவிடம் கூறுவது. கொஞ்சும் மதனா உங்களை மீண்டும் சந்தித்துப் பேசி மகிழ ஏதோ துடிக்குது.6

4. பெருமாள் பாரிஸுக்குச் சென்றபோது அங்கு அவனுக்கு ஸ்வப்னா என்ற பெண்ணின் நட்பு கிடைத்தது. அவனுடைய எழுத்தைப் படித்து சிநேகிதி ஆனவள். ஒரு நாள் அவள் பெருமாளுக்கு மொந்த்பர்னாஸ்7 புலுவாரில் உள்ள Rotonde8 கஃபேயில்9 டின்னர் கொடுத்தாள். குடிக்க மறுத்துவிட்டான் பெருமாள். அதற்கொரு காரணம் இருந்தது. ஸ்வப்னாவைப் பற்றிய கதையில் அதைப் பார்க்கலாம். இப்போது இந்தப் பின்குறிப்பில் வேண்டாம். அவன் குடிக்காததால் அவளும் குடிக்கவில்லை. சரி சாப்பிடலாம் என்று ஆரம்பித்தபோது பெருமாள் வெறும் பழமும் ஸலாதும் போதும் என்று சொல்லிவிட்டான். 'என்ன இது, உங்களை இங்கே பெரிய rebel என்று சொல்கிறார்கள். வெறும் இலைதழைகளைச் சாப்பிடுகிறீர்கள்?' என்று கிண்டலடித்தாள். ஆனாலும் பெருமாள் மசியவில்லை. அவன் பாரீஸிலும் பெர்லினிலும் இருந்த இரண்டு மாத காலத்தில் இரவில் வெறும் ஸலாதை மட்டுமே சாப்பிடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தான். ஏனென்றால் காலையில் சூப்புடன் கால் கிலோ மாமிசம் உள்ளே போய்விடுகிறது. பிறகு மதிய உணவுடன் ஒரு அரை கிலோ மாமிசம். அதற்கு மேல் இரவிலும் மாமிசம் உட்கொண்டால் காலையில் கக்கூஸ் பிரச்னை ஆகிவிடுமென்றுதான் இந்த ஸலாத் ஏற்பாடு. அவன் ஆடு மாடுகளைப்போல் இலைதழைகளை மொக்குவதைப் பார்த்து ஸ்வப்னாவுக்கு ஒரே ஆச்சரியம்.10

5. தாமஸ் வர்கீஸ் பற்றி ஆரம்பித்த இந்தக் கதை எங்கெங்கோ சென்று எதிலேயோ முடிந்துவிட்டது. Don't worry வேறொரு அத்தியாத்தில் அவரைச் சந்திப்போம்.

6. இந்த வாக்கியம் இந்தப் பதின்மூன்றாவது கதைக்குச் சம்பந்தமே இல்லாதது. பெருமாளுக்கு தினந்தினம் 20-30 எஸ்ஸெம்மெஸ்களை அனுப்பி வைப்பாள் ஸ்வப்னா. அதைத் தன்னுடைய அடுத்த நாவலுக்கான கச்சாப்பொருளாகத் தன் டைரியில் எழுதி வைத்துக் கொள்வது பெருமாளின் வழக்கம். ஒருநாள் தவறுதலாக நாவலின் இந்த அத்தியாயத்தின் கையெழுத்துப் படியில் அதை எழுதி வைத்துவிட்டான். கணினியில் தட்டச்சு செய்யும் சாதனாவும் அதை அப்படியே தட்டச்சு செய்துவிடவே ஸ்வப்னாவின் ஏக்கம் ததும்பிய இந்த வாக்கியமும் இந்த அத்தியாயத்துடன் சேர்ந்துவிட்டது.

7. மொந்த்பர்னாஸ் பற்றி அடுத்த கதையில் காண்க.

8. மொந்த்பர்னாஸ் புலுவாரில் உள்ள Select, Dome, Rotonde போன்ற கஃபேக்கள் மிகவும் பிரசித்தமானவை. இந்தச் சாலையில்தான் ஜார் ஆட்சியில் ரஷ்யாவிலிருந்து வெளியேறிய ட்ராட்ஸ்கி, லெனின் போன்ற புரட்சியாளர்கள் தங்கியிருந்தனர்.

9. பாரிஸை கஃபேக்களின் நகரம் என்று சொல்லலாம். இந்த

கஃபேக்களில் கிடைக்கும் காஃபி தமிழ் நாக்குகளுக்குப் பிடிப்பதில்லை. இந்த காஃபியா உங்களுக்குப் பிடிக்கிறது என பெருமாளை எல்லோரும் ஆச்சரியத்துடன் கேட்டனர். கஃபே கலாச்சாரத்திற்கு ஐரோப்பாவிலேயே பேர் பெற்றது பாரிஸ்தான். சில கஃபேக்களில் உலகப் புகழ்பெற்ற கலைஞர்கள், எழுத்தாளர்கள், தத்துவவாதிகள் போன்றோர் தொடர்ந்து வந்து போனது பற்றிய விபரங்கள் எழுதப்பட்டுள்ளன.

கஃபேயின் உள்ளே மிக நெருக்கமாகப் போடப்பட்ட கருங்காலி மர மேஜைகள். அதைச் சுற்றி நான்கு குட்டி நாற்காலிகள். ஃப்ரெஞ்சுக்காரர்கள் ரகசியம் பேசுவதுபோல் huskyயாகப் பேசுவதால் எவ்வளவு நெருக்கமாக அமர்ந்தாலும் பெரிய சப்தம் எழுவதில்லை. தாராளமாகப் புகைக்கலாம். மளிகைக் கடைகளில்கூட மதுபானம் விற்கப்படும் அந்த ஊரில் கஃபேக்களில் மட்டும்தான் 'தபக்' * கிடைக்கிறது. எல்லாக் கடைகளிலும் கிடைக்காது. தபக் விளம்பரங்களுக்குக்கூட அங்கே தடையுள்ளது. (ஆனால் இங்கே உள்ளதைப்போல் சினிமாவில் யாரும் சிகரெட் குடிக்கக்கூடாது என்பது போன்ற பைத்தியக்காரத்தன மெல்லாம் அங்கே கிடையாது.) ஞாயிற்றுக்கிழமைகளில் தபக் கிடைப்பது வெகு அரிது. ஒரு ஞாயிறு அன்று பெருமாளும் எட்வினும் தபக்கைத் தேடி 2 கி.மீ தூரம் நடக்க வேண்டி வந்தது. 'இதுவே சென்னையாக இருந்தால் எவ்வளவு சுலபம்?' என்றான் எட்வின் ஏக்கத்துடன்.

கஃபேக்களுக்கு வெளியிலும் நிறைய மேஜை நாற்காலிகள் போடப்பட்டு மக்கள் நெருக்கமாக அமர்ந்து குடித்துக்கொண்டிருக்கின்றனர். ஆனால் சர்வர்களை ஆசிய நாடுகளில் உள்ளதுபோல் அதிகாரத் தோரணையில் கூப்பிட முடியாது. Bonjour சொல்லி பணிவுடன்தான் அழைக்க வேண்டும்.

ஒரு நாள் எட்வினும் பெருமாளும் McDonaldக்குள் நுழைந்தார்கள். புகைத்துக்கொண்டிருந்த சிகரெட்டைக் கீழே போட்டு ஷூவினால் நசுக்கினான் பெருமாள். நசுக்கியபோதே சற்றுத் தயக்கமாக இருந்தது. காரணம், தரை அவ்வளவு சுத்தம். கஃபே என்றால் ஒரே சிகரெட் துண்டுகளாய் இறைந்து கிடக்கும். நிமிர்ந்தபோது பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒருத்தன் கண்களில் விரோதமாய் பெருமாளைப் பார்த்தான். அப்போதுதான் தெரிந்தது McDonald வேறு மாதிரி இடம் என்று. 'இனி என்னை இதுபோன்ற இடங்களுக்கு அழைத்து வராதே நண்பா' என்று எட்வினிடம் கேட்டுக்கொண்டான் பெருமாள்.

பாரிஸின் கஃபே கலாச்சாரத்தையே அவமானப்படுத்துவது போல் இருந்தது McDonald.

10. I at last realized that eating was a spiritual function and that meat, bread and wine were the raw meterials from which the mind is made.

Zorba the Greek,

Nikos Kazantzakis.

***

# கதை : பதினான்கு

ஒரு நாள் ஆனந்தன் பெருமாளிடம் வந்து 'நான் தற்கொலை செய்துகொள்ளப் போகிறேன்' என்று சொன்னான். அவன் சொன்னதைக் கேட்டு மிகவும் பதறிப்போனான் பெருமாள். தற்கொலை செய்துகொள்ளப்போகிறவன் இப்படி சொல்லி விட்டா செய்வான் என்றெல்லாம் யோசிக்கும் நிலையில் பெருமாள் அப்போது இல்லை.

மேலே படிக்க முடியாமல் இப்படி நாட்களை விரயம் செய்து கொண்டிருப்பதே காரணம் என்று தெரிந்தது. பெருமாள் அப்போது வேலூரில் வேலை செய்துகொண்டிருந்தான். கலையரசனிடம் 'எங்காவது வட்டிக்குப் பணம் கிடைக்குமா?' என்று கேட்டான் பெருமாள். லோகநாதன் என்பவரை அறிமுகப்படுத்தி வைத்தான் கலையரசன்.

முதல் தவணையில் ஆயிரம் ரூபாய் வாங்கி ஆனந்தனுக்கு அனுப்பி வைத்தான் பெருமாள். ஆனந்தன் கல்லூரியில் சேர்ந்தான். அதோடு கூடவே ஃப்ரெஞ்ச் வகுப்பிலும் சேர்ந்தான். அவனுடைய கவிதைகளைத் தமிழ் இலக்கிய உலகம் ஏற்றுக்கொள்ளவில்லையாதலால் நேரடியாக ஃப்ரெஞ்சிலேயே எழுதிவிடலாம் என்பது ஆனந்தனின் திட்டம். கலைஞர்களுக்கு உரிய கௌரவம் கொடுக்கும் சமூகமல்லவா ஃப்ரெஞ்ச் சமூகம்?

கல்லூரிப் படிப்பைவிட ஃப்ரெஞ்ச் படிப்புக்குத்தான் அதிக செலவாகியது. கந்து வட்டிக்கு வாங்கியிருந்தான் பெருமாள். அதனாலென்ன? பிச்சை புகினும் கற்கை நன்றே.

அந்தக் காலக்கட்டத்தில் பெருமாளுக்கும் அவன் மனைவி எக்ஸுக்கும் எவ்விதப் பேச்சு வார்த்தையும் இல்லாமலிருந்தது. இருவரும் பிரிந்து விடலாமென்றும் முடிவு செய்திருந்தாள் எக்ஸ். பெருமாள்தான் தன் மகளை உத்தேசித்து பிரிவைத் தள்ளிப்போட்டுக்கொண்டிருந்தான்.

ஏற்கெனவே எக்ஸின் பெயரில் வாங்கியிருந்த வீட்டுக் கடன் வகையில் பெருமாளின் சம்பளத்தில் பெரும் பகுதி பிடிக்கப்பட்டிருந்தது. அது தவிர, வீட்டுச் சாப்பாடு மற்றும் தங்கும் வாடகை என்ற வகையில் தன் சம்பளம் முழுவதையும் எக்ஸிடம் கொடுத்துவிட்டு ஸிங்கிள் டீக்கே சிங்கியடித்துக்கொண்டிருந்தான் பெருமாள். இந்த நிலையில் வட்டிக்கு வாங்கிய ஆயிரம் ரூபாயைத் திருப்பி அடைப்பதைப் பற்றி யோசிக்கவும் பயந்தான். எக்ஸிடம் ஏகப்பட்ட பொய்களைச் சொல்லி, மாதாமாதம் வட்டியை மட்டும் கொடுத்துக் கொண்டிருந்தான்.

இந்த நிலையில், ஃப்ரெஞ்ச் கோர்ஸுக்கு அடுத்த கட்ட கட்டணம் கட்ட வேண்டியதாகியது. மறுபடியும் ஆயிரம் ரூபாய் வட்டிக்கு வாங்கினான் பெருமாள்.

இப்படியே ஆனந்தன் ஃப்ரெஞ்ச் கோர்ஸின் ஆறு நிலைகளைத் தாண்டியபோது பெருமாள் லோகநாதனிடம் 5000 ரூ. வாங்கியிருந்தான். வட்டி கட்டுவதற்குள் விழி பிதுங்கியது. ஆனால் பெருமாள் அலுத்துக்கொள்ளவில்லை. நம் சகோதரனாக இருந்தால் செய்ய மாட்டோமா என்று எண்ணினான்.

ஆனந்தனும் அப்படித்தான் பழகினான். அவனே பெருமாளுக்கு முடிவெட்டி விடுவான். பெருமாளுக்கு சைக்கிள் விடத் தெரியாதென்பதால் அவனே பெருமாளை எல்லா இடத்துக்கும் டபுள்ஸ் அடிப்பான்.

ஆனந்தனின் எம்மே படிப்பு முடிந்ததும் அவனுக்கு அவன் படித்த கல்லூரியிலேயே லெக்சரர் வேலை கிடைத்தது.

பெருமாள் அப்போது சர்க்கிள் ஆஃபீஸுக்கு மாற்றப் பட்டிருந்தான். ஆனால் சென்னை வந்தும் சம்பள தினத்தன்று தவறாமல் ஆஜராகி விடுவார் லோகநாதன்.

5000 ரூபாய் முதலில் 3000 ரூபாயை அடைத்திருந்தான் பெருமாள். மீதி 2000 ரூபாயைத் திருப்ப முடியவில்லை. மட்டுமல்லாமல், அதற்கு வட்டியும் கட்ட முடியாமல் போயிற்று. அந்த வட்டித் தொகை குட்டிக்கு மேல் குட்டி போட்டு ரூ.8000/- ஆக உயர்ந்திருந்தது.

பெருமாளுக்கு என்ன செய்வதென்று விளங்கவில்லை. லோகநாதனைப் பார்த்ததுமே ஒளிந்துகொள்ள ஆரம்பித்தான். பிறகு, லோகநாதனைத் தவிர்ப்பதற்காக சம்பள தினத்தன்று லீவு போட்டுவிட்டு மறுநாள் அலுவலகம் வர ஆரம்பித்தான்.

அதேபோல் லோகநாதனும் மறுநாள் வர ஆரம்பித்தார். 65 வயது இருக்கும். ஊதினால் விழுந்துவிடக்கூடிய எலும்புக்கூடு உடம்பு. வலது கை வேறு முழங்கைக்குக் கீழே கிடையாது.

லோகநாதனைப் பற்றி நினைக்கும்போதெல்லாம் அவரது தளராத முயற்சியும், மன உறுதியும் பெருமாளை மிகப் பெரிய ஆச்சரியத்தில் ஆழ்த்தும்.

ஒரு நாள் பெருமாள் கணக்குப்போட்டுப் பார்த்தான்... இந்த ஆளுக்கு இதுவரை எவ்வளவு ரூபாய் வட்டியாகக் கட்டியிருக்கிறோமென்று. தலை சுற்றி மயக்கம் வந்தது. 60,000 ரூபாய்.

ஆனால் லோகநாதனோ ‘இன்றைய தேதியில் எட்டாயிரம் ரூபாயை கையில் வை. உன்னை விட்டுவிடுகிறேன். உன் பக்கமே வர மாட்டேன்’ என்றார்.

பெருமாளுக்குப் புரிந்தது. அவனால் எந்தக் காலத்திலும் எட்டாயிரம் ரூபாயை முழுசாகத் திருப்பிக் கொடுக்க முடியாது. வட்டி மட்டுமே கட்டிக்கொண்டிருக்கலாம். ஆனால் பல சமயங்களில் அதுவும் முடியாமல் போய்விடுகிறது.

லோகநாதன் கண்ணாயிரம் பெருமாளையே முறைத்துப் பார்த்தபடி உட்கார்ந்துகொண்டிருந்தார். அந்த ஒற்றைக் கை மாயாவியை அப்படியே கழுத்தை நெரித்துக் கொன்றுவிடலாம் போலிருந்தது பெருமாளுக்கு.

‘இதோ வந்துவிடுகிறேன்’ என்று சொல்லிவிட்டு திரும்பியே பார்க்காமல்

வீட்டுக்கு வந்துவிட்டான் பெருமாள்.

பதற்றமாக இருந்தது அவனுக்கு. வட்டியைத் தராமல் ஏமாற்றினால் கோர்ட்டில் கேஸ் போடுவேன் என்று சொல்லியிருந்தார் லோகநாதன்.

பெருமாளுக்காக அன்று பூராவும் அலுவலகத்தில் காத்திருந்துவிட்டு அன்று இரவு அவன் வீட்டைத் தேடி வந்துவிட்டார் அவர். இது பெருமாள் தன் கனவிலும் நினைத்துப் பார்க்காதது.

நாள் முழுவதும் பெருமாளின் சீட்டுக்கு எதிரிலேயே அவன் வந்து விடுவான் என்று காத்திருந்திருக்கிறார் லோகநாதன்.

பெருமாளின் வீட்டு விலாசம் எப்படிக் கிடைத்தது?

பெருமாளின் சக ஊழியர்களிடமே கேட்டு வாங்கிக்கொண்டார்.

இவ்வளவுக்குப் பிறகும் பதற்றமேயில்லாமல் அமைதியாக இருந்தார் லோகநாதன்.

இந்த இடத்தில் இந்த நாவலின் முக்கியமான பாத்திரம் ஒன்றை அறிமுகம் செய்ய வேண்டியிருக்கிறது. அந்தப் பாத்திரம் மீரா. பெருமாளின் இரண்டாவது மனைவி. எக்ஸுக்கும் அவனுக்கும் விவாகரத்து முடிந்து, சில வருடங்கள் தனிமையில் கழிந்த பிறகு பெருமாளிடம் வசீகரிக்கப்பட்டு அவனை மணந்துகொண்டவள் மீரா. இப்படித்தான் மீராவின் அறிமுகம் முறையாக நடந்திருக்க வேண்டும். ஆனால் மீராவின் விஷயத்தில் காலக்குழப்பம் அடிக்கடி நேரும் ஒன்று. எனவேதான் விரால் மீனோடு அறிமுகமாகிவிட்டாள். சரி, விடுங்கள்.

'யார் இவர்?' என்று கேட்டாள்.

அவளை உள்ளே அழைத்துச் சென்று பத்து ஆண்டுகளாக நடந்து கொண்டிருந்த கதையைக் கூறினான் பெருமாள்.

'நல்லவேளை, இப்போதாவது என்னிடம் சொன்னீர்களே... இருங்கள். நான் பிரச்னையை முடித்துவைக்கிறேன்' என்று சொல்லிவிட்டு லோகநாதனிடம் வந்தாள்.

இரண்டு பேரும் இரண்டு மணி நேரத்திற்கு மேல் வாதிட்டனர். மீரா ஒரு தேர்ந்த வழக்கறிஞரைப் போல் பேசினாள்.

'சரி, கடைசியாகச் சொல்கிறேன். உங்களுடைய சாபம் எங்களுக்கு வேண்டாம் என்பதற்காகத்தான் இவ்வளவு நேரம் பேசுகிறேன். நாலாயிரம் ரூபாய் தந்துவிடுகிறோம். என் கணவர் கையெழுத்துப் போட்டுக் கொடுத்த பேப்பரைக் கொடுத்துவிடுங்கள்' என்று பேச்சை முடித்தாள் மீரா.

லோகநாதன் ஒத்துக்கொண்டார். 'நாளை வாருங்கள்' என்று சொல்லி அனுப்பி வைத்தாள்.

'நாளை என்ன செய்யப்போகிறாய்?' என்று மீராவிடம் கேட்டான் பெருமாள். கைவளையலைக் காண்பித்தாள்.

***

**பின்குறிப்புகள்:**

1. லோகநாதனிடம் வட்டி கட்ட முடியாமல் பெருமாள் தன் அலுவலகத்திலிருந்து திடீர் திடீரென்று தலைமறைவாகிக் கொண்டிருந்தபோது ஒரு நாள் பெருமாளும் ஆனந்தனும் சந்தித்துக் கொண்டனர். அப்போது பேச்சினிடையே ஆனந்தன் கூறினான்: ‘எப்படியாவது லைஃப்ல மண்ணு வாங்கணும்னு இருக்கேன் பெருமாள். வாடகை வீட்டில் இருப்பது ரொம்பப் பிரச்னையாக இருக்கு...’
2. லோகநாதனிடம் பெருமாள் கையெழுத்துப் போட்டுக் கொடுத்திருந்த காகிதம் வெறும் ஒரு துண்டுச் சீட்டாக மட்டுமே இருந்தது. பெருமாளின் கையெழுத்தைத் தவிர வேறு எந்த விபரமும் இல்லாத ஒரு வெற்றுக் காகிதம் அது.

***

# கதை : பதினைந்து

ஸயாம் பெவர்லி ஓட்டலிலிருந்து வெளியே வந்தான் கண்ணாயிரம் பெருமாள். இரவு எட்டு மணி இருக்கும். வாசலில் நின்றுகொண்டிருந்த பெண் தரகன் அவனிடம் ‘உங்களை Potpong அழைத்துச் செல்லவா? Nana Plaza போகலாமா? அல்லது, பெண்கள் வேண்டுமா? ஃபிலிப்பினோ, வியட்நாமீஸ், கெமேர், தாய்...’ என்று கேட்டான். பெருமாள் ஒவ்வொருமுறை ஓட்டலுக்குள் போகும்போதும், வெளியே வரும்போதும் இதையே கேட்டுக்கொண்டிருந்தான் அந்தத் தரகன்.

வழக்கம் போலவே ‘வேண்டாம்’ என்று சொல்லிவிட்டு அந்த ரட்சதாப்பீஸக் சாலையில் நடக்க ஆரம்பித்தான் பெருமாள். சாலையின் ஒரு பக்கத்தில் வரிசையாக மஸாஜ் பார்லர்கள் தென்பட்டன. ஒவ்வொரு பார்லரும் ஒரு நட்சத்திர விடுதி அளவுக்கு ஆடம்பரமாக இருந்தது. ஒவ்வொரு பார்லர் வாசலிலும் தலை மஸாஜ், கால் மஸாஜ், உடல் மஸாஜ், எண்ணெய் மஸாஜ் என்று விதவிதமான மஸாஜ்களுக்கான விலைப்பட்டியல் வைக்கப்பட்டிருந்தது. எல்லாம் 300 Bahtஇலிருந்து 500 bhat வரைதான். (Baht - சுமார் ஒரு ரூபாய் மதிப்புடைய தாய்லாந்து பணம்.) அதேபோல் ஒவ்வொரு பார் வாசலிலும் நான்கைந்து பெண்கள் கீழே ஒரு ரிப்பனும் மேலே ஒரு ரிப்பனும் அணிந்தபடி தெருவில் செல்வோரை வரவேற்றுக் கொண்டிருந்தனர்.

ஒரு பார்லருக்குள் நுழைந்தான் பெருமாள். வழக்கம்போல் பெரியதொரு கண்ணாடிப் பேழைக்குள் இரண்டு டஜன் பெண்கள் அமர்ந்திருந்தனர். சிகரெட் புகைத்தபடி அந்தப் பெண்களையும் சுற்றுப்புறத்தையும் கவனித்துக் கொண்டிருந்தான். அவனைப்போல் வேறு சிலரும் அங்கே அமர்ந்திருந்தனர்.

ஒரு பெண்ணைச் சுட்டிக்காட்டினான். அவளுக்கு பதினெட்டு வயதுக்குள்தான் இருக்கும். அவள் மட்டுமல்ல, பாங்காக்கில் இந்தத் தொழிலில் ஈடுபட்டிருந்த பெரும்பாலான பெண்களும் அப்படித்தான் என்று தோன்றுகிறது. 15 வயதிலிருந்து அதிகபட்சம் 25 வயதுக்குள்ளிருக்கும் பெண்களுக்கு மட்டுமே இந்த மஸாஜ் கம்பெனிகள் வேலை கொடுத்து வந்தன என்று தெரிந்தது. ஆனால் ஒவ்வொரு கம்பெனி வாசலிலும் ‘Girls below 18 not permitted’ என்ற அட்டை தொங்கிக்கொண்டிருந்தது.

இந்த வயது விஷயம் பெருமாளுக்கு மிரட்சியைக் கொடுத்தது. காரணம் - அவன் எழுதிய சிறுகதை ஒன்று சிலருக்கு வ்ளதிமீர் நபகோவின் ‘லொலிதா’வை ஞாபகப்படுத்திக்கொண்டிருந்தது. அதனால் பெருமாள் ஒரு Paedophile என்ற சந்தேகமும் உண்டாயிற்று. அதுவும் போதாதென்று, அவனது எழுத்தின் மீது தீராத வன்மம் கொண்ட ஒரு விமர்சகன் ‘பெருமாள் ஒரு Paedophile என்பதால் அவனைத் தூக்கில் போட வேண்டும்’

என்ற ரீதியில் பத்து பக்கங்களுக்கு ஒரு கட்டுரை வேறு எழுதிவிட்டான். ‘சரி அதற்கு என்ன ஆதாரம்’ என்று கேட்டால், கதைதான் ஆதாரம் என்றான். இதுவும் பல தார்மீகவாதிகளுக்கு நியாயமாகவே தோன்றியது.1

***

பெருமாளுக்குப் பெரும் குழப்பம் உண்டாயிற்று. சினிமாவில் எத்தனையோ கற்பழிப்புக் காட்சிகள் வருகின்றன. அதனால் அந்தப் படத்தை எடுத்த இயக்குனரை ஏன் கற்பழிப்புக் குற்றச்சாட்டுக்கு ஆளாக்குவதில்லை? அதுவும் போக, எட்டாங் கிளாஸ் அல்லது ஒன்பதாங் கிளாஸ் படித்துக்கொண்டிருக்கும் மாணவிகளையே தமிழ் சினிமா இயக்குனர்கள் ஹீரோயின்களாக நடிக்க வைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஒரு படத்தில் அந்த ஒன்பதாம் வகுப்பு மாணவியை மூன்று குழந்தைகளுக்குத் தாயாக நடிக்க வைத்திருந்தார் இயக்குநர். மூன்று குழந்தை பெற்ற ஒரு பெண்ணின் பிருஷ்டம் எப்படியிருக்குமோ அப்படியேயிருந்தது அந்த மாணவியின் பிருஷ்டமும். படத்தின் இயல்புத்தன்மையை வலியுறுத்துவதற்காக, அந்தப் பெண் நடந்து செல்லும்போது கேமராவை அவளது பின்புறத்தில் வைத்து பிருஷ்டப் பகுதியை மட்டும் ‘ஃபோகஸ்’ செய்திருந்தார் இயக்குனர். தமிழ் சினிமாவில் செயற்கைத்தன்மை அளவுக்கதிகமாய் கூடிவிட்டதால் அவர் எடுத்துக்கொண்ட முயற்சி இது.

பின்னர், அந்த ஒன்பதாங்கிளாஸ் மாணவியின் பேட்டியைப் படித்த போது, அவர் மூன்று குழந்தைகளுக்குத் தாயாக நடிப்பதற்காகத் தன் உடலைப் பருமனாக்கிக் கொள்ளும் பொருட்டு - பாட பேதம்: உடலின் சில பாகங்கள் எனக் கொள்க - மூன்று மாத காலம் தான் எடுத்துக்கொண்ட பயிற்சிகளைப் பற்றி - சாப்பிட்டு சாப்பிட்டுத் தூங்கியது - அறிந்துகொண்டான் பெருமாள்.

அவனுக்கு அந்தப் படம் வெகுவாகப் பிடித்துப்போயிற்று என்பதைச் சொல்லத் தேவையில்லை. இது ஒருபுறமிருக்க, நாம் இப்போது பாங்காக்கின் ரட்சதாப்பீஸக் சாலையிலுள்ள மஸாஜ் பார்லருக்கு வருவோம். இளந்தளிரைப் போலிருந்த அந்தப் பெண்ணிடம் ‘உன் வயது என்ன கண்ணே?’ என வினாவினான் பெருமாள். அவளுக்கு ஆங்கிலம் தெரியவில்லை. எதிரே தொங்கிக்கொண்டிருந்த ‘Girls below 18...’ போர்டைக் காண்பித்து, சைகையால் ‘உன் வயதென்ன?’ என்று கேட்டான். அவள் உடனடியாக அந்த போர்டில் இருந்த 18-ஐச் சுட்டிக்காட்டினாள்.

பெருமாளுக்கு அவள் சொன்னதில் நம்பிக்கையில்லை. அவனுக்கு அந்தத் தமிழ் விமர்சகனின் ஞாபகம் வந்தது.

அவனால் இப்போது என்ன செய்ய முடியும்? அந்த விமர்சகனுக்குப் பயந்துகொண்டு பாங்காக் முனிசிபாலிட்டி இவளுக்குக் கொடுத்த வயதுச் சான்றிதழைக் காண்பிக்கச் சொல்ல முடியுமா? அந்த விமர்சகன் உடனடியாகச் செய்ய வேண்டியது என்னவென்றால், தாய்லாந்து அரசரிடம் பேச்சு வார்த்தை நடத்த வேண்டும். ‘உங்கள் நாட்டில் இந்த மாதிரி ஒவ்வொரு இடத்திலும் போர்டை மாட்டி வைத்துக்கொண்டு, 18 வயதுக்குட்பட்ட சிறுமிகளை விபச்சாரத்தில் ஈடுபடுத்துவதைத் தடுப்பதற்கு நீங்கள் என்ன நடவடிக்கை எடுத்தீர்கள்?’ என்று கேட்க வேண்டும். ஆனால் பிரச்னை என்னவென்றால், தாய்லாந்தில் மன்னர்

என்பவர் கடவுளுக்கு நிகரானவர். அவரைக் கேள்வி கேட்க முடியாது. கேட்டால், அமெரிக்கா மற்றும் மேற்கு ஐரோப்பிய நாடுகளைத் தவிர்த்த வெளிநாட்டினர் யாராக இருந்தாலும் அவர்கள் சிறையில் தள்ளப்படுவர்.

ஆனால் ஒன்று. மன்னர்தான் வேறு என்ன செய்வார்? இந்த ஆறு கோடி மக்களுக்கும் சோறு போட அவர் கையில் என்ன, மணிமேகலையின் அட்சயப் பாத்திரமா இருக்கிறது? விபச்சாரத்தைத் தவிர வேறு வழியில்லை. ஆனால் அவர் தேசம் மட்டுமா இப்படியிருக்கிறது? பக்கத்திலுள்ள வியட்நாம், கம்ப்பூச்சியா, ஃபிலிப்பைன்ஸ் எல்லாமும்தான்... விபச்சாரம் வேண்டாம் என்றால் லட்சக்கணக்கில் மக்கள் பட்டினியால் மாண்டுபோவார்கள்.

பக்கத்திலிருந்த ஒரு அறையில் பெருமாளை அமரச் செய்து அவன் பாதங்களை சோப்பு போட்டு வெந்நீரில் நன்கு கழுவி விட்டாள் அந்தப் பெண். பிறகு வெந்நீரில் நனைத்துப் பிழியப்பட்ட தூய்மையான வெண்ணிறத் துவாலையால் பாதங்களைத் துடைத்துவிட்டு ரப்பர் செருப்பைக் கொடுத்து அணிந்துகொள்ளச் சொன்னாள். பின்னர், அவன் கைகளைப் பற்றியபடி மூன்றாம் மாடிக்கு அழைத்துச் சென்றாள். லிஃப்டில் செல்லும்போது ‘உன் பெயரென்ன?’ என்று கேட்டான். புரியவில்லை. இரண்டு மூன்று முறை கேட்டு, சைகையாலும் விளக்கிய பிறகு புரிந்துகொண்டு ‘ஜின்ட்டானா’ என்றாள். மேலே, நிறைய அறைகள் காணப்பட்டன. சில அறைகள் மூடியும், சில திறந்தும் இருந்தன. அறைகளுக்கு எண்களும் கொடுக்கப்பட்டிருந்தன.

திறந்திருந்த ஒரு அறைக்குள் அவனை அழைத்துச் சென்று உள்ளே தாளிட்டாள் ஜின்ட்டானா. அகிரா குரஸவாவின் படங்களில் வருவதைப் போன்றிருந்தது அந்த அறை.

கீழே விரிக்கப்பட்டிருந்த மெத்தையில் முழங்கால்களை மடித்து குதிகால்களின் மேல் பிருஷ்டம் பொருந்த வஜ்ராசன2 நிலையில் அமர்ந்துகொண்ட ஜின்ட்டானா, பெருமாளைப் பார்த்து சைகையின் மூலம் ஆடைகளைக் கழற்றச் சொன்னாள்.

கழற்றிவிட்டு உள்ளாடையுடன் நின்றான் பெருமாள். அவளோ அதையும் கழற்றச் சொன்னாள்.

ஒரு பெண்ணுக்கு முன்னால் நிர்வாணமாக நின்றதால் அவனது ஆண்மை எழுச்சியுற்றது. ஏற்கெனவே ‘தாய்’ மஸாஜ் என்பது வெறுமனே தேகத்தைப் பிடித்துவிடுவதல்ல என்பதையும், சர்ப்பங்களின் கலவியைப் போல் ஆணுடலும் பெண்ணுடலும் பல்வேறு ஆசன நிலைகளில் பின்னிப் பிணைந்து சங்கமித்தல் என்பதையும் அவன் காஞ்சனாவின் மூலம் அறிந்திருந்தான்.

நிர்வாணமானவுடனேயே எழுச்சியுற்றுவிட்ட அவனது ஆண்மையைக் கண்டு சிரித்துக்கொண்டே ‘இது மிகவும் இடைஞ்சலாக இருக்கும்... தூங்கச் சொல்’ என்று ‘தாய்’ மொழியில் சொன்னாள் ஜின்ட்டானா. அந்த சாதனத்தைச் செல்லமாகத் தன் கைகளால் தட்டி ‘Sleep, Sleep...’ என்று அவள் சொன்னதை அப்படித்தான் புரிந்துகொண்டான் பெருமாள்.

தனிமையும், நிர்வாணமும் சூழ்ந்த அந்த இடத்தில் உடல் மொழி மட்டுமே இசைவாயிருந்ததையும், மற்ற மொழிகள் தேவையில்லை என்பதையும்

உணர்ந்தான் அவன்.

ஏதோ அதிசயத்தைப் பார்ப்பதுபோல் அவனது புஜங்களையும் கைகளையும் தொட்டுத் தொட்டுப் பார்த்து கண்களை அகல விரித்துக்கொண்டிருந்தாள் ஜின்.

‘என்ன அதிசயம் பெண்ணே?’ என்பதுபோல் புருவத்தை உயர்த்திக் கேட்டான்.

‘மசுகுலர்... மசுகுலர்3...’ என்றாள்.

தான் அணிந்திருந்த மிகக் குறைந்த ஆடைகளைக் களைந்துவிட்டு அவளும் நிர்வாணமானாள்.

உடலை சிலிர்த்துக்கொண்டு ‘கடுமையாகக் குளிர்கிறது’ என்றாள்.

பாங்காக்கில் அந்த ஃபெப்ருவரியிலும் வெயில் கொளுத்தியது. ஏப்ரல், மே மாதங்களில் இன்னும் கடுமையாக இருக்கும். ஆனால் ‘தாய்’ ராஜா மிகவும் நல்லவர். தனது மக்களின் நலனில் அக்கறை கொண்டவர். எனவே, பெண்களை மூலதனமாகக் கொண்ட தேசியத் தொழிலின் மூலம் வரும் பணத்தில், இந்திய அரசியல்வாதிகளைப்போல் 90% எடுத்துக்கொள்ளாமல், 10% மட்டுமே எடுத்துக்கொண்டு மீதியை மக்களின் நல்வாழ்வுக்குச் செலவிடுகிறார் என்பது பாங்காக்கைப் பார்த்தபோது புரிந்தது.

இதனாலேயே ஜின்னுக்கு மிகவும் குளிர்ந்தது. ‘குளிர் சாதனத்தை அணைத்துவிடலாமே?’ என்றான் பெருமாள்.

‘அதற்குக் கீழே போக வேண்டும். பரவாயில்லை. நீ வா...’ என்று கூறியபடி அவனை அணைத்துக்கொண்டாள் ஜின்.

என்ன ஒரு சருமம் இது! இதன் மென்மையை எதனோடு ஒப்பிடுவது? ‘தாய்’ பெண்கள் அத்தனை பேருக்குமே சருமம் இப்படித்தான் இருந்தது. தாஜ்மஹாலின் சலவைக்கல் தரையும் சுவர்களும் பௌர்ணமி நிலவின் குளிர்மையில் எவ்வளவு மென்மையாக இருக்குமோ அவ்வளவு மென்மையாகவும், மிருதுவாகவும் இருந்தது அவர்களின் சருமம். அதேபோல் அவர்களின் தலைமுடி. ஆனால், ‘தாய்’ மக்களுக்குத் தலை மிகவும் புனிதமானது என்பதால் யாரும் தலையைத் தொடுவதை அவர்கள் விரும்புவதில்லை. காஞ்சனாவின் தலையைப் பெருமாள் ஆதூரத்துடன் தொட்டுத் தடவியபோது அவள் கூறியது அது.

ஒன்றரை மணி நேரம் நீடித்த அந்த தேக சங்கமத்துக்குப் பிறகு ‘கலவி கொள்ளலாமா?’ என சைகையில் கேட்டாள் ஜின்.

‘என்னது? அப்படியானால் இதுவரை நடந்தது என்ன?’

‘இது Body to body massage. நான் சொல்வது கலவி.’

சைகையாலும் ஓரிரு ஆங்கில வார்த்தைகளாலும் அவள் சொன்னது இதுவாகத்தான் இருக்கும்.

‘எவ்வளவு?’ என்று கேட்டான் பெருமாள்.

கை விரலால் காற்றிலேயே ‘2’ என்று எழுதி, பிறகு முஷ்டியை மடக்கி நாம் ‘எவ்வளவு?’ என்று கேட்பதற்குப் பயன்படுத்தும் சைகையால் மூன்று முறை காற்றில் குத்தினாள். இதற்கு முந்தின தினம் ஸயாம் பெவர்லி

ஹோட்டல்காரர்களே அனுப்பிய மஸாஜ் பெண்ணிடம் பெருமாள் இக்கேள்வியைக் கேட்டபோது, அவள் மேஜையிலிருந்த காகிதத்தையும் பேனாவையும் எடுத்து ‘2’ என்று எழுதி, பிறகு இரண்டு பூஜ்யங்களை வைக்க, பெருமாளுக்கு நம்பவே முடியாமல் மீண்டும் அவளிடம் எவ்வளவு கேட்க, அவள் அந்த இரண்டு பூஜ்யங்களையே திரும்பத் திரும்ப இரண்டு மூன்று முறை குழப்பத்துடன் எண்ணிவிட்டு, கடைசியில் மற்றொரு பூஜ்யத்தையும் வைத்ததை அப்போது நினைத்துப் பார்த்தான் பெருமாள்.

பின்னர் பேரம் பேசி, தொகையை ஆயிரமாகக் குறைத்துவிட்டு தன் பர்ஸிலிருந்த நோட்டுக்களை எடுத்து எண்ண ஆரம்பித்தான் பெருமாள். என்ன ஒரு துரதிருஷ்டம்! இந்திய ரூபாயை ‘பாட்’டாக மாற்ற மறந்துபோயிருந்தான். கைவசமிருந்த ‘பாட்’ 700தான் இருந்தது.

ஜின்ட்டானாவின் முகம் வாடிவிட்டது. அவன் கொடுக்கும் தொகையில் 500 பாட் பார்லர் கம்பெனிக்குப் போய்விடும். அவனிடமிருந்த க்ரெடிட் கார்டைக் காட்டி ‘இது செல்லுமா?’ என்று கேட்டான். வாங்கிக்கொண்டுபோய் கேட்டுவிட்டு ஏமாற்றத்துடன் திரும்பினாள்.

உடைகளை அணிந்துகொண்டு ‘இந்த டிப்ஸை வாங்கிக்கொள் ஜின்’ என்று கூறி 50 பாட் நோட்டை நீட்டினான் பெருமாள். கீழேயிருந்த பலகையில் அமர்ந்து ஷூவை அணிந்துகொண்டிருந்தவள் ஒருக்கணம் அவனையும் அவன் கையையும் ஏறிட்டுப் பார்த்து, சட்டென்று பலகையிலிருந்து நகர்ந்து தரையில் முழந்தாளிட்டு தன் இரு கைகளையும் நடன பாவத்துடன் கூப்பி4 அவன் காலில் சிரம்பட விழுந்தெழுந்து, தன் வலது கையை உயர்த்தி அவன் கையிலிருந்த 100 பாட் நோட்டைச் சுட்டிக் காட்டினாள்.

பெருமாள் 100 பாட் நோட்டை அவளிடம் நீட்டியபடி ‘kiss me’ என்றான்.

உடனே அவள் சிரித்துக்கொண்டே எழுந்து ‘கிசு மீ?’ ‘கிசு மீ?’ என்று சொல்லியபடியே அதன் அர்த்தம் கேட்டாள். பெருமாள் அதைச் செய்து காண்பித்தான். பிறகு அவர்கள் தரைத்தளத்துக்கு இறங்கும்வரை ஏதோ மனப்பாடம் செய்வதுபோல் ‘கிசு மீ’ ‘கிசு மீ’ என்று சொல்லிக்கொண்டே வந்தாள் ஜின்ட்டானா. ‘கிசு மீ இல்லை; கிஸ் மீ’ என்று திருத்தினான் பெருமாள். அவளுக்கு வரவில்லை.

***

**பின்குறிப்புகள்:**

1. ‘I was ten when they buried you. At twenty I tried to die and get back, back, back to you. I thought even the bones would do.’

   Daddy என்ற கவிதையில் Sylvia Plath.

2. ‘தாய்’ மக்கள் தலையைப் புனிதமாகக் கருதுவதுபோல் கால்களை இழிவானதாகக் கருதுகின்றனர். அதனால்தான் பிரார்த்தனை செய்யும்போது வஜ்ராசன நிலையில் அமர்கின்றனர்.
3. ஜின்ட்டானாவுக்கு Sleep, மசுகுலர் போன்ற வார்த்தைகளோடு வேறொரு முக்கியமான ஆங்கில வார்த்தையும் தெரிந்திருப்பதை

அவளைப் பிரியும்போது அறிந்துகொண்டான் பெருமாள்.

‘டாட்டா’ சொல்லிவிட்டுக் கிளம்பிய அவனை அவள் சைகையால் அழைத்தாள். அருகில் சென்றான். தன் ஆள்காட்டி விரலை அவன் தொடைகளுக்கு நடுவே சுட்டியபடி ‘சிலிக்கான்?’ என்று கேட்டாள் ஜின்ட்டானா.

4. வணக்கம் என்று சொல்லும்போது இந்தியர்கள் இரு கைகளையும் முகத்துக்குச் சற்று கீழே கூப்புகிறார்கள். ஆனால் ‘தாய்’ மக்கள் இரு கைகளையும் நெஞ்சுக்கு நேரே கொண்டுவந்து ஒரு யோக முத்திரையைப்போல் வைத்து தலையைக் குனிகிறார்கள். இது ‘தாய்’ மொழியில் ‘Wai’ என்று சொல்லப்படுகிறது.

# கதை : பதினாறு

எபினேசர் 1983இலிருந்து பாரிஸில் வாழ்ந்து வருபவன். இலங்கை வீதிகளில் வாள்களோடு நின்று குங்குமப் பொட்டிட்டவர்களையும் காதில் துவாரங்களைக் கொண்டவர்களையும் தேடிக்கொண்டிருந்த சிங்களக் காடையர்களிடமிருந்து தப்பி பாரிஸ் ஏகிய ஆயிரக்கணக்கான ஈழத் தமிழர்களில் ஒருவன். பார்ப்பதற்கு அச்சு அசலாக நைஜீரிய எழுத்தாளன் Helon Habilaவைப் போலிருப்பான். பாரிஸ் செல்வதற்கு முன்பே அவனுடைய 'தவம்' என்ற சிறுகதைத் தொகுப்பைப் படித்து அவன்பால் மிகுந்த சிநேக உணர்வு கொண்டிருக்கிறான் பெருமாள். அவனுடைய ஒரு கதை பெருமாளுக்கு 'viridiana'1 படத்தை ஞாபகமூட்டியது. பாரிஸின் ஸெய்ன் நதிக்கரைகளிலும் மெத்ரோக்களிலும்2 வாழும் விளிம்பு நிலை மனிதர்களைப் பற்றியது அந்தக் கதை. அவர்களுக்குக் குடும்பம் இல்லை. குழந்தை குட்டிகளில்லை. வீடு இல்லை. வேலை இல்லை. குளிப்பதில்லை. காசு கிடைத்தால் குடிக்கிறார்கள். சாப்பிடுகிறார்கள். இப்படி உலக வாழ்வை முற்றும் நிராகரித்துவிட்டு வாழும் இவர்களை மாதத்தில் ஒருமுறை போலீஸ் வந்து கட்டாயப்படுத்தி அழைத்துச்சென்று குளிக்க வைத்து, புதிய ஆடைகள் கொடுத்து, உணவு கொடுத்து, பிறகு அவர்கள் இருந்த இடங்களில் கொண்டுவந்துவிடுவது வழக்கம். இதையேகூட அவர்களில் சிலர் அத்துமீறலாக எடுத்துக்கொண்டு போலீஸின் இந்த அராஜகத்திலிருந்து தப்பிக்க 'நான் இவர்களைச் சார்ந்தவன் அல்ல. எனக்கு வீடும் குடும்பமும் இருக்கிறது. இன்றைக்கு எதேச்சையாகத்தான் என் உடைகள் அழுக்காக இருக்கின்றன. குடியில் கொஞ்சம் போதை அதிகமாகிவிட்டது. அதனால்தான் அடுத்த மெத்ரோவுக்காக காத்துக் கொண்டிருக்கிறேன்' என்று பொய் சொல்வதுண்டு.

எபியும் இந்த விளிம்பு நிலை மனிதர்களோடு வாழ்ந்திருக்கிறான். ஒரு முறை அவனையும் போலீஸார் குளிக்கக் கூப்பிட்டபோது 'நான் ஒரு அகதி. ஒரு எழுத்தாளன். எனது நிறமே இப்படித்தான். நான் விளிம்பு நிலை மனிதன் அல்ல' என்று கூறி அவர்களிடமிருந்து தப்பித்திருக்கிறான்.

'அடையாளம் தெரியாமல் வாழ்ந்துவிட்டுப் போக வேண்டும் பெருமாள்' என்பான் அடிக்கடி. அவன் வாழ்ந்து கொண்டிருப்பதும் அப்படித்தான். பாரிஸில் வாழும் புலம் பெயர்ந்த எழுத்தாளர்களோடு அவ்வளவாக ஒட்டுறவு இல்லாதவன். இலக்கியக் கூட்டங்களுக்கு வர மாட்டான். பல்வேறு புனைப்பெயர்களில் எழுதுவான். இலங்கையில் இருந்தபோது எழுதியவற்றில் ஒன்றுகூட இப்போது அவன் கைவசம் இல்லை. 25 ஆண்டுகளாக எழுதிவந்தும் ஒரே ஒரு சிறுகதைத் தொகுதிதான் வெளிவந்திருக்கிறது. ஃப்ரெஞ்ச் கற்றுக்கொண்டு அதிலும் எழுதுகிறான். கொலாஜ் ஓவியன்.

ஒரு நாள் லத்தீன் குவார்ட்டரிலுள்ள3 ஸோர்போன் பல்கலைக்கழகம் போய்விட்டு செந்த் மிஷெல் புலுவாரில் நடந்து சென்றுகொண்டிருந்தபோது ஒரு கட்டிடத்தில் எபினேசரின் புகைப்படம் தாங்கிய சுவரொட்டிகளைப் பார்த்து ஆச்சரியமடைந்தான் பெருமாள். அது அவனுடைய கொலாஜ் ஓவியங்களின் கண்காட்சியென்று தெரிந்தது. மதிய உணவுக்காக அப்போது அந்த ஓவியக்கூடம் பூட்டப்பட்டிருந்ததால் அவனால் அதைப் பார்க்க முடியவில்லை. பிறகு எபியை நேரில் சந்தித்தபோது அந்த ஓவியங்களைப் பார்த்தான்.

ஒரு நாள் எபியைச் சந்திப்பதாக இருந்தது. அன்றைய தினம் வெள்ளிக்கிழமை. மாலை ஏழு மணிக்கு சந்திப்பதாக ஏற்பாடு. அவன் மற்ற தினங்களில் வேலைக்குப் போய்விடுவான் என்பதால் சனி ஞாயிறில் மட்டும்தான் பார்க்க முடியும். பெருமாள் அப்போது முருகேஷ் வீட்டில் தங்கியிருந்தான். முருகேஷ் வீடு இருக்கும் அனியேவிலிருந்து (Asnieres) 320ஆம் நம்பர் பஸ் எடுத்து அனியே ஸ்டேஷன் வந்து அங்கிருந்து M-13 மெத்ரோ பிடித்து மொந்த்பர்னாஸ் வரும்வரை அவனுக்கு வழி தெரியும். ஆனால் மொந்த்பர்னாஸிலிருந்து M-4 மெத்ரோ பிடித்து அவனால் கார் து நோர்4 மெத்ரோவுக்கு வரத் தெரியாது. கார் து நோர் மெத்ரோவிலிருந்து மேலே வந்தால் லாச்சப்பல்.5 லாச்சப்பலில்தான் வதனி மஹால் (ஈழத்தமிழரால் நடத்தப்படும் உணவகம்) இருந்தது.

மொந்த்பர்னாஸ் மெத்ரோவை ஐரோப்பாவிலேயே பெரிய மெத்ரோ என்கிறார்கள். ஆனால் அதைப் பார்த்தால் உலகத்திலேயே பெரிய மெத்ரோ என்று தோன்றுகிறது. அது ஒரு பிரம்மாண்டமான நிலவறை உலகம்.

மெத்ரோ எண்களைக் குறிப்பிட்டு அம்புக்குறிகளெல்லாம் இருந்தன. அதை வைத்துக்கொண்டு செல்வது சுலபமானதுதான். ஆனால் அந்த டெக்னிக் பெருமாளுக்கு இன்னும் கைகூடி வரவில்லை. அதனால் மொந்த்பர்னாஸில் எம்-13 வந்து நிற்கும் இடத்துக்கே வந்துவிடுவதாகச் சொல்லியிருந்தான் எட்வின். எட்வினுக்கு அன்று வேலை. காலை ஒன்பது மணியிலிருந்து இரண்டு மணி வரை. பிறகு மாலை ஆறு மணியிலிருந்து இரவு பதினோரு மணி வரை. இடைப்பட்ட நேரத்தில் பேசிக்கொண்டிருக்கலாம் என்று திட்டம். ஆனால் திட்டமிட்டபடி அன்று எட்வினுடன் பேச முடியவில்லை. காரணம்: அசோக்.

வதனி மஹாலில் அமர்ந்து எட்வினும் பெருமாளும் Stout6 பியரைக் குடித்துக்கொண்டிருந்தபோது எதிரேயிருந்த கண்ணாடியில் தெரிந்த ஒரு உருவத்தைப் பார்த்து 'அவர்தான் அசோக்' என்றான் எட்வின். பெருமாளிடம் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. அசோக் பற்றி அவனுக்குள் ஒரு மோசமான பிம்பமே உருவாகியிருந்தது. காரணம், 'அசோக்கிற்கு ஒரு முத்தம்'7 என்ற தலைப்பில் எட்வினும் மற்ற நண்பர்களும் வெளியிட்டிருந்த துண்டுப் பிரசுரம்கூட இல்லை. அதற்குப் பதில் கூறும் விதமாக அசோக் வெளியிட்டிருந்த 'ஜன்னலைத் திறவுங்கள்' என்ற துண்டுப் பிரசுரம்தான். தன்னை விமர்சிப்பவர்களையெல்லாம் அயோக்கியர்களாகச் சித்தரித்திருந்தார் அசோக். கயமைத்தனம் என்ற வார்த்தை மட்டும் ஒரு பக்கத்திற்கு நான்கைந்து தடவைகள் பிரயோகிக்கப்பட்டிருந்தன. தன் சக எழுத்தாளனான எட்வினைப் பற்றிய அசோக்கின் விமர்சனத்தைப் பார்ப்போம்:

‘உண்மையில் இந்த நபரின் புகலிட இலக்கியப் பிரவேசம் எனக்கு, எங்களுக்கு நெருங்கி வரும் அபாயத்தை முன்கூட்டியே எச்சரிக்கின்றது. யாழ்ப்பாணத்தில் தீவுப் பகுதியில் தமிழீழ விடுதலைப் புலிகளின் பொறுப்பாளராக இருந்த இவர் செய்த அராஜகங்கள் சித்திரவதைகள் தொடர்பாக நானும் மற்றவர்களும் ஒன்றும் அறியாத நிலையில் உள்ளோம் என நினைக்கின்றார். புலிகளினால் மாற்றியக்கப் போராளிகள் படுகொலை செய்யப்பட்டபோது இவற்றைத் தீவுப் பகுதியில் முன்னின்று செயற்படுத்தியவர்களில் இவரும் ஒருவர். ராஜினி திரணகம யாழ்ப்பாணத்தில் வைத்து தமிழீழ விடுதலைப் புலிகளால் கொலை செய்யப்பட்டபோது அக்காலப்பகுதியில் புலிகளின் வீரச் செயலைப் புகழ்ந்துரைக்கும் அன்றைய ‘சுவரொட்டிக் கவிஞராக’ இவர் அங்கு திகழ்ந்ததை பலரும் அறிவார்கள். இவரின் கொலை வெறித்தனத்தில் இருந்து தப்பியவர்கள் பலர் இன்னும் இங்கு உயிரோடு உள்ளார்கள். அவர்களின் சாட்சியங்கள் இவரின் கொடுமைகளுக்கு இன்னும் அத்தாட்சியாகத் திகழ்கின்றன. மண் விற்பனை மற்றும் பணமோசடி தொடர்பாக இயக்கத்தை விட்டு வெளியேற்றப்பட்டு, பின் இவரின் ‘விசுவாச சேவைக்காக’ இயக்கத்தில் மீண்டும் சேர்த்துக்கொள்ளப்பட்டவர் இவர். அதன் பின் பாங்காக்கில் ஏஜென்சியாக வெளிநாடுகளுக்கு ஆள் கடத்தும் நபராக கொஞ்ச காலம் இருந்து செய்த தில்லுமுல்லுகள், சேட்டைகள் யாவும் நாங்கள் அறிவோம். பின் பாரிஸ் வந்து சேர்ந்த பின்பும் புலிகளின் புகழ் பாடும் கடமையைக் கண்ணாரக் காப்பாற்றிய பெருந்தகை இவர். ஆண்ட பரம்பரையின் புகழ்பாடி தமிழர் கல்வி நிலையம் ஒன்றின் பரிசில் பெற்ற உன்னத ‘இலக்கிய’ வரலாறும் இவருக்கு உண்டு. இவரின் உளவியல் இன்றும் தமிழீழ விடுதலைப் புலிகளின் கொலைக் கலாச்சாரத்தோடு பின்னிப் பிணைந்திருப்பதை இவரின் சில வார்த்தைப் பிரயோகங்களிலிருந்து நீங்கள் புரிந்துகொள்ள முடியும். அத்தோடு இவருடைய எழுத்துக்களைப் படிப்பவர்கள் இவரின் குள்ள நரித்தனங்களையும் புரிந்துகொள்ள முடியும். சிறுகதை என்ற போர்வையில் ஈழத்தில் தமிழீழ விடுதலைப் புலிகளினால் மேற்கொள்ளப்பட்ட சில மனித உரிமை மீறல்களை மறைத்து ஏனைய விடுதலை அமைப்புகளின் தலையில் சுமத்தும் கயமைத்தனம், புலம்பெயர் சூழலில் இன்று தாக்கத்தைக் கொடுக்கும் சில படைப்பாளிகள், மனித உரிமைவாதிகள், தமிழீழ விடுதலைப் புலிகளின் மனித உரிமை மீறல்களை எதிர்க்கும் இலக்கிய ஆர்வலர்கள் போன்றோரைப் பற்றி கவுண்டமணி செந்தில் பாணியில் இவர் கக்கும் நக்கல்கள், இவற்றைப் பிரசுரிக்கவென்று ஒரு சஞ்சிகை. ஆனால் தமிழீழ விடுதலைப் புலிகள் தொடர்பாக ஒரு சிறு குற்றச்சாட்டு வந்தாலே அப்பிரதி அந்த சஞ்சிகையில் பிரசுரிக்கத் தகுதியற்றதாகிவிடும். எனக்கும் பல படைப்பிலக்கிய நண்பர்களுக்கும் பல தடவை இவ்வாறு நடந்துள்ளது. அதே நேரம் மற்றவர்களைக் கொச்சைத்தனமாக விமர்சிக்க தாராளமாக இடம் கொடுக்கும்...’

கண்ணாயிரம் பெருமாளின் முந்தைய நாவல் பற்றிய அசோக்கின் விமர்சனம் பின்வருமாறு:

‘காதலா தனிமையில் இருந்தால் சொல்லுங்கள். காதோரம் வருகிறேன் ரகசியம்.[8] பாலியல் ரீதியாகப் பெண்களைக் கொச்சைப்படுத்தும் மிக மோசமான ஆணாதிக்க நிலை கொண்ட ஒரு மனநோயாளியின்

போர்னோகிரா.ஃபி.’

இந்த அசோக்தான் பக்கத்து கேபினில் அமர்ந்திருந்தது கண்ணாடியில் தெரிந்தது. பெருமாள் பார்த்ததை அவரும் பார்த்துவிட்டு புன்னகையுடன் எழுந்து வந்தார். பெருமாளும் எழுந்து சென்று அவரோடு கைகுலுக்கினான். மிக்க அன்போடு அவனைத் தழுவிக்கொண்டார். பெருமாளுக்கு ஆச்சரியமாக இருந்தது. காரணம், றயாகரன். பெருமாளையும் எட்வினையும் கண்டபடி திட்டி கட்டுரைகள் எழுதுபவர். அந்த எழுத்துக்களைப் படித்து அவரை ஒரு கிழவர் என்றே அனுமானித்திருந்தான் பெருமாள். ஆனால் அவரோ பெருமாளின் ஆ.ஃபீஸிலிருந்த அய்யேயெஸ் அதிகாரிகளைப்போல் - அதாவது சினிமா ஹீரோவைப் போல் - பளபளவென்று மின்னினார். நட்புடன் ஹலோ என்றான் பெருமாள். பதிலுக்கு விரோதமாக முறைத்தார். தற்செயலாக இரண்டு முறை அவரைச் சந்திக்க நேர்ந்தபோதும் இதே வித விரோத பார்வையையே எதிர்கொண்டான் பெருமாள். ஆனால் அசோக் அப்படியில்லாமல் மிகுந்த சிநேக பாவம் கொண்டிருந்தார். ‘என்னைப் பெரிய ரவுடி என்று சொல்லியிருப்பார்களே உங்கள் நண்பர்கள்’ என்று எட்வினைப் பார்த்து நக்கலாக சிரித்துக்கொண்டே பெருமாளிடம் கேட்டார் அசோக்.

அவரைப் பற்றி மட்டுமல்ல. தன்னை எதிரியாகக் கருதும் எல்லோரைப் பற்றியும் எட்வின் பெருமாளிடம் ஒரு விஷயம் சொல்லியிருந்தான். ‘இவர்களுக்கும் எங்களுக்கும் எத்தனையோ கருத்து வேறுபாடுகள், முரண்பாடுகள் இருக்கலாம். அடிதடிகள் நடக்கலாம். ஆனால் இவர்கள் எல்லோருமே வாழ்வில் சமரசம் செய்துகொள்ளாதவர்கள். அந்த வகையில் இவர்கள் மீது எனக்கு மிகுந்த மரியாதை உண்டு. ரெஸ்தொராந்த்களில் சமைத்துக்கொண்டும் கோப்பை கழுவிக்கொண்டும் இன்னும் இதைப் போன்ற பலவிதமான உடலுழைப்பு சார்ந்த வேலைகளைத்தான் செய்துகொண்டிருக்கிறார்களே. தவிர ஒரு ரேடியோ ஸ்டேஷனிலோ, பத்திரிகையிலோ, தொலைக்காட்சியிலோ போய்ச் சேரவில்லை பார்த்தாயா? அப்படி மீடியாவில் வேலை பார்த்தால் 15,000 .ஃப்ராங்க் சம்பளம் கிடைக்கும். கோப்பை கழுவி வாங்கும் சம்பளத்தை விட மூன்று மடங்கு அதிகம்.’

‘என் நண்பர்கள் சொல்லவில்லை. நான்தான் உங்கள் எழுத்துக்களைப் படித்துவிட்டு அப்படி நினைத்தேன்’ என்றான் பெருமாள்.

‘சாப்பிடுகிறீர்களா?’ என்று கேட்டார் அசோக்.

‘நான் ஸ்டவ்ட் குடித்துக்கொண்டிருக்கிறேன். தொடர்ந்து குடிக்கவே விருப்பம். நீங்கள் குடிப்பீர்களா?’

அசோக் குடிப்பதில்லை. புகைப்பதில்லை. திருமணமும் செய்து கொள்ளவில்லை. மார்க்சீயவாதி வேறு. ஒரு செக்ஸ் ஒர்க்கரைப் பார்த்தால்கூட அவருக்கு பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம்தான் ஞாபகம் வருமேயொழிய செக்ஸா ஞாபகம் வரும்? நோ சான்ஸ்.

இருவரும் ஒரு மணி நேரம் பேசிக்கொண்டிருந்தார்கள். அவ்வளவு நேரமும் எட்வின் அடுத்த கேபினில் தனியாகவே ஸ்டவ்ட் குடித்துக் கொண்டிருந்தான். சற்றே குற்றவுணர்வு ஏற்பட்டாலும், இந்த வாய்ப்பை

விட்டால் வேறு எப்போது அசோக்கிடம் பேசப்போகிறோம் என்று தன்னைச் சமாதானம் செய்துகொண்டான் பெருமாள்.

'ஆமாம் பெருமாள், நீங்கள் ஏன் இப்படி ஒரு anti marxist ஆக இருக்கிறீர்கள்?' என்று கேட்டார் அசோக்.

'இல்லையே நான் ஒரு மார்க்ஸிஸ்ட்தான்' என்றான் பெருமாள். இந்தப் பதிலைச் சொல்லும்போது பெண்களிடம் அவன் சொல்லும் நானாவிதப் பொய்களும் ஞாபகம் வந்தன.

ஆச்சரியத்துடன் எழுந்து நின்று கைகுலுக்கினார் அசோக். 'மன நோயாளி என்று எழுதியதற்காகக் கோபமா பெருமாள்?' என்று கனிந்த குரலில் கேட்டார்.

'சே சே... அதெல்லாம் ஒன்றுமில்லை. எனக்கே அப்படித்தான் சந்தேகமாக இருக்கிறது.'

'அடிக்கடி நாம் சந்திக்க வேண்டும் பெருமாள். உங்கள் நண்பர்கள் என்னைச் சந்திக்க விடமாட்டார்கள். சென்ற முறை தமிழ் நாட்டிலிருந்து ஒரு எழுத்தாளர் வந்தபோது உங்கள் நண்பர்கள் என்னைப் பார்க்க விடாமல் அவரைச் சிறை வைத்துவிட்டார்கள். நீங்களும் அப்படி இருந்துவிடாதீர்கள். ஒரு நாள் முழுவதும் நீங்கள் எனக்காக ஒதுக்க வேண்டும். பேசலாம்...'

அடுத்த கேபினில் இருந்த எட்வினைப் பார்த்து விபரம் கேட்டான் பெருமாள். 'அந்த எழுத்தாளர் அசோக்கைப் பார்க்க விரும்பியும் அசோக்தான் தவிர்த்துவிட்டார்' என்றான் எட்வின்.

வதனி மஹாலிலிருந்து எட்வினும் பெருமாளும் ஆறு மணிக்குக் கிளம்பினார்கள். வதனி மஹால் இருக்கும் தெருவுக்கு அடுத்த தெருவில்தான் இருந்தது எபினேசரின் வீடு. வீட்டு வாசலில் விட்டு விட்டு அவசரமாகக் கிளம்பினான் எட்வின். குறிப்பிட்ட நேரத்திற்கு ஒரு மணி நேரம் முன்னதாக வந்திருந்தான் பெருமாள். வாசலிலிருந்து இரண்டு முறை இரண்டாம் எண்ணையும் A என்ற எழுத்தையும் அழுத்தினான்.9 வீட்டிலிருந்து குரல் எதுவும் வரவில்லை. இரண்டு மூன்று முறை அழுத்திப் பார்த்துவிட்டு திரும்பவும் வதனி மஹாலுக்கே வந்து சேர்ந்தான். திரும்பவும் ஆறரை மணிக்குச் சென்று எண்களை அழுத்தினான். குரல் எதுவும் வரவில்லை. பிறகு திரும்பி வந்து ஒரு டெலி.:.போன் பூத்திலிருந்து எபியின் வீட்டுத் தொலைபேசி எண்ணை அழைத்தான். அவசர உபயோகத்திற்கென்று அவனிடம் ஒரு டெலி.:.போன் கார்ட் இருந்தது. ஆனால் எபியின் பதிவு செய்யப்பட்ட குரலே .:.ப்ரெஞ்சில் பேசியது. திரும்பவும் வதனி மஹால் வந்தான். இதே சடங்கைத் திரும்பவும் சரியாக ஏழு மணிக்குச் செய்தான். திரும்பவும் அதே பதிவு செய்யப்பட்ட எபியின் .:.ப்ரெஞ்ச் குரல். முருகேஷுக்கு .:.போன் செய்தான். அவன்தான் முந்தின தினம் இந்தச் சந்திப்புக்கு ஏற்பாடு செய்து கொடுத்திருந்தான். அவனுக்கும் புரியவில்லை. எபி இம்மாதிரி விஷயங்களில் மிகவும் கறார். இம்மி பிசகின்றிச் செயல்படுபவன். எங்கே தவறு நடந்ததென்று புரியவில்லை. வதனி மஹாலுக்கு வந்து சேர்ந்தான். அசோக் இல்லாவிட்டால் என்ன செய்வதென்று புரியவில்லை. எட்வினுக்கு .:.போன் செய்துவிட்டு பனிரெண்டு மணி வரை தெருவோரத்து பெஞ்சில் உட்கார்ந்திருக்கலாம். இதைத் தவிர வேறு வழியொன்றும் புலப்படவில்லை. முருகேஷ்

வீட்டுக்குத் திரும்பிச் செல்வது சாத்தியமென்று தோன்றவில்லை. மொந்த்பர்னாஸில் M-13 மெத்ரோவைப் பிடித்துவிட்டால் முருகேஷ் வீட்டுக்கு எந்த நேரத்திலும் சேர்ந்துவிடலாம். ஆனால் வதனி மஹாலிலிருந்து எப்படி மொந்த்பர்னாஸ் செல்வது? நல்ல வேளையாக அசோக் இருந்தார்.

‘தயவுசெய்து என்னை மொந்த்பர்னாஸில் கொண்டு விடுவீர்களா?’ என்று கேட்டான். ‘அதெல்லாம் எதற்கு? என்னுடன் வாருங்கள். எனக்கு அறிவாலயம் (லாச்சப்பலில் உள்ள தமிழ்ப் புத்தகக்கடை. கண்ணாயிரம் பெருமாளைத் தவிர மற்ற அனைத்து தமிழ் எழுத்தாளர்களின் புத்தகங்களும் இங்கே கிடைக்கும்) போக வேண்டிய வேலை இருக்கிறது. அங்கிருந்து நீங்கள் எபினேசருக்கு ஃபோன் போடலாம். இன்றிரவு என்னுடன் சாப்பிட்டுவிட்டு என் இடத்திலேயே தங்கலாம். நாம் நிறைய பேச வேண்டியிருக்கிறது’ என்றார் அசோக். அவரோடு தங்கிப் பேசுவதற்கு பெருமாளுக்கு ஆர்வம் இருந்தாலும் முதலில் எபினேசரோடு ஓரளவு பேசிவிட்டுத்தான் மற்றதெல்லாம் என்று தோன்றியது. கடந்த வார சனி ஞாயிறிலும் பெருமாள் எபினேசரைச் சந்தித்திருந்தான். ஆனால் இரண்டு தினங்களிலும் கிட்டத்தட்ட நாற்பது மணி நேரம் பேசியும் இன்னமும் அவனோடு ஒரு வார்த்தை கூடப் பேசாதது போல் இருந்தது.

அசோக்குடன் கிளம்பினான் பெருமாள். அறிவாலயம் போய்விட்டு இருவரும் ஒரு ரெஸ்தொராந்த் வந்தனர். அங்கே ஒரு தெரிந்த நண்பர் இருந்தார். அவருடன் பெருமாளை விட்டுவிட்டு ‘ஒரு அரை மணியில் வந்துவிடுகிறேன். எங்கேயும் போய்விடாதீர்கள். அவசியம் வந்துவிடுவேன்’ என்று சொல்லிவிட்டுப் போனார் அசோக்.

அந்த நண்பரிடம் கைத்தொலைபேசி இருந்தது. அதன் மூலம் மறுபடியும் எபினேசர் வீட்டுக்குத் தொடர்பு கொண்டான் பெருமாள். எபியின் பதிவு செய்யப்பட்ட ஃப்ரெஞ்ச் குரலே மீண்டும் கேட்டது. அஃப்யா வீட்டில் இல்லையோ என்று சந்தேகமாக இருந்தது. எபியின் மனைவி. மாலி தேசத்துப் பெண்.

‘என்ன சாப்பிடுகிறீர்கள்? காப்பியா? டீயா?’ என்று கேட்டார் நண்பர்.

‘மாலை ஆறு மணிக்கு மேல் நான் காப்பி டீ குடிப்பதில்லை. அதிலும் பாரிஸ் வந்துவிட்டு காப்பி டீ குடிப்பதா? என்றான் பெருமாள்.

அந்த நண்பரே நடத்தும் ரெஸ்தொராந்த் அது. அங்கே மது அருந்துவதும் புகை பிடிப்பதும் தடுக்கப்பட்டிருந்தது. அதற்குள் நண்பருக்கு ஒரு ஃபோன் வந்து அவரும் அவசரமாகக் கிளம்பிப் போனார். அங்கேயிருந்த மற்ற இரண்டு பேருடன் பேசிக்கொண்டிருந்தான் பெருமாள். அது மிகவும் அலுப்பாக இருந்தது. புகை பிடிக்காமல், மது அருந்தாமல் பேசிக்கொண்டிருப்பது அபத்தமாகத் தோன்றியது. அசோக்கும் வரவில்லை. நண்பரும் இல்லை. மணி எட்டு. அந்த இருவரிடமும் தன்னை அறிவாலயத்தில் கொண்டுபோய் விட முடியுமா என்று கேட்டான் பெருமாள். இருவரும் சரியென்று கிளம்பினார்கள்.

அறிவாலயத்தை மூடிக்கொண்டிருந்தார்கள். அப்போது அங்கே வந்து சேர்ந்தார் அசோக். கடைசியாக ஒரு முறை எபிக்கு ஃபோன் செய்து பார்த்துவிடலாம் என்று முயன்றபோது அவன் கிடைத்தான். பேசிய

பிறகுதான் தெரிந்தது. அவன் எட்டு மணிக்குத்தான் சந்திப்பதாகச் சொல்லியிருந்தானாம். அவனுடைய பாதுகாப்பின் பொருட்டு அஃப்யா தொலைபேசியை எடுப்பதேயில்லை என்றும், கதவையும் திறப்பதில்லை என்றும் சொன்னான் எபி.

ஐந்து நிமிடத்தில் வந்துவிட்டான். அவனுடன் ஒரு உயரமான பெண். ஃபீஃபா. எபியின் தோழி. ஆறடி உயரம் என்று தொன்றியது. வீட்டுக்குச் சென்றபோது அங்கே ஒலிவியே (Olivier) என்ற நண்பரும் வந்திருந்தார். வயது 55 இருக்கலாம். ஆனால் 65 போன்ற தோற்றம். பளபளவென்று மின்னிய மொட்டைத் தலை. மிஷல் ஃபூக்கோவை நகலெடுத்தது போன்ற தோற்றம். ஃபூக்கோவின் நண்பரும்கூட. ஸோர்போனில் தத்துவத் துறைப் பேராசிரியர்.

‘இவர் வந்தாலே சிக்கலாகிவிடுகிறது. அதனால்தான் இவரைத் தவிர்த்து வருகிறேன். ஆனாலும் மனசு கேட்க மாட்டேன் என்கிறது’ என்றான் எபி.

ஒன்றும் புரியாமல் பார்த்தான் பெருமாள்.

‘அளவுக்கதிகமாகக் குடித்துவிட்டு கீழே விழுந்துவிடுகிறார். ஏடா கூடமாக அடிபட்டுவிடுகிறது. அதனாலேயே பயமாக இருக்கிறது’ என்று விளக்கினான் எபி.

உண்மைதான். இடைவெளி விடாமல் தொடர்ந்து குடித்துக் கொண்டிருந்தார் ஒலிவியே. ஒலிவியேவுக்கும் ஃபீஃபாவுக்கும் ஆங்கிலம் தெரிந்திருந்தபடியால் பேசுவதற்குத் தடையில்லையென்று நினைத்தான். ஆனால் ஒலிவியேவுடன் பேச முடியவில்லை. அவருடைய பேச்சு மார்லன் ப்ரான்டோவின் பேச்சைப் போலிருந்தது. கொழகொழவென்று ஏதோ ஒரு சப்தம்தான் கேட்டதே ஒழிய அது ஆங்கிலமா ஃப்ரெஞ்ச்சா என்றே விளங்கவில்லை. ஆனால் ஃபீஃபாவுடன் அப்படியில்லை. ஆரம்பத்தில் குசினிக்குச் சென்று அஃப்யாவுக்கு உதவி செய்துகொண்டிருந்தவள் பிறகு இவர்களோடு வந்து சேர்ந்துகொண்டாள். ஃபீஃபாவுடன் பேசியதை ஒரே வாக்கியத்தில் விவரித்துவிடலாம். அவளுடன் பேசியது கேத்தி ஆக்கருடன்10 பேசியதுபோல் இருந்தது.

இடையில் எபி பயந்தபடியே ஒரு சம்பவம் நடந்தது. நடக்கும் போது ஒலிவியே கால் தடுக்கி விழுந்து மண்டையில் அடிபட்டு ரத்தம் கொட்டியது. நிற்காமல் கொட்டிக்கொண்டேயிருந்தது. ஃபீஃபாவும் அஃப்யாவும் முதலுதவி செய்து கட்டுப் போட்டு ரத்தத்தை நிறுத்தினார்கள்.

அன்று இரவு ஃப்ரெஞ்ச் உணவு பரிமாறப்பட்டது. சாப்பிட்ட பிறகும் குடி தொடர்ந்தது. காலை ஐந்து மணிவரை பேசிக் கொண்டிருந்தார்கள். ஐந்து மணி ஆனதும் ஃபீஃபா கிளம்ப வேண்டும் என்றாள். அங்கேயே தூங்கலாம் என்றால் இடம் இருக்காது. எபியின் வீட்டில் இரண்டு அறைகள் மட்டுமே இருந்தன. ஒரு அறையில் எபியும் அஃப்யாவும். மற்றொரு அறையில் ஒலிவியேவும் பெருமாளும் எபி வளர்க்கும் ஒரு எலியும். ஒரு இளம் பெண்ணை அனுப்பிவிட்டு ஒரு கிழத் தத்துவப் பேராசிரியருடனும் ஒரு எலியுடனும் படுக்க வேண்டி வந்ததன் துரதிருஷ்டத்தை நொந்துகொண்டே உறங்கிப் போனான் பெருமாள்.

மறுநாள் காலை பத்து மணிக்கு எழுந்தான் பெருமாள். எபி அதற்குள் குளித்துவிட்டுத் தயாராக இருந்தான். காலை உணவாக ஸலாத். பச்சை

இலைதழைகள். அதன்மேல் வெள்ளை நிற ஸாஸ் ஊற்றியிருந்தது. அதோடு க்ருவாஸோன் என்று சொல்லப்படும் ப்ரெட். அந்த ப்ரெட் பிறை வடிவத்தில் இருந்தது. ஃப்ரெஞ்ச்சில் croissant என்றால் பிறை. அதற்குப் பிறகு பெருமாளுக்கு சந்தர்ப்பம் வாய்க்கும்போதெல்லாம் க்ருவாஸோன் சாப்பிட்டான். அது அவனுக்கு மிகவும் பிடித்துப்போயிற்று.

எபியும் பெருமாளும் வாக்கிங் கிளம்பினார்கள். விடுமுறை நாள் என்பதால் தெருவில் நடமாட்டமே இல்லாதிருந்தது. ப்ளத்தான் (platane) மரங்கள் இலைகளை உதிர்த்துவிட்டு நின்றுகொண்டிருந்தது ஒரு ஓவியக் காட்சியைப்போல் தோற்றமளித்தது. ப்ளத்தான் இலைகள் தாமிர நிறத்தில் நட்சத்திர வடிவில் வித்தியாசமாக இருந்தன.

ஃப்ரான்ஸ் முழுக்கவும் இந்த ப்ளத்தான் மரங்களாகவே இருப்பதை கவனித்திருந்தான் பெருமாள். அந்த தேசத்தில் எந்த இடத்திற்குப் போனாலும் ஒரு வனத்திற்குள் இருப்பதைப் போன்ற உணர்வே ஏற்பட்டது. அந்த அளவுக்கு மரங்கள் நிறைந்திருந்தன. மரங்கள் இல்லாத இடமே இல்லை. அகன்ற சாலையாக இருந்தால் நான்கு வரிசைகளில் நின்றன மரங்கள். அங்கேயிருந்த நாட்களில் ‘இந்தியாவில் ஏன் மரங்களே இல்லை?’ என்ற கேள்வியை அநேகம் பேரிடமிருந்து எதிர்கொண்டான் அவன். வழியில் ஒரு இடத்தில் ஒரு கஃபேயைக் காண்பித்து ‘இதுதான் நான் எழுதும் இடம்’ என்றான் எபி.

எழுபது வயதான ஒரு அல்ஜீரியக் கிழவர்தான் அதன் உரிமையாளர். பெயர் அப்துல் ஹாதி. காலை பத்து மணியிலிருந்து இரவு பதினோரு மணிவரை மது அருந்திக்கொண்டும் புகைத்துக்கொண்டும் கஃபேயை கவனித்துக்கொள்கிறார். ஆஜானுபாகுவான உருவம். ஆறரை அடி உயரம். தமிழ்நாட்டில் நாற்பது வயது ஆனதுமே கிழவர்களாகிவிடும் பரிதாபத்தை நினைத்துப் பார்த்தான் பெருமாள். அவரிடம் பெருமாளை ‘எக்ரிவா(ன்)’ என்று சொல்லி அறிமுகப்படுத்தினான் எபி. அவர் கண்கள் விரிய எக்ரிவா(ன்) என்று திரும்பத் திரும்பச் சொல்லி ஆச்சரியத்துடன் கைகுலுக்கினார். எக்ரிவா(ன்) என்றால் எழுத்தாளன். தமிழ்நாட்டில் பிச்சைக்கார நாய் என்று அர்த்தப்படும். ஆனால் மேலை நாடுகளில் எக்ரிவா(ன்) என்றால் celebrity. அந்த அல்ஜீரியக் கிழவரின் நடவடிக்கைகளிலும் அது தெரிந்தது. பெருமாள் அவருடைய கஃபேவுக்கு வந்ததைக் கொண்டாடும் வகையில் மூவரும் குடிக்க வேண்டும் என்றார். எபியும் பெருமாளும் அவருக்கெதிரே இருந்த உயர நாற்காலிகளில் அமர்ந்தனர்.

‘என்ன சாப்பிடுகிறீர்கள்?’ என்று கேட்டார்.

‘இன்றைய தினம் உங்களுடைய விருப்பம். குடியைக் கொண்டாடுபவர் என் நண்பர்’ என்றான் எபி.

‘ஓ... அப்படியானால் இன்று அவருக்கு ஒரு புதிய மதுவை அறிமுகப்படுத்துகிறேன். இதை அவர் இதுவரை அருந்தியிருக்க மாட்டார் என்று நம்புகிறேன்’ என்று கூறி ஒரு போத்தலை எடுத்துக் காண்பித்தார். Anise என்று எழுதியிருந்தது. அதை க்ளாஸில் ஊற்றி தண்ணீரைக் கலந்ததும் நல்ல பசுஞ்சாணத்தை எரித்துச் செய்த விபூதி நிறத்தில் மாறியது. அனிஸ் பெருஞ்சீரகத்திலிருந்து தயாரிக்கப்படுகிறது என்றார் அப்துல் ஹாதி. அவர் கூறியது போல் அவன் அதற்கு முன் அனிஸ் பற்றிக்

கேள்விப்பட்டிருக்கவில்லை.

அப்போது அவனுக்குத் தோன்றியது, உலகத்தின் மூலை முடுக்கெல்லாம் சென்று ஒவ்வொரு பிரதேசத்திலும் தயாராகும் விதவிதமான மதுபான வகைகளை அருந்திப் பார்க்க வேண்டுமென்று. காரணம், அனிஸின் சுவை அவ்வளவு வித்தியாசமாகவும் ரம்மியமாகவும் இருந்தது. மணமோ மிகச் சுத்தமாகப் பராமரிக்கப்பட்ட யோனியின் மணத்தை ஒத்திருந்தது. யோனிக்கும் பெருஞ்சீரகத்துக்கும் என்ன சம்பந்தமென்று கேட்பவர்கள் அனுபவமற்றவர்கள். விட்டு விடுவோம். மூன்று ரவுண்ட் முடித்துவிட்டு எழுந்தார்கள். எபி பணம் கொடுக்க முனைந்தபோது அதை வாங்கிக்கொள்ள மறுத்து விட்டார் அப்துல் ஹாதி. அது மட்டுமல்லாமல், ஒரு போத்தல் அனிஸையும் பெருமாளுக்கு அன்பளிப்பாகக் கொடுத்தார்.

அங்கிருந்து கிளம்பி பழங்களும் காய்கறிகளும் வாங்கலாமென்று இருவரும் மார்க்கெட் சென்றார்கள். மார்க்கெட்டில் கூட்டம் கடுமையாக இருந்தது. 90 சதவிகிதம் ஆஃப்ரிக்கர்கள். உள்ளே நுழைந்தால் வெளியே வர முடியாது போல் தெரிந்தது. 'கூட்டத்திற்கான காரணம் ரம்ஜான் மாதம்' என்றான் எபி. விற்பனையாளர்களெல்லாம் அராபியர்களைப் போல் தலைக்கட்டு கட்டியிருந்தார்கள். பெருமாளைப் பார்த்ததும் இந்திய முகம் என்று தெரிந்து வெல்கம் சார், தேங்க் யூ வெரி மச் சார், எக்ஸ்க்யூஸ் மீ சார் என்று தமக்குத் தெரிந்த இரண்டொரு ஆங்கில வார்த்தைகளை மீண்டும் மீண்டும் சொன்னார்கள். பர்ஸ், பாஸ்போர்ட் எல்லாம் பத்திரம் பத்திரம் என்று சொல்லிக்கொண்டே வந்தான் எபி. மலைமலையாக பல வகையான பழங்கள் கொட்டிக் கிடந்தன. பழங்கள் குறைந்த பட்சமாகவே மூன்று கிலோதான் கொடுத்தார்கள். கிட்டத்தட்ட சென்னை நகரம் முழுக்கவே போதுமான அளவுக்கு அந்த ஒரு மார்க்கெட்டில் குவிந்திருந்தன பழங்கள். சராசரியாக 1000 இந்தியர் உண்ணும் பழத்தை ஒரு ஐரோப்பியன் சாப்பிடுகிறான் என்று தோன்றியது. தண்ணீர், மின்சாரம் போன்ற விஷயங்களும் அப்படியே.

'உன் தூக்கத்திற்கு எலி ஒன்றும் இடைஞ்சலாக இல்லையே?' என்று கேட்டான் எபி.

அது ஒரு அழகான வெள்ளை எலி. அது வசிக்கும் கூண்டில் மாடி வசதியெல்லாம் இருந்தது. மேலே மாடியில் தூங்கும் அது படிகளின் வழியே கீழே இறங்கி வந்து ஒரு துண்டு கேரட்டைக் கொறித்துக் கொறித்துச் சாப்பிட்டுவிட்டு பக்கத்தில் வைக்கப்பட்டிருக்கும் தண்ணீரைக் குடித்துவிட்டு மேலே மாடிக்குப் போய்விடும்.'11

'நான்கு வருடம்தான் எலியின் ஆயுள். இதற்கு மூன்று வருடம் ஆகிவிட்டது' என்று வருத்தப்பட்டான் எபி.

எலி பகலில் தூங்கும். இரவில் விளையாடும். எலிகள் தனிமை விரும்பிகள். எலிகளைத் தொடுவது அவைகளுக்குப் பிடிக்காது. தொட்டாலும் அவற்றின் ஆயுள் குறையும். அதனால்தான் அதைத் தொடுவதேயில்லை. எலிகள் ரிஷிகளைப்போல் தனிமையில் வாழ்கின்றன...

இப்படியாக எலிகளைப் பற்றி நிறைய விஷயங்கள் சொன்னான் எபி.

பெருமாள் எக்ஸைப் பிரிந்து மந்தைவெளியில் தன் மகளுடன் வசித்து

வந்தபோது அவன் வீட்டிலிருந்த எலிகளின் எண்ணிக்கை சுமார் 100 இருக்கும். ஆனால் அவை எபியின் எலியைப்போல் செல்ல எலிகள் அல்ல. அழையாமல் வந்தவை. அப்போது வட இந்தியாவில் ப்ளேக் நோயினால் மக்கள் செத்துக்கொண்டிருப்ப தாக செய்திகள் வந்துகொண்டிருந்தன. ஆனால் பெருமாள் வீட்டு எலிகள் எலிப்பொறியில்கூட சிக்கவில்லை. சுண்டுவிரல் சைஸில் இருந்தன அந்த எலிகள். எந்த நேரத்திலும் அவன் மீது ஏறிக் குதித்து ஓடும்.

எபியுடன் பேசுவது ஒரு சுவாரசியமான விஷயம். பெருமாள் Georges Batailleஇன் ‘கண்ணின் கதை’ பற்றிப் பேசினால் அவன் பத்தாயின் Ma Mere (என் தாய்)12 பற்றிப் பேசினான். பெருமாள் கொதார் பற்றிப் பேசினால் அவன் பேத்ரா அல்மொதோவார் பற்றிப் பேசினான். பெருமாள் க்ளாஸ் கின்ஸ்கி பற்றிப் பேசினால் அவன் Copi பற்றிப் பேசினான். பெருமாள் அனாய்ஸ் நின் பற்றிப் பேசினால் அவன் அலினா ரேயிஸ்13 பற்றிப் பேசினான். பெருமாள் சார்லஸ் ப்யூகாவ்ஸ்கி பற்றிப் பேசினால் அவன் ஸியோரன்14 பற்றிப் பேசினான்.

அந்தச் சந்திப்பில் எபி பெருமாளுக்கு அறிமுகப்படுத்திய கலைஞர்கள் ஏராளம். அவர்களில் ஒருவர்தான் மொராக்கோவைச் சேர்ந்த தாஹர் பென் ஜெலோன். ‘அவர் எழுதிய Silent Day in Tangiers உனக்கு நிச்சயம் பிடிக்கும்’ என்றான் எபி. இந்தச் சந்திப்பு நடந்து நான்கு ஆண்டுகள் கழித்துத்தான் பெருமாளுக்கு ஜெலோனின் நாவல்கள் படிக்கக் கிடைத்தன. ஜெலோனைப் படித்தபோது பெருமாளுக்கு எபியும், எபி வளர்த்த எலியும் தவிர்க்க முடியாமல் ஞாபகத்திற்கு வந்தனர்.

எபியுடனான உரையாடலில் மற்றொரு நல்ல விஷயம், அவன் சேகரித்து வைத்துள்ள ஒலி நாடாக்கள். இசை என்றால் அது மகாராஜபுரம் சந்தானத்தோடும் கங்குபாய் ஹங்கலோடும் முடிந்து விடுவது எவ்வளவு துர்ப்பாக்கியமான நிலைமை. இந்திய எழுத்தாளர்களின் இசை ரசனை இந்திய நிலப்பரப்பை விட்டு சற்றே இடது பக்கம் திரும்பாதது பெருமாளுக்கு மிகுந்த வியாகூலத்தைத் தரும் விஷயம். எபி அப்படியல்ல. அவன் வீட்டில் விதவிதமான இசைக் கலைஞர்களின் பாடல்கள் ஒலித்துக் கொண்டிருக்கும்.

அல்ஜீரியப் பாடகனான Cheb Mami. ப்ரெஞ்ச் பாடகனான Le Forestier. கேமரூன் பாடகனான Manu Dibango. இவர்களுக்குப் பிறகு மாலி தேசத்துப் பாடகனான Ibrahim Hama Dickoவின் ஒரு சோகமான பாடலைப் போட்டு அதன் அர்த்தத்தையும் சொன்னான் எபி.

அந்த இளைஞனுக்குத் திருமணமாகப்போகிறது. பெண் வீட்டார் தாங்கள் விரும்பிய ஒரு ஆட்டை மணநாள் அன்று விருந்துக்காக வெட்ட விரும்பினார்கள். மாலியில் மணமகன் மணநாள் விருந்துக்காகப் பெண் வீட்டாருக்கு ஒரு ஆட்டைக் கொடுக்க வேண்டும் என்பது வழக்கம். ஆனால் அந்த ஆடோ அவனுக்கு மிகப் பிரியமான ஆடு. மணநாள் விருந்துக்காக அது கொல்லப்படப்போகிறது. நான் உனக்கு எப்படியெல்லாம் இலைதழைகள் கொடுத்தேன். எப்படி இப்போது நான் அவர்களுக்கு உன்னைத் தின்னக் கொடுப்பேன்... என்று அந்த ஆட்டைப் பற்றி உருகி உருகிப் பாடுகிறான் இப்ரஹீம் திக்கோ. திருமணம் என்றதும் அவனுக்கு ஏற்படும் சந்தோஷத்தைப் பாடவில்லை. அவன் மணமுடிக்கப்

போகும் பெண்ணைப் பற்றிப் பாடவில்லை. ஆனால் தன் ஆட்டைப் பற்றிப் பாடுகிறான். இப்ரஹீம் திக்கோவின் குரல் Bamana மொழியில் உள்ளத்தை உருக்குவதாக இருந்தது. அடுத்து, 'சொப்பன வாழ்வில் மகிழ்ந்தே சுப்ரமணிய ஸ்வாமி உன்னை மறந்தார் அந்தோ...' என்ற எம்.கே.தியாகராஜ பாகவதரின் பாடலைப் போட்டான் எபி. அதையடுத்து Penny Penny என்ற தென்னாஃப்ரிக்கப் பாடகனின் ஸுலூ பாடல்கள்.

எபி விஸ்கி அருந்தினான். பெருமாள் ஒரு போத்தல் ஒயின் குடித்து விட்டு பிறகு விஸ்கிக்கு மாறினான்.

மற்ற வீடுகளைப் போல எபியின் வீட்டில் புகைப்பதற்குத் தடையில்லாமல் இருந்தது பெருமாளுக்கு ஆசுவாசமாக இருந்தது. டிசம்பர் மாத இரவில் குளிர் ஸீரோ டிகிரியைத் தொட்டுக் கொண்டிருந்ததால் வீடுகளில் கண்ணாடி ஜன்னல்களை மூடி விடுவார்கள். காலையில் ஒரு பத்து நிமிடம் திறந்து வைப்பதோடு சரி. அதனால் வீட்டுக்குள் புகைத்தால் புகை அங்கேயே சுற்றிக் கொண்டிருக்கும். அதோடு அங்குள்ள தமிழ்ப் பெண்கள் பெரும்பாலும் கர்ப்பிணிகளாகவோ அல்லது கைக்குழந்தையுடனோதான் காணப்படுகிறார்கள். காரணம், அங்கே குழந்தை பிறந்தால் அரசாங்கம் உதவித் தொகை தருகிறது. படிப்பும் இலவசம். கல்வி தனியார் வசமில்லை. கோடிக்கணக்கில் பணம் சேர்த்து வைத்திருக்கும் அரசியல்வாதிகளும், முன்னாள் ரவுடிகளும் அங்கே கல்லூரிகளும், பல்கலைக்கழகங்களும் நடத்த முடியாது. முழுக்க முழுக்க அரசாங்கம்தான் அத்தனை பேருக்கும் கல்வி தருகிறது. எபியோ நிறைய புகைப்பவனாக இருந்தான்; அஃப்யாவோ நிறைமாத கர்ப்பிணி. அதனால் எபி கண்ணாடி ஜன்னலை அடிக்கடி திறந்து விட்டுக்கொண்டிருந்தான்.

அன்றிரவு குஸ்குஸ் உணவு. குஸ்குஸ் என்பது அல்ஜீரிய உணவு வகை. கிட்டத்தட்ட புட்டு மாதிரி இருந்தது. அதற்குள் மிளகாயும் இருந்தது.

மிளகாயில் மட்டும் அந்த ஊரில் பத்துப் பதினைந்து ரகங்கள் இருந்ததைக் கண்டான் பெருமாள். அரை இஞ்ச் நீளமுள்ள ஊசி மிளகாய். அதைக் கடுகளவு கடித்தால் போதும். ஒரு மணி நேரத்திற்கு கண்கள் கண்ணீரைச் சிந்துகின்றன. குடை மிளகாய் மாதிரி சிவப்பு நிறத்தில் ஒரு மிளகாய். உலகத்திலேயே அதிகக் காரமான மிளகாய் இதுதான் என்றான் எபி. நான்கைந்து பேர் சாப்பிடக்கூடிய குழம்பில் இந்த மிளகாய் ஒன்றே ஒன்றை குண்டூசியால் குத்தியெடுத்துப் போட்டு - கைகளால் தொட்டால் கை எரியும் - குழம்பு கொதித்ததும் மிளகாயை எடுத்துவிட வேண்டும். குழம்பில் நாக்கைத் துண்டு போடுகிற காரம் இருக்கும். மற்றொரு மிளகாய் நீள் மிளகாய். பெருமாள் பாரிஸில் பார்த்த ஒரு நீலப்படத்தில்15 ஒரு பெண் இந்த மிளகாயை சுயபோகம் செய்வதற்கு உபயோகப்படுத்துகிறாள். மிளகாய் முழுதாக இருப்பதால் யோனிக்குப் பழுதில்லையென யூகித்துக்கொண்டான் பெருமாள்.

அந்த மிளகாயை எண்ணெயில் பொறித்துச் சாப்பிடக் கொடுத்தாள் அஃப்யா. எபி சற்று பயந்தான். 'கொஞ்சமாகக் கடித்துப் பார். காரம் பிய்த்துவிடும்' என்றான்.

இரண்டு மிளகாய் சாப்பிட்டான் பெருமாள். இப்படி இவன் மிளகாய்ப் பிரியனாய் இருப்பதைப் பார்த்து, ஊருக்குத் திரும்பும்போது எல்லா ரக மிளகாய்களையும் வாங்கிக் கொடுத்தான் எபி. ஆனால் பெருமாள் வாங்கிய

பல புத்தகங்களால் பயண மூட்டையின் எடை கூடிவிட்டதால் ஒருகணம் புத்தகமா மிளகாயா என்று குழம்பி, பிறகு மிளகாயை வைத்துவிட்டு வந்துவிட்டான்.

அன்றைய இரவும் அவர்கள் காலை ஐந்து மணிவரை பேசிக் கொண்டிருந்தார்கள். இவ்வளவுக்கும் அ:ப்யா அவர்களையே பார்த்துக்கொண்டு அமர்ந்திருந்தாள். ‘நீங்கள் போய்த் தூங்குங்கள்’ என்று சொன்னாலும் போக மாட்டாள். அவளுக்கு பமானாவும், :ப்ரெஞ்ச்சும் மட்டுமே தெரியும். எபியும் பெருமாளும் பேசிக் கொள்ளும் தமிழில் ஒரு வார்த்தைகூட தெரியாது. இருந்தாலும் அவள் அத்தனை நேரமும் பொறுமையாகவே அமர்ந்திருந்தாள். அப்போது திடீரென்று அ:ப்யா எபியிடம் ஏதோ சொன்னாள். ‘உனக்கு தூக்கம் வருகிறது. அதனால் உன்னை விட்டுவிடச் சொல்லி சிபாரிசு செய்கிறார்கள்’ என்றான் எபி.

காலையில் எழுந்துகொள்ளும்போது பத்து மணி. அ:ப்யா போட்டுக் கொடுத்த பால் கலக்காத கறுப்புத் தேநீர் பிடித்திருந்தது. பெருமாளுக்குப் பிடிக்காத விஷயங்களில் ஒன்று, பால். குழந்தைகள் அல்லவா தேநீரிலும், காப்பியிலும் பால் கலந்து குடிக்கலாம். எப்படி இந்தியாவில் பெரியவர்களும் அப்படிக் குடிக்கிறார்கள்?

பெருமாளைப் பற்றி அ:ப்யா கூறியதாக எபி சொன்னான். அது: ‘இவர் என்ன உங்களுடைய மற்ற எழுத்தாள நண்பர்களைப் போல் அல்லாமல் ரொம்ப அமைதியாக நம் வீட்டு எலியைப் போல் இருக்கிறார்?’ அதற்கு எபி ‘ஆள் பார்க்கத்தான் எலி. எழுத்தில் புலி’ என்றானாம். :ப்ரெஞ்ச்சில் இந்த அடுக்குமொழி வருகிறதா என்று தெரியவில்லை.

***

**பின்குறிப்புகள்:**

1. பெருமாளுக்குப் பிடித்த இயக்குனர்களில் முக்கியமானவர் லூயிஸ் புனுவல். அவருடைய படங்களிலேயே அவனால் மறக்க முடியாத ஒன்று: Viridiana.

Franco தனது கலாச்சார மந்திரியிடம் புனுவலை ஸ்பெய்னுக்கு வரவழைத்து அவர் எப்படி விரும்புகிறாரோ அப்படி ஒரு படம் எடுத்துக்கொள்ளலாம் என்று தெரிவிக்கச் சொல்கிறார். தனது நண்பனான கார்ஸியா லோர்க்கா :ப்ராங்கோவினால் கொல்லப்பட்டதால் புனுவல் ஸ்பெய்னிலிருந்து வெளியேறி அப்போது 25 ஆண்டுகள் ஆகியிருந்தன. நாடு கடத்தப்பட்டவராக மெக்ஸிகோவில் வாழ்ந்துகொண்டிருந்தார். :ப்ராங்கோ அளித்த அனுமதியைப் பயன்படுத்திக்கொண்ட புனுவல் 1961இல் விரிதியானாவை எடுத்தார். எடுத்து முடித்த கையுடன் :பில்ம் சுருள்களை :ப்ரான்ஸுக்குக் கடத்திச் சென்றுவிட்டார். ஸ்பெய்னில் இந்தப் படம் உடனடியாகத் தடை செய்யப்பட்டு எஞ்சியிருந்த :பிலிம் சுருள்களும் எரிக்கப்பட்டன. புனுவல் இத்தாலியில் நுழைந்தால் அவர் கைது செய்யப்படுவார் என்று இத்தாலிய அரசும் அறிவித்தது.

வத்திகானின் அதிகாரபூர்வப் பத்திரிகை ‘இப்படம் கிறித்துவத்தின் மீது இழைக்கப்பட்ட அவமானம்’ என்று எழுதியது. அதோடு, இப்படத்தில்

நடித்தவர்களும் தொழில்நுட்பக்காரர்களும் மதத்திலிருந்து விலக்கப்படுவார்கள் என்றும் அறிவித்தது வத்திகான். இன்றளவும் இப்படத்தின் மீதான தடை வத்திகானால் நீக்கப்படவில்லை. ஆனால் 1961இல் நடந்த கான் திரைப்பட விழாவில் இப்படத்துக்கு விருது வழங்கப்பட்டது.

‘ஃப்ராங்கோவின் ஆட்சியை ஆதரிக்கும் கார்டினல்களும் போப்புகளும்தான் நரகத்திற்கு போவார்களே தவிர நான் போகமாட்டேன்’ என்று அப்போது கூறினார் புனுவல்.

கன்னிகாஸ்த்ரி படிப்பு முடித்து இன்னும் சில தினங்களில் அதற்கான சடங்குகள் நடந்து நோன்புறுதி எடுத்துக்கொள்ள இருக்கும் இளம் பெண் விரிதியானா. தீவிரமான இறை நம்பிக்கை கொண்டவள். படுக்கையில் ஒரு பெரிய மரச் சிலுவையைத் தொங்கவிட்டிருப்பாள். பக்கத்திலேயே ஒரு முள் கிரீடமும் இருக்கும். அப்போது அவளது பணக்கார உறவினர் ஒருவர் தன் மாளிகைக்கு வந்து தங்கிச் செல்லுமாறு அவளை அழைக்கிறார். விரிதியானாவுக்கு அதில் விருப்பமில்லை என்றாலும் மதர் சுப்பீரியர் அவளை சமாதானப்படுத்தி உறவினரிடம் அனுப்பி வைக்கிறார்.

அந்த உறவினரோ தனிமையில் வாழ்ந்துகொண்டிருக்கும் ஒரு பிரபு. 30 ஆண்டுகளுக்கு முன்பு திருமண நாள் அன்று இரவே இறந்துவிட்ட தன் மனைவியை எண்ணி வருந்திக் கொண்டிருப்பவர். விரிதியானாவைப் பார்த்ததும் அவருக்குப் பெரும் ஆச்சரியம். காரணம், சாயலில் விரிதியானா அவரது இறந்துபோன மனைவியைப் போலவே இருக்கிறாள். அவர் விரிதியானாவின் மீது இச்சை கொள்கிறார். தன் மனைவி இறந்த அன்று அவள் அணிந்திருந்த மண ஆடையை அணிந்துகொள்ள முடியுமா என்று விரிதியானாவைக் கேட்கிறார். முதலில் மறுத்துவிடும் விரிதியானா பிறகு அவருடைய விருப்பப்படி அந்த ஆடையை அணிந்துகொள்கிறாள். அப்போது அவள் தன்னை மணம் செய்துகொள்ள முடியுமா என்று கேட்கிறார். அவள் மறுத்துவிடவே, அவளை எப்படியாவது அடைய எண்ணி அவளது பானத்தில் மயக்க மருந்தைக் கலக்கும்படி தன் பணிப்பெண் ரமோனாவைப் பணிக்கிறார்.

மயக்க மருந்தை உட்கொண்டு சவத்தைப் போல் கிடக்கும் விரிதியானாவின் முலைகளில் முத்தமிடும் அவருக்கு அவளுடைய சம்மதமின்றி அவளோடு உறவு கொள்வதை ஏற்க முடியவில்லை. மறுநாள் காலை, அவளை அங்கேயே தங்க வைக்கும் பொருட்டு, முந்தின இரவு, தான் அவளைக் கெடுத்துவிட்டதாகக் கூறுகிறார். இதைக் கேட்டு அவள் வெறுப்பு மேலும் அதிகமாகவே பிறகு உண்மையைக் கூறுகிறார். இருந்தும் பலனில்லாமல் போகவே, குற்றவுணர்ச்சியால் பீடிக்கப்பட்டு தற்கொலை செய்து கொள்கிறார்.

இந்த நிகழ்ச்சிகளால் மிகவும் குழம்பிப்போகும் விரிதியானா, அங்கேயே தங்கி இறைவனுக்குத் தொண்டு செய்வதென முடிவெடுக்கிறாள். இறந்துபோன உறவினர் தனது பெரும் சொத்தை விரிதியானாவுக்கும், திருமணம் மூலமாக அல்லாமல் வேறு வழியில் பிறந்த தன் மகன் ஹோர்ஹேவுக்கும் எழுதி வைக்கிறார். ஹோர்ஹே அவனுடைய

காதலி லூசியாவுடன் அந்த மாளிகைக்கு வருகிறான்.

அந்த ஊரிலிருக்கும் சில பிச்சைக்காரர்களை அந்த மாளிகைக்கு வரவழைத்து அவர்களை அங்கேயே தங்கச் செய்வதன் மூலம் தன்னையும் அவர்களையும் புனிதப்படுத்திக்கொள்ளலாம் என்று எண்ணுகிறாள் விரிதியானா.

ஹோர்ஹேவுக்கு விரிதியானாவின் மீது ஈர்ப்பு ஏற்படுவதை அறியும் லூசியா அவனை விட்டுப் பிரிகிறாள். ஹோர்ஹே இந்த உலகை லௌகீகமாகப் பார்ப்பவன். சமயம் கிடைக்கும்போது பணிப்பெண் ரமோனாவையும் தடவுகிறான்.

விரிதியானா அழைத்துவரும் பிச்சைக்காரர்களில் ஒருவன் குருடன்; ஒருவன் கிழவன்; ஒருவன் முடவன்; ஒருவன் குஷ்டரோகி; ஒரு பெண் கர்ப்பிணி; இரண்டு சிறு குழந்தைகளுடன் ஒருத்தி; ஒரு குள்ளி மற்றும் சிலர் என்று மொத்தம் 11 பேர்.

குஷ்டரோகியை யாரும் சேர்த்துக்கொள்வதில்லை. ரமோனாவைத் தவிர மற்ற வேலைக்காரர்கள் குஷ்டரோகியை காரணம் காட்டி வேலையை விட்டு நின்றுவிடுகிறார்கள். பிரபுவின் தோட்டத்தில் வேலை செய்பவர்கள் குஷ்டரோகியின் இடுப்பில் ஒரு தகர டப்பாவைக் கட்டிவிடுகிறார்கள். அவன் வரும்போது அந்த டப்பாவினால் ஏற்படும் சத்தத்தை வைத்து அவன் வருவதைத் தெரிந்துகொண்டு அவனைக் கல்லால் அடிக்கிறார்கள். ஆனால் விரிதியானா அவனைத் தொட்டு காயங்களைச் சுத்தப்படுத்தி மருந்து போட்டுவிடுகிறாள். ஒரு நாள் விரிதியானா, ஹோர்ஹே, ரமோனா மூவரும் வக்கீலைப் பார்ப்பதற்காக வெளியூர் சென்றிருக்கும்போது பிச்சைக்காரர்கள் இரண்டு ஆடுகளை வெட்டி விருந்து வைத்துக் கொண்டாடுகிறார்கள்.

வீட்டிலிருந்த ஒய்ன் போத்தல்கள் உடைக்கப்பட்டு வெள்ளமாய் ஓடுகிறது ஒய்ன். கடும் போதையால் குஷ்டரோகி தங்கள் பக்கத்தில் அமர்ந்துவிட்டதையும் அவர்கள் கண்டுகொள்வதில்லை.

நடுவில், இரண்டு பிச்சைக்காரிகளுக்கு இடையே மூர்க்கமான சண்டை மூள்கிறது. இரண்டு காட்டு மிருகங்கள் ஆக்ரோஷமாய் மோதிக்கொள்வதைப்போல் சண்டையிட்டுக்கொள்கிறார்கள். மற்ற பிச்சைக்காரர்களோ இது பற்றி எந்தக் கவலையுமில்லாமல் பாடிக்கொண்டும் குடித்துக்கொண்டும் இருக்கிறார்கள்.

இதற்கிடையே குஷ்டரோகி மேஜையிலிருந்து ஒரு ஒய்ன் போத்தலை எடுக்க முனைகிறான். அப்போது அவனைத் தன் குச்சியால் அடித்து விரட்டுகிறான் முடவன். Handelஇன் 'மெஸ்ஸய்யா'விலிருந்து 'ஹல்லெலூயா கோரஸ்' ஒலித்துக் கொண்டிருக்கிறது.

பிரபுவின் மனைவி அணிந்த மணப்பெண் அங்கியை அணிந்து கொண்டு அந்தக் கோரஸுக்கு ஏற்றபடி Fandango நடனம் ஆடுகிறான் குஷ்டரோகி. அவனோடு சில பிச்சைக்காரிகளும் சேர்ந்து ஆடுகிறார்கள். 'It looks like a witches sabbath'16 என்று தன் திரைக் குறிப்பில் எழுதுகிறார் புனுவல். டா வின்ஸியின் கடைசி விருந்தை இதைவிடவும் யாரும் பகடி செய்துவிட முடியுமா என்ன?

அங்கிருக்கும் ஸோ.ஃபாவில் கலவி செய்துகொண்டு உருண்டு புரள்கிறார்கள் ஒரு பிச்சைக்காரனும் ஒரு பிச்சைக்காரியும். அதைப் பற்றி அறியும் குருடன் அவர்களை நோக்கித் தன் தடியை வெறியுடன் விட்டெறிகிறான். ஆனால் அந்தத் தடி மேஜையின் மீது விழுந்து கோப்பைகளும், கிளாஸ் தம்ளர்களும், போத்தல்களும் சிதறுகின்றன. அந்த இடம் ஒரு போர்க்களத்தைப்போல் தோற்றமளிக்கிறது.

அப்போது ஊரிலிருந்து திரும்புகிறார்கள் விரிதியானாவும் ஹோர்ஹேவும். இவர்களைக் கண்டதும் பிச்சைக்காரகள் ஒவ்வொருவராய் நழுவுகிறார்கள். அப்போது விரிதியானாவின் அறையில் ஒளிந்திருக்கும் குஷ்டரோகியும் முடவனும் ஹோர்ஹேவைத் தாக்கி அவனைக் கட்டிப்போட்டு விடுகிறார்கள். ஹோர்ஹே நினைவிழக்கிறான்.

முடவன் விரிதியானாவை வன்கலவி செய்ய முயற்சிக்கிறான். அவள் குஷ்டரோகியிடம் தன்னைக் காப்பாற்றுமாறு கெஞ்சுகிறாள். 'நாங்கள் நல்லவர்கள் மிஸ். உங்களுக்கு ஒரு கெடுதலும் ஏற்பட்டு விடாது. இல்லை நண்பா?' என்று சிரித்துக்கொண்டே சொல்லியபடி ஒரு போத்தலை எடுத்துக் குடிக்கத் துவங்குகிறான் குஷ்டரோகி. விரிதியானா போராடியபடி இருக்கிறாள். அவளுடைய கூச்சலைக் கேட்டு சுய நினைவு பெறும் ஹோர்ஹே குஷ்டரோகியை ரகசியமாக அழைத்து 'என் கட்டுக்களை அவிழ்த்துவிட்டால் நீ பெரிய பணக்காரனாகலாம்' என்கிறான். 'என்னது, நானா? பணக்காரனா?' என்று நகைக்கிறான் குஷ்டரோகி.

'ஆமாம். இந்த வீட்டில் எக்கச்சக்கமான பணம் இருக்கிறது.'

'எங்கே?'

இதற்கிடையில் விரிதியானாவின் போராட்டம் முடிந்து அவள் மயக்கமடைகிறாள். அவள் முகத்தை மூர்க்கமாகத் திருப்பி முத்தமிடுகிறான் முடவன்.

ஹோர்ஹே சொன்னதைப் பற்றி யோசிக்கிறான் குஷ்டரோகி.

'நீ என் கட்டுக்களைக்கூட அவிழ்த்து விட வேண்டாம். அவனைக் கொல். நான் உனக்கு அந்தப் பணத்தைக் கொடுத்துவிடுகிறேன்.'

'எங்கேயிருக்கிறது பணம்?'

'அவனைக் கொல். நான் சொல்கிறேன். நான் சொன்னபடி செய்யாவிட்டால் நீ என்னையும் கொன்றுவிடலாம். சீக்கிரம் அவனைக் கொல். இந்த வீட்டில் பணம் ஆயிரக்கணக்கில் இருக்கிறது.'

குஷ்டரோகி ஒரு இரும்புச் சம்மட்டியை எடுத்து முடவனின் தலையில் அடித்து அவனைக் கொல்கிறான். பிறகு சம்மட்டியை ஹோர்ஹேவின் பக்கம் திரும்புகிறான்.

'பணம் எங்கே?'

படத்தில் இந்த இடம் பெருமாளை மிகவும் கவர்ந்த ஒன்று. ஹோர்ஹே பணமிருக்கும் இடத்தைச் சொல்லாமல் வேறு எந்த ஒரு வார்த்தையைப் பேசியிருந்தாலும் சம்மட்டி அவன் தலையில்

விழுந்திருக்கும். இப்போது அந்த மாளிகையின் எஜமானன் குஷ்டரோகிதான். விரிதியானாவைக்கூட அவன் வன்புணர்ச்சி செய்யக்கூடும். ஒருகணம்கூட யோசிக்காமல் பணம் இருக்கும் இடத்தைச் சொல்கிறான் ஹோர்ஹே.

அந்தத் தருணத்தில் ரமோனா போலீஸுடன் வருகிறாள்.

படத்தின் இறுதிக் காட்சியில் ஹேண்டலின் மெஸ்ஸய்யாவுக்கு பதிலாக ஜாஸ் இசை ஒலிக்கிறது. படம் முடியும்வரை இந்த இசையே தொடர்கிறது.

ரமோனாவின் மகள் ரீட்டா விரிதியானாவின் முள் கிரீடத்தை வைத்து விளையாடிக்கொண்டிருக்கிறாள். ஒரு முள் அவள் விரலைக் குத்தி ஒரு சொட்டு ரத்தம் வருகிறது. விரலை வாயில் வைத்து சூப்புகிறாள். பிறகு அந்த முள் கிரீடத்தை ஒருகணம் பார்த்துவிட்டு அதைப் பக்கத்தில் எரிந்துகொண்டிருக்கும் நெருப்பில் தூக்கி எறிகிறாள்.

ஹோர்ஹேயின் அறை. ரமோனாவை முத்தமிட்டுக் கொண்டிருக்கிறான் ஹோர்ஹே. அப்போது கதவைத் தட்டும் சத்தம் கேட்கிறது. திறக்கிறான். விரிதியானா நிற்கிறாள். மன்னிப்பு கேட்கும் தோரணை அவள் முகத்தில் தெரிகிறது. அதோடு, இவ்வளவு நாள் அவன் எதிர்பார்த்து ஏங்கிய தருணம் வந்துவிட்டதை உணர்கிறான் ஹோர்ஹே. அவள் அவனிடம் தஞ்சமடைந்து விட்டாள்.

உள்ளே ரமோனாவைப் பார்த்து அதிர்ச்சியடைகிறாள் விரிதியானா.

ரமோனா அறையை விட்டு வெளியேற முயற்சிக்கும்போது எதுவுமே நடக்காததுபோல் வெகு இயல்பாக அவளையும் இருக்கச் சொல்கிறான் ஹோர்ஹே.

'நாங்கள் சீட்டு விளையாடிக்கொண்டிருந்தோம். நீயும் வா. மூவரும் விளையாடுவோம்' என்று விரிதியானாவையும் அழைக்கிறான்.

எதுவுமே சொல்லாமல், முகத்தில் எந்த உணர்ச்சியும் இல்லாமல் விரிதியானா விளையாட அமர்கிறாள். அப்போது ஹோர்ஹே சொல்கிறான்: 'நீ நம்ப மாட்டாய் விரிதியானா. உன்னை நான் முதல்முதலில் பார்த்தபோது கடைசியில் விரிதியானா என்னோடுதான் சீட்டாடப்போகிறாள் என்று நினைத்தேன்' என்கிறான். படம் முடிகிறது.

படத்தில் மறக்க முடியாத மற்றொரு காட்சி: ஹோர்ஹே தன் தந்தையின் தரிசு நிலத்தை தொழிலாளர்களை வைத்து செப்பனிட்டுக்கொண்டிருக்கிறான். அப்போது ஒரு வண்டி வருகிறது. அதனுடன் கட்டப்பட்டு ஒரு நாய் வண்டியின் வேகத்துக்கு ஈடு கொடுக்க முடியாமல் பரிதாபமாக ஓடி வருகிறது. அதைப் பார்க்கும் ஹோர்ஹே 'அந்த நாயை வண்டிக்குள் ஏற்றிக் கொள்ளக்கூடாதா?' என்று கேட்கிறான். 'அது மனிதர்கள் உட்கார்வதற்கான இடம்' என்கிறான் வண்டிக்காரன். 'அப்படியானால் அந்த நாயை நான் வைத்துக்கொள்கிறேன்' என்று சொல்லி வண்டிக்காரனிடம் பணம் கொடுத்து அந்த நாயை வாங்கிக்கொள்கிறான். சற்று நேரத்தில் எதிர்த்திசையிலிருந்து வேறோர் வண்டி வருகிறது. அதிலும் முன்பு வந்த வண்டியிலிருந்ததைப்போல் ஒரு நாய் வண்டியின் வேகத்துக்கு

ஈடுகொடுக்க முடியாமல் பரிதாபமாக ஓடி வருகிறது.

ஹோர்ஹே அந்த வண்டியைக் கவனிக்கவில்லை. தொழிலாளர்களும் கவனிக்கவில்லை. எல்லோரும் மும்முரமாக வேலையில் ஈடுபட்டிருக்கின்றனர்.

புனுவலின் இந்தப் படமும் Nazarinஉம் Benito Perez Galdos (1843 - 1920) எழுதிய இரண்டு நாவல்களை அடிப்படையாகக் கொண்டவை. ஸெர்வாந்தெஸுக்கு அடுத்தபடியாக வைத்துப் பேசப்படுபவர் பெனித்தோ பெரெஸ். விரிதியானா டைட்டிலில் இவர் பெயரை புனுவல் குறிப்பிடவில்லை. ஏனென்று தெரியவில்லை.

2. Metro: பூமிக்குக் கீழே என்று பொருள். பாரிஸ் நகரில் பூமிக்குக் கீழே நான்கு தளங்களில் ரயில் போக்குவரத்து நடைபெறுகிறது. சமீபமாக ஐந்தாவது தளமும் அமைக்கப்பட்டு டிரைவர் இல்லாத கண்ணாடி ரயில் ஓடிக்கொண்டிருக்கிறது. ரயிலையும், ரயில் நிலையத்தையும் மக்கள் மெத்ரோ என்று அழைக்கின்றனர். ஒரு வகையில் நகர மக்கள்தொகையில் பாதிப்பேர் பூமிக்குக் கீழே.

இதற்கு மேல் மெத்ரோ என்று தலைப்பிட்டு பெருமாள் என் வசம் கொடுத்திருந்த காகிதங்களைக் காணவில்லை. எப்படி தொலைந்தது என்று தெரியவில்லை. 135ஆம் பக்கத்திலிருந்து 162ஆம் பக்கம் வரை காணவில்லை என்பதால் மெத்ரோ பற்றி அவன் 27 பக்கங்கள் எழுதியிருக்கிறான் என்று தெரிகிறது. இது பற்றி அவனிடம் தெரிவித்து, திரும்பவும் அதை எழுதித்தர முடியுமா என்று கேட்டபோது, தான் இப்போது 'பெண்கள்'17 என்ற தலைப்பில் ஒரு சீரியஸான போர்னோ நாவலை எழுதி வருவதாகவும், அதற்காகப் பல பெண்களைப் பரீட்சார்த்த ரீதியில் காதலித்துக்கொண்டிருப்பதால் இப்படி பாரிஸ், மெத்ரோ போன்ற அசுவாரசியமான நான்ஸென்ஸ் விஷயங்களைத் திரும்பவும் எழுதுவதற்கில்லை என்றும் சொல்லிவிட்டான்.

கண்ணாயிரம் பெருமாள் பாரிஸ் நகரைப் பற்றி ஒன்றரை மணி நேரம் வரக்கூடிய குறும்படம் ஒன்றையும் எடுத்திருக்கிறான். அந்தப் படத்தை இப்பக்கங்களை எழுதுவதற்காகத் திரும்பவும் போட்டுப் பார்த்தேன். அதன் இறுதிப் பகுதியில் 15 நிமிடங்கள் மெத்ரோவை மட்டும் படம் பிடித்திருக்கிறான் என்பதைப் பார்க்கும்போது மெத்ரோதான் பாரிஸில் அவனை வெகுவாகக் கவர்ந்த விஷயமென்று யூகிக்க முடிகிறது.

15 நிமிடங்களையும் இரவில்தான் எடுத்திருக்கிறான். பல சமயங்களில் பெருமாளும் படத்திலிருப்பதால் அந்தப் பகுதிகளை முருகேஷ்தான் எடுத்திருக்க வேண்டும். ரயில்களில் பலரும் தடித்தடியான புத்தகங்களை வைத்துப் படித்துக் கொண்டிருப்பதைக் காண முடிகிறது. குளிர்காலம் என்பதால் எல்லோரும் கம்பளி ஆடைகளை அணிந்திருப்பதால் படத்தைப் பார்க்கும்போது எனக்கு voyeuristic pleasure ஏதும் ஏற்பட வில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன். பாரிஸுக்கு அவன் கோடைக்காலத்தில் சென்றிருக்க வேண்டும். அவன் ஒரு குளிர் விரும்பி என்பதால் குளிர்காலத்தில் போயிருக்கிறான் போலும். இடியட்.

படத்தின் மெத்ரோ போர்ஷனில் என்னை மிகவும் கவர்ந்தவை, மெத்ரோக்களில் ஒட்டப்பட்டுள்ள விளம்பரங்கள்.18 மிகுந்த கலையுணர்வுடன் உருவாக்கப்பட்டிருக்கின்றன அவை.

மெத்ரோவில் மக்கள் கூட்டம்கூட்டமாகச் சென்று கொண்டிருப்பதைப் பார்க்கும்போது கலைக்கப்பட்ட எறும்புப் புற்றைப்போல் தோற்றம் கொள்கிறது. பெண்கள் சராசரியாக ஆறடி இருக்கிறார்கள். கம்பளி ஆடைகளையும் மீறி மார்பகங்கள் முன்னுக்கு வந்து நிற்பதால் அளவு 40 இஞ்ச் இருக்கும்போல் தெரிகிறது. கைவிரல்கள் நீண்டு மெலிந்திருக்கின்றன. புத்தகம் படித்துக்கொண்டிருக்கும் ஒருத்தியின் விரல்களிலேயே கேமரா சில கணங்கள் உற்றுப் பார்த்துக்கொண்டிருக்கிறது. சிருஷ்டியின் உச்சம் என்று சொல்லத் தோன்றும் பெண்கள்.

ஒரு மெத்ரோவில் பெருமாளும் எட்வினும் சென்றுகொண்டிருக் கிறார்கள். கூட்டம் அதிகமில்லை. மினி ஸ்கர்ட் அணிந்த பெண் ஒருத்தி அவர்களின் எதிர் இருக்கையில் வந்து அமர்கிறாள். ஒரு குரல் - முருகேஷின் குரலாக இருக்க வேண்டும் - ‘Peuxje?’ என்று கேட்கிறது. அவள் ‘allezici’ என்கிறாள். குரல் ‘Mercy’ என்கிறது. அவள் மிக மெல்லிய கண்ணாடி போன்ற ஸ்டாக்கிங்ஸ் அணிந்திருக்கிறாள். மேலே ஒரு கம்பளி கோட். ‘இவ்வளவு குறைச்சலா ட்ரஸ் போட்ருக்காங்களே... எப்படி இந்தக் குளிரைத் தாங்கறாங்க?’ என்று எட்வினிடம் கேட்கிறான் பெருமாள். உடனே கேமரா அந்த மெத்ரோவில் அமர்ந்திருக்கும் மற்ற பெண்களின் கால் பகுதிகளில் மெதுவாக நகர்கிறது. அநேகமாக எல்லாப் பெண்களுமே இப்படித்தான் கண்ணாடி போன்ற மிக மெல்லிய ஸ்டாக்கிங்ஸ் அணிந்திருக்கிறார்கள். முழங்காலுக்குக் கீழே நிற்கிறது கேமரா. ஓட்டப் பந்தயத்தில் ஈடுபடுகிறவர்களைப்போல் நன்கு பருத்து திரட்சியுடன் தெரிகின்றன ஆடுசதைகள். ஒரே ஒரு பெண்தான் ஜீன்ஸ் அணிந்திருக்கிறாள்.

‘நான் இந்த ஊருக்கு வந்து பத்து வருஷமாச்சு. பத்து வருஷமா எனக்கும் இதே சந்தேகம்தான்’ என்று பதில் சொல்கிறான் எட்வின்.

இந்தக் காட்சியைப் பார்த்தபோது எனக்கு ஆல்ப்ஸ், இமயமலை போன்ற பனிப் பிரதேசங்களில் ஆகக் குறைந்த ஆடையுடன் பாடல் காட்சியில் நடனமாடும் சினிமா நடிகைகளின் ஞாபகம் வந்தது. தமிழ் சினிமாவில் ஐந்து படங்கள் தயாரித்து இன்னமும் திருவோடு ஏந்தாமலிருக்கும் ஒரு தயாரிப்பாளரை எனக்குத் தெரியும். அவரிடம் இது விஷயம் பற்றிக் கேட்டேன். ‘தண்ணிதான்’ என்றார். கடந்த முறை ஆஸ்திரேலியா சென்று படமெடுத்த போது (அந்தப் படம் ஒரே வாரத்தில் ஊற்றிக்கொண்டதென்பது வேறு விஷயம்) கதாநாயகி நடிகைக்கு இவர்தான் புட்டி புட்டியாக Old Monk19ஐ ஊற்றிக் கொடுத்தாராம்.

‘என்னது, ஓல்ட் மாங்கா?’ என்று கேட்டேன். கோடிகளில் புரள்பவர்கள் எப்படி ஏழைகளின் ட்ரிங்க்கான ஓல்ட் மாங்க் பக்கம் சென்றார்கள் என்பது என் சந்தேகம்.

அந்தத் தயாரிப்பாளர் குடிப்பழக்கம் இல்லாதவர். ஆனால் வாயில் எப்போதும் பான்பராக் அரைந்துகொண்டிருக்கும்.

எடுத்துச் சென்றிருந்த ஸ்காட்ச்சையெல்லாம் அந்த நடிகையே தீர்த்துவிட்டாராம். இதை முன் கூட்டியே எதிர்பார்த்துத்தான் எதற்கும் இருக்கட்டுமென்று ஓல்ட் மாங்க் புட்டிகளையும் எடுத்துச் சென்றிருக்கிறார் தயாரிப்பாளர்.

பாவம் நடிகைகள். பாவம் தயாரிப்பாளர்கள்.

ஒரு மெத்ரோவில் நல்ல கூட்டம். (அவ்வளவு கூட்டத்திலும் படமெடுத்திருக்கும் முருகேஷின் திறமையை மெச்சத்தான் வேண்டும்). பெருமாளின் முகத்தருகே முலைகள்.20

மெத்ரோக்களில் இந்திய ரயில்களில் இருப்பதுபோல், மேலே சுருக்குக்கயிறுகளைப்போல் தோற்றமளிக்கும் கைப்பிடி வரிசைகள் எதுவும் இல்லை. பக்கத்திலிருக்கும் கம்பியையோ இருக்கைகளையோதான் பிடித்துக்கொள்ள வேண்டும். பெருமாளுக்கு அருகில் அவனைவிட ஒரு அடி உயரமான பெண் ஒருத்தி கம்பியில் சாய்ந்தபடி நின்றுகொண்டிருக்கிறாள். பெருமாளுக்குப் பிடிமானம் இல்லை. அவளைக் கட்டியணைத்தால்தான் கம்பியை பிடிக்க முடியும். ரயில் நிற்கும்போதெல்லாம் தடுமாறிக்கொண்டிருக்கிறான். கையை சிரமப்பட்டு மேலே எடுத்து எதைப் பிடித்துக் கொள்வது என்று தேடுகிறான். அப்போது அந்தப் பெண்ணே அவன் கையைப் பிடித்து தன் தோளில் வைத்து லேசாக ஒரு அடி அடித்து சிரித்துக்கொண்டே ஏதோ சொல்கிறாள். வார்த்தைகள் தெளிவாகக் கேட்கவில்லை. பெருமாள் 'மெர்ஸி' என்கிறான்.

படத்தின் இறுதியில் அந்த டிரைவர் இல்லாத கண்ணாடி ரயில் வந்துகொண்டும் சென்றுகொண்டும் இருக்கிறது. ஸ்டேஷனில் நின்றதும் கதவுகள் தானே திறக்க சிலர் இறங்குகிறார்கள். சிலர் ஏறுகிறார்கள். பின்னர் கதவு தானே மூடிக்கொள்ள ரயில் கிளம்புகிறது. பிறகு மீண்டும் ஒரு கண்ணாடி ரயில் வருகிறது. கதவு திறக்கிறது. மனிதர்கள் இறங்குகிறார்கள். கதவு மூடுகிறது. கிளம்புகிறது. இப்படியே ஐந்து நிமிடங்கள். பிறகு பெருமாள் ஒரு ரயிலில் ஏறி தலைப் பகுதியில் - அல்லது அது வால் பகுதியாகவும் இருக்கலாம் - ட்ரைவர் அமர்ந்திருக்க வேண்டிய இடத்துக்குச் சென்று முன்பக்கம் தெரியும் வெளிச்சத்தைப் பார்க்கிறான். படம் அத்துடன் முடிகிறது.

3. லத்தீன் குவார்ட்டர்: பாரிஸை உலகின் இன்ட்டலெக்சுவல் நகரம் என்று சொன்னால் லத்தீன் குவார்ட்டரை பாரிஸின் இன்ட்டலெக்சுவல் மையம் என்று சொல்லலாம். இங்குள்ள செந்த் மிஷெல் புலுவாரில்தான் நாற்பதுகளில் ஹுலியோ கொர்த்தஸார் கிதார் வாசித்து பிச்சையெடுத்து வாழ்ந்தார். இந்த புலுவாருக்குப் பக்கத்தில்தான் ஸோர்போன் பல்கலைக் கழகம் உள்ளது. சார்த்தர் கற்பித்த இடம். இங்கிருந்த டாய்லட்டில்தான் பெருமாளுக்கு ஒரு இன்ப அதிர்ச்சி காத்திருந்தது. பாரிஸ் வந்து பல நாட்கள் ஆகியும் அங்குள்ள டாய்லட்டுகளில் graffiti எதையும் பார்க்க முடியாதது அவனுக்கு ஒரு மனக்குறையாகவே இருந்து வந்தது. அந்தக் குறை ஸோர்போன் பல்கலைக்கழக டாய்லட்டில் தீர்ந்துவிட்டது. ஆண், பெண் குறிகளை வரைந்து அதன் உபயோகங்கள் குறித்து சிறுசிறு வியாசங்களே எழுதியிருந்தார்கள் மாணவர்கள். வெளியே வந்ததும்

அங்கிருந்த வராந்தாவில் ஒரு இளைஞர் கூட்டத்தைப் பார்த்தான். பெரிய துணியை விரித்து அதில் ஏதோ எழுதிக்கொண்டிருந்தாள் ஒரு பெண். உலகமயமாக்கலை எதிர்த்தும் மூன்றாம் உலக நாடுகளை ஆதரித்தும் எழுதப்பட்ட வாசகங்கள். சற்று தூரத்தில் டேப் ரிக்கார்டரிலிருந்து ஒலித்துக்கொண்டிருந்தது செஸாரியா எவோராவின் குரல். பெருமாளின் ஆசிய முகத்தைப் பார்த்து எழுதுவதை நிறுத்திவிட்டு அவனிடம் நெருங்கி புன்முறுவலுடன் ‘எந்த ஊர்’ என்று கேட்டாள். அப்போது எபி பெருமாளை எக்ரிவான் என்று கூறியதும் அவன் கைகளைப் பற்றி குலுக்கி உற்சாகத்துடன் பேச ஆரம்பித்தாள். அவன் தனக்கு ஃப்ரெஞ்ச் தெரியாது என்று கூறியதும் ‘பாதகமில்லை’ என்று சொல்லிவிட்டு, ஒருவாறு வார்த்தைகளைக் கோர்த்துக் கோர்த்து ஆங்கிலத்தில் பேசினாள். பதினெட்டு வயது இருக்கும். உலக அரசியலை பிட்டுப் பிட்டு வைத்தாள். பேசும்போது அவளது சகல அங்கங்களும் நடன பாவம் கொண்டன. தோள்களை அடிக்கடி குலுக்கினாள். பனியனை இழுத்து விட்டுக்கொண்டாள். மார்க் கச்சை அணியாததால் குளிரில் விறைத்திருந்த அவளது முலைக் காம்புகள் ஈட்டி முனையாகக் குத்திட்டு நிற்பது தெரிந்தது. பார்வையை விலக்கி, காற்றில் அலையும் அவள் கைகளைக் கவனிக்கும்படி அவன் தன் கட்புலனுக்கு ஆணையிட்டும் பயனில்லை. கண்கள் அந்த இடத்திலிருந்து நகர மறுத்தன. அங்கிருந்து கிளம்பும்போது எபி சொன்னான். ‘இதே இடத்தில் நாளை வேறொரு குழுவின் டெமான்ஸ்ட்ரேஷனைப் பார்க்கலாம். தினம் தினம் ஏதாவது ஒரு குழு எதையாவது எதிர்த்துக் கொண்டிருக்கும். அன்றொரு நாள் அனார்க்கிஸ்ட்டுகளின் டெமான்ஸ்ட்ரேஷனைப் பார்த்தேன்.’

ஸோர்போனில் வயதானவர்களையே காண முடியவில்லை. எங்கு பார்த்தாலும் இளைஞர் கூட்டம். உள்ளே 25 டிகிரி செல்சியஸ் வெப்பம் இருக்குமாறு அமைக்கப்பட்டிருந்ததால் அதுவரை பாரிஸில் பார்த்து வெறுத்துப்போன கம்பளி ஆடைகளைக் காண முடியவில்லை. பெண்கள் வெறும் பனியன் மட்டுமே அணிந்திருந்தனர். ஒவ்வொரு பெண்ணையும் பார்த்து ஏதோ பிரமை பிடித்தவன்போல் நடந்துகொண்டிருந்தான் பெருமாள். சில ஜோடிகள் உலகையே மறந்து முத்தமிட்டபடி நின்று கொண்டிருந்தன. காற்றில் லேசான கஞ்ஜா மணமும் கமழ்ந்து வந்தது.

ஸோர்போனைச் சுற்றியுள்ள இடங்களில் வாகனங்கள் செல்வதில்லை. போலிஸ் இல்லை. அதிகாரிகள் இல்லை. சுற்றிலும் மரங்கள். கஃபேக்கள். மாணவர்கள். அந்த இடத்தைப் பார்த்தால் ஏதோ மாணவர்களின் ‘சுதந்திர பூமி’ மாதிரி தெரிந்தது.

அங்கிருந்து நடந்தே இருவரும் கொலெஜ் த ஃப்ரான்ஸ்21 வந்தார்கள். ‘இங்கே ஃப்ரான்ஸில் எவ்வளவு காலம் வரையிலும் கட்டணமில்லாமல் படிக்கலாம். படிப்பு முழுவதும் இலவசம். வகுப்புகளுக்கு யார் வேண்டுமானாலும் போகலாம். ஃபூக்கோ இங்கே வகுப்பு எடுக்கும்போது காலை பத்து மணி வகுப்புக்கு ஐந்து மணிக்கே வந்து கியூவில் நிற்பார்கள்’ என்றான் எபி.

வகுப்பறையின் வெளியேயிருந்த அறிவிப்புப் பலகையில் அடுத்த

மூன்று மாதங்களுக்கு எந்தெந்த பேராசிரியர்கள் எப்போது லெக்சர் கொடுக்கிறார்கள் என்ற விபரம் கண்டிருந்தது. பூர்தியுவின்22 லெக்சர் அவர்கள் இருவரும் கொலெஜ் த ஃப்ரான்ஸில் நின்றுகொண்டிருந்த அதே தினம், அதே நேரத்தில் இருந்தது என்பதைப் பார்த்ததும் உணர்ச்சிவசப்பட்டுப்போனான் பெருமாள். இருவரும் அந்தக் குறிப்பிட்ட வகுப்பறைக்குள் நுழைந்தார்கள். இருட்டாக திரையரங்கம் போலிருந்தது வகுப்பறை. 400 பேர் அமரக்கூடிய விசாலமான அறை. 70 எம்.எம் திரையின் மீது படங்களை ஒளிபரப்பி லேசர் டார்ச் மூலம் அதன் மீது சிவப்பு ஒளியைப் பாய்ச்சி விளக்கிக்கொண்டிருந்தார் பூர்தியு. வகுப்பறையில் இடமில்லாததால் இருவரும் வெளியே வந்தார்கள்.

4. Gare du Nord: Gare - ரயில் மற்றும் பஸ் நிலையம். Nord - வடக்கு. பெருமாளை பாரிஸ் விமான நிலையத்துக்கு வந்து அழைத்துச் சென்றது எட்வின். ஒன்றிரண்டு நாட்கள் ஜெகன் என்ற நண்பனின் வீட்டில் தங்குவதாக ஏற்பாடு. அவன் வீட்டுக்குச் செல்வதற்காக கார் து நோர் மெத்ரோவில் பெருமாளும் எட்வினும் நடந்து கொண்டிருந்தார்கள். மாலை நான்கு மணி. ஆனாலும் ஒன்பது மணி போல் இருட்டியிருந்தது. ‘இதே போல் காலையிலும் ஒன்பது மணி வரை வெளிச்சம் வராது’ என்றான் எட்வின். அப்போது திடீரென்று ஒரு இடத்தில் தண்ணீராக இருக்கக் கண்டான் பெருமாள். மக்கள் அதைத் தாண்டித் தாண்டிச் சென்று கொண்டிருந்தனர். இவ்வளவு சுத்தமான இடத்தில் எப்படி இந்த நீர் வருகிறதென்று பார்த்தான். அவனது வலது கைப் பக்கத்தில் ஒரு இளம் பெண் குத்துக்காலிட்டு அமர்ந்திருந்தாள். அவனுக்குச் சட்டென்று புரியவில்லை. பிறகுதான் நிதானித்துப் பார்த்தபோது தெரிந்தது. அவள் தன் ஜீன்ஸைத் தொடைவரை இறக்கிவிட்டு உட்கார்ந்து மூத்திரம் போய்க்கொண்டிருந்தாள். அந்த மூத்திரம்தான் தரையில் ஓடிக்கொண்டிருந்தது. பெருமாளைத் தவிர வேறு யாரும் அதைக் கண்டுகொண்டதாகவே தெரியவில்லை. ஏதோ ஒரு இயல்பான விஷயமாக அனைவரும் அந்த மூத்திரத்தைத் தாண்டிச் சென்றுகொண்டிருந்தனர். ஒருக்கணம் பெருமாள் அந்த இடத்திலேயே நின்றுவிட்டான். எட்வினிடம் ‘மனித சுதந்திரம் இங்கே மூத்திரமாக ஓடிக்கொண்டிருக்கிறது பார். இந்த மூத்திரத்தை நான் முத்தமிட விரும்புகிறேன்’ என்றான் உணர்ச்சிவசப்பட்ட நிலையில்.

‘இங்கே இது சகஜம், வா’ என்று அவனை அழைத்துச் சென்றான் எட்வின்.

எட்வின் சொன்னது சரிதான் என்று மற்றொரு நாள் தெரிந்தது. மொந்த்பர்னாஸ் மெத்ரோவில் மக்கள் கூட்டம் கூட்டமாகச் சென்றுகொண்டிருக்கும் வழியில் ஒரு பெண் மூத்திரம் பெய்து கொண்டிருந்தாள். இந்த மூத்திர சம்பவத்தை மூன்றாவது முறையாகவும் ஒரு நாள் இரவு பார்க்க நேர்ந்தது.

ஒவ்வொரு மெத்ரோவிலும், மெத்ரோவின் ஒவ்வொரு அடுக்கிலும் மூலைக்கு ஒன்றாக ஒரு பேப்பர் பாக்ஸ்23 உள்ளது. அந்த பாக்ஸில் சாய்ந்துகொண்டு போதையில் தள்ளாடியபடி ஒருவர் மூத்திரம் அடித்துக்கொண்டிருந்தார்.

இதற்கு எட்வின் கூறிய காரணம்: ஒவ்வொரு மெத்ரோவிலும் நான்கு அல்லது ஐந்து அடுக்குகள் உள்ளன. மொந்த்பர்னாஸ், கார் து நோர் போன்ற மெத்ரோக்கள் ஒரு ஊர் அளவுக்குப் பெரிதாக இருக்கிறது. ஒருவர் இங்கிருந்து மேலே உள்ள ரோட்டுக்குச் செல்ல வேண்டுமானால் பத்து நிமிடம் ஆகும். அதோடு ரோட்டுக்குப் போனாலும் அங்கே உடனடியாக டாய்லட்24 இருக்குமா என்று சொல்ல முடியாது. அதை வேறு தேடிப் போக வேண்டும். அப்படியே டாய்லட்டைக் கண்டுபிடித்தாலும், கையில் சில்லறையாக இரண்டு ஃப்ராங்க் இருக்க வேண்டும். அந்தச் சில்லறையைப் போட்டால்தான் டாய்லெட் கதவு திறக்கும். இவ்வளவு பிரச்னை இருக்கிறது. மட்டுமல்லாமல், பயங்கரக் குளிர் வேறு. 5 டிகிரி செல்ஷியஸ். என்ன செய்வார்கள்? ஆனால் கொஞ்ச நேரத்தில் சுகாதாரப் பணியாளர்கள் வந்து இதைச் சுத்தப்படுத்திவிடுவார்கள். பிரச்னையில்லை.

5. பாரிஸிலுள்ள லாச்சப்பல் (La Chapelle), மார்க்கெட் பொசினியே (Marcadet Poissonniers) - (Poisson - மீன்; Poissonniere - மீன் கடை) போன்ற சில இடங்கள் சென்னை சைதாப்பேட்டை மாதிரியோ, யாழ்ப்பாணம் மாதிரியோதான் இருக்கின்றன. எம்ஜிஆர் மளிகைக் கடை, முருகன் சலூன், கிருஷ்ணா அச்சகம், சரவணா உணவகம் என்று ஏராளமான தமிழ்ப் பெயர்ப் பலகைகள். தமிழ் முகங்கள். வெள்ளிக்கிழமையானால் விபூதியிட்ட முகங்கள். மளிகைக் கடைகளிலேயே எல்லாவிதமான பியர்களும் கிடைக்கிறது. தமிழ் வீடியோ கேசட்டுகளும் உண்டு. நேற்று வந்த தமிழ்ப் படத்தின் கேசட் உட்பட.

மற்றொரு விசேஷமாக இலங்கையில் இறக்கப்படும் கள்ளும் புட்டிகளில் அடைக்கப்பட்டு கிடைக்கிறது. காய்கறி கடைகளில் முள்ளங்கி, முருங்கைக்காய், பூசணி, பறங்கிக்காய், கீரை வகைகள், கொத்துமல்லி, கறிவேப்பிலை எல்லாம் பச்சைப் பசேலென்று கிடைக்கிறது. இருபது முப்பது வருடங்களுக்கு முன்பு இங்கு வந்த சைவ உணவுக்காரர்கள் சாப்பாட்டுக்காகப் பட்ட பாடு பெருமாளுக்கு ஞாபகம் வந்தது. இப்போது சுடச்சுட இட்லிக்குச் சின்ன வெங்காய சாம்பார் ஊற்றி மிளகாய்ப் பொடி தொட்டுக் கொள்ளலாம். அந்த அளவுக்குத் தமிழ் மணம் கமழ்கிறது. ‘இதேபோல் தமிழர்கள் தங்கள் ஜாதியையும் தங்களோடு கொண்டுவந்துவிட்டார்கள்’ என்றான் எபி. இவ்வளவு போர்களையும் இவ்வளவு மரணங்களையும் பார்த்து, தங்கள் தேசத்தை விட்டுப் பிரிந்து வேறோர் தேசத்தில் அகதிகளாய் வாழும் நிலைமையில்கூட இவர்கள் தங்கள் ஜாதியை விடவில்லை என்பது வினோதம்தான்.

6. Stout: இலங்கையில் தயாரிக்கப்படும் பியர். கறுப்பு நிறத்தில் இருக்கும். குடித்தால் கிங் ஃபிஷரைவிட இரண்டு மடங்கு போதை உத்தரவாதம்.

7. ‘அசோக்கிற்கு ஒரு முத்தம்’ என்ற இந்தப் பிரதியும் இதுவரை உலகில் எழுதப்பட்ட அத்தனை பிரதிகளையும் போலவே தேர்வு, வரிசைப்படுத்தல் என்ற விதிகளாலேயே கட்டமைக்கப்பட்டுள்ளது. இப்பிரதியில் ஏதேனும் திரிபுகள், முரண்கள், பச்சைப் பொய்கள், கொச்சைச் சொல்லாடல்கள் காணக்கிடைக்கின்றன என அசோக் அவரது அளவுகோள்களில் கருதுவாராயினும், அசோக்கிற்கு நாம்

தரப்போகும் முத்தம் 'யூதாஸின் முத்தமே' என அவர் அய்மிச்சப்படுவாராயினும் எமது பிரதியைக் கட்டவிழ்க்கவும், எம்மை அம்பலப்படுத்தவும் புனிதக் குறிகள் X அசுத்தக் குறிகள் எனும் மொழியியல் இருமை எதிர்வுகளைத் தூக்கிக் கடாசிவிட்டு தனது எதிர்வினையை பிரதிவழி தெரிவிக்க அசோக்கிற்குப் பரிபூரண உரிமையுண்டு. அசோக்கிற்கு அந்தக் கருத்துரிமையை எந்த நாயாவது மறுக்கும் பட்சத்தில் அசோக்கின் கருத்துச் சுதந்திரத்திற்காகக் குரல் கொடுக்கவும் போராடவும் நாங்கள் தயார். எனவே அசோக் எமது கருத்துக்களைக் கருத்துக்களாலேயே எதிர்கொள்ள வேண்டுமெனக் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறோம். இதை விடுத்து அசோக் எம்மைத் தாக்க முற்படுவாராயின் - பகுத்தறிவில் வன்முறை, முதலாளிய சமூக ஒழுங்குகளின் வன்முறை, பாட்டாளிவர்க்க சர்வாதிகாரத்தின் பெயரிலான வன்முறை, தேசியத்தின் பெயரிலான வன்முறை, சட்டத்தின் வன்முறை என அனைத்து வன்முறைகளையும் சமரசமில்லாமல் எழுத்துக்கள் மூலம் எதிர்த்துவரும் நாம் எழுத்தையும், கருத்தையும் எதிர்ப்பதற்கு உடல்/ஆயுத வன்முறைகளில் எக்காரணம் கொண்டும் ஈடுபட விரும்பாதவர்கள்; ஏற்கெனவே இலங்கை ராணுவம், இந்திய ராணுவம், தமிழ் ஆயுத இயக்கங்கள், ஐரோப்பிய எல்லைக்காவல் பொலிசார் ஆகியோரிடம் மாறி மாறி வதைபட்டு நொந்துபோய் ஏதோ உடல் என்ற பெயரில் அரைக் கிலோ கறியும் ஒரு பிடி மசிருமாக உலாவிக்கொண்டிருக்கும் எங்களைத் தாக்கி ஆம்புலன்சிலோ அல்லது அமரர் ஊர்தியிலோ அனுப்பி வைக்க வேண்டாமென்று அசோக்கினதும் அவரது அடிப்பொடிகளினதும், அடிப்பொட்டைகளினதும் உள்ளங்கால்களை முத்தமிட்டுக் கேட்டுக்கொள்கிறோம்.'

8. தவறுதலாகச் சேர்ந்துவிட்ட ஸ்வப்னாவின் குறுந்தகவல்.

9. மேற்கு ஐரோப்பிய நாடுகளின் அடுக்கு மாடித் தொகுப்பு வீடுகளின் உள்ளே நுழைவதற்கு நீங்கள் செல்ல வேண்டிய வீட்டின் எண் தெரிந்திருக்க வேண்டும். வெளியேயுள்ள பெரிய கேட்டில் அந்த எண்ணை அழுத்தினால் நீங்கள் செல்ல வேண்டிய வீட்டில் உள்ளவர்கள் அங்கிருந்தபடியே கேட்டைத் திறக்கச் செய்வார்கள். இல்லாவிட்டால் வேறு யாரேனும் கேட்டைத் திறந்து உள்ளே செல்லும்போது அவர்களோடு ஒண்டிக்கொண்டு சென்றுவிடலாம். இதைத் தவிர வேறு வழியில்லை.

10. Kathy Acker : கண்ணாயிரம் பெருமாளின் மனம் கவர்ந்த அமெரிக்க நாவலாசிரியை.

11. பாரிஸில் பெரும்பான்மையானவர்கள் நாய் வளர்க்கிறார்கள். உலகின் சகலவிதமான நாய்களையும் இங்கே பார்க்க முடிகிறது. அதிகம் காணப்படுவது: லாஸா ஆப்ஸோ. அந்த ஊர் நாய்களும் அந்த மக்களைப் போலவே சாதுவானவை. குரைப்பதேயில்லை. வாக்கிங் செல்லும்போது கயிறால் கட்டாமலேயே நாய்களை அழைத்துச் செல்கின்றனர். அவைகளும் யாரையும் கடிக்காமல் அமைதியாகப் பின்தொடர்கின்றன. சிங்கம்போல் தோற்றம் தரும் நாய்கள்கூட பரம சாதுவாய்ப் போகின்றன. கடைவாசலில் விட்டுவிட்டு சாமான்களை வாங்கிக்கொண்டு வரும்வரை வாசலிலேயே பொறுமையாகக்

காத்திருக்கின்றன. நம் ஊரில் கார் வைத்திருப்பவர்கள் மட்டுமே நாய் வளர்க்கின்றனர். பஸ்ஸிலோ ரயிலிலோ நாய்களை எடுத்துச் செல்ல முடியாது. பாரிஸில் அது முடியும்.

நாய்களை நாம் மிகக் கொடூரமாக நடத்துகிறோம். அவைகளும் முரட்டுத்தனமாகவே நடந்துகொள்கின்றன. நாய்களின் இனப் பெருக்கத்தை ஊசி போட்டுத் தடுக்காமல் அதை அடித்தே கொல்லுகிறோம். பாரிஸில் ஒவ்வொரு டிபார்ட்மென்ட்டல் ஸ்டோரிலும் செல்லப் பிராணிகளுக்கென்று தனிப் பிரிவே இருக்கிறது. அங்கே அவைகளுக்கான உணவு, தானியங்கள், பிஸ்கட், மணல் (பூனைகள் மலம் கழிப்பதற்கானது) என்று பலவும் கிடைக்கின்றன.

வாக்கிங் போகும்போது ரோட்டோரங்களில் அவை கழிக்கும் மலஜலத்தைத் துப்புரவுப் பணியாளர் யாரும் விளக்குமாற்றை வைத்துப் பெருக்கிக்கொண்டிருப்பதில்லை. ஒரு பெரிய எந்திரம் ராட்சச பிரஷ் ஒன்றின் மூலம் துடைத்து, காற்றின் மூலமாகக் குப்பைகளை உள்ளிழுக்கிறது. பின்னர் தண்ணீரைப் பீய்ச்சியடித்து சாலைகளை மிகச் சுத்தமாகக் குளிப்பாட்டி விடுகிறது. ஒரே ஒருவர்தான் இந்த லாரி வடிவ எந்திரத்தை இயக்குகிறார். Manhole எதுவும் இல்லை. யாரும் குவார்ட்டர் பாட்டில் ரம் அடித்துவிட்டு அதற்குள் கோமணத்துடன் இறங்கி உடல் முழுக்க பீயும் சாக்கடையும் ஒழுக சுத்தம் செய்வதில்லை.

எட்வினின் தோழி ஒருத்தி - ஃப்ரெஞ்ச்சுக்காரி - இந்தியா பற்றிப் பெருமாளிடம் புகழோ புகழ் என்று புகழ்ந்துகொண்டிருந்தாள். பெருமாள் அவளுக்கு மைலாப்பூர் மாமி என்று பட்டப் பெயர் வைத்திருந்தான். இவளைப் போலவே இந்தியாவைப் புகழும் பெரும் கூட்டம் ஒன்று ஐரோப்பாவில் அலைந்து கொண்டிருக்கிறது. இவர்களையெல்லாம் கொஞ்ச நாட்களாவது இந்தியாவிலுள்ள Manholeகளில் இறக்கி விட வேண்டும் என்று நினைத்துக்கொள்வான் பெருமாள்.

12. ஜார்ஜ் பத்தாயின் இந்த முடிவுறாத நாவல் அவரது மரணத்துக்குப் பிறகே வெளிவந்தது. பெருமாள் இந்த நாவலை இன்னும் படிக்கவில்லை என்கிறான். ஆனால் இதை வைத்து எடுக்கப்பட்ட சினிமாவைப் பார்த்துவிட்டான். 'அவ்வளவாக திருப்திகரமாக இல்லை. நிச்சயம் நாவல் இதைவிட நன்றாகத்தான் இருக்கும்' என்பது அவன் கருத்து.

தன் பாட்டியிடம் வளரும் 17 வயது பியர் பெற்றோரிடம் வருகிறான். அப்பா இறந்துவிடுகிறார். அம்மா ஹெலன் ஒரு வேசி. மகனுக்கு செக்ஸைப் பரிச்சயப்படுத்தும் நோக்கத்தில் தனது நண்பர்களை அறிமுகம் செய்து வைக்கிறாள். கூட்டுக் கலவி, லெஸ்பியன் உறவு, நெக்ரோஃபீலியா காட்சிகள் என படம் நகர்கிறது. ஊடாகவே ஹெலனுக்கும் பியருக்கும் செக்ஸ் உறவு ஏற்படுகிறது.

13. Welcome to the lair of Eros. I, its humble servant, want to be with you everywhere your desire impels you as you enter the doors of this kingdom, for my sweetest joy will be to be your companion in all the pleasures you indulge in, to share with you... all the passions we

have dreamed about, and, with the same ardour, to satisfy the most secret impulses of our souls and our bodies.

Behind Closed Doors, Alina Reyes.

14. ‘Insomnia sheds a light on us which we do not desire but to which, unconsciously, we tend. We demand it inspite of ourselves, against ourselves.’

‘Three in the morning. I realize this second, then this one, then the next: I draw up the balance sheet for each minute. And why all this? Because I was born. It is a special type of sleeplessness that produces the indictment of birth.’

Emile Cioran

15. நீலப்படம்: இது பற்றி விரிவாக வருவதால் தனி அத்தியாயம் ஒதுக்கப்பட்டுள்ளது.

16. Tomas Gutierraz Alea-வின் ‘கடைசி விருந்து’ என்ற படத்தைப் பற்றியும் பெருமாள் இந்த இடத்தில் குறிப்பிட்டிருக்கிறான். கூபாவில் 1790ஆம் ஆண்டு பல அடிமைகளை வைத்து வேலை வாங்கிக்கொண்டிருந்த நிலப்பிரபு ஒருவர் இயேசு கிறிஸ்துவின் மீது மிகுந்த விசுவாசம் கொண்டவராக இருக்கிறார். அடிமைகளை வைத்து வேலை வாங்குவதன் காரணமாக ஏற்படும் குற்ற உணர்வினால் பெரிதும் பாதிக்கப்பட்டவராக, ஒரு நாளாவது தன் அடிமைகளுக்கு சேவை செய்ய வேண்டுமென்று விரும்புகிறார். அடிமைகளில் ஒரு 12 பேரைத் தேர்ந்தெடுத்து ஒரு புனித வியாழன் அன்று விருந்துக்கு அழைக்கிறார். அந்தப் பன்னிரண்டு அடிமைகளின் பாதங்களையும் கழுவுகிறார். அவர்களையும் தன் பக்கத்தில் அமர்த்திக்கொண்டு மாமிசமும், ஒயினும் வழங்குகிறார். ஆனால் அவர்களோ இயேசுவின் சீடர்களைப்போல் அல்லாமல் அந்த நிலப்பிரபுவின் தயாள உள்ளத்தையும் கருணையையும் புரிந்துகொள்ளாமல் கலகத்தில் ஈடுபடுகிறார்கள். அதாவது, விருந்தின்போது ஒரு அடிமை மிகுந்த குடிபோதையில் ஈஸ்டர் நாளன்று தங்களுக்கு விடுமுறை கிடைக்குமா என்று பிரபுவைக் கேட்கிறான். பிரபுவும் சம்மதிக்கிறார். ஆனால் ஈஸ்டர் தினத்தன்று விடுமுறை மறுக்கப்படுகிறது. அப்படியெல்லாம் விடுமுறை அளித்தால் ஆலையின் உற்பத்தி பாதிக்கப்படும் என்கிறான் மேற்பார்வையாளன். பிரபுவும் ஏற்றுக்கொள்கிறார்.

அடிமைகள் கேட்பதாக இல்லை. மேற்பார்வையாளன் கொல்லப்படுகிறான். கரும்பு ஆலை கொளுத்தப்படுகிறது. தப்பியோடும் அடிமைகளைப் பிடிக்க வேட்டை நாய்களும் காவல்காரர்களும் அனுப்பப்படுகிறார்கள். அதே சமயத்தில் 12 நீண்ட ஈட்டிகள் நடப்படுகின்றன. 11 பேர் பிடிக்கப்பட்டு அவர்களின் தலைகள் ஈட்டி முனையில் செருகப்படுகின்றன. ஒரே ஒருவன் மட்டும் தப்பிப்பதாக படம் முடிகிறது.

17. இந்த நாவலில் பாங்காக், பாரிஸ், பெர்லின் போன்ற இடைச் செருகல்கள் வந்தாலும் இது அடிப்படையில் தபால் துறையைப் பற்றிய நாவல். அதனாலேயே இதன் gloomyயான தன்மையும் தவிர்க்க

முடியாததாகிறது. இதன் காரணமாக கண்ணாயிரம் பெருமாளின் அடுத்த நாவலான 'பெண்கள்' இலிலிருந்து சில பகுதிகளை உருவி இந்த நாவலுடன் சேர்த்துவிடலாம் என்று தோன்றியது. எனவே இதில் சில பகுதிகள் சம்பந்தமில்லாதபடி துருத்திக்கொண்டிருந்ததால் குழம்ப வேண்டாம்.

18. சென்னை அண்ணாசாலையில் சினிமா நடிகர்களின் கட்அவுட் விளம்பரங்களையே பார்த்துச் சலித்துப்போயிருந்த கண்களுக்கு பாரிஸ் மெத்ரோ விளம்பரங்கள் எவ்வளவு ஆறுதலாக இருந்திருக்கும் என்பதைச் சொல்லத் தேவையில்லை.

இது பற்றி வேளச்சேரி ரோட்டில் வைத்து ஒரு நாள் சங்கரும், நடேஷும், பெருமாளும் இரவு ஏழு மணியிலிருந்து ஒன்பது வரை பேசிக்கொண்டிருந்தபோது பெரிய பல சமாச்சாரங்கள் வந்து விழுந்தன. ஆனால் என்ன ஒரு கொடுமை... ஒரு கோடைக் கால மாலைவேளையில் இரண்டு மணி நேரம் ஒரு ரோட்டோரத்தில் நின்று இதைப் பேசிக்கொண்டிருக்க நேர்ந்த துர்ப்பாக்கியம். காரணம், சங்கரின் திருமணம். 'நீ என் ஆஃபீஸுக்கு வா. ஆஃபீஸ் முடிந்து நாம் தண்ணியடிப்போம்' என்றான் சங்கர் பெருமாளிடம். அப்படியானால், வீட்டுக்கு வந்தால் தண்ணியடிக்க முடியாது என்று அர்த்தம்.

'அடப்போடா... நான் என்ன இன்னும் தபால் துறையில் கண்ட கண்ட பயல்களுக்கும் முறைவாசல் செய்துகொண்டு, அந்த மன அழுத்தம் தாங்காமல் பாதி நாட்களை பாரிலேயே கழித்த அந்தப் பழைய பெருமாளா? இப்போது மது எனக்கு அடிமை. நினைத் தால் குடிப்பேன். நினைக்காவிட்டால் குடிக்க மாட்டேன். குடியை விட பெரும் போதை தரக்கூடிய எழுத்தும், ஸ்த்ரீகளும், இசையும் என் நிழலாகத் தொடர்ந்து கொண்டிருக்கும்போது எனக்கெதற்கு வேறு பாதை? உன்னோடும் நடேஷோடும் பேசுவது ஒரு கொண்டாட்டம். அந்தக் கொண்டாட்டத்தில் மதுவுக்கும் இடமுண்டு. அதை விட்டுவிட்டு உன்னோடு குடிப்பதற்காக உன் ஆஃபீஸுக்கு வர வேண்டுமா என்ன?' ஏன் இவன்களெல்லாம் திருமணமாகிவிட்டால் இப்படி பயந்து சாகிறான்கள் - ஏதோ தேவடியாள் வீட்டுக்குப் போவது போல்? தண்ணிக்கும் திருமணத்துக்கும் என்ன சம்பந்தம்?

நடேஷுக்கு இந்தத் திருமணத் தொல்லையில்லை. ஆனால் ஷுகர் தொல்லை. 'தண்ணியை விட்டுவிட்டேன்' என்றான்.

'எவ்வளவு காலமாக?'

'ரெண்டு நாளா.'

இப்படியாகத்தான் மூன்று பேரும் ரோட்டிலேயே நின்று பேச நேர்ந்தது.

தான் பாரிஸ் மெத்ரோ ஒன்றில் பார்த்த விளம்பரத்தைப் பற்றிக் குறிப்பிட்டான் பெருமாள்.

அது ஒரு சமுத்திரம். அந்த சமுத்திரத்தை ஒரு மகா பெரிய திரையின் மூலம் மறைத்திருந்தான் ஒரு Installation ஆர்ட்டிஸ்ட்.

நடேஷும் ஒரு ஓவியன் என்பதால் இன்ஸ்டலேஷன் ஆர்ட் பற்றி உணர்ச்சிவசப்பட்ட குரலில் பேச ஆரம்பித்தான். அவன்

பேசியதிலிருந்து பெருமாள் தன் மனதில் குறித்துக்கொண்டவை.

அ. வெள்ளைக்காரன்களுக்கென்ன... சமுத்திரத்தையும் மறைப்பான்கள், ஆகாயத்தையும் மறைப்பான்கள்.

ஆ. இன்ஸ்டலேஷன் ஆர்ட் மூலம் ஒரு நகரத்தின் வடிவத்தையே மாற்றிவிடலாம்.

இ. பேசும்போது empathy என்ற வார்த்தையைக் குறிப்பிட்டான் நடேஷ். பெருமாள் Sympathy என்ற வார்த்தையைத்தான் கேள்விப்பட்டிருந்தானே ஒழிய empathy அவனுக்குப் புதிது. வீட்டுக்குத் திரும்பியதும் அதன் அர்த்தத்தை அகராதியில் தேடினான். ‘மற்றொருவரின் ஆளுமையில் புகுந்து கற்பனையாக அவரது அனுபவத்தை அனுபவித்தல்’ என்று அதில் கண்டிருந்தது.

சங்கர் பேசியதிலிருந்து பெருமாள் தன் மனத்தில் குறித்துக் கொண்டவை:

அ. லம்பாடிப் பெண்களின் முகத்தைப் புகைப்படம் எடுத்து அதை மிகப் பெரிய திரைகளில் பதிவு செய்து ஒரு டஜன் திரைகளை மெரீனா பீச்சில் install செய்வது.

ஆ. Slip streaming.

இந்த Slip streaming பற்றி பெருமாள் தன் கணினியில் தேடிப் பார்த்தான். அதில் வந்தது எதுவும் அவனுக்குப் புரியவில்லை.

இன்னும் நிறையப் பேசினார்கள். இருந்தாலும் ஒரு கோடைக் கால மாலைவேளையில் இப்படி நடுத்தெருவில் நின்று கொண்டு மூன்று மணி நேரம் பேச வேண்டி வந்ததால் பெருமாளின் மனம் மதுக்கூடத்திலேயே விழுந்து கிடந்தது. அதனால் அந்தப் பேச்சில் அவனால் சரியாக கவனம் கொள்ள முடியாமல் போனது.

19. அது பார்கள் தமிழ்நாட்டில் தடை செய்யப்பட்டிருந்த காலம். இருந்தாலும் போலீஸுக்கு லஞ்சம் கொடுத்துவிட்டு பார்களை நடத்திக்கொண்டிருந்தார்கள். எவ்வளவுதான் இந்த நாட்டில் பெண்ணடிமைத்தனம் இருந்தாலும் பாட்டில்களை வீட்டுக்கு எடுத்துக்கொண்டுபோய் குடிக்கும் அளவுக்கு ஆண்களுக்குத் தைரியம் இருப்பதில்லை. மேலும், குடி என்பது ஒரு வைபவம் அல்லவா? ஒரு வைபவத்தில் தனியாகவா ஈடுபட முடியும்? அதனால் பார்தான் ஒரே வழி. ஒயின் ஷாப் ஓனர்களுக்கும் பிஸினஸ் நடக்க வேண்டுமே?

பெருமாள் குடிக்கும் இடங்கள் மூன்று:

1. மணியுடன் பீச்

2. மணியுடன் ஐந்து நட்சத்திர ஓட்டல்கள்

3. இலக்கியவாதிகளுடன் ரோம் ஒய்ன்ஸ்

மணி செல்வாக்கு உள்ளவன் என்பதால் முதல் விஷயம் சாத்தியம். மற்றவர்களெல்லாம் போய் பீச்சில் நின்றுகொண்டு குடித்தால் போலீஸ் பிடித்துக்கொண்டுபோய் முட்டியைப் பேத்து விடுவார்கள். மணியோ போலீஸ் பாதுகாப்புடனேயே குடிப்பவன். மணி பணக்காரன்

என்பதால் இரண்டாவது விஷயமும் சாத்தியம்.

தமிழ் இலக்கியவாதிகள் மகா மகா ஏழைகள் என்பதால் ரோம் ஒய்ன்ஸ். ரோம் ஒய்ன்ஸ் என்பது விருகம்பாக்கமும், கே.கே.நகரும் சந்திக்குமிடத்தில் உள்ள கூரையில்லாத வெட்டவெளியில் சிமெண்ட் பெஞ்ச்சுகளும் மேஜைகளும் கட்டப்பட்ட ஒரு பார். இங்குதான் பெருமாள் தன் இலக்கிய சகாக்களுடன் குடிப்பது வழக்கம்.

குடிப்பது, சந்தேகமேயில்லாமல் ஓல்ட் மாங்க்தான். என்றைக்குமே பெருமாளால் குடிப்பதற்கான செலவை ஏற்க முடிந்ததில்லை. காரணம், அவனுடைய கைக்காசெல்லாம் ஆட்டோவுக்கே செலவாகிவிடும். (அவனுக்கு சைக்கிளே ஓட்டத் தெரியாது என்பதால் பைக் வாங்கவில்லை. அதனால் போக்குவரத்தெல்லாம் பஸ் அல்லது ஆட்டோதான்.) சென்னை ஆட்டோக்காரர்களோ தம்மிடம் சவாரிக்கு வருபவர்களைத் தங்கள் ஜென்ம விரோதியாக பாவிப்பார்கள். குறைத்துக் கேட்டால் ஸ்பீட் ப்ரேக்கர்களில் படுவேகமாகச் சென்று உங்கள் கிட்னிகளையே இடம் மாற்றி விடுவார்கள். பல கர்ப்பிணிப் பெண்களுக்கு இப்படி அபார்ஷனே ஆகியிருக்கிறது. தவிர முக்கால் அடி உயரத்துக்கு முளைத்திருக்கும் இந்த வேகத்தடை இருப்பது தெரியாமல் இரவில் இரண்டு சக்கர வாகனங்களில் வருவோருக்கு உடனடி மோட்சமும் கிடைப்பதுண்டு. இப்படியாக ஆட்டோவுக்கே தினசரி நூறு ரூபாய் ஆகிவிடும் என்பதால் குடிச் செலவில் தன்னுடைய பங்கை பெருமாளால் தர முடியாமல் போகும்.

இந்தக் காரணங்களினால், ரோம் ஒய்ன்ஸ் என்றாலே ஓல்ட் மாங்க்தான். ஆனால் அதில் நிரம்பவும் கலப்படம் உண்டு. ரோம் ஒய்ன்ஸ் போய்விட்டு வரும்போது மட்டும் மீரா பெருமாளிடம் 'இன்று என்ன சரக்கு சாப்பிட்டாய்?' என்று கேட்பாள். ஏனென்று கேட்டால் 'உன் அசைவிலேயே தெரிகிறது ஓல்ட் மாங்க் என்று' என்பாள்.

அப்படிப்பட்ட பொல்லாத சரக்கு அது. உறக்கத்தில்கூட படாத பாடு படுத்திவிடும். புரண்டு புரண்டு படுத்தல், உளறுதல், பெரும் சப்தத்துடன் குறட்டை என்று பலவிதமான சேஷ்டைகள் செய்யும்.

ஆனாலும் பெருமாளுக்குக் குடி விஷயத்தில் ஒரு வருத்தம் உண்டு. போதையில் கூட அவன் மனம் விழித்துக்கொண்டிருக்கிறது.

ஒருநாள் ரோம் ஒய்ன்ஸில் குடித்துவிட்டு ஆட்டோவில் வீட்டுக்குத் திரும்பிக்கொண்டிருக்கிறான். அன்றைய தினம் நண்பர்கள் கூட்டம் அதிகம். பணத்துக்கும் பஞ்சமிருக்கவில்லை என்பதால் குடி அதிகம். பெருமாளிடம் வழக்கம்போல் பணமில்லை. ஆட்டோவுக்கான பணத்தை வீட்டுக்குப்போய் மீராவிடம் வாங்கிக் கொடுத்துவிடலாம் என்று திட்டம். ஆட்டோ வீட்டருகே நெருங்கியபோது தெருமுனையிலிருந்த மெடிக்கல் ஷாப் அருகே ஆட்டோவை நிறுத்தினான் பெருமாள். தள்ளாடியபடியே சென்று Durex25 இருக்கிறதா என்று கேட்டான். இந்தியப் பெண்களின் கருப்பை எத்தனை லட்சம் அபார்ஷன்களைத் தாங்கியிருக்கிறது! எப்படியெல்லாம் உருக்குலைந்து போயிருக்கிறது! மணி பதினொன்று ஆகியிருந்தது. கடையை மூடும் நேரம். அப்போதும் இரண்டொருவர்

கையில் மருந்துச் சீட்டுடன் நின்றுகொண்டிருந்தனர். 'பைசா நாளை தருகிறேன்' என்று சொல்லிவிட்டு ஆட்டோவில் ஏறிக்கொண்டான் பெருமாள்.

வீட்டில் ட்யூரெக்ஸ் இல்லாதது அந்த போதையிலும் அவனுக்கு ஞாபகம் இருந்தது. அதுதான் அந்த வருத்தம்.

20. பேட்டியாளர் அவளிடம் 'உங்கள் முலைகளை இவ்வளவு பெரிதாக ஆக்கிக்கொண்டிருக்கிறீர்களே? நடக்கும்போது அது குலுங்குவது தொந்தரவாக இல்லையா?' என்று கேட்கிறார். அவள் உடம்பின் மேல் பகுதியில் ஆடை எதுவும் இல்லாமல் முலைகளைக் காண்பித்துக்கொண்டிருக்கிறாள். முலைகளின் அளவு 50 இஞ்ச் இருக்கலாம். அவளைச் சுற்றி ஒரு இருபது பேர் அமர்ந்திருக்கின்றனர்.

'இல்லையே... சாதாரணமாகத்தான் இருக்கிறது' என்று பதில் சொல்கிறாள் அவள்.

'இவ்வளவு கவர்ச்சியாக - பெண்களையே ஏறிட்டுப் பார்க்காத என்னையே - பார்க்கத் தூண்டுகிறதே. அப்படியானால் எல்லா ஆண்களும் உங்கள் முலைகளையே முறைத்து முறைத்துப் பார்க்க மாட்டார்களா?'

'அப்படிப் பார்க்க வேண்டும் என்றுதானே இந்த சிலிக்கான் ஆபரேஷன் செய்து கொண்டிருக்கிறேன்...'

-பெர்லின் டி.வி சேனல் ஒன்றில் பார்த்த டாக் ஷோ.

21. கொலெஜ் த ஃப்ரான்ஸ்: 1543ஆம் ஆண்டு, ஃப்ரான்ஸில் அப்போது ஸோர்போன் பல்கலைக்கழகத்தின் வாயிலாக ஆதிக்கம் செலுத்திக்கொண்டிருந்த பழமைவாத மதிப்பீடுகளுக்கு எதிராக நிறுவப்பட்ட கல்வி நிறுவனம். இந்த நிறுவனம் பட்டங்கள் எதுவும் வழங்குவதில்லை.

தொலைக்காட்சி : ஒரு கண்ணோட்டம் - பியர் பூர்தியு.

மொழிபெயர்ப்பு : வெ.ஸ்ரீராம், க்ரியா, பக்: 115

22. Pierre Bourdieu (1930-2002) : கொலெஜ் த ஃப்ரான்ஸில் பூர்தியு உரையாற்றிக்கொண்டிருந்த வகுப்பறைக்குள் எபியும் பெருமாளும் சென்ற தினம் ஜனவரி 23, 2001. அடுத்த ஆண்டு அதே தினம் பூர்தியு இறந்தார். ஃபூக்கோ, ரோலான் பார்த், க்லோத் லெவி - ஸ்த்ரோஸுக்குப் பிறகு பெருமாளைக் கவர்ந்த சிந்தனையாளர் பூர்தியு. சிந்தனை என்பது வெறும் புத்திஜீவிகளின் ஏகபோக உரிமையாக இல்லாமல் மக்களையும் சென்றடைய வேண்டும் என்று கருதியவர்.

23. பழைய Illustrated Weekly சைஸில் 60 பக்கங்கள் வரும் இலவச பப்ளிஸிட்டி பத்திரிகைகளை ஒரு பாக்ஸில் அடுக்கி மெத்ரோக்களில் வைத்துள்ளனர். இதில் வரும் விளம்பரங்களாவன: வீடுகள் (ஒரு வீட்டின் விலை 25 லட்சம் ஃப்ராங்க்), சினிமா, நாடக விளம்பரங்கள், கம்ப்யூட்டர், அழகு நிலையம், இசை நிகழ்ச்சிகள். பத்திஸேரி (கேக்) விளம்பரங்கள். சோஃபா, கட்டில், பீரோ விளம்பரங்கள். தொங்கிப்போன முலைகள் சிலிக்கான் பொருத்திக்கொள்ளாமலேயே குத்திட்டு நிற்பதற்கான சுலபமான வழிமுறைகள். அழகு

நிலையங்கள். புதிய ஆடைகள். நாய்க் குட்டிகள் வேண்டுமா? ஜோதிட26 விளம்பரம். Sigittariusக்கு என்ன பலன் என்று பார்த்தான் பெருமாள். அது டிசம்பர் மாதம் என்பதால் இந்த ராசியில் பிறந்தவர்களுக்குப் பலரும் பிறந்த நாள் வாழ்த்துக்கள் தெரிவித்திருந்தனர். மூன்று முழுப் பக்கங்களில் ஜோதிட விளம்பரங்கள் மட்டும் 47 வந்திருந்தன. சேர்ந்து வாழ அழைக்கும் விளம்பரங்கள். நட்புக்காக ஏங்கும் விளம்பரங்கள். செக்ஸ் உறவுக்கு அழைக்கும் விளம்பரங்கள். லைவ் ஷோக்கள் பற்றிய விளம்பரங்கள். லெஸ்பியன் உறவுக்குத் தொடர்புகொள்ள வேண்டிய தொலைபேசி எண்கள். செந்த் தெனியில் உள்ள செக்ஸ் க்ளப்கள்.27 (120 கேபின்கள் மற்றும் 50,000 ஃபிலிம்கள் கொண்டவை) லைவ் ஷோ பார்க்க வேண்டுமானால் வெறும் 50 ஃப்ராங்க். நூற்றுக்கு நூறு ஆண்கள், நிச்சயமாகப் பெண்கள் இல்லை என்று சத்தியம் செய்யும் Gay அழைப்புகள். அதற்கான தொலைபேசி எண்கள். கார் விளம்பரங்கள். திருமண விளம்பரங்கள். செல்ஃபோன் விளம்பரங்கள். 6000 ஃப்ராங்கில் ஒரு செல்ஃபோன். 120 ஃப்ராங்கில் ஒரு செல்ஃபோன். இன்னபிற.

24. முருகேஷ் வீட்டைவிட எட்வினின் ஃபோயரில் தங்குவதுதான் கண்ணாயிரம் பெருமாளுக்கு வசதியாக இருந்தது. அந்த அகதிகள் குடியிருப்பின் ஒவ்வொரு அறையும் 15 அடி நீளமும் 8 அடி அகலமும் கொண்டது. அதில் ஒரு சிறிய கட்டிலும் ரஜாயும் உண்டு. அது தவிர மேற்கொண்டு ஒரு ரஜாயும் படுக்கையும் கூடுதலாக இருந்தது. ஒரு சிறிய மேஜை. நாற்காலி. ஒரு Wardrobe. ஒரு வாஷ்பேசின். கழிப்பறை பொது. சமையலறை பொது. இவ்வளவு சின்ன இடத்தில் கிடைத்த சௌகரியம் பெருமாளுக்கு முருகேஷ் வீட்டில் கிடைக்கவில்லை. காரணங்கள் பல. காலையில் எழுந்ததும் முருகேஷின் தம்பிக்கு டேப் ரெக்கார்டரைப் போட்டு

‘அரிக்கிறது கை

பக்கத்துல நெய்

அக்கம்பக்கம் பார்த்து

கைய்ய வை’

என்பது போன்ற தமிழ் சினிமாப் பாட்டுக்களை உச்ச சத்தத்தில் வைத்துக் கேட்டே ஆக வேண்டும். இத்தகைய உபத்திரவங்கள் ஏதும் எட்வினின் ஃபோயரில் இல்லை. சிகரெட் குடிக்கலாம். தண்ணி அடிக்கலாம். ஆனால் எல்லாவற்றையும்விட பெரிய சௌகரியம்: கக்கூஸ். அந்த ஃபோயரில் இருந்தவர்கள் பெரும்பாலும் ஆஃப்ரிக்கர்கள் என்பதால் வெஸ்டர்ன் டாய்லெட்டோடு இந்திய ஸ்டைல் கக்கூஸும் இருந்தது. ‘ஆனால் படு அசுத்தமாக இருக்கும். ஜாக்கிரதை’ என்றான் எட்வின். அது ஒன்றும் பெருமாளுக்குப் பிரச்னையில்லை - கக்கூஸ் கழுவுவது அவனுடைய குலத்தொழிலாக இருந்தது என்பதால்.

இந்த ஃபோயரைத் தவிர அவன் தங்கிய மற்ற எல்லா இடங்களிலும் வெஸ்டர்ன் டாய்லெட்டே இருந்தது. அந்த டாய்லெட் இந்தியாவைப் போன்ற வெப்ப மண்டல நாடுகளில் வளர்ந்தவர்களுக்கானவை

அல்ல. நமக்கு - அல்லது, குறைந்தபட்சம் பெருமாளுக்கு - மலம் மெழுகைப் போல் வருவதில்லை. எரிமலை வெடித்துச் சிதறுவதைப் போல் பயங்கர சப்தத்துடனும் வாய்வுடனும் ஒரு மாதிரி anarchicஆக வருவதால் இந்தியப் பாணி கக்கூஸ்தான் உசிதம். மேலும், அங்கே ஒவ்வொரு வீடும் கண்ணாடி ஜன்னல்கள் போடப்பட்டு, ஒரு துளி சப்தமும் வெளியிலிருந்து கசியாமல், நாம் மூச்சு விடும் சப்தம்கூட பெரிதாகக் கேட்பது போன்ற அமைப்புள்ள மர வீடுகள். இவ்வளவு அமைதியான இடத்தில், இத்தனை வருடங்களாக இந்திய உணவை விழுங்கிவிட்டு வெடிச் சத்தத்தோடு கக்கூஸ் போனால் என்ன கதியாகும் என்பதை நீங்களே யூகித்துக்கொள்ளுங்கள்.28

ஆனால் இந்த டாய்லெட் விஷயத்தினாலேயே நண்பர்கள் தன்னுடைய அறைக்கு வர பயப்படுகிறார்கள் என்றான் எட்வின். அதோடு அந்த ஃபோயர் அகதிகளுக்கான குடியிருப்பு என்பதால் அவன் அறையில் அவனைத் தவிர வேறு யாரும் தங்க அனுமதியில்லை. இருந்தாலும் அந்தப் பிரச்னையைத் தந்திரமாக சமாளித்துக்கொண்டிருந்தான் எட்வின். மூன்று மாதமாக அந்த அறைக்கு வாடகை செலுத்தவில்லையாம். ஆனாலும் பாதகமில்லை. குளிர் காலத்தில் யாரையும் வாடகை வீட்டிலிருந்து அதன் உரிமையாளர்கள் - அது அரசாங்கமாக இருந்தாலும் - குடியிருப்பவர்களை வெளியேற்ற முடியாது என்பது சட்டம். அதனால் மார்ச் வரை கவலையில்லை. அதற்குள் கட்டிவிடலாம். அதுவரை நோட்டீஸ்களை மட்டுமே அனுப்பிக்கொண்டிருப்பார்கள் என்றான் எட்வின். மின்சாரம் மற்றும் தண்ணீர்கூட இப்படித்தான். கட்டணம் செலுத்தவில்லையென்று சப்ளையை முழுதாக நிறுத்த முடியாது. குறைந்தபட்சத் தேவையை அரசு வழங்கிக் கொண்டேதான் இருக்க வேண்டும்.

பெருமாள் கட்டிலில் படுத்துக்கொண்டால் எட்வின் கட்டிலை ஒட்டி தரையில் படுக்கையை விரித்துப் படுத்துக்கொண்டான். கிட்டத்தட்ட கட்டிலுக்குக் கீழே படுத்துக்கொள்வதைப் போல்தான். சிறுநீர் கழிப்பதற்காக இரண்டு மூன்று தடவை பெருமாள் எழுந்து செல்லும்போது எட்வினை மிதித்துவிடாமல் ஜாக்கிரதையாக கால்களை எடுத்து வைத்துச் செல்ல வேண்டும். ஆனாலும் பரவாயில்லை. முருகேஷ் வீட்டில் இதுவும் ஒரு பிரச்னை ஆகிவிட்டது. பெருமாள் இரண்டு மூன்று முறை இரவில் flush outஐத் திறந்து விடுவதால் கீழ் வீட்டிலுள்ளவர்களுக்குத் தூக்கம் கெடுகிறதென்று போலீஸுக்கு ஃபோன் போட்டு விட்டார்கள். போலீஸ் வந்து விசாரித்தபோது கண்ணாயிரம் பெருமாள் ‘ஆத்திரத்தை அடக்கினாலும் மூத்திரத்தை அடக்க முடியுமா?’ என்ற பழமொழியை அவர்களுக்கு ஃப்ரெஞ்சில் மொழிபெயர்த்துச் சொல்லும்படி முருகேஷைக் கேட்டுக் கொண்டான். அவர்கள் சிரித்துக்கொண்டு போய்விட்டார்கள்.

வாசகர்களுக்கு ஒரு செய்தி: கண்ணாயிரம் பெருமாள் என்னிடம் கொடுத்த இந்த நாவல் பிரதியில், பாரிஸ் என்று தலைப்பிட்ட பகுதியில் பாரிஸைவிட கக்கூஸுக்குத்தான் நிறைய பக்கங்களை ஒதுக்கியிருக்கிறான். அதைப் பார்த்தபோது பெருமாளிடம் ஒருவித anal obsession இருப்பதாக எனக்குத் தோன்றியது. அவ்வளவையும்

இங்கே எழுதினால் இந்த நாவலுக்கு 'shit' என்று பெயர் வைப்பது தான் பொருத்தமாக இருக்கும். ஒரு விதத்தில் அதுவும் நல்லதுதான். நாவலைப் பிடிக்காதவர்கள் இதை 'ஷிட்' என்று திட்டுவதிலிருந்தும் இதைக் காப்பாற்றிவிடலாம். இந்த இடத்தில் எனக்கு கேத்தி ஆக்கரின் புஸ்ஸி ஞாபகம் வருகிறது. பார்த்தீர்களா? இந்த வாக்கியமே ஒரு விபரீதமான அர்த்தத்தைத் தருகிறது. கேத்தி pussy என்று ஒரு நாவல் எழுதியிருக்கிறார். நான் அதைத்தான் குறிப்பிட்டேன். அந்த நாவல் பற்றி கீழ்க்காணும் ஒரு உரையாடல் நடப்பதாக வைத்துக்கொள்வோம்.

'கேத்தியின் புஸ்ஸி எப்படி இருக்கிறது?'

'ரொம்பப் பெருசா இருக்கு. வேஸ்ட்.'

எப்படிப் போகிறது பாருங்கள் அர்த்தம். அதற்குத்தான் தலைப்பில் உஷாராக இருக்க வேண்டும் என்கிறேன்.

என்பதால் பலதையும் யோசித்து பெருமாள் கொடுத்திருக்கும் பாரிஸ் பக்கங்களிலுள்ள கக்கூஸ் பக்கங்கள் பெரும்பாலானவற்றைக் கழித்துத் தள்ளிவிட்டு ஓரிரு சுவாரசியமான சம்பவங்களை மட்டும் இங்கே தருகிறேன்:

பெர்லினிலிருந்து பாரிஸ் திரும்பிக்கொண்டிருக்கிறான் பெருமாள். பஸ் பயணம். அதுவும் 12 மணி நேரப் பயணம். இரவு ஒன்பது மணிக்குக் கிளம்பி காலை ஒன்பது மணிக்கு பாரிஸ். மதியம் சாப்பிட்டதோடு சரி. எதையுமே தொடவில்லை. டீ கூட குடிக்கவில்லை. எங்கேயாவது சிறுநீர் கழிக்கப்போய் பஸ் புறப்பட்டுவிட்டால் என்ற பயம். பெர்லினில் குளிர் பாரிஸைவிட அதிகமிருந்தது. மைனஸ் 5. பஸ் கிளம்பும்போது தோழி சொன்னாள், பஸ்ஸின் வலது கைப் பக்கத்தில் டாய்லெட் இருக்கிறதென்று. அப்போதுதான் அவனுக்கு உயிர் வந்தது. பஸ்ஸில் ஏறியதுமே கண்டக்டர் டாய்லெட்டை உபயோகப்படுத்தும் விதத்தைப் பற்றி நீண்டதொரு லெக்சர் கொடுத்தாள். அதிலிருந்து முக்கியமான இரண்டு பாய்ண்ட்டுகள்:

1. டாய்லெட்டை நின்ற நிலையிலிருந்து உபயோகிக்கக்கூடாது. உட்கார்ந்த நிலையில்தான் உபயோகிக்க வேண்டும்.
2. பெண்கள் எந்தப் பொருட்களையும் டாய்லெட்டில் போடக்கூடாது.

ஆக, பஸ்ஸுக்குள் டாய்லெட் இருப்பது உறுதியாகிவிட்டது. சிறிது நேரத்திலேயே பெருமாளுக்கு சிறுநீர்ப்பை அடைத்தது. எழுந்துபோய் பார்த்தால் தோழி சொன்னபடி வலது பக்கம் டாய்லெட் இல்லை. எங்கே இருக்கிறது என்று கேட்கவும் கூச்சம். பேசாமல் திரும்பி வந்து அடக்கிக்கொன்டு அமர்ந்தான். நடுவழியில் பஸ்ஸை ஓரிடத்தில் நிறுத்தினார்கள். அப்போதுதான் தெரிந்தது. ட்ரைவர் அமரும் நிலையில் அவரது வலது கைப் பக்கத்தில் இருக்கிறது டாய்லெட் என்று. பெருமாள் திரும்பி நின்றுகொண்டு வலது பக்கம் தேடியிருக்கிறான். டாய்லெட்டில் ஒரு பிரச்னை. உள்ளே தாழ்ப்பாளே இல்லை. அல்லது தாழ்ப்பாள் இருக்குமிடம் தெரியவில்லை. மேலும், அந்த டாய்லெட்டில் அமர்ந்த நிலையில் சிறுநீர் கழிப்பது முடியாது என்று தோன்றியது. காரணம்: ஏற்கெனவே அவனுக்கு சிறுநீர் கழிக்க

மிகுந்த நேரம் எடுக்கும். அந்த நிலையில் உட்கார்ந்தபடியே போவது என்றால் பெல்ட்டைக் கழற்றி, பேண்ட்டைக் கழற்றி, ஜட்டியைக் கழற்றி மீண்டும் இதையெல்லாம் போட்டு... ம்ஹூம் அது சாத்தியப்படாது. மேலும், டாய்லெட்டை இதற்கு முன்பு பயன்படுத்தியவர்களும் நின்ற நிலையிலேயே பயன்படுத்தியிருக்கின்றனர் என்று தெரிந்தது. அதனால் நின்ற நிலையிலேயே, பயந்துகொண்டே, கதவை ஒரு கையால் பிடித்தபடி ஒரு மாதிரி அரையும் குறையுமாகக் காரியத்தை முடித்து வைத்தான்.

***

ஒரு நாள் பாரிஸில் முருகேஷும் பெருமாளும் சித்தார்த் என்ற நண்பனின் வீட்டுக்கு ஒரு பார்ட்டிக்காகச் சென்று கொண்டிருந்தனர். அவன் வீட்டை நெருங்கும் வழியில் ஒரு கார் ஷெட் இருந்தது. அது திறந்து இருக்கவே முருகேஷ் அதற்குள் சென்று சிறுநீர் கழித்தான். அப்போது ஒருவன் காரை எடுத்துக்கொண்டு வெளியே வந்துகொண்டிருந்தான். முருகேஷ் முடித்துக்கொண்டு வெளியே வந்தபோது பெருமாள் உள்ளே நுழைந்தான். கண்மண் தெரியாத கும்மிருட்டு. அப்போது சற்றும் எதிர்பாராத விதமாக ஒரு கை அவன் பிடரியைப் பற்றி வெளியே நெட்டித் தள்ளியது. ஒரே வீச்சில் வெளியே வந்து விழுந்தான் பெருமாள். உடம்பு கைகாலெல்லாம் மூத்திரம். அந்த மனிதன் எதுவுமே பேசவில்லை. எதுவுமே நடக்காததுபோல் வெகு அமைதியாக ஷெட்டின் கதவை மூடிப் பூட்டிவிட்டு காரில் ஏறிப் போய்விட்டான். ஜப்பானியன். முருகேஷ் இது எதையும் அறியாமல் சித்தார்த் வீட்டுக்காக வாங்கித் தன் கையில் வைத்திருந்த பூவைப் பெருமாளிடம் கொடுத்தான். பெருமாள் அதை வாங்கவில்லை. ‘நீயே கொடுத்து விடு’ என்று சொல்லிவிட்டான். சித்தார்த் வீட்டை அடைந்ததும் யாருக்கும் கைகுலுக்காமல் அவசரமாக டாய்லெட் போக வேண்டும் என்றான். டாய்லெட்டைக் காண்பித்தான் சித்தார்த். கூட துணைக்கு வந்தான் வட இந்தியனான சந்தோஷ்.29

‘நீ போ... யாரும் வந்துவிடாமல் நான் பார்த்துக்கொள்கிறேன்’ என்று இந்தியில் சொல்லிவிட்டு டாய்லெட்டின் வெளியே நின்று கொண்டான். அவன் ஏன் அப்படிச் சொல்கிறான் என்று பெருமாளுக்குப் புரியவில்லை. ஆனால் அதைப் பற்றி யோசிக்க நேரமில்லை. அவன் கவலையெல்லாம் கைகளிலேயே இருந்தது. அவசரமாக உள்ளே சென்று தாழ்ப்பாளைப் போட்டான். தாழ்ப்பாளைப் போடுவது சிரமமாக இருக்கவே சற்று அழுத்திப் போட வேண்டியிருந்தது.

டாய்லெட்டில் தண்ணீர்க் குழாய் எதுவும் இல்லை என்பதால் கைகளைத் தண்ணீரால் கழுவிச் சுத்தப்படுத்த இயலாது. இருந்த ஒரே வழி, ஃப்ளஷ் அவுட்டைத் திறந்துவிட்டு பேசினுக்குள் விழும் தண்ணீரில் டிஷ்யூ பேப்பரை நனைத்து கைகளைத் துடைப்பதுதான். டிஷ்யூ பேப்பர் நிறையவே இருந்தது. அதே சமயம் மொரார்ஜி தேசாயின் நினைவும் வந்தது. ‘மனிதர் இதைக் குடித்தே இருக்கிறார். நாம் இப்படி அலட்டிக்கொள்கிறோமே’ என்று.

முடித்துவிட்டு தாழ்ப்பாளைத் திறக்கும்போதுதான் சந்தோஷ்

சொன்னதன் அர்த்தம் விளங்கியது. தாழ்ப்பாளைத் திறக்க முடியவில்லை. எவ்வளவு முயன்றும் முடியவில்லை. பெருமாள் நடுநடுங்கிப் போனான். டாய்லெட்டோ மிகவும் சிறியது. ஒரு ஆள் நிற்கலாம். அவ்வளவுதான். தோள் அருகே ஒரு சிறிய ஜன்னல் இருந்தது. ஆனால் அதன் வழியே ஏறிக் குதிக்க முடியாது. அவன் உடல் நுழையும் அளவுக்கு இல்லை. ஆனால் ஓரளவுக்கு ஆசுவாசம் கிடைத்தது. மீட்புப் பணியினர் வந்து கதவை உடைத்துத் திறக்கும்வரை அந்த ஜன்னலின் வழியே நண்பர்களுடன் பேசிக் கொண்டிருக்கலாம்.

ஓரிரண்டு நிமிடம் எதைப் பற்றியும் யோசிக்காமல் மௌனமாக கண்களை மூடி நின்றான். பிறகு தாழ்ப்பாளை விரல்கள் கன்றிச் சிவக்குமளவு முழு பலத்தையும் பிரயோகித்து இழுத்தான். திறந்துகொண்டது.

25. ‘Nonavailability of good quality condoms is the main threat to existentialism’ என்று தன்னுடைய நாவல் ஒன்றில் எழுதியிருந்தான் பெருமாள். எக்ஸிஸ்டென்ஷியலிசத்துக்கு ஏற்பட்ட அந்த ஆபத்து உலகமயமாக்கலால் தீர்ந்துவிட்டது. ட்யூரெக்ஸ் மிகவும் மிருதுவானது. இந்திய காண்டம்களை மாட்டினால் ஏதோ டயரை மாட்டியதுபோல் இருக்கும். விறைப்பு குறைந்துபோகும். இந்தப் பிரச்னைக்கு முற்றுப்புள்ளி வைத்தது ட்யூரெக்ஸ்.

பாரிஸில் மெத்ரோக்களிலும் மற்ற பொது இடங்களிலும் ஒரு பாக்ஸ் வைத்திருந்தார்கள். மேலே ட்யூரெக்ஸ் என்று எழுதியிருக்கிறது. இரண்டு ஃப்ராங்க் நாணயத்தைப் போட்டால் ட்யூரெக்ஸ் பாக்கெட் வந்து விழுகிறது. ட்யூரெக்ஸ் நான்கைந்து மணங்களில் வருகிறது - அன்னாசி வாசனை, ஆப்பிள் வாசனை, ஆரஞ்சு வாசனை என்று.

அஞ்சல் பொருள் கிடங்கில் நடந்த சம்பவம் இது: ஒரு நாள் நாகராஜன் சோகமாக இருந்தார். மூன்றாவது குழந்தை பிறந்து விட்டதே காரணம். எப்படிச் சமாளிப்பதென்று கவலை. ‘ஏனய்யா பெற்றுக் கொண்டீர்?’ என்று கேட்டான் பெருமாள். ‘என்ன செய்வது, பிறந்து தொலைக்கிறதே?’ என்றார். ‘காண்டம் பயன்படுத்த வேண்டியதுதானே?’ என்று கேட்டதற்கு அவர் ‘அதைக் கடையில் போய்க் கேட்க கூச்சமாக இருக்கிறதே: எப்படி நாலு பேர் முன்னால் கேட்கிறது?’ என்றார்.

இது வேறு:

பெருமாள் வேலை பார்த்த தபால் துறையிலேயே வேறொரு அலுவலகத்தில் இருந்தவள் அகிலா. பெருமாளின் டெலிஃபோன் செக்ஸ் தோழி. நேரடி செக்ஸுக்கு மறுத்துவிடுவாள். ஆனால் டெலிஃபோன் செக்ஸில் பின்னி எடுப்பாள்.

அப்போது பெருமாள் அவ்வளவு விஷயம் தெரியாதவனாக இருந்த காலம். மணிக்கணக்கில் அவனுடன் அரட்டை அடித்துக் கொண்டிருப்பாள் அகிலா. அப்போது ஒரு நாள் அவளிடம் இந்தியாவில் ட்யூரெக்ஸ் அறிமுகமாகிவிட்ட விஷயத்தை சந்தோஷத்துடன் சொன்னான் பெருமாள். அவள் ‘நீ Today

பயன்படுத்துவதில்லையா?' என்று கேட்டாள். அது பற்றி அவனுக்குத் தெரிந்திருக்கவில்லை. அவள்தான் சொன்னாள்: அது capsule மாதிரி இருக்கும். கலவியின்போது யோனிக்குள் தள்ளிவிட்டால் கருத்தரிக்காது. சொல்லிவிட்டு 'ஆனால் ஜாக்கிரதை, அதை யோனிக்குள் தள்ளிய பிறகு ஓரல் செக்ஸ் செய்துவிடாதே' என்றாள்.

26. ஒரு நாள் மொந்த்பர்னாஸ் மெத்ரோவிலிருந்து வெளியே வரும்போது வாசலில் நின்றுகொண்டிருந்த ஒருவர் கையலகச் சீட்டு ஒன்றைப் பெருமாளிடம் கொடுத்தார். ஃப்ரெஞ்ச்சில் அச்சடிக்கப்பட்டிருந்த அதில் கண்டிருந்தது: பரீட்சையில் தேற வேண்டுமா? உங்கள் எதிரியை உங்கள் காலடியில் விழ வைக்க வேண்டுமா? நீங்கள் காதலிக்கும் பெண் உங்கள் பின்னால் நாய்க்குட்டியைப்போல் ஓடி வர வேண்டுமா? வயதான காலத்தில் உங்கள் பிள்ளைகள் உங்களை நிராகரித்துவிடாமல் இருக்க வேண்டுமா? புகைப்பிடிக்கும் பழக்கத்திலிருந்து விடுபடவேண்டுமா? அணுகுங்கள்: Monsieur Alain தொலைபேசி எண்: 0142642758.

27. செக்ஸ் க்ளப் : தனி அத்தியாயத்தில் காண்க.

28. அமெரிக்க நாடகாசிரியர் ஆர்த்தர் மில்லர் ஐம்பதுகளின் முற்பகுதியில் மர்லின் மன்றோவுடன் நெருங்கிப் பழகிக்கொண்டிருந்தார். அப்போது ஒரு நாள் நியூயார்க்கில் இருக்கும் தன் தாயாரின் வீட்டுக்கு டின்னருக்காக மர்லினை அழைத்துச் சென்றிருந்தார். அந்த வீட்டின் சுவர்களெல்லாம் மிக மெலிதாக, மரப் பலகைகளைப்போல் இருந்ததால் மர்லினுக்கு ஒரே பயம். தான் சிறுநீர் கழிப்பதை மற்றவர்கள் கேட்டுவிடுவார்களோ என்று. அதனால் அவர் டாய்லெட் சென்றபோது எல்லா குழாய்களையும் திறந்து விட்டுவிடுவாராம்.

சில தினங்களுக்குப் பிறகு ஆர்த்தர் மில்லரின் தாயார் தன் மகனுக்கு ஒரு கடிதம் எழுதினார்: 'மகனே, உன் தோழி மிக அழகாக இருக்கிறாள்; ஆனால் அவள் என்ன குதிரையைப் போல் மூத்திரம் போகிறாள்?'

-அவுட்லுக், 7.3.05.

29. சந்தோஷ் நீண்டகாலமாக பாரிஸில் வசிப்பவன். ஹர்யானாவைச் சேர்ந்தவன். சினிமா இயக்குனராக முயற்சி செய்துகொண்டிருப்பவன். அவனும் பெருமாளும் இந்தியில்தான் பேசிக்கொண்டனர். ஆங்கிலத்தைவிட அது லகுவாயிருந்தது. ஆனால் அவன் பேச்சில் இஷ்டத்துக்கு பெஹந் சூத், மாதர்சோத் விவகாரங்கள் வந்து விழுந்துகொண்டிருந்தன.

இந்தியாவிலுள்ள அலிகளைப் பற்றி ஒரு படம் தயாரித்து இயக்க முடிவு செய்து பாரிஸிலுள்ள இந்தியத் தூதரகத்தை அணுகியிருக்கிறான். அங்கிருந்த அதிகாரியோ 'ஒரு இந்தியனாக இருந்துகொண்டு இந்தியப் பண்பாட்டைப் பற்றி பெருமை கொள்ளும் விதத்தில் படம் எடுக்காமல் இப்படி அலி, கிலியென்று படம் எடுக்கலாமா?' என்று அறிவுரை சொல்லி அனுமதி தர மறுத்து விட்டாள்.

இந்தியிலுள்ள அத்தனை வசை வார்த்தைகளையும் கூறித் திட்டினான் சந்தோஷ். ‘இந்தியப் பண்பாட்டின் குதம் நிச்சயம் கிழிந்து ரத்தம் வடிந்துகொண்டிருக்கும். போதும் நிறுத்து’ என்றான் பெருமாள்.

‘அப்படியானால் நாளை என் குஞ்சை நறுக்கிவிட்டு வந்து என்னைப் பற்றியே படம் எடுக்கலாமா?’ என்று அந்தத் தூதரகப் பெண்ணிடம் கேட்டிருக்கிறான். அவள் ‘ஆபாசமாகப் பேசாதீர்கள்’ என்று சொல்ல ‘ஏன்... தன் காதை அறுத்துக்கொண்ட வான்கோவின் self portraitஐப் பார்த்திருக்கிறீர்களா? அதுபோல் என் குஞ்சை அறுத்துவிட்டு என்னைப் பற்றிய சுயசரிதைப் படம் எடுக்கிறேன். அப்போதாவது அனுமதிப்பீர்களா?’ என்று கேட்டானாம்.

‘தமிழ் சினிமா ஒன்றில் ஒரு ஹீரோ தன் காதலிக்காக நாக்கை அறுத்துக்கொள்கிறான். அதேபோல் நீ உன் குஞ்சை அறுத்துக் கொள்வது சரிதான்’ என்றான் பெருமாள்.

‘ம்... உனக்குப் புரிகிறது. அந்த நாய்க்குப் புரியவில்லை’ என்று சொல்லிவிட்டுத் தொடர்ந்து, அந்தத் தூதரகத்தில் சில மாதங்களுக்கு முன் ஒரு இந்தியப் பழங்குடியினத்துப் பெண் தூதரக அதிகாரி ஒருவரால் பாலியல் பலாத்காரம் செய்யப்பட்டது பற்றி பத்திரிகைகளில் வந்த செய்தியைச் சொல்லி திட்ட ஆரம்பித்தான் சந்தோஷ். ‘இப்படி ஒரு சிறுமியை பாலியல் பலாத்காரம் செய்த இவன்களா பண்பாடு பற்றிப் பேசுவது? இந்தச் செய்தியை அறிந்து இங்குள்ள மக்கள் திகைத்துப் போனார்கள். அந்த அதிகாரிக்குத் தன் செக்ஸ் உணர்வைத் தணித்துக் கொள்ள பாரிஸைவிடத் தோதான இடம் இந்த உலகத்தில் வேறு எங்காவது உண்டா? பீகால் (Pigalle) மாவட்டமே இங்கு சிவப்புப் பகுதிதானே? தெருவுக்கு 100 பெண்கள் செக்ஸில் ஈடுபடத் தயாராக நின்றுகொண்டிருக்கும் இந்த ஊரிலா வன்கலவி?’ என்று நீண்ட நேரம் கத்திக்கொண்டிருந்தான்.

***

# கதை: பதினேழு

‘தாய் மொழியில் தாய் என்றால் விடுதலை என்று பொருள்’ என்றாள் காஞ்சனா. கையில் Marlbrow Lights புகைந்துகொண்டிருந்தது. பெருமாளுக்குப் பிடித்த சிகரெட். முதல் சந்திப்பின்போது, ‘எப்போதாவது புகைப்பேன். இப்போது வேண்டாம்’ என்று மறுத்தவள், இன்று பெருமாளிடமிருந்து சிகரெட்டை வாங்கிப் புகைக்கிறாள்.

அவனை மீண்டும் சந்தித்ததில் உண்டான மகிழ்ச்சி அவள் முகத்தில் வெளிப்படையாகத் தெரிந்தது. Sukuhumvit சாலையின் ஸோயி எண் 12ல் உள்ள கம்பெனிக்கு காஞ்சனாவைத் தேடி இரண்டு தினங்கள் சென்று அவளைப் பார்க்க முடியாமல் திரும்பியிருந்தான் பெருமாள்.

கம்பெனி மேலாளர், ‘காஞ்சனா இல்லாவிட்டால் என்ன? சீனத்துப் பெண்கள் இருக்கிறார்கள். சீனத்துப் பெண்ணோடு உறவு கொள்ள ஒருவர் அதிர்ஷ்டம் செய்திருக்க வேண்டும்!’ என்றாள் பெருமாளின் கன்னத்தை வருடியபடி.

பெருமாளுக்கு அவன் மலேஷியாவில் சந்தித்த டாக்ஸி டிரைவர் கதிரேசன் சொன்ன இதே வார்த்தைகள் ஞாபகம் வந்தன.

‘இல்லை... காஞ்சனாவைச் சந்திக்கவே வந்தேன்...’ என்று சொல்லிவிட்டுத் திரும்பிவிட்டான் பெருமாள்.

தான் வந்து போனதை காஞ்சனாவிடம் அந்தப் பெண் சொல்வாள் என்ற நம்பிக்கை அவனுக்கு இல்லை. பாங்காக்கில் இது போன்ற கம்பெனி நடத்துபவர்களுக்கு இது ஒரு பிரச்னை என்பதை ஏற்கெனவே அவன் கேள்விப்பட்டிருந்தான்.

காதல் என்பதற்கு துளிக்கூட சாத்தியமில்லாத இந்த விபச்சார விடுதிகளுக்கு வரும் மேற்கத்திய வாடிக்கையாளர்கள் பலர், இங்குள்ள பெண்களின் மீது காதல் வயப்பட்டு திரும்பத் திரும்ப வந்து, கடைசியில் திருமணம்கூட செய்துகொண்டு விடுகிறார்கள். இதனால், செக்ஸ் தொழில் நலிவடைந்து, தேசத்தின் அந்நியச் செலாவணி பாதிக்கப்படும் வாய்ப்பிருக்கிறதென்று ‘தாய்’ பத்திரிகையில் அவ்வப்போது பொருளாதார நிபுணர்கள் எழுதும் கட்டுரைகளை மேற்கத்திய இடதுசாரிப் பத்திரிகைகள் கடுமையாகத் தாக்கி எழுதுவதை பெருமாள் வாசித்திருக்கிறான். அந்த விடுதி மேலாளர் தன்னை அப்படி ஒரு காதலனாக நினைத்துவிடக்கூடிய வாய்ப்பிருப்பதாகக் கருதினான் பெருமாள். இருந்தாலும் தான் தங்கியிருந்த ஸயாம் பெவர்லி ஓட்டலின் தொலைபேசி எண்ணைக் கொடுத்து விட்டே வந்திருந்தான்.

காஞ்சனாவின் குரலைத் தொலைபேசியில் கேட்டதும் ஒரு கணம் அவனால் நம்பவே முடியவில்லை; உடனே வரச் சொன்னான்.

நேரில் பார்த்ததும் கைகளைக் குலுக்காமல் இரு கரம் கூப்பி ‘சுவாதி’ என்றான். பதிலுக்கு அவள், ‘என்ன... ‘தாய்’ பெண் யாரையாவது காதலிக்கிறாயா? அப்படியானால் நீ அதிர்ஷ்டக்காரன். ‘தாய்’ பெண்களைப்போல் அடக்கமான, அன்பான பெண்களை உலகத்திலேயே பார்க்க முடியாது...’ என்றாள்.

‘ஆமாம், ஆனால் அவள் என்னுடன் இந்தியாவுக்கு வர மறுத்துவிட்டாளே...’

‘ஓ மை ஸ்வீட்...’ என்றவளை இடைமறித்து, ‘அப்படிப்பட்ட அடக்கமான பெண்களா இப்படி எல்லார் முன்னாலும் நிர்வாண நடனம் ஆடிக்கொண்டிருக்கிறார்கள்?’ என்று கேட்டான் பெருமாள்.

‘என்னைப் போன்ற பாங்காக் பெண்களை மட்டும் பார்த்துவிட்டு முடிவுக்கு வராதே. எங்களைப் புரிந்துகொள்ள உனக்கு 50 ஆண்டுக்கால தாய்லாந்து வரலாறும், ஈசானைப் பற்றியும் தெரிந்திருக்க வேண்டும்... சரி, வா, முதலில் போய் சாப்பிடலாம். எனக்கு ஒரே பசி.’

நடந்தபடியே அதே தெருவிலிருந்த Cabbages & Condoms என்ற உணவகத்துக்குள் சென்றார்கள்.

அவன் தனக்கு மீனும், இறாலும் வேண்டும் என்று கேட்டான்.

‘அப்படியானால் வா... ஸோயி 23க்குச் செல்லுவோம். அங்கே கடல் உணவுக்கென்றே ஒரு கடை இருக்கிறது’ என்று சொல்லி அவனை அழைத்துக்கொண்டு ‘டுட் டுட்’டில் ஏறினாள் காஞ்சனா.

Sea Food Palace என்ற அந்த உணவகத்தில் அமர்ந்துகொண்டுதான், ‘தாய் என்றால் விடுதலை’ என்றாள் அவள்.

‘அந்த விடுதலையைத் தேடித்தான் என் மூத்த சகோதரி ஃபாய், தான் அடிமைப்பட்டிருந்த விபச்சார விடுதியிலிருந்து தப்பி ஓடினாள். போலீஸ் பிடித்துவிட்டது. பிடித்து திரும்பவும் அந்த விபச்சார விடுதியிலேயே கொண்டுபோய்விட்டது. நம்ப முடிகிறதா உன்னால்?’

சிறிது நேர அமைதிக்குப் பிறகு அவளே ஆரம்பித்தாள்... ‘என்ன காரணம் என்றால், இந்த நகரத்தைத் தவிர மற்ற எல்லா இடங்களிலும் உள்ள விபச்சார விடுதிகளுடன் போலீஸ்காரர்களுக்கு நெருங்கிய தொடர்பு இருக்கிறது அல்லது பல இடங்களில் போலீஸ்காரர்களே அந்த விடுதிகளை நடத்திக்கொண்டிருக்கிறார்கள். அதனால், அவளைப் பிடித்து அடியோ அடியென்று அடித்து, ஏழெட்டு பேர் வன்புணர்ச்சி செய்து, திரும்பவும் அதே விடுதியில் கொண்டுபோய் விட்டு விட்டார்கள். அவளுடைய வருமானத்தில்தான் எங்கள் குடும்பமே பிழைத்தது...’

‘ஃபாய் இப்போது என்ன செய்கிறாள்?’

‘செத்துப்போய் இரண்டு ஆண்டுகள் ஆகிறது... எய்ட்ஸ்.’

சலனமற்றிருந்த அவள் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தான் பெருமாள்.

‘அப்போது என் வயது பதினான்கு. அதே விடுதியில் என்னை அழைத்தார்கள். என் உடம்பில் கொஞ்சம் இந்திய ரத்தம் ஓடுகிறதென்று நினைக்கிறேன். மூர்க்கத்துடன் மறுத்துவிட்டேன். இந்த மூர்க்க குணம்

உங்களுக்கு உரியதல்லவா? உறவினர்கள் மாறி மாறி வற்புறுத்தினார்கள். பாங்காக்தான் போவேன் என்று அடம்பிடித்து வந்துவிட்டேன். இப்போது அவர்களுக்கு மகிழ்ச்சி. கூடிய சீக்கிரம் வீடுகூட கட்டிவிடுவார்கள். அதெல்லாம் அங்கே ஒரு குடும்பம் கனவிலும் நினைத்துப் பார்க்க முடியாத விஷயம். ஆனால், ஒரு வருத்தம்... என்னுடைய இரண்டு தங்கைகளும்கூட இதே வேலைக்கு வந்துவிடுவார்கள் போலிருக்கிறது.'

'ஏன், இப்போதுதான் வசதியாக இருக்கிறார்களே?'

'அந்த வசதிதான் காரணம். பாங்காக்கின் ஆடம்பரமும், அது தரும் சொகுசும் அவர்களைத் தூண்டிவிடுகிறது...'

'வேறு வேலை வாய்ப்பு ஏதும் கிடையாதா?'

'உனக்கு ஒன்று தெரியுமா? ஈசானின் மலைப்பகுதிகளில் பிறந்த எங்களுடைய ஈசான் மொழி 'தாய்' மொழி அல்ல. 'தாய்' மொழிக்கும் எங்கள் மொழிக்கும் சம்பந்தமே கிடையாது. ஈசான், லாவோ மொழியிலிருந்து பிறந்தது. கேட்பதற்கு லாவோ மொழியைப் போல்தான் இருக்கும். 'தாய்' மொழியை நாங்கள் காதால் கேட்டதே பள்ளிக்கூடத்தில்தான். எங்களுக்குப் புரியாத மொழியில் நாங்கள் எப்படிப் படிக்க முடியும்? அதனால்தான் குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடம் என்றாலே வெறுப்பு.

'இதோ இந்த தாயத்தைப் பார். இதற்குள் என்ன இருக்கிறது தெரியுமா? எத்தனையோ வருஷங்களுக்கு முன்னால் எரிக்கப்பட்ட லாவோ மொழிப் புத்தகங்களின் சாம்பல், எப்படியாவது எங்கள்மீது 'தாய்' மொழியைத் திணித்துவிட வேண்டுமென்று 'தாய்' அரசு எங்களிடமிருந்த பழைய லாவோ புத்தகங்களை எரித்துவிட்டது. எங்கள் பாட்டிக்கெல்லாம் லாவோ படிக்கத் தெரியும்... தெரியுமா? ஆனால், இந்த அரசாங்கம் எத்தனை முயன்றாலும் எங்களிடமிருந்து ஈசானைப் பிரிக்க முடியாது. என்னுடைய நிறத்தைப் பார்... 'தாய்' பெண்களைப்போல் அவ்வளவு வெள்ளையாக இருக்காது. உன்னைப்போல் பழுப்பாக இருக்கும். நடைமுறையில் நாங்கள் அந்நியர்களாகவே நடத்தப்படுகிறோம். தாய்லாந்து குடியுரிமை அட்டைகூட எங்களுக்குக் கிடையாது. அதனால்தான் ஃபாய் பர்மாவுக்குத் தப்பியோட நினைத்தாள். 'தாய்' மக்களைவிட பர்மியர்கள் சினேகமானவர்கள்.'

'சரி... உன் தந்தை...'

'ம்... தந்தை... தாய்லாந்தில் பெரும்பாலான குடும்பங்களில் தந்தையரின் இடம் காலியாகவே இருக்கிறது. அவர்களுக்கு சரியான வேலை இல்லை; வருமானமும் இல்லை. அப்படியே வருமானம் இருந்தாலும் தாய்லாந்து பெண்களின் தேசம். இங்கே குடும்ப நிர்வாகமெல்லாம் பெண்கள்தான். வேசிகளைப் புணர்ந்து கொண்டிருப்பதைத் தவிர ஆண்களுக்கு வேறு வேலை இருப்பதாகத் தெரியவில்லை. அதனால் கடைசியில் அவர்கள் ட்ரக் அடிக்ட்டாகி விடுகிறார்கள். சென்ற ஆண்டு டிசம்பர் மாதம் இதே ஊரில் நடு ரோட்டில் ஒரு ஆள், ஒன்பது வயது பள்ளிச் சிறுவனின் கழுத்தில் கத்தியை வைத்துக்கொண்டு நான்கு மணி நேரம் எல்லாரையும் மிரட்டினானே... ஞாபகம் இருக்கிறதா? அவன்கூட என் அப்பாவாக இருக்கலாம். என் அப்பாவின் முகமே எனக்கு மறந்துவிட்டது. நான் சின்ன

வயதாக இருக்கும்போதே ஊரை விட்டு ஓடி வந்துவிட்டார்...'

அப்போது இவர்களின் பக்கம் வந்த பணிப்பெண் 'மெனு' புத்தகத்தை ஆளுக்கொன்றாகக் கொடுத்தாள்.

'இந்தப் பணிப்பெண்ணைக் கவனி. தினமும் எட்டு மணி நேரம் வேலை செய்தால் இவளுடைய ஒரு மாத சம்பளம் 4000 பாட் இருக்கும். அதை நான் இரண்டே இரவுகளில் சம்பாதித்துவிடுவேன். இன்னும் பாங்காக்கில் மாதம் 2000 பாட் சம்பாதிப்பவர்கள்கூட இருக்கிறார்கள். அப்படியானால் என்னுடைய 'ஐந்து நாள் விடுமுறையை'க் கழித்துவிட்டால், அவர்களை விட நான் 25 மடங்கு அதிகம் சம்பாதிக்கிறேன். சரி, விடு... உனக்கு சலிப்பாக இருக்கும். என்ன சாப்பிடலாம்? எங்கள் தேசத்தில் நாங்கள் பெருமை கொள்ளக் கூடிய ஒரு விஷயம்: உணவு...'

சொல்லிவிட்டு மெனுவிலிருந்து சில முக்கிய உணவுகளைப் பற்றி விளக்க ஆரம்பித்தாள் காஞ்சனா...

'ஸோம் தாம்: பப்பாளி ஸாலட். அதோடு, கொஞ்சம் சோறு மற்றும் வறுத்த கோழி...'

ப்ளா ரா (Pla ra): இதுதான் ஈசான் மக்களுடைய முக்கியமான உணவு. அரிசியும், புளிக்க வைத்த மீனும். சோறு என்றால் சாதாரண சோறு அல்ல... எங்கள் ஈசான் சோறு பசை மாதிரி ஒட்டிக் கொள்ளும்...'

அம்மாச்சியின் ஞாபகம் வந்தது பெருமாளுக்கு. அவன் சிறு வயதாக இருக்குபோது, பர்மா அரிசியை 'புட்டரிசி' என்று சொல்லி சமைப்பார்கள்.

'தோம் யாம் குங் - சின்ன இறாலும், பெரிய இறாலும் போட்ட சூப்... காயாங் கியோவோ வான் காய் - கோழிக் கறி. நாம் பிரிக் ஓங் - கொத்திய பன்றிக் கறி, தக்காளி மற்றும் மிளகாய். பாட் கப்ராவோ (Phat Kaphrao) -வறுத்த இறாலும், மூலிகை இலைகளும்... ஒரு விஷயம்.. எங்கள் உணவு எல்லாவற்றிலும் மூலிகை இலைகள் சேர்த்திருப்போம். அதனால்தான் சொல்கிறேன், 'தாய்' உணவைப்போல் ருசியான, ஆரோக்கியமான உணவு இந்த உலகத்திலேயே இல்லை என்று.'

'உண்மைதான்... சிங்கப்பூரில் என் நண்பன் ஒருவன் 'மீ கோராங்' வாங்கிக் கொடுத்தான். சாப்பிட்டவுடனே பேதி. அப்புறம்தான் விசாரித்ததில் தெரிந்தது. அது ஒரு தமிழ்க்கடை என்று! 'மீ கோராங்கில்'சேர்க்க வேண்டியதெல்லாம் சேர்க்காமல், வெறும் மிளகாய்த்தூளைப் போட்டு இந்திய ஸ்டைலில் கொடுத்துவிட்டார்கள். பிடுங்கிக்கொண்டது.'

'ஓ...'

'என் மற்றொரு நண்பன். அவன் சிங்கப்பூரிலேயே பிறந்து வளர்ந்தவன். தாய்லாந்துக்குப் பல முறை வந்து போனவன். அவன் 'போ சாய்' என்று ஒரு சீன மருந்தைக் கொடுத்தான். ஒரு குட்டி போத்தலில் கண்ணின் கரு விழி மாதிரி 20, 30 குளிகைகள் இருந்தன; அத்தனையும் விழுங்கச் சொன்னான். ஒரே வேளையில் நின்றுவிட்டது. பிறகு தொடர்ந்து 'தாய்' ரெஸ்தொராந்தில் சாப்பிட்டேன். சரியாகி விட்டது...'

'சரி... இப்போது என்ன வேண்டும் சொல். நான் உனக்குச் சொன்ன அயிட்டமெல்லாம் ஈசான் ஸ்பெஷாலிட்டி...'

பெருமாள் தோம் யாம் யுங் மற்றும் நாம் ப்ரிக் ஒங்கைத் தெரிவு செய்துவிட்டு, ‘எனக்குக் கடல் உணவும், பன்றிக் கறியும்தான் மிக இஷ்டம்’ என்றான்.

‘நாம் ப்ரிக் ஓங் கடும் காரமாக இருக்கும். ப்ரிக் என்றால் மிளகாய். ப்ரிக் நு என்றால் மிகச் சிறிய மிளகாய். பச்சையிலும், சிவப்பிலும் இருக்கும். சாப்பிட்டால் கண்ணில் நீர் வரும். ஜாக்கிரதை.’

‘நான் சாப்பிடும்போது ஒன்றிரண்டு பச்சை மிளகாயைப் பச்சையாக கடித்துக்கொண்டு சாப்பிடுவேன். பார்ப்பவர்கள் கண்ணில் நீர் வரும்...’

‘எங்கள் ஈசான் ஆட்களைப்போலவே இருக்கிறாயே. உன் மூதாதையர் யாரேனும் ஈசான்காரர்களா?’

இரண்டாம் உலகப் போரின்போது பெருமாளின் அம்மா, அவருடைய பெற்றோருடன் ரங்கூனிலிருந்து வங்காளம் வழியாக இந்தியாவுக்கு நடந்தே வந்தவர்கள் என அம்மாச்சி கூறக் கேட்டிருக்கிறான். அதை அவளிடம் சொல்லி, ‘என் மரபணுவில் எப்படியோ ‘தாய்’ அல்லது மங்கோலிய கலப்பு நிகழ்ந்திருக்க வேண்டும்’ என்றான். அதைக் கேட்டு அவள் பெரும் ஆச்சரியத்துடன் கூறினாள்:

‘எங்கள் மேனேஜர் பெரிய ஆள்தான். அவள் உன்னைப் பற்றி என்ன அடையாளம் சொன்னாள் தெரியுமா? பர்மிய முகம், சீனத்து மீசை, ‘தாய்’ உயரம், இந்திய நிறம்... எப்படி?’

சாப்பிட்டுவிட்டு ஓட்டலுக்கு வந்தார்கள். அன்றைய தினம் அவளிடம் பேசிக்கொண்டே இருந்தான் பெருமாள்.

‘சொல்ல வேண்டுமென்று நினைத்து மறந்து போனேன் காஞ்சனா... உன்னுடைய பெயர் எனக்கு ஆச்சரியம். இந்தப் பெயர் நான் வசிக்கும் தமிழ்நாட்டில் அதிகம் உண்டு...’

‘ஓ... நானும்தான் சொல்ல மறந்துபோனேன். என்னுடைய ஈசானியப் பெயர் ஸூ. நான்தான் இங்கே வந்ததும் காஞ்சனா என்று மாற்றிக்கொண்டேன்.’

‘ம்... காஞ்சனாபுரி... The Bridge on the River Kwai... அந்தப் பாலத்தைப் பார்க்க வேண்டும் காஞ்சனா.’

‘காஞ்சனாபுரி இங்கிருந்து ஒன்றரை மணி நேரம். அந்தப் பாலத்தை நான் பார்த்ததில்லை. ஆனால், கதை தெரியும். சரி, அது இருக்கட்டும் உன்னால் இரண்டு நாட்கள் என்னோடு இருக்க முடியுமா? பஸ்ஸில் போனால் உதோன் இங்கிருந்து 4 மணி நேரம். அங்கிருந்து ஒரு மணி நேரத்தில் என்னுடைய ஊர் நோங் காய். அங்குள்ள மே காங் ஆற்றைக் கடந்தால் லாவோஸ். ஈசானின் எல்லைப்புற ஊர் நோங் காய். ஆமாம். ஊர்... பானும் (Ban) அல்ல; நாகோனும் (Nakhon) அல்ல.’

‘அப்படியென்றால்?’

‘பான் கிராமம்; நாகோன் நகரம். நோங் காயில் ஒரு பெரிய கோயில் இருக்கிறது. ஸாலா கயேவோ கூ... அங்கே உள்ள இந்தியச் சிற்பங்களை நீ பார்க்க வேண்டும்.’

அன்று இரவு பெருமாளும் காஞ்சனாவும் நோங் காய் கிளம்பினார்கள்.‘

**பின்குறிப்புகள்:**

1. தாய்லாந்தின் ஜனத்தொகை 6 கோடி. 1957ஆம் ஆண்டு இங்கிருந்த செக்ஸ் தொழிலாளிகளின் எண்ணிக்கை: 20 ஆயிரம். பின்னர், 1964ல் அமெரிக்கா ஏழு ராணுவ தளங்களை வியட்நாமில் அமைத்த பிறகு, அந்த எண்ணிக்கை நான்கு லட்சமாக உயர்ந்தது. 1967ல் தாய்லாந்து அரசு வியட்நாமில் போரிடும் அமெரிக்க ராணுவத்தினருக்கு Rest & Recreation தருவதற்கு முன்வந்தது. R& R என்று சுருக்கமாக அழைக்கப்பட்ட அதை, ராணுவத்தினர் I&I என்று அழைத்தனர். அதாவது, Intercourse & Intoxication. இதுபற்றி ஒரு தாய்லாந்து மந்திரி கூறியதாவது: 'அவர்களுக்குத் தேவை பெண்கள்; எங்களுக்குத்
2. தாய்லாந்தில் உள்ள ஈசான் பகுதியில் பெண்களுக்குக் கல்வி கற்கும் வாய்ப்பு வெகு சொற்பம். காரணம்: இன்னமும் அங்கே பகோடாக்களில்தான் கல்வி கற்பிக்கப்படுகிறது.
3. தாய்லாந்தில் செக்ஸ் தொழிலாளிகளின் எண்ணிக்கை 30 லட்சம். இவர்களில் 16 வயதுக்கு கீழ்ப்பட்டவர்கள் 12 லட்சம். குழந்தை செக்ஸ் தொழிலாளிகளின் குறைந்த பட்ச வயது: 7. இவர்களில் பலர் கம்பூச்சியாவிலிருந்து வருகின்றனர்.
4. 4.5 லட்சம் 'தாய்' ஆண்கள் தினமும் செக்ஸ் தொழிலாளியிடம் செல்கிறார்கள்.
5. 9.5 சதவிகித 'தாய்' ஆண்களின் முதல் செக்ஸ் அனுபவம் செக்ஸ் தொழிலாளியிடம்தான் கிடைக்கிறது.
6. தாய்லாந்தில் எய்ட்ஸ் நோயினால் 70 ஆயிரம் பேர் இது வரை இறந்துள்ளனர். இப்போது 10 லட்சம் பேருக்கு எய்ட்ஸ் உள்ளது.
7. தாய்லாந்தில் ஒரு குழந்தையை வன்கலவி செய்தால் குற்றவாளியைத் தண்டிப்பதற்கு சட்டத்தில் இடமில்லை. ஏனென்றால், பெண்களை மட்டுமே வன்கலவி செய்ய முடியும்; குழந்தைகளைச் செய்யமுடியாது என ஆட்சியாளர்கள் நம்புகின்றனர்.
8. சில 'தாய்' சொற்களும் அவற்றின் பொருளும்:

   ஸோயி - தெரு

   I San - தாய்லாந்தின் வடகிழக்குப் பகுதி.

   Tut Tut ஆட்டோவைப் போன்ற மூன்று சக்கர வாகனம்.

   Mee Goreng செய்யும் முறை:

   மீ கோராங் செய்வதற்குத் தேவையான பொருட்கள்:

   நூடுல்ஸ் 400 கிராம்

   ஆட்டுக் கறி துண்டுகள் 100 கிராம்

   **பகுதி: ஒன்று**

   ஸோயா ஸாஸ் ஒரு தேக்கரண்டி

   மிளகுத் தூள் கால் தேக்கரண்டி

சீனி கால் தேக்கரண்டி

மெலிதாக நறுக்கிய 10 பல் பூண்டு

எண்ணெய் அரை கப்

முளை கட்டிய பச்சைப் பயறு 100 கிராம்

கடுகு இலை 100 கிராம்.

**பகுதி: இரண்டு**

ஸோயா ஸாஸ் ஒரு தேக்கரண்டி

மிளகாய்த் தூள் நாலு தேக்கரண்டி

தக்காளி ஸாஸ் நாலு தேக்கரண்டி

தண்ணீர் இரண்டு தேக்கரண்டி

பச்சை மிளகாய் ஒன்று

உருளைக்கிழங்கு அவித்தது ஒன்று.

செய்முறை: பகுதி ஒன்றை ஆட்டுக்கறியுடன் கலந்துகொள்ள வேண்டும். பூண்டை எண்ணெயில் வதக்கி தனியாக வைத்துக் கொள்ள வேண்டும். மீதமுள்ள எண்ணெயில் ஆட்டுக்கறிக் கலவையையும், பகுதி இரண்டையும் போட்டு வதக்க வேண்டும்.

இதனுடன், கடுகு இலையையும், முளை விட்ட பச்சைப் பயிறையும் இட்டு ஒரு நிமிடம் வதக்க வேண்டும். அதற்கு மேல் அரை மூடி எலுமிச்சம்பழத்தைப் பிழிந்து, பிறகு இத்துடன் 'மீ'யைக் கலந்து பதமாக வறுத்து இறக்க வேண்டும். 'மீ' என்றால் நூடுல்ஸ்.

மீ கோராங்கை வேறு சில விதமாகவும் செய்யலாம். அதற்கு, 'மலேசிய உணவு வகைகள் செய்முறை' என்ற நூலைப் பார்க்கவும். ஆனால், எக்காரணத்தைக் கொண்டும் மீ கோராங்கை சிங்கப்பூர் ஹவ்காங் அவென்யூ எண் 10க்கு அருகிலுள்ள Food Courtஇல் இருக்கும் தமிழ்க் கடையில் தயாரிப்பதுபோல் செய்யக்கூடாது. செய்தால், அதை உண்பவர்கள் 'எனிமா' குடிப்பது போல் ஆவார்கள்.

9. ஈசான மூலை என்பது வடகிழக்குத் திசையை குறிக்கும். பின் வருவது திருமூலரின் 18வது திருமந்திரப் பாடல்.

அதிபதி செய்து அளகை வேந்தனை
நிதிபதி செய்த நிறைதவ நோக்கி
அதிபதி யாத்ரித் தாக்கம் தாக்கின்
இதுபதி கொள்ளென்ற எம்பெரு மானே.

பொருள்: வடதிசை நோக்கி நிறைதவம் செய்தால் நீயும் தலைவனாகலாம்.

விளக்கம்: ஸ்பந்த உணர்வு (Vibration) என்பது சிரசின் ஈசான பாகமாகிய வடகீழ்த் திசையில் (இடது கண்ணருகே) உள்ளது. அதுவே சப்த ஞானத்தின் பதிவு நிலையாகும். ஆங்கிலத்தில் Speech Centre என்று

# கதை: பதினெட்டு

பாதிக்கப்பட்டு நாவலின் பாதிப் பகுதியை அள்ளிக்கொண்டு போய்விட்டான். அந்தக் காகிதக் கற்றைகளோடு போனதில் ஃபங்குலா ப்ரிட்டன் சென்ற கதையும், அவன் அங்கிருந்து கண்ணாயிரம் பெருமாளுக்கு அனுப்பிய புத்தகங்கள் வந்து சேர்ந்த விதம் பற்றிய கதையும் உண்டு. அதையும் மற்றும் சில கதைகளையும் என் ஞாபகத்திலிருந்து இங்கே திரட்டித் தருகிறேன்.

ஃபங்குலா ப்ரிட்டன் செல்வதற்கு முன்பு அங்கிருந்து பெருமாளுக்கு எதுவும் விசேஷமான தேவையுண்டா என்று கேட்டான். அதற்கு பெருமாள் கீழ்க்கண்ட புத்தகப் பட்டியலை அவனிடம் கொடுத்தான்.

1. Naked in Exile: Khalil Hawi's The Threatening Floors of Hunger: Interpretation and Translation by Adnan Haydar and Michael Beard
2. So Vast the Prison: Assia Djebar
3. Modern Arabic Fiction: An Antohlogy edited by Salma Khadra Jayyusi
4. French Hospitality: Racism and North African Immigrants: Tahar Ben Jelloun
5. My Mother, Madame Edwarda, The Dead Man: Georges Bataille
6. Dreams of Trespass: Tales of a Harem Girlhood: Fatima Mernissi
7. The Almond: Nedjma
8. Life with an Idiot: Victor Erofeyev.

ஃபங்குலா ப்ரிட்டன் போய்ச் சேர்ந்ததுமே மேற்கண்ட புத்தகங்களை வாங்கி அனுப்பிவிட்டான். ஆனால் இரண்டு வாரங்கள் ஆகியும் பார்சல் வந்து சேராததால் பெருமாள் ஃபங்குலாவைத் தொடர்பு கொண்டபோது, அவனது உதவியாளனை வேலையிலிருந்து நீக்கும்படி ஆயிற்று. அந்த உதவியாளன் மேற்கண்ட புத்தகங்களை வான்வழித் தபால் மூலம் அனுப்பாமல் கடல் மார்க்கமாக அனுப்பிவிட்டான். வான் மார்க்கத்துக்கு தபால் செலவு சுமார் 200 பவுண்ட் ஆகுமென்று தெரிந்திருக்கிறது. பட்டியலில் மூன்றாம் எண்ணுள்ள புத்தகமே சுமார் ஆயிரம் பக்கங்கள். அந்த உதவியாளன் இந்தியனானதால் ரூபாயில் பெருக்கிப் பார்த்து மலைத்துப்போய் கடல் மார்க்கமாக அனுப்பிவிட்டான்.

‘கடல் மார்க்கம் என்றால் வந்து சேர மூன்று மாதமாகும். மேலும், கஸ்டம்ஸ் துறையின் தீர்வை பெற வேண்டும். வான்மார்க்கத் தபால் என்றால் அது கொஞ்சம் சீக்கிரம் ஆகும். புத்தகங்களில் ஏதேனும் இந்தியாவில் தடை செய்யப்பட்டதாக இருந்தால் இன்னும் பிரச்னை. எனவே நீ கஸ்டம்ஸ் துறையை நாடுவதே உத்தமம்’ என்றான்

ப்பீயெம்ஜிடம் ஸ்டெனோவாக இருந்த வரதன். பட்டியலின் இறுதியிலுள்ள புத்தகத்துக்கு மட்டும் அந்த வாய்ப்புள்ளது என்று நினைத்துக்கொண்ட பெருமாள் ‘சரி, இது ஆகிற காரியமில்லை’ என்று அந்த எண்ணத்தை விட்டொழித்தான். ஏதோ சொத்தைப் பறிகொடுத்ததுபோல சில தினங்கள் வருத்தத்தில் ஆழ்ந்தான்.

இதற்கிடையில் ஃபங்குலாவிடமிருந்து பெருமாளுக்குத் தொடர்பு விட்டுப் போயிற்று. மெயில் அனுப்பினால் பதில் இல்லை. ஒரு மாதத்திற்குப் பிறகு ஃபங்குலாவிடமிருந்து இப்படி ஒரு பதில் வந்தது:

‘பெருமாள்,

நான் ஒரு கார் விபத்தில் மாட்டிக்கொண்டேன். முதலில் நான் நினைத்ததற்கு மாறாக அது எனக்குப் பிரச்னையையே தரும் என்று தோன்றுகிறது.

காரை ஓட்டிக்கொண்டிருந்தபோது நான் குடித்திருந்தேன். எனக்கு அது ஒன்றும் புதிதல்ல என்றாலும், அந்தத் தினம் நான் எதன் மீதோ அல்லது யார் மீதோ கடுங்கோபத்தில் இருந்தேன். ஏன் என்று சரியாக ஞாபகமில்லை. எனவே நான் வழக்கத்தைவிட அதிகமாகக் குடித்திருக்க வேண்டும்.

அன்று நான் எடின்பரோவில் இருந்தேன். கோபத்தினால் அப்போதே கிளம்பிவிட வேண்டும் என்று தோன்றியது. நடுநிசி. எடின்பரோவிலிருந்து ந்யூபோர்ட் போக வேண்டும். 450 மைல். குடிபோதை. காரை அதிவேகத்தில் செலுத்தினேன். 160 கி.மீ வேகம்.

ந்யூபோர்ட்டை நெருங்கும்வரை நான் எந்தத் தப்பிதமும் செய்யவில்லை. ஆனால் துரதிருஷ்டவசமாக என் வீட்டை நெருங்கும் இடத்தில் ஒரு வளைவு உண்டு என்பதை மறந்து போனேன். அறிவிப்புப் பலகையையும் கவனிக்கத் தவறி விட்டேன். கவனித்தபோது, தாமதமாகிவிட்டது. ப்ரேக்கை உடனடியாக அழுத்தினேன்.

அப்புறம் நடந்தது எதுவும் எனக்குத் தெரியாது. பிறகு போலீஸ்காரர்கள்தான் சொன்னார்கள். அவர்கள் என்னை வெகுதூரத்திலிருந்து விரட்டிக்கொண்டு வருகிறார்களாம். அதிவேகம் காரணமாக எச்சரிப்பதற்காக. ஆனால் அவர்களுடைய கார் என் காரைப் பிடிக்க முடியவில்லை. (என்னுடைய கார்: Honda Accord. இந்தக் காரை வாங்கும்போது நினைத்தேன், இவ்வளவு சல்லிசான காரை ஏன் வாங்க வேண்டும் என்று. நமக்குத்தான் எல்லாமே உயர்தரமாக இருக்க வேண்டுமே? BMWவாங்கலாம். 50,000 பவுண்ட். Lexus L.S: 57,000. Porsche Cabriolet S911:1,05,000. நீதான் மணியின் Camriயையே டப்பா கார் என்று சொன்னவன் ஆயிற்றே... ஆனால் எனக்கு என்னவோ ஹொண்டா அக்கார்ட் பிடித்து விட்டது. ஒருவேளை அது இங்குள்ள அப்பர்-மிடில் க்ளாஸ் இளைஞர்களின் வாகனமாக இருப்பதாலும் இருக்கலாம். போலீஸ் வைத்திருந்தது வெறும் Ford Focus. வளைவில் என் கார் கன்னாபின்னாவென்று திரும்பி பாலத்தில் மோதி நின்றதாகச் சொன்னார்கள். கடைசியாக அவர்கள் என்னை நெருங்கியபோது நான் நினைவிழந்து கிடந்திருக்கிறேன். க்ளச்சுக்கும்

ப்ரேக்குக்கும் இடையில் மாட்டிக்கொண்ட கால்கள். Parking brakeஐக் கடுமையாகப் பிடித்துக்கொண்டிருந்த கை - with all the alarms sounding with danger warning!

விபத்து ஒரு வருந்தத்தக்க விஷயமே என்றாலும் என் அதிர்ஷ்டம் பற்றி நான் சந்தோஷப்பட்டுக்கொள்ளலாம். ப்ரேக்கை கண்ணிமைக்கும் நேரம் தாமதமாகப் போட்டிருந்தாலும் கார் பாலத்தை உடைத்துக்கொண்டு கீழேயிருந்த ரயில் பாதையில் விழுந்திருக்கும். விழுந்திருந்தால் என்ன ஆகியிருக்குமோ?

எப்படியோ மருத்துவமனையிலிருந்து வீடு திரும்பிவிட்டேன். என் லைசென்ஸ் ரத்து செய்யப்பட்டுவிட்டது. கார் அவ்வளவு தான். ஹோண்டோ போண்டாவாகிவிட்டது என்று சொல்லிக் கொள்ளலாம்.'

சரியாக மூன்று மாதங்கள் கழித்து, கிட்டத்தட்ட அந்தப் புத்தகங்களைப்பற்றி பெருமாள் மறந்துவிட்ட நிலையில், போஸ்ட்மேன் வெங்கடேசன் ஒரு பார்சல் வந்திருப்பதாகத் தெரிவித்தார். சந்தோஷம். ஆனால் பார்சலை போஸ்ட்டா.ஃபீஸில் வந்து வாங்கிக்கொள்ளச் சொன்னபோதுதான் பெருமாள் அதிர்ந்துபோனான்.

எதற்காக போஸ்ட்டா.ஃபீஸ் வர வேண்டும். நீங்களே கொஞ்சம் எடுத்து வந்துவிடுங்களேன் என்று கேட்டதற்கு, அதற்கு ஏதோ கட்டணம் செலுத்த வேண்டும் என்றும், அதைப் பெருமாள்தான் போஸ்ட்டா.ஃபீஸ் வந்து கட்ட வேண்டுமென்றும் சொன்னார் வெங்கடேசன். பிறகு விசாரித்ததில் அது கஸ்டம்ஸ் தீர்வைக்காகச் செலுத்தப்பட வேண்டிய கட்டணம் என்றும், அதன் பெயர் ACG 67 என்றும் தெரியவந்தது. பதற்றத்துடன் மீராவுக்கு .ஃபோன் செய்தான் பெருமாள்.

ராஜீவ் காந்தி கொலை செய்யப்பட்டபோது கொலைகாரர்களைக் கண்டுபிடிப்பதற்காக சென்னையில் மல்லிகை என்ற பெயரில் ஒரு அலுவலகம் இருந்தது அல்லவா? அங்கிருந்து ஒருவருக்கு அழைப்பு வந்திருக்கிறது என்றால் அந்த ஆள் ஹார்ட் அட்டாக்கிலேயே செத்துவிடுவான். கிட்டத்தட்ட அந்த நிலையில் இருந்தான் பெருமாள்.

மீரா உடனடியாக வரதனைத் தொடர்பு கொண்டு, பெருமாள் விருகம்பாக்கம் போலீஸ் ஸ்டேஷன் - ஸாரி - போஸ்ட்டா.ஃபீஸ் செல்ல இருப்பதாகவும், சித்ரவதை அதிகம் செய்யாமல் பார்சலை துரிதமாகக் கொடுக்க ஆவன செய்யும்படியும் கேட்டுக்கொள்ளச் சொல்லிவிட்டு கிளம்பினான். அதோடு நிற்காமல், அவனும் ஒரு முறை வரதனைக் கூப்பிட்டு விஷயத்தை விளக்கினான்.

விருகம்பாக்கம் போஸ்ட்டா.ஃபீஸுக்குள் நுழைந்து அங்கிருந்த குமாஸ்தா ஒருவரிடம் விஷயத்தைக் கூற அவர் அந்த அலுவலகத்தின் மையப்பகுதியில் தலைகுனிந்து எழுதிக்கொண்டிருந்த ஒருவரைச் சுட்டிக்காட்டினார். அவர்தான் போஸ்ட்மாஸ்டர். அவர் எதிரே சென்று நின்றான் கண்ணாயிரம் பெருமாள். அப்படி ஒரு மனித உருவம் வந்து நின்றது பற்றிப் பொருட்படுத்தக்கூடிய நிலையில் அவர் இல்லை. அவர் பாட்டுக்கு குனிந்த தலை நிமிராமல் எழுதிக் கொண்டிருந்தார். ஆனால் அவருக்குப் புரிந்திருக்கும், எதிரே ஒரு தொந்தரவு என்று. அதனால்தான் தனக்கு இடையூறு செய்யும் அந்தத் தொந்தரவை பதிலுக்குத் தானும்

தொந்தரவு கொடுக்கலாம் என்று தலையை நிமிர்த்தாமல் எழுதிக்கொண்டிருந்தார்.

எவ்வளவு நேரம் இந்த மௌன நாடகத்தைத் தொடர்ந்து கொண்டிருப்பது? பதற்றம் பொங்க 'எக்ஸ்க்யூஸ் மீ சார்' என்றான் பெருமாள். 'ம்...' என்றார் போஸ்ட்மாஸ்டர். தலையை நிமிர்த்தாமல்தான்.

விஷயத்தை விளக்கினான். உடனே பக்கத்திலிருந்த போஸ்ட்மேன் சீருடையிலிருந்த ஒருவரிடம் 'வெங்கடேசன் வந்ததும் அவர்ட்ட வாங்கிக்க சொல்லுப்பா' என்றார் போஸ்ட்மாஸ்டர். உடனே அந்த போஸ்ட்மேன், சீன அதிபருடன் பேசும்போது இந்திய ஜனாதிபதியின் மொழிபெயர்ப்பாளர் செயல்படுவதைப் போல் போஸ்ட்மாஸ்டர் கூறியதைப் பெருமாளிடம் கூறினார். என்ன... மொழிதான் ஒரே மொழி. அந்த போஸ்ட்மேனிடம் 'வெங்கடேசன் எப்போது வருவார்?' என்றான் பெருமாள்.

'ரெண்டரைக்கு வருவார்' என்றார் அவர்.

அப்போது மணி பன்னிரண்டு. பெருமாளால் மீண்டும் ஒரு முறை வர முடியாது. வெங்கடேசன்தான் தன் பெயரை போஸ்ட்மாஸ்டரிடம் சொல்லி வாங்கிக்கொள்ளும்படி சொல்லியிருந்தார். மேலும், அந்த பார்சல் விலை மதிக்க முடியாத ஒன்றுதான் என்றாலும், அஞ்சல் துறை விதிகளின்படி அதற்கும் ஒரு அஞ்சலட்டைக்கும் எந்த வித்தியாசமும் கிடையாது. பார்சல் பதிவு செய்யப்பட்டதல்ல. காப்பீடு செய்யப்பட்டதுமல்ல. பெருமாளுக்கு அந்தப் பார்சல்மீது எந்த உரிமையும் கிடையாது. வேண்டுமென்றே அந்த போஸ்ட்மாஸ்டர் தன்னை அலைக்கழிப்பதாக உணர்ந்தான்.

'இப்போது அந்த பார்சலைத் தர முடியுமா, முடியாதா?' என்று சற்றே அதிகாரமாக போஸ்ட்மாஸ்டரிடம் கேட்டான் பெருமாள். இனிமேலும் மொழிபெயர்ப்பாளரை வைத்துக்கொள்ள முடியாது. போஸ்ட்மாஸ்டருக்கு அது புரிந்துவிட்டது.

'நீங்கள்தான் கண்ணாயிரம் பெருமாள் என்பதற்கு அத்தாட்சி இருந்தால் கொடுக்கலாம்' என்றார்.

'என்ன அத்தாட்சி?'

'ரேஷன் கார்ட், ட்ரைவிங் லைசென்ஸ், பாஸ்போர்ட் ஏதாவது ஒன்று.'

ரேஷன் கார்ட் அவனிடம் இல்லை. வாங்கும் உத்தேசமும் இல்லை. ட்ரைவிங் லைசென்ஸ் - அது பெரிய கதை. பல முறை கதைகளில் எழுதிவிட்ட கதை. சுருக்கமாகச் சொன்னால், அவனுக்கு சைக்கிளே விடத் தெரியாது. மோட்டார் வாகனங்களைக் கற்றுக்கொள்ளும் எதிர்காலத் திட்டமும் இல்லை. தன்னைப் போன்ற குடிகாரர்கள் வண்டியோட்டக் கூடாது என்பதில் அவன் உறுதியாக இருந்தான். ஓட்டுவது மட்டுமல்ல, குடித்திருக்கும்போது இரண்டு சக்கர வாகனத்தின் பின்னிருக்கையில்கூட உட்காரக்கூடாது என்று அவனுக்கு ஒரு முறை தெரியவந்தது. ஒரு சிநேகிதனின் பைக்கில் பின்பக்கம் அமர்ந்து வந்தபோது தூக்கத்தில் விழுந்துவிட்டான். அவன் விழுந்தது தெரியாமல் சிநேகிதனும் போய்விட்டான். இருவருமே நிறை போதை. ரொம்ப தூரம் போன பிறகுதான் அவன் கேள்விக்கு பின்னாலிருந்து எந்த பதிலும் வராமல்

போகவே, திரும்பவும் வந்து ரோட்டில் விழுந்து தூங்கிக் கொண்டிருந்த பெருமாளை எழுப்பி உட்கார வைத்து வீட்டில் கொண்டுவந்து விட்டிருக்கிறான் அவன். இது எதுவுமே பெருமாளின் ஞாபகத்தில் இல்லை என்பதுதான் விசேஷம். மறுநாள் மீரா அவனிடம் 'நேற்று என்ன நடந்தது?' என்று கலவரத்துடன் கேட்க, அவன் சாதாரண தொனியில் 'ஒன்றுமில்லையே' என்று சொன்னான். அதைக் கேட்டு அவள் அவனுடைய கால் சராயைக் காட்டினாள். சேற்றில் முக்கி எடுத்தது போலிருந்தது அது. பெருமாள் அதிர்ச்சியை வெளிக்காட்டிக் கொள்ளாமல் 'நேற்று மழை பெய்ததல்லவா, அதில் வழுக்கி விட்டுவிட்டது' என்று சமாளித்துவிட்டு, பிறகு நண்பனிடம் கேட்டபோதுதான் நடந்த விஷயம் அவனுக்குத் தெரியவந்தது. அதிலிருந்து பின்பக்கமும் ஏறுவதை நிறுத்திவிட்டான்.

பாஸ்போர்ட் மட்டுமே தன்னை இன்னார் எனக் காட்டக்கூடிய ஒரே அடையாளமாகத் தன்னிடம் இருப்பது என்பது அவனுக்கு நினைவு வந்தது. ஆனால் இப்போது அதன் பொருட்டு மீண்டும் வீட்டுக்குச் செல்ல அவன் மனம் ஒப்பவில்லை.

அதே சமயம் தன் குடிமக்களுக்கு ஒரு அடையாள அட்டைகூட வழங்கத் துப்பில்லாத இந்திய அரசாங்கத்தின் மேலும் அவனுக்குக் கோபம் வந்தது. சுனாமி போன்ற இயற்கைப் பேரழிவுகளும், மதக் கலவரங்களும் நிகழும்போது எத்தனை ஆயிரம் பேர் செத்தார்கள், அவர்கள் யார் யார் என்ற விவரம்கூட யாருக்கும் தெரிய வருவதில்லை. அரசுக்கும் தெரிவதில்லை. எல்லாப் பிணங்களையும் ஒரு சேரக் குழியில் தள்ளிப் புதைத்துவிட்டால் தீர்ந்தது கதை.

இந்த லட்சணத்தில் உத்தமத் தமிழ் எழுத்தாளனின் லொள்ளு வேறு தாங்க முடியவில்லை. சுனாமியில் பாதிக்கப்பட்ட ஒரு பகுதிக்கு உதவி செய்யப் போயிருக்கிறான் எழுத்தாளன். அந்தப் பகுதி அவன் வீட்டுக்குப் பின் அரை கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. சிலருக்கு டென்ஷன் வந்தால் நகத்தைக் கடிப்பார்கள் இல்லையா? எழுத்தாளனும் அந்த ரகம் போல. பிணங்களை அப்புறப்படுத்திய அதே கையால் நகத்தைக் கடித்திருக்கிறான். Dysentery caused by necrophilia. எத்தனையோ காரணங்களால் டிஸன்ட்ரி வருவதுண்டு. ஆனால் இந்தக் காரணத்தினால் டிஸ்ன்ட்ரி வந்தது உலகத்திலேயே இவன் ஒருவனுக்குத்தான் இருக்க வேண்டும். இது அல்ல பிரச்னை. தன் சுனாமி அனுபவத்தைப் பற்றி எழுதவந்த அவன் இறுதியாக 'என் காலம் முடிந்துவிட்டது என்று நினைக்கிறேன்' என்று முடித்திருக்கிறான். இந்த எழுத்தாளப் பயல்களுக்கு இருக்கும் திமிர் வேறு யாருக்கும் இருக்காது என்று தோன்றுகிறது.

அது கிடக்கட்டும். இப்போது இந்த போஸ்ட்மாஸ்டருக்கு நான்தான் கண்ணாயிரம் பெருமாள் என்பதை எப்படி நிரூபிப்பது?

'சரி. நான் கண்ணாயிர பெருமாள் என்று ப்பீயெம்ஜிக்குத் தெரியும். அவர் என் நெருங்கிய நண்பர். அவரை உங்களோடு பேசச் சொல்கிறேன்' என்று கூறியபடி கைத்தொலைபேசி மூலம் ப்பீயெம்ஜியை அழைக்க முற்பட்டான் பெருமாள். உடனே குறுக்கிட்ட போஸ்ட்மாஸ்டர் 'இங்கே போஸ்ட்டா.ஃபீஸுக்குள் கைத்தொலைபேசி உபயோகிக்கக்கூடாது' என்று அதிகாரத் தோரணையில் கூறினார்.

‘அப்படியானால் உங்களுடைய அலுவலகத் தொலைபேசியிலிருந்து அவரை அழையுங்கள். அல்லது என்னை அழைக்க அனுமதியுங்கள். வேறு எப்படி நான்தான் கண்ணாயிரம் பெருமாள் என்று உங்களுக்கு நிரூபணம் செய்வது?’

பெருமாளின் குரலும் உயர்ந்தது.

போஸ்ட்மாஸ்டரிடம் அதற்கும் தயாராக ஒரு பதில் இருந்தது.

‘இந்த ஃபோனில் அவுட்கோயிங் வசதி கிடையாது. இன்கமிங் கால்ஸ் மட்டும் வரும்.’ இவ்வளவுக்கும் அவர் எள்ளளவும் பதற்றமடையவில்லை. பெருமாளுக்குத்தான் பதற்றம் அதிகரித்துக்கொண்டிருந்தது.

போஸ்ட்மாஸ்டர் அமர்ந்திருந்த அந்த ஹாலை விட்டு வெளியே வந்தான். கவுண்ட்டரில் ஓரிருவர் நின்றுகொண்டிருந்தனர். கைத் தொலைபேசி மூலம் மணியை அழைத்து விஷயத்தைக் கூறி ‘இதை மறுநாள் தினசரியில் வெளிவரச் செய்ய முடியுமா?’ என்று கேட்டான். மணிக்கு ஏகப்பட்ட பத்திரிகைக்கார நண்பர்கள் உண்டு. ஆனால் அவனோ இஸ்ரேல் பிரதமருக்கும் சவூதி அரசருக்கும் தியானம் பயில்விக்கும் ஸ்ரீ ஸ்ரீ ரவிஷங்கர் பாணியில் ‘பதற்றமடையாதே பெருமாள் நம் நாட்டில்...’ என்று ஆரம்பித்தான்.

இது வேலைக்கு ஆகாது என்று பெருமாள் மீராவை அழைத்தான். ‘உன்னை வரதனிடம் நேரில் சென்று சொல்லச் சொன்னேனே, சொன்னாயா?’ என்று கேட்டான்.

‘சொன்னேனே, அவர் சொல்லியிருப்பாரே’ என்றாள் அவள். பதற்றம் கூடிக்கொண்டே போனது. வரதனை அழைத்தான். அவன் சிரித்துக்கொண்டே ‘பெருமாள், என்ன சேதி? போஸ்ட்மாஸ்டர் என்ன சொல்கிறார்?’ என்று கேட்டான். ‘இதற்குத்தான் உன்னிடம் முதலிலேயே சொன்னேன் வரதா. இங்கே உள்ளவர்கள் பொதுமக்களைத் தெரு நாய்களைவிட கீழ்த்தரமாக நடத்துகிறார்கள்...’ என்று ஆரம்பித்து உச்ச ஸ்தாயியில் கத்த ஆரம்பித்தான் பெருமாள். வரதனால் மட்டும் என்ன செய்ய முடியும்? எல்லாவற்றையும் கேட்டுவிட்டு ‘மறுபடியும் நான் சொல்லியிருக்கிறேன். இப்போது கொடுத்துவிடுவார்’ என்றான்.

அப்போது போஸ்ட்மேன் வந்து போஸ்ட்மாஸ்டர் அழைப்பதாக சைகையில் கூறினார். ‘33 ரூபாய் கட்டுங்க’ என்று பெருமாளிடம் கூறிவிட்டு ‘கொடுத்துவிடு’ என்பதாக போஸ்ட்மேனிடம் சைகை காட்டினார். பணத்தை எடுக்க ஜேபிக்குள் கைவிட்ட பெருமாளை ‘கவுண்ட்டர்’ என்று ராணுவத் தோரணையில் கூறி, கவுண்ட்டரின் பக்கம் சுட்டுவிரலைக் காட்டினார். பிறகு வரதனிடம் இது பற்றி சாவகாசமாகப் பேசிக்கொண்டிருந்த போது அந்த போஸ்ட்மாஸ்டர் அவனிடம் ‘நீங்கள்தானே சார் இப்படியெல்லாம் ஆதாரமில்லாமல் கொடுக்கக்கூடாது என்று ஸர்க்கிள் ஆஃபீஸிலிருந்து அடிக்கடி சர்க்குலர் அனுப்புகிறீர்கள்?’ என்று மிரட்டும் தோரணையில் கேட்டாராம். ‘ஸ்டெனோ என்பதால் மிரட்டுகிறார்; ப்பீயெம்ஜி என்றால் காலில் விழுவார்’ என்றான் பெருமாள்.

இப்போது கவுண்ட்டரில் இருந்த பெண்ணின் முறை. உலகத்திலுள்ள அத்தனை வெறுப்பையும் சலிப்பையும் முகத்தில் காட்டியபடி பணத்தை வாங்கிக்கொண்டு விட்டெறியாத குறையாக ரசீதைக் கொடுத்தார் அவர்.

இதே போன்றதொரு சம்பவம், நாராயணன் என்ற நண்பனுக்கும் கே.கே.நகர் போஸ்ட்டா:ஃபீஸில் நடந்ததாகச் சொன்னான். அவனுக்கு அமெரிக்காவிலிருந்து ஒரு புத்தகப் பார்சல் வந்திருக்கிறது. அவன் பெருமாளைப்போல் இல்லாமல் லௌகீகக் காரியங்களில் கெட்டி என்பதால் டிரைவிங் லைசென்ஸ், பாஸ்போர்ட் சகிதமாகச் சென்றிருக்கிறான்.

சம்பந்தப்பட்ட க்ளார்க் டீ சாப்பிடச் சென்றிருக்கிறார் என்று சொல்லப்பட்டதும் அவருக்காகக் காத்திருக்கிறான். அப்போது மணி பன்னிரண்டு. முப்பது நிமிடம் கடந்தும் அவனுக்கு ஏதும் சொல்லப்படாதிருக்கவே, மீண்டும் விசாரிக்கிறான். ம்ஹூம். இன்னும் வரவில்லை. பதினைந்து நிமிடம் கழித்து விசாரிக்கிறான். லஞ்ச்சுக்குப் போயிருக்கிறார் என்கிறது தகவல். எப்போது வருவார். இதோ அரை மணியில் வந்துவிடுவார். இப்படியே இந்தக் கண்ணாமூச்சி ஆட்டம் மூன்று மணி வரை தொடர்கிறது. மூன்று மணிக்கு ஆள் ஆஜர். ஆனாலும் பார்சலைத் தர முடியாது. காரணம். முகவரியில் எல்.நாராயணன் என்றும், பாஸ்போர்ட்டில் லஷ்மி நாராயணன் வாசுதேவன் என்றும், டிரைவிங் லைசென்ஸில் V.L. நாராயணன் என்றும் விதவிதமாக இருப்பதால் பார்சலைத் தரமுடியாது. என் பெயர் லஷ்மி நாராயணன், என் தகப்பனார் பெயர் வாசுதேவன். பாஸ்போர்ட் வழங்கும் துறை மத்திய அரசாங்கத்தைச் சேர்ந்தது என்பதாலும், வட இந்தியர்கள் இனிஷியல் போடும் வழக்கமில்லாதவர்கள் என்பதாலும் இனிஷியல் போடாமல் பெயரை முழுதாகத்தான் எழுதுவார்கள். அமெரிக்காவிலிருந்து வந்த பார்சலில் லஷ்மி நாராயணன் வாசுதேவன் என்ற நீண்ட பெயரை எழுத இடமில்லாததால் எல்.நாராயணன் என்று போட்டிருக்கிறது.

ம்ஹூம். முடியாது. மாட்டிக்கொண்டால் யார் பதில் சொல்வது. ப்பீயெம்ஜி எங்கள் சீட்டைக் கிழித்துவிடுவார்.

அரசன் காலில் விழும் அடிமையைப்போல் - அல்லது இந்தக் காலத்து உதாரணமாகச் சொன்னால் - போலீஸ்காரன் காலில் விழும் திருடனைப்போல் விழுந்து கெஞ்சிக் கூத்தாடி - சில ஆங்கிலப் படங்களில் வருவதுபோல் அவன் காலணியைத்தான் நக்கவில்லை - அப்படி நக்கிய பிறகு நான்கு மணிக்கு பார்சல் கொடுக்கப்படுகிறது - ஒரு உறுதிமொழிக் கடிதம் வாங்கிக்கொண்ட பிறகு.

> பெறுநர்:
>
> உயர்திரு. போஸ்ட்மாஸ்டர் அவர்கள்.
>
> கே.கே.நகர் போஸ்ட்டாபீஸ்,
>
> சென்னை - 600 078.
>
> மதிப்பிற்குரிய ஐயா,
>
> இன்று (7.9.2005) அமெரிக்காவிலிருந்து (முகவரி: நிர்மலா சுரேஷ் குமார், 39800 Freemont Blvd, Apt 139, Fremont, Ca 94538) வந்த புத்தகப் பார்சல் (ஆர்டர் எண்: 1121736 Elephant Books corn, 5755, Rossi Ln, Gilory, Ca 95020) லஷ்மி நாராயணனாகிய (த.பெ.வாசுதேவன்) எனக்கு வந்ததே என்று உறுதியளித்து மேற்கண்ட பார்சலைப் பெற்றுக்கொள்கிறேன். மேற்படி பார்சலின் உரிமையாளரென வேறு எவரேனும் வந்து புகார் செய்தால்

கீழ்க்காணும் விலாசத்தில் வசிக்கும் நான் எந்த நேரத்திலும் தங்களுடைய விசாரணைக்கு நேரில் ஆஜராகி முழு ஒத்துழைப்பையும் தருவேன் என்று உறுதியளிக்கிறேன்.

ஒப்பம்

வி.லஷ்மி நாராயணன்

54/3, (புதிய எண்:22)

எருமைராஜா அக்ரஹாரம்

கே.கே.நகர் (மேற்கு)

சென்னை - 600 078.

மேற்படி கடிதம் மதியம் 12 மணிக்கு தேநீருக்குச் சென்று, பின்னர் கண்களுக்குப் புலப்படாமலேயே போஸ்ட்டா∴பீஸுக்கு வந்துவிட்டு கண்களுக்குப் புலப்படாமலேயே லஞ்ச்சுக்காகக் கிளம்பிச் சென்று மூன்று மணிக்குத் திரும்பியிருக்கும் குமாஸ்தாவினால் நாராயணனுக்கு டிக்டேட் செய்யப்பட்டது.

பார்சலை வாங்கிக்கொண்டு கிளம்பும்போது நாராயணன் அந்த குமாஸ்தாவிடம் 'May I know your name, please?' என்று வினயமாய் வினவ, அவர் ஸ்பஷ்டமான குரலில் கூறியபதில்: லஷ்மி நாராயணன்.

போஸ்ட்டா∴பீஸ் மட்டும்தான் இப்படி என்று நினைத்துக் கொள்ளாதீர்கள். எல்லா இடமும் இப்படித்தான். உதாரணமாக மணி முதலாளியாக உள்ள ஒரு ஆ∴பீஸ் இருக்கிறது. மணியும் பெருமாளும் ஒரே சிகரெட்டை மாற்றி மாற்றி ஊதுபவர்கள் என்று அந்த ஆ∴பீஸிலுள்ள அத்தனை பேருக்கும் தெரியும். இருந்தாலும் கேக்கே நகர் போஸ்ட்டாபீஸ் குமாஸ்தா லஷ்மி நாராயணனைப் போலவோ, விருகம்பாக்கம் போஸ்ட்மாஸ்டர் போலவோதான் பெருமாளிடம் நடந்துகொள்வார்கள். பிறகென்ன, தனியார் துறைக்கு மட்டும் ஆகாசத்திலிருந்தா குதித்துவிடுவார்கள்? எல்லாம் ஒரே குட்டையில் ஊறிய மட்டை.

'இதெல்லாம் சும்மா. நான் மட்டும் என் ரயில்வே துறை பற்றி ஒரு நாவல் எழுதினேனானால் நீங்கள் காலி. ஏன் தெரியுமா? தபால் துறையைவிட ரயில்வே துறை மிகப் பெரியது. எனவே நான் 'ராமகிருஷ்ணனின் 400 கதைகளும் பல பின்குறிப்புகளும்' என்ற மெகா நாவலையே எழுதிவிட முடியும். கொஞ்சம் பொறுங்கள். நான் இன்னும் வீயாரெஸ் வாங்கவில்லை' என்கிறார் இந்த நாவலை மலையாளத்தில் மொழிபெயர்த்துக் கொண்டிருக்கும் ராமகிருஷ்ணன்.

இதெல்லாம் ஒரு பக்கம் இருக்கட்டும். 'நான் விமர்சனங்களால் பாதிக்கப்பட மாட்டேன்; ஏனென்றால், நான் எனக்காகவே எழுதுகிறேன்' என்று பீற்றிக்கொண்டிருந்த கண்ணாயிரம் பெருமாள் இந்த நாவலுக்கு அவனுடைய நெருங்கிய வாசகிகள் சிலர் தெரிவித்த விமர்சனங்களால் (இப்போது இந்த அத்தியாயத்தின் ஆரம்ப வாக்கியத்திலிருந்து தொடரவும்).

## கதை : பத்தொன்பது

மூன்று லட்சம் இருந்தால் ஒரு ப்யூட்டி பார்லர் வைத்துவிடலாம். பகடி கொடுக்க வேண்டும். மூலதனத்தில் கணிசமான தொகை அதற்குத்தான் தேவை. கிட்டத்தட்ட இங்குள்ள எல்லாப் பெண்களுடைய கனவுமே ஒரு ப்யூட்டி பார்லர் வைப்பதுதான். அனு மட்டும் விதிவிலக்கு. அவளுடைய லட்சியம் கனவு எல்லாம் அமெரிக்கா போவது. எப்படியும் சென்றுவிடுவேன் பெருமாள். எப்படியும் சென்றுவிடுவேன். சந்தேகமேயில்லை. என் அம்மா நாள் பூராவும் அடுப்படியில் கிடந்து கொதிக்கும் எண்ணெயில் முறுக்கும் தட்டையும் சீடையும் செய்து பெரிய பெரிய பைகளில் வைத்துத் தூக்க முடியாமல் தூக்கிக்கொண்டு டோம்பிவ்லியிலிருந்து கிளம்பி ரயிலேறி பக்கத்து ஊர்களிலுள்ள தமிழ்க் கடைகளில் கொண்டுபோய் விற்றால் - மாதம் 2000 ரூபாய் கிடைக்கும். அப்படித்தான் ப்ளஸ் டூ வரை என்னைப் படிக்க வைத்தாள் அம்மா. பிறகு ஒரு ஸெராக்ஸ் கடையில் வேலைக்குச் சேர்ந்தேன். அது அம்மாவின் வேலையைவிட எனக்குக் கடினமாகத் தெரிந்தது. கொதிக்கும் எண்ணெய்க்கும் அனல் பறக்கும் ஸெராக்ஸ் மெஷினுக்கும் எனக்கு அவ்வளவாக வித்தியாசம் தெரியவில்லை. என்ன... எண்ணெயில் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

காலை பத்து மணியிலிருந்து இரவு ஒன்பது மணி வரை வேலை. என்னது, பதினோரு மணி நேரமா? Fuck off, man.

பத்தடிக்குப் பத்தடி உள்ள சிறிய கேபின்; அதில் இரண்டு மெஷின்கள். என்னோடு இன்னொரு பெண்ணும் உண்டு. பதினோரு மணி நேரத்தில் ஒரு நிமிஷம் கூட உட்கார முடியாது. உட்கார்ந்து ஓய்வெடுக்கக் கால்கள் கெஞ்சும். உடம்பெல்லாம் ரணகளமாய் வலிக்கும். உடம்பையே பிழிந்து போடுவதுபோல் தசையின் ஒவ்வொரு துணுக்கும் ஓய்வு வேண்டித் தவிக்கும். அதை வார்த்தைகளால் விவரிக்க முடியாது. இந்த வலி பற்றி யோசிப்பதற்கு சற்று இடம் கொடுத்துவிட்டாலும் உடம்பு துவண்டுவிடும். வலியிலிருந்து தப்பிக்க வேண்டுமானால் முதலில் நீ உன் மனதையும் அதன் யோசனைகளையும் ரத்து செய்ய வேண்டும். மனம் என்ற ஒன்று இருந்தால்தானே யோசனை? யோசனைதான் இம்மாதிரி இடங்களில் நம்முடைய எதிரி. யோசனை உன் வலியை அதிகரிக்கும். யோசனை என்றாலே வலிதான். அதனால் யோசனையை ரத்து செய்வேன். ஆபரேஷன் செய்யும்போது மரப்பு ஊசி போடுகிறார்களே அதுபோல் யோசனையை மரத்துப் போகச் செய்ய வேண்டும். ஸெராக்ஸ் மெஷினுக்கு வலிக்கிறதா என்ன? Kill your mind... No pain. அதுதான் என் மந்திர வார்த்தை.

எல்லாம் ஒன்பது மணிவரைதான். வேலையை முடித்துவிட்டு வெளியே வரும்போது கால்கள் துவளும். ரயிலைப் பிடித்து வீட்டுக்கு ஓடிவந்து

குளித்துவிட்டு அம்மாவின் மடியில் சாய்ந்தால் அது சொர்க்கம். அப்படியே தூங்கிவிடுவேன். பிறகு எழுப்பிவிட்டு சோறு ஊட்டிவிடுவாள் அம்மா.

இன்னொன்று சொல்ல மறந்துவிட்டேனே... இந்த நாய்த்தனமான ஸெராக்ஸ் கடை வாழ்க்கையிலும் ஒரு காமெடி ட்ராக் உண்டு. ரயிலில் பெண்கள் பெட்டியில் கூட்டம் நெருக்கி அடிக்கும் என்பதால் ஆண்கள் பெட்டியில் ஏறுவேன். அப்போது எவனாவது ஒருத்தன் வந்து உரசுவான். கோபம் வராது. சிரிப்புதான் வரும். ஏண்டா இடியட், உன்னுடைய சாமான் என் புட்டத்தில் உரசுவதை ரசிக்கும் நிலையிலா இருக்கிறேன்? எனக்குத் தேவை, இப்போது ஒரு வெந்நீர்க் குளியல். என் கைகால்களை யாராவது அமுக்கிவிட்டால் அவனுக்கு அல்லது அவளுக்கு வாழ்நாள் பூராவும் அடிமையாக இருக்கத் தயார். ஆனால் இந்த மும்பையில் எல்லா ஆண்களும் அப்படி இல்லை. மும்பை உங்கள் சென்னை அல்ல. சென்னையில் நான் பஸ்ஸில் போயிருக்கிறேன். அங்கே உள்ள எல்லா ஆண்களுமே sexstarved idios. Madras buses are rape centres. காரணம், செக்ஸை அங்கே பொத்திப் பொத்தி வைத்திருக்கிறார்கள் என்று நினைக்கிறேன்.

இங்கே காமாட்டிபுரத்தைப் பார்த்தாய் அல்லவா? It's a sex toilet of Mumbai males. நினைக்கும்போதெல்லாம் அங்கே சென்று உன் விந்துப் பையில் சுரக்கும் எக்ஸ்ட்ரா விந்துவைக் கொட்டிவிட்டு வந்துவிடலாம். அதனால்தான் மும்பையில் பெண்கள் நடு இரவில்கூட பயமில்லாமல் நடமாட முடிகிறதென்று நினைக்கிறேன்.

இரண்டு வருட காலம் அந்த ஸெராக்ஸ் கடையில் இருந்தேன். பிறகுதான் என் தோழி பர்வீன் மூலமாக டான்ஸ் பாரில் வேலை கிடைத்தது. முதலில் அம்மாவிடம் சொல்ல பயந்தேன். பிறகு சொன்னபோது அவள் ஒன்றும் ஆட்சேபிக்கவில்லை. நாம் படும் கஷ்டத்தை நம் மகளும் பட வேண்டாம் என்று நினைத்திருக்கலாம். மேலும், இந்த 'கௌரவம்' போன்ற விஷயங்களைப் பற்றியெல்லாம் கவலைப்படும் நிலையில் அவளோ அல்லது நானோ இல்லை. எங்கள் உறவினர்களெல்லாம் மிக நல்ல நிலைமையில் இருக்கிறார்கள். யாருமே ஒரு சல்லிக் காசு உதவவில்லை. காசு கிடக்கட்டும். எனக்கு ஒரு கௌவரமான வேலைகூட வாங்கிக்கொடுக்கவில்லை. அதுவும் போகட்டும். எனக்கு இதுவரை வாழ்க்கையில் எந்த ஜீவனும் ஒரு ட்ரெஸ்கூட வாங்கித் தந்ததில்லை தெரியுமா? நீ வாங்கிக் கொடுத்த ஜீன்ஸும், டீ ஷர்ட்டும்தான் முதல் முதலாக எனக்கு ஒருவர் வாங்கிக்கொடுத்த ட்ரெஸ். எத்தனையோ நாட்கள் ஸெராக்ஸ் கடையில் வேலை முடிந்து வீட்டுக்குத் திரும்பும்போது ஒரு பானி பூரி சாப்பிட வேண்டும் என்று ஆசையாக இருக்கும். கையில் இரண்டு ரூபாய் இருக்காது. அப்போது பற்றிய தீ இன்னும் அடங்கவில்லை பெருமாள். உள்ளே எரிந்துகொண்டேயிருக்கிறது. எப்படியும் அமெரிக்கா சென்றுவிடுவேன். காமாட்டிபுரத்துத் தெருக்களில் நின்றுகொண்டு கஸ்டமர்களை அழைத்துக்கொண்டிருப்பதை விட இது கௌரவமான வேலைதான். ஆனால் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். எங்கள் ட்ரெஸ்ஸிங் ரூமிலிருந்து திரையை விலக்கி, குடித்துக்கொண்டிருப்பவர்களை கவனிப்போம். சாதுவான ஆட்களைப் பார்த்து வைத்துக்கொள்வோம். அப்போதுதான் அதிகப் பிரச்னை இருக்காது. ஆனால், குடித்த பிறகு யாருமே சாது இல்லை என்று வைத்துக்கொள். இருந்தாலும் கொஞ்சம்

சாதுவாக இருந்தால் நல்லதுதான். இல்லாவிட்டால் கண்ட இடத்திலும் கை வைத்து பாரைப் பள்ளியறையாக்க முயற்சி செய்வார்கள்.

இந்த டான்ஸ் பெண்கள் இருக்கிறார்களே, இவர்களைப் போன்ற முட்டாள் ஜீவிகளை உலகத்திலேயே வேறு எங்கும் பார்க்க முடியாது. இவர்கள் யாரிடம் வேண்டுமானாலும் நீ பேசிப் பார்க்கலாம். உதாரணமாக, பர்வீன்.

மும்பையில் மொத்தம் 75,000 டான்ஸ் பெண்கள் இருப்பதாக எங்கள் சங்கத் தலைவர் கூறுகிறார். இதில் என்னைப்போல் படித்தவர்கள் ரொம்பக் கம்மி. இன்னமும் படித்துக் கொண்டுதான் இருக்கிறேன். கரெஸ்பாண்டன்ஸில் எம்.ஏ. ஆங்கில இலக்கியம். இலக்கியத்தில் ஒன்றும் விசேஷ ஆர்வமில்லை. அமெரிக்கா போக வேண்டுமே, அதற்கு ஆங்கில இலக்கியம் உதவும். ஆங்கிலத்தில் ஒரு துண்டுக் காகிதம் இருந்தால்கூட விட மாட்டேன். எடுத்துப் படிப்பேன். இப்போது என்னால் சரளமாக ஆங்கிலத்தில் எழுதவும் பேசவும் முடியும். என்ன, பேசுகிறேனா? நான் உனக்கு அனுப்பியிருந்த ஆங்கிலக் கவிதைகளெல்லாம் நானே எழுதியதுதான். வேறு எதிலிருந்தும் சுட்டதல்ல. ஆங்கிலம் மட்டுமல்ல, வங்காளம், மராட்டி, இந்தி என்று நான்கைந்து மொழிகளில் பிளந்து கட்டுவேன். ஆனால் இங்கே பெரும்பாலான பெண்களுக்கு எழுதப் படிக்கத் தெரியாது. பத்து வயதிலேயே ஆட வந்தவர்கள். அநேகமாக அவர்களின் அம்மா செக்ஸ் ஒர்க்கராக இருப்பாள். பத்து வயதிலிருந்து பார்களில் ஆடிக்கொண்டிருக்கும் ஒரு பெண்ணுக்கு வெளி உலகத்தைப் பற்றியும் மனிதர்களைப் பற்றியும் என்ன தெரிந்திருக்க முடியும்? எவனாவது ஒரு கஸ்டமர் வந்து ‘ஐ லவ் யூ’ என்பான். முதலில் கண்டுகொள்ள மாட்டார்கள். தொடர்ந்து வந்து அதையே சொன்னால் விழுந்து விடுவார்கள். குழந்தையைக் கொடுத்துவிட்டு மறைந்து விடுவான். Free fuck. சில அச்டுகள் காசையும் பறிகொடுத்துவிட்டு நிற்கும்.

பர்வீனின் கதையும் அப்படித்தான். ‘என் நினைவு தெரிந்த நாளிலிருந்து நான் உழைத்துக்கொண்டிருக்கிறேன்’ என்பாள் அவள். பாங்க்ளாதேஷில் டாக்காவுக்குப் பக்கத்தில் ஒரு கிராமம். அவளுடைய அப்பா ஒரு குடிகாரன். அம்மா வீட்டு வேலை செய்பவள். மூன்று தங்கைகள், இரண்டு தம்பிகள், ஒரு பாட்டி. இவள்தான் மூத்தவள். ம்... look... Though they are drunkards, they are really good fuckers. ஹே நா? வீட்டு வேலை செய்து எத்தனை பேரைக் காப்பாற்ற முடியும்? இரண்டு மணி நேரம் வேலை செய்தால் மாதம் முன்னூறு ரூபாய் கிடைக்கும். அதிக பட்சம் நான்கு வீடுகளில் செய்தாலும் மாதம் 1200 ரூபாய். பர்வீன் சொல்லுவாள், நான் குழந்தையாக இருந்ததே இல்லை என்று. விளையாட்டிலும் இல்லை. நான்கு வயதிலேயே தன் உணவுக்காக உழைப்பில் ஈடுபட வேண்டியிருக்கும் நிலைமையிலுள்ள ஒரு குழந்தைக்கு விளையாட்டு எங்கிருந்து கிடைக்கும்?

ஒரே ஒரு நிமிஷம் குறுக்கிடுகிறேன். அனு. மன்னித்துக்கொள். என் மனைவி மீராவும் இதையேதான் அடிக்கடி சொல்லுவாள். சிறு குழந்தையிலிருந்து உழைத்துக்கொண்டிருப்பதாக. அவள் அம்மா ஒரு மன்நோயாளி என்பதால் அவ்வளவு வீட்டு வேலையையும் இவள்தான் செய்ய வேண்டியிருக்குமாம். சமையலை மட்டும் அவள் அக்கா செய்துவிடுவாள். பதினைந்து வயதில் ஒரு கம்பெனியில் வேலைக்குச் சேர்ந்தவள். இன்று வரை ஓய்வு ஒழிச்சல் இல்லாத வேலைதான்.

ம்... சிறு குழந்தையிலிருந்தே வேலை பார்க்கும் அநேகம் பெண்கள் இருக்கிறார்கள். ட்ரா.்.பிக் சிக்னல்களில் நின்று பிச்சையெடுக்கும் நாலு வயது சிறுமிகளைப் பார்த்திருக்கிறோம் தானே? பர்வீனின் அம்மா அப்படிப் பிச்சை எடுக்கவில்லை. பர்வீனும் தன் அம்மாவுடன் வீட்டு வேலைக்குச் சென்றாள். பிறகு டான்ஸ் பாருக்கு வந்தபோது 13 வயது. அடுத்த வருடமே காதல். ஆமாம். பாருக்கு வரும் கஸ்டமர் ஒருவன் இவளைக் காதலித்திருக்கிறான். இவளுக்கும் அவன் மேல் தீவிரமான காதல். அவன் அவன் என்பதால் இளைஞன் என்று நினைத்துவிடாதே. அவனுக்கு வயது 40. அடுத்த வருடமே ஒரு குழந்தை. அப்போது பர்வீனின் வயது 15. ஆண் குழந்தை. அவளுடைய மாத வருமானம் 25,000 ரூபாய். அதில் பதினைந்தாயிரத்தை வீட்டுக்கு அனுப்பிவிட்டு பத்தாயிரத்தை தன் செலவுக்கு வைத்துக் கொள்வாள். ஆனால் அவளுடைய காதலன் அதற்குச் சம்மதிக்கவில்லை. ஐந்தாயிரத்தை அனுப்பிவிட்டு இருபதாயிரத்தை தான் வைத்துக்கொண்டான். இவள் சம்பாதித்த பணம் முழுவதையும் அவனிடம் கொடுத்துவிடுவாள். இப்போது அவன் இவளை விட்டு ஓடிவிட்டான். பர்வீன் வயது: 19. கையில் ஒரு பைசா கிடையாது. இன்னமும் இவள் திருந்தவில்லை. என் மகன் நன்றாகப் படித்து முன்னேறி என்னைக் காப்பாற்றுவான் என்று சொல்லிக் கொண்டிருக்கிறாள். ஆனால் நான் நினைக்கிறேன். அதிகபட்சம் அவன் ஒரு பிம்ப் ஆகலாம். அல்லது, கஞ்சா அடிக்ட். அதற்கு மேல் இந்த நாட்டில் ஒரு பார் டான்ஸரின் மகனுக்கு வேறு எந்த சாத்தியமும் இருப்பதாகத் தெரியவில்லை.

அனு ஒரு நிமிஷம். மீராவும்கூட இப்படித்தான் எவனையோ நம்பி கல்யாணம் செய்துகொண்டு 16 வயதில் குழந்தை பெற்றுக்கொண்டாள். குழந்தை பிறந்த ஒரே மாதத்தில் ஆள் ஓடிவிட்டான். ஏன் இந்த சின்ன வயதில் காதல், குழந்தையெல்லாம் என்று ஒருமுறை அவளிடம் கேட்டேன். அவள் சொன்ன பதில்: என்னோடு கூடப் பிறந்தவர்கள் ஆறு பேர். குடியிருந்தது மிகச் சிறிய வீடு. எல்லோரும் வரிசையாகப் படுத்துக் கொள்வோம். ஒருவர் தோள் மற்றவர் மீது இடிக்கும். தூக்கத்தில் பாத்ரூம் போவதற்காக எழுந்தால் யார் மீதும் காலை வைத்துவிடாமல் சென்று வருவது மிகப் பெரிய சர்க்கஸ் வித்தையாக இருக்கும். அப்பாவின் மீது கால் பட்டுவிட்டால் ‘எந்தத் தேவுடியா அவ? எந்தக் கூதி முண்டை என்னை மிதிச்சது?’ என்று ஆரம்பித்து ஐந்து நிமிடத்திற்கு வசை வார்த்தைகளைப் பொழிந்து தள்ளுவார். அம்மா விஷயம் கேட்கவே வேண்டாம். தம்பி தங்கைகளின் மீது பட்டால் ஏதோ கழுத்தையே நெரித்துக் கொன்றுவிட்டதுபோல் வேண்டுமென்றே கத்துவார்கள். அது ஒரு நரகம். அந்த நரகத்திலிருந்து வெளியேற நினைத்தே என்னைக் காதலிப்பதாகச் சொன்ன ஒரு அயோக்கியனை நம்பி வீட்டை விட்டுக் கிளம்பினேன்.

மீரா இதைச் சொன்னபோது பெருமாளின் நண்பன் ஆழ்வார் விசாரணைக் கைதியாக மாட்டிக்கொண்டு கோவை மத்தியச் சிறையில் ஒரு வார காலம் கழித்த அனுபவத்தைப் பற்றி சொன்னது ஞாபகம் வந்தது. அங்கே அவனுக்குப் பிரச்னையாக இருந்த விஷயங்களாவன:

மாலை ஐந்து மணிக்கே செல்லுக்குள் போய்விட வேண்டும். அதன் பிறகு காலை ஐந்து மணிக்குத்தான் செல் கதவைத் திறந்து விடுவார்கள். இடைப்பட்ட நேரத்தில் மலஜலம் கழிப்பதாக இருந்தால் செல்லுக்குள் வைக்கப்பட்டிருக்கும் ஒரு மண் சட்டியில்தான் போய்க்கொள்ள வேண்டும்.

நான்கு பேர் இருக்கக்கூடிய செல்லில் சிறையின் இடப் பற்றாக்குறை காரணமாக எட்டு பேர் அடைக்கப்பட்டிருப்பார்கள். காலையில் ஐந்து மணிக்கு ரோல்கால். அதற்கு கைதிகள் அனைவரும் குத்துக்காலிட்டுதான் அமரவேண்டும். இந்த இடத்தில் அவனை இடைமறித்த பெருமாள் ‘உனக்குப் பரவாயில்லை. நீ எலும்பன். 45 கிலோ கறிதான் இருப்பாய். 100 கிலோ, 150 கிலோ கறிக்காரர்களெல்லாம் எப்படி குத்துக்காலிட்டு அமர்வார்கள்? வேலூர் ஜெயிலிலிருந்த வைகோவும்கூட குத்துக்காலிட்டுதான் அமர வேண்டியிருந்திருக்குமா? இது பற்றியெல்லாம் அவரது சிறையனுபவக் குறிப்புகளில் எழுதப்பட்டுள்ளதா?’ என்று கேட்டான். அதற்கு அவன் ‘வைகோ பற்றித் தெரியவில்லை. ஆனால் பெரிய கறிக்காரர்களுக்கு அப்படி உட்கார்வது கஷ்டம்தான். பெண்டு நிமிர்ந்து விடும்’ என்றான். மற்றபடி சிறை வாழ்க்கை ரொம்ப ஜாலிதான். காலை ஐந்து மணியிலிருந்து மாலை ஐந்து மணிவரை சிறை வளாகத்துக்குள் சுதந்திரப் பறவையாகத் திரியலாம்... என்று ஆரம்பித்து இந்த நாவலின் ஐம்பது பக்கங்களை எடுத்துக் கொள்ளும் அளவுக்குத் தன் சிறை வாழ்க்கை பற்றி விவரித்தான் ஆழ்வார். அது இங்கே முக்கியமில்லை. காரணம்: கண்ணாயிரம் பெருமாள் தன் தோழி அனுராதாவிடம் ஆழ்வாரின் அனுபவங்களைப் பற்றிப் பேசவில்லை. மீரா கூறிய ஒரு விஷயம் அவனுக்கு ஆழ்வாரை ஞாபகப்படுத்தியது. நான்கு பேர் மட்டுமே படுக்கக்கூடிய செல்லில் எட்டுபேர் வரிசையாகப் படுத்திருப்பதால் ஒருவர் மீது ஒருவர் இடித்துக்கொள்ளாமல் படுப்பது மிகப் பெரிய கஷ்டம் என்றாலும் இடித்துக்கொள்ளாமலும், ஒருவர் மீது மற்றொருவர் காலையோ கையையோ போடாமலும்தான் படுக்க வேண்டும். அப்படிப் போட்டால் ஜெயில் வார்டர் செல் கதவின் கம்பிகளைத் தடியால் தட்டி எல்லோரையும் எழுப்பி விடுவார். இதற்காகவே செல்லுக்கு வெளியே இரவு முழுவதும் ரோந்து சென்றுகொண்டிருப்பார்கள் ஜெயில் வார்டர்கள். என்ன காரணம்? ஹோமோ செக்ஸ் நடக்காமல் இருப்பதற்கான கண்காணிப்பு. ம்... நீ சொல் அனு...

**பின்குறிப்புகள்:**

1. வெறும் ஞாபகத்திலிருந்தே இதையெல்லாம் நான் எழுதிக் கொண்டிருப்பதால் கதை எண்: இரண்டில் கூறியபடி கொரியர் பையன் கொடுக்கும் துன்பத்தைப் பற்றிய கதையை இங்கே எழுத முடியவில்லை.

2. அனுராதா பெருமாளுக்கு அறிமுகப்படுத்திய சிலரில் மிர்துளாவும் ஒருத்தி. ஒரு தனியார் நிறுவனத்தில் பணிபுரிபவள். அவளைப் பற்றி அனு கொடுத்த விபரம் சுவாரசியமானது. மிர்துளா திருமணமானவள். ஒரு குழந்தையும் உண்டு. கணவனுக்கு வங்கியில் உத்தியோகம். இது தவிர, அவளுக்கு மிக நெருக்கமான ஆண் நண்பர்கள் அரை டஜன் பேர் உண்டு. பேண்ட்டீஸ் வாங்கிக் கொடுக்க ஒருத்தன். ப்ரா வாங்கிக் கொடுக்க மற்றொருத்தன். புடவைக்கு ஒருத்தன். மற்றொருவன் பெரும் பணக்காரன். ‘ஆபீஸ் டூர் போகிறேன், வர ஒரு வாரம் ஆகும்’ என்று கணவனிடம் சொல்லிவிட்டு அவனோடு ஏதாவது வெளியூர் சென்றுவிட்டு வருவாள். மேலும், Fire & Ice, Cyclone போன்ற டிஸ்கோக்களில் வாராவாரம் அவளை அவனோடு பார்க்கலாம்.

எல்லாம் பணம், பெருமாள், பணம். ரோட்டில் போகும் ஒருவனைக் கூப்பிட்டு 50 ரூபாய் கொடுத்து, மற்றொருவனைக் காட்டி 'அவன் கன்னத்தில் அறை' என்று சொன்னால், எந்தத் தயக்கமும் இல்லாமல் உடனடியாக அதைச் செய்வான். இந்தியாவிலேயே ஆகப் பெரிய சம்பளம் வாங்குபவர்களும், ஆகக் குறைந்த சம்பளம் வாங்குபவர்களும் உள்ள நகரங்களில் மும்பைதான் பிரதானமானது. பணத்தைத் தவிர இந்த ஊரில் வேறு எதற்குமே அர்த்தம் கிடையாது. காமாட்டிபுரம் சென்றாய் அல்லவா? 50 ரூபாய்க்குப் படுக்கத் தயாராக இருக்கும் ஏராளமான பெண்களை நீ அங்கே பார்க்க முடியும். வெறும் 50 ரூபாய். கனவுக் கன்னிகள் முக்கால் நிர்வாணமாக நடனமாடும் சினிமாவைப் பார்ப்பதற்குக்கூட 100 ரூபாய் செலவாகும்... ஆனால் காமாட்டிபுரத்தில் ஒரு நிஜக் கன்னியின் விலை 50 ரூபாய் because she is a sex vestibule. ஹே நா?

3. Fire & Ice, Cyclone - மும்பையிலுள்ள புகழ்பெற்ற டிஸ்கொதேக்கள்.

***

# கதை : இருபது

இந்த நாவலின் பாதிப் பகுதியை எடுத்துச் சென்றுவிட்ட கண்ணாயிரம் பெருமாளைத் தேடியலைந்த சாரு நிவேதிதாவாகிய நான் அவனை லெதர் பாரில் வைத்துச் சந்தித்தேன். அப்போது நடந்த எங்கள் உரையாடலை - அல்லது, உணர்ச்சிப் பிழம்பாய் அவன் மட்டுமே பேசிய soliloquyயை இங்கு அப்படியே தருகிறேன்.

என் மதிப்பிற்குரிய வாசகி ஒருத்தி சொன்னாள், நாவல் சாதாரணமாக போய்க்கொண்டிருக்கிறது என்று.

எது சாதாரணம்?

ஒரு மனிதன் எல்லோர் முன்னிலையிலும் தன் ஆடைகளைக் கழற்றிப் போட்டுவிட்டு அம்மணமாக நிற்பது சாதாரணமா? அது ஒரு ஸ்கீஸோஃப்ரீனிக் நிலை. அந்த நிலைக்கும் அந்த நிலையிலேயே தங்கிவிடாமல் திரும்பவும் ஆடைகளை எடுத்து அணிந்துகொள்ளும் தருணத்திற்குமான இடைவெளி மிக நுட்பமானது. அப்படி முழுமையாகச் சிதைந்துவிடாமல் அவன் சிருஷ்டியின் பக்கம் வந்து விழுந்தது சாதாரண விஷயமா? அம்மணம் என்றால் என்ன? நான் இந்திய ஆன்மிகம் கூறும் நிர்வாணத்தைப் பேசவில்லை. Nudity is only death, and the most tender kisses have the aftertaste of the rat என்று கூறிய ஜார்ஜ் பத்தாயின் அம்மணம் இது. சமீபத்தில் 'கத்ரீனா' சூறாவளியில் சிக்கிய நியூ ஆர்லியன்ஸில் பல தினங்களாகக் கவனிப்பாரற்றுக் கிடந்த உப்பிய உடல்களின் அம்மணம். ஹிட்லரின் வதைமுகாம்களில் இருந்த லட்சக்கணக்கான உடல்களின் அம்மணம். போலீஸ் ஸ்டேஷன், மருத்துவமனை போன்ற இடங்களில் காணும் உடல்களின் அம்மணம். இவ்விதம் அம்மணமாக்கப்படும்போது உடல் தனது பாலியல் கவர்ச்சியை இழக்கிறது.[1] அதன் காரணமாகவே மேடையில் அம்மணமாக நடனமாடும் பெண்களை என்னால் ரசிக்க முடியவில்லை.

பெண்கள் என்றாலே எனக்குத் தாய்லாந்தின் ஞாபகம்தான் வருகிறது. காரணம், அந்த தேசமே பெண்களை வைத்துப் பிழைத்துக்கொண்டிருக்கிறது. விமான நிலையத்திலிருந்து துவங்கி, தங்கியிருக்கும் ஓட்டல்வரை எல்லா இடத்திலும் பெண் தரகர்கள் என்னை அணுகினர். வேண்டாம் என்றால் அதற்கு மேல் தொந்தரவு செய்வதில்லை. (காமாட்டிபுரம் பெண் தரகர்கள் பாவம், பிச்சைக்காரர்களைப்போல் கெஞ்சியபடி என்னைத் துரத்திக்கொண்டே வந்தார்கள். தொல்லை பொறுக்கமுடியாமல், ஒரு ஓட்டலுக்குள் நுழைந்து ஒரு மணி நேரம் ஒளிந்திருந்துவிட்டு வெளியே வந்தேன். அப்போதும் ஒரு பெண் தரகன் ஓட்டல் வாசலிலேயே எனக்காகக் காத்துக் கொண்டிருந்தான். நல்லவேளை, பாங்காக் அவ்வளவு மோசமில்லை.)

பாங்காக்கில் இறங்கிய முதல் தினம் என்னை அணுகிய டாக்ஸி டிரைவரிடம் சரியென்று சம்மதித்தேன். ஒரு விடுதிக்கு அழைத்துச் சென்றார். விடுதி மேலாளர் ஒரு பெண். எடுத்த எடுப்பிலேயே என் மேல் இழைந்தபடி பேசினாள் அந்தப் பெண். ஒரு பெரிய கண்ணாடிப் பேழைக்குள் இரண்டு டஜன் பெண்கள் அமர்ந்திருந்தனர். அதில் ஒரு பெண் எதையோ யோசித்தபடி எழுதிக்கொண்டிருந்தாள். நீண்ட நேரம் அவளைப் பார்த்துக்கொண்டிருந்தேன். எழுதுவதை அவள் நிறுத்தவில்லை. அதீத அழகும் இளமையும் கொண்டவளாக இருந்தாள். ஒரு நாள் முழுவதும் அவள் என்னோடு இருப்பதற்கும், ஊரைச் சுற்றிக்காட்டுவதற்கும் 2500 பாட். அதிர்ஷ்டவசமாக அவள் ஆங்கிலம் அறிந்தவளாக இருந்தாள். காதலர்களைப்போல் அணைத்துக்கொண்டு ஊர் சுற்றினோம்.

அப்போதுதான் தெரிந்தது. பாங்காக்கிலிருந்த அத்தனை வெளி நாட்டுக்காரர்களும் ஒரு டீன் ஏஜ் ‘தாய்’ பெண்ணுடன் சுற்றிக்கொண்டிருந்தனர். சூமோ வீரர்களைப்போல் பருத்துக் கிடந்த அறுபது வயது ஐரோப்பியர்களும், அமெரிக்கர்களும் கொடியைப்போல் மெலிந்திருந்த ‘தாய்’ பெண்களின் தோளில் கை போட்டுக்கொண்டு அலைவதைப் பார்க்க வேடிக்கையாக இருந்தது. ஒரு நாள் Potpong போயிருந்தேன். சென்னை ரங்கநாதன் தெருவைக் கற்பனை செய்துகொள்ளுங்கள். அங்குள்ள துணிமணி, பாத்திரக் கடைகளுக்குப் பதிலாக வரிசையாக செக்ஸ் க்ளப்புகள். வாசல் என்று எதுவுமில்லாமல் வீதியில் செல்பவர்களுக்குத் தெரியும் விதத்திலேயே விடுதிகளெல்லாம் திறந்தவண்ணம் அமைந்திருந்தன. ஒவ்வொரு Pub-இலும் குறைந்தபட்சம் ஒரு டஜன் பெண்கள் உடம்பில் பொட்டுத் துணியில்லாமல் நிர்வாணமாய் ஆடிக்கொண்டிருந்தார்கள். மற்றும் பல பெண்கள் ஆகக் குறைந்த உடையுடன் பார்வையாளர்களுக்கு மது வகைகளைக் கொடுத்துக்கொண்டிருந்தார்கள். மேலும் பல பெண்கள் ‘பப்’பின் வாசலில் நின்று தெருவில் செல்வோரை வரவேற்றுக்கொண்டிருந்தார்கள். பலநூறு பெண்களை ஒரே நேரத்தில் நிர்வாணமாகப் பார்த்தது எனக்கு ஒருவித திகைப்பை அளித்தது என்றே சொல்ல வேண்டும். ஆனால் அந்தப் பெண்களில் யாருக்குமே பொதுவாக செக்ஸ் தொழிலாளிகளுக்கு இருக்கக்கூடிய ஒருவிதத் தடித்த முகத் தோற்றம் இல்லாமலிருந்தது மிகவும் ஆச்சரியமாக இருந்தது. அலுவலகம் செல்லும் பெண்ணுக்கும், செக்ஸ் ஒர்க்கருக்கும் எந்த வித்தியாசமும் தெரியவில்லை. பல செக்ஸ் தொழிலாளிகள் வேறு இடங்களில் வேலை செய்துகொண்டே, பகுதி நேர வேலையாக செக்ஸ் தொழில் செய்வதாக காஞ்சனா சொன்னாள்.

அப்போது ஒரு சம்பவம்: பட்பாங்கின் ஸோயி எண்: 1க்குச் செல்லும் வழி எது என்று எனக்குத் தெரியவில்லை. யாரிடமாவது கேட்கலாம் என்று திரும்பியபோது பள்ளிச் சீருடையில் ஒரு இளம் பெண் நின்றுகொண்டிருந்தாள். அவளிடம் சென்று ஸோயி எண்: 1 எங்கே என்று கேட்டபோது அவள் தன்னை ஒரு செக்ஸ் தொழிலாளி என்று நினைத்து விட்ட ஒரு வெளிநாட்டுக்காரன் என்றே நினைத்துவிட்டாள் என்பது அவளுடைய கண்களின் மிரட்சியிலிருந்து தெரிந்தது.

உலகின் பிரசித்திபெற்ற சிவப்பு விளக்குப் பகுதிக்குள் ஒன்று ‘பட்பாங்’. அங்குள்ள Pussy என்ற ‘பப்’பும் அதேபோல் உலகப் பிரசித்திப்பெற்றதுதான். நுழைவுக் கட்டணமாக 300 பாட் செலுத்திவிட்டு அதற்குள் நுழைந்தேன்.

உட்கார இடமில்லாத அளவுக்குக் கூட்டம். மேற்கத்திய முகங்கள். அவர்களில் பலர் பெண்கள். மேடையில் நிர்வாணமாக ஆடிக்கொண்டிருந்த ‘தாய்’ பெண்கள் தங்களின் யோனியின் மூலம் பலவித வித்தைகளைச் செய்து காட்டிக்கொண்டிருந்தனர்.

இடம் தேடி சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டிருந்த என்னை இரண்டு பெண்கள் - அரைஞாண் கயிற்றைப்போல் அவர்களின் இடுப்பில் அணிந்திருந்த ஒன்றை எந்த ஆடை வகையிலும் சேர்த்துக்கொள்ள முடியாது - அணைத்தபடி அழைத்துச் சென்று ஒரு இருக்கை தேடி அமர்த்தினர். ஒரே ஒரு இருக்கைதான் இருந்தபடியால் இரண்டு பெண்களும் என் இரு தொடைகளிலும் மோட்டார் சைக்கிளில் இரண்டு பக்கமும் கால்களைப் போட்டுக்கொண்டு அமர்வதைப்போல் அமர்ந்துகொண்டனர்.

இந்தியாவில் சினிமாவில் நடப்பது அங்கே பாரில் நடந்து கொண்டிருந்தது. இப்போது அவர்கள் இருவரும் என்மீது சர்ப்பத்தைப்போல் ஊர்ந்துகொண்டிருந்தனர். மூவரும் ஒருவர் மூச்சை ஒருவர் சுவாசித்துக்கொண்டிருந்தோம். பெயர் கேட்டேன். அந்தச் சத்தத்தில் புரியவில்லை. வலப்பக்கம் இருந்தவள் ஒரு பெரிய கோப்பையிலிருந்த பியரை எனக்குப் புகட்ட ஆரம்பித்தாள்.

‘ஷோ’ துரிதகதியில் நடந்துகொண்டிருந்தது. ஒரு பெண் தனது யோனியில் பூத்திரியைக் கொளுத்தி பார்வையாளர்களை மகிழ்வித்துக் கொண்டிருந்தாள். மற்றொரு பெண், வாகனங்களில் பொருத்தப்பட்டிருக்கும் ஹார்னை வைத்து ‘பாம், பாம்’ என ஒலியெழுப்பிக் கொண்டிருந்தாள். விசேஷம் என்னவென்றால், கைகளைப் பயன்படுத்தாமல் ஹார்னை யோனியில் வைத்து யோனி இதழ்களை அசைப்பதன் மூலமாகவே ஹார்னை ஒலிக்கச் செய்ததுதான்.

அமர்ந்ததிலிருந்தே அந்தப் பெண்கள் என்னைத் தனியறைக்கு அழைக்க ஆரம்பித்துவிட்டனர். இரண்டு பேருக்கும் சேர்த்தே மூவாயிரம் பாட் போதும் என்றார்கள். ‘என்னிடம் அவ்வளவு பணம் இல்லை’ என்றேன். பிறகு இருவரும் தங்கள் இடுப்பில் அணிந்திருந்த அந்த அரைஞான் கயிறு போன்ற வஸ்திரத்தை அவிழ்த்துவிட்டு பழையபடியே என் தொடைகளில் அமர்ந்து மெதுவாய் இழைய ஆரம்பித்தார்கள். அப்போது எனக்கு அவர்களின் குறி மழிக்கப்பட்டதா, ரோமத்துடன் உள்ளதா என அறிந்துகொள்ளும் ஆர்வம் ஏற்பட்டது. ஆனால் அதை அறிந்துகொள்ள முடியாதவண்ணம் அவர்கள் குறி என் ஜீன்ஸ் மீது அழுந்தியிருந்தது. கை வைத்துப் பார்த்தேன். ஒருத்தியின் குறி நன்கு மழிக்கப்பட்டிருந்தது. மற்றொருத்தி, டிஸைனர் ஷேவ் செய்திருந்தாள். பலவித வடிவங்களில் புல் செதுக்குவதைப் போல் மழித்துக்கொள்வது இப்போதைய மோஸ்தர். அவற்றில் பிரபலமான இரண்டு வடிவங்கள்: 1. யோனியின் சிரசுப் பகுதியில் லேசாக செதுக்கப்பட்ட முடியை வைத்துவிட்டு மற்ற பகுதிகளில் சுத்தமாக மழித்துவிடுவது. 2. யோனியின் பக்கவாட்டுப் பகுதிகளில் மழித்துவிட்டு பிளவின் இரண்டு விளிம்புகளில் மட்டும் நேர்க்குத்தாக அரும்பு மீசையைப் போல் சிறிதளவு ரோமத்தை விட்டு அதை சீராகக் கத்தரித்துவிடுவது. யோனிப் பிளவை ஒட்டி இருபுறங்களிலும் கோடு போட்டது போல் கலைநயத்துடன் மிளிரும் இவ்வாறான டிஸைனர் சவரங்களுக்குக் குறைந்த பட்சம் 1000 ரூபாய்

கட்டணம் என்று தெரிகிறது?[2] இதை Brazilian waxing என்றும், Landing strip என்றும் சொல்கிறார்கள். அந்த மற்றொருத்தி முதலாம் எண்ணில் சொல்லப்பட்ட வடிவத்தில் 'Landing Strip' வைத்திருந்தாள்.

கவிதையின் அழகியலை ஸ்பர்ஸித்து உணர முடியாது. ஆனால் இது அப்படியல்ல என்பதால் அதை உணரும் ஆர்வத்துடன் அவர்களை அப்படியே சரித்து இறக்கிவிட்டு எழுந்து நின்று என் ஜீன்ஸைக் கழற்ற ஆரம்பித்தேன். அடுத்த நிமிடம் அங்கிருந்த பௌன்ஸர்கள் அவசரமாக - ஆனால் அந்த அவசரத்தை சற்றும் வெளிக்காட்டிக் கொள்ளாத பாவனையுடன் - என்னிடம் வந்து ‘ஆடைகளைக் கழற்றக்கூடாது’ என்றார்கள். ‘இந்தப் பெண்கள் மட்டும் உடம்பில் எந்தத் துணியும் இல்லாமல் என் தொடை மீது அமர்ந்திருக்கிறார்களே?’ என்று கேட்டேன். அதற்கு அவர்கள் சிரித்துக்கொண்டே ‘பெண்கள் கழற்றலாம். ஆண்கள் கழற்றக்கூடாது’ என்றார்கள். ‘ஓ...’ என்றபடி நான் பெல்ட்டை அணிய ஆரம்பித்தபோது அந்த பௌன்ஸர்களில் ஒருவன் என்னிடம் வந்து ‘நீங்களும் ஆடைகளை கழற்றலாம். அதற்கென்று உள்ளே தனியறைகள் உள்ளன. இவர்களையும் அழைத்துச் செல்லுங்கள். நல்ல முறையில் கழற்றிவிடுவார்கள்’ என்று சொல்லிக் கண் சிமிட்டினான்.

நான் பழையபடி இருக்கையில் அமர்ந்ததும் அந்தப் பெண்கள் மீண்டும் என் தொடைகளில் ஆளுக்கொருவராய் மோட்டார் சைக்கிளில் இரண்டு பக்கமும் கால்களைப் போட்டுக்கொண்டு அமர்வதைப்போல் அமர்ந்து, சர்ப்பத்தைப்போல் உடலெங்கும் இழைந்தவாறு ‘மூவாயிரம் பாட் வேண்டாம். வெறும் 2000 போதும்’ என்றார்கள். ‘என்னிடம் உண்மையிலேயே பணம் இல்லை’ என்றேன் மீண்டும். ‘ஒரு இந்தியனாக இருக்கிறாய்... இருந்தும் பணம் இல்லை என்கிறாயே, எப்படி?’ என்று கேட்டாள் ஒரு பெண். ‘இருந்ததெல்லாம் ஏற்கெனவே பல பெண்களிடம் செலவாகிவிட்டது. நாளை ஊர் திரும்புகிறேன்’ என்றேன். மேடையில் ஒலிப்பான் காட்சி முடிந்து, ஒரு பெண் தனது யோனியில் பிளேடுகளை வரிசையாக உள்ளே விட்டு எடுத்துக்கொண்டிருந்தாள்.

இப்போது அந்தப் பெண்கள் இருவரும் என்னை அறைக்கு அழைப்பதை நிறுத்திவிட்டு ‘டிப்ஸ்’ கேட்க ஆரம்பித்தனர். ‘இரண்டு பேருக்கும் டிப்ஸ் தருவது சிரமம்’ என்றதும் ஒரு பெண் ஏமாற்றத்துடன் எழுந்து சென்றாள். மேடையிலிருந்து ஏதோ ஒன்று பறந்து பறந்து பார்வையாளர் பகுதியில் வந்து விழுந்துகொண்டிருந்தது. எடுத்துப் பார்த்தால், பெரிய சைஸ் குண்டூசி. அதன் தலைப் பகுதியில் கூம்பு வடிவத்தில் கெட்டியான காகிதத்தால் ஒட்டப்பட்டிருந்தது. குண்டூசியை யோனியில் வைத்து - இளைஞர்கள் காகித அம்பு விடுவதுபோல் - ஆனால், கைகளைப் பயன்படுத்தாமல் யோனி இதழ்களின் மூலமே விசை கொடுத்து அவற்றை நாலா பக்கங்களிலும் பறக்கச் செய்துகொண்டிருந்தாள் மேடையிலிருந்த பெண். ‘வாய் மூலம் செய்யக்கூடிய அத்தனை வித்தைகளையும் யோனி மூலம் செய்கிறார்கள். அப்படியானால் தீப்பந்த விளையாட்டெல்லாம் கூட நடக்குமா?’ என்று கேட்டேன் என் மீது ஊர்ந்துகொண்டிருந்த பெண்ணிடம். சிரித்துக்கொண்டே அவள் என் கன்னத்தைத் தட்டினாள்.

‘இந்த நாவலில் பின் நவீனத்துவத்தின் சாயலே தெரியவில்லையே?’ என்று கேட்ட வாசகிக்கு சொல்லிக்கொள்கிறேன். இதோ பார் பின் நவீனத்துவப் பெண்ணே... உன் பின் நவீனத்துவம் இந்த பட்பாங் புஸ்ஸி

ரெஸ்த்தொராந்தின் அம்மணப் பெண்களின் யோனி வழியே பிளேடுகளாகவும், குண்டூசிகளாகவும் பறந்து பறந்து வந்து விழுந்துகொண்டிருக்கிறது. கண்ணுக்கு விருந்தாக பூத்திரிகளும், செவிக்கு விருந்தாக ‘ஹார்ன்’ சப்தங்களும் உண்டு. இதையெல்லாம் பொறுக்கிக்கொள். பின்னால் இவை நமது உரையாடல்களின்போது ‘தாய்’ பெண்களின் புஸ்ஸி வழி வந்த பின் நவீனத்துவத்தின் ஸ்தூல அடையாளங்களாக நிற்கும். நானும்கூட அப்படி ஒரு குண்டூசியை எடுத்து வந்தேன். ஆனால் சிங்கப்பூர் விமான நிலையத்தின் பாதுகாப்பு அதிகாரிகள் அதை வைத்து நான் விமானத்தைக் கடத்திவிடுவேன் என்று அஞ்சி அதை என்னிடமிருந்து பறித்துக்கொண்டுவிட்டார்கள்.

பட்பாங்கை உலகின் எட்டாவது அதிசயமென்றும், சொர்க்கம் என்றும் கூறுகிறார்களே, இந்த சொர்க்கம் பகலில் எப்படியிருக்கிறதென்று பார்க்க மறுநாள் மாலை நான்கு மணிக்கு அங்கே சென்றேன். அங்கே கண்ட காட்சி என்னை அதிர்ச்சியுறச் செய்தது. முந்தின இரவு சொர்க்கமாகத் தெரிந்த அந்த ஸ்தலம் இப்போது ஒரு நரகத்தைப்போல் காட்சியளித்தது. நிர்வாணப் பெண்களுக்கு பதிலாக அங்கே ஒரு மாபெரும் இரும்புப் பட்டறையே என் முன்னே விரிந்திருந்தது. ஆண்களும் பெண்களுமாக சுமார் நூறு பேர் பெரும் இரும்புத் தளவாடங்களைச் சுமந்து வந்து அன்றைய இரவுக்கான கடைகளை நிர்மாணித்துக்கொண்டிருந்தனர். பெண்களும் ஆண்களுக்குச் சமமாக இரும்புத் தளவாடங்களை சுத்தியலால் அடித்து முடுக்கிக்கொண்டிருந்தார்கள். அத்தனை பேர் உடம்பும் வியர்வையில் குளித்திருந்தது. இரும்பிலேயே வேலை செய்து செய்து அந்த உடல்களும் இரும்பைப் போலவே மாறியிருந்தது போல் தோன்றியது. ஆண்கள் சிறிய நிக்கர் மட்டும் அணிந்திருந்தனர். மேலே எதுவுமில்லை. பெண்கள், நிக்கருக்கு மேலே ஒரு பனியன். இரவு தெரிந்ததும் உடல்கள்தான். இப்போது தெரிவதும் உடல்கள்தான். ஆனால்? அந்த நூறு பேர் இரும்பு அடிக்கும் சப்தத்தில் ‘புஸ்ஸி’யும் மற்ற விடுதிகளும் ஆழ்ந்த மௌனத்தில் உறங்கிக்கொண்டிருந்தன. நேற்று இரவு அவ்வளவு நிர்வாண உடல்களையும் பார்த்தபோது எழாத காம இச்சை, இப்போது வியர்வை ஆறாகப் பெருகி ஓடும் இந்த உடல்களைப் பார்த்தபோது எழுந்தது.

இந்த நாவல் வெற்றிகரமாக அமையுமா? அல்லது, தோல்வியா? வெற்றியெனில் கொண்டாட்டம் - தோல்வியெனில் நிந்தனை... இல்லை. இது அவ்விதமான binary oppositionக்கு வெளியே நிற்கிறது. இந்த நாவல் உன்னுடைய புத்தக அடுக்கில் இருப்பதையே நான் விரும்பவில்லை. காரணம்: நான் ஒரு வாசுதேவன் நாயரோ, ஆனந்தோ, முகுந்தனோ அல்ல. சொல்லப்போனால் நான் ஒரு எழுத்தாளனே அல்ல[3]. என் எழுத்து ஒரு உரையாடல், எனக்குள் நான் நிகழ்த்திக்கொள்ளும் உரையாடல்.

ஒரு கதை கேட்கும் உத்தேசத்துடன் நீ என்னை அணுகினால் உனக்கு எதுவும் கிடைக்காது. என்னிடம் கதைகள் இல்லை. ஒரு புத்திஜீவியாக பின் நவீனத்துவத் திட்டம் ஒன்றை என்னிடமிருந்து நீ எதிர்பார்த்தால் உனக்கு ஏமாற்றமே மிஞ்சும். ஏனென்றால் என் எழுத்து திட்டங்களின் பேரில் உருவாவதில்லை. அனுராதாவின் பேச்சை முந்தின பக்கங்களில் நீ வாசித்திருப்பாய். அவளிடம் நான் ‘அனு, இப்போது நான் எழுத உத்தேசித்துள்ள ‘கண்ணாயிரம் பெருமாளின் நாற்பது கதைகளும் சில பின்

குறிப்புகளும்' என்ற நாவலில் உனது பேச்சையும் பதிவு செய்ய இருக்கிறேன். நானோ பின் நவீனத்துவம் பற்றி ஏகப்பட்ட கட்டுரைகள் எழுதி ஒரு புத்திஜீவியாகப் பெயர் வாங்கினவன். இப்போது அந்த நாவலில் உன்னுடைய பேச்சை அப்படியே பதிவு செய்தால் வீணாக என் பெயர் கெட்டுப்போகும். மேலும், மற்ற சில எழுத்தாளர்களைப் போல் நானே வெவ்வேறு பெயர்களில் என் நாவலைப் பாராட்டி பத்திரிகைகளுக்கு வாசகர் கடிதம் எழுதும் தந்திரம் அறியாதவன். எனவே, நீ தயவுசெய்து சற்று பின் நவீனத்துவமாகப் பேசு' என்று கேட்க முடியாது.

அப்படிப்பட்ட சில பின் நவீனத்துவ நாவல்கள் தமிழில் உண்டு. யாராலும் வாசிக்கப்படாமல் புத்தக அடுக்குகளை அலங்கரித்துக் கொண்டிருக்கின்றன அவை. அவற்றை எழுதியவர்களுக்கு உள்நாட்டு வெளிநாட்டுப் பல்கலைக்கழகங்களில் உத்தியோக வாய்ப்புகள் கிடைக்க அவை உதவின. அந்த வகையில் அந்நாவல்கள் தமது ஜீவித நியாயத்தை அடைந்துவிட்டன என்றே சொல்லவேண்டும்.

அசாதாரணங்களை எதிர்பார்ப்பதும் கடவுளைத் தேடுவதும் ஒன்றேயாகும். எனில், இது பின் நவீனத்துவ மனோநிலைக்கு எதிரானதுதானே? பின் நவீனத்துவம் என்பதே அடையாளப்படுத்துதல்களிலிருந்து நம்மை விடுவிக்கும் முயற்சி என்கிறபோது 'இந்தா பிடி, பின் நவீனத்துவ நாவல்' என்று எப்படித் திட்டமிட முடியும்?

அசாதாரணங்களைப் பேசும் தீர்க்கதரிசிகள் யாவரும் சிருஷ்டி கர்த்தாக்களைப் பற்றிய ஏராளமான புனித சொற்களை உருவாக்கியிருக்கின்றனர். இந்த சிருஷ்டிகர்த்தாக்களே இன்றைய உலகம் வாழ்வதற்குத் தகுதியேயில்லாத ஒரு இடமாக ஆனதற்குக் காரணம்.

'நாங்களெல்லாம் பெண்கள். எங்களுக்குப் பிரச்னையில்லை. என் கணவர் மட்டும் பக்கத்து வீட்டில் கட்டிலுக்கு அடியில் ஒளிந்து கொண்டார். கும்பல் அவரை வெளியே இழுத்துச் சென்று தடியால் அடித்துக் கொளுத்தியது. என் கணவரைக் கொன்றவர்கள் இன்னமும் உயிரோடுதான் எங்கள் பகுதியில் சுற்றிக்கொண்டிருக்கிறார்கள்.'[4]

'எனக்கு நான்கு மகன்கள். பல்ஜீத் சிங் (வயது: 19) மற்றும் ரன்பீர் சிங் (வயது: 12). இருவரும் என் கண் முன்னாலேயே கொல்லப்பட்டார்கள். மற்றொரு மகன் ரஞ்ஜீத் சிங் தலையில் தாக்கப்பட்டதால் சில ஆண்டுகளுக்குப் பிறகு இறந்தான். மற்றொரு மகன் கன்வல்ஜீத் சிங் குடிக்கு அடிமையாகிவிட்டான். சோகம் என்னவென்றால் போலீஸ் எங்களிடமிருந்த ஆயுதங்களைப் பிடுங்கிக்கொண்டது. இல்லாவிட்டால் எங்களைக் கொல்ல வந்த கும்பலை நாங்களும் தாக்கியிருப்போம். துக்கமும் துயரமும் இன்னும் சற்று குறைவாக இருந்திருக்கும். இப்போதும் எங்களைக் கொலை செய்தவர்களின் மத்தியிலேதான் நாங்கள் வாழ்ந்துகொண்டிருக்கிறோம்.[5]

'நான் அனாதையானபோது என் வயது நான்கு. என் பெற்றோரின் முகம் எனக்கு லேசாகத்தான் ஞாபகமிருக்கிறது. ஒரு கும்பல் அவர்களைக் கொன்றுவிட்டு எங்கள் வீட்டைக் கொளுத்தியது. 'இந்தியா அருமையான நாடு; அன்பான மக்களைக் கொண்ட நாடு' என்கிறார்கள். ஆனால் என்னைக் கேட்டால் மோசமான நாடு என்பேன். இரக்கமில்லாத மக்கள் வசிக்கும் நாடு என்பேன். 21 ஆண்டுகளாகியும் குற்றவாளிகள் படு சுதந்திரமாகத்

திரிகிறார்கள். இதைப் போன்ற ஒரு நாட்டின் மீது எனக்கு எப்படி நம்பிக்கை பிறக்கும்?[6]

இப்படிப்பட்ட பேச்சுக்களை மட்டுமே நிரப்பி இந்த நாவலை முடிக்க விரும்புகிறேன். எத்தனையோ பேர் பேசிய பேச்சு. உன்னுடைய புத்தக அடுக்குகளிலிருந்தும், நீ வாசிக்கும் தினசரிகளிலிருந்தும் களவாடியவற்றையே இதில் நான் எழுதிக்கொண்டிருக்கிறேன். அதனால் நீ என்னை ஒரு Plagiarist என்று சொன்னால் அதை நான் தீவிரமாக ஆமோதிப்பவனாக இருப்பேன்.

'I saw the best minds of my generation destroyed by madness' என்று ஆலன் கின்ஸ்பெர்க் தனது Howl கவிதையை ஆரம்பிக்கிறாரே... அந்த நிலையையே இந்த நாவல் பேச முற்படுகிறது.[7]

திரும்பத் திரும்ப கூறுகிறேன். வாசகர்களைத் திருப்தி செய்வதற்காக என்னால் எழுத முடியாது. அவர்கள் என்னுடைய எழுத்து பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பதைக்கூட என்னால் அறிந்துகொள்ள முடியாது. இந்த நிலையில் நான் மிக நன்றாக அறிந்த ஒருவனுக்காகவே எழுத வேண்டிய கட்டாயத்திற்கு ஆளாகிறேன். நான்தான் அந்த ஒருவன். எனவே, நான் என்ன எழுதுகிறேனோ அந்த எழுத்துக்கு நான் நேர்மையாக இருக்க வேண்டும்.[8]

சமீபத்தில் தெஹல்கா பத்திரிகையில் ஒரு புகைப்படத்தைப் பார்த்தேன். 10 சீக்கிய இளைஞர்களின் கறுப்பு வெள்ளைப் புகைப்படம். அதில் ஆறு பேர், சீக்கியர்களுக்கு இருக்க வேண்டிய ஐந்து அத்தியாவசிய Kக்களில் முதல் Kயான கேசம் இல்லாமல் சிறிதாய் வெட்டிய முடியுடன் இருந்தனர். 1984 கலவரத்துக்குப் பிறகு பல சீக்கியர்கள் நீண்ட கேசமும் தலைப்பாகையும் வைத்துக்கொள்ள அச்சப்படுகிறார்கள். அந்த இளைஞர்களின் பெயர்களும், வயதும், அவர்களின் உறவினர்கள் கொல்லப்பட்ட விபரமும் அப்புகைப்படக் குறிப்பில் கண்டுள்ளது. அவர்கள் வசிக்கும் நந்த் நகரி, விநோத் நகர், ஷக்கர்பூர், அஜீத் நகர், திர்லோக்புரி, உத்தம் நகர், மல்கா கஞ்ச் போன்ற பகுதிகளில் எல்லாம் நான் வசித்திருக்கிறேன்; சுற்றியலைந்திருக்கிறேன். எல்லாம் ஜமுனா பாக் என்று சொல்லப்படும் கிழக்கு தில்லியிலுள்ள குடியிருப்புப் பகுதிகள்

ஹர்ப்ரீத் சிங்கின் அப்பா அடித்துக் கொல்லப்பட்டு எரியும் நெருப்பில் போடப்பட்டார். இந்தர்ஜீத் சிங்கின் அப்பா கலவரக் கும்பலிடம் தப்பியோடிக் கொண்டிருக்கும்போது நெடுஞ்சாலையில் மற்றொரு கும்பலிடம் அகப்பட்டு அடித்துக் கொல்லப்பட்டார். அப்போது இந்தர்ஜீத் சிங் 11 மாதக் குழந்தை. அம்மாவின் தோளில் கிடந்த குழந்தையைப் பிடுங்கி தூரத்தில் எங்கோ வீசியெறிந்தது கும்பல். மூன்று நாட்கள் சென்று ஒரு புதரில் உயிரோடு கிடந்தது குழந்தை.

இந்தர்ஜீத் சிங்கின் மூத்த சகோதரர் குர்ப்ரீத் சிங். எப்படிப் பிழைத்தார் என்ற விவரம் புகைப்படக் குறிப்பில் காணப்படவில்லை.

இந்தர்ஜீத் சிங்கின் மூத்த சகோதரர் குர்பக்ஷ் சிங் பெற்றோரின் மூத்தப்பிள்ளை. எப்படிப் பிழைத்தார் என்ற விபரம் புகைப்படக் குறிப்பில் காணப்படவில்லை.

கலவரத்துக்குப் பிறகு பிறந்த ரச்பால் சிங். இவரது தந்தை, தந்தையின் இரண்டு சகோதரர்கள் மற்றும் அவரது தாத்தா அனைவரும் கலவரத்தில் கொல்லப்பட்டனர். இப்படியாக பல நூறு புகைப்படங்களும், கொல்லப்பட்டவர்களின் பட்டியலும் நீண்டுகொண்டே போகிறது.

இதை நான் எப்படி எதிர்கொள்வது? எங்கிருந்து பின் நவீனத்துவ ஜாலங்களைக் காட்டுவது? உனக்குப் பின்நவீனத்துவ எழுத்து வேண்டுமானால் கண்ணாடியின் முன்னே அம்மணமாக நின்று உன் பின்பக்கத்தைப் பார்த்துக்கொள். Or else, go and assfuck somebody.

என்னிடம் பின் நவீனத்துவ ஜிகினாக்கள் ஏதுமில்லை. நான் பிக்பாக்கெட்டாக இருந்தபோது எப்போதும் ஒரு பனாமா பிளேட் வைத்திருப்பேன். இப்போது அந்த பிளேடுக்குப் பதிலாக எழுத்து.[9] அவ்வளவுதான். கொஞ்சம் முகம்மது ஷுக்ரியையும் மேற்கோள் காட்டுகிறேன்: 'அல்-கூப்ஸ் அல்-ஹ◌ஃபியை[10] நான் இலக்கியத்துக்கு எதிராகவே எழுதினேன். அதை எழுதியிருக்கா விட்டால் எனக்குப் பைத்தியம் பிடித்திருக்கும். அல்லது தற்கொலை செய்துகொண்டிருப்பேன். விபச்சாரம், போதை மருந்து கடத்தல் போன்ற மிக மோசமான ஒரு பின்னணியிலிருந்து வெளியே வந்தவன் நான். அல் கூப்ஸ் அல்-ஹ◌ஃபியே எனக்கு ஒரு theraphyயாக இருந்தது. உளவியல் ரீதியாக நான் சமநிலையை அடைந்ததற்கு அந்த நாவலே எனக்கு உதவியது. ஆனால் பல வாசகர்களுக்கு இது புரியவில்லை. ஏனென்றால் அவர்களைப் பொறுத்தவரை சுயசரிதம் என்றால் ஒரு அருமையான இலக்கிய வாழ்வின் முதிர்ந்த கட்டத்தில், ஒருவரது இலக்கிய வாழ்வின் மகுடமாக எழுதப்பட வேண்டும் என்று கருதுகிறார்கள். ஆனால் நானோ எனது சுயசரிதத்தை இழிவின் ஆழங்களிலிருந்து எழுதினேன். அது அவர்களுக்கு விநோதமாக இருந்தது.'[11]

முகமத் ஷுக்ரி சொல்லும் மற்றொரு விஷயத்தையும் இங்கே நான் குறிப்பிடவேண்டும். அல்-கூப்ஸ் அல்-ஹ◌ஃபியின் கையெழுத்துப் படியை பெய்ரூட்டிலுள்ள ஸுஹெல் இத்ரிஸுக்கு அனுப்பி வைத்த போது இத்ரிஸ் 'உங்கள் நாவல் ஆபாசமாக உள்ளது. அதீத exhibitionism கலந்த மிக மோசமான சுயசரிதை. இதை நீங்கள் கொஞ்சம் philosophize பண்ணினால் நல்லது' என்று பதில் எழுதினார். என்னுடைய இந்த நாவல் சாதாரணமாக இருக்கிறது என்று நீ சொல்லும்போது ஸுஹேல் இத்ரிஸ் முகமத் ஷுக்ரியிடம் கூறிய அதே விஷயத்தைத்தான் நீயும் தெரிவிக்கிறாய். நான் எழுதும் சாதாரண சம்பவங்களோடு மேலும் சில சாதாரண சம்பவங்களை உப பிரதிகளாக இணைத்து வாசித்துக்கொள்ள வேண்டியது உன்னுடைய வேலை. உதாரணமாக ◌ஃபங்குலாவின் தாத்தாவும் ◌ஃபங்குலாவும் மற்றவர்களின் தலையின் மேல் எதையெதையோ வைத்துக் குறிபார்த்துச் சுடும் சாதாரண சம்பவத்தோடு, வில்லியம் பர்ரோஸ் தன் மனைவியின் தலை மீது ஆப்பிளை வைத்துச் சுட்டபோது குறி தவறி அந்தப் பெண் இறந்துவிட்டார்; வில்லியம் பர்ரோஸ் கைது செய்யப்பட்டார்; பிறகு உலகிலுள்ள பல எழுத்தாளர்களும் கலைஞர்களும் தலையிட்டு அரசாங்கத்துடன் பேசி அவரை விடுவித்தனர் என்ற சாதாரண சம்பவத்தையும் இணைத்துக்கொள்ள வேண்டும்.

நான் ஒரு நாள் சக எழுத்தாளர்களுடன் கட்டிப் புரண்டபோது ஆடைகளை

அவிழ்த்துப் போட்டுவிட்டு அம்மணமானேன் என்ற சாதாரண சம்பவத்தோடு, அமெரிக்கப் பல்கலைக்கழகம் ஒன்றில் லெக்சர் கொடுப்பதற்காகச் சென்ற வில்லியம் பர்ரோஸ் கோட், சூட், டையெல்லாம் அணிந்திருப்பதைப் பார்த்து வியப்படைந்த மாணவர்கள் ‘அட, பர்ரோஸா இது! நீங்கள் நிர்வாணமாக வருவீர்கள் என்றல்லவா எதிர்பார்த்தோம்?’ என்று கூறிய சாதாரண சம்பவத்தையும் இணைத்து வாசித்துக்கொள்ள வேண்டும். இப்படியான உப பிரதிகள் இந்த நாவலின் எல்லா எழுத்திலும், எழுத்திற்கு இடையிலுள்ள வெற்று வெளிகளிலும் செருகப்பட்டுள்ளன. அதையெல்லாம் கண்டுபிடித்துக்கொள்ள வேண்டியது உன் திறமை. ஏனென்றால் எழுத்து என்பது சம்போகம் மாதிரி. அதற்கு நான் மட்டும் போதாது; நீயும் தேவை.

***

# கதை : இருபத்தொன்று

தமிழ் மொழி மீது எனக்கு எந்தக் கோபமும் இல்லை; ஆனால் இருநூறு பேருக்காகவும், முன்னூறு பேருக்காகவும் இலக்கியம் படைப்பதில்தான் சற்றும் உடன்பாடில்லை. என்னைப் பொறுத்தவரை எந்த மொழியில் எழுதினாலும் ஒன்றுதான். ஆனால் தமிழர்களும் மற்ற மொழிக்காரர்களும் ஏன் தங்களுடைய மொழியை மட்டும் உயர்ந்ததாகவும், மாற்றான் மொழியை மட்டமாகவும் கருதுகிறார்களென்று புரியவில்லை. பாரதியே இது விஷயத்தில் பொய் சொல்லியிருக்கிறான். ஃப்ரெஞ்ச் மொழி தெரிந்த எவனாவது தமிழ் மொழிபோல் இனிதாவதெங்கும் காணோமென்று சொல்வானா? இன்னும் சொன்னால், ஃப்ரெஞ்சைவிட இனிமையானது அரபி. ஜெர்மன், சமஸ்க்ருதம் போன்ற சில மொழிகள் கேட்பதற்கு நாராசமாக இருக்கும். ஆனால் உலகிலேயே கண்ணுக்கும் காதுக்கும் இனிமையாக இருக்கும் ஒரே மொழி அரபிதான். Calligraphy என்பதன் பொருள் கண்ணுக்கு இனிய சித்திரம். அரபி எழுத்தே அழகிய சித்திரமல்லவா? எல்லா மொழியும் சமமானதுதான் என்று கூறும் political correctness என்னிடம் கிடையாது. அதில் எனக்கு உடன்பாடும் இல்லை. எனவே, அரபி மொழியின் அழகிலும் இனிமையிலும் ஈர்க்கப்பட்ட நான் அந்த மொழியைக் கற்க ஆரம்பித்தேன். இவ்வாறாக:



| | | | |
|---|---|---|---|
| na | ن | za | ز |
| wa | و | ஸ | س |
| ha | ه | ஷ | ش |
| ya | ي | s | ص |
| | | ப்வெ / த்வெ | ض |

கூட்டி எழுதுவதற்கு வசதியாக, ஒவ்வொரு எழுத்தும் மற்றொரு எழுத்தோடு சேரும்போது உருவத்தை சற்று மாற்றிக்கொள்கிறது. غ (ghayn)) என்ற எழுத்து غـ என்று மாறும். ل (la) என்ற எழுத்து ـل என்று மாறும். ஆக, ghala'a என்ற வார்த்தை இவ்வாறாக எழுதப்படும்:

ة + ل + ل + غ = غلة
(ha - ة)

Ghala's என்பதன் பொருள் - ஆடை கழற்றுதல்

இந்த எழுத்துக்களின் சித்திர வடிவம் ஒருபுறம் இருக்க, இதன் ஒலி வடிவம் விசேஷத் தன்மை கொண்டதாகவுள்ளது. ص என்ற எழுத்தின் உச்சரிப்பை ஒரு ஆசிரியரிடமிருந்தே நீ கற்றுக்கொள்ள வேண்டியிருக்கும். 'ழ' என்ற எழுத்து வேறு எந்த மொழியிலும் இல்லை என்பார்கள் தமிழ் ஆர்வலர்கள். ஆனால் வேறு எந்த மொழியிலும் இல்லாத பல ஒலி வடிவங்கள் அரபியில் உண்டு. உதாரணமாக, ص என்ற எழுத்தை உச்சரிக்க உதடுகளையும் பற்களையும் சேர்க்காமல், நாக்கை வளைத்து, மேல் கடைவாய்ப் பற்களை அழுத்தமாகத் தொட்டு, குரலை வாய் நிரம்ப அழுத்தமாக ஒலிக்க வேண்டும். இதுபோல் ض என்ற எழுத்தை உச்சரிக்க, உதடுகளையும் பற்களையும் சேர்க்காமல் நாவின் முனையை மேல் கடைவாய் பற்களின் ஈறை லேசாகத் தொட்டு, குரலை மிக அழுத்தமாகவும் வாய் நிரம்பவும் ஒலிக்கச் செய்ய வேண்டும். 'த்வெ' என்பதைப் போன்றதொரு அபூர்வமான ஒலி உண்டாகும். இப்படிப் பலவிதமான அபூர்வ சப்தங்கள் அரபியில் உண்டு.

இருநூறு பேருக்கு மட்டுமே எழுதுவது என்ற தண்டனையிலிருந்து தப்பிக்கும் ஆர்வத்தில் நான் முதலில் முயற்சி செய்த மொழி, ஃப்ரெஞ்ச். தில்லியிலுள்ள செளத் எக்ஸ்டென்ஷனிலுள்ள அலியான்ஸ் ஃப்ரான்ஸேஸில் சேர்ந்தேன். அது நடந்தது 25 ஆண்டுகளுக்கு முன்பு. ஆனால் அந்த இடத்தில் எனக்கு எதுவும் பிடிபடவில்லை.

சென்னையிலிருந்து தில்லி சென்ற புதிது. ஆங்கிலமும் இந்தியும் அரைகுறை. ஃப்ரெஞ்ச் சொல்லிக்கொடுத்துக்கொண்டிருந்த அந்த ஃப்ரெஞ்சுக்காரிக்கோ ஃப்ரெஞ்ச் மட்டுமே தெரிந்திருந்தது. அதனால் அவளுக்கு ஃப்ரெஞ்சை ஃப்ரெஞ்சில் மட்டுமே சொல்லிக் கொடுக்க வேண்டியிருந்தது. ஒரு கைக்குட்டையை எடுத்து முகத்துக்கு நேராக ஆட்டியபடி மூஷ்வா மூஷ்வா என்று கொஞ்சுவாள். அவள் என்ன சொல்ல வருகிறாள் என்று யாருக்கு தெரியும்? மேலும் ஒரு பிரச்னை என்னவென்றால், அங்கே ஃப்ரெஞ்ச் கற்றுக்கொள்ள வருபவர்கள் பெரும்பாலும் மேட்டுக்குடியைச் சேர்ந்தவர்களாதலால் ஏற்கெனவே பள்ளிக்கூடத்தில் ஃப்ரெஞ்ச் படித்தவர்களாயிருந்தனர். அதனால் அவர்களால் வெகு சுலபமாக அந்த ஃப்ரெஞ்சுக்காரி தனது மூக்கருகே கைக்குட்டையை ஆட்டியபடி சொல்லிய மூஷ்வா (mouchoir) என்ற வார்த்தையின் அர்த்தமே கைக்குட்டைதான் என்று தெரிந்தது. ஆனால் ஒன்று, அந்த ஃப்ரெஞ்சுக்காரி தில்லி ஸௌத் எக்ஸ்டென்ஷனில் இருக்கும் அலியான்ஸ் ஃப்ரான்ஸேஸின் வகுப்பறையில் 25 ஆண்டுகளுக்கு முன்பு கூறிய ஃப்ரெஞ்ச் வார்த்தைகள் எனக்கு இன்றும் ஞாபகம் இருக்கிறது என்பதிலிருந்து இரண்டு விஷயங்கள் புலனாகின்றன. 1. கோர்ஸிலிருந்து நின்று விடாமல் இன்னும் சிறிது காலம் பொறுமையாக இருந்திருக்கலாம். 2. ஒரு மொழியை அதே மொழியின் மூலம் பயிற்றுவிப்பதுதான் நல்லது.

ஸௌத் எக்ஸ்டென்ஷனிலிருந்து ஓடிய நான் சில ஆண்டுகள் கழித்து க்ரேட்டர் கைலாஷிலுள்ள அர்ஹெந்த்தீனிய (ஸ்பானிஷ் படித்ததால் ஏற்பட்ட விளைவு... என்ன செய்ய?) தூதரகத்தில் நடந்துகொண்டிருந்த ஸ்பானிஷ் வகுப்பில் சேர்ந்தேன். ஆனால் இது ஸௌத்தெக்ஸ் போல இல்லை. மிகவும் நெருக்கமாக இருந்தது மனசுக்கு. ராவ் என்பவர் தான் ஆசிரியர் என்பது ஒரு காரணம். தவிரவும் ஃப்ரெஞ்சைவிடவும் ஸ்பானிஷ் மொழியினுள்ளே வெகு இயல்பாகவும் லகுவாகவும் என்னால் பயணிக்க முடிந்தது. மூன்றாவது காரணம். ஸ்பானிஷ் மொழியின் அமைப்பு தமிழுக்கு நெருக்கமாக இருந்தது. ஆங்கிலம் அல்லது ஃப்ரெஞ்சைப்போல் ஸ்பானிஷ் உச்சரிப்பில் அமைதியாகும் எழுத்துக்கள் ஒன்றுகூட இல்லை. தமிழைப் போலவே எல்லா எழுத்துகளையும் உச்சரிக்க வேண்டும். அது ஒரு பெரிய ஆசுவாசம். அடுத்து அம்மொழியின் இசை. அது எனது நாடி நரம்புகளில் பரவி ஒருவித பரவச உணர்வை ஏற்படுத்தியது.

hola!

yo soy perumal.

Nosotrol somos de Argentina.

நோஸோத்ரோஸ் ஸோமோஸ் தெ அர்ஹெந்தீனா

Son las ocho.

ஸோன் லாஸ் ஓச்சோ.

La silla esta en la cocina.

லா ஸீய்யா எஸ்த்தா என் லா கொஸீனா.

Donde esta el lepiz?

தோந்தே எஸ்த்தா எல் லெப்பீஸ்?

இப்படியாகத் துவங்கி இரண்டு ஆண்டுகள் சென்ற வகுப்பு

Cuerpo de mujer, blancas colinas, muslos blancos,

te pareces al mundo en tu actitud de entraga.

Mi cuerpo de labriego salvaje te socava

y hace salater el hijo del fondo de la tierra[1].

குவெர்ப்போ தெ முஹேர், ப்ளாங்காஸ் கொலீனாஸ், மூஸ்லோஸ் ப்ளாங்கோஸ்,

தெ பரேஸெஸ் அல் முந்தோ எந்த்தூ அக்த்திதூத் தெ எந்த்ராகா.

மி குவெர்ப்போ தெ லாப்ரியகோ ஸால்வாஹே தெ சொக்காவா

யெ ஆஸே சலத்தர் எல் ஈஹோ தெல்ஃபோந்தோ தெ லா தியர்ரா.

என்று துவங்கும் பாப்லோ நெரூதாவின் இருபது காதல் கவிதைகள் வரை வந்தது. தட்டுத்தடுமாறி பேசவும், தட்டுத்தடுமாறி எழுதவும் கற்றுக்கொண்டேன். இன்னும் ஓரிரு ஆண்டுகள் தொடர்ந்திருந்தால் ஸ்பானிஷில் எழுத முயற்சித்திருக்கலாம். ஆனால் அதற்குள் ஸ்பானிஷையும் விட்டுவிட்டு ஓடும்படி ஆயிற்று. என்னோடு வாழ்ந்துகொண்டிருந்த எக்ஸ் நாம் சென்னைக்கே சென்றுவிடலாம் என்று நச்சரிக்க, நானும் அந்தப் பெண்ணுக்காக சென்னைக்குப் பெட்டியைத் தூக்கினேன். ஆனால் சென்னைக்கு வந்து சேர்ந்த அடுத்த ஆண்டே எக்ஸ் என்னை விவாகரத்து செய்தாள்.

எதைப் பற்றியும் புகார் செய்து பயனில்லை. மாடு மாதிரி தலையைத் தலையை ஆட்டாமல் மூளையைக் கொஞ்சம் பயன்படுத்தியிருக்க வேண்டும். அல்லது, சிவில் ஸப்ளைஸில் நான் காதலித்துக்கொண்டிருந்த மினியிடமிருந்தாவது மலையாளத்தைக் கற்றுக்கொண்டிருந்திருக்க வேண்டும். ஏழெட்டு ஆண்டுகள் என்னுடைய பக்கத்து இருக்கையில் இருந்தவள் மினி. எத்தனையோ முறை எனக்கு மலையாளம் கற்றுத்தருவதாகக் கூறியிருக்கிறாள். அவள் சொன்னதைக் கேட்டிருந்தால் பல ஆண்டுகளுக்கு முன்பே நான் ஒரு மலையாள எழுத்துக்காரனாயிருப்பேன். வாழ்வில் இத்தனை அவலங்களைச் சந்தித்திருக்காமல் இருந்திருக்கலாம்.

ஒரு முறை எழும்பூர் ரயில்வே ஸ்டேஷனில் ராமகிருஷ்ணன் சொன்னார்: நீங்கள் சென்ட்ரலுக்குப் பதிலாக எழும்பூரில் ஓட்டல் வைத்துவிட்டீர்கள் என்று. அப்போது அவருக்கு சென்னை சென்ட்ரலுக்குப் பக்கத்திலுள்ள ரயில்வே தலைமையகத்தில் வேலையாயிருந்தது. திங்கள் காலை சென்னை வந்து வெள்ளிக்கிழமை வரை வேலை செய்துவிட்டு வெள்ளிக்கிழமை இரவு பாலக்காடு திரும்புவார். எழும்பூர் ரயில் நிலையத்துக்கு அருகிலிருக்கும் ஆரெம்மெஸ் அலுவலகத்துக்குப் பக்கத்தில் கட்டப்பட்டிருக்கும் கெஸ்ட் ஹவுஸில்தான் தங்கல். மலையாளம் கற்றுக் கொள்வதற்காகவும், இந்த நாவலின் மொழி பெயர்ப்புக்காகவும் அடிக்கடி அந்த கெஸ்ட் ஹவுஸில் சந்திப்பது எங்களுக்கு வழக்கமாயிருந்தது. முதல் முறை பார்த்தபோது பயந்துபோனேன். தபால் இலாகா வெறும் கடிதங்களைத்தான் கையாள்கிறது. கடிதங்கள் கிழிந்துபோகலாம். காணாமலும் போகலாம்.

ஆனால் ரயில்துறை என்பது பல்லாயிரக்கணக்கான மக்களின் உயிருக்கு ஜவாப் சொல்ல வேண்டிய துறையல்லவா? அவ்வளவு முக்கியமான பணியைச் செய்துகொண்டிருக்கும் ரயில் துறையில் ஒரு முக்கியமான பொறுப்பிலிருக்கும் ராமகிருஷ்ணன் தங்கியிருந்த இடம் ஒரு dormitory. அங்கே அவருடைய living space என்பது ஒரு கட்டில். அவ்வளவுதான்.

நான் வேலூரில் வேலை பார்த்து வந்தபோது பல தினங்கள் மாலையில் சென்னை திரும்ப பிருந்தாவனையோ, கோவை எக்ஸ்பிரஸையோ பிடிக்க முடியாமல் ஏதாவது அவசர வேலை வந்துவிடும். அப்போதெல்லாம் பத்து பதினோரு மணி அளவில் பஸ்ஸில்தான் சென்னை திரும்புவேன். ஒரு மணிக்கு மேல் ப்ராட்வே வந்து சேர்ந்து, அண்ணா நகர் செல்ல இரவு பஸ் கிடைக்காவிட்டால் அங்கே தெருவோர ப்ளாட்ஃபாரத்தில் படுத்துக் கொள்வேன். ஐந்து மணிக்கு எழுந்து முதல் பஸ்ஸைப் பிடித்து அண்ணாநகர் செல்வது. இப்படியாகும் தினங்களில் மறுநாள் ஆஃபீஸ் போக வேண்டியிருக்காது. அது ஒரு ஆறுதல்.

‘இவ்வளவும் நீங்கள் எழும்பூரில் ஓட்டல் வைத்ததால் வந்தது’ என்றார் ராமகிருஷ்ணன்.

சென்ட்ரல் ஸ்டேஷனுக்கு உள்ளே ஒரு சரவண பவன் ஓட்டல் உள்ளது. குளிர்சாதன வசதியுண்டு. கூட்டம் எப்போதும் திமிறிக்கொண்டிருக்கும். உட்கார இடம் கிடைக்காது. எல்லா அய்ட்டமும் விலை அதிகம். ஆனால் சுவையாக இருக்கும். அதே போல் ஒரு ஓட்டல் எழும்பூர் ஸ்டேஷனிலும் இருக்கிறது. கூட்டமே இருக்காது. ஈ ஓட்டிக்கொண்டிருப்பார்கள். ராமகிருஷ்ணன் எதையும் ஒரு சமூகவியல் பார்வையோடு ஆய்வு செய்பவராதலால் இது விஷயம் குறித்தும் சிந்தித்தார்.

முதலில், சென்ட்ரல் ஸ்டேஷனின் பூகோள அமைப்பு. சென்ட்ரல் ஸ்டேஷனுக்கு வெளியே எந்தத் திக்கிலும் உணவகங்கள் கிடையாது. மட்டுமல்லாமல், மக்களை பீதியுறச் செய்யும் பிரும்மாண்டமான கட்டிடங்களே அந்த ஸ்டேஷனைச் சுற்றிலும் நிறைந்திருந்தன. இடதுபுறம், தென்னக ரயில்வே தலைமையகம். எதிரே ஆசியாவின் மிகப்பெரிய மருத்துவமனை. (விரைவில் இது, உலகிலேயே மிகப் பெரிய மருத்துவமனையாக மாறுவதற்கு வாய்ப்பிருக்கிறது.) மேலும், சாலையைக் கடப்பதற்கே சுரங்கப் பாதையில் இறங்க வேண்டும். இத்யாதி இத்யாதி. தவிர, சென்ட்ரலிலுள்ள ரயில்வே கேண்ட்டீனில் ஒரு தோசை 5 ரூ. அதுவும் மூன்றாவது மாடியில் உள்ளது. பாழடைந்த கோயிலின் கர்ப்பகிருஹத்தை நினைவூட்டும் விதமாக சற்று இருள் படர்ந்து இருக்கும். ஆனால் எழும்பூர் ரயில் நிலையம் என்பதே பல விதமான உணவங்களுக்கு மத்தியில்தான் அமைந்திருக்கிறது. எதிரே சுமார் இரண்டு டஜன் உணவகங்கள். சைவம், அசைவம், நடுத்தரம், உயர்தரம், அதி உயர்தரம், போதாக் குறைக்கு மதுக்கூடங்கள்.

இது மட்டுமல்லாமல், எழும்பூர் ரயில் நிலையத்துக்கு வருபவர்கள் யார்? தமிழ்நாட்டின் தென் மாநிலங்களுக்குச் செல்பவர்கள். அவர்கள் அநேகமாக இரவு உணவை வீட்டிலேயே முடித்துவிட்டு வந்து விடுவார்கள். அல்லது இட்லி, புளியோதரை, தயிர்சாதம், எலுமிச்சை சாதம் என்று கட்டி எடுத்துக்கொண்டு வருவார்கள். ஓட்டல் சாப்பாடு என்ற பேச்சுக்கே கிடையாது. ஆனால் சென்ட்ரலுக்கு வருபவர்கள் வடக்கே செல்பவர்கள்.

வசதியானவர்கள். இந்தக் காரணங்களினால்தான் சென்ட்ரலில் உள்ள சரவண பவன் கொழிக்கிறது. நீங்கள் எழும்பூரில் ஓட்டல் வைத்து விட்டீர்கள்.

Better late then never என்கிறபடி இப்போதாவது சென்ட்ரலில் கடை வைத்துவிடலாம் என்று திட்டமிட்டு மாயாவிடம் மலையாளம் கற்றுக்கொள்ள ஆரம்பித்தேன். ஆனால் அது Elfriede Jelinek எழுதிய 'பியானோ டீச்சர்' போல் 'மலையாள டீச்சர்' என்ற தலைப்பில் ஒரு நாவல் எழுதும் விதமாக மாறியதே ஒழிய மலையாள அட்சரத்தைக்கூட என்னால் கற்றுக்கொள்ள முடியவில்லை. அந்தக் கதையை நான் 'ராஸ லீலா'வில் விரிவாக எழுதியிருக்கிறேன். படித்துக்கொள்ளவும். மாயாவிடம் மலையாளம் கற்றுக்கொள்ள முயன்ற கதை தடம் புரண்டு போனதால், பிறகு ராமகிருஷ்ணனிடம் இது விஷயம் குறித்து அணுகினேன்.

ஃப்ரெஞ்ச், ஸ்பானிஷ், சம்ஸ்க்ருதம், தாய், அரபி போன்ற மொழிகளுடனான என் துவக்க கால உறவு வெகு சுமுகமாகவே இருந்தாலும் இடையில் ஒரு சுணக்கம் ஏற்பட்டு பிறகு அப்படியே நின்றுபோகும். திருமணமானதும் காதல் காணாமல் போய்விடுவதைப் போல; அல்லது, இப்படிச் சொல்லலாம்: பெண் வேட்டையில் ஒரு பெண்ணை வீழ்த்த முனையும்போது உள்ள தீவிரமும் கவனமும், அவளை வீழ்த்தியபின் காணாமல்போய் விடுவதைப் போல.

ஆனால் மலையாள லிபியுடன் எனக்கு ஆரம்பம் முதலே பிரச்னை ஏற்பட்டது. துவக்கத்தில் ஏற்பட வேண்டிய வழக்கமான பரிச்சயமும் சிநேகிதமும்கூட இல்லாமல் போயிற்று. ஒருவேளை வட்டத்தின் மீது எனக்குள்ள கிலி காரணமாகவும் இருக்கலாம். வட்டம் யோனி. கோடு லிங்கம். வட்டம் நீர், தனுமை, குளிர்மை, உயிர்மை. கோடு பாலை, வெம்மை, தனிமை. வட்டம் போகம். கோடு சுயபோகம். வட்டம் சிருஷ்டி. கோடு மலடு. மலையாள லிபி வட்டங்களாக இருந்தது என்னை மருளச் செய்தது. அந்த ஆனைக்கு வரும் [illegible] 'ஆ'வைப் பாருங்கள். எத்தனை வளைவுகள், நெளிவுகள்... இதே அரபியில் என்றால் ஒரு கோடு 'l'. ஆங்கிலத்தில் A. என்ன ஆனாலும் சரி, இந்தச் சுருள் வட்டங்களை நான் விடுவதாக இல்லை...

***

# கதை: இருபத்து இரண்டு

நான் ஸ்பானிஷ் கற்க ஆரம்பித்தது ஒரு அரசியல் செயல்பாடு. சே கெபாரா, விக்தோர் ஹாரா, புனுவல், பாப்லோ நெரூதா, டாக்டர் அயெந்தே என்று ஏராளமான பெயர்களை நீ இங்கே ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும். வெறும் பெயர்களல்ல. இவர்கள் யாரும் யாருக்கும் வெறும் பெயர்களாக இருக்க முடியாது. விரோதிகளுக்குக்கூட. இவர்களோடு, என்னைக் கவர்ந்த வேறொரு பெயரும் உண்டு. உலகில் இன்றளவும் அவ்வளவு பிரபலமாகாத பெயர். Lucia Sanchez Saornil. வெறும் லூஸியா சாஞ்ச்சேஸ் என்று நீ தேடினால் அந்தப் பெயரிலுள்ள ஒரு நடிகையின் அம்மணப் படங்களைத்தான் பார்க்கலாம். அடைப்புக் குறிக்குள் 'நிஜமான முலைகள்' என்று குறிப்பிடப்பட்டிருக்கும்.

ஆனால் இந்த லூஸியா சாஞ்ச்சேஸ் ஸ்பானிய விடுதலைப் போரில் பங்குபெற்ற ஒரு புரட்சிக்காரர். தான் ஒரு லெஸ்பியன் என்று அறிவித்த ஆரம்ப கட்டப் பெண்ணியவாதிகளில் ஒருவர். Erotic poet. எல்லாவற்றையும்விட முக்கியமாக ஒரு அனார்க்கிஸ்ட். அவருடைய 'முஹெரஸ்' கவிதை அப்போது என்னுடைய தேசிய கீதமாக இருந்தது.

Puño en alto mujeres de Iberia
hacia horizontes preñados de luz
por rutas ardientes,
los pies en la tierra
la frente en lo azul.
Afirmando promesas de vida
desafinamos la tradicion
modelemos la arcilla caliente
de un mundo que nace del dolor.
Que el pasado se hunda en la nada!
Que nos importa del ayer!
Queremos esscribir de nuevo
la palabra MUJER.
Puño en alto mujeres del mundo
hacia horizontes preñados de luz
por rutas ardientes

adelante, adelante.

பூஞோ என் ஆல்த்தோ முஹெரெஸ் தெல் முந்தோ

ஆஸியா ஓரிஸோந்த்தேஸ் ப்ரெஞாதோஸ் தெ லூஸ்

போர் ரூத்தோஸ் ஆர்தியெந்த்தேஸ்

அதெலாந்த்தே, அதெலாந்த்தே[1].

இதை என்னோடு சேர்ந்து வாய்விட்டு சொல்லிப்பார். ஸ்பானிஷின் அழகு தெரியும். எனக்கு அந்த மொழியின் 'ஞ' ஒலி வேறு பிடித்துப் போயிற்று. எஸ்பஞோல் (ஸ்பானிஷ்)... செஞோரா (Madam)... செஞோரீத்தா (Miss)...

ஸ்பானிஷில் எனக்குப் பிடித்த வார்த்தைகள் அநேகம்.

| | |
|---|---|
| nosotros - | நொஸோத்ரோஸ் (நாம்) |
| tierra - | தியெர்ரா (நிலம்,பூமி) |
| guerra - | கெர்ரா (போர்) |
| mujer - | முஹேர் (பெண்) |
| habano - | அபானோ (ஹவானா சுருட்டு) |
| mundo - | முந்தோ (உலகம்) |
| cerro - | செர்ரோ (குன்று) |
| alma - | அல்மா (ஆத்மா |
| amor - | அமோர் (காதல்) |
| tiempo - | தியெம்ப்போ (காலம்) |
| maricon - | மரிக்கோன் (ஹோமோசெக்ஷுவல்) |
| sueño - | ஸுவெஞோ (கனவு) |
| noche - | நோச்சே (இரவு) |
| donde - | தோந்தே (எங்கே) |
| niño - | நீஞோ (சிறுமி) |
| corazon - | கொராஸோன் (முலை) |
| vida - | வீதா (வாழ்க்கை) |

ஒரு காதலி கிடைத்தால் mi vida, mi vida, (my life) என்று கொஞ்ச வேண்டும். muneca mia (என் விளையாட்டுப் பொம்மையே) என்றும் கொஞ்சலாம்.

| | |
|---|---|
| nuestro - | நுவெஸ்த்ரோ (நம்முடைய) |
| muerte - | முவெர்த்தே (மரணம்) |
| viento - | வியெந்த்தோ (காற்று) |
| cielo - | ஸியெலோ (வானம்) |

solo entre muertos, para siempre solo[2] alone with the dead, alone in eternity

sangre - சாங்க்ரே (ரத்தம்)

திரும்பவும் நெரூதாவின் வரிகளே எனக்கு ஞாபகம் வருகின்றன.

Preguntareis por que su poesia

no nos habla del suelo, de las hojas,

de los grandes volcanes de su pais natal?

Venid a ver ala sangre por las calles,

por las calles!

(உங்களுக்குத் தெரியுமா, ஏன் அவனுடைய கவிதைகள் மண்ணைப் பற்றியும் இலைகளைப் பற்றியும் அவன் பிறந்த நாட்டின் பிரும்மாண்டமான எரிமலைகளைப் பற்றியும் பேசுவதில்லையென்று?

வந்து பாருங்கள் தெருக்களில் ரத்தத்தை,

வந்து பாருங்கள்

தெருக்களில் ரத்தத்தை,

வந்து பாருங்கள்

தெருக்களில் ரத்தத்தை!)

***

# கதை : இருபத்து மூன்று

தாமஸ் வர்கீஸ் என்ற ஒரு பாத்திரத்தைப் பற்றி எழுத ஆரம்பித்து பிறகு திசை மாறிச் சென்றுவிட்டேனே. ஞாபகம் இருக்கிறதா?

ஸர்க்கிள் ஆ..பீஸில் எல்லோரும் வர்கீஸை மென்ட்டல் என்றுதான் குறிப்பிடுவார்கள். ஆனால் நான் நினைப்பேன். அவர் ஒரு சாதாரண மென்ட்டல் அல்ல. சில மன நோயாளிகள் மிக மூர்க்கமாக நடந்துகொள்வார்கள். யாராவது அருகே வந்தால் கடித்துக் குதறி விடுவார்கள். கழுத்தை நெறித்துக் கொன்றுவிடுவார்கள். அதோடு, அவர்களுக்குப் பத்து ஆள் பலமிருக்கும். அம்மாதிரி நோயாளிகளை சங்கிலியால் பிணைத்து தனிக் கொட்டடியில் அடைப்பது வழக்கம். வர்கீஸ் அப்படிப்பட்ட ஒரு ஆள் என்பது என் எண்ணம். அந்த மாதிரி ஒரு ஆள் எப்படி சிவில் சர்வீஸ் எழுதி பயிற்சி முடித்து இந்தத் தபால் துறைக்கு வந்து சேர்ந்தார்? இந்தியாவில் நடக்கும் பற்பல அதிசய லீலா விநோதங்களில் இதுவும் ஒன்று.

வர்கீஸ் டீப்பியெஸ் - டைரக்டர் ஆ..ப் போஸ்டல் சர்விஸஸ் - பற்றி ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கதை பரவிக்கொண்டிருந்தது. ஒரு நாள் - ..பைலில் ஏதோ விசாரிக்க வேண்டுமென்று ஹெட் க்ளார்க் ஒருத்தரை வரவழைத்திருக்கிறார். அந்த ஹெட் க்ளார்க்குக்கு போலீஸ்காரர்களைப் போன்ற பெரிய தொப்பை உண்டு. தொப்பையின் காரணமாகவோ அல்லது சட்டை நைந்ததனாலோ சட்டையின் வயிற்றுப் பகுதியில் பட்டன் இல்லை. மேலும், அந்த ஹெட் க்ளார்க் மூன்று நாட்களுக்கு ஒரு முறைதான் முகச்சவரம் செய்துகொள்ளும் பழக்கமுள்ளவர். தாமஸ் வர்கீஸ் அந்த ஹெட் க்ளார்க்கை அழைத்த தினம், துரதிருஷ்டவசமாக அவர் முகச்சவரம் செய்த மூன்றாவது தினம். நீ என்ன மனிதனா காட்டுமிராண்டியா. காட்டுமிராண்டிதான் இப்படி மயிரோடு இருப்பான். ஏன் சட்டையில் பட்டன் இல்லை. உனக்கு ஒ..ய்ப் உண்டா இல்லையா. Are you a widower. இப்படி ஒரு பத்து நிமிடத்திற்கு parade நடந்திருக்கிறது.

மற்றொரு நாள். வர்கீஸின் ஸ்டெனோ சௌரிராஜன். சீனியர் ஸ்டெனோ. கோயம்புத்தூர் மண்டலத்தில் வேலை பார்த்து GradeII ஸ்டெனோவாக பதவி உயர்வு பெற்று சென்னை மண்டலத்துக்கு வந்திருப்பவர். ஒரு நாள் தாமஸ் வர்கீஸின் உறவினர் என்று ஒருவர் அவரைப் பார்க்க வந்திருக்கிறார். அப்போது வர்கீஸ் இன்னும் வந்திருக்கவில்லை. அதனால் அவருடைய வீட்டுத் தொலைபேசி எண்ணை வாங்கிக்கொண்டு சென்றுவிட்டார் வந்தவர். சௌரிராஜன் ஒரு பணிவுள்ள, நேர்மையான ஊழியர். தாமஸ் வர்கீஸ் வந்ததும் இந்த விஷயத்தைத் தெரிவித்தார்.

தபால் இலாகா என்பது மக்கள் சேவையில் ஈடுபட்டுள்ள துறை என்பதால், CBI, RAW போன்ற துறைகளைப் போல் அல்லாமல் இலாகா அதிகாரிகளின்

அலுவலகத் தொலைபேசி எண், வீட்டுத் தொலைபேசி எண், முகவரி எல்லாம் அடங்கிய குறிப்பேடு ஒன்றை இலாகாவே ஆண்டுதோறும் வெளியிட்டு முக்கியஸ்தர்களுக்கு அளித்து வருவதால் அதில் ஒன்றும் ரகசியம் இல்லையென்பதால்தான் எந்தத் தயக்கமுமின்றி தாமஸ் வர்கீஸின் வீட்டுத் தொலைபேசி எண்ணை அந்த நபரிடம் கொடுத்திருக்கிறார் சௌரிராஜன்.

விஷயத்தைக் கேள்விப்பட்டு கோபத்தின் உச்சக்கட்டத்துக்கே சென்ற வர்கீஸ், சௌரிராஜனை இடியட், ஸ்டுப்பிட், மண்டையில் மூளை இருக்கிறதா, அல்லது மலம் இருக்கிறதா, குப்பை பொறுக்குவதற்குக்கூட லாயக்கில்லாத உன்னைப் போன்ற மரமண்டைகளையெல்லாம் வைத்துக்கொண்டிருப்பதால்தான் இந்த டிபார்ட்மெண்ட் இப்படி நாசமாகப் போய்க்கொண்டிருக்கிறது, உன்னைப் போன்ற பொறுப்பில்லாத ஆட்களை நடுத்தெருவில் கட்டி வைத்து உதைக்க வேண்டும், உன்னைப் போன்ற மடையர்கள் இருக்கும் இந்த நாட்டுக்கு ஜனநாயகம் ஒத்துவராது, உடனடியாக நீ கோயம்புத்தூர் சென்று உன்னுடைய ஆஃபீஸில் ரிப்போர்ட் செய், இனிமேல் ஒரு நிமிடம்கூட இங்கே இருக்கக்கூடாது, இதுதான் நான் உன்னைப் பார்ப்பது கடைசி தடவையாக இருக்க வேண்டும், ஓடிவிடு என் கண் முன்னாலிருந்து என்று ஆங்கிலத்தில் உச்ச ஸ்தாயியில் கத்தியிருக்கிறார். இவ்வளவும் க்ரூப்-Dயின் முன்னே. சௌரிராஜன் ஒரு அப்பாவி பிராமணர். சற்றே அதிர்ந்து பேசினாலும் மிரண்டுவிடுவார். நாம் செய்தது மகா பெரிய தவறு என்பதை உணர்ந்த அவர் மிகுந்த குற்றவுணர்வுடன் தன் இருக்கைக்கு வந்து வேலையைத் தொடர்கிறார்.

அரை மணி நேரம் கழித்து தன் சேம்பரை விட்டு வெளியே வந்த தாமஸ் வர்கீஸ், சௌரிராஜன் என்ற அற்ப ஜந்து தன் பேச்சுக்கு சிறிதும் மரியாதை தராமல், இன்னமும் இந்த அலுவலக வளாகத்தைவிட்டு வெளியேறாமல் தன் இருக்கையிலேயே அமர்ந்திருப்பதைப் பார்த்து விறுவிறுவென்று சௌரிராஜனின் இருக்கைக்கு வந்து அவரது பின்னங்கழுத்தில் கையை வைத்துத் தள்ளிக்கொண்டு வந்து காரிடாரில் நெட்டித் தள்ளிவிட்டு, இந்த வளாகத்திலேயே நான் உன்னைப் பார்க்கக் கூடாது என்று கத்திவிட்டுப் போய்விட்டார். தள்ளிய வேகத்தில் விழுந்திருந்தால் முகம் பெயர்ந்திருக்கும் என்றார்கள் பார்த்தவர்கள். இரண்டு மூன்று அடிகள் தத்தளித்து, தடுமாறி, பின் சமாளித்து எழுந்துகொண்டார் சௌரிராஜன்.

அரசு அலுவலகங்களில் அடிக்கடி புழங்கும் ஒரு சொல் வழக்கு உண்டு. உன்னுடைய வயது என்னுடைய சர்வீஸ் என்று. பொதுவாக சீனியர் ஆட்கள் ஜூனியர்களைப் பார்த்துக் கூறுவது. அதன்படி பார்த்தால், சௌரிராஜன் தபால் துறைகளில் போட்டிருக்கும் 36 வருட சர்வீஸைவிட தாமஸ் வர்கீஸின் வயது 10 ஆண்டுகள் கம்மி. அதாவது, சௌரிராஜன் இன்னும் 4 ஆண்டுகளில் பதவி ஓய்வு பெறப்போகிறவர். வர்கீஸின் வயது 26.

இப்போது நான் குடித்திருக்கிறேன். ஆறு லார்ஜ். அதனால்தான் தாமஸ் வர்கீஸை அவர் இவர் என்று மரியாதையாகக் குறிப்பிடுகிறேன். இல்லாவிட்டால் அம்மாதிரி மிருகத்தையெல்லாம் அவன் இவன் என்றுதான் சொல்லவேண்டும். மாலை ஆறு மணிவரை அந்தக் காரிடாரிலேயே அழுதபடி நின்றுகொண்டிருந்தார் சௌரிராஜன். இவ்வளவும் நடந்த சம்பவங்கள். கற்பனைக் கதை அல்ல. ஸர்க்கிள்

ஆ∴பீஸிலுள்ள தூசு துரும்புக்குக்கூட இது தெரியும். யாராலும் எதுவும் செய்ய முடியவில்லை.

ஸ்டெனோக்களுக்கு யூனியன் கிடையாது. அப்படியே இருந்தாலும் ஒன்றும் செய்ய முடியாது. ஏனென்றால், அப்போது சீ∴ப் ப்பீயெம்ஜியாக இருந்தவர் வர்கீஸை விட பத்து மடங்கு ஜாஸ்தி.

வர்கீஸ் பாட்டுக்கு கோயம்புத்தூரில் சென்று ஜாய்ன் பண்ணிவிடு என்று சுலபமாகச் சொல்லிவிட்டார். கையில் எந்த பேப்பரும் இல்லாமல் போய் ஓரிடத்தில் ஜாய்ன் பண்ணிவிட முடியுமா? ஒன்றுமே புரியாமல் நின்றுகொண்டிருந்தார் சௌரிராஜன்.

அந்தண்டை இந்தண்டை நகரவில்லை. மாலை ஆறு மணி வரை நின்ற இடத்திலேயே நின்றுகொண்டிருந்தார். அன்றைய தினம் ஏதோ இன்ஸ்பெக்ஷனுக்காக வர்கீஸ் வெளியே போய்விட்டார் போல. ஆறு மணிக்குத்தான் திரும்பினார். என்னுடைய சந்தேகம் என்னவென்றால், அவர் ஒருவேளை அன்று அலுவலகம் திரும்பாமல் வீட்டுக்குப் போய்விட்டு மறுநாள் வந்திருந்தால் சௌரிராஜன் அந்த இரவு முழுவதும் அந்த காரிடாரிலேயே நின்றிருந்திருப்பாரா என்பதுதான்.

வர்கீஸை ஏன் எல்லோரும் மென்ட்டல் என்கிறார்கள் என்றால், காரிடாரில் நின்றுகொண்டிருந்த சௌரிராஜனைப் பார்த்து 'என்ன மேன், இன்னும் இங்கேயே நின்றுகொண்டிருக்கிறாய்? கோயம்புத்தூரில் போய் ஜாய்ன் பண்ணச் சொன்னேனே?' என்று சிரித்தபடி கேட்டுவிட்டு, 'ஓ.கே... இனிமேல் இப்படிச் செய்யக்கூடாது, கம்...' என்று சொல்லி அவர் தோள் மீது கை போட்டபடி உள்ளே அழைத்துச் சென்றிருக்கிறார். அடிக்கிற கைதான் அணைக்கும்! அந்த ஆளிடம் போய் நான் ஒருமுறை மாட்டிக்கொள்ளும்படி ஆயிற்று. சௌரிராஜன் ஒரு நாள் விடுப்பு எடுத்திருந்தார். ஸ்டெனோஸ் ப்பூலில் இருந்த என்னை வர்கீஸிடம் அனுப்பி வைத்தார் ஏப்பீயெம்ஜி (ஸ்டா∴ப்) என்று அழைக்கப்படுகிற அஸிஸ்டெண்ட் ப்பீயெம்ஜி. 'நானே ஒரு மென்ட்டல், இப்போது இரண்டு மெண்ட்டலும் சந்தித்துக் கொண்டால் என்ன ஆகும்?' என்று சக ஸ்டெனோக்களிடம் புலம்பிக்கொண்டே வர்கீஸிடம் சென்றேன்.

முதல் வேலையாக ஒரு இருபது தொலைபேசி எண்களைக் கொடுத்து கனெக்ட் பண்ணச் சொன்னார். என்னுடைய துரதிருஷ்டம், ஒன்றிரண்டு எண்கள்தான் கிடைத்தன. மீதி எண்கள், ஒன்று, அடித்துக்கொண்டேயிருந்தன; அல்லது, நீண்ட நேரம் எங்கேஜ்ட் ஆக இருந்தன. விடாமல் சுழற்றிக்கொண்டேயிருந்தேன். பிறகு, வலியெடுத்த விரல்களை சொடக்கு முறித்தேன். சரியாக அந்த நேரம் பார்த்து நான் அமர்ந்திருந்த இடத்துக்கு வந்தார் வர்கீஸ். 'நினைத்தேன். நான் நினைத்தது சரியாகப் போயிற்று. இடியட். இங்கே என்ன ஜாலியாக உட்கார்ந்து விரல்களை மஸாஜ் செய்து கொண்டிருப்பதற்காகவா உன்னை என்னிடம் அனுப்பினார்கள்? உன்னை மற்ற அதிகாரிகள் மாதிரி நான் சஸ்பெண்ட் எல்லாம் செய்ய மாட்டேன். செருப்பால் அடித்து இங்கிருந்து விரட்டுவேன்' என்று கத்தினார்.

செருப்பு என்ற வார்த்தையைக் கேட்டதும் நான் என் நிலையை மறந்தேன். அப்போது அந்த வெறி நாய்க்குச் சமமான ஒரு வெறி நாயாக மாறி நான் உதிர்த்த அவ்வளவு வார்த்தைகளையும் இங்கே உன்னிடம் சொல்ல

முடியாது. எப்படி ஆரம்பித்தேன் என்று மட்டும் சொல்கிறேன், கேள். ‘ங்கோத்தா, டேய் வேசி மகனே... ங்கொம்மாப்...’ தமிழில் உள்ள அத்தனை வசை வார்த்தைகளையும் கொட்டினேன். என் கைகால்கள் நடுங்கிக்கொண்டிருந்தன. அடித்திருப்பேன் என்று நினைக்கிறேன். அய்யாசாமி ஓடிவந்து என்னைப் பிடித்துக்கொண்டார். வர்கீஸின் ஆர்டர்லி. திமிறிக்கொண்டு அவரைத் தள்ளிவிட்டு ஃபோனை எடுத்து ஓங்கித் தரையில் வீசினேன். துண்டு துண்டாக உடைந்து சிதறியது. வர்கீஸ் விருட்டென்று சேம்பருக்குள் நுழைந்தார். அவரைத் துரத்திக்கொண்டு ஓடிய நான் ‘டேய்... sonofabitch... நீ ஒரு ஆண்பிள்ளை என்றால் என் மீது கை வைடா. வேணான்டா.. அட்லீஸ்ட் என் மேல ஒரு டிபார்மென்ட்டல் ஆக்ஷன் எடுடா பாப்போம். I will crush your balls...’ அந்தக் கட்டிடமே அதிரக் கத்திவிட்டு சேம்பரின் கதவு உடைகிறாற்போல அதை அறைந்து சாத்திவிட்டு நேராக ஸ்டெனோஸ் ப்பூலுக்கு வந்துவிட்டேன்.

பின்னாளில் நான் ஒரு பிரபலமான எழுத்தாளனாக அறியப்பட்ட பிறகு, போலீஸ் துறையைச் சேர்ந்த உயர் அதிகாரி ஒருவர் எனக்கு நெருங்கிய நண்பரானார். அவர் சொல்லுவார், இன்றைக்கு தாதாவாக அறியப்படுகிற அத்தனை பேருமே அடிப்படையில் பெரிய கோழைகள் என்று. விசாரணைக் கைதிகளாகக் கொண்டுவரப்படும்போது கையெடுத்துக் கும்பிட்டு அழுவார்களாம். ஆள் அம்புகளுடன் சென்று மற்றவர்களின் கைகால்களை எடுக்கும் அவர்கள் - தேவைப்பட்டால் உயிரையும் எடுப்பவர்கள் - விசாரணையின்போது ஒரு அறை விட்டாலே போதும், போலீஸ்காரனின் காலில் விழுந்து கதற ஆரம்பித்துவிடுவார்களாம். அவர்களுடைய பலமே, அடியாட்கள்தான். தனிமைப்படுத்திவிட்டால் அவர்களைப் போன்ற கோழைகள் யாருமே இல்லை.

அதிலும் ஒரு பிரபல தாதா லாக்கப்பில் தன்னைத் தனியாக அடைக்க வேண்டாம், மற்றவர்களுடன் அடையுங்கள் என்று கெஞ்சுவாராம். தனியாகப் படுக்க அவ்வளவு பயம்.

(ஆனால் எம்மெல் தோழர்கள், மத ரீதியான தீவிரவாதிகள் போன்றவர்களை என்ன செய்தாலும் பேச வைக்க முடியாது என்று சொன்னார் அந்தப் போலீஸ் அதிகாரி.) தாமஸ் வர்கீஸ் அந்த தாதாக்களைப் போன்றவரென்று தெரிந்தது. அவர் அந்த விஷயத்தை ஏன் உயர் அதிகாரிகளிடம் கொண்டுசெல்லவில்லை என்பது இன்றுவரை எனக்குப் புரியாத புதிர்.

ஆனால் நான் இந்தச் சம்பவத்தைக் கதையாக எழுதி வெகுஜனப் பத்திரிகையில் பிரசுரித்தேன். ஓரிரு வாரங்கள் ஆஃபீஸ் முழுக்கவும் அந்தக் கதை பற்றிய பேச்சாகவே இருந்தது.

‘பெருமாளுக்கு ஏதோ சீரியஸான மனச் சிதைவு நோய் இருக்க வேண்டும். அவரை ஒரு ஸைக்கியாட்ரிஸ்ட்டிடம் காண்பிக்கச் சொல்லுங்கள்’ என்று தாமஸ் வர்கீஸ் மற்ற ஸ்டெனோக்களிடம் கூறியதாகப் பிறகு கேள்விப்பட்டேன்.

அதற்குப் பிறகு நடந்தது. தமிழ் சினிமாவில் காணும் திருப்பம். என்னை எங்கே பார்த்தாலும் ஏதோ நெருங்கிய சிநேகிதனைப் போல் குசலம் விசாரிக்க ஆரம்பித்தார் தாமஸ் வர்கீஸ்.

தாமோதரன் என்று ஒரு ஸ்டெனோ. 50 வயது இருக்கும். இவரைப் போன்ற திறமைசாலியான ஸ்டெனோ தமிழ்நாடு ஸர்க்கிளிலேயே வேறு யாரும் இல்லை என்று பெயரெடுத்தவர். ஸ்டெனோவாகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு ஒரு நிமிடத்திற்கு 80 வார்த்தைகள் டிக்டேஷன் எடுக்க முடிந்தால் போதும். தேர்வில் பத்து நிமிடத்திற்குக் கொடுப்பார்கள். 800 வார்த்தைகளையும் முக்கால் மணி நேரத்தில் டைப் செய்து தரவேண்டும். இதில் 2% தவறுகள் அனுமதிக்கப்படும். இவ்வளவுதான் விஷயம். ஆனால் இந்த அய்ப்பீயெஸ் அதிகாரிகளோ ஒரு ஸ்டெனோ என்பவர் ஒரு நாளில் 24 மணி நேரமும் தனக்கு வேலை செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள். கேட்டால் FRSRஐ (Fundamental Rules and Supplementary Rules) மேற்கோள் காட்டுவார்கள். வேதங்களை ஆதியிலிருந்து அந்தம் வரை, அந்தம் முதல் ஆதி வரை சொல்லி அர்த்தமும் கூறுபவர்களை கனபாடிகள் என்று அழைப்பார்கள். அதுபோல் இந்த எஃப்பார் எஸ்ஸாரை ஆதியோடு அந்தமாக, அந்தம் முதல் ஆதியாக உருப்போட்டு வைத்திருப்பவர்களும் சிலர் உண்டு. அத்தகைய எஃப்பார் எஸ்ஸார் கனபாடிகளில் ஒருவரான ரங்க ராமானுஜத்திடம் வரதன் மூலம் ஒரு அரசு ஊழியர் 24 மணிநேரமும் அரசு ஊழியர்தான் என்று எந்த ரூலிலாவது உள்ளதா என்று விசாரித்தேன். உள்ளது என்றார் ரங்க ராமானுஜம். எந்த ரூல் என்று கேட்டபோது அப்புறம் சொல்கிறேன் என்று சொல்லிவிட்டாராம். இதேபோல் மற்றொரு எஃப்பார் எஸ்ஸார் கனபாடிகளுள் ஒருவரான தாமோதரனிடம் கேட்டபோது அப்படியெல்லாம் எந்த ரூலும் இல்லையென்றார். கடவுள் என்பவர் உருவமாகவும் அருவமாகவும் இருந்து, ஆனால் நேரில் ஆஜராகாமல் கண்ணுக்குப் புலனாகாமலேயே நம்முடைய பிராணனை வாங்கிக்கொண்டிருப்பதைப்போல்தான் இந்த 24 மணிநேர கண்ணுக்குப் புலனாகாத ரூலும் என்று தோன்றுகிறது. ஏனென்றால் தபால்துறை என்பது ராணுவம், போலீஸ், மருத்துவம் போன்ற அத்தியாவசியப் பணி அல்லவே?

இந்தப் பிரச்னைக்கு நான் அப்புறம் வருகிறேன். இப்போது தாமோதரன். எஃப்பார் எஸ்ஸாரில் இருப்பதாகச் சொல்லப்படுகிற கண்ணுக்குப் புலனாகாத ரூல் சொல்கிற பிரகாரம் 24 மணிநேரமும் தபால் துறைக்காகத் தன்னை ஒப்புக்கொடுத்தவர் இந்த தாமோதரன். சனிக்கிழமை வரச் சொன்னால் வருவார். ஞாயிற்றுக்கிழமை வரச்சொன்னால் வருவார். இரவு பத்து மணி வரை இருக்கச் சொன்னாலும் இருப்பார். அதே சமயம் நல்ல புத்திசாலியும்கூட. தில்லி டைரக்ட்ரேட்டுக்கு இன்ன மாதிரி ஒரு லெட்டர் அனுப்ப வேண்டும் என்று டிக்டேட் பண்ணாமலேயே வெறும் வாய் வார்த்தையால் சொன்னால் போதும். கண் மூடிக் கண் திறப்பதற்குள் கடிதம் தயார். சொல்ல மறந்துவிட்டேன். நிமிடத்திற்கு 200 வார்த்தைகள் டிக்டேஷன் எடுக்கக்கூடியவர். டைப்பிங் ஸ்பீட் சுமார் 80 வார்த்தைகள். இவரைப் போன்ற ஆசாமிகளை நீ தில்லி பாராளுமன்றத்திலும், சீனியர் மந்திரிகளுக்கு அந்தரங்க உதவியாளர்களாகவும்தான் பார்க்க முடியும். அவர்களுக்கெல்லாம் எக்கச்சக்கமான சலுகைகள். பெரிய சம்பளம். பிரதம மந்திரியின் Personal Branchவரை செல்ல முடியும். இந்திரா காந்திக்கு ஸ்டெனோவாக இருந்த ஆர்.கே.தவன் பிறகு எம்பீயாகி, பின்னர் மந்திரியாகவும் ஆனாரே... அந்த அளவுக்குச் செல்ல முடியும். தேவை: புத்திக்கூர்மை, நிமிடத்திற்கு 200 வார்த்தைகள் சுருக்கெழுத்தில் எடுக்கக்கூடிய திறமை. நிமிடத்திற்கு 100 வார்த்தைகள் தட்டச்சு செய்யும்

திறமை. சொந்தமாக ஆங்கிலம் எழுதும் திறமை.

அடப்போடா அறிவு கெட்டவனே... சொந்தமாக ஆங்கிலம் எழுதும் திறமையிருந்தால் நான் ஏன் இந்த டிபார்ட்மென்ட்டில் வந்து மாமா வேலை பார்க்கிறேன்? நானே என் நாவலை ஆங்கிலத்தில் எழுதிவிடுவேனே? ஆங்கிலத்தில் எழுதினால் - அல்லது, மொழி பெயர்த்தால் - என் நாவலின் விலை என்ன தெரியுமா? ஒரு கோடி ரூபாய். குறைந்தபட்சம். குறைந்தபட்சம்.

மொராக்கோ தேசத்தை எத்தனை பேருக்குத் தெரியும்? அங்கே அரபி மொழியில் எழுதின இரண்டு டஜன் எழுத்தாளர்களின் பெயர்கள் மட்டும் ஏன் இன்று உலக இலக்கிய அரங்கில் நில நடுக்கத்தை ஏற்படுத்திக்கொண்டிருக்கிறது? துருக்கியின் ஓரான் பாமுக் பற்றி ஏன் உலகம் முழுவதிலும் உள்ள பத்திரிகைகள் - இந்தியாவின் இந்து, டெக்கான் க்ரானிக்கிள் உட்பட - பக்கம் பக்கமாக எழுதுகின்றன? அநேகமாக இந்த கண்ணாயிரம் பெருமாள் நாவல், புத்தகமாக வெளிவருவதற்கு முன்பேகூட அவர் நோபல் பரிசைப் பெற்றுவிடக்கூடும். அல்பேனியா. அல்பேனிய மொழியில் எழுதும் இஸ்மாயில் காதர். அவருடைய ஒரே ஒரு நாவல் ஃப்ரெஞ்ச்சில் மொழிபெயர்க்கப்பட்டது. இன்று அவர் ஐரோப்பா முழுவதும் பிரபலமாகிவிட்ட ஒருவர். இவ்வளவுக்கும் அவருடைய புதினங்கள் அல்பேனிய மொழியிலிருந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்படவில்லை. ஃப்ரெஞ்ச்சிலிருந்துதான் மொழிபெயர்க்கப்படுகின்றன. இவர்களெல்லாம் உலக இலக்கிய வரைபடத்தில் இடம் பெறும்போது, தமிழிலிருந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்ட ஒருவருடைய பெயரைக்கூட ஏன் அதில் காணோம்? மாவட்ட அளவில் ஆடுபவர்களால் எப்படி இன்ட்டர்நேஷனல் போட்டிகளில் ஆட முடியும் என்பதுதான் விஷயம். அப்படி ஆடக்கூடியவர்கள் இங்கே உண்டு. ஆனால் அவர்கள் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்படவில்லை. அவர்களுக்கு ப்ரமோட்டர்களும், விளம்பர ஏஜெண்ட்டுகளும் இல்லை.

எங்கோ ஆரம்பித்து எங்கோ வந்துவிட்டேன் இல்லையா? தண்ணியடித்துவிட்டுப் பேசினால் இது ஒரு பிரச்னை. கோர்வை போய் விடுகிறது.

ஆம். சரளமாக ஆங்கிலம் எழுத முடிந்தால் நான் ஏன் இப்படி எவனெவனுக்கோ எடுபிடி வேலை செய்துகொண்டிருக்க வேண்டும்? ஆனால் தாமோதரன் அப்படியல்ல. ஒரு அய்ப்பீயெஸ் அதிகாரியின் வேலை அவ்வளவையும் அவரே சுயமாகச் செய்துவிடக்கூடியவர். பிறகு ஏன் அவர் அய்ப்பீயெஸ் ஆகவில்லை? எனக்குத் தெரியாது. அதெல்லாம் என் வேலைக்கு அப்பாற்பட்ட விஷயங்கள்.

இவ்வளவுக்கும் மிகவும் அடக்கமானவர் வேறு. 25 ஆண்டுகள் எடுபிடி வேலை செய்து அவருடைய முதுகு மட்டுமல்ல, மொத்த பர்ஸனாலிட்டியே கூன் விழுந்துபோயிருந்தது.

'இந்த தாமஸ் வர்கீஸிடம் பெரிய பிரச்னையாக இருக்கிறது. எந்த ஸ்டெனோவைப் போட்டாலும் திருப்பி அனுப்பிவிடுகிறார்' என்று விசனப்பட்ட ஏப்பியெம்ஜி (ஸ்டாஃப்) இதை ஒரு முடிவுக்குக் கொண்டுவர வேண்டுமென்று தாமோதரனை அவரிடம் அனுப்பி வைத்தார். அப்போது

தாமஸ் வர்கீஸ் டீப்பியெஸ். ஃபாரென்போஸ்ட்.

முதல் நாள்.

‘கனெக்ட் மீ டு கமிஷனர்.’

இது வர்கீஸ்.

யார் யாரிடமோ இருந்து நற்பெயர் ஈட்டிய தாமோதரனுக்கே கிலியில் பல் கிட்டிவிட்டது. பிறகென்ன, வெறும் கமிஷனர் என்றால் என்ன அர்த்தம்? போலீஸ் கமிஷனரா? கார்ப்பொரேஷன் கமிஷனரா? இன்கம் டாக்ஸ் கமிஷனரா? எந்தக் கமிஷனரைச் சொல்கிறார்? கேட்கவும் பயம். கேட்காமலிருந்தாலும் காரியம் நடக்காது. பொதுவாக கமிஷனர் என்றால் போலீஸ் கமிஷனரைத்தான் சொல்வார்கள். ஆனால் டீப்பீயெஸ் போன்ற சிறிய பதவியில் உள்ளவர் நேரடியாக போலீஸ் கமிஷனரிடம் பேச முடியுமா? சரி. தப்பாகச் செய்வதை விட கேட்டே விடலாம் என்று பஸ்ஸரை அழுத்தி எதிர்முனையில் வந்த வர்கீஸிடம் ‘சார், எந்த கமிஷனர் சார்?’ என்று வினயமாகக் கேட்டிருக்கிறார் தாமோதரன்.

இந்த இடத்தில் ஒரு விஷயம். அடிமைத்தனத்தின் நிழல் படிந்த இம்மாதிரி அரசுத் துறைகளில் நீ உன்னுடைய வாக்கியங்கள் அத்தனையும் சார்-இல் ஆரம்பித்து சார்-இல்தான் முடிக்க வேண்டும்.

உடனே தாமோதரனை நேரில் கூப்பிட்ட வர்கீஸ் ‘உனக்கு மண்டையில் இருப்பது என்ன, மூளையா களிமண்ணா? உன்னை மாதிரி ஒரு கழுதையைப் பற்றி ஆகா ஓகோ என்று சொன்னாரே அந்த போண்டா? வேலையை ஒழுங்காகச் செய்யாமல் எல்லோரையும் சம்ச்சா அடித்தே நல்ல பெயர் எடுத்திருக்கிறாயா? என்னையும் மற்ற அதிகாரிகள் மாதிரி போண்டா என்று நினைத்தாயா?’ என்று பலவாறாக கத்திவிட்டு ‘என் பெயர் என்ன?’ என்று கேட்டிருக்கிறார்.

ஒருகணம் ஒன்றும் புரியாமல் விழித்த தாமோதரன் சரி, பேய்க்கு வாழ்க்கைப்பட்ட பிறகு புளியமரத்தைக் கண்டு பயப்பட முடியுமா என்றபடி சுதாரித்துக்கொண்டு ‘மிஸ்டர் தாமஸ் வர்கீஸ் சார்’ என்று சொல்கிறார்.

‘நோ தாமஸ் வர்கீஸ் சார். ஐ யாம் நாட் தாமஸ் வர்கீஸ் சார். ஐ யாம் ஜஸ்ட் தாமஸ் வர்கீஸ். இந்த சார் மோர் சம்ச்சாகிரியையெல்லாம் உன் போண்டா வடை அதிகாரிகளிடம் வைத்துக்கொள்... ஓக்கே?’

‘யெஸ் சார்.’

‘ஏய் இடியட். சொன்னா புரியாதா மேன் உனக்கு? ஜஸ்ட் ஸே யெஸ்.’

‘யெஸ்.’

‘என் பதவியின் பெயர் என்ன?’

‘டீப்பியெஸ்.’

‘You bloody shit head... Don't you have the brain to tell your boss's post correctly?’

‘சாரி சார். டீப்பியெஸ் ஃபாரின் போஸ்ட்.’

‘ஃபாரென் போஸ்ட் என்றால் என்ன அர்த்தம்? நாம் என்ன வேலை செய்கிறோம்? திருடனைப் பிடிக்கிறோமா? இன்கம் டாக்ஸ் வசூலிக்கிறோமா? உங்கள் ஊர் மகா ஜனங்களுக்கு தண்ணீர் சப்ளை

செய்கிறோமா? நாம் என்ன வேலை செய்கிறோம்? சொல்.’

‘வெளிநாட்டுத் தபால்களை...’

‘அப்படியானால் நான் எந்த கமிஷனருடன் பேச வேண்டியிருக்கும்?’

‘சாரி சார். கஸ்டம்ஸ் கமிஷனர் சார்.’

‘இன்னொரு முறை சார் சொன்னால் நான் உன்னை வீட்டுக்கு அனுப்பிவிடுவேன்.’

‘......’

‘ஒரு ஃபோன் காலுக்கே என்னுடைய அரை மணி நேரத்தை வீணாக்கிவிட்டாயே? நான் என்ன உனக்கு ட்ரெய்னிங் கோர்ஸா நடத்துகிறேன்?’

அடுத்த நாள்.

ஏதோ ஒரு கடிதத்தை டிக்டேட் செய்துவிட்டு உடனே வேண்டும் அவசரம் என்று சொல்கிறார் தாமஸ் வர்கீஸ்.

தாமோதரனுக்கு இதெல்லாம் பிரச்னையில்லை. மட்டுமல்லாமல் nil mistakeஇல் டைப் செய்யக்கூடியவர். அதனால் வர்கீஸை சற்று குஷிப்படுத்திவிடலாம் என்ற எண்ணத்தில் டைப் செய்ய ஆரம்பிக்கிறார். எவ்வளவு வேகமாக டைப் செய்தாலும் அந்த வேகமே தெரியாமல் நளினமாக அடிப்பார். அப்போது ஒரு ஃபோன் கால். அந்த வாக்கியத்தை முடித்துவிட்டு எடுப்பதற்குள் உள்ளேயிருந்து பஸ்ஸர். உடனே உள்ளே வரச் சொல்லி.

‘உனக்கு என்ன மேன் paralytic attackஆ?’

‘இல்லையே சார்...’

‘பிறகு ஏன் இரண்டு தடவைக்கு மேல் மணியடித்தும் ஃபோனை எடுக்கவில்லை?’

ஆனால் உனக்கு ஒன்று தெரியுமா? போன வாரம் ஃபோனில் பேசிய வரதன் ‘தாமஸ் வர்கீஸுக்கு நாம் கோயில் கட்டிக் கும்பிடலாம் - உன்னுடைய பரமானந்த் இங்கே டீப்பீயெஸ்ஸாக வந்து அடிக்கிற கொட்டத்துக்கு. வர்கீஸெல்லாம் பரமானந்துக்கு முன்னால் உறை போடக் காண மாட்டார்’ என்கிறான்.

**பின்குறிப்பு:**

> போண்டா: தாமஸ் வர்கீஸ் தன்னையொத்த அல்லது தனக்கு மேற்பட்ட அதிகாரிகளை இந்த வார்த்தையால்தான் குறிப்பிடுவார். இதன் பொருள்: அதிகாரிகள் அடிக்கடி மீட்டிங் என்ற ஒன்றைக் கூட்டி வெறுமனே வடை போண்டா சாப்பிட்டு விட்டுச் சென்றுவிடுகிறார்கள். டிபார்ட்மெண்ட்டுக்கு உருப்படியாக எதுவும் செய்வதில்லை.

***

# கதை: இருபத்து நான்கு

பெருமாளுக்கு வரும் கனவுகள் ஒரே மாதிரியானவை. இலக்கியக் கனவுகள் என்று அதை அழைக்கலாம். அவன் எதை எழுதிக் கொண்டிருக்கிறானோ அது தொடர்பாகவே இருக்கும் அக்கனவுகள். சமயங்களில் ஒரு முழு நீளக் கதையே சினிமாக் காட்சிகளைப்போல் விரிவடையும். மர்ம நாவல்கள், திகில் கதைகள் என்று பல விதங்களில் போகும் அக்கனவுகள். எழுதுவது நனவிலி மனம் என்பதால் எவ்விதத் தணிக்கைகளுக்கும் அங்கே இடமிருக்காது. சமயங்களில் கவிதைகளும் வந்து போகும். அவன் எழுதிய 'சூன்ய வெளியில்' என்ற நாவலில் வரும் கவிதைகள் பெரும்பாலும் இப்படிக் கனவில் தோன்றியவைதான். ஆனால் விஷயம் என்னவென்றால், தூக்கத்திலிருந்து எழுந்து கனவில் தோன்றியதை உடனே எழுதிவிட வேண்டும். காலையில் எழுதிக்கொள்ளலாம் என்று விட்டால் மறந்துபோகும். ஒரு வரியும் ஞாபகம் இருக்காது.

பொதுவாக, ஒரு முறை வந்த கனவு மற்றொரு முறை வராது. விதிவிலக்காக இரண்டு கனவுகள் அவனைச் சிறு வயதிலிருந்து துரத்திக்கொண்டிருக்கின்றன. ஒன்று: அவன் பறந்துகொண்டிருக்கிறான். மணிமேகலைக்கு மணிமேகலா தெய்வம் உபதேசித்த இரண்டு மந்திரங்களில் ஒன்று, ஆகாய வழியே சஞ்சரிக்கச் செய்வதாகிய ஆகாய கமன மந்திரம். ஆனால் கண்ணாயிரம் பெருமாளுக்கு ஏதோ ஒரு ஹதயோகப் பயிற்சியின் மூலம் நீரில் பல மணி நேரம் மிதக்க முடிவதைப்போல் காற்றிலும் மிதக்க முடியும்: சலனம் கொள்ளமுடியும். கனவு மிகத் தெளிவாக இருக்கும். கனவு போலவே இல்லாமல் நிஜமாகவே பறந்துகொண்டிருப்பான். உடல் தனது திடத் தன்மையை இழந்து லேசான சிறகைப்போல் மிதந்துகொண்டிருக்கும். சரீரம் கனமற்றுப்போவது பீதியையும், ஆச்சரியத்தையும் தருவதற்குப் பதிலாக, இது ஏதோ இயல்பான விஷயம் என்பதைப்போல் மனம் பரபரப்பின்றி அமைதியாக இருக்கும்.

வேறோர் உலகம் இது. மனிதர்களும் துப்பாக்கிகளும் சொற்களும் இல்லாத உலகம். தேதிகள் இல்லை. பெயர்கள் இல்லை. மணிக்காட்டிகள் இல்லை. வலி இல்லை. வேதனை இல்லை. றெக்கைகளின்றி உடல் சருகாய்ப் பறந்துகொண்டிருக்கிறது. நான் இருக்கிறேனா? இறந்துவிட்டேனா? இந்த உடலில்தான் இருக்கிறேன். ஆனால் உடலிலிருந்து விடுபட்டுவிட்டேன். இத்தனை ஆண்டுகளாய் கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருந்த காமத் தீ என்னை விட்டு அகன்றுவிட்டதுபோல் தோன்றுகிறது. இனிமேல் சருமப் பளபளப்புக்காக பலவித பசைகளையும், களிம்புகளையும் தடவிக்கொள்ள வேண்டியதில்லை. காமத்தை வென்றுவிட்டேன். பெண்களின் பின்னே நாயைப்போல் ஓட வேண்டியதில்லை இனி. அவர்களின் சவுக்குகள் இனி

என்னை ஒன்றும் செய்ய முடியாது. ஒரு சாண் நீளமுள்ள ஒரு சதைத் துணுக்கு என் வாழ்வை எவ்வளவு தூரம் சிதைத்துப் போட்டுவிட்டது... இனி அதற்கு வேலையில்லை. நெருப்பு அணைந்துவிட்டது. இருப்பு இல்லாமலாகிவிட்டது. இந்த வெளியில் என் சரீரம் கரைந்துவிட்டது. பிறந்தோருறும் பெருகிய துன்பமும் இல்லை; பிறவாருறும் பெரும் பேரின்பமும் இல்லை.

நான் சூன்யம். சூன்ய வெளியில் மிதந்துகொண்டிருக்கும் சூன்யம். கனவு அல்ல. நிஜம். வேறு விதமான நிஜம். சூன்யத்தின் நிஜம். இந்த நிஜத்தில் நான் ஒரு நினைவு. என் சரீரத்தினால் அல்ல; நினைவுகளால் பேசிக்கொண்டிருக்கிறேன் மௌனத்தை. ஆனால் இந்த நினைவுகள் அல்ல நான்; இந்த மௌனம் அல்ல நான். நினைவுகளும் மௌனமும் அழிந்த சூன்யப் பெருவெளியில் மிதந்து கொண்டிருக்கிறேன் நான்.

***

ஆகாய வெளியிலிருந்து கீழே இறங்கினேன். அது ஒரு வனம். ஒரு விருட்சத்தின் கிளைகளில் ஒரு மனித உடலின் வெவ்வேறு பாகங்கள் தொங்கிக்கொண்டிருந்தன. இப்படி ஒரு வனத்தில் யார் இந்தக் கொலையைச் செய்திருக்க முடியும் என வியந்துகொண்டிருக்கும்போதே கைகளும் கால்களும் அசைந்து எழுந்து ஒவ்வொரு பாகமும் சேர்த்துப் பிணைந்துகொண்டன. எதுவுமே நடவாததுபோல் அந்த முதியவர் எழுந்து நடந்து சென்று என் பார்வையினின்றும் அகன்று மரக் கூட்டங்களினூடே மறைந்தார்.

***

இந்தப் பறக்கும் அனுபவம் சில சமயங்களில் வேறு விதமாகவும் அமையும். ஆகாய வெளிக்கு எடுத்துக்கொண்டு செல்லாமல் பாதி உயரத்திலேயே நிற்கும். அப்போது மின் கம்பிகளை எண்ணி உயிர்ப் பயம் ஏற்படும். அவன் இந்தியாவை வெறுப்பதற்கு முக்கியமான காரணம் இதுதான். இந்தியர்கள் வெளியைப் பயன்படுத்துவதுபோல் பூமியைப் பயன்படுத்துவதில்லை. தொலைபேசி இணைப்பு, மின் இணைப்பு போன்ற எல்லாமே வாகனத்தில் அடிபட்ட மாட்டின் குடலைப்போல் இருபது அடி உயரத்தில் கம்பிகளாகத் தொங்கிக்கொண்டிருக்கின்றன. இந்தியக் காக்கைகளும் குருவிகளும், மனிதர்களும் மழை பெய்தால் அறுந்து விழும் கம்பிகள் மூலம் செத்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஐரோப்பாவில் கண்ணாயிரம் பெருமாளைப்போல் பறக்கும் கனவு காண்பவர்கள் அதிகம் போலும். மின்சாரத்தைக் கண்டுபிடித்த கையோடு பூமியைத் தோண்டி மின் இணைப்புத் தொடர்புகளையும் நிர்மாணித்துவிட்டார்கள். மின்சாரம் மட்டுமல்லாமல், எரிவாயு, கழிவுநீர், போக்குவரத்து, இறந்தவர்களின் சடலங்களைத் தீர்வு செய்வது போன்றவற்றுக்கும்கூட பூமியின் கீழ்ப்பகுதியையே அவர்கள் பயன்படுத்துவது பற்றி பெருமாள் மிகுந்த மனத் திருப்தி அடைகிறான். இன்னும் அவர்கள் குடியிருப்பு வசதிக்கு மட்டும்தான் பூமிக்குக் கீழே செல்லவில்லை. நல்லவேளை, அமெரிக்கர்களுக்கு ஐரோப்பாவின் மேல் பங்காளிப் புகைச்சல் இருந்தாலும் அவர்களைக் கண்டு

பயந்துகொண்டுதான் இருக்கிறார்கள். இல்லாவிட்டால் சதாம் ஹுசேனைப்போல் பல ஐரோப்பிய கனவான்கள் பூமிக்குக் கீழே வாழ வேண்டியிருந்திருக்கும். ஆனால் இந்தியாவில் இன்னும் கழிவு நீர் வெளியேற்றத்துக்குக்கூட பூமிக்குக் கீழ்ப் பகுதியைப் பயன்படுத்தவில்லை. மும்பையில் அமிதாப் பச்சனின் வீட்டு வாசலில்கூட சாக்கடை நீர் வெளியில்தான் ஓடிக்கொண்டிருக்கிறது. சிக்குண்ட நூலாக சென்னையின் நாலாதிசைகளிலும் ஓடிக்கொண்டிருக்கும் கூவம் சாக்கடையின் பிரசித்தம் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. ஃப்ரான்ஸின் ஆட்சியாளர்களாக இந்தியர்களை அமர்த்தினால் ஸெய்ன் நதி முழுவதும் சாக்கடையாக ஓடும். சந்தேகமேயில்லை.

ஆனால் ஒன்று, ஏற்கெனவே பூமிக்குள் அமைந்த குடிநீர் இணைப்பு, பாதாள சாக்கடை, தொலைபேசித் தொடர்பு சாதனங்களைப் பழுது பார்ப்பதற்காக அனுதினமும் மாறி மாறி பூமியைத் தோண்டி, போரில் வெடிகுண்டுத் தாக்குதலுக்கு ஆளான நகரத்தைப்போல் காட்சியளிக்கும் சென்னையில், இன்னும் மின்சாரம், போக்குவரத்து, சமையல் எரிவாயு போன்றவைகளையும் பூமிக்குள் அமைத்தால் ஏற்படும் விபரீதங்களைப் பற்றி நினைத்துப் பார்க்கவே அச்சமாக இருக்கிறது.

நல்லவேளை, Lutyen ஒரு ஜெர்மானியனாக இருந்ததால் புது தில்லி தப்பியது. ஆனால் சென்னை போட் க்ளப், போயஸ் கார்டன் என்ற இரண்டு பகுதிகள் மட்டும்

இதற்கு மேல் எழுதப்பட்ட பக்கங்களைக் காணவில்லை. கண்ணாயிரம் பெருமாளின் வீட்டில் குவிந்திருக்கும் காகிதக் கற்றைகளில், இந்த நாவல் சம்பந்தப்பட்ட பகுதிகளை மட்டும் திருடிக்கொண்டு வந்துவிட்டேன். எனவேதான் நாவலின் இடையே அவ்வப்போது சில பக்கங்களைக் காண முடிவதில்லை.

அவனுக்கு வரும் மற்றொரு கனவு: கண்ணாயிரம் பெருமாள் பிறந்து வளர்ந்த ஊரில் ஃப்ளஷ் அவ்ட் லட்ரின் என்றால் என்னவென்றே தெரியாது. சில பணக்காரர்களின் வீட்டில் எடுப்பு கக்கூஸ் இருக்கும். ஏழைகளாக இருந்தால் கருவேல மரத் தோப்புகளும், திறந்த வெளிகளும்தான். எடுப்பு கக்கூஸ் என்பது தண்ணீர்க் குழாய் வசதியில்லாத கக்கூஸ். அங்கெல்லாம் வீட்டுக்கு வீடு தண்ணீர் வசதி கிடையாது. வீட்டுக்குப் பின்புறம் இருக்கும் அந்தக் கக்கூஸுக்கு மேற்கூரை இருக்காது. நான்கு பக்கமும் சுவரால் மறைக்கப்பட்டிருக்கும்; கால்களை மடக்கு தவளை போல் உட்கார்ந்து மலம் கழிப்பதற்கு வசதியாக அரை அடி உயரத்தில் ‘ப’ வடிவத்தில் கக்கூஸைச் சுற்றிலும் மேடை அமைக்கப்பட்டிருக்கும். ஒவ்வொரு நாள் காலையிலும் தோட்டிச்சியோ தொம்பச்சியோ வந்து இதைச் சுத்தம் செய்வாள். அவள் இடுப்பில் ஒரு பிரம்புக்கூடை இருக்கும். பீயை ஒரு சிரட்டையால் அள்ளியெடுத்து கூடையில் போட்டுக் கொண்டு சிரட்டையைக் கூடையிலேயே ஒரு பக்கம் வைத்துக் கொள்வாள். பீ அரைத் திரவ நிலையிலிருந்தால்தான் சிரமம். எல்லாம் தொழில்திறன் சார்ந்த விஷயம். வீட்டு உறுப்பினர்களில் யாருக்காவது மூல வியாதி இருந்தால் ரத்தம் வழிந்து கிடக்கும். எல்லாவற்றையும் எடுத்துவிட்டு, தண்ணீரைக் கொட்டி விளக்குமாற்றால் மிகச் சுத்தமாகக் கழுவிவிட வேண்டும். இதற்கிடையில் மற்றொரு வழக்கம் என்னவென்றால் - தோட்டிச்சி வீட்டுக்குள் புகுந்து வரக்கூடாது. வீட்டைச்

சுற்றிக்கொண்டுதான் போக வேண்டும். அப்படிச் சுற்று வழியில்லாமல் வீட்டுக்குள் புகுந்து சென்றால் ஏதோ அந்தத் தோட்டிச்சியால்தான் உலகமே பீ நாற்றம் அடிக்கிறது என்பதுபோல் திட்டுவார்கள். எனக்கு அப்போதெல்லாம் ஒரே ஒரு சந்தேகம்தான் வரும். பீ என்பது ஒவ்வொரு ஆளின் வயிற்றிலும் இருக்கிறது. அப்படியானால் உடம்பும் தீட்டுதானே? பணக்காரர்களின் வீட்டு வாசலில் வந்து நின்று பெருங்குரலெடுத்து 'அமோவ்... தோட்டிச்சிமோவ்...' என்று கத்த வேண்டும். சில பேர் 'அமோவ்... தொம்பச்சிமோவ்...' என்றும் கத்துவார்கள். பெருமாளுக்கு அந்த இரண்டுக்கும் வித்தியாசம் தெரியாது. அவர்கள் தன் நைனாவைப் போலவே தெலுங்கு பேசுகிறார்கள் என்பதும், நைனாவின் குடும்பத்தைச் சேர்ந்த பெண்களைப்போலவே அழகாக இருக்கிறார்கள் என்பதும்தான் தெரியும். பெருமாள் அவர்களோடு கூடவே எப்போதும் நிழலைப்போல் ஒட்டிக்கொண்டு கிடந்ததன் காரணம், அவன் வீட்டில் அவனுக்குப் போதுமான சாப்பாடு கிடைக்காது என்பதுதான்.

ஒன்றிலிருந்து ஒன்று தொட்டுக்கொண்டே வேறு எங்கோ போய் விடுகிறது கதை. மலத்தைப் பற்றிச் சொல்ல வந்து, கடைசியில் உணவுக்கு வந்து நிற்கிறது. ம்... ஒரு வகையில் இரண்டும் ஒன்றுதான் என்று வைத்துக்கொள்ளுங்கள்.[1]

அவனுக்கு எவ்வளவு சாப்பிட்டாலும் எப்போதும் பசித்துக்கொண்டேயிருக்கும். காலையில் இருபது இட்லிகளை விழுங்கியிருப்பான். ஒரு மணி நேரத்தில் பசி கொல்லும்.[2] அவன் வீட்டிலோ மொத்தம் எட்டுப் பேர். அவனுடைய இரும்பசியறுக்கும் பெருமந்திரம் யாதென்று தெரியவில்லை. எந்த நேரத்திலும் கொடுந்தீயைப்போல் எரிந்துகொண்டிருந்தது பசி.

வடதிசையில் வித்தியாதரருலகிலுள்ள காஞ்சனபுரமென்னும் ஊரைச் சேர்ந்த காயசண்டிகை, தன் கணவனுடன் தென்திசைப் பொதிகை மலையின் வளங்களைக் காண்பதற்காகப் புறப்பட்டுப் போந்து இடையேயுள்ள காட்டாற்றொன்றின் கரையில் இருக்கையில், விருச்சிகனென்னும் முனிவனொருவன் பாரணஞ்செய்தற்குப் பனங்கனி போன்ற பருமையையுடைய நாவற்கனியொன்றைத் தேக்கிலையில் வைத்துவிட்டு நீராடச் சென்றபோது, அக்கனி அம்முனிக்கு உணவாகுமென்பதை அறியாமல் அதனைக் காலால் சிதைத்துக் கெடுக்க, நீராடி மீண்டு வந்த விருச்சிகன் மிகவும் கோபித்து அவளை நோக்கி, 'தெய்வத்தன்மையுள்ளதும் பன்னிரண்டு வருடத்துக்கு ஒருமுறை ஒரு கனியைத் தருவதுமாகிய நாவல் மரத்திலுண்டானது இது; இதனையுண்டோர் பன்னிரண்டு வருடம் பசியொழிந்திருப்பார்; நானோ பன்னிரண்டு வருடம் பட்டினியிருந்து ஒரு நாளுண்ணும் விரதமுடையேன்; உண்ணுந்தினமும் இன்றுதான்; யான் உண்ணக்கருதிய கனியும் இதுவேகாண்; இதனை நீ அழித்துவிட்டாய்; ஆதலால், ஆகாய வழியே செல்லும் மந்திரத்தை மறந்து யானைத் தீயென்னும் நோயால் பன்னிரண்டு வருடம் தீராப்பசி கொண்டு வருந்திப் பின்பு இங்கு இக்கனியை நான் உண்ணும் தினத்தில் நீ பசியொழிவாயாக' என்று சாபமிட, அதிலிருந்து வெம்பசியால் வாடத் தொடங்கினாள் காயசண்டிகை.

கண்ணாயிரம் பெருமாள் எந்தப் பழத்தை எந்த ஜென்மத்தில் திருடி எந்த

முனிவனால் சாபம் பெற்றானோ தெரியவில்லை; அப்படியொரு பசி பசித்தது. வயிற்றுப் பசி மட்டுமல்ல. காமப்பசியும் கூட. இரண்டையும் தீர்த்து வைக்க முயன்றது தொம்பர் குடிசை. அதனால் எப்போதும் அவர்களுடனேயே இருக்க ஆரம்பித்தான். அவர்களோடு சேர்ந்து பீ அள்ளப் போனான். பஞ்சமில்லாமல் கிடைத்தது பன்றி மாமிசமும், ஸ்திரீகளின் சரீரமும்.

ஒருநாள் கண்ணாயிரம் பெருமாள் ஒரு பீ ட்ரம்மைத் தள்ளிக் கொண்டு சென்றுகொண்டிருந்தான். பெருமாள் கோவில் மேல வீதி வழியாகச் சென்று நாணயக்கார வீதியைத் தாண்டி, சிவன் கோவில் வடக்கு வீதிக்குப் பக்கத்திலுள்ள பீ சந்துக்கு வர வேண்டும். பீ சந்தில்தான் மல லாரிகள் நிற்கும். அந்த லாரிகளில் இந்தத் தள்ளு வண்டியிலுள்ள பீ ட்ரான்ஸ்ஃபர் செய்யப்படும். அப்போது தவறுதலாக லாரியிலுள்ள சரக்கு சரிந்து பெருமாள் மேல் கொட்டி விடுகிறது. ஒரு லாரி பீ அவன் மீது சாய்ந்தால் என்ன ஆகும்? வீடே கிடுகிடுத்துப் போகும் ஓங்கரிப்புடன் தூக்கத்திலிருந்து விழித்துக் கொள்வான். மீராவும் பதறியடித்து எழுந்து என்ன என்ன என்பாள். 'ஒன்றுமில்லை... ஒரு பேய்க்கனவு...' என்பான். 'ம்... இந்தக் காலத்திலும் போய் பேய் பிசான்னுக்கிட்டு...' என்று முனகியபடி உறங்கிப்போவாள் மீரா.

பெருமாளுக்கு அத்துடன் உறக்கம் போய்விடும். குடித்துவிட்டுத் தூங்கினால் இந்தப் பிரச்னை இல்லை.

***

# கதை: இருபத்தைந்து

கண்ணாயிரம் பெருமாளுக்குப் பிடித்தவை:

கல்லறை

யோனி

மலையாள நர்ஸ்கள்

கன்னிகாஸ்த்ரீகள்

புறா

வழிபாட்டுத் தலங்கள்

நைட் க்ளப்

மதுபான விடுதி

தாய்லாந்து

முலைகள்

நெட்கஃபே

14 வயதுக்கு மேற்பட்ட பெண்கள்.

(இது சம்பந்தமாக அரசியல்வாதிகளுக்கும், சட்ட வல்லுனர்களுக்கும், சமூக ஆர்வலர்களுக்கும், பெண்ணியவாதிகளுக்கும் கண்ணாயிரம் பெருமாளின் தாழ்மையான விக்ஞாபனம்: சில பல ஆண்டுகளுக்கு முன்பு வரை பத்துப் பன்னிரண்டு வயதிலேயே திருமணம் செய்து கொள்வது நடைமுறையில் இருந்து வந்து, பின்னர் நடந்த சமூக சீர்திருத்த மடத்தனங்களின்போது அவ்வழக்கம் தடை செய்யப்பட்டது. ஒரு 40 வயதுப் பெண் கற்பழிக்கப்படுகிறாள் என்பதற்காக ஒரு 40 வயதுப் பெண் செக்ஸிலிருந்து தடுக்கப்படவில்லை. அதுபோல் ஒரு 14 வயதுப் பெண் கற்பழிக்கப்படுகிறாள் என்பதற்காக, அப்பெண் செக்ஸிலிருந்து விலக்கப்பட வேண்டுமா? கிராமப்புறங்களில் வறுமை காரணமாக 20 வயதுப் பெண் 10 வயதுப் பெண்ணைப்போல் வற்றிக் கிடக்கிறாள் என்பதனால் அங்கே வேண்டுமானால் வயது வரம்பு 21ஆகவே இருந்து தொலையட்டும். நகர்ப்புறங்களில் 10 வயதுப் பெண்ணே 20 வயதுப் பெண்ணின் தோற்றத்தோடு இருப்பதால் நகர்ப்புறங்களில் அவ்வயது வரம்பு 14ஆகக் குறைக்கப்படுவதற்கு மேற்கூறிய அரசியல்வாதிகளும், சட்ட வல்லுனர்களும், சமூக ஆர்வலர்களும், பெண்ணியவாதிகளும் ஆவன செய்ய வேண்டும். இது சம்பந்தமாக தில்லி ஆர்.கே.புரம் பள்ளியில் ஒரு மாணவனுக்கு ஒரு மாணவி வாய்ப் புணர்ச்சி செய்த காவிய சம்பவம் கைத்தொலைபேசி மூலம் படம் பிடிக்கப்பட்டு அச்சலன சித்திரம் சக மாணவமணிகளுக்கும், பின்னர் அகில இந்திய மகா ஜனங்களுக்கும்

இன்ட்டர்நெட் மூலமாக அனுப்பப்பட்டதை உதாரணமாகக் கொள்ளலாம். தமிழ் சினிமாவிலும் 14 வயதுப் பெண், முதலிரவுக் காட்சியில் முனகுவதைத் தமிழ் மக்களும் தமிழ் எழுத்தாளர்களும் ரசிப்பதிலிருந்து சட்டத்தை உருவாக்குபவர்களைவிட மக்கள் இந்த விஷயத்தில் விசால மனம் கொண்டவர்களாக இருப்பது உள்ளங்கை நெல்லிக்கனி. தமிழ் மகா ஜனங்கள் 55 வயது ஹீரோவுடன் நடிப்பதற்கு 13 அல்லது 14 வயதுப் பெண்ணையே ஜோடியாக ஏற்க நினைப்பதால், இப்போதெல்லாம் தமிழ் சினிமா இயக்குனர்கள் சென்னை நகர கான்வென்ட் பள்ளிகளின் வாசலிலேயே தவம் கிடக்கிறார்கள் என்பதையும் இங்கே சமூக ஆர்வலர்களுக்கு நாம் நினைவுபடுத்தலாம்.

மேலும், வாக்குரிமைக்குரிய வயதை 21இலிருந்து 18ஆகக் குறைத்திருக்கும்போது செக்ஸ் அனுபவிப்பதற்கான வயதையும் 18இலிருந்து 14ஆகக் குறைக்கலாம் என்பது என்னுடைய தனிப்பட்ட கருத்து. இதற்கு நாம் தென்னாஃப்ரிக்காவின் அண்டை நாடான ஸ்வாஸிலாந்தை முன்னுதாரணமாகக் கொள்ளலாம்.

தமிழ்நாட்டைப் போலவே ஸ்வாஸிலாந்திலும் பெண்களின் கற்புக்கு பெல்ட் அணிவது கட்டாயமாக்கப்பட்டிருந்தது. தமிழ்நாட்டைப்போல் அது குறியீட்டளவிலான பெல்ட் அல்ல; உண்மையான பெல்ட். பருத்தி இழைகளால் தயாரிக்கப்பட்ட குஞ்சலம் போன்ற வஸ்து அது. அல்லது, இப்படிக் கற்பனை செய்துகொள்ளலாம்: மஃப்ளரை யோனிப் பகுதியில் கோவணம் போல் கட்டினால் எப்படியிருக்கும்? அதுதான் ஸ்வாஸிலாந்தின் 18 வயதுக்குட்பட்ட பருவமடைந்த பெண்கள் அணிய வேண்டிய கற்பு பெல்ட். இப்படி கற்பு பெல்ட் அணிந்த ஒரு பெண்ணை ஒருவன் செக்ஸுக்கு அழைத்தால், அந்தப் பெண் தனது கற்பு பெல்ட்டைக் கழற்றி தன்னை செக்ஸுக்கு அழைத்தவனின் வீட்டு வாசலில் போட்டு விடுவாள். இப்போது அந்த ஆண் மகனின் வீட்டைச் சேர்ந்தவர்கள் அப்பெண் வீட்டாருக்கு ஒரு பசுவை சீதனமாகக் கொடுத்துவிட்டு பெண்ணைத் தங்கள் மகனுக்கு மணமுடித்துவிடலாம். ஸ்வாஸிலாந்து அரசரான மூன்றாம் ம்ஸ்வாதி தனது நாட்டில் எய்ட்ஸ் நோயைக் கட்டுப்படுத்துவதற்காக 2001, செப்டம்பர் 9ஆம் தேதி அறிமுகப்படுத்திய பெல்ட் இது.

10 லட்சம் பேர் மக்கள் தொகையுள்ள ஸ்வாஸிலாந்தில் 43 சதவிகித கர்ப்பிணிகளுக்கும், 18 வயதுக்கு மேற்பட்டவர்களில் 40 சதவிகிதம் பேருக்கும் எய்ட்ஸ் உள்ளது. அதனால் வயதுக்கு வந்து திருமணமாகாத பெண்கள் அத்தனை பேரும் இந்தக் கற்பு பெல்ட்டை அணிய வேண்டியது கட்டாயமாக்கப்பட்டது. இந்த பெல்ட் அணியும் சடங்கை மக்கள் ‘உம்ச்வாஷோ’ என்று அழைத்தனர். இந்தக் கற்பு பெல்ட்டின் அறிமுகத்திற்குப் பிறகும்கூட எய்ட்ஸ் நோய் குறைவதற்கான அறிகுறி தெரியாததால் 2005, ஆகஸ்ட் 19ஆம் தேதி அன்று கற்பு பெல்ட்டை ரத்து செய்து அத்தனை ஸ்வாஸிலாந்து யோனிகளுக்கும் விடுதலையளித்தார் அரசர் மூன்றாம் ம்ஸ்வாதி.

என்னதான் கற்பு பெல்ட் அணிவித்தாலும் யோனியின் சுதந்திர வேட்கையை யாராலும் தடுக்க முடியுமா? எனக்கு ஒரு டெக்கமரான் கதை ஞாபகம் வருகிறது. ஒரு ஓவியன் தன் வேலை நிமித்தமாக வெளியூர் செல்கிறான். வருவதற்கு மூன்று மாதம் ஆகும். தன் மனைவியின் கற்பில்

நம்பிக்கையில்லாத அவன், அவளுடைய யோனியில் ஒரு ஆட்டின் தலையை வரைந்து வைத்துவிட்டுச் செல்கிறான். சம்போகத்தில் ஈடுபட்டால் ஓவியம் கலைந்துவிடும் என்பதால் யாருடனும் படுக்க மாட்டாள் என்பது அவன் நம்பிக்கை. அவளுக்கோ ஒரு காதலன் இருந்தான். கணவன் ஊருக்குச் சென்றிருந்த காலத்தில் அவள் தன் காதலனோடு சரஸ சல்லாபத்தில் ஈடுப்பட்டாள். ஓவியனோ தாமதமாக ஆறு மாதம் கழித்து வந்தான். வருவதற்கு முன் மனைவிக்குத் தகவல் அனுப்பியிருந்தான் அந்தக் கூறுகெட்ட cuckold. யோனியில் ஓவியன் வரைந்திருந்த படம் காதலன் அடித்த அடியில் எப்போதோ கலைந்துபோயிருந்தது. என்ன செய்வதென்று இருவரும் குழம்பிக்கொண்டிருந்தபோது 'நானே ஒரு படம் வரைந்து விடுகிறேன்' என்று சொல்லி ஒரு ஆட்டின் தலையை அவள் யோனியில் வரைந்து வைத்தான் காதலன். ஊரிலிருந்து திரும்பிய ஓவியன் வந்ததும் வராததுமாக மனைவியின் கீழாடையைத் தூக்கிப் பார்த்தான். பார்த்தவனுக்கு ஒரே ஆச்சரியம். அந்த ஆட்டுத்தலை தாடியோடு இருந்தது. அவனுக்கு நன்றாக ஞாபகம் இருந்தது. அவன் வரைந்தது ஒரு ஆட்டுகுட்டியின் தலை. நிச்சயமாக அதற்கு தாடி இல்லை. கோபத்துடன் மனைவியை வினவினான். அவள் சாவகாசமாகப் பதில் சொன்னாள்: 'நீ மூன்று மாதம் தாமதமாக வந்தாய் அல்லவா? அதற்குள் ஆடு வளர்ந்து அதற்கு தாடியும் முளைத்துவிட்டது.'

நம்முடைய மூன்றாம் ம்ஸ்வாதிக்கு மட்டும் மற்ற குடிமக்களுக்கு இருப்பதைப் போன்ற கற்புத் தடைகள் ஏதும் இல்லை. வருடா வருடம் தலைநகரில் நடக்கும் மூங்கில் நடனத்தின்போது ஆயிரக்கணக்கான இளம் பெண்கள் அரசரின் முன்னே யோனியை மட்டும் சிறு துணியால் மறைத்துவிட்டு நிர்வாணமாக நடனம் ஆடுவார்கள். அப்போது அவர்கள் நான்கு மீட்டர் நீள மூங்கில் கழி ஒன்றையும் (குறியீடு, குறியீடு) அரசருக்குப் பரிசாகத் தருவதற்காக எடுத்து வருவார்கள். அப்பெண்களில் ஒருத்தியைத் தன் மனைவியாகத் தேர்ந்தெடுத்துக்கொள்வார் அரசர். 2005ஆம் ஆண்டு நடந்த மூங்கில் நடன வைபவத்தில் கலந்துகொண்ட பெண்களின் எண்ணிக்கை 50,000.

மூன்றாம் ம்ஸ்வாதியின் மனைவிகளின் பெயர் விபரம்:

1. LaMatsebula
2. LaMosta
3. LaNgangaza
4. LaMbikiza (திருமணமாகும்போது இவள் வயது: 17)
5. Putsoana Hwala (2004இல் இவள் அரசரை விட்டு ஓடி விட்டாள்).
6. Delisa Magwaza (இவளும் அரசரை விட்டு ஓடிவிட்டாள்.)
7. LaMasango
8. LaMhlangu (18 வயதான பள்ளி மாணவியான மலாங்கு, ம்ஸ்வாதியின் ஆட்களால் கடத்தப்பட்டு அரண்மனைக்குக் கொண்டுவரப்பட்டாள். மகளைக் காணவில்லை என்று மலாங்குவின் தாய் நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்தபோது 'உன் மகள் அரசியாகிவிட்டாள்' என்று

நீதிபதியால் தெரிவிக்கப்பட்டது. அதற்குமேல் தாய்க்கும் மகளுக்கும் தொடர்பு ஏதுமில்லை.)

9. LaNtentesa
10. LaDube (இவள் ஸ்வாஸிலாந்தின் அழகிப் போட்டியில் இறுதிச் சுற்றுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட பள்ளி மாணவி. அரசருக்கு மனைவியானபோது இவள் வயது: 16)

நிச்சயம் செய்யப்பட்டு திருமணத்துக்குக் காத்திருக்கும் வருங்கால அரசிகள்:

11. Nomonde Fihla
12. Colile Nosiphe Magagula (வயது 17)
13. Phindile Nkambule (வயது 17)

(இந்த மூவரும் கர்ப்பம் தரித்தால் அரசர் திருமணம் செய்து கொள்வார். கர்ப்பம் தரிக்கும் தகுதியுள்ள பெண்களை மட்டுமே அரசர் மணமுடிக்க முடியும். கர்ப்பமாக்க முயற்சி செய்தால் எய்ட்ஸ் வந்துவிடுமோ என அரசர் அஞ்சுகிறார். குழப்பமான நிலைமைதான். எனினும் மர்க்கி தெ சாதுக்குப் பிறகு கண்ணாயிரம் பெருமாளை வெகுவாகக் கவர்ந்த ஆளுமை இந்த மூன்றாம் ம்ஸ்வாதி. மன்னர் இரண்டாம் ஸொபூஸாவின் 67ஆவது மகனாக 1968ஆம் ஆண்டு பிறந்து, தன் 18ஆவது வயதில் மன்னராக முடிசூட்டப்பட்ட மூன்றாம் ம்ஸ்வாதியின் குடும்ப வாழ்க்கை பற்றி தனியாக ஒரு நாவல் எழுதும் திட்டம் பெருமாளுக்கு உண்டு.)

(இந்த இடத்தில் சில பக்கங்களைக் காணவில்லை)

...நான் மலம், மூத்திரம் பற்றி பல்வேறு சந்தர்ப்பங்களில் எழுதியபோதெல்லாம் எனக்கு நிச்சயமாக Petropoulous பற்றி எதுவும் தெரியாது. பிறகுதான் தெரிந்தது மலம் பற்றிய ஆய்வில் (Scatology) அவர் ஒரு விற்பன்னர் என்பது. பெருமாளைப் போலவே அவருக்கும் பாலியல், மல ஆய்வு, பெண்களின் பிருஷ்டம் என்ற மூன்றும் பிரியமான துறைகளாக இருந்தன.

அவர் அலுவலகம் முழுவதும் பெண்களின் பிருஷ்டங்களும், dildo மற்றும் அசாதாரணமான அளவில் விறைத்துக் கொண்டிருக்கும் ஆண்குறியைக் கொண்ட பொம்மைகளுமே புகைப்படங்களாகத் தொங்கிக்கொண்டிருந்தன. ஆண்குறி, பெண்குறி மற்றும் பெண்களின் பிருஷ்டம் பற்றி பல கவிதைகளும் எழுதியிருக்கிறார் பெத்ரோ பௌலஸ்.

மூத்திரம் பற்றிய அவருடைய சுவாரசியமான ஒரு கேள்வி இது:

சென்ற நூற்றாண்டு வரை பிரபு வம்சத்துப் பெண்கள் அணிந்திருந்த பிரும்மாண்டமான, விரைத்த ஆடைகளுடன் (crinolines) அவர்கள் எங்கே, எப்படி சிறுநீர் கழித்திருப்பார்கள்?

இதற்கான பதிலை அவர் சென்ற நூற்றாண்டின் இறுதியில் வெளிவந்த பெண்களுக்குரிய ஆடை அணிகலன்களை பற்றிய விளம்பரம் ஒன்றில் கண்டுபிடிக்கிறார்:

crinolines எனப்படும் அந்த மிகப் பெரிய ஆடைகளுக்கு உள்ளே, ஸ்டாக்கிங்ஸோடு சேர்ந்து, ஆடையை நனைக்காமல் மூத்திரம் செல்வதற்காக குழாய் வடிவ அமைப்பு ஒன்று வடிவமைக்கப்பட்டிருப்பதற்கான விளம்பரம் அது.

ஆக, அந்தக் காலத்துப் பெண்கள் ஏன் அடிக்கடி உப்பரிகையில் நின்று நிலவை வேடிக்கை பார்த்தார்கள் என்றால் அது மூத்திரம் பெய்வதற்காகத்தான்; (ஜூலியட்கூட ரோமியோ இரண்டாவது தடவையாக அவளது வீட்டுக்கு வரும்போது உப்பரிகையில்தான் நின்றுகொண்டிருக்கிறாள்) சமயங்களில் குசு விடுவதற்காகவும் இருக்கலாம்; ஏனென்றால், காற்றே வெளிச் செல்ல முடியாத அளவுக்கு இறுக்கமாகத் தைக்கப்பட்டிருந்தன அந்த உடைகள்.

அது சரி, இது பாலியலா அல்லது சமூகவியலா? சமூகவியல் எனில் பெருமாளுக்கும் அப்படிச் சில சமூகவியல் அவதானங்கள் உண்டு.

அந்தக் கால அரண்மனைகளில் எல்லா விதமான இடங்களும் இருந்ததற்கான அடையாளங்கள் உள்ளன. உக்கிராண அறை, சயன அறை, அரசவை, குளியலறை, குதிரை லாயம், பணியாளர் குடியிருப்பு என்று. ஆனால் கழிவறையை மட்டும் காணவில்லை. இந்தியாவிலுள்ள எந்தப் பிரசித்தமான அரண்மனையிலும் இல்லை. ராஜாவிலிருந்து கடைசி மட்ட சேவகன் வரை அத்தனை உருப்படிகளும் எங்கே மலஜலம் கழித்தனர்?

மற்றொரு சந்தேகம். மார்க்கி தெ ஸாத் ஆண்குறி வடிவிலான பேப்பர் வெயிட்டையே உபயோகித்தார். அது பாலியல் சார்ந்ததா அல்லது சமூகவியலா? பாலியலோ சமூகவியலோ, மூத்திரம் போவதென்பது ஒரு பொருளாதாரப் பிரச்னையும் தான் என்பது பெருமாள் பாரிஸுக்குப் போனபோது புரிந்தது. இது பற்றி நான் விரிவாகவே எழுதிவிட்டேன்.

(இந்த இடத்தில் சில பக்கங்களைக் காணவில்லை)... அகதி என்று தெளிவாகத் தெரிந்தது. பல்கேரியாகாரர்களைப் பார்த்தவுடன் தெரிந்துவிடுகிறது. கம்யூனிசத்தின் வறிய ரேகைகள் அவர்களின் முகத்தில் ஆழமாகப் பதிந்திருப்பதால்.

கண்ணாயிரம் பெருமாளுக்கு இப்படியெல்லாம் கண்ட இடத்திலும் நின்று சிறுநீர் கழிப்பது இயலாது என்பதால் அதற்குக் கழிப்பறையையே பயன்படுத்தினான். பாரிஸில் தெருவுக்குத் தெரு கழிப்பறைகள் இருந்தன. நம்மூர் டெலி:ஃபோன் பூத் மாதிரி கூண்டு வடிவில் இருந்தது. வெளியேயிருந்த துளையில் இரண்டு ஃப்ராங்க் நாணயத்தைப் போட்டால் கதவு திறக்கும். அப்போது கடுங்குளிர் காலம் என்பதால், பெருமாள் கொண்டு சென்றிருந்த பணத்தில் கணிசமான அளவு சிறுநீர் கழிப்பதிலேயே செலவாகியிருந்தது.

ஒரு நாள் இரண்டு ஃப்ராங்கை மிச்சப்படுத்தலாம் என்று எண்ணி பெருமாள் கூண்டின் உள்ளே சென்று வெளியே வரும்போது கதவு திறக்கையில் எட்வினை உள்ளே கூப்பிட்டான். பெருமாள் வெளியே வரும்போது அவனை ஒட்டியபடி எட்வின் உள்ளே போய்விடலாம் என்று ஏற்பாடு. ஆனால் ஒரு ஆளுக்கு, அதாவது இரண்டு ஃப்ராங்குக்கு ஒரு முறைதான் கதவு திறக்கும் என்கிறாற்போல் ஒரு ஏற்பாடு இருந்து கதவு பழையபடி திறக்காமல் போய்விட்டால் என்ன செய்வதென்ற பயத்தில் அத்திட்டத்தை

இருவரும் கை விட்டனர். பணத்தை மிச்சப்படுத்துவதற்காக அவ்வப்போது கஃபேக்களிலுள்ள கழிப்பறையைப் பயன்படுத்த முயன்றார்கள். ஆனால் அது 4 ஃப்ராங்க்கை மிச்சப்படுத்தி 40 ஃப்ராங்க் செலவழிப்பதில் முடிந்தது. கஃபேவுக்குச் சென்றால் பியர் சாப்பிடாமல் வரமுடியுமா? அப்படித்தான் ஒரு நாள் 4 ஃப்ராங்க்கை மிச்சப்படுத்த எண்ணி ஒரு கஃபேவுக்குள் சென்றபோது '1664' என்று எழுதப்பட்டிருந்த ஒரு பியரைக் காண்பித்து விபரம் கேட்டான் பெருமாள். ஃப்ரான்ஸின் பிரசித்திபெற்ற பியர் என்று கூறி இரண்டு டஜன் போத்தல்களை வாங்கினான் எட்வின். 'இந்த மாதம் முழுவதற்குமா?' என்று கேட்டதற்கு 'இன்று ஒரு நாளைக்கே இது போதாதே' என்றான் அவன்.

சாலையின் ஓரத்திலிருந்த பெஞ்ச் ஒன்றில் அமர்ந்தனர். ஏதேதோ பேசியபடி குடித்துக்கொண்டிருந்ததில் நேரம் போனதே தெரியவில்லை. தன் தேசத்தின் கதையையும், தன் கதையையும் சொல்லிக்கொண்டிருந்தான் எட்வின். அகதியாக வாழ்வதன் வலி அனுபவித்தால்தான் புரியும். பின்னாலிருந்த பெஞ்ச்சில் அமர்ந்து மூன்று சீக்கிய இளைஞர்கள் குடித்துக்கொண்டிருந்தார்கள். பேச்சினிடையே அடிக்கடி 'பெஹன் சூத்' வந்து விழுந்தது.

இரவு மணி பதினொன்றரை ஆகியிருந்தது. எட்வின் தங்கியிருந்த நொஸியல் பாரிஸின் ஐந்தாவது சூனில் இருந்ததால் 'இப்போதே கிளம்பினால்தான் நல்லது. சரி, மீதி போத்தல்களை எடுத்துக் கொள்வோம்' என்றான் பெருமாள்.

போத்தல்கள் அனைத்தும் காலியாகியிருந்தன.

***

# கதை : இருபத்தாறு

கண்ணாயிரம் பெருமாளுக்குப் பிடிக்காதவை:
இந்தியா
இந்தியர்கள்
பெரும்பாலான ஆண்கள்
பெரும்பாலான பெண்கள்
பெரும்பாலான குழந்தைகள்
கடல்
சாக்கடை
இந்திய சாலைகள்
காகம்
பசி
சோறு
தொலைக்காட்சி
சினிமா நடிகைகள் (இந்தியா)
சினிமா நடிகர்கள் (இந்தியா)
தமிழ் எழுத்தாளர்கள்
மிருகக்காட்சிசாலை
சர்க்கஸ்
சிறைச்சாலை
அரசியல்வாதிகள்
பிச்சைக்காரர்கள்
குஷ்டரோகிகள்
மருத்துவமனை
பெண்ணியவாதிகள்
antipaedophiles
மது அருந்தாதவர்கள்
புகைப் பழக்கம் இல்லாதவர்கள்

பெண் கவிஞர்கள் (தமிழ்)
சுய மைதுனம்
கல்விக்கூடம்
நீதிமன்றம்
போலீஸ் ஸ்டேஷன்
மழை
குடும்பம்
மலம்
கலாச்சாரம்
political correctness
நிறுத்தற்குறிகள்
குதிகாலில் வெடிப்புள்ள பெண்கள், ஆண்கள்
அர்த்தம்
... ...
... ...

ஒரு நாள் மழைக்காலத்தில் சென்னை நகரம் வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்தபோது கண்ணாயிரம் பெருமாள், மணி, நரேன் மற்றும் பாலு நால்வரும் மெரீனா பீச்சில் மணியின் பென்ஸ் ஜீப்பில் அமர்ந்து மது அருந்திக்கொண்டிருந்தனர். இரவு முழுவதும் பெய்திருந்த பெருமழை அடங்கி, விட்டு விட்டுத் தூறிக்கொண்டிருந்தது. மதியம் ஒரு மணி இருக்கும். மழைநாளில் பீச்சில் இருப்பது ஒரு சுகமான அனுபவம் என்பதால் அன்று டீக்கடையைப் புறக்கணித்துவிட்டு பீச்சைத் தேர்ந்தெடுத்திருந்தனர். தூறலையும் பொருட்படுத்தாமல் பீச்சில் நிறைய ஜோடிகள் சல்லாபித்துக்கொண்டிருந்ததைக் காண முடிந்தது. நண்பர்கள் வழக்கமாக இரவு நேரத்தில் சந்திக்கும் கலங்கரை விளக்கம் பகுதியை விட்டுவிட்டு விவேகானந்தர் இல்லத்துக்கு எதிரே நிலை கொண்டிருந்தனர். ஜீப்புக்குப் பின்னேயிருந்த சிமெண்ட் பெஞ்சில் அமர்ந்திருந்த ஒரு ஜோடியின் சரச லீலைகளை rear view mirror-இல் பார்த்து ‘ரன்னிங் கமென்ட்ரி’ கொடுத்துக்கொண்டிருந்தான் மணி. ‘ஜோடிக்கு வேற இடம் கிடைக்கலடா, என்ன பண்றது’ என்றும் சொன்னான். பின்னால் திரும்பிப் பார்ப்பது நாகரிகம் அல்ல என்று கருதி ஜீப்பிலிருந்த காய்ன் பாக்ஸிலிருந்து ஒரு ரூபாய் நாணயத்தை எடுத்துக்கொண்டு, பக்கத்திலிருந்த கழிவறைக்குச் சென்றான் பெருமாள். திரும்பி வரும்போது அந்த ஜோடியைப் பார்த்தான். சாலையில் சென்றுகொண்டிருந்தவர்களும் வெறித்து வெறித்துப் பார்த்தார்கள். ஆனால் அதையெல்லாம் பொருட்படுத்தக்கூடிய நிலையில் இல்லை அந்த ஜோடி. ட்ரைவர் சீட்டில் அமர்ந்திருந்த மணியிடம் வந்த பெருமாள் ‘சப்பை ஃபிகராக இருக்கிறதே’ என்று அலுத்துக்கொண்டான். பெருமாளுக்கு சப்பை ஃபிகர்களைப் பார்த்தால் பற்றிக்கொண்டு வரும். அந்த ஜோடிக்கு சற்றுப் பக்கத்தில் அமர்ந்திருந்த இரண்டு இளம் பெண்கள் ஜோடியின் சேஷ்டைகளை

ஆர்வத்துடன் பார்த்துக்கொண்டிருந்தனர். ஜீப்பிலிருந்தபடியே அந்த இளசுகளிடம் பேச்சுக் கொடுத்துக்கொண்டிருந்தான் பாலு.

‘என்னங்க, எங்களை விட்டுவிட்டு சாப்பிட்டுக்கிட்டு இருக்கீங்க?’

‘அடடா, அப்பவே கேட்ருக்கலாம்ல?’

‘அப்படியா, சாப்பிட்டு முடிச்சிட்டீங்களா?’

‘ஆமாம். சாப்பிட்டு முடிச்சிட்டோம். மிச்சம் இருந்ததை காக்காய்க்குப் போட்டுட்டோம். கொஞ்சம் முன்னாலேயே கேட்ருக்கலாம்ல?’

‘ம்.. சரி. பரவால்ல. நாளைக்கு இங்கே வருவீங்களா?’

‘இல்ல, நாளைக்கு நாங்க பெங்களூர் போறோம்.’

‘ஓ. நீங்க பெங்களூரா?’

‘இல்ல, இல்ல. மெட்ராஸ்தான். பெங்களூருக்கு ஒரு ப்ராஜக்ட்டுக்காகப் போறோம்.’

‘ஓ. எங்க படிக்கிறீங்க?’

‘அண்ணா யூனிவர்ஸிட்டி.’

அதற்கு மேல் அந்த நயமான உரையாடலில் கவனம் செல்லாமல் ஜீப்புக்குள் சென்று சரக்கை அடிக்க ஆரம்பித்தான் பெருமாள்.

பிறகு ஜீப்பை எடுத்துக்கொண்டு மணல் பகுதிக்குச் சென்று மணலிலேயே சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருந்தார்கள். மணலில் 4 wheel drive செல்வதென்றால் மணிக்கு மிகுந்த இஷ்டம். அதற்காகவேதான் சென்ற கிறிஸ்துமஸ் அன்று அந்த ஜீப்பை வாங்கியிருந்தான்.

அந்த கிறிஸ்துமஸை பெருமாளால் என்றுமே மறக்க முடியாது. பீச்சில் கிறிஸ்துமஸைக் கொண்டாடிவிட்டு நடுநிசி தாண்டி வீடு திரும்பிய பெருமாள் காலை ஐந்து மணிக்கே எழுந்து கணினியின் முன்னே அமர்ந்தான். அப்போது அவன் அனுராதாவின் மேல் தீவிரமான காதலில் இருந்த நேரம். வெளிப்படையாக அல்லாமல் சூசகமாகவே அவன் தன் காதலைத் தெரிவித்திருந்தான். அதற்கு அன்றைய தினம் பலன் கிடைத்திருந்தது. உன் மேல் உயிரையே வைத்திருக்கிறேன். எப்போது பார்த்தாலும் உன் நினைவாகவே இருக்கிறது. நீ என்னைப் பைத்தியமாக்கிவிட்டாய் என்பது போன்ற பல வழக்கமான காதல் மொழிகளால் கடிதம் எழுதியிருந்தாள் அவள். படித்தவுடன் அரை போத்தல் ஆர்.ஸி.கோல்ட் அடித்தது போல் கிறங்கியது அவனுக்கு. கிறக்கத்தில் நாற்காலியே ஆடுவதுபோல் இருந்தது. என்ன இது, ‘காதல் போதை தலைக்கேறியது’ என்று சொல்வார்களே, அது நிஜத்தில் நடக்கிறது. தலையே சுழல்வதுபோல் இருக்கிறதே என்று நினைத்துக்கொண்டான். சில நொடிகளில் நிலைமை சரியாகிவிட்டது.

பதிலை மாய்ந்து மாய்ந்து டைப் செய்து அனுப்பினான். பிறகு எட்டு மணியளவில்தான் தெரிந்தது - தலை சுற்றியதும், நாற்காலி ஆடியதும் காதலினால் அல்ல, பூகம்பத்தினால் என்று.

பத்து மணியளவில் மைலாப்பூரில் இருக்கும் அலெக்ஸைப் பார்க்கக் கிளம்பினான். அலெக்ஸ் அவனுடைய இலக்கிய உலக நண்பன். சிறு

பத்திரிக்கை நடத்தி வருபவன். வழக்கம்போல் பெருமாள் எழுதும் கதைகளை பெண்கள் டைப் செய்ய மாட்டார்கள். 'ஆபாசமாக இருக்கிறது' என்று கூறி மறுத்துவிடுவார்கள். ஆபாசத்தை டைப் செய்தால் கற்பு பறிபோய்விடுமா என்ற சந்தேகம் எழும் பெருமாளுக்கு. 'ஆனால் அவர்கள் சொல்வதிலும் நியாயம் இருக்கிறது' என்று ஒருமுறை என்னிடம் கூறினான். 'நான் எல்லா கதைகளையும் சுய மைதுனம் செய்வதற்கு முன்போ அல்லது பின்போ அல்லது சுய மைதுனம் செய்துகொண்டோதான் எழுதுகிறேன். சுய மைதுனத்துக்கு முன்பு என்றால் செக்ஸ் தூக்கலாக இருக்கும். பின்பு என்றால் கம்மியாக இருக்கும். செய்துகொண்டே எழுதினால் படு தூக்கலாக இருக்கும். அப்படிப் பார்க்கும்போது என் எழுத்துக்களை என் ஆண்குறியால் எழுதுகிறேன் என்றுதானே அர்த்தமாகிறது? அதை எப்படி ஒரு பெண் டைப் செய்வாள்? ஒரு பெண்ணைப் பார்த்து ஒருவன் தனது விரைத்த குறியைக் காண்பித்தால் அது ஈவ் டீஸிங் ஆகாது?' என்று மேலும் கூறினான் பெருமாள்.

ஆம். இது ஒரு பாலியல் நடவடிக்கைதான் என்றே எனக்கும் தோன்றுகிறது. இந்த நாவலின் அத்தனைப் பக்கங்களையும் சாதனா என்ற ஒரு 18 வயதுப் பெண்தான் டைப் செய்து கொடுத்துக் கொண்டிருக்கிறாள். இந்தியாவிலுள்ள எல்லா நெட் கஃபேக்களும் இன்று பாரிஸிலுள்ள செக்ஸ் க்ளப்புகளைப் போல் மாறிக்கொண்டு வருகின்றன. ஒரே ஒரு வித்தியாசம், அங்கே செக்ஸ் க்ளப்புகளில் மிக ஜாக்கிரதையாக நடக்க வேண்டும். இல்லாவிட்டால் தரையின் கொழகொழப்பில் வழுக்கி விழுந்துவிட நேரிடும். அந்தப் பிரச்னை இன்னும் இந்திய நெட் கஃபேக்களில் ஏற்படவில்லை. ஜோடி ஜோடியாய் வரும் இளைஞர் கூட்டம் தனித்தனி கேபினுக்குள் சென்று பலவிதமான செக்ஸ் இணையதளங்களைக் கண்டு களித்துக்கொண்டிருக்கின்றன. ஆனால் ஒவ்வொரு கணினியின் முன்பும் 'ஆபாச சைட்டுகளைப் பார்ப்பது குற்றம்' என்ற அறிவிப்பு மட்டும் தொங்கிக்கொண்டிருக்கிறது.

சாதனாவுடன் பிழைதிருத்தம் செய்துகொண்டிருந்தபோது அவள் இதையெல்லாம் அர்த்தம் தெரிந்துதான் அடிக்கிறாளா என்று எனக்கு ஒரு சந்தேகம் எழுந்தது. அந்தச் சந்தேகம் அவள் ஒருமுறை இந்த நாவலில் ஒரு சிறு திருத்தம் சொன்னபோது தீர்ந்தது. 'ரோஜா படத்தில் முலைகள் குலுங்க ஓடி வரும் மனிஷா கொய்ராலா...' என்று தன் கையெழுத்துப்படியில் எழுதியிருந்தான் பெருமாள். நானும் அதைக் கவனிக்காமல் அப்படியே பிரதியெடுத்து டைப் செய்யக் கொடுத்துவிட்டேன். 'இல்லை, நீங்கள் எழுதியிருக்கும் ஸீன் வருவது பம்பாய் படத்தில்' என்றாள் சாதனா.

அலெக்ஸுக்கு இப்படி ஒரு சாதனா கிடைக்கவில்லையோ என்னவோ, ஒரு ஆண் பிள்ளையை விட்டு டைப் செய்தான். அந்த ஆண்பிள்ளை பக்கத்துக்கு நூறு பிழைகளுடன் டைப் செய்து விட்டதால் பிழை திருத்தம் செய்வதற்காகத்தான் பெருமாள் மைலாப்பூருக்குக் கிளம்பினான். ஆட்டோவில் சென்று கொண்டிருந்தபோது, எதிர்ப் பக்கமிருந்து பெண்கள் கும்பல் கும்பலாக ஓடிவந்துகொண்டிருந்தார்கள். முகத்திலும், பேச்சிலும் கலவரமும் பீதியும் தெரிந்தன. என்னவோ விபரீதம் நடந்திருக்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டே அலெக்ஸ் வீட்டைச்

சென்றடைந்தான் பெருமாள். அல்லோலகல்லோலப் பட்டுக்கொண்டிருந்தது தொலைக்காட்சி. எதிர்க்கட்சி சேனலில் தமிழகமெங்கும் கடற்கரைப் பகுதிகளில் பிணக்குவியல்கள் மலைமலையாகக் கிடக்கின்றன என்றும், இதற்கெல்லாம் காரணம் ஆளுங்கட்சித் தலைவிதான் என்றும், ஆளுங்கட்சி சேனலில் தமிழ் நாட்டில் பிரளயமே வந்தாலும் முதல்வர் அதை ஊதித்தள்ளிவிடுவார் என்றும் செய்திகள் தரப்பட்டுக் கொண்டிருந்தன. ஆனால் எதிர்க்கட்சி சேனலைத் திட்டிக் கொண்டே அந்தச் சேனலைத்தான் பார்த்துக் கொண்டிருந்தான் அலெக்ஸ். பெருமாளுக்கு அதில் மனம் செல்லவில்லை. அவன் மனம் ஒரு வேசியின் உடலைப் போலாகி எவ்வளவோ காலம் ஆகிறது. எந்தத் துயரமும் அவனுக்குள் பதற்றத்தை ஏற்படுத்துவதில்லை. சொல்லப் போனால், இவற்றையெல்லாம் அவன் உள்ளூர ரசிக்க ஆரம்பித்துவிட்டானோ என்று கூட எனக்கு ஒரு சம்சயம் உண்டு. உதாரணமாக, செப்டம்பர் 11 சம்பவத்தைத் தொலைக்காட்சியில் பார்த்துவிட்டு அவன் பேசிக்கொண்டிருந்தபோது நானும் உடனிருந்தேன். அப்போது நாங்கள் கோழிக்கோட்டில் இருந்தோம். மத்திமீனைத் தொட்டுக்கொண்டே ஆர்.சி.கோல்டைக் குடித்தபடி அவன் பேசியதைக் கேட்டபோது, அவன் பேசிக்கொண்டிருப்பது கப்போலாவின் Apocalypse Now படத்தைப் பற்றியா அல்லது அன்றைய இரட்டைக் கோபுர சம்பவத்தைப் பற்றியா என்றே எனக்குச் சந்தேகம் வந்துவிட்டது. ‘ஆயிரம் சூரியன்களின் வெப்பத்தைத் தாங்க முடியாமல் மனிதர்கள் சாளரங்களிலிருந்து குதித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆகாயத்திலிருந்து மனித உருவங்கள் தலைகீழாய் விழுந்துகொண்டிருக்கின்றன. க்ராபிக்ஸ் அல்ல. நிஜம்...’ அவன் குரலில் தெரிந்தது ஒரு ஆச்சரிய உணர்வுதானே தவிர அதில் வேதனை என்பது எள்ளளவுமில்லை.

‘அப்படியானால் தில்லியில் நடந்த சீக்கியப் படுகொலை பற்றி அவ்வளவு தீவிரமாக ஒரு கதை எழுதியிருப்பானா?’ என்று கூர்மையான வாசகியர் யாரேனும் கேட்கலாம். அதையெல்லாம் வெளியே சொன்னால் வெட்கக்கேடு. அந்தச் சம்பவம் நடந்தபோது அவன் தில்லியிலேயே இல்லை. பிறகுதான் பழைய பத்திரிகைகளைத் திரட்டி நேரில் பார்த்ததுபோல் எழுதிவிட்டான். அதெல்லாம் ஒரு பத்திரிகைக்காரனின் வித்தை. சந்தன வீரப்பனையே பார்க்காமல் அவனைப் பார்த்ததுபோல் ஒரு பேட்டி சில ஆண்டுகளுக்கு முன்பு வந்ததே ஞாபகம் இருக்கிறதா? அப்படித்தான் பெருமாளின் கதையும்.

அவனுடைய அறச்சீற்றமும், துயரம் தோய்ந்த பக்கங்களும் தன்னுடைய political correctnessஐக் காண்பித்துக்கொள்ள அவன் போடும் முகமூடிகள். அவ்வளவுதான். ஒருமுறை அவன் சொன்னான்: ‘அறச்சீற்றம் என்பது கருந்தேளின் விஷக் கொடுக்கு; அது கொட்டிவிட்டால் பின்னர் அந்த வலி ஆயுள் முழுதும் உன்னைத் தொடர்ந்து கொண்டேயிருக்கும்.’

பேரழிவுச் செய்திகளைப் பரபரப்புடன் வழங்கிக் கொண் டிருக்கும் அந்த எதிர்க்கட்சி சேனலுக்கும் தன்னைப் போலவே அதில் ஒருவித necrophilic pleasure இருப்பதாக உணர்ந்தான் பெருமாள்.

‘கடலுக்கு மிகப் பக்கத்தில் இருக்கிறோமே நாம். என்ன செய்வது?’ என்று பதற்றம் மிகக் கேட்டான் அலெக்ஸ்.

‘கவலைப்படாதே. ஆட்டோவை வாசலில்தான் நிறுத்திவிட்டு வந்திருக்கிறேன். ஓடிவிடலாம்’ என்றான் பெருமாள்.

ஆனால் பிறகுதான் யோசித்துப் பார்த்தபோது புரிந்தது. ஆயிரக்கணக்கான மக்கள் கூட்டம் உயிருக்குப் பயந்து தாறுமாறாய் ஓடும்போது ஆட்டோவோ அல்லது வேறு எந்த வாகனமோ எப்படிப் போக முடியும் என்பது.

சுனாமிக்குப் பிறகு மணியைக் கடற்கரையில் சந்திப்பதைத் தவிர்த்து வந்தான் பெருமாள். சுனாமி என்ற வார்த்தை அவனுக்கு அறிமுகமானது கோழிக்கோட்டில் இருந்த ஷீலாவிடமிருந்து. பெருமாள் அலெக்ஸைச் சந்தித்த அன்று இரவு அவள் ‘சுனாமியால் உனக்கும் மணிக்கும் ஒன்றும் பிரச்னையில்லையே? நீங்கள் கடற்கரை ஆசாமிகள் என்பதால் கேட்கிறேன்’ என்று ஒரு குறுந்தகவல் அனுப்பியிருந்தாள். ‘ஓ... இன்று கடலில் நடந்த விபரீதத்துக்குப் பெயர் சுனாமியா? ஆனால் இது மலையாள வார்த்தைபோல் இல்லையே?’ என்று நினைத்தான். மறுநாள் தான் அது ஜப்பானிய வார்த்தை என்று புரிந்தது. ஆனால் தமிழ் ஆர்வலர்கள் அதை ‘ஆழிப்பேரலை’ என்று மொழிபெயர்த்ததில் அவனுக்கு இஷ்டமில்லை. சுனாமி என்ற வார்த்தைதான் அவனுக்குப் பிடித்திருந்தது.

ஆனால் சுனாமி தாக்கிய இந்த ஓராண்டு காலத்தில் இரண்டு மூன்று முறைதான் அவன் பீச் பக்கம் சென்றிருப்பான். அப்போதும் சுனாமி பற்றித்தான் பேசுவான். மேலும், சுனாமிக்குப் பிறகு கடலின் இயல்பும், தோற்றமும்கூட வெகுவாக மாறியிருந்தன. எப்போதுமே பெரும் சீற்றத்துடன் பாய்ந்துகொண்டிருந்தன அலைகள்.

பேரலைகள் எழுந்து வந்துவிட்டால் எந்தப் பக்கம் ஓடுவது என்று மணியுடன் ஆலோசித்தான். எதிரேயிருக்கும் மூன்றடி உயர தடுப்புச் சுவரைத் தாண்டுவது ஒன்றும் கடினமல்ல. ஆனால் அப்படியே ஓடினாலும் கொஞ்ச தூரம்தானே ஓடித் தப்பிக்க முடியும்? அதற்கு அப்பாலுள்ள கட்டிடங்களை என்ன செய்வது?

‘அதற்கெல்லாம் அவசியம் ஏற்படாது’ என்றான் மணி. விஷயம் என்னவென்றால், கலங்கரை விளக்கம் அதன் அருகிலுள்ள காவல் நிலையத்தின் அதிகாரத்தின் கீழ் இயங்குகிறது. இதனால் அந்தக் காவல் நிலையத்துக்கு வசூல் கம்மி என்றுதான் சொல்லவேண்டும். ஏனென்றால், மணியும், அவனது நண்பர் குழாமும் நின்று தண்ணியடிக்கும் இடத்திலிருந்து சுமார் 500 மீட்டர் தூரத்திலிருந்துதான் காதலர்களிடமிருந்தும், தண்ணியடிப்பவர்களிடமிருந்தும் வசூல் வேட்டை செய்யும் போலீஸின் எல்லை துவங்குகிறது. 500 மீட்டர் தூரத்துக்குள் இருப்பவர்கள் மணியின் நண்பர்களாக இருக்கலாமோ என்று போலீஸுக்குப் பயம். தப்பித்தவறி வசூலித்துவிட்டால் கை மேல் ட்ரான்ஸ்ஃபர் ஆர்டர் கிடைக்கும். எதற்கு வம்பு?

ஆனால் ஒருமுறை மணியும் நண்பர்களும் கோவளம் கடற்கரையில் நின்று தண்ணியடித்துக்கொண்டிருந்தபோது அடைந்த அனுபவம் வேறு மாதிரியிருந்தது. அங்கு வந்த போலீஸ் அதிகாரி அவர்களைப் பார்த்து ‘பக்கத்தில் பார் இருக்கிறதே? அங்கு போய் அடிக்க வேண்டியதுதானே? இங்கு ஏன் நின்றுகொண்டு தொந்தரவு செய்கிறீர்கள்? உங்களைப் பார்த்தால் தமிழ்நாட்டுக்காரர்களைப்போல் தெரிகிறது. அதனால்

விடுகிறேன்' என்று சொல்லிவிட்டு, அவர்கள் ஜீப்பின் பானெட்டில் வைத்திருந்த க்ளாஸ்களையெல்லாம் தன் லத்தியால் வரிசையாகத் தட்டிவிட்டார். 'நாங்கள் தொந்தரவு எதுவும் செய்யவில்லையே?' என்று சொல்ல வாயெடுத்தான் பெருமாள். பிறகு 'எதற்கு வம்பு?' என்று விட்டுவிட்டான். பிடித்தால் ரத்தப் பரிசோதனைக்கு ரத்தம் கொடுக்க வேண்டும். எல்லாவற்றையும் யோசித்து ஓடிவிட்டனர் நண்பர்கள். 'என்ன இருந்தாலும் தமிழ்நாட்டு போலீஸ் தமிழ்நாட்டு போலீஸ்தான்' என்று முனகிக்கொண்டான் பெருமாள்.

பெருமாள் முனகியது சரிதான். 'நீங்கள் கவலையே படாதீர்கள் சார். சுனாமி வந்தால் மாடியில் ஏறிவிடுங்கள்' என்று சொல்லிவிட்டார் சென்னை கலங்கரை விளக்கக் காவல் நிலைய அதிகாரி.

'நம்மால் அவ்வளவு வேகத்தில் படிக்கட்டுகளில் ஏறிவிட முடியுமா?' என்று மணி சொன்ன பிறகுதான் பெருமாளுக்கு நிம்மதியாயிற்று.

ஆனால் இப்போது அலைகள் கரையைத் தொடும் இடத்தில் நின்றுகொண்டிருந்தது ஜீப்.

'இப்போது சுனாமி வந்தால் என்ன செய்வது?' என்றான் மணி.

'அப்படியே கண்ணாடியை மூடிவிட்டு உட்கார்ந்துவிட வேண்டியதுதான். அப்புறம் கடவுள் விட்ட வழி' என்றான் பெருமாள்.

'என்னது கடவுளா?'

'ஆமாம், மரண பயம் வரும்போது மட்டும் கடவுளை நினைப்பேன்.'

அப்போது ஜீப் அருகில் மோட்டார் சைக்கிளில் வந்து நின்றார் ஒரு போலீஸ் சார்ஜன்ட். பின்னால் மற்றொரு போலீஸ்.

மணலில் வட்டமடித்துக்கொண்டிருந்தபோதே இரண்டு போலீஸ் டீம் வந்து விசாரித்துவிட்டு தலா ரூ.200/- வாங்கிக் கொண்டுபோய் விட்டார்கள். நரேன் அவர்களிடம் சென்று ஏதோ பேசினான். அதுவரை சற்று அதிகாரத் தோரணையுடன் தெரிந்த அவர்கள் முகம் நரேன் பேச்சுக்குப் பிறகு பவ்யமாக மாறியது. மரியாதையுடன் பெருமாளின் அருகில் வந்து 'என்ன சார்... மழையை எஞ்ஜாய் பண்றீங்களா? எங்களுக்கும் குளிரா இருக்கு சார்' என்று சொன்னார். சொற்கள் மயிலிறகால் வருடுவதுபோல் இருந்தன. 'இவர் ஏன் மணியிடம் விசாரிக்காமல் தன்னைக் கேட்கிறார்?' என்று ஒருகணம் குழம்பினான் பெருமாள். பிறகுதான் புரிந்தது - அவர் பெருமாளை

மணி என்று நினைத்துவிட்டார். நரேனிடமிருந்து அவருக்கும் பெயர்ந்தது ரூ.200/- (மணி அவ்வளவாக பைசா விஷயங்களில் கவனம் செலுத்துவதில்லை. கிட்டத்தட்ட நரேன்தான் மணியின் கேஷியர் மாதிரி.)

'நாங்கள் வந்திருக்க மாட்டோம் சார். புகாருக்கு மேல் புகாராக வந்துகொண்டிருக்கிறது. ஏற்கெனவே ரெண்டு டீம் வந்தது. ஆனால் ஜீப்காரர்களிடம் காசு வாங்கிக்கொண்டு 'மணலில் எந்த ஜீப்பும் இல்லை' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்கள் என்று மறுபடியும் புகார். அதனால்தான் வந்தோம்' என்று மன்னிப்புக் கேட்கும் தோரணையில் நரேனிடம் சொல்லி விட்டுக் கிளம்பினார் சார்ஜண்ட்.

இந்த சார்ஜன்ட் போக்குவரத்துப் போலீஸ். போக்குவரத்துப் போலீஸுக்கும் இந்தக் கடற்கரைக்கும் எந்தச் சம்பந்தமுமில்லை. மேலும், மணலில் பைக் வராது. ஆனால் மழை பெய்து மணல் இறுகியிருப்பதால் எப்படியோ சமாளித்து வந்துவிட்டார் சார்ஜண்ட்.

மோட்டார் சைக்கிள் மறைந்ததும், போலீஸுக்கு எதிரிலேயே குடிப்பது மரியாதையில்லை என்று அவ்வளவு நேரம் குடிக்காமல் வைத்திருந்த க்ளாஸைக் கையிலெடுத்தான் பெருமாள்.

‘வயித்தெரிச்சல் பிடிச்ச பயலுக.. நம்மளால மணல்ல போக முடியலியேன்னு புகார் பண்ணியிருக்கானுங்க’ என்றான் நரேன்.

மணல் பகுதியைத் தாண்டி தார்ச்சாலையில் நிறுத்தப்பட்டிருந்த கார்களுக்குச் சொந்தக்காரர்களாக இருக்கும். கைத்தொலைபேசியை எடுத்து 100 என்ற எண்ணை அழைப்பது எவ்வளவு சுலபம்!

மீண்டும் ஒரு அரை மணி நேரம் மணலில் சுற்றிவிட்டு வெளியே வந்து சாலையோரமாக ஜீப்பை நிறுத்தினார்கள். தூறல் நின்று சிலுசிலுவென்று வீசிக்கொண்டிருந்தது காற்று.

‘என்னடா இது... இந்த மாதிரி நேரத்துல வெட்டித்தனமா இப்படி ஆம்பளைங்களா நிக்கிறோம். உன் Museக்கு ஃபோன் போட்டு ஏதாவது ரொமான்ட்டிக்கா பேசேன்’ என்றான் மணி.

(அன்பான வாசகர்களுக்கு... இப்போது இந்த நாவலின் முக்கியமான ஒரு கதாபாத்திரமான ம்யூஸ் அறிமுகமாகிறாள். அவள் யார் என்பது யாருக்கும் தெரிந்துவிடக்கூடாது என்பதற்காகவே அவளுக்கு பெருமாள் அப்படி ஒரு புனைப்பெயர் வைத்திருக்கிறான்.)

GRTயில் வெரோனிகாவுடன் இருப்பதாகச் சொன்னாள் ம்யூஸ். வெரோனிகா ஒரு ஆவணப்பட இயக்குனர். அவள் இலங்கையைப் பற்றி ஆங்கிலத்தில் எடுத்த ஒரு படம் இந்தியத் துணைக்கண்டத்தில் தடை செய்யப்பட்டுள்ளது.

‘டார்லிங்... எங்கேடி இருக்கே?’

‘நான் வெரோனிகா பேசறேன். அவள் என் ஃபோனில் பேசிட்டு இருக்கா. இந்த ஃபோனில் பேட்டரி இல்லை.’

‘ஐயோ... ஸாரி வெரோனிகா. நான் பெருமாள்...’

‘தெரியும். தட்ஸ் ஓகே. ஏன் அன்னிக்கு என்கிட்ட பேசலை?’

‘ஓ ஸாரி வேரா... அன்னிக்கு நான் அவளோடு சண்டை. கோபத்தில் இருந்தேன். அப்புறம் சமாதானம் ஆய்டுச்சு. நாம் சந்திப்போம். அவளை என்னுடன் பேசச் சொல்லுங்கள்.’

சிறிது நேரத்தில் அழைத்தாள் ம்யூஸ்.

‘இரண்டு பேரும் இங்கே வாங்களேன். நான் பீச்சில் இருக்கிறேன்.’

‘ஸாரி, அவசரமான வேலை இருக்கிறது.’

‘தி.நகர் இங்கிருந்து பக்கமாயிற்றே? இங்கே சூழல் படு ரம்மியமாக இருக்கிறது டியர். மணி வேறு இருக்கிறான்...’

‘ஓ... சரி. மணி இருந்தால் வருகிறோம்.’

பெருமாளுக்கு சுருக்கென்றது. ஏனென்றால் நண்பர்கள் மத்தியில் அவள் பெருமாளுடன் பழகுவதே மணியைப் பிடிப்பதற்காகத் தான் என்பதாக ஒரு கிசுகிசு உலவிக்கொண்டிருக்கிறது. அது உண்மைதான் என்பதுபோல் ம்யூஸும் அடிக்கடி மணியை அறிமுகப்படுத்தி வைக்குமாறு பெருமாளை நச்சரித்துக் கொண்டிருந்தாள்.

இப்போது நாம் கதையை 9 மாதம் பின்னால் நகர்த்திச் செல்ல வேண்டும்.

முதல்முறை பேசும்போதே ம்யூஸ் தமிழ் இலக்கியக் குடிமகள் அல்ல என்று தெரிந்துவிட்டதால் பெரிதும் ஆசுவாசமடைந்தான் பெருமாள். ஏனென்றால் தமிழ் இலக்கியக் குடிமகள்களுக்குப் பெருமாளையும் அவன் எழுத்தையும் பிடிக்காது. ஏதோ ஒரு காமக் கொடூரனைப் போலவே அவனை அவர்கள் பார்ப்பது வழக்கம். உதாரணமாக ஒரு சம்பவம்.

ஒரு நாள் ஒரு இலக்கியக் கூட்டத்தில் ஒரு பிரபலமான பெண் கவிஞரைப் பார்த்து பெருமாள் ‘ஹலோ’ என்றான். எதிரெதிரே வந்துவிட்டதால்தான் ஒரு நாகரிகம் கருதி அவன் ‘ஹலோ’ சொன்னானே தவிர அந்த ஹலோவுக்கு வேறு எந்த அர்த்தமும் இல்லை.

மேலும், ஒரு பத்துப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் பெருமாள் திருவனந்தபுரம் திரைப்பட விழாவுக்குச் சென்றிருந்தபோது இதே பெண் - அப்போது கல்லூரி மாணவியாக இருந்தாள் - அவனோடு எப்படிப் பழகினாள் தெரியுமா? அந்த அசட்டுத்தனத்தை வார்த்தைகளால் வரிப்பது கடினம். பெருமாள், பெருமாள், பெருமாள் என்று வார்த்தைக்கு வார்த்தை அவனுடைய பெயரைச் சொல்லிக்கொண்டு, ஒரு நிமிடம்கூட பொறுக்க முடியாதபடி உளறிக் கொட்டிக்கொண்டு இருப்பாள். குறைந்தபட்சம் கண்ணுக்குக் குளிர்ச்சியாக இருந்தாலாவது பரவாயில்லை. அதுவும் மோசம், படு மோசம். ஒருவருடைய சரீரத்தைப் பற்றி குறையாகப் பேசுவது politically incorrectதான். ஆனாலும் என்ன செய்வது? 24 மணி நேரமும் political correctness உடனேயே வாழ்வது மிகவும் அலுப்பைத் தரக்கூடிய விஷயமல்லவா?

பெருமாளை பயமுறுத்தியது அவளுடைய வறண்ட சரீரம் அல்ல; அவளுடைய அசட்டுத்தனமான பேச்சு. அவளைக் கண்டாலே நழுவ ஆரம்பித்தான் பெருமாள். ஆனால் அப்படி அவன் நழுவுவதைக்கூட கண்டுகொள்ளும் சாமர்த்தியம் அவளிடம் இல்லை. நழுவி ஓடுபவனை ‘பெருமாள், பெருமாள்’ என்று கத்திக்கொண்டே வந்து பிடித்துவிடுவாள்.

ஒரு கட்டத்தில் அவனும் அவளை அப்படியே ஏற்றுக் கொண்டான். அதாவது, நழுவி ஓடாமல் பேச ஆரம்பித்தான். அசட்டுத்தனமாக உளறுவது எப்பேர்ப்பட்ட வேதனை என்பது அதை அனுபவித்தவர்களுக்கு மட்டுமே தெரியும். பெரிய வேடிக்கை என்னவென்றால், அந்த ஒரு வாரமும் அவன் இரண்டு எதிரெதிர் துருவங்களில் வாழ்ந்துகொண்டிருந்தான். ஒரு பக்கம், பெர்க்மனின் தத்துவ உலகம். மற்றொரு பக்கம், பைங்கிளி நாவல் கதாபாத்திரத்தின் கோப்ராயங்கள். அற்புதமான தளிகை ஒன்றைச் சாப்பிட்டுவிட்டு, கை உலர்வதற்கு முன்னே சாணத்தையும் சாப்பிட வேண்டிய நிலை. ஆனாலும், ‘பெண்ணே... என் கண் முன்னே வராதே’ என்று சொல்லக்கூடிய தைரியம்

பெருமாளுக்கு இல்லை என்பதால் அதன் அந்தச் சூழ்நிலைக்கேற்றபடி தன்னைத் தகவமைத்துக்கொண்டான். தளிகையும் சாணமும் ஒன்றென்று கண்ட அத்வைதி! கோழைத்தனத்துக்கும், ஹிப்பாக்ரஸிக்கும் இப்படியே ஒரு சப்பைக்கட்டு.

அதே பெண்ணைத்தான் பத்தாண்டுகளுக்குப் பிறகு சென்னையில் ஒரு இலக்கியக் கூட்டத்தில் பார்த்தான். பழைய பிரியத்துடனேயே 'ஹலோ' என்றான்.

ஆனால் இந்தப் பத்தாண்டுகளில் அவளுக்கு என்ன ஆனதென்று யூகிக்க முடியவில்லை. தமிழின் நம்பர் ஒன் கவிஞராகவும், யாராலும் அணுக முடியாதவளாகவும், அவள் பேசினாலே யாருக்கும் புரியவில்லை என்பவளாகவும் மாறிப்போனாள். பெருமாளின் ஹலோவுக்கு பதிலாக, 'என்ன வேணும்?' என்று ஜெயில் சூப்ரண்ட் ஒரு கைதியிடம் கேட்பதுபோல் கேட்டாள் அந்த நம்பர் ஒன் பெண் கவியாகிய மாஜி அசடு. திடீரென்று கன்னத்தில் அறை வாங்கியவனைப் போலானான் பெருமாள்.

இப்படிப்பட்ட பயங்கரவாதிகளே பெண் எழுத்தாளர்களாக உலவும் இந்தத் தமிழ்ப் பிராந்தியத்தில் ம்யூஸின் கலகலவென்ற சிரிப்பும், வெகு சிநேகிதமான பேச்சும் பெருமாளை க்ஷணப் பொழுதில் கவர்ந்துவிட்டது.

'என் தொலைபேசி எண் உங்களுக்கு எப்படிக் கிடைத்தது?'

'அலெக்ஸ் கொடுத்தார். ஆனால் பெருமாள்... உங்கள் தொலைபேசி எண் கிடைப்பதற்குள் போதும் போதும் என்றாகிவிட்டது. யாரைக் கேட்டாலும் அவரை சாராயக் கடையில் போய்ப் பார், வேசி வீட்டில் போய்ப் பார் என்கிறார்கள். (கலகலவென்ற சிரிப்பு) நான் உங்களுடைய 'சூன்ய வெளியில்' நாவலைப் படித்துவிட்டு உங்கள் அடிமையாகிப்போனவள் தெரியுமா?' என்று துவங்கி அரை மணி நேரம் பேசினாள்.

ம்யூஸ் ஸ்பெய்னில் பிறந்தவள். அப்பா ஸ்பானிஷ். அம்மா மலையாளி. 17 வயதிலிருந்து சென்னை வாசம். ஸ்பானிஷும் மலையாளமும் ரத்தத்திலேயே ஓடுகிறது. தமிழும் அத்துப்படி. சமஸ்கிருதத்தில் பண்டிட். இன்னும் எத்தனை மொழி தெரியும் என்று கண்ணாயிரம் பெருமாளுக்குத்தான் தெரியும்.

நான் இப்போது ஒரு நம்பிக்கைத் துரோகம் செய்துகொண்டிருக்கிறேன். ம்யூஸைப் பற்றி எக்காரணத்தைக் கொண்டும் இந்த நாவலில் எழுதிவிடக்கூடாது என்று உறுதிமொழி வாங்கியிருந்தான் பெருமாள். அதை இப்போது நான் மீறிக்கொண்டிருக்கிறேன். 'ஏன் எழுதக்கூடாது?' என்று கேட்டதற்கு 'அது மிகவும் அந்தரங்கம். வெளியே சொல்வதற்கில்லை' என்று பதில் சொன்னான். பொதுவாக பெருமாள் மற்றவர்கள் ஆச்சரியப்படும் அளவுக்கு வெளிப்படையான ஆள் என்றாலும், ம்யூஸ் விஷயத்தில் மிகவும் அமுக்கனாக இருந்ததன் காரணத்தை என்னால் யூகிக்க முடியவில்லை. வாசகர்களே... உங்களால் யூகிக்க முடிந்தால் எனக்கு எழுதுங்கள்.

பெருமாளுக்கு நான் அப்படி ஒரு உறுதிமொழி கொடுத்துள்ளபடியால் ம்யூஸ் பற்றி அதிகம் எழுதுவதற்கில்லை.

பெருமாளுக்கு அவளை மிகவும் பிடித்துப்போயிற்று. குறிப்பாக அவள் அவனைப் போலவே பேசினாள். அன்றைய தினம் அவள் இரண்டு

விஷயங்கள் சொன்னாள். ஒன்று, ஒரு பெண் எழுத்தாளர் எழுதிய ஒரு கவிதை பற்றியது. அதில் அந்தப் பெண், சம்போகத்திற்குப் பிறகு தன் தொடையில் வழிந்தோடும் சுக்கிலத்தின் சூடு பற்றி எழுதியிருக்கிறாளாம்.

வாசகர்களே... உலக இலக்கியம் என்பது ஒரு கடல். அதில் மேற்கண்டவாறு எந்தப் பெண் எழுத்தாளர் எழுதினாள் என்று எனக்குத் தெரியவில்லை. உங்களில் யாருக்கேனும் தெரிந்தால் எனக்கு அவசியம் தெரியப்படுத்துங்கள். ம்யூஸையே கேட்டுவிடலாம் என்கிறீர்களா? அவளை எனக்கு நேரடியாகத் தெரியாது. பெருமாளிடம் கேட்டால் என்னை உதைக்க வருவான்.

அடுத்து, தமிழ்ப் பெண் கவிஞர்களைப் பிடித்து ஒரு சாடு சாடினாள். அதற்கு அவள் மேற்கோள் காட்டியது ப்ரொ∴பஸர் எம்.கிருஷ்ணன் நாயரின் வரிகளை. சில பெண் கவிஞர்களின் கவிதைகள் தூரத்துணி நாற்றம் அடிக்கிறது என்று எழுதியிருந்தாராம் அவர். இங்கே சில என்ற வார்த்தையைக்கூட பெண் கவிஞர்களுக்கு பயந்து கொண்டு நான்தான் சேர்த்திருக்கிறேன். அவர்களுடைய கவிதையைப் பற்றி வாயே திறக்க முடியாத சூழல் இங்கே நிலவுகிறது. எடுத்ததற்கெல்லாம் குண்டாந்தடியைத் தூக்கிக்கொண்டு கிளம்பி விடுகிறார்கள்.

ப்ரொ∴பஸர் கிருஷ்ணன் நாயர் அவ்விதம் எழுதினாரா இல்லையா என்பது பற்றி எனக்குத் தெரியாது. ஆனால் தொடையில் வழியும் விந்து பற்றியும், அதன் சூடு பற்றியும் ஒரு பெண் வெகு இனிமையான குரலில் முதல் நாளே பேசியதில் கண்ணாயிரம் பெருமாள் மிகவும் சூடாகிவிட்டான். அதிலும் தமிழ்ப் பெண்கவிஞர்களைப் பற்றி வேறு விளாசுகிறாள். ‘சந்தேகமேயில்லை; இவள் நம் ஆள்தான்’ என்று பூரித்துப் போனான். ஒரே வாரத்தில் அவளிடம் தன் காதலைத் தெரிவித்தான்.

‘OK dear. You love me. I love you. But sex with one guy is boring. So don't expect me to...’

‘நிறுத்து நிறுத்து. என்னுடைய காதல் நிபந்தனையற்றது...’

சில தினங்களிலேயே, மணியை அறிமுகப்படுத்தி வைக்கச் சொல்லிக் கேட்டாள் ம்யூஸ். மணியிடம் அது பற்றித் தெரிவித்தான் பெருமாள்.

‘முதல்ல நீ போட்ரு. அப்புறம் என்னிடம் அறிமுகப்படுத்தி வை’ என்றான் மணி.

மெத்த சரி. ஏற்கெனவே அப்படி ஒரு தோழியை மணியிடம் அறிமுகப்படுத்தி வைக்க, அவளுக்கும் மணிக்கும் தீவிரக் காதலாகி, கடைசியில் அவள் பெருமாளை மணியிடமிருந்து கழற்றிவிடப் பார்க்க, மணி அவளைக் கழற்றி விட்டுவிட்டான். அதிலிருந்து பெருமாளை யாரும் கேணையனாக்கிவிடக்கூடாது என்பதில் கவனமாக இருக்க ஆரம்பித்தான் மணி.

ஒரு நாள் மணி வெளியூர் சென்றிருந்தபோது ம்யூஸை பீச்சுக்கு அழைத்துச் சென்றான் பெருமாள். நண்பர்களுக்கு அறிமுகப் படுத்தினான். சற்று நேரம் தனிமையில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர். அப்போது அவளை முத்தமிட முயன்றபோது குத்துச் சண்டை வீரர்கள் குத்துக்களைத் தவிர்ப்பதற்காக முகத்தை மூடிக் கொள்வார்களே அதுபோன்ற பாவனைகள் செய்தாள். மகா திமிர் பிடித்தவனான பெருமாளுக்கு இது போதாதா? ஒதுங்கிக்கொண்டான். திரும்பும் வழியில் நரேன் பெருமாளுக்கு

ஃபோன் செய்தான். ‘என்ன விஷயம், யார் ஃபோன் செய்தது?’ என்று கேட்டாள் ம்யூஸ். ‘பிரச்னை இல்லாமல் போய்ச் சேர்ந்தோமா என்று கேட்கிறான் நரேன்’ என்றான் பெருமாள். பிறகு இருவரும் சாப்பிடச் சென்றார்கள். இப்போது ம்யூஸ் அவனிடம் ‘நரேன்தான் எவ்வளவு நல்லவர்... நம் மீது எவ்வளவு அக்கறையாக விசாரிக்கிறார். அவர் ஃபோன் நம்பரைக் கொடுங்களேன், நானும் நன்றி சொல்லி விடுகிறேன்’ என்றாள். நரேனின் தொலைபேசி எண் அவனிடம் இல்லை. ‘அதனால் என்ன? ரிஸீவ்ட் காலில் அவர் நம்பர் இருக்குமே...’ என்றாள்.

இது நடந்து அடுத்த வாரம் நரேனும், ம்யூஸும் பாண்டிச்சேரியில் இருந்தார்கள். இரண்டு நாட்கள். ஒரு சமயம் போதையில் உளறி விட்டான் நரேன். பெருமாளிடம் இது பற்றி மூச்சுக்கூட விடக்கூடாது என்று சொல்லி இருந்தாளாம் ம்யூஸ். நரேன் அவனுடைய கைத்தொலைபேசியில் இருந்த ஸ்பீக்கரை ‘ஆன்’ செய்து ம்யூஸிடம் கொஞ்சினான். நரேன் சொன்னது உண்மைதான். இவ்வாறு பல பெண்களின் காதல் மற்றும் காமப் பிதற்றல்களை நரேன் தனது ஸ்பீக்கர் மூலம் நண்பர்களைக் கேட்கச் செய்திருக்கிறான். அந்த நூற்றுக்கணக்கான அசடுகள் கூட்டத்தில் ம்யூஸும் சேர்ந்துவிட்டது பற்றி பெருமாளுக்குச் சற்று வருத்தம்தான்.

‘என்ன பெருமாள் இது... நீயும் சராசரிகளைப் போல் பேசுகிறாய்? காலையில் எழுந்து ‘இதோ இப்போது மழை வர வேண்டும்’ என்று நினைத்தால் மழை வந்துவிடுமா? மழை வரும்போதுதானே வரும்? அப்படித்தான் போகமும். அது தானாக, இயல்பாக நடக்கும். அதற்குப்போய் திட்டமிட முடியுமா? திட்டமிட்டா நானும் நீயும் கவிதை எழுதுகிறோம்?’ என்று கேட்டாள். ‘உன்னோடு நான் கலவி கொள்ள வேண்டும் கண்ணே’ என்று ஒருநாள் பெருமாள் கேட்டதற்கு ம்யூஸ் கூறிய பதில் இது.

பெருமாளுக்கு அவள் சொன்னது புரியவில்லை. திட்டமிடாமல் எப்படி செக்ஸ் வைத்துக்கொள்வது? இந்தியர்கள் அதற்காக எத்தனை பெரிய விழா எடுக்கிறார்கள்? எவ்வளவு செலவு செய்கிறார்கள்? நாள் பார்க்கிறார்கள். கோள் பார்க்கிறார்கள். யோனிப் பொருத்தம் என்றுகூட ஏதோ சொல்கிறார்கள். பதிவேடுகளில் பதிவு செய்கிறார்கள். அதற்கென்று ஒரு அரசுத் துறை. பிறகு அந்த ஒப்பந்தத்தை ரத்து செய்துகொள்வதற்குத் தனியாக ஒரு நீதிமன்றம். அந்த நீதிமன்றத்தில் கூட்டம் அலைமோதுகிறது. ஒப்பந்தத்தை மீறி செக்ஸ் வைத்துக் கொண்டால் கலாச்சாரம் கெட்டுவிடும் என்று கழுதை மேல் ஊர்வலம் போகிறார்கள்.

அந்த இரண்டு கால் பிராணிகளின் கற்புப் பிரச்னையில் நம்மைப் போட்டு ஏன் வதைக்கிறார்கள் என்று நினைத்திருக்கும் அந்தக் கழுதைகள். மேனகா காந்தி ஏன் இந்தக் கழுதை வதைக்கு எதிராக எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை என்று புரியவில்லை. மற்றொரு சந்தேகம். கலாச்சாரம் என்பது மனிதனின் ஜனனேந்திரியங்களில் உற்பத்தியாகும் விந்து, மூத்திரம் போன்ற சமாச்சாரம்தானா? சரி... நாம் அந்த அளவுக்கெல்லாம் திட்டமிட வேண்டாம். ஆனாலும் செக்ஸ் வைத்துக்கொள்ள குறைந்த பட்சம் ஒரு அறையும் கட்டிலும் தேவையில்லையா? பத்தாண்டு காலம் தரையில் பாயை விரித்து எக்ஸுடன் செக்ஸ் வைத்துக் கொண்டதில் என் முழங்கால் மூட்டுக்களே சத்திழந்துவிட்டன. மெத்தையில்தான் செக்ஸ் வைத்துக்கொள்ள வேண்டும் என்று எனக்குச் சொல்லிக் கொடுத்தவளே மீராதான். சரியா? திட்டமிடாமல் புணர்வதற்கு நாம் என்ன மிருகங்களா?

அது அப்படித்தானே இயல்பாக நடக்கும்?

இப்படியாக என்னென்னவோ யோசித்தான் பெருமாள். ஆனால் அவளிடம் சொல்லவில்லை.

நரேன் சொன்னதைக் கேட்டபோது இதெல்லாம் அவனுக்கு ஞாபகம் வந்தது. ஆக, அவள் என்ன அகம் புறம் என்று பிரித்துவிட்டாளா? காதலுக்குப் பெருமாள். காமத்துக்கு நரேனா? கடும் போதையில் வீடு திரும்பிய பெருமாள் 'என்னை என்ன மாமா என்று நினைத்தாயா?' என்று ஒரு குறுந்தகவல் அனுப்பிவிட்டு, அவள் நட்புக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தான்.

பலமுறை ஃபோன் செய்தாள். பெருமாள் எடுக்கவில்லை. பல குறுந்தகவல் அனுப்பினாள். 'என்ன பெருமாள், இவ்வளவு சீக்கிரம் மறந்துவிட்டீர்கள்?' என்பதும் அதில் ஒன்று. எதற்கும் அவன் பதில் அனுப்பவில்லை.

காரணம், அவன் சந்தித்த எல்லாப் பெண்களுமே - ஒன்றிரண்டு பேர் நீங்கலாக - அவனிடம் அப்படித்தான் சொல்லியிருந்தார்கள். உன்னோடு காதல்; உன் நண்பனோடு காமம். நான் என்ன பெவகூஃபா? இருக்கட்டும். நான் யார் என்று காட்டுகிறேன்.

அவ்வப்போது நரேன் தனக்கும் ம்யூஸுக்கும் இடையில் நடக்கும் சம்பாஷணைகளைப் பற்றிச் சொல்லுவான். ஒரு முறை அவள் மணியைத் தனக்கு அறிமுகம் செய்து வைக்கச் சொல்லி கேட்டபோது 'நான் என்ன மாமாவா? என்னோடு பேசுவதாக இருந்தால் பேசு. இல்லாவிட்டால் வேண்டாம்' என்று கடுமையாகச் சொல்லியிருக்கிறான்.

மற்றொரு முறை தன்னை அவள் அமெரிக்காவுக்கு அனுப்பி வைக்கச் சொல்லி கேட்டபோது 'நான் என்ன ட்ராவல் ஏஜென்சியா நடத்துகிறேன்?' என்று கேட்டிருக்கிறான்.

இப்படிப் பல உரையாடல்கள்.

சரியாக ஒன்பது மாதங்கள் ம்யூஸ் இல்லாமல் கழிந்தது. இடையில் ஒரு நாள் பாலு அவளை அழைத்துக்கொண்டு பாண்டிச்சேரி செல்லத் திட்டமிட்டுக்கொண்டிருப்பதாகக் கூறினான். அது அல்ல பிரச்னை. பாலு கேட்ட வேறொரு விஷயம்தான் பிரச்னை. 'பெருமாள், ஒரு பத்தாயிரம் ரூபாய் கொடுத்தால் போதும்தானே?'

'அடப்பாவி.. அவள் அப்படிப்பட்ட பெண் அல்லடா... அந்த மாதிரி ஏதாவது செய்து அடி வாங்கிக்கொண்டு வராதே' என்றான் பெருமாள்.

பாலுவை ம்யூஸ் அய்யேயெஸ் என்றே நம்பிவிட்டாள் என்று தெரிந்தது. பெருமாளுக்கு உள்ளுக்குள் ஒரு குரூரமான திருப்தி ஏற்பட்டது. ம்... இப்படிப்பட்டவர்கள்தான் ம்யூஸுக்கு லாயக்கு. கசாப்புக்கடைக்காரன் தான் வளர்க்கும் ஆடுகளைப் பார்ப்பதுபோல் பெண்களைப் பார்க்கும் ஆண்களைத்தான் பெண்களுக்குப் பிடித்திருக்கிறது.

காலம் இப்படியே சென்றுகொண்டிருந்தபோது ஒரு நாள் இரவு பன்னிரண்டு மணியளவில் அஃப்ஸலுடன் லெதர் பாரிலிருந்து வெளியே வரும்போது, அஃப்ஸல் ம்யூஸுடன் பேசினான். நீண்ட நேரம் பேசிவிட்டு 'பெருமாள் பக்கத்தில்தான் இருக்கிறார். பேசுகிறாயா?' என்று கேட்டுவிட்டான்.

பெருமாள் கடும் போதையிலிருந்ததால் மீண்டும் பற்றிக்கொண்டு விட்டது - முன்னைவிட தீவிரமாக.

சுருக்கமாகச் சொல்ல வேண்டும். நான் பெருமாளுக்கு துரோகம் செய்துகொண்டிருக்கிறேன்.

ம்யூஸும் பெருமாளும் தனியாக இருக்கும்போது முத்தம் உட்பட சில சரஸ லீலைகள் நடந்து முடிந்தன. அப்போதெல்லாம் நாள் முழுதும் blue balls வலியில் தாக்கப்பட்டான் பெருமாள். 'எனக்கும் வலியில் உயிரே போகிறது' என்றாள் ம்யூஸ். ஒருவனோடு சம்போகத்தில் ஈடுபடாமல் சரஸ லீலைகள் செய்துகொண்டிருந்தால் பெண்களுக்கும் வலிக்குமோ? எனக்குத் தெரியவில்லை. மீண்டும் ஒரு நாள் பாண்டிச்சேரி பேச்சை எடுத்தான் பெருமாள். 'இன்று Red flag துவங்கியிருக்கிறது' என்றாள்.

இடையில் மணியும் அடிக்கடி 'என்ன, 'மழை' வந்துவிட்டதா?' என்று கிண்டலடித்துக்கொண்டிருந்தான்.

Red flag பற்றிச் சொன்னான். 'அடப்போடா... அப்படி சொல்லித்தான் தப்பித்துக்கொள்வார்கள் பெண்கள்' என்றான் மணி. கொஞ்சகாலம் கழித்து மீண்டும் பாண்டிச்சேரி பேச்சை எடுத்தான் பெருமாள். 'இன்று Red flag' என்றாள் ம்யூஸ்.

கணக்குப் போட்டுப் பார்த்தான். ஒரு மாதம் ஆகியிருக்கிறது. தலையை ஆட்டிக்கொண்டு விட்டுவிட்டான். இது நடந்து சரியாக ஒரு வாரம் கழித்துத்தான் கடற்கரையில் நண்பர்களோடு நின்று கொண்டிருந்தான் பெருமாள்.

வெரோனிகாவும் ம்யூஸும் வந்தார்கள். வெரோனிகா பெருமாளைப் பார்த்து 'ஸ்மார்ட்டாக இருக்கிறீர்கள்' என்றாள்.

பெருமாளுக்கு நிம்மதியாக இருந்தது. ஏனென்றால் அவன் அதற்கு முந்தின தினம்தான் ஃபேஷியல் போட்டிருந்தான். வாரம் ஒரு முறை ஃபேஷியல் போட்டுக் கொள்வது அவன் வழக்கம். தானே தன் முகத்தை விரல்களால் தடவித் தடவிப் பார்த்துக்கொண்டு 'அடடா, குழந்தையின் கன்னம்போல் இருக்கிறதே... இதை அனுபவிக்க ஒருத்திகூட இல்லையே' என்று நினைத்துக்கொண்டான். மதியம் மணியைப் பார்த்தபோதே 'என் முகத்தில் ஏதாவது மாற்றம் தெரிகிறதா?' என்று கேட்டு, அதற்கு மணி 'இல்லையே' என்று சொல்ல, அதனால் நொந்துபோயிருந்த இதயத்துக்கு வெரோனிகாவின் வார்த்தைகள் இதமாக இருந்தன. இரவு பெருமாளிடம் பேசினாள் ம்யூஸ். அவள் குரலில் என்றும் காணாத ஒரு குதூகலம் தெரிந்தது. 'மணி எப்படி இருந்தார் தெரியுமா?' என்று துவங்கினாள். 'என்ன, சேட்ஜி மாதிரி இருந்திருப்பார்...'

'சே சே... Horse மாதிரி இருந்தார். He is really a horse. அப்புறம் அவர் கை கொடுத்தபோது என் உடம்பில் ஒரு vibration ஏற்பட்டது. He has such a power...'

மணியின் ஸ்பர்ஸத்தால் ஏற்பட்ட vibration பற்றி பத்து நிமிடங்கள் பேசினாள்.

அமைதியாகக் கேட்டுக்கொண்டிருந்த பெருமாள். 'சரி, நாம் எப்போது பாண்டிச்சேரி போகலாம்?' என்று கேட்டான்.

'என்ன பெருமாள் இது... நீயே இப்படிக் கேட்கிறாய்? வேராவுடன் சேர்ந்து

ஒரு புதிய படம் செய்துகொண்டிருக்கிறேன் என்பது உனக்குத் தெரியும்தானே? இன்னும் நான்கு மாதங்களுக்கு என்னால் எங்குமே நகர முடியாது...'

'கண்ணாயிரம் பெருமாளின் 40 கதைகளும் சில பின்குறிப்புகளும்' என்ற gloomy நாவல் இத்துடன் முற்று பெறுகிறது.

பின்குறிப்பு:

ஒரு முறை ஏதோ பேச்சினிடையே ராம்லால் என்ற மலையாள நடிகரைப் பற்றிக் குறிப்பிட்ட ம்யூஸ், அவர் ஒரு ஐந்து நட்சத்திர ஓட்டலில் ஒரு விசேஷமான பார்ட்டி கொடுத்ததாகவும், தான் அதில் கலந்துகொண்டதாகவும் கூறினாள். என்ன விசேஷம் என்றால், அவர் இதுவரை 2999 பெண்களை போகம் செய்து விட்டார். அன்றைய தினம் விருந்துக்குப் பிறகு மூவாயிரமாவது பெண்ணை முடிக்கப்போகிறார். ம்யூஸ் சொன்னது வெறும் கிசுகிசுவாகக்கூட இருக்கலாம். ஆனால் மணிக்குத் தெரிந்த பெரிய அச்சக முதலாளி ஒருவரும் தான் 3000 பெண்களை சுகித்திருப்பதாகக் கூறினார். அவருடைய இரை, அச்சகத்துக்கு வரும் இளம் வயது பைண்டர் பெண்கள். எந்தக் கட்டாயமும் இல்லை. விருப்பப்பட்டால் வரலாம். 300 ரூபாய் சன்மானம். ஒருமுறை சுகித்த பெண்ணை மறுமுறை சுகித்ததில்லை. ஆனால் இவ்வளவையும் மீறி ஒரு பைண்டர் பெண் அவரை மடக்கி அவருடைய சின்ன வீடாகிவிட்டது. இதையெல்லாம் அவர் ஏதோ ஒரு அச்சகத் தளவாடக் கண்காட்சிக்காக சீனா சென்றிருந்தபோது, அதே கண்காட்சியில் தற்செயலாக நேர்ந்த சந்திப்பில் மணியிடம் கூறியிருக்கிறார்.

ஆனால் கண்ணாயிரம் பெருமாளின் சந்தேகம் என்ன வென்றால், அந்த மலையாள நடிகர் ராம்லாலும், அச்சக முதலாளியும் ப்ராட்மேன், சச்சின் டெண்டுல்கர் போன்றவர்கள் 'ரன்' கணக்கு வைத்திருப்பது போல் தாங்கள் சுகித்த பெண்களின் கணக்கை வைத்திருப்பார்களோ? கிராமத்துப் பெண்கள் தயிர்க்கணக்கைக் குடிசையின் சாணம் வேய்ந்த சுவரில் சாக்காட்டியால் கோடு போட்டுக் குறித்துக்கொள்வார்கள். ராம்லாலும், அச்சக முதலாளியும் எவ்விதத்தில் கணக்கு வைத்துக்கொண்டார்கள்? எப்படியோ, இம்மாதிரி 3000 பெண்களைச் சுகித்தவர்கள் தொட்டால்தான் ம்யூஸ் போன்றவர்களுக்கு vibration ஏற்படும்போல. அதற்கென்ன, ஈரமே ஆகியிருக்கும். மேலும், பென்ஸ் கார் வைத்திருப்பவன்தான் குதிரை; மற்றவனெல்லாம் கழுதை!

***

'கண்ணாயிரம் பெருமாளின் நாற்பது கதைகளும்
சில பின் குறிப்புகளும்' முற்றும்.

# பாகம்: இரண்டு

காமத்திலிருந்தே துக்கம் உண்டாகிறது;
காமத்திலிருந்தே பயமும் பிறக்கிறது.
காமத்திலிருந்து விடுதலையடைந்தவனுக்கு
துக்கமோ பயமோ இல்லை.

**தம்மபதம்: அத்தியாயம் 16: 214.**

# ராஸ லீலா

‘I hate all women because they deny me sex...’

கண்ணாயிரம் பெருமாள் எழுதி இன்னும் பிரசுரமாகாத ‘பெண்கள்’ என்ற நாவலின் தொடக்க வாக்கியம்.

‘I really love women. My enthusiasm for pussy is one of my few remaining recognisable, fully human qualities.’

Michel Houellebecq.

‘அப்பொழுது சரத் காலம். ஆகாயம் நிர்மலமாக இருந்தது. இரவில் தாரகைகள் பளீரென மின்னிக்கொண்டிருந்தன. முல்லை மலர்கள் பூத்துக் குலுங்கி, எங்கும் நறுமணத்தைப் பரப்பியது. வண்டுகள் வனங்களில் ரீங்காரம் இட்டு இசைத்துக் கொண்டிருந்தன. இன்பகரமான அந்த வேளையில் கோபியர்களுடன் கூடியிருக்க சித்தம் கொண்டான் கண்ணன். அவன் பலராமனுடன் இல்லாமல், அப்பொழுது தனித்தே இருந்தான். கண்ணன் குழலெடுத்து இன்னிசைத்தான். அது உச்ச ஸ்தாயிலேயும் கீழ் ஸ்தாயிலேயும் முறைப்படி மாறி மாறி ஒலித்தது. அந்த இனிய நாதம் வனிதையர்களின் உள்ளங்களைச் சுண்டியிழுத்தது. மகுடி நாதம் போன்ற அந்த இன்பப் போதையில் மனதைப் பறிகொடுத்த கோபியர்கள் தங்கள் இல்லங்களை விட்டு, மதுஸூதனன் இருந்த இடத்திற்கு விரைந்து வந்தார்கள்.

ஒரு கோப ஸ்த்ரீ கண்ணனின் குழல் நாதத்திற்கு ஏற்ப, மென்மையாகப் பண் இசைத்தாள். ஒருவள் கண்ணனைத் தனது உள் மனதில் நினைந்து நினைந்து அவன் நினைவினிலே ஒன்றிப்போனாள். ஒருவள் தன்னை அறியாமல் கண்ணா, கண்ணா என்று வாய்விட்டுக் கூச்சலிட்டு, பிறகு (மற்றவர்கள் தன்னைக் கவனிப்பதைப் பார்த்து) வெட்கித்துப்போனாள். ஒருவள் காம வயப்பட்டு பரபரப்புடன் அவன் பக்கத்திற்கு விரைந்து சென்றாள். ஒரு கோபிகை, வீட்டின் வாசற்புறத்தில் பெரியவர்கள் இருந்ததால், வெளியில் வர முடிய மாட்டாமல், வீட்டின் உள்ளேயே அடைபட்டு, வேறு வழியின்றி, க்ருஷ்ணனையே கண்களை மூடி நினைத்து அவனுடன் தன்மயத்தை அடைந்தாள். ஒரு கோபிகையின் அனுபவம் வித்தியாஸமாக இருந்தது. க்ருஷ்ணனை அடைய முடியவில்லையே என்ற ஏக்கத்தினால், பெருமூச்செறிந்து, ஜகத்காரண வஸ்துவான அந்தப் பரமாத்மாவையே எண்ணி, முக்தியை அடைந்தாள். அதனால் அவளுடைய பாபங்கள் அழிந்துபோனதோடு அல்லாமல், அவளுடைய புண்ணியக் குவியலும் அந்தப் ப்ரம்மானந்தத்தில் கரைந்துபோயிற்று. ஆயர்பாடியின் கோபியர்கள் அனைவரும் இப்படிக் கண்ணனைச் சூழ்ந்துகொண்டுவிட்டார்கள். சரத் ருதுவின் வெண்ணிலவு மனோகரமாய்

இருந்தது. கண்ணன் அந்த இன்பமயமான இரவில் கோபியர்களுடன் கூடி ராஸ நடனம் புரிந்து மங்கையர்களை மகிழ்வித்தான்.

-விஷ்ணு புராணம்

(பரத நாட்டிய சாஸ்திரத்தில் ‘ராஸ நடனம்’ என்பதைப் பற்றி ஒரு குறிப்பு வருகிறது. அது ஆண்களும் பெண்களும் ஒருவருக் கொருவர் கை கோர்த்துக்கொண்டு வட்டவட்டமாக ஆடிப்பாடி மகிழ்வது. ஆடுவோர் எண்ணிக்கை அறுபத்து நான்கு பேர்களுக்கு மேற்படாமல் இருக்க வேண்டும்.)

***

‘கண்ணாயிரம் பெருமாளின் நாற்பது கதைகளும் சில பின் குறிப்புகளும்’ என்ற நாவலுக்கு எந்த நேரத்தில் சாரு நிவேதிதா ‘முற்றும்’ போட்டானோ, என்னுடைய எழுத்துக்கே ஒட்டுமொத்தமாக ‘முற்றும்’ விழுந்திருக்கக்கூடிய ஒரு சூழ்நிலை ஏற்பட்டுவிட்டது. இது பற்றி சற்று விளக்கமாகச் சொல்ல வேண்டும்.

டிசம்பர் 2005ல் திருவனந்தபுரத்தில் நடந்த திரைப்பட விழாவுக்குச் சென்றிருந்தேன். ஆனால் திரைப்படங்களைப் பார்க்க முடியாதபடி கடுமையான எழுத்து வேலை. என்னுடைய ஒரு கெட்ட பழக்கம் என்னவென்றால், பத்திரிகைகளுக்கு கதையையோ கட்டுரையையோ தர வேண்டிய கெடு முடிவடைந்த பிறகுதான் அடித்துப் பிடித்துக்கொண்டு இரவு பகல் கண்விழித்து எழுதி அனுப்புவேன். அந்தப்படியே நான் திருவனந்தபுரம் திரைப்பட விழாவுக்கு வந்திருந்தபோது மூன்று பத்திரிகைகளுக்குத் தர வேண்டிய கதை கட்டுரைகளுக்கான கெடு முடிந்திருந்தது. ‘கதையானாலும் சரி, சினிமா விமர்சனமானாலும் சரி, புத்தக மதிப்புரையானாலும் சரி, கண்ணாயிரம் பெருமாள் எழுதுவது ஒரே விஷயம்தான் - அது செக்ஸ்’ என்பதாக விமர்சகர் ரிஜூ மேத்யூ எழுதியிருந்த கருத்தில் எனக்கு முழு உடன்பாடு உண்டு. அவர் சொல்வது உண்மைதான். அதனால் அந்த மூன்று பத்திரிகைகளுக்கும் வெவ்வேறு விதமான தலைப்புகளில் வெவ்வேறு விஷயங்களை எழுத வேண்டியிருந்தாலும், அது அடிப்படையில் ஒரே விஷயம் பற்றியதாகவே இருந்ததால் எனக்கு வேலை சுளுவாகவே இருந்தது. ஒரே கட்டுரையை மூன்றாகப் பிரித்து ஒன்றை வரலாறு குறித்த கட்டுரைத் தொடருக்கும், ஒன்றை நான் எழுதிக்கொண்டிருந்த நாவலின் ஒரு அத்தியாயமாகவும், கடைசிப் பகுதியை உலக இசை பற்றிய தொடருக்கும் அனுப்பி வைத்தேன். ஆனால் இந்த வேலையில் ஒரு வாரம் கழிந்துவிட்டது. படங்கள் பார்க்க முடியவில்லை. பியானோ டீச்சர் போன்ற ஓரிரண்டு படங்களையே பார்த்தேன். பியானோ டீச்சரைப் பார்த்தது அதிலிருந்த செக்ஸுக்காக. அதாவது, எரிகா கொஹுட்டின் முப்பத்தைந்து ஆண்டுக் கால வாழ்வில் அவள் அனுபவித்தேயிராத செக்ஸ். பியானோ டீச்சரைப் படித்தபோது எனக்கு என்னுடைய வாழ்க்கையையே யாரோ பக்கத்திலிருந்து பார்த்து எழுதியதுபோல் இருந்தது. எவ்வளவு பயங்கரமான செக்ஸ் வறட்சி மிகுந்த வாழ்க்கை!

ஆண்களேயில்லாத எரிகாவின் வறட்டுப் பாலைவனத்தில் அதிகபட்சமாக

அவள் எதிர்கொள்ளும் செக்ஸ், நீலப்படங்கள். அதைப் பார்த்து அவள் சுய மைதுனம் செய்வதில்லை; சிறுநீர் கழிக்கிறாள். அது கிடக்கட்டும். Isabelle Huppert நடித்த பியானோ டீச்சர் படத்தை நான் பார்க்க வேண்டுமென்று நினைத்தது அந்த நாவலில் வரும் ஒரே ஒரு சம்பவத்துக்காகத்தான். எரிகாவின் வாழ்க்கை முழுவதையும் ஆக்ரமிக்கும் செக்ஸ் வறட்சி - absence of sexual pleasure - ஒரு நாள் அவள் தன் வயதான தாயை வன்புணர்ச்சி செய்ய முயலும் செயலாக வெடிக்கிறது.

The daughter pulls mother's hands down and kisses Mother's throat. Erika's intention is cryprtosexual; she is a strange and unpracticed lover. Mother, who has likewise never enjoyed any higher education in love, employs the wrong technique: She tramples everything around her. This wears hardest on her old flesh. It is treated purely as flesh, not as Mother. Erika's teeth graze down her mother's flesh. She kisses and kisses Mother wildly. Mother calls her daughter's actions disgusting. Erika's lost all control. It's no use Mother hasn't been kissed like this for decades, and there's more to come! For the kisses keep on, until, after an endless drumroll of kisses, the daughter collapses in exhaustion, half lying on her mother... For a brief moment, Erika managed to see her mother's sparse pubic hair, which closes off the fat belly. The sight was unusual. Mother has always rigorously kept this pubic hair under lock and key. During the struggle, the daughter deliberately shoved around in her mother's nightgown, so she could finally see this pubic hair which she has always known was there. Unfortunately, the light was very poor. Erika cunningly uncovered her mother so she could see everything, simply everything. Mother's protests felt on deaf ears. Erika is stronger than her slightly workworn mother, at least from a purely physical point of view. The daughter now hurls what she has seen into her mother's face. Mother remains silent, as if nothing happened.

The Piano Teacher : Elfriede Jelinek

இந்தச் சம்பவம் எப்படிக் காட்சி ரூபமாயிருக்கிறது என்று பார்க்க வேண்டும் என்று நினைத்தேன்.

சீரியஸ் சினிமா என்றாலும் கூட எனக்கு அதில் வரும் பாலியல் காட்சிகளை, அதன் அர்த்த முக்கியத்துவங்களையெல்லாம் நீக்கிவிட்டு வெறும் பாலியல் காட்சிகளாக மட்டுமே பார்க்க முடிகிறது. அவமானப்பட வேண்டிய விஷயம்தான். ஆனால் என்ன செய்வது? நான் எரிகா கொஹூட்டின் ஆண் வடிவமாயிற்றே?

இலக்கியப் பிரதிகளை சினிமாவாக எடுக்கும்போது இயக்குனரும் அந்த இலக்கியவாதி அளவுக்கு வீரியமுள்ளவராக இருந்தால் சினிமாவை அந்த இலக்கியப் பிரதியைவிடச் சிறப்பானதாக மாற்றிவிட முடியும். உடனடியாக என் நினைவுக்கு வருவது பஸோலினியின் 120 days in the life of a sodome. இயக்குனர் Volker Schlondorff.

Ranஇல் ஒரு காட்சி:

பேரரசன் Hidetora ஒரு பிச்சைக்காரனாக, பைத்தியக்காரனாக அலைந்துகொண்டிருக்கும்போது புயலடிக்கும் ஓர் இரவில் அவனுக்கு அடைக்கலம் கொடுக்கிறான் ஒரு குருடன். முன்னொரு காலத்தில் அரசனாக இருந்தவன். Tsurumaru என்ற பெயருடைய அந்த அரசனின் கோட்டையையும் குடும்பத்தையும் அழித்து நிர்மூலமாக்கி அவன் கண்களையும் குருடாக்கியது ஹிததோராவின் படைகள்.

‘பேரரசனே… உன்னை வெறுக்காமலிருக்க என் சகோதரியிடமிருந்து கற்றுக்கொண்டேன். ஒரு பேரரசனுக்கு உரிய மரியாதையை இந்தப் பாழடைந்த குடிசையில் என்னால் உனக்குக் கொடுக்க முடியவில்லை. அதிர்ஷ்டவசமாக என் சகோதரி என்னிடம் ஒரு புல்லாங்குழலைக் கொடுத்திருக்கிறாள். அதை நான் உனக்காக வாசிக்கிறேன். அது ஒன்றுதான் இப்போது நான் உனக்கு அளிக்கக்கூடிய சந்தோஷம். என் இதயத்திலிருந்து வரும் அன்பு இது…’ என்று சொல்லிவிட்டுத் தன் புல்லாங்குழலை இசைக்கிறான். கிங் லியரிலும் இல்லாத ஒரு இடம் இது.

அதேபோல் படத்தின் இறுதியில் பேரரசன் ஹிததோராவின் கடைசி மகன் ஸ்பூரோ அவனுடைய சகோதரனின் ஆட்களால் கொல்லப்படுகிறான். ஹிததோராவின் மூத்த புதல்வர்கள் இருவரும் ஆட்சியதிகாரத்துக்காக ஹிததோராவை ஒரு பிச்சைக்காரனைப்போல் நாட்டைவிட்டு விரட்டிய சமயத்தில் தன் தந்தையை உண்மையாக நேசித்தவன் ஸ்பூரோ. ஸ்பூரோ இறந்ததும் அந்த அதிர்ச்சியிலேயே தானும் இறந்துவிடுகிறான் ஹிததோரா. அப்போது ஹிததோராவின் வாழ்நாள் முழுவதும் அவனுடைய பணியாளனாக இருந்தவன் ‘கடவுளே நீ உண்மையில் இருக்கிறாயா? புத்தர் இருக்கிறாரா? கடவுளே… நீ இவ்வளவு கொடூரமானவனா? சொர்க்கம் உனக்கு சலித்துப்போய்விட்டதா? அதனால்தான் எங்களை இப்படி எறும்பை நசுக்குவதுபோல் நசுக்கிக் கொல்லுகிறாயா? மனிதர்களை அழ வைப்பதில் உனக்கு இவ்வளவு சந்தோஷமா?’ என்று அழுது அரற்றுகிறான்.

அப்போது பக்கத்திலிருக்கும் படைத்தலைவன் கூறுகிறான்: ‘போதும்… கடவுளை நிந்திக்காதே. கடவுள்தான் இப்போது அழுதுகொண்டிருக்கிறார். காலகாலமாக மனிதர்கள் தங்களைத் தாங்களே கொன்று கொண்டிருப்பதை அவர் பார்த்துக் கொண்டிருக்கிறார். அவரால் நம்மிடமிருந்து நம்மைக் காப்பாற்ற முடியவில்லை. அழாதே… உலகம் இப்படித்தான் படைக்கப்பட்டிருக்கிறது. மனிதர்களுக்கு சந்தோஷத்தைவிட துக்கமும், அமைதியைவிட வேதனையும்தான் பிடித்திருக்கிறது. ரத்தத்தில் குதியாட்டம் போடுவதையே அவர்கள் விரும்புகிறார்கள். கொலையை அவர்கள் கொண்டாடுகிறார்கள்.’

ஷேக்ஸ்பியரை அகிரா குரஸவா விஞ்ச முடிந்த இடம் இது.

ஆனால் Michael Haneke இயக்கிய பியானோ டீச்சர் ஒரு படுதோல்வி. எரிகா கொஹுட் தன் தாயை வன்புணர்ச்சி செய்ய முயலும் காட்சி மிகவும் பலவீனமாக இருந்தது. காட்சியால் விளக்க வேண்டியதை இயக்குனர் வார்த்தைகளால் சொல்ல முயன்றார்: ‘உன்னுடைய பெண்குறியிலிருந்த முடியை நான் பார்த்தேன்’ என்று எரிகா தன் தாயிடம் கூறுகிறாள்!

நானும் ஒரு எரிகா கொஹுட்தான் என்று சொன்னேன். ஆனால் வெளிப்பாடுகள் வித்தியாசப்படும் இல்லையா? எரிகா தன் உடல் முழுவதும் குண்டூசியைக் குத்திக்கொள்வாள். எனக்கு சுய மைதுனம். சுய மைதுனம். சுய மைதுனம். அல்லது, வேறு சில சில்லறை வேலைகள். அப்படி ஒரு வேலைதான், திரையரங்கத்தில் தன் பக்கத்திலுள்ள இருக்கை ஒன்றை ‘ஆள் வருகிறது’ என்று சொல்லி ரிஸர்வ் செய்து வைத்து யாராவது அழகான பெண் வந்தால் அமரச் செய்வது.

திரைப்பட விழாவின்போது ஒரு நாள் மதியம் சினிமா பார்த்துவிட்டு நான்

தங்கியிருந்த விடுதிக்கு வந்து என் தோழி ஒருத்தியுடன் செக்ஸ் உரையாடல் செய்துகொண்டே சுய மைதுனம் செய்துவிட்டு ஆசுவாசமாக அமர்ந்தபோது உடம்பில் பொங்கிப் பொங்கி வியர்த்துக் கொட்டியது. இடது கை தாங்க முடியாமல் வலித்தது. ஸ்ட்ரோக் வந்துவிட்டதோ என்று பயந்துபோனேன். பயத்தில் இன்னும் வியர்த்தது. ஸ்ட்ரோக் என்றால் மார்பில் அல்லவா வலிக்கும்? மார்பில் வலி இல்லை. ஆனால் இடது கையில் வலி கூடிக்கொண்டே போனது. ஒருவேளை பக்கவாதமாக இருக்குமோ என்ற சந்தேகம் ஏற்பட்டது. இப்படியே இந்தச் சிறிய அறையில் இறந்து விடுவோமோ என்ற மரண அச்சமும் தோன்றியது. அடடா, இன்னும் எத்தனை வேலைகள் பாக்கியிருக்கின்றன? குறைந்த பட்சம், இந்த நாவலையாவது முடிக்க வேண்டாமா? இன்னும் எழுதவே ஆரம்பிக்கவில்லை; அதற்குள் முற்றுமா?

கார்லோஸுக்கு ஃபோன் பண்ணினேன். கார்லோஸ் திருவனந்தபுரத்தில் வருமான வரித் துறையில் உயர் அதிகாரியாக வேலை பார்ப்பவன். கல்லூரியில் என்னோடு ஒன்றாகப் படித்தவன். அப்போது தொடங்கிய சிநேகிதம் இன்னமும் தொடர்கிறது. அய்யேயெஸ். ஆனால் வித்தியாசமான அய்யேயெஸ். அதாவது, அய்யேயெஸ் அதிகாரியாக இருந்தும் கண்ணாயிரம் பெருமாளின் நாற்பது கதைகளில் வரும் என்னைப் போலவே வாழ்ந்துகொண்டிருப்பவன். ஒரு பைசா லஞ்சம் வாங்க மாட்டான். லஞ்சம் வாங்காதது கிடக்கட்டும். மற்ற விஷயங்களில் நான் ஒரு ஸ்டெனோவாக தபால் இலாகாவில் எத்தகைய துன்பங்களை அனுபவித்தேனோ அதையெல்லாம் ஒரு அய்யேயெஸ்ஸாக இருந்தும் அனுபவித்து வருபவன் கார்லோஸ். ஒரே ஒரு சின்ன உதாரணம் சொல்கிறேன். நான் திரைப்பட விழாவுக்காக திருவனந்தபுரம் வந்திருந்தபோது அவனும் என்னோடு ஒன்றிரண்டு தினங்கள் ஒன்றாக இருந்தான். இரண்டு பேரும் வெளியிலேயே சாப்பிட்டோம். சாப்பிட்டுவிட்டு வீட்டில் உள்ளவர்களுக்கும் சாப்பாடு வாங்கிக்கொண்டான், ஏன் என்று கேட்டபோது அவன் சொன்னான்; வீட்டில் பத்து நாட்களாக சமையல் எரிவாயு இல்லை. இன்னும் வருவதற்குப் பத்து நாட்கள் ஆகும்.

இதுதான் கார்லோஸ்.

இவன் அய்யேயெஸ்ஸாக ஆகாமல் ஒரு அய்யாரெஸ்ஸாக வருமான வரித் துறையில் மாட்டிக்கொண்டது ஒரு தனிக் கதை.

ஏற்கெனவே சிவில் சர்விஸில் தேறி பயிற்சியில் இருந்திருக்கிறான்; சற்று குறைந்த மதிப்பெண் என்பதால் அய்யாரெஸ். அதே சமயத்தில் மீண்டும் ஒரு முறை சிவில் சர்விஸ் எழுதியிருக்கிறான் - அய்யேயெஸ் கிடைக்க வேண்டும் என்பதற்காக நேர்முக தேர்வுக்கு அழைத்திருக்கிறார்கள். கார்லோஸுக்கு சொந்த ஊர் சுசீந்திரம். தேர்வாளர்கள் சுசீந்திரத்தைப் பற்றிக் கேட்டிருக்கிறார்கள்.

‘அந்த ஊர் எதற்குப் புகழ்பெற்றது?’

‘எதற்கும் புகழ்பெற்றது இல்லை.’

‘இல்லையே, அங்கே ஒரு புகழ் பெற்ற ஆஞ்சநேயர் கோவில் இருக்கிறதே?’

‘அப்படியா, நான் கோவிலுக்குச் செல்வதில்லை.’

‘ஓ... உங்கள் ஊரில் மற்றொரு விசேஷமும் உள்ளதே, தெரியுமா?’

‘இல்லையே...’

‘விவேகானந்தர் உங்கள் ஊருக்கு வந்திருக்கிறார்...’

‘ஓ...’

‘என்னது, எல்லா கேள்விகளுக்கும் ஒரு மாதிரியாக பதில் சொல்கிறீர்கள்? விவேகானந்தர் பற்றி உங்கள் அபிப்ராயம் என்ன?’

‘அவரைப் பற்றி எனக்கு ஒரு அபிப்பிராயமும் இல்லை...’

‘நீங்கள் என்ன நாஸ்திகரா?’‘

‘ஆமாம்...’

‘சரி, மும்மொழித் திட்டம் பற்றி உங்கள் கருத்து என்ன?’

‘அது சரியல்ல. இந்தி மொழி ஆதிக்கத்தை நிலைநிறுத்த முயற்சிக்கும் திட்டம் அது.’

‘என்னது, இந்தி மொழி ஆதிக்கமா... என்ன பேசுகிறீர்கள் நீங்கள்? உங்களைப் பார்த்தால் நக்ஸலைட் போலத் தெரிகிறது. உங்களை எப்படி அய்யாரெஸ்ஸில் விட்டார்கள்?’

‘விட்டால் அந்த வட இந்திய அதிகாரிகள் என்னை அடித்தே போட்டிருப்பார்கள்’ என்றான் கார்லோஸ்.

***

கார்லோஸ் போன்ற அப்பாவிகளும் அய்யேயெஸ் அதிகார வட்டத்தில் இருக்கத்தான் செய்கிறார்கள். எத்தனை சதவிகிதம் என்று தெரியவில்லை. ஆனால் இருக்கிறார்கள். கார்லோஸின் கதையைக் கேட்டால் அதை வைத்து நாற்பது கதைகள் எழுதலாம்போல் இருக்கிறது. சக அய்யேயெஸ்கள், கீழ்நிலை அலுவலர்கள், மூத்த அதிகாரிகள் என்று அத்தனை பேரிடமும் லோல்படும் கதை அது. ஒன்றிரண்டு உதாரணங்கள் சொல்கிறேன்.

தில்லியிலிருந்து மூத்த அதிகாரி ஒருவர் திருவனந்தபுரம் வருகிறார். அதற்காக லாட்ஜில் ரூம் போடச் சொல்லி கார்லோஸுக்கு ஃபோன் செய்கிறார். பொதுவாக, அதிகார மட்டத்தில் இதற்கெல்லாம் காசு கொடுப்பதில்லை. லாட்ஜ்காரர்களுக்கு வருமான வரித் துறையில் ஏதாவது வேலை ஆக வேண்டும் என்றால் அதை சுலபமாக செய்துகொடுப்பார்கள். ஒரு பரஸ்பர உதவி. வேறென்ன? ஆனால் நம் கார்லோஸ் என்ன செய்வான் தெரியுமா? அந்த உயர் அதிகாரியிடம் ‘ஓகே சார். ரூம் போட்டுவிடுகிறேன். பில்லை உங்களுக்கு அனுப்பி வைத்துவிடவா? அல்லது, நீங்கள் இங்கே வந்த பிறகு நேரடியாக செட்டில் பண்ணிவிட விரும்புவீர்களா?’ என்று கேட்டான். அவ்வளவுதான். அந்த மூத்த அதிகாரி தன் அனுபவத்திலேயே இப்படி ஒரு பதிலைக் கேட்டிருக்கமாட்டார். அன்றிலிருந்து கார்லோஸ் அவருடைய விரோதியாகிவிடுவான். அனாவசியமான விரோதம். சம்பந்தமில்லாத விரோதம்.

இதேபோல் சக அய்யேயெஸ்கள் இவனைப் படுத்துகிற பாடு. அதிலும் வட இந்தியர்களாக இருந்தால் இன்னும் கஷ்டம். தற்சமயம் ஸ்ரீவத்ஸவா என்ற ஒரு ஆளிடம் தான் படுகிற பாட்டை விவரித்தான் கார்லோஸ். ஸ்ரீவத்ஸவாவுக்கும் கார்லோஸுக்கும் அலுவலகத்தில் ஒரு கார் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்தியா இன்னும் ஒரு பின்தங்கிய நாடாகவே இருப்பதால் ஆளுக்கு ஒரு கார் கொடுக்க அரசாங்கத்துக்கு வசதியில்லை. அதனால் இரண்டு அதிகாரிகளுக்கு ஒரு கார். 'ஆனால் எல்லா சமயங்களிலும் நான் ஆட்டோவில்தான் போக வேண்டியிருக்கிறது' என்றான் கார்லோஸ். ஏனென்றால், கார்லோஸ் ஸ்ரீவத்ஸவாவுக்கு காரை அனுப்ப 5 நிமிடம் தாமதமாகிவிட்டாலும் ஸ்ரீவத்ஸவா மூன்று மணி நேரம் தாமதமாக்கித்தான் காரை அனுப்புவாராம். இதற்காகவே ஒரு ஹார்ட்வேர் ஷாப்புக்குப் போய் அங்குள்ள பொருட்களைப் பற்றி மூன்று மணி நேரம் விசாரிப்பார். ட்ரைவர் மூலமாகத்தான் தெரியும் தகவல். ஹார்ட்வேர் ஷாப்புக்கும் ஸ்ரீவத்ஸவாவுக்கும் எந்த சம்பந்தமும் இருக்காது. காலையில் வண்டி 5 நிமிடம் தாமதமாக வந்ததால் இப்போது மூன்று மணி நேரம் தாமதப்படுத்த வேண்டும். இதுதான் ஸ்ரீமான் ஸ்ரீவத்ஸவா அய்யேயெஸ்ஸின் தர்க்கம்.

ஒருநாள் என்னை திருவனந்தபுரம் சாலை பஜாரிலுள்ள ரஹ்மானியா ஓட்டலுக்கு அழைத்துச் சென்றான் கார்லோஸ். சாலை பஜாரில் கார் பஞ்ச்சராகிவிட்டதால், இறங்கி உடனே ரஹ்மானியா ஓட்டலுக்கு நடக்க ஆரம்பித்துவிட்டான். ஓட்டல் சற்று அருகிலேயே இருப்பதால் நடை; இல்லாவிட்டால் ஆட்டோ. ஆனால் மற்ற அய்யேயெஸ்ஸாக இருந்தால் அங்கேயே நின்றுகொண்டு அலுவலகத்துக்கு ஃபோன் போட்டு இன்னொரு காரை வரவழைப்பார்கள் என்றான் கார்லோஸ். ஆட்டோவில் போகலாம் அல்லது நடந்து போகலாம் என்பதே அவர்களுடைய யோசனையில் வராது என்றான். ஒரு அய்யேயெஸ் அதிகாரி எப்படி ஆட்டோவில் போகலாம்?

நடந்துபோனது மட்டுமல்ல, செலவுக்கு ட்ரைவரிடம் பணமும் கொடுத்தான் கார்லோஸ். பிறகு அதன் காரணத்தை என்னிடம் சொன்னான். 'ஆஃபீஸில் பில் போட்டு பணத்தை வாங்குவதற்கு மூன்று மாதம் ஆகிவிடும்.'

அன்றைய தினம் வெள்ளிக்கிழமையாக இருந்ததால் ஓட்டலில் எக்கச்சக்கக் கூட்டம். 'அந்த ஓட்டல் கோழிக்கறி மிகவும் விசேஷமானது. இப்படி ஒரு வறுவலை நான் எந்த இடத்திலும் சாப்பிட்டதில்லை' என்றான் கார்லோஸ், இந்த ஓட்டலை 'கேட்டல்' என்றும் குறிப்பிடுவதுண்டு. அந்த ஓட்டலின் முதலாளி முன்பு ஒரு காலத்தில் கெட்டிலில் தேனீர் விற்றுக்கொண்டிருந்தார் என்பதால் வந்த பெயர் அது.

அந்த ஓட்டலின் விசேஷம் என்னவென்றால், சமைப்பதற்கு சற்று முன்னால்தான் கோழியை அறுப்பார்களாம். சாப்பிடும் இடத்துக்குப் பக்கத்திலேயே கோழிக் குஞ்சுகளின் சத்தம் கேட்டுக்கொண்டிருந்தது. ஆடம்பர ஓட்டல் அல்ல. பார்ப்பதற்கு திருவல்லிக்கேணி மெஸ் மாதிரி இருந்தது.

'வறுத்த துண்டங்களைக் கையாலேயேதான் எடுத்து இலையில் போடுவார்கள்' என்றான் கார்லோஸ்.

அன்றைய தினம் தொழுகை முடிந்து வந்தவர்களின் கூட்டம் அதிகமிருந்ததால் அங்கே சாப்பிட முடியவில்லை. பிறகு மறுநாள் மதியம் வந்து சாப்பிட்டோம். கார்லோஸ் சொன்னது உண்மைதான்.

அன்று மாலை நானும் கார்லோஸும் ஊர் சுற்றிக்கொண்டிருந்த போது எனக்கு ஒரு பியர் குடிக்கலாம்போல் இருந்தது. கார்லோஸ் ஒரு டீட்டோட்டலர். பெரிய கோட்பாடெல்லாம் கிடையாது. மது அருந்தினால் உடம்புக்கு ஒத்துக் கொள்வதில்லை. அதுதான் காரணம். சே. உடம்பு கூடவா அவனுடைய வாழ்க்கை முறைக்கு ஏற்றாற்போல் இருக்க வேண்டும் என்று நினைத்துக்கொள்வேன்.

நான் பியர் குடிக்கலாம் என்று நினைத்தேனே அன்றைய தினம்தான் கார்லோஸ் தன்னுடைய உத்தியோக அந்தஸ்த்தைத் தன் சர்வீஸிலேயே முதல் முறையாக வெளியிடத்தில் சொல்ல நேர்ந்தது.

நாங்கள் தம்பானூரிலுள்ள ஒரு பெரிய ஓட்டலுக்குள் நுழைந்தோம். ரெஸ்தொராந்துக்குள் மதுபானம் அனுமதிக்கப் பட்டிருந்தது. உள்ளே போய் அமர்ந்து நான் ‘ஒரு பியர்’ என்றேன். ஆனால் அங்கே ஏதாவது சாப்பிட்டால்தான் மதுபானம் வழங்கப்படும் என்றார்கள். அப்போது மாலை மணி ஆறுதான் இருக்கும். பசி இல்லை. ‘அரை மணி நேரம் கழித்து ஏதாவது ஆர்டர் பண்ணுகிறேன். இப்போது ஒரு பியர்’ என்றேன். முடியாது என்று மறுத்துவிட்டனர். சாப்பாடு ஆர்டர் செய்தால்தான் மதுபானம்.

அப்போதுதான் அந்தப் பணியாளரிடம் கார்லோஸ் சொன்னான். தான் இன்கம் டாக்ஸ் கமிஷனர் என்றும், அன்று மதியம்தான் அந்த ஓட்டலின் உரிமையாளர் தன்னிடம் ஒரு உதவி வேண்டி வந்ததாகவும், அவரே தன்னைத் தன்னுடைய ஓட்டலுக்கு வரச் சொல்லி அழைத்திருந்ததாகவும்.

அப்போதுகூட அவன் தன் உத்தியோகத்தைப் பற்றிச் சொல்லியிருக்க மாட்டான். அன்றைய தினம் அவனுடைய விருந்தினராக இருக்கும் என்னுடைய பியர் ஆசையைப் பூர்த்தி செய்வதற்காகத் தன் நிலையிலிருந்து ஒரு காலை முன்னே வைத்து அதைச் சொல்லி விட்டான். என்ன துரதிருஷ்டம், பணியாளர் அதற்கும் அசையவில்லை. சர்வீஸிலேயே முதல் முறையாக தன் உத்தியோக அந்தஸ்த்தைச் சொல்லியும் தோல்வி.

ஃபோன் செய்ததும் அந்த நடு இரவிலும் ஓடி வந்தான் கார்லோஸ். மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றான். ரத்த அழுத்தம், ஷுகர், ஈஸிஜி, எக்கோ போன்ற பரிசோதனைகள் செய்யப்பட்டன. எல்லாம் நார்மல். மாத்திரை கொடுத்து அனுப்பிவிட்டார் டாக்டர்.

ஆனால் மறுநாளிலிருந்து நடக்கும்போது தாடையும் இடது கையும் வலித்ததால் அது இருதயப் பிரச்னை என்று நான் அறிந்திருந்தேன். இந்த க்ரீன்லேண்ட் ஓட்டலின் சிறிய அறையிலேயே இறந்துவிடுவோமா என்று பயந்துபோனேன். மீராவைப் பற்றிய அச்சம் எழுந்தது. மீரா அவளுடைய பதினெட்டாவது வயதில் கைக்குழந்தையுடன் விதவையாகி, வாழ்க்கையில் பலவிதமாக லோல்பட்டவள். மீண்டும் ஒரு முறை அவள் வாழ்வில் அப்படி ஒரு சம்பவம் நடந்துவிடக் கூடாது. என் மரணத்தை எதிர்கொள்ளும் துயரம் அவள் வாழ்வில் நிகழ்ந்துவிடவே கூடாது. எனக்கு முன்னால் அவள் போய்விட வேண்டும்.

மரணத்தைப் பற்றி எனக்கு எந்தவித அச்சமுமில்லை. ஆனால் மேற்படி விஷயம்தான் என்னை வெகுவாக அலைக்கழித்துக் கொண்டிருந்தது. மேலும், நான் செய்ய வேண்டிய வேலைகளும் இன்னும் நிறைய பாக்கியிருந்தன. இந்த இரண்டு காரணங்களால்தான் மரணத்தை ஒத்திப்போட வேண்டுமென்று ஆசைப்பட்டேன். ஆனால் அது நம் கையில் இல்லையே என்ற உண்மை பதற்றத்தைக் கூட்டியது. மறுபடியும் கார்லோஸை வரவழைத்து வேறு ஒரு டாக்டரிடம் சென்றேன். அவர் ஒரு இருதய நிபுணர். மீண்டும் ரத்த அழுத்தம், ஷுகர், ஈ.ஸீ.ஜி., எக்கோ பரிசோதனைகள். எல்லாம் நார்மல். மாத்திரை கொடுத்து அனுப்பிவிட்டார் டாக்டர். ஆனால் கார்லோஸுக்குத் திருப்தியில்லை. 'பயமுறுத்துகிறேன் என்று நினைக்காதே. இது உடனடியாகப் பரிசோதிக்க வேண்டிய விஷயம். 'விமானத்தில் ஊருக்குச் சென்றுவிடுகிறாயா?' என்று கேட்டான். 'விமானத்தில் டிக்கட் எவ்வளவு?' என்று கேட்டேன். 'எட்டாயிரம்... நான் புக் பண்ணிவிடுகிறேன்' என்றான்.

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. 'சென்னையிலிருந்து சிங்கப்பூருக்குப் போய்வரவே விமான டிக்கட் பனிரெண்டாயிரம்தான். அப்படியிருக்கும்போது இது எப்படி எட்டாயிரம்?' என்றேன்.

'எல்லாம் இந்த சினிமாக்காரர்களால் வந்தது' என்றான் கார்லோஸ்.

உள்நாட்டு விமானப் பயணம் என்பது இன்னமும் சினிமா நடிகர்களுக்கும், அரசியல்வாதிகளுக்கும், தொழிலதிபர்களுக்கும் மட்டுமே சாத்தியமாகிக்கொண்டிருப்பது எனக்கு ஆச்சரியத்தை அளித்தது. திருவனந்தபுரத்திலிருந்து சென்னைக்கு 2000 ரூபாய் இருக்கும் என்று நான் நினைத்திருந்தேன்.

ம்... அதனால்தான் மக்கள் இன்னமும் விமானம் பறக்கும்போது அண்ணாந்து அண்ணாந்து பார்த்துக்கொண்டிருக்கிறார்கள் போல.

ரயிலிலேயே செல்லலாம் என்று முடிவு செய்தேன். நடக்கும்போது தாடை மற்றும் இடது கை வலிப்பது நிற்கவில்லை. கேரள உணவை மிக விரும்பி உண்பவன் நான். சென்னையிலுள்ள குமரகம் உணவகத்துக்கு அடிக்கடி செல்பவன். அந்த குண்டு குண்டான சிவப்பு அரிசி, கறி மீன் பொளிச்சது, மத்தி மீன், மோர்க் குழம்பு, மீன் குழம்புடன் கொடுக்கும் தேங்காய்ச் சட்னி, மோர் மிளகாய், காலை உணவுக்கு வள்ளிக்கிழங்கும், கொத்துக்கடலையும் என்று கேரளத்தின் அத்தனை வகை உணவுக்கும் நான் அடிமை. 'நான் தமிழ்நாட்டில் தப்பிப் பிறந்தவன். கேரளாவில்தான் என்னால் இயல்பாக இருக்க முடிகிறது' என்று உணர்பவன். ஆனால் இது என்ன, ஒரே வாரத்தில் இருதயப் பிரச்னை? என்னதான் நான் கேரள உணவை விரும்பினாலும் 52 வருடமாகத் தமிழ்நாட்டு உணவுக்குப் பழகிப்போன இந்த உடம்பின் உள்ளமைப்பு கேரள உணவை ஏற்க மறுக்கிறதோ? - இப்படியெல்லாம் சிந்தனை ஓடியது.

சென்னை திரும்பியதும் ஒரு இருதய நிபுணரிடம் காண்பித்தேன். மீண்டும் பழையபடி ரத்த அழுத்தம், ஷுகர், ஈஸீஜி, எக்கோ எல்லாம் பரிசோதிக்கப்பட்டன. முடிவு வழக்கப்படி நார்மலாகவே வந்தது. ஆனால் கார்லோஸ் கூறியிருந்தபடி கொலஸ்ட்ரால் அளவு மட்டும் கூடுதலாக இருந்தது. அப்படியிருக்க வாய்ப்பில்லை என்று நான் அவனிடம் மறுதலித்திருந்தேன். தினமும் ஒரு மணி நேரம் வாக்கிங்,

இல்லாவிட்டால் ஏரோபிக்ஸ், வாரம் ஓரிரு முறை மட்டுமே குடி என்று இருக்கும் எனக்கு கொலஸ்ட்ரால் இருக்க வாய்ப்பில்லை என்று நினைத்திருந்தேன். மேலும், என்னுடைய பதினைந்து வயதிலிருந்து முப்பத்தைந்து வயது வரை தினமும் ஐந்து கி.மீ தூரம் ஓடிக்கொண்டிருந்தவன் நான். தில்லி பல்கலைக்கழக மைதானத்தில் நாள் தவறாமல் ஆஜராகிவிடுவேன். ஆனால் சென்னை திரும்பி தபால் துறையில் சேர்ந்ததும்தான் ஓட்டம், நடை எல்லாம் நின்றுபோனது. காரணத்தைத்தான் முந்தின பாகத்தில் விஸ்தாரமாக விளக்கியிருக்கிறேனே? அதன் பிறகு, அதாவது தபால் துறையைத் தலை முழுகிய பிறகு திரும்பவும் நடை, ஏரோபிக்ஸ் என்று ஆரம்பித்து விட்டேன்.

'ஆனால் நம்முடைய உணவு முறை?' என்று கேட்டான் கார்லோஸ்.

வாஸ்வதம்தான். மீன் வறுப்பதற்கு நான் அரை ஸ்பூன் ஆலிவ் எண்ணெய் பயன்படுத்துவேன் என்றால் மீரா எட்டு ஸ்பூன் சூரிய காந்தி எண்ணெய் ஊற்றுவாள். கேட்டால், ருசிக்காக என்பாள். சூரியகாந்தி எண்ணெயில் கொலஸ்ட்ரால் இல்லை என்று ஒரு வாதம்.

கொலஸ்ட்ரால் அளவு ஒருவருக்கு 200 வரை இருக்கலாம். எனக்கு 314 இருந்தது. ஆணாதிக்கத்துக்குப் பரிசாக இந்திய பெண்கள் தங்கள் கணவன்மார்களுக்கு அளிப்பது இந்த கொலஸ்ட்ராலும், அதன் காரணமான Bye Pass சர்ஜரியும் என்று கருதுகிறேன்.

கொலஸ்ட்ரால் அளவுகள்: கொலஸ்ட்ராலில் மூன்று வகை உள்ளன. LDL - கெட்டது, HDL - நல்லது, Triglyceride - கெட்டது.

LDL - இது குறைவாக இருப்பது நல்லது - அதாவது 100க்குக் கீழே. எனக்கு 265 இருந்தது. அதாவது, 100-129, 130-159, 160-189 என்ற மூன்று ஆபத்தான கட்டங்களைத் தாண்டி மிக மிக ஆபத்தான நிலையில் இருந்தது. HDL - இது நிறைய இருப்பது நல்லது. 40க்கு கீழே இருந்தால் இருதய நோயால் பாதிக்கப்படும் சாத்தியக்கூறு உண்டு. 60க்கு மேலே இருந்தால் இருதய நோய் வருவதைத் தடுப்பதில் இது பங்காற்றுகிறது. எனக்கு 49 இருந்தது.

Triglyceride - 150 க்கு குறைவாக இருப்பது நல்லது. 150-199, 200-499, 500க்கு மேல் என்ற மூன்று ஆபத்தான கட்டங்கள் உள்ளன. இது எனக்கு 568 என்ற மகா ஆபத்தான கட்டத்தில் இருந்தது.

இருதய இயக்கம் வெகு சீராக இருந்ததால் இருதய நிபுணர் ஈஸீஜி சாதனத்தை மார்பிலேயே பொருத்தி 24 மணி நேரத்திற்கு monitor பண்ண வேண்டும் என்றார். அன்றைய தினம் டிசம்பர் 17ஆம் தேதி மாலை ஐந்து மணியாக இருந்ததாலும், டிசம்பர் 18 என்னுடைய பிறந்த நாள் என்பதாலும் 'ஒரு நாள் கழித்து வைத்துக் கொள்ளலாமே?' என்றேன். ஆனால் டாக்டர் அவசரப்பட்டார்.

'நாளை மாலை நான்கு மணிக்கு எடுத்துவிடுகிறேன்' என்றார்.

அன்றைய பிறந்த நாள் வித்தியாசமாகக் கழிந்தது. பொதுவாக என் பிறந்த நாளை நண்பர் பட்டாளத்துடன் காலையிலிருந்தே மதுபான விடுதியில் கழிப்பதுதான் மரபு. ஆனால் இந்தப் பிறந்த நாளில் மார்பு பூராவும் ஒயர் ஒயராகத் தொங்கிக் கொண்டிருந்ததால் அது சாத்தியப்படவில்லை. நான்கு மணிக்குப் பிறகே குளித்து விட்டு வெளியே கிளம்பினேன். வழக்கமான

கொண்டாட்டமில்லை.

24 மணி நேர ஆய்விலும் இருதயச் செயல்பாடு சீராக இருப்பதாகவே தெரிந்ததால் இருதய நிபுணர் ஆஞ்ஜியோகிராம் பரிசோதனையைப் பரிந்துரைத்தார்.

பிறகு மறுநாள் மணியின் நண்பரான இருதய நிபுணரிடம் சென்றேன் - ஆஞ்ஜியோகிராம் செலவை மணி ஏற்றுக் கொள்வான் என்ற நம்பிக்கையில்.

ஏற்கெனவே நான்கு வருடங்களுக்கு முன்னால் ஒருமுறை என்னை இன்ஷூர் செய்துகொள்வதற்காகச் சென்று பலவித உடல் பரிசோதனைகளுக்குப் பிறகு Treadmill என்ற சோதனையின்போது நான் ஆயுள் காப்பீட்டுக்குத் தகுதியற்றவனானேன். அப்போது அந்த டாக்டர் என்னை உடனடியாக ஆஞ்ஜியோகிராம் செய்து கொள்ளச் சொல்லி பரிந்துரை செய்தார். ஐந்துக்கும் பத்துக்கும் சிங்கி அடித்துக்கொண்டிருந்த அப்போதைய நிலையில் என்னால் ஆஞ்ஜியோகிராம் பற்றி யோசிக்கக்கூட முடியவில்லை. ஒருவேளை ஆஞ்ஜியோகிராம் சோதனையில் இருதய சிகிச்சை செய்ய வேண்டும் என்று பரிந்துரைக்கப்பட்டால் லட்சக்கணக்கில் செலவாகும். யோசிக்க யோசிக்க பயம் கூடிக்கொண்டே போனதால் அது பற்றிய யோசனையையே கைவிட்டேன்.

மேலும், ஆயுள் காப்பீட்டுக்காக என்னைப் பரிசோதித்த டாக்டர் ஒரு இளம் பெண். அது மட்டுமல்ல, அவளுடைய body language சினிமாவில் வரும் கவர்ச்சி நடிகைகளை ஒத்திருந்தது. ஒரு சிறிய அறையில் மிக நெருக்கமாக அமர்ந்து ஈஸீஜி, எக்கோ என்று சோதித்துக்கொண்டிருந்தபோது கிட்டத்தட்ட அவள் உடம்பு முழுவதும் என் மீது படர்ந்திருந்ததால் அதன் காரணமாகவே என் இதயத் துடிப்பு அதீத வேகத்தில் அடித்துக்கொண்டிருந்தது.

ட்ரெட்மில் சோதனையின் முடிவு ஏடாகூடமாக இருந்ததற்கு இதுகூட காரணமாக இருக்கலாம் என்று விட்டுவிட்டேன். மேலும் ஒரு முக்கியமான விஷயம், கார்த்திக்கின் மேற்படிப்பு. அந்த டாக்டர் பரிந்துரைத்தபடி ரூபாயைச் செலவழித்திருந்தால் கார்த்திக்கும் என்னைப்போல் தபால் துறையில் குமாஸ்தாவாகச் சேர்ந்து சந்தி சிரிக்க வேண்டும். அந்த எண்ணமே என்னை மருத்துவமனைப் பக்கம் செல்லவிடாமல் தடுத்தது. இன்னும் நான்கைந்து ஆண்டுகளுக்குள் பெரிதாக ஒன்றும் உயிர்ப்பிரச்னை வந்துவிடாது என்ற நம்பிக்கையில் வாழத் துவங்கினேன்.

மணியின் நண்பரான அந்த இருதய நிபுணரும் என்னைப் பழையபடி ரத்த அழுத்தம், ஈஸீஜி, எக்கோ மற்றும் இன்னபிற பரிசோதனைகளுக்கு உட்படுத்திவிட்டு 'இருதயச் செயல்பாடு மிகச் சீராக இருக்கிறது. எதற்கும் ஆஞ்ஜியோகிராம் செய்து பார்த்துவிடுவோம். அட்மிட் ஆகிவிடுங்கள்' என்றார்.

பிறகுதான் தெரிந்தது. ஆஞ்ஜியோகிராம் என்பதே ஒரு குட்டி அறுவை சிகிச்சை மாதிரிதான் என்று.

ஒருவர் வந்து உடம்பு முழுக்க ஷேவ் செய்துவிட்டார். அப்போது பார்த்து ஒரு பிரச்னை. கவுட்டியில் படு மோசமான படை வந்திருந்தது. படை

வராமலிருக்க அவ்வப்போது ஆண்குறி மற்றும் அதன் சுற்றுப்புறப் பகுதியில் ஷேவ் செய்ய வேண்டும் என்று சொன்னார் வந்தவர். அதுதான் என் வழக்கமும். ஆனாலும் இப்போது வரக்கூடாத நேரத்தில் வந்திருக்கிறது படை. உடம்பில் ஷேவ் செய்துகொண்டே தன்னிடம் இதுவரை ஷேவ் செய்துகொண்ட பிரபலங்களின் பெயர்களை ஒரு பட்டியலைப்போல் அடுக்க ஆரம்பித்தார் அவர். தமிழக அரசியல் தலைவர்கள், சினிமா நட்சத்திரங்கள் எனப் பல பெயர்கள் அந்தப் பட்டியலில் இடம்பெற்றிருந்தன.

அன்றைய தினம் மாலை என்னை சக்கர நாற்காலியில் வைத்து ஆபரேஷன் தியேட்டருக்குத் தள்ளிக்கொண்டு சென்றனர்.

இதுவரை ஒரு க்ரோஸின் மாத்திரைகூட போட்டிராத எனக்கு ஆபரேஷன் தியேட்டர் மலைப்பாக இருந்தது. பச்சை நிற முகமூடியணிந்த நாலைந்து டாக்டர்கள். நர்ஸ்கள். ஆபரேஷன் தியேட்டரில் குறைந்த சப்தத்தில் ரேடியோவில் தமிழ் சினிமாப் பாட்டு ஒலித்துக்கொண்டிருந்தது. ஒன்றிரண்டு டாக்டர்கள் கைத் தொலைபேசியிலும் பேசிக்கொண்டிருந்தனர்.

ஆஞ்ஜியோகிராம் செய்வதற்கு வாகாக கையில் நரம்பு கிடைக்க வேண்டுமே என்று பிரார்த்தனை செய்துகொண்டிருந்தாள் மீரா.

தங்குவதற்குத் தனி அறை கிடைக்காததால் நாங்கள் வேறொருவரோடு ஒரு அறையைப் பகிர்ந்துகொண்டிருந்தோம். என்னுடைய அறைவாசி கிராமத்தைச் சேர்ந்தவர். குத்துச்சண்டை வீரரைப்போல் கட்டுமஸ்தாக இருந்தார். வயது 60. அவர்தான் அந்த விபரத்தைக் கூறியிருந்தார். கையில் நரம்பு கிடைக்காமல் தொடை நரம்பு மூலம் செய்தால் வலி கடுமையாக இருக்குமாம்.

எனக்கு வலியைவிட அந்தப் படைப் பிரச்னை பெரிதாக இருந்தது. படையை சரி செய்துவிட்டுத்தான் மேற்கொண்டு எதுவும் செய்ய முடியும் என்று சொல்லிவிட்டால் என்ன செய்வது என்ற கவலையில் ஆழ்ந்திருந்தேன் அப்போது.

நல்ல வேளை, நரம்பு கையிலேயே கிடைத்துவிட்டதால் கையில் லோகல் அனஸ்தீஸியா கொடுக்கப்பட்டது. வலது கையில் நாடி பார்க்கும் இடத்தில் ரத்த நாளத்தை அறுத்து அதன் வழியே கறுப்பு மை அனுப்பப்பட்டது.

மொத்தம் எட்டு இடங்களில் தடுப்புகள் இருப்பதாகத் தெரிந்தது.

இதயத் தசைகளுக்கு இரண்டு பிரதான குழாய்கள் செல்கின்றன. அவற்றின் விபரம்:

RCA Right Coronary Artery - இதயத்தின் வலது பகுதியில் உள்ளது. இதிலிருந்து சிறு சிறு குழாய்கள் பிரிந்து வலது பக்கத் தசைக்கும், இதயத்தின் பின் பக்கத் தசைக்கும் ரத்தத்தை எடுத்துச் செல்கின்றன.

LCA Left Coronary Artery - இதயத்தின் இடது பக்கத்தில் இருக்கும் பிரதான குழாய். இதுதான் இதயத் தசைகளுக்கு வேண்டிய பெரும் பங்கு ரத்தத்தை எடுத்துச் செல்கிறது. இடப் பக்கத்துக்கு ரத்தத்தை எடுத்துச் செல்லும் இந்தக் குழாயிலிருந்து பிரியும் பிரதான குழாய்கள்: LAD மற்றும் Circumflex Artery. LADA - Left Anterior Descending Artery - இந்தக் குழாய் இதயத்தின் முன்

பகுதிகளை கவனித்துக்கொள்கிறது. Circumflex Artery - இடது பக்கம் மற்றும் பின்பக்க இதயத் தசைகளுக்கு ரத்தத்தை எடுத்துச் செல்கிறது.

என்னுடைய ஆஞ்ஜியோகிராம் சோதனையில் கிடைத்த விபரம்:

80% lesion of LAD, 99% lesion of diagonal artery, 50% lesion of circumflex artery, 70% lesion of OMI, 30% lesion of Proximal RCA, 50% lesion of mid RCA, 90 lesion of distal RCA, 70% lesion of PDA. ஆக மொத்தம் எட்டு அடைப்புகள்.

வேலை முடிந்ததும், கையில் அறுத்த இடத்தில் இரண்டு நர்ஸ்கள் மிக இறுக்கமான ஒரு கட்டைப் போட்டார்கள். லகுவாகக் கட்டினால் ரத்தம் ஒழுகும் என்பதால்தான் அவ்வளவு இறுக்கமாகக் கட்டுகிறார்களாம்.

மறுநாள் மாலை வரை intensive careஇலேயே வைக்கப்பட்டிருந்தேன். படுக்கையைவிட்டு கொஞ்சம்கூட நகரவே அனுமதிக்கவில்லை. சிறுநீர் கழிக்க வேண்டுமானால் நர்ஸிடம் சொல்ல வேண்டும். அவர் ஒரு குடுவையைக் கொடுப்பார். சிறுநீர் கழித்துக் கொடுக்க வேண்டும். அதை வேறு ஒரு ஆண் பணியாளர் வந்து வாங்கிச் செல்வார்.

எனக்கோ பக்கத்தில் ஆள் இருந்தால் சிறுநீர் கழிக்க வராது. அதிலும் பெண் என்றால் அவ்வளவுதான். எவ்வளவு முயன்றும் வரவில்லை. ‘சற்று வெளியே காத்திருங்கள்’ என்று சொல்லி நர்ஸை வெளியே அனுப்பிவிட்டுத்தான் சிறுநீர் கழித்தேன். அதை எடுத்துப் போக வந்த பணியாளர் குடுவையிலிருந்த சிறுநீரின் அளவைப் பார்த்து வியப்புற்றார். காரணம், அது 400 மில்லி இருந்தது.

என்னுடைய அறையில் மற்றொருவரும் இருந்தார். என் வயதுதான் இருக்கும். அவருக்குத் தொடையில் ஆஞ்ஜியோ செய்திருந்தார்கள். வலியில் அனத்திக்கொண்டிருந்தார். அதோடு கூடவே அவ்வப்போது வாய்விட்டும் அழுதுகொண்டிருந்தார். ‘ஆபரேஷன் செய்ய ரெண்டு லட்சத்துகு நான் எங்கே போவேன்? என் மகளுக்கு வேறு கல்யாணம் செய்ய வேண்டுமே?’ என்று சொல்லிச் சொல்லி அழுதார்.

‘அழாதீர்கள், அழுதால் வலிதான் அதிகமாகும்’ என்று அவருக்கு ஆறுதல் சொல்லிக்கொண்டிருந்தாள் நர்ஸ். எனக்கு பயத்திலும் அதிர்ச்சியிலும் மனசே மரத்துப்போய்க் கிடந்தது. மணி கொடுத்து அனுப்பியிருந்த ரூபாய் இருபத்தைந்தாயிரத்தில் இந்த ஆஞ்ஜியோ பரிசோதனை முடிந்துவிட்டது. இனிமேல் சர்ஜரிக்குத் தேவையான இரண்டு லட்சத்துக்கு எங்கே போவது?

ஐ.ஸி.யு பக்கம் தலைகாட்டிய மீரா ‘அதைப் பற்றியெல்லாம் கவலையை விடுங்கள். பாபா பார்த்துக் கொள்வார்’‘என்றாள். இந்த இடத்தில் பாபா என்ற கதாபாத்திரத்தை அறிமுகம் செய்ய வேண்டிய நிலையில் இருக்கிறேன். ஏற்கெனவே அறிமுகமான பாத்திரம்தான். ஆனால் பெயரில்லாமல் அப்போது கனவில் வந்திருந்தார். ஒரு விருட்சத்தின் கிளைகளில் ஒரு மனித உடலின் வெவ்வேறு பாகங்கள் தொங்கிக்கொண்டிருக்க, பின்னர் அந்தக் கைகளும் கால்களும் அசைந்து எழுந்து ஒவ்வொரு பாகமும் சேர்த்துப் பிணைத்துக்கொள்ள ஒரு முதியவர் உருப்பெற்று எழுந்து நடந்து சென்றாரல்லவா? அவர்தான் பாபா.

பாபா ஒரு ஃபக்கீர். நரைத்த தாடி. கிழிந்த வேஷ்டி சட்டை. தலையில் ஒரு முண்டாசு. அவருடைய உருவம் நிழற்படங்களாக அந்த மருத்துவமனையின் ஒவ்வொரு சுவரிலும் தொங்கிக் கொண்டிருந்தது.

என் கண்கள் கலங்கின. இவளுக்கு இத்தனை பெரிய சிரமத்தைக் கொடுத்துவிட்டோமே என்ற வருத்தம் மேலிட்டது. ஆனால் மீரா அதி தீவிர தைரியத்துடன் காணப்பட்டாள்.

இப்போது இந்த வரிகளை எழுதிக்கொண்டிருக்கும்போதுதான் என் பக்கத்திலிருந்தவர் என்ன ஆனார், சர்ஜரி செய்து கொண்டாரா, அவரது உறவினர்களால் இரண்டு லட்சத்தைப் புரட்ட முடிந்ததா என்றெல்லாம் யோசனை எழுதுகிறது.

அந்த ஐ.ஸி.யு என்ற இடமே ஒரு தனி உலகமாக இருந்தது. 15 டிகிரி சென்டிகிரேட் அளவுக்குக் குளிரூட்டப்பட்டிருந்த அந்த யூனிட்டில் பலவிதமான இதய நோயாளிகள் படுத்துக் கிடந்தார்கள். யூனிட் முழுவதும் ஈ.ஸி.ஜி மானிட்டரிங் இயந்திரத்தின் க்ர்ரிக் கர்ர்ரிங் என்ற வினோதமான சப்தம் கேட்டுக்கொண்டேயிருந்தது. ஒரு வயதுக் குழந்தையிலிருந்து 85 வயதுக் கிழவர்வரை அங்கே இருந்தார்கள். ஆனால் பெண் நோயாளிகளின் எண்ணிக்கை மிகவும் குறைவாக இருந்தது. அங்கிருந்த இரண்டு டஜன் நோயாளிகளில் ஓரிருவர்தான் பெண்கள். ஒப்பீட்டளவில் பெண்களுக்கு இதய நோய் வருவது மிகவும் குறைவோ என்னவோ...

ஒரே மாதத்தில் என்ன ஒரு மாற்றம்! சென்ற மாதம்தான் ஒரு அத்தியாயத்தில் ‘எனக்குப் பிடித்தவை’ என்ற பட்டியலில் நர்ஸ்கள் என்று குறிப்பிட்டிருந்தேன் - அதிலும் லேசான பாலியல் வாடை வீசுமாறு. இப்போது எல்லாம் தலைகீழாக மாறிவிட்டது.

அப்படி இப்படி அசையாதவாறு அந்த இன்டென்ஸிவ் கேர் யூனிட்டில் படுத்துக் கிடந்தேன் அல்லவா? படுக்கையில் தட்டையாகப் படுத்தால் வலிக்கும் என்பதற்காக முதுகு மற்றும் தலைப் பகுதியில் படுக்கை சற்று உயரே தூக்கப்பட்டிருந்தது. இரவு உறக்கத்தினிடையே விழிப்பு வந்ததால் கண் விழித்து லேசாகப் புரண்டேன். உடனே அடுத்த கணம் என் பக்கத்தில் வந்த நர்ஸ் ‘என்ன ஆயிற்று, என்ன வேண்டும்?’ என்று அக்கறையுடன் கேட்டாள். அறையில் அரையிருட்டாக இருந்தது. ‘மணி என்ன?’ என்று கேட்டேன். கைக்கடிகாரத்தைப் பார்த்து ‘ஒன்றரை’ என்றாள். அப்புறம்தான் கவனித்தேன். அந்த நர்ஸ் எங்கள் இரண்டு பேரையும் கவனித்துக்கொள்வதற்காக இரவு முழுவதும் அந்த அறையில் அமர்ந்திருந்தாள். வேறு எதுவும் செய்யவில்லை. இரவு முழுவதும் பேசாமல் அமர்ந்தபடி எங்கள் இருவரையும் கவனித்துக்கொண்டே இருக்க வேண்டும். எங்களிடம் ஒரு சிறு சலனம் ஏற்பட்டால்கூட உடனே வந்து கவனிக்க வேண்டும். கோடி ரூபாய் கொட்டிக் கொடுத்தாலும் இந்த சேவைக்கு ஈடாகுமா என்று இப்போது நினைத்துப் பார்க்கிறேன்.

சர்ஜரிக்கு முன்னும் பின்னுமாக மொத்தம் மூன்று வார காலம் அந்த மருத்துவமனையில் தங்கியிருந்தேன். காலையில் ஆறு மணிக்கு வந்து எழுப்பி ரத்த அழுத்தத்தைப் பரிசோதிப்பதிலிருந்து இரவு ஒன்பது மணிக்கு வந்து மாத்திரை கொடுத்து ஊசி போடும்வரை ஒவ்வொரு விஷயத்தையும் நர்ஸ்கள்தான் கவனித்துக் கொண்டார்கள். அதிலும் ஐஸீயிலிருக்கும்போது காலையில் பல் துலக்கிவிடுவது; உடம்பு பூராவையும் வெந்நீரில் நனைத்த துண்டால் துடைத்துவிட்டு, பிறகு மற்றொரு துண்டால் துடைத்து, முதுகில் கொப்புளங்கள் வந்துவிடாமல் பவுடர் போட்டு விடுவது; சாப்பாடு ஊட்டி விடுவது; தண்ணீர் கொடுப்பது;

சிறுநீர் கழிக்க உதவுவது என்று ஒரு குழந்தையைப்போல் கவனித்துக்கொண்டார்கள்.

நான் ஒரு கட்டத்தில் தனி அறை வேண்டும் என்று கேட்டு ஐந்தாவது தளத்துக்குச் சென்றுவிட்டபோது நான்காவது தளத்தில் என்னை ஒருதோழனைப்போல் கவனித்துக்கொண்ட மல்லிகா என்ற நர்ஸ் மற்ற நர்ஸ்களின் மூலம் என்னைப் பற்றி விசாரித்துக் கொண்டேயிருந்தாள்.

ஒரு விதத்தில் யோசித்துப் பார்த்தால் பாங்காக்கில் நான் பார்த்த செக்ஸ் தொழிலாளிகளின் வேலையும் இந்த நர்ஸ்களின் சேவையும் ஒன்று போல் தெரிகிறது. பாங்காக் பெண்களும் இந்த உடலின் தேவையைத்தான் பூர்த்தி செய்கிறார்கள் - மஸாஜ், கலவி என்று பலவிதமாக. அதேபோல் இந்த நர்ஸுகளும் உடலைத்தான் பராமரிக்கிறார்கள். மேலும் இந்த இரண்டு இடங்களில் நிர்வாணம் என்பது மிக இயல்பானதொன்றாக இருப்பதைக் கவனித்தேன்.

இந்திய சினிமா என்ற மிகப் பிரம்மாண்டமான தொழில் இந்த நிர்வாணம் என்ற ஒன்றை நம்பித்தானே இயங்கி வருகிறது? ஆனால் அதே சமயத்தில் நிர்வாணம் என்பதற்கு சமூகத்தில் நிலவும் தடையையும் யோசித்துப் பார்க்க வேண்டும். நானோ நீங்களோ தெருக்களில் நிர்வாணமாக நடந்து செல்ல முடியுமா? ஒன்று, போலீஸால் கைது செய்யப்பட்டு உங்கள் உடலின் நிர்வாணத்தை மற்றவர்களின் பார்வையிலிருந்து ரத்து செய்யும் விதமாக உங்கள் உடல் சிறையில் அடைக்கப்பட்டு தண்டிக்கப்படும். அல்லது, அதே காரணத்திற்காக உங்கள் உடல் மனநோய் விடுதி என்ற நான்கு சுவர்களுக்குள் அடைக்கப்படும்.

ஆனால் செக்ஸ் தொழில் நடக்கும் இடங்களிலும், மருத்துவமனைகளிலும் நிர்வாணம் என்பது ஒரு இயல்பு நிலை.

மறுநாள் மாலை ஐ.ஸி.யூனிட்டிலிருந்து என்னை அறைக்கு அனுப்பினார்கள். அதற்கு மறுநாள்தான் என் அறைவாசிக்கு ஆஞ்ஜியோ ப்ளாஸ்டி செய்வதாக இருந்தது. அவருக்கு ரத்தக் குழாயில் ஒரு அடைப்பு இருந்தது. அவர் கிராமத்தில் ஒரு பெட்டிக்கடை வைத்திருக்கிறார். ‘ஒரு நாளைக்கு இருநூறு ரூபாய்க்கு சிகரெட் பிடிப்பேன்’ என்று என்னிடம் ரகசியமாகச் சொன்னார். என்ன சிகரெட் என்று நான் கேட்கவில்லை. ஆனால் பலவித பிராண்டுகளை வைத்து கணக்குப் போட்டு பார்த்துக் கொண்டேயிருந்தேன். ஒரு நாளைக்கு எத்தனை சிகரெட் குடிப்பவராகயிருக்கும்? எனக்குத் தெரிந்து சில நண்பர்கள் தினமும் ஏழெட்டு பாக்கெட்கூட குடிப்பவர்களாக இருக்கிறார்கள். அதிலும் சார்மினார் போன்ற படு காட்டமான பிராண்டு. அப்படிக் குடிக்கும் ஒரு நண்பன் எனக்கு ஃபோன் செய்து தன் அதிர்ச்சியை வெளிப்படுத்தினான். (நீ ராணுவ ஒழுங்குடன் வாழ்பவன் ஆயிற்றே? உனக்கு எப்படி பைபாஸ் சர்ஜரி?)

என் அறைவாசி ஆஞ்ஜியோ ப்ளாஸ்டிக்குச் செல்வதற்கு முன்பாக முதல் நாள் இரவு தன் மகளை அனுப்பி வெளியிலிருந்து சிக்கன் பிரியாணி வரவழைத்து முட்டையோடு சாப்பிட்டுக் கொண்டாடினார். அவருக்கு ஆறு குழந்தைகள். எல்லோரும் நன்கு படித்து நல்ல வேலையில் இருக்கிறார்கள். அவர்களில் இரண்டு பேர் டாக்டர்கள்.

நான் தனியாக இருக்கும்போது தன் கதையை என்னிடம் கூறுவார். ஆறு குழந்தைகள் இருப்பது பற்றி நான் முதலில் பொறாமை கொண்டேன். காரணம், என்னை கவனித்துக்கொள்ள மீரா மட்டுமே இருந்தாள். அவர் நிலைமை அப்படியில்லையே என்று நினைத்தேன். ஆனால் நான் நினைத்தது தவறு என்று புரிந்தது. அவருடைய மகன்களும், மகள்களும் வந்து எட்டிப் பார்த்துவிட்டு போவதோடு சரி. அவர்களிடமிருந்து வேறு எந்த உதவியும் இல்லை. எங்கோ வட நாட்டில் வேலையிலிருக்கும் அவருடைய கடைசி மகள்தான் அவரோடு கூடவே இருந்து கவனித்துக்கொண்டிருந்தாள். திருமணமாகாத பெண். எல்லா செலவும் இந்தப் பெண்ணுடையதுதான். மற்றவர்கள் செலவு எதையும் ஏற்றுக்கொள்ளாமல் கழன்று கொண்டார்கள் என்று தெரிந்தது. ஒரு நாள் அவர் சொன்னார். எத்தனை கஷ்டப்பட்டு அவ்வளவு பேரையும் படிக்க வைத்தார் என்று. இப்போது டாக்டராக இருக்கும் புதல்விகள் இருவரும் ‘அரசு மருத்துவமனையில் அட்மிட் ஆகாமல் இப்படி ஆடம்பரமான மருத்துவமனையில் ஏன் சேர்ந்தீர்கள்?’ என்று கடிந்துகொண்டதாகச் சொன்னார். ஆஞ்ஜியோப்ளாஸ்டிக்கு எவ்வளவு செலவு என்பதை அவரிடம் தெரிவித்துவிடாமல் இருக்குமாறு அவருடைய கடைசி மகள் என்னிடம் ஏற்கெனவே சொல்லியிருந்தாள்.

‘எவ்வளவு செலவு என்று தெரியுமா?’ என்று கேட்டேன்.

‘25,000/- ரூபாய் இருக்கும்’ என்றார். பைபாஸ் சர்ஜரியைப்போல் ஆஞ்ஜியோப்ளாஸ்டியில் அவ்வளவு பிரச்னையில்லை. கத்திக்கும் ரத்தத்திற்கும் வேலையில்லை. ரத்தக் குழாய் மூலமாக சிறிய பலூன் ஒன்றை அனுப்பி அடைப்பு இருக்கும் இடத்தில் அந்த பலூனை வெடிக்கச் செய்தால் அடைப்பு நீங்கிவிடும். அங்கே ஒரு Stentஐயும் அனுப்பிவிடுவார்கள். அந்த Stentன் விலையே ஒரு லட்சம் ரூபாய். பை பாஸ் சர்ஜரிக்கு ஒன்றரை லட்சம் செலவு என்றால் அஞ்ஜியோப்ளாஸ்டிக்கு மூன்று லட்சம். இரண்டே நாளில் வீட்டுக்கு அனுப்பிவிடுவார்கள்.

என் அடைப்புகளை கவனித்த இருதய நிபுணர்களுக்கு பெரும் ஆச்சரியம். அதிலும் ஒரு அடைப்பு 95 சதவிகிதத்துக்கு மேல் இருந்தது.

‘நீங்கள் புகை பிடிப்பவரா?’

‘இல்லை.’

‘உங்கள் பெற்றோருக்கு இருதயப் பிரச்னை இருந்திருக்கிறதா?’

‘இல்லை.’

‘உறவினர்களுக்கு?’

‘இல்லை.’

‘உங்களுடைய தொழில் என்ன?’

‘எழுத்தாளன்.’

இந்த பதிலைக் கேட்ட பிறகுதான் நிபுணரின் குழப்பம் நீங்கியது போல் மலர்ந்தது முகம்.

‘அப்படியானால் குறிப்பிட்ட தேதிக்குள் கதை கட்டுரைகளை அனுப்ப

வேண்டுமென்ற கெடு இருக்கும்தானே?'

'வாராவாரம் இருக்கும்.'

'உங்களுக்குக் கோபம் வருமா?'

'அடிக்கடி வரும்.'

'ஓ.கே. உங்களுடைய இவ்வளவு அடைப்புகளுக்கும் காரணம் stress and strainதான்.'

அறுவை சிகிச்சையை எதிர்கொள்வதற்கு என் உடலைத் தயார் செய்யும் பொருட்டு மாத்திரைகளும் ஊசியும் கொடுக்கப்பட்டன. அதில் ஒரு மாத்திரையின் பெயர் Nitrocotin. காலையில் ஒன்று, மாலையில் ஒன்று. அறுவை சிகிச்சைக்காக ரத்த நாளங்களைத் தளர்த்துவதற்காகக் கொடுக்கப்படும் மாத்திரை. அதை உட்கொண்டு இரண்டு மணி நேரம் ஆனதும் தலையில் சம்மட்டியால் அடிப்பதுபோல் வலித்தது. மண்டையே வெடித்துவிடுகிறாற்போல் விண்விண்ணென்று தெறித்தது. காலையில் பத்து மணிக்கு ஆரம்பிக்கும் வலி மாலை ஆறு மணிக்குத்தான் நிற்கும். பிறகு, எட்டு மணிக்கு மாத்திரை உட்கொண்டதும் பத்து மணிக்கு ஆரம்பிக்கும் வலி காலை ஆறு மணிக்குத்தான் நிற்கும். பகலிலாவது எப்படியாவது சமாளித்துக்கொள்ள முடிந்தது. இரவில் தாங்கவே முடியவில்லை. வலியால் தூங்கவும் முடியவில்லை. நான் இருந்தது நான்காவது மாடி. ஜன்னலோரத்தில் கட்டில். வலி தாங்க முடியாமல் ஜன்னல் வழியாகக் குதித்துவிடப் போகிறோமோ என்று வேறு பயமாக இருந்ததால் ஜன்னலின் கண்ணாடித் திறப்பை எப்போதும் மூடியே வைத்திருந்தேன்.

'வலிக்கத்தான் வலிக்கும்; எதுவும் செய்ய இயலாது' என்று சொல்லிவிட்டார் டாக்டர். எக்காரணம் கொண்டும் நைட்ரோகான்டினை நிறுத்தமுடியாதாம். தலைவலிக்காக ஒரு மாத்திரை கொடுத்தார். ஆனால் அதிலும் நிற்கவில்லை வலி.

நர்ஸ்களிடமிருந்து மீரா hot pack வாங்கி வந்து சூடாக ஒத்தடம் கொடுத்தாள். ஒத்தடம் கொடுக்கும்போது வலி குறைகிறாற்போல் தெரியும்; ஆனால் ஒத்தடத்தை நிறுத்தியதும் பின்னியெடுக்கும்.

இதற்கிடையில் சர்ஜரிக்கான செலவுக்கு ஒரு திடீர் உதவி கிடைத்தது. நான் பைபாஸ் சர்ஜரிக்காக மருத்துவமனையில் அட்மிட் ஆகியிருப்பதைக் கேள்விப்பட்டு ப்பீயெம்ஜி ராம்குமார் ஃபோன் பண்ணினார். ஏற்கெனவே இவரை ஒரு இடத்தில் அறிமுகப்படுத்தியிருக்கிறேன். இவரும் கார்லோஸ் மாதிரியான அய்யேயெஸ் ரகம். (அதனால்தானே என் நண்பராக இருக்கிறார்?) ராம்குமார் கூறிய ஒரு தகவல் என் உயிர் காக்கும் தகவலாக இருந்தது. அதாவது, 'இருதய சம்பந்தமான அறுவை சிகிச்சைகளுக்கு ஆகும் செலவை தபால் துறையே ஏற்றுக்கொள்கிறது. எனவே உங்கள் மனைவியை அனுப்பி உடனே செக்கை வாங்கிக் கொண்டு போகச் சொல்லுங்கள்' என்றார் அவர்.

மதியமே அலுவலகம் சென்ற மீரா ஒன்றரை லட்சத்துக்கான காசோலையை வாங்கிக்கொண்டு வந்து மருத்துவமனையில் செலுத்திவிட்டு என்னிடம் வந்து 'பாபா செய்த அற்புதம்' என்றாள்.

எனக்கும் ஆச்சரியமாகவே இருந்தது. அஞ்சல் பொருட் கிடங்கில் நான் வேலை பார்த்தபோது நடந்த ஒரு சம்பவம் ஞாபகம் வந்தது. ராஜசேகர் என்ற கடைநிலை ஊழியர் சர்க்கரை வியாதி முற்றி இறந்துபோனபோது, மிகவும் ஏழ்மை நிலையிலிருந்த அவர் குடும்பத்தினருக்கு சவ அடக்கம் செய்வதற்குக்கூட வசதியில்லை. அப்போது அவருக்குச் சேர வேண்டிய gratuity பணத்தைக் கொடுப்பதற்குக்கூட தபால் துறையில் ஏகப்பட்ட அழிச்சாட்டியம் செய்து தாமதப்படுத்தினார்கள். அப்போது அஞ்சல் பொருட் கிடங்கில் இந்திராணியின் அல்லி தர்பார் நடந்துகொண்டிருந்த நேரம். அப்படி, பிணம் கிடக்கும்போதுகூட நிர்வாக நடைமுறைகள் என்று கூறி தாமதப்படுத்தும் தபால் துறையிலா சில மணி நேரங்களுக்குள் ஒன்றரை லட்ச ரூபாய்க்குக் காசோலை கொடுத்திருக்கிறார்கள்?

ப்பீயெம்ஜி ராம்குமாரின் நேரடித் தலையீட்டினால் நடந்ததா அல்லது நிர்வாகமே இப்படி மாறிவிட்டதா அல்லது மீரா கூறியது போல் பாபாவின் அற்புதமா? தெரியவில்லை.

***

அறுவை சிகிச்சை முடிந்து சரியாக ஒரு மாதம் கழித்து அதைப் பற்றி நினைவுகூர்ந்து எழுதிக்கொண்டிருக்கும் இந்த நேரத்தில் எனக்கு ஜெகதீஸ்வரன் என்ற நண்பரிடமிருந்து ஒரு மின்னஞ்சல் வந்தது. அவர் டாக்டர் அல்ல. அமெரிக்காவில் வசிக்கும் சாஃப்ட்வேர் எஞ்ஜினியர். அந்த மெயிலிலிருந்து சில பகுதிகள்:

இதயம் ஒரு நாளைக்கு ஒரு லட்சம் முறை லப் டப் லப் டப் என்று துடிக்கிறது. சுமார் 7,600 லிட்டர் அளவுள்ள ரத்தத்தை இதயம் உடல் முழுவதும் அனுப்புகிறது. நமது உடல் முழுவதும் உள்ள ரத்தக் குழாய்களைப் பிரித்து ஒன்றன் பின் ஒன்றாக இணைத்தால் மொத்தம் 96,000 கி.மீ அளவு நீளத்துக்கு வரும். உலக உருண்டையை இரண்டு சுற்று கட்டி விடலாம்.

இதயத் தசைகளுக்கு ரத்தத்தை அனுப்பும் சிறிய ரத்தக் குழாய்களில் பிரச்னை ஏற்படும்போது இதயம் மக்கர் செய்ய ஆரம்பிக்கிறது.

ரத்தத்தில் உள்ள பிளேட்லெட்டுகள் ஒன்றோடொன்று ஒட்டிக்கொள்ளும் தன்மை கொண்டவை என்பதால் ரத்தக் கசிவு ஏற்படும் இடத்தைப் பிசின்போல் இயற்கையாக அடைத்துவிடுகின்றன.

ஆனால் ரத்தத்திலுள்ள இதே பிளேட்லெட்டுகள் ரத்தக் குழாய்களில் ஏற்படும் கசிவை நிறுத்த முற்படும்போது குழாய்களில் ரத்தக் கட்டி ஏற்பட்டுவிடுகின்றது.

ரத்தக் குழாய்களில் ஏன் கசிவு உண்டாகிறது?

சமயங்களில் ரத்தக் குழாய்களில் நுண்ணுயிரிகள் தாக்குகின்றன. அப்படித் தாக்கும்போது நம் உடம்பிலுள்ள சிப்பாய்களான வெள்ளை அணுக்கள் உடனடியாக யுத்தத்தை ஆரம்பித்துவிடுகின்றன. இதயத்தின் ரத்தக் குழாய்களில் நுண்ணுயிர்களைப் பார்க்கும் சிப்பாய்கள் சிறிது ஆக்ரோஷமாகவே சண்டை போடுவதால் அச்சண்டையில் ரத்தக் குழாய்களின் சுவர்களும் பாதிக்கப்பட்டு வீக்கமும் ரத்தக் கசிவும் ஏற்பட்டு அது கட்டியாக மாறி அடைப்பை உண்டாக்கி விடுகிறது.

இதனால்தான் இதயம் பாதிப்புக்குள்ளானவர்கள் ஆஸ்ப்ரின் மாத்திரையைச் சாப்பிடுகிறார்கள். ஆஸ்ப்ரின் ரத்தம் கட்டிக் கொள்வதைத் தடுக்கிறது.

ஆதிகாலத்தில் மனிதன் காடுகளில் வாழ்ந்தபோது, அடிபடும் வலியைத் தாங்கிக்கொள்ள Willow மரப் பட்டைகளையும் இலைகளையும் மென்று விழுங்கிவந்தான்.

ஆரம்பத்தில் இதே மரப்பட்டையை உரித்து ஊறவைத்து மருந்தாகப் பயன்படுத்தி வந்தாலும் பிறகு அதிலிருக்கும் வேதிப் பொருளைக் (salicin) கண்டறிந்து ஆய்வுக்கூடங்களில் உருவாக்க ஆரம்பித்தார்கள். நெடுங்காலமாக வலி நிவாரணியாக இருந்த இப்பொருளைத் தற்செயலாக மாரடைப்பு வந்த ஒருவருக்குக் கொடுத்தபோது அதன் மற்றொரு உபயோகமும் தெரியவந்தது. இது ரத்தத்தில் உள்ள பிளேட்லெட்டுகளின் ஒட்டிக்கொள்ளும் தன்மையைச் செயலிழக்கச் செய்கிறது.

ஆஸ்ப்ரினை சிறு வயதிலிருந்தே எடுத்துக்கொண்டால் எதிர்கால சந்ததியினரை இதய நோயிலிருந்து காப்பாற்றலாம் என்ற ஒரு சர்ச்சை இருந்தாலும் ஏதாவது காயம்பட்டு ரத்தக் கசிவு ஏற்பட்டால் கசிவு நிற்காமலே போய்விடக்கூடிய ஆபத்து இருக்கிறதே என்று ஒரு சாரார் வாதிக்கின்றனர்.

ஆஞ்ஜியோகிராம் மூலமாக அடைப்பு எவ்வளவு இருக்கிறது என்று தெரிந்துகொள்ளலாமேயொழிய முற்றிலும் அதை அடிப்படையாக வைத்து அறுவை சிகிச்சைக்குப் பரிந்துரைப்பது ஏற்றுக்கொள்ள முடியாதது என்று அமெரிக்காவில் ஒரு வாதம் வலுத்து வருகிறது. காரணம்: ஆஞ்ஜியோகிராம் சோதனையை வைத்து ஒரு மருத்துவர் 90% அடைப்பு உள்ளது என்று கூறினால் அதே அடைப்பை மற்றொரு மருத்துவர் அதே அளவுதான் சொல்லுவார் என்ற நிச்சயம் இல்லை. 40% என்று சொல்லுவார். ஆக, அடைப்பு இருந்தாலும் அது எந்த அளவு என்ற சதவிகிதம் மருத்துவருக்கு மருத்துவர் மாறுபடும். பல்வேறு மருத்துவர்களால் அறுவை சிகிச்சைக்குப் பரிந்துரைக்கப்பட்ட 100 பேரை ரகசியமாகத் தேர்ந்தெடுத்து பல மருத்துவர்களிடம் அனுப்பி சோதனை செய்ததில் நூறிலிருந்து 60, 40, 20, 10 என்று படிப்படியாகக் குறைந்து கடைசியில் ஆறு பேருக்கு மட்டுமே கட்டாயமாக அறுவை சிகிச்சை செய்ய வேண்டும் என்று தேர்ந்தெடுத்தார்கள்.

ஜெகதீஸ்வரனின் மேற்கண்ட மின்னஞ்சலைப் படித்தபோது எனக்கு இரண்டு விஷயங்கள் ஞாபகத்திற்கு வந்தது. 1. சென்னையில் சுமார் நூறு பேருக்கு பைபாஸ் சர்ஜரி செய்யப்பட்டு வருகிறது. அதிலும் பைபாஸ் சர்ஜரியில் நிபுணத்துவம் பெற்ற டாக்டர் செரியன் பற்றிக் கதைகதையாகச் சொல்கிறார்கள்.

ஆபரேஷன் தியேட்டரில் இதய நோயாளிகள் வரிசையாகக் கிடத்தப்பட்டிருப்பார்களாம். அறுவை சிகிச்சைக்கு வேண்டிய முன்னேற்பாடுகள் - நெஞ்சு எலும்பை உடைத்துப் பிரிப்பது, விலா எலும்புகளை விரிப்பது, பைபாஸ் போடுவதற்கு ரத்தக் குழாய்களை எடுப்பதற்காக கால்களைக் கிழிப்பது, இன்னபிற - மற்றும் உப காரியங்களை செரியனின் உதவியாளர்கள் செய்து செய்து கொடுக்க செரியன் தொடர்ந்து ஒவ்வொரு நோயாளிக்கும் பைபாஸ்

போட்டுக்கொண்டே செல்வாராம்.

ஒருவருக்கு பைபாஸ் சர்ஜரி செய்ய நான்கு அல்லது நான்கரை மணி நேரம் ஆகும். ஆனால் செரியன் சிகிச்சையின் பிரதான காரியத்தை மட்டும் கவனிப்பதால் ஒரே நாளில் ஐந்தாறு நோயாளிகளுக்கு பை பாஸ் செய்துவிடுவார் என்றார்கள். இடையிலேயே ஒரு நர்ஸ் அவருக்கு ஜூஸ் கொடுக்க, முகமூடியை லேசாக அகற்றி விட்டுக் குடிப்பார்; பிறகு உடனே தொடரும் அறுவை சிகிச்சை என்று பக்கத்திலிருந்து பார்த்தது போல் சொன்னார்கள்.

ரத்தக் குழாய்களில் ஏற்பட்டிருக்கும் அடைப்புகளை மருந்தின் மூலமாகவே அகற்ற முடியும் சாத்தியம் இருக்கும்போதேகூட இந்தியாவில் பைபாஸ் சர்ஜரியைப் பரிந்துரைத்துவிடுகிறார்கள் என்பது ஜெகதீஸ்வரனின் கருத்து. என்னுடைய கருத்தும் அதுதான். சென்னையில் ஹக்கீம் என்று ஒரு யுனானி மருத்துவர் இருக்கிறார். எப்பேர்ப்பட்ட ரத்தக் குழாய் அடைப்பையும் மருந்து மற்றும் பத்தியத்தின் மூலம் குணப்படுத்திவிடுகிறார் ஹக்கீம். இப்படி நெஞ்செலும்பை உடைத்து இதயத்துக்குள் சென்று அறுவை சிகிச்சை செய்துகொள்வதைவிட ஹக்கீடமே மருத்துவம் பார்த்துக்கொள்ளலாம் என்றுதான் நானும் பிரியப்பட்டேன். ஆனால் மீராவும் மற்ற நண்பர்களும் அதற்கு என்னை அனுமதிக்கவில்லை.

அடுத்து, இதய நோய் வருவதற்கான சில காரணிகளைக் கூறுகிறார் ஜெகதீஸ்வரன்:

அதிக ரத்த அழுத்தம், கொலஸ்ட்ரால், புகைப்பிடித்தல், மன அழுத்தம், வயது, பரம்பரை, உணவு முறை, உடல் வேலை செய்யாமல் ஒரே இடத்தில் இருப்பது, நீரிழிவு நோய், அதிக எடை.

மேலும் அவர் மெயிலிலிருந்து ஹார்ட் அட்டாக் என்பதும், ஸ்ட்ரோக் என்பதும் வேறு வேறு என்பதையும் புரிந்து கொண்டேன்.

ஹார்ட் அட்டாக்: இதயத் தசைகளுக்கு ரத்தம் எடுத்துச் செல்லும் குழாய்களில் ஏற்படும் அடைப்பால் உண்டாவது. ஸ்ட்ரோக்: மூளைக்கு எடுத்துச் செல்லும் குழாய்களில் அடைப்பு ஏற்படுவதால் உண்டாவது.

இதய நோய்கள் வராமல் தடுப்பதற்கு ஜெகதீஸ்வரன் கூறும் இரண்டு ஆலோசனைகள்: 1. நடை 2. இயற்கை உணவு.

நம்முடைய முன்னோர்களான ஆதி மனிதர்கள் கைகளையும் கால்களாகவே பாவித்து நான்கு கால்களால் நடந்தார்கள் அல்லவா? அப்போது இதயமானது பூமிக்குப் பக்கத்தில் இருந்ததால் அதன் வேலை சுலபமாக இருந்ததாகக் கூறுகிறார் ஜெகதீஸ்வரன். அதாவது, இப்போது நாம் இரண்டு காலால் நடப்பதால் இதயம் பூமியிலிருந்து அதிக தூரம் மேலே போய்விட்டதால் பூமியின் புவியீர்ப்பு விசையை எதிர்த்து அதிகம் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. மனிதன் எப்போது இயற்கைக்கு மாறாக எழுந்து நின்று நடக்க ஆரம்பித்தானோ அன்றைக்கே இதயத்துக்கு அதிக வேலை ஆரம்பித்துவிட்டது.

ஜெகதீஸ்வரன் சொல்வது மிகவும் அதிகபட்சம். விலங்குகளைப் போல் நாம் நான்கு காலால் நடப்பது இப்போது சாத்தியமில்லை. ஆனால் அவர் வேறொரு விஷயம் சொல்கிறார். சந்தனக் கடத்தல் வீரப்பன் காட்டில்

நடந்துகொண்டேயிருந்ததால் அவருடைய உடம்பில் முறுக்கேறிய தசைகளுக்கிடையே சாதாரணமாக இருக்கும் மஞ்சள் படிவ கொழுப்பைப் பார்ப்பதே அரிதாக இருந்ததாக போஸ்ட்மார்ட்டம் பண்ணிய மருத்துவர் கூறியிருப்பதாகக் குறிப்பிடுகிறார் ஜெகதீஸ்வரன்.

***

ஆஞ்ஜியோகிராம் முடிந்து அறுவை சிகிச்சை செய்ய வேண்டும் என்பது தெரிந்தபிறகு மணி ஒரு ஏற்பாடு செய்தான். சுகாதார மந்திரியுடன் பேசி, அவருடைய சிபாரிசில் அரசு மருத்துவமனையில் அறுவை சிகிச்சை செய்துகொள்வதுதான் அந்த ஏற்பாடு. இரண்டு லட்ச ரூபாய் பணத்துக்காக அலைய வேண்டாமே என்பது அவனுடைய எண்ணம். ஆனால் அதற்குள்ளாகவே ராம்குமாரிடமிருந்து தகவல் வந்து, ஸர்க்கிள் ஆஃபீஸிலிருந்து காசோலையை வாங்கி வந்து மருத்துவமனையில் கட்டிவிட்டாள் மீரா. ஒருவேளை இந்தக் காசோலை கிடைத்திருக்காவிட்டாலும் அரசு மருத்துவமனைக்குச் சென்றிருப்பேனா என்பது சந்தேகம்தான்.

சென்னையிலுள்ள பிரதான அரசு மருத்துவமனை சகல வசதிகளும் கொண்டது. மிகப் பிரம்மாண்டமானதும்கூட. மந்திரி சிபாரிசு என்றால் கவனிப்பும் நன்றாக இருக்கும்தான். ஆனால் இரண்டு காரணங்களினால் நான் அரசு மருத்துவமனைக்குச் செல்ல விரும்பவில்லை. முதல் காரணம், அங்குள்ள நர்ஸ்கள். தனியார் மருத்துவமனை நர்ஸ்கள் சொர்க்கத்திலிருந்து வந்தவர்களைப் போலிருந்தார்கள் என்றால், அரசு மருத்துவமனை நர்ஸ்கள் நரகத்திலிருந்து அனுப்பப் பட்டவர்கள். மீரா ஒரு வார காலம் அரசு மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டிருந்தபோது எனக்கு அந்த அனுபவம் நேரடியாகக் கிடைத்திருக்கிறது.

நான் வாராவாரம் கை விரல் நகங்களை buffer மூலம் தேய்த்து சுத்தம் செய்து அழகுபடுத்திக்கொள்வது (manicure) வழக்கம். இதற்காக விதவிதமான nailbufferகளை வாங்கிச் சேர்த்து வைத்திருக்கிறேன். வெளிநாடு சென்றால் இம்மாதிரி அழகுக்கலைச் சாதனங்களை நான் வாங்கி வருவதுண்டு. Nailbuffer மூலம் சுத்தப்படுத்திய பிறகு நகங்கள் கண்ணாடிபோல் பளபளக்கும். ஆனால் டிசம்பர் மாதம் முழுவதும் நான் மருத்துவர்களிடம் அலைந்துகொண்டிருந்ததால் manicure செய்து கொள்ளவில்லை. ஒரு நாள் நான் ஐஸியூவிலிருந்தபோது ஒரு நர்ஸ் என் கை நகங்களைப் பார்த்துவிட்டு அதிர்ச்சியுடன் ‘ஏன் இப்படி கோடுகோடாய் இருக்கிறது?’ என்று கேட்டாள். அப்போதுதான் கவனித்தேன். ஒரு மாதம் manicure செய்யாததால் நகங்களிலிருந்த பளபளப்பும், மினுமினுப்பும் குறைந்து ஒரே கோடு கோடாய் இருந்தது. தொட்டுப் பார்த்தபோது கோடைக்கால வயல்பரப்பைப்போல் சொரசொரப்பாகவும் மேடுபள்ளமாகவும் இருந்தது.

நர்ஸின் பதற்றத்தைத் தணிப்பதற்காக ‘எப்போதும் இப்படித்தான் இருக்கும்’ என்றேன்.

இந்த அளவுக்கு நம்முடைய ஒவ்வொரு விஷயத்திலும் அக்கறை எடுத்துக்கொள்பவர்களாக இருந்தனர் இந்த நர்ஸ்கள்.

குறிப்பாக அவர்களின் ஸ்பர்ஸத்தைப் பற்றிச் சொல்ல வேண்டும். வலி

வலி வலி என்பதே நம்முடைய ஒரே உணர்வாக இருக்கும் அந்த மருத்துவமனை நாட்களில் அந்த நர்ஸ்களின் ஸ்பர்ஸம் தரும் இதத்தை வார்த்தைகளால் விவரிக்க முடியாது. சர்க்கரை அளவு பார்ப்பதற்காக விரல் முனையில் லேசாக ஒரு ஊசியினால் குத்தி ஒரு துளி ரத்தம் எடுப்பார்கள். தினமும் இரண்டு வேளை நடக்கும் இந்த வேலை. 'லேசாதான் வலிக்கும்' என்று சொல்லிக்கொண்டே ஒரு க்ஷணத்தில் எடுத்துவிடுவார்கள். அப்படி எடுக்கும்போது நம் கையைப்பிடிக்க வேண்டுமல்லவா - அந்த ஸ்பர்ஸத்தில் நம் உடல் வலி மறந்து போகும். காலையில் நம் உடம்பைத் துடைத்து முதுகில் நைஸில் பவுடர் போட்டு விடும்போது - ஐ.வி. (intravenous) மூலம் மருந்துகளை ஏற்றும்போது - மாத்திரை கொடுக்கும்போது - ரத்த அழுத்தம் பார்க்கும்போது என்று பல்வேறு தருணங்களில் அந்த ஸ்பர்ஸம் அபூர்வமான இதத்தைத் தரும்.

பைபாஸ் சர்ஜரி என்றால் உடம்பைக் குதறிப் போடுவது என்றுதான் சொல்வேன். சர்ஜன்களின் வேலை கத்தியாலானது என்றால், மற்றொரு சாராரின் வேலை கத்தியின்றி ரத்தமின்றி நடக்கும். சர்ஜன்கள் நம் உடலை அறுக்கும்போது வலிக்காமல் இருக்க அனஸ்தீஸியா என்ற மாய மருந்தைக் கொடுக்கும் நிபுணர்கள் அவர்கள்.

சர்ஜரிக்கு முன்னால் ஒரு டஜன் மருத்துவர்கள் வரிசையாக ஒருவர் பின் ஒருவராக அறுவை சிகிச்சைக்குத் தயாராக இருக்கும் நோயாளியிடம் வந்து பார்த்துப் பேசிவிட்டுப் போவார்கள். முக்கியமாக, சர்ஜரி துறை மற்றும் ஃபிஸியோதெரப்பி துறை. சிலர் 50, 60 கேள்விகள்கூட கேட்பார்கள். அதற்கென்று நீண்ட கேள்விப் பட்டியலும் வைத்திருப்பார்கள். அவர்களில் ஒருவர் என்னிடம் அமார்த்யா சென் பற்றி நீண்ட நேரம் உரையாடினார். சிலர் என் எழுத்தைப் பற்றி விசாரிப்பார்கள்.

இப்படி வந்த ஒரு டஜன் மருத்துவர்களில் ஒரே ஒருவர் மட்டும் என்னிடம் ஒரே ஒரு கேள்வியைக் கேட்டுவிட்டுச் செல்வார். அவர் ஒரு இளம் பெண் டாக்டர். அவருடைய உடையலங்காரம் ஃபேஷன் பேரேடுக்குச் செல்ல இருப்பதுபோல் இருக்கும். சமீப காலத்தில் இந்தி சினிமாவில் கதாநாயகியாகப் புகழ்பெற்று விளங்கும் ஒரு நடிகையைப் போன்ற தோற்றம் கொண்டவர். தினமும் ஒன்பது மணியளவில் வந்து என் மணிக்கட்டைப் பிடித்து நாடி பார்த்துக் கொண்டே 'Do you have chest pain?' என்று கேட்பார். எனக்கு எப்போதுமே மார்பு வலி வந்ததில்லை. இந்தப் பெண்ணிடம் யார் எனக்கு மார்பு வலி என்று சொன்னது என்று நினைத்துக்கொள்வேன்.

மூன்று தினங்கள் இல்லை இல்லை என்று பதில் சொன்னேன். நான்காவது தினம் வந்து அப்படிக் கேட்டபோது 'நீங்கள் என்னைத் தொடும்போதுதான் வலிக்கிறது' என்று சிரித்துக் கொண்டே பதில் சொன்னேன்.

மறுநாளிலிருந்து அந்த டாக்டர் என்னிடம் அப்படிக் கேட்பதில்லை.

மிக நீண்ட கேள்விப் பட்டியலுடன் வந்த ஒரு டாக்டர் முதல் முதலாக என்னிடம் ஒரு கேள்வி கேட்டார்.

'நீங்கள் குடிப்பதுண்டா?'

குடி பற்றி என்னிடம் அதுவரை ஒரு டாக்டர்கூட பிரஸ்தாபித்திருக்கவில்லை. புகை பிடிப்பது பற்றித்தான் கேட்டார்களே

ஒழிய குடி பற்றி இருதய நிபுணர்கள் அதுவரை கேட்டதில்லை.

‘32 ஆண்டுகளாகக் குடிக்கிறேன்’ என்றேன்.

மிகப்பெரிய அதிர்ச்சியுடன் என் பதிலையே கேள்வியாக்கிக் கேட்டார்.

அதிர்ச்சியடைவதற்கு இதில் என்ன இருக்கிறது? உலகம் பூராவும்தான் மக்கள் குடிக்கிறார்கள். இந்தியாவில் மட்டும்தான் அது ஒழுக்கம் சார்ந்த விஷயமாகக் கருதப்படுகிறது. இதில் ஒரு டாக்டர்கூட மாட்டிக்கொள்ள வேண்டுமா?

நான் அவருக்கு விளக்கினேன். நான் குடிக்கு அடிமையானவன் இல்லை என்றும், வாரம் ஒரு முறை குடிப்பது வழக்கம் என்றும்.

‘குடியை நிறுத்திவிடுங்கள், அது நல்லதல்ல’ என்று அறிவுரை வழங்கும் தொனியில் சொன்னார் அவர்.

‘வேறு எந்த டாக்டரும் என்னிடம் இப்படிச் சொன்னதில்லையே?’

‘சொல்ல மாட்டார்கள். நீங்கள் இன்னும் குடியைத் தொடர்வதாக இருந்தால் ஒன்றரை லட்சம் ரூபாயை எடுத்து வைத்துவிட்டுக் குடியுங்கள்.’

‘நீங்கள் டீட்டோட்டலரா டாக்டர்?’

‘இல்லை. கொஞ்ச நாள் முன்னால் வரை குடித்துக் கொண்டிருந்தேன். இப்போது நிறுத்திவிட்டேன்.’

மிக நீண்ட கேள்விப் பட்டியலுடன் வந்த மற்றொரு டாக்டர் என் வாழ்க்கை வரலாற்றையே கேட்க ஆரம்பித்தார்.

அவர்கேட்ட ஒரு கேள்வி என்னை என்னுடைய பதினைந்தாவது வயதில் நடந்த ஒரு சம்பவத்துக்கு இட்டுச் சென்றது. அவருடைய அந்தக் கேள்வி: ‘உங்களுக்குக் காசநோய் வந்திருக்கிறதா?’

வந்திருக்கிறது.

என் பதினைந்தாவது வயதில் என் தெருவில் குடியிருந்த காசநோய் பிடித்த வேசி ஒருத்தியின் மகளுடன் பழகி அவளும் நானும் மணிக்கணக்கில் முத்தமிட்டுக்கொள்வது வழக்கமாதலால் அதன் மூலமாக என் உடம்பில் காசநோய்க் கிருமிகள் பரவிவிட்டன.

‘காசநோய் என்று எப்படித் தெரியும்?’

‘ரத்தமாக வாந்தி எடுத்தேன்.’

‘என்ன ட்ரீட்மெண்ட் எடுத்தீர்கள்?’

‘சுமார் நூறு ஸ்ட்ரெப்டொமைசின் ஊசி போட்டார்கள்.’

‘ம்... ஆமாம்... அப்போதெல்லாம் ஸ்ட்ரெப்டொமைசின்தான் அதற்கு மருந்து.’

இவருக்குப் பிறகு சர்ஜரி துறையைச் சேர்ந்த ஒரு டாக்டரும் காசநோய் பற்றிக் கேட்டபோது அதே பதிலைச் சொன்னேன். ஆனால் அந்த சர்ஜன் குறுக்கிட்டு ஒரு விஷயம் சொன்னார்.

‘பதினைந்து வயதில்தானே வந்தது? அதற்குப் பிறகு காசநோய்

சம்பந்தமான எந்தப் பிரச்னையும் இல்லையே?'

'சுத்தமாக இல்லை.'

'அப்படியானால் இதுபற்றி மறந்துவிடுங்கள். அனஸ்தீஸியா டாக்டர்களிடம் சொல்லிவிடாதீர்கள். பிறகு அவர்கள் இதற்காக வேறு ஒரு வாரம் சர்ஜரியைத் தள்ளி வைத்துவிடுவார்கள்.'

அவர் கூறியபடியே நான் அனஸ்தீஸியாகாரர்களிடம் பதினைந்து வயதில் வந்த காசநோய் பற்றி எதுவும் சொல்லவில்லை. 'காசநோய், ஆஸ்த்மா வந்திருக்கிறதா?' என்ற கேள்விக்கு 'இல்லை' என்று தெளிவாக பதில் சொன்னேன்.

பிறகு அறுவை சிகிச்சை முடிந்த பிற்பாடுதான் இந்த விவகாரம் பற்றி எனக்குப் புரிய வந்தது. அதாவது, அனஸ்தீஸியா கொடுத்தபிறகு ஒரு பதினைந்து நாட்களுக்கு காசநோயாளியைப் போல் சளியும் இருமலுமாக இருக்கிறது.

இதை எப்படிச் சமாளிப்பதென்று ஃபிஸியோதெரப்பி துறையிலிருந்து பல டாக்டர்கள் வந்து பல பயிற்சிகள் கொடுத்தார்கள்.

சர்ஜரிக்காக மார்புக்கூட்டின் நடுவே நெஞ்செலும்பை இரண்டாகப் பிளந்துவிடுவார்கள் என்பதால் இருமும்போது மெஷின் கன்னால் உடம்பை சல்லடையாகத் துளைப்பது போல் வலிக்கிறது. அனஸ்தீஸியா கொடுக்கப்படுவதால் 15 நாட்களுக்கு காசநோயாளி போல் ஆகிவிடுவதால் அவ்வப்போது இருமுவதும் தவிர்க்கமுடியாததாகிவிடுகிறது. அப்படி இருமும்போது நெஞ்சே வெடித்துவிடுவதுபோல் ஏற்படும் வலியைச் சற்றே குறைப்பதற்கு தலையணையை எடுத்து மார்பில் அழுத்திக்கொண்டு இருமலாம். அல்லது இரண்டு கைகளையும் ஒன்றுக்கொன்று எதிராக மார்பில் வைத்து நன்கு அழுத்திக் கொண்டு இருமலாம். மேலும், சளி எப்போது வந்தாலும் துப்பிவிட வேண்டும்; விழுங்கக்கூடாது. விழுங்கினால் அது பிறகு பெரிய இருமலாக மாறி ஆளைப் புரட்டி எடுத்துவிடும்.

ஆனால் சளி வந்தால் எழுந்து சென்று துப்ப முடியாது. அறுவை சிகிச்சைக்குப் பிறகு ஒரு வார காலத்துக்கு இஷ்டப்படி எழுந்து கொள்ளவோ உடலை அசைக்கவோ முடியாது. உடம்பை அசைத்தாலே நெஞ்செலும்பு வலிக்கும். அதனால் கோழையும் சளியும் வந்தால் மீராவைத்தான் கூப்பிட வேண்டும். அவள் டிஷ்யூ பேப்பரை எடுத்து வாயில் வைத்துத் துடைத்துப் போடுவாள். ஐஸியூவில் இருந்த இரண்டு நாட்களும் இதையும் நர்ஸ்கள்தான் செய்தனர். அறுவை சிகிச்சை முடிந்து ஓரளவு பிரக்ஞை வந்ததும் நெஞ்சில் சேர்ந்திருக்கும் சளியை அகற்றுவதற்கு ஒரு முறையைக் கையாள்கிறார்கள். அப்போது உண்டாகும் இருமலில் உயிர் போய் உயிர் வருகிறது. Vacuum cleaner எப்படி வேலை செய்கிறதோ அதே முறையில், வாய்க்குள் ஒரு நீல நிற திரவத்தை அனுப்பி சளி ஒரு குழாய் வழியே உறிஞ்சியெடுக்கப்படுகிறது. அதுவும் இப்படி அரை மணி நேரத்திற்கு ஒருமுறை செய்யப்படுகிறது. (கவனிக்கவும்: நான் அப்போது அரை நினைவுடன் இருந்ததால் காலம் பற்றிய பிரக்ஞை எதுவும் இல்லை.) அது ஒரு உச்சபட்ச வலி. இவ்வளவு வலியை அனுபவித்த பிறகு வாழ்வின் சந்தோஷங்களின் மீதே ஒருவித

வெறுப்பும் விரக்தியும் ஏற்பட்டுவிடுவதை நான் அந்தத் தருணத்தில் உணர்ந்தேன். அந்த வலியிலிருந்து தப்பிப்பதற்காக வாழ்வின் எந்த சந்தோஷத்தையும் விட்டுக்கொடுத்துவிடலாம் என்று தோன்றியது. அந்த வலி பற்றி நினைக்கும்போதெல்லாம் இந்த எண்ணம் ஏற்படுகிறது. இப்போது இந்த வார்த்தைகளை எழுதும்போதுகூட.

அப்படி அந்த உறிஞ்சான் குழாய் மூலம் சளியை வெளியே எடுத்தபோது அந்த நர்ஸ் ஆறுதலாக என்னைத் தடவிக்கொடுத்தாரே - அந்த ஸ்பர்ஸத்துக்கு இணை வேறு எதுவுமில்லை.

அரசு மருத்துவமனைக்கு நான் செல்ல விரும்பாததன் மற்றொரு காரணம்: மீராவின் பதினெட்டாவது வயதில் அவளுடைய முதல் கணவனுக்கு மூளைக் காய்ச்சல் ஏற்பட்டு அவன் ஒரு அரசு மருத்துவமனையில்தான் சேர்ந்து அங்கே பதினைந்து நாள் கிடந்து செத்தான். அதனால் அதே மாதிரியான ஒரு அனுபவம் அவளுக்கு என்னால் மீண்டும் ஏற்படுவதை நான் விரும்பவில்லை.

பொதுவாகத் தொண்டை வழியாகக் குழாய் பொருத்தி, மயக்க மருந்து கொடுத்தே பைபாஸ் சர்ஜரி செய்யப்படும். அப்போது வென்ட்டிலேட்டர் மூலமாக சுவாசம் கொடுக்கப்படும். இந்த அறுவை சிகிச்சையில் பெரும்பாலும் விபத்து நிகழ்வதில்லை என்றாலும் இந்த முறை உயிருக்கு ஆபத்தானதுதான். இதை உத்தேசித்து நோயாளியின் முதுகுத் தண்டில் மயக்க ஊசி போட்டு, அவர் சுயநினைவில் இருக்கும்போதே அறுவை சிகிச்சை செய்யும் முறை அறிமுகமாகியிருக்கிறது. கடந்த மாதத்தில் இப்படி இரண்டு பேருக்கு அறுவை சிகிச்சை நடந்துள்ளது. ஆனால் அந்த முறை நான் அனுமதிக்கப்பட்டிருந்த மருத்துவ மனையில் இன்னும் உபயோகத்துக்கு வரவில்லை.

மேற்கண்ட முறைப்படி முதுகுத்தண்டில் ஊசி போடப்படும்போது கழுத்திலிருந்து இருதயப் பகுதி வரைதான் உணர்வு மரக்க வைக்கப்படுகிறது என்பதால், பழைய முறையில் ஏற்படும் சளி, கபம், கோழை என்ற பிரச்னையெல்லாம் இல்லை. நெஞ்சு வெடிப்பது போல் உண்டாகும் இருமலும் இல்லை. மேலும், அறுவை சிகிச்சைக்கான செலவும் பாதிதான்.

எனக்கு அறுவை சிகிச்சை முடிந்து ஓரளவு சுயநினைவு வந்தபோது என் தொண்டைக்குள் அனுப்பப்படிருந்த குழாயை நீக்கினார்கள். நீக்கிய டாக்டர் என்னிடம் ‘what's your name?’ என்று கேட்டார். (பொதுவாக எல்லா டாக்டர்களுமே ஆங்கிலத்தில்தான் பேசினார்கள். ஆங்கிலம் தெரியாத நோயாளிகள் என்ன செய்வார்கள் என்று எனக்கு சம்சயமாகவே இருந்தது.)

‘கழ்ழாயிழம் பெழுமாழ்’ என்றேன்.

‘Good’ என்றார் டாக்டர்.

அவர் திருப்தியுடன் ‘குட்’ என்று சொன்னதன் காரணம் எனக்குப் பிறகுதான் புரிந்தது. சிலருக்கு - அதாவது, ஆயிரத்தில் ஒருவருக்கு - குரலில் பிரச்னை ஏற்பட்டுவிடுமாம்.

***

எனக்கு டிசம்பர் 29ந் தேதி வியாழக்கிழமை அன்று அறுவை சிகிச்சை செய்யப்படும் என்று சொல்லியிருந்தார்கள்.

ஊரெல்லாம் ஒரே கிறிஸ்துமஸ் மற்றும் புத்தாண்டுக் கொண்டாட்டமாக இருந்ததை என்னுடைய அறையிலிருந்தே உணர்ந்துகொள்ள முடிந்தது. பல டாக்டர்கள் விடுப்பில் இருந்தார்கள்.

சர்ஜரி துறையைச் சேர்ந்த மருத்துவர் குழு ‘ஒருவேளை புதன் கிழமையே சர்ஜரி இருக்கலாம்: தயாராக இருங்கள்’ என்று சொல்லிவிட்டுப் போனார்கள்.

அறுவை சிகிச்சைக்கு முன்னால் நோயாளிகளே ரத்த தானத்துக்கும் ஏற்பாடு செய்ய வேண்டும். ரத்த வங்கியில் நான்கு பேர் ரத்த தானம் செய்ய வேண்டும். அது பொது தானம். ரத்தம் எந்தப் பிரிவைச் சேர்ந்ததாக வேண்டுமானாலும் இருக்கலாம். பிறகு, அறுவை சிகிச்சை செய்ய வேண்டிய அன்று நோயாளியின் ரத்தப் பிரிவைச் சேர்ந்த இரண்டு பேர் காலை ஏழு மணிக்கே மருத்துவமனைக்கு வந்து தயாராக இருக்க வேண்டும். அவர்களிடமிருந்தே நோயாளிக்கு ரத்தம் எடுக்கப்படும்.

இவ்வளவு ஏற்பாடுகளையும் மீராவே செய்தாள். அதிலும் ரத்ததானம் செய்பவருக்கு ரத்த அழுத்தம், சர்க்கரை, எய்ட்ஸ் போன்ற வியாதிகள் எதுவும் இருக்கக்கூடாது.

அறுவை சிகிச்சைக்கு முந்தின தினம் இரவு பத்து மணியிலிருந்து நோயாளி எதுவும் சாப்பிடக்கூடாது: தண்ணீர்கூட குடிக்கக்கூடாது. ஒரு நர்ஸ் ‘எச்சிலைக்கூட விழுங்கக்கூடாது’ என்றார்.

புதன்கிழமை காலை எட்டு மணிக்கு அறுவை சிகிச்சை என்பதால் எல்லா ஏற்பாடுகளையும் செய்துகொண்டு தயாராக இருந்தோம்.

காலை பத்து மணி ஆயிற்று: ஆனால் எந்தத் தகவலும் வரவில்லை. எச்சிலைக்கூட விழுங்காமல் உட்கார்ந்திருந்தேன். பதினோரு மணி அளவில் அறுவை சிகிச்சைக் குழுவினர் வந்து ‘நாளைதான் அறுவை சிகிச்சை’ என்று சொல்லி வருத்தம் தெரிவித்தனர்.

ரத்த தானம் செய்ய வந்து காலை ஏழு மணியிலிருந்து காத்துக் கொண்டிருந்த இருவரையும் மறுநாள் காலை ஏழு மணிக்கு வரச்சொல்லி அனுப்பி வைத்தோம். அவர்கள் ஏற்கெனவே அலுவலகத்திலிருந்து விடுப்பு எடுத்திருந்தார்கள். இப்போது நாளையும் விடுப்பு எடுக்க வேண்டும். அவர்கள் இருவரும் எனக்கு நெருக்கமானவர்களும் அல்ல. மிகுந்த தர்ம சங்கடமாக இருந்தது.

பிறகு, புதன்கிழமை இரவு பத்து மணியிலிருந்து மீண்டும் தண்ணீர் கூடக் குடிக்காமல் இருக்க ஆரம்பித்தேன். அப்போது பத்தரை மணி அளவில் என் அறைக்கு வந்த அறுவை சிகிச்சைக் குழுவினர் ‘நாளை எங்கள் தலைமை மருத்துவருக்கு ஒரு அவசர வேலை வந்துவிட்டது. அதனால் நாளை அறுவை சிகிச்சை இல்லை. வெள்ளிக் கிழமையும் அவர் ஃப்ரீ யாக இல்லை. சனி, ஞாயிறுகளில் அறுவை சிகிச்சை செய்வதில்லை. அதனால் உங்களுக்கு திங்கட்கிழமைதான் அறுவை சிகிச்சை. சிரமத்திற்கு மன்னியுங்கள்’ என்றார்கள்.

‘அதனால் பரவாயில்லை’ என்று சொல்லி அவர்களை அனுப்பிவிட்டு

என்ன செய்யலாம் என்று யோசித்தேன்.

ஏற்கெனவே நான் இந்த மருத்துவமனைக்கு வந்தது தவறோ என்ற எண்ணத்தில் இருந்தேன். அதைச் சற்று விரிவாகச் சொல்ல வேண்டும்.

மன அழுத்தமும், மனப் பதற்றமும்தான் இருதய நோய்க்கும், ரத்தக் குழாயில் அடைப்புகள் ஏற்படவும் முக்கியமான காரணம் என்று இருதய நிபுணர் கூறியிருந்தார் அல்லவா?

இது பற்றி நான் அலெக்ஸிடம் சொன்னபோது அவன் ‘அது நம் கையில் இல்லையே பெருமாள்: நம்மைச் சுற்றியிருப்பவர்களின் கையில் அல்லவா இருக்கிறது?’ என்று சொன்னான்.

அடுத்த மனிதனைப் பற்றிய எவ்வித பிரக்ஞையும் இல்லாத மனிதர் கூட்டம் வாழும் இந்தியா போன்ற ஒரு நாட்டில் எப்படி மன அழுத்தமும், மனப் பதற்றமும் இல்லாமல் வாழ முடியும்? உதாரணமாக, நான் ஒரு அடுக்குமாடிக் குடியிருப்பின் கீழ்த்தளத்தில் வசிக்கிறேன். தினமும் இரவு பதினோரு மணிக்கு மேல்வீட்டில் உரலில் எதையோ போட்டு இடிப்பார்கள். அது தவிர, மாதாந்திர தூரத்துணியை மேலேயிருந்து கீழே தூக்கிப்போடுவார்கள். எங்கள் குடியிருப்பை ஒட்டி ஒரு காலி மனை இருக்கிறது. அந்த இடத்தில் வந்து விழும் தூரத் துணி. நன்கு படித்த, மேல் நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்த பெண்தான். என்ன செய்வது?

நான் சேர்ந்திருந்த அந்த மருத்துவமனையும் எங்கள் அடுக்குமாடிக் குடியிருப்புக்கு எந்தவிதத்திலும் குறைச்சலாக இல்லை.

ஏற்கெனவே நான் Nitrocontin மாத்திரையால் நரக வேதனையை அனுபவித்துக்கொண்டிருந்தபோது இரவு சரியாக ஒன்பது மணிக்கு ஆரம்பித்து மேல்மாடியில் ‘டங் டங்’கென்று இடித்துக்கொண்டிருந்தார்கள். இரவு பன்னிரெண்டு வரை அது தொடர்ந்தது. என்னவென்று விசாரித்ததில் மேல் தளத்திலிருக்கும் ஆபரேஷன் தியேட்டரில் மராமத்துப் பணிகள் நடந்துகொண்டிருக்கிறதாம். கடப்பாரையால் இடிக்கும் சப்தமும் இன்னும் பல தளவாடங்களின் சப்தமும் ஏதோ போர்க்களத்தில் வந்து மாட்டிக்கொண்டதைப் போன்ற அனுபவத்தைக் கொடுத்தன.

மூன்றாவது நாள் எங்கள் தளத்திலிருந்த இதய நோயாளிகள் அனைவரும் தத்தம் அறையை விட்டு வெளியே வந்து கத்த ஆரம்பித்தனர்.

இதய நோயாளிகள் நடக்கவே கூடாது என்று சக்கர நாற்காலியில் வைத்து அழைத்துக்கொண்டு செல்லப்படும் நிலையில், அவர்களே ஒரு கலவரத்தில் ஈடுபடும் சூழ்நிலையை ஒரு மருத்துவமனை ஏற்படுத்துகிறது என்றால் என்ன சொல்ல இருக்கிறது?

ஒரு நோயாளி நர்ஸ்களிடம் இது பற்றி கடுமையாக பேசிவிட்டதில் அந்த நர்ஸ் அழுதே விட்டார். பாவம், மருத்துவமனை நிர்வாகம் செய்யும் இத்தகைய கோளாறுகளுக்கு இரவுபகல் பாராமல் நோயாளிகளை கவனித்துக்கொள்ளும் அந்த நர்ஸ்கள் என்ன செய்வார்கள்?

மறுநாள் இது பற்றி என்னிடம் பேசிய மருத்துவமனை நிர்வாகி ஒருவர் எருமைத்தோல் கொண்ட தடித்தனத்துடன் என்னென்னவோ வாதங்களை அடுக்கினார்.

பகலில் அறுவை சிகிச்சை நடப்பதால் பகலில் மராமத்துப் பணிகளை

வைத்துக்கொள்ள முடியாது; இரவில் நோயாளிகளுக்கு இடைஞ்சலாக இருக்கிறது என்று மராமத்துப் பணிகளை ஒத்தி வைக்கவும் முடியாது; ஏனென்றால், தினசரி வந்து குவியும் இதய நோயாளிகளின் எண்ணிக்கை அதிகரித்துக்கொண்டே போகிறது; அதற்கேற்றாற்போல் ஆபரேஷன் தியேட்டரை விரிவுப்படுத்தவில்லையெனில் பாதிக்கப்படப்போவது நோயாளிகள்தான்; அவர்கள்தான் பிறகு நாள்கணக்கில் காத்திருக்க வேண்டியிருக்கும்; எனவே, மராமத்துப் பணிகள் நோயாளிகளின் நன்மைக்காகத்தான் நடந்தேறி வருகின்றன.

'ஒன்றரை லட்சம் ரூபாயைக் கட்டியிருந்தாலும் பரவாயில்லை; நாம் இந்த மருத்துவமனையிலிருந்து டிஸ்சார்ஜ் ஆகிவிடுவோம்; கிளம்பு. இன்னும் நான்கு நாட்களுக்கு இந்த நரகத்தை என்னால் தாங்க முடியாது, என்றேன் மீராவிடம். உண்மைதான். இன்னும் நான்கு நாட்களுக்கு அந்த Nitrocontinஐப் போட்டுக்கொண்டு கிடக்க வேண்டும் என்பதை நினைத்தாலே எனக்கு தேகம் நடுங்கியது.

ரத்த தானம் செய்ய வரும் இரண்டு நண்பர்களிடமும் 'நாளை அறுவை சிகிச்சை ரத்தாகிவிட்டது' என்பதைத் தெரிவிக்கச் செய்தேன்.

இதெல்லாம் நடந்துகொண்டிருந்தபோது என்னைப் பார்க்க வந்திருந்த என் தோழி டெய்ஸி உடனிருந்தாள். அவள் சினிமாத் துறையைச் சேர்ந்தவள்.

'இரு பெருமாள்... ஒரு காரியம் செய்கிறேன்' என்று கூறியவள் இயக்குனர் ராஜ்கிஷோரிடம் பேசினாள். அவளுக்கு ராஜ்கிஷோர் நன்கு பழக்கம். அவர் படப்பிடிப்புக்காக எங்கோ ஒரு தொலைதூர கிராமத்திற்கு வந்திருப்பதாகவும், நாளை காலை நிச்சயமாக அறுவை சிகிச்சை நடப்பதற்கு ஏற்பாடு செய்துவிடுவதாகவும் உறுதியளித்தார். ராஜ்கிஷோரும் அந்த மருத்துவமனையின் உரிமையாளரும் நெருங்கிய நண்பர்கள் என்று சொன்னாள் டெய்ஸி.

அதற்குள் மீரா வேறொரு ஏற்பாடும் செய்திருந்தாள். அந்த மருத்துவமனையின் டீனுடைய காரியதரிசியிடம் விஷயத்தைக் கூறியிருக்கிறாள். அவருக்கு நான் மணியின் நெருங்கிய நண்பன் என்பது தெரியும். அவர் உடனே அலறிப் பிடித்துக்கொண்டு 'ஆவன செய்வதாகக்' கூறியிருக்கிறார்.

பல இடங்களில் மணியின் பெயரைச் சொன்னால் மந்திரவாதியின் கோலுக்குக் கட்டுப்பட்டதைப்போல் காரியங்கள் நடக்கும். அதற்கடுத்த அரை மணி நேரத்தில் ஒரு நர்ஸ் வந்து நாளை காலை அறுவை சிகிச்சைக்குத் தயாராக இருக்கும்படி சொல்லிவிட்டுச் சென்றார்.

அறுவை சிகிச்சைக் குழுவின் தலைவரும் மற்றவர்களைப் போல் கிறிஸ்துமஸ் கொண்டாட்டங்களுக்காக விடுப்பில் செல்ல இருக்கிறார் என்றே முதலில் நினைத்தேன். ஆனால் பிறகுதான் தெரிந்தது, அவருக்கு வருமான வரி கட்ட வேண்டிய கெடு நெருங்கிவிட்டதால் அது சம்பந்தமான வேலைகளைக் கவனிப்பதற்காகத்தான் அறுவை சிகிச்சையை ஒத்திப்போட்டார் என்று. அவருக்கும் பாவம் மன அழுத்தம், மனப் பதற்றம்.

நர்ஸ் வந்து சொல்லிவிட்டுச் சென்றதும் உடனடியாக மீண்டும் ரத்த தானம் செய்ய வேண்டிய நண்பர்களிடம் தகவல் தெரிவிக்கப்பட்டது - காலையில்

ஏழு மணிக்கு ஆஜராகிவிடச் சொல்லி.

அறுவை சிகிச்சை முடிந்து நோயாளி ஐஸீயூவில் இருக்கும் நாட்களில் நோயாளியின் உடனிருப்பவர் மருத்துவமனை அறையில் தங்க முடியாது. மருத்துவமனை அறை நோயாளிக்காக மட்டும்தான் தரப்படும். எனவே, நோயாளி ஐஸீயூவில் இருக்கும் நாட்களில் உடனிருப்பவர் மருத்துவமனைக்கு வெளியேயுள்ள விடுதியில்தான் தங்கிக்கொள்ள வேண்டும். ஆனால் விடுதியில் அறை எடுப்பதோடு சரி. உடனிருப்பவர் அங்கே சென்று ஓய்வெடுக்க முடியாது. காரணம்: அறுவை சிகிச்சை நடக்கும்போதும் சரி, அறுவை சிகிச்சை முடிந்து நோயாளி ஐசியூவில் இருக்கும்போதும் சரி, நோயாளிகளின் உடனிருப்பவர் ஆபரேஷன் தியேட்டருக்கு வெளியிலும், ஐஸீயூவுக்கு வெளியிலும் இருக்கும் நாற்காலிகளில்தான் எந்நேரமும் காத்திருக்க வேண்டும். எந்த நேரத்திலும் நோயாளி பற்றி தகவலைத் தெரிவிக்க வேண்டியிருக்கும். (புரிகிறதா வாசகர்களே?)

காலையில் போய் காலைக் கடன்களைக் கழித்து, குளித்துவிட்டு வருவதோடு சரி, மீரா அந்த இரண்டு தினங்களும் - முதலில், ஆபரேஷன் தியேட்டருக்கு வெளியிலும் (ஆபரேஷன் நான்கரை மணி நேரம் நடந்ததாம்), பிறகு ஐஸீயூவுக்கு வெளியிலும்தான் காத்திருந்திருக்கிறாள்.

இம்மாதிரி விஷயங்களில் நோயாளிகளின் பாட்டைவிட நோயாளியின் உடனிருப்போர் படும் பாடு மிக மோசமானது. ஒரே இடத்தில் இரண்டு தினங்கள் உட்கார்ந்திருக்க வேண்டும். அதுவும் நோயாளிக்கு எப்படியிருக்கிறதோ என்ற பதற்றத்துடன் - என்றால் நீங்கள் என்ன செய்வீர்கள்? நோயாளியாவது மயக்கத்திலோ அரை மயக்கத்திலோ இருப்பார். அதனால் காலம் என்பது அவருக்குப் பிரச்னையில்லை. ஆனால் முழுப் பிரக்ஞையுடன் இருப்பவரின் நிலை?

மீரா பாபாவின் சரிதத்தைப் படித்துக்கொண்டிருந்ததாகப் பிறகு கூறினாள்.

அன்றைய தினம் எனக்கு மட்டும்தான் அறுவை சிகிச்சை நடந்ததாகத் தெரிந்தது. அறுவை சிகிச்சை முடிந்து வெளியே வந்த சர்ஜன் ‘கண்ணாயிரம் பெருமாளின் அட்டெண்டெண்ட் யார்?’ என்று கேட்க மீரா எழுந்து நிற்க ‘ஓ... நீங்களா?’ என்று கேட்டு தலைக்கு மேல் இரண்டு கைகளையும் உயர்த்திக் கும்பிட்டுக்கொண்டே ‘பெருமாள் நலம்; நீங்கள் போய்ப் பார்க்கலாம்’ என்றாராம்.

***

சே... இவ்வளவு காலம் மாங்கு மாங்கு என்று எழுதி இப்படியா ஒரு கெட்ட பெயரை எடுக்க வேண்டும் என்று விசனமாக இருக்கிறது. பிற்பாடு டெய்ஸி சொன்னாள் ஒரு விஷயம். அன்றைக்கு ராஜ் கிஷோர் என்னிடம் நீண்ட நேரம் பேசினார் இல்லையா? உடனே அவருடைய உதவியாளர்கள் என்னைப் பற்றி அவரிடம் வத்தி வைத்திருக்கிறார்கள்: ‘அந்த கண்ணாயிரம் பெருமாள் ஒரு விவகாரமான ஆள். அவரிடம் நீங்கள் பேசியிருக்கக்கூடாது.’ ராஜ் கிஷோர் டெய்ஸியிடம் அது பற்றி விசாரித்திருக்கிறார்.

மனதில் பட்டதை மறைக்காமல் எழுதினால் ‘விவகாரமான’ ஆளா?

ஆனால் ஒரு விஷயம். ராஜ் கிஷோரே மனதில் பட்டதையெல்லாம் மறைக்காமல் கொட்டிவிடும் ஆள்தானே? சரி போகட்டும். நான் பைபாஸ் சர்ஜரிக்கு வருகிறேன். அதை நான் ஒரு காட்டுமிராண்டித்தனமான சர்ஜரி என்றுதான் சொல்லுவேன். அறுவை சிகிச்சை முடிந்த முதல் வாரத்தில் அது எனக்கு நிரூபணமானது.

உடம்பை அசைக்கக்கூட முடியாமல், தாங்க முடியாத வலியுடனும், இருமலுடனும் இரண்டு தினங்கள் முழுப் பிரக்ஞையுடன் படுக்கையிலேயே படுத்துக் கிடக்க வேண்டும் என்றால் அது எவ்வளவு பெரிய கொடுமை? முதல் நாளை மட்டும் எப்படியோ ஓட்டிவிட்டேன். ஆனால் அடுத்த நாளிலிருந்து பாபாவின் முகத்தை ஞாபகம் கொள்ள ஆரம்பித்தேன். தியானத்தில் கரைந்துபோவதுபோல் காலம் கரைந்து செல்லலாயிற்று.

அறுவை சிகிச்சைக்குப் பிறகு உண்டாகும் சளி இருக்கிறதே. அது ஒரு ஆபத்தான கட்டம். அது மார்பினுள் தொற்றுநோயைக் கொண்டுவந்துவிட்டால் பத்தே நாளில் மறுபடியும் நடக்கும் மார்புத் திறப்பு விழா. என் நண்பன் ஒருவனின் தந்தை அப்படி இறந்து போயிருக்கிறார்.

அந்த ஏழு நாட்களையும் மரணத்தின் விளிம்பில் வாழ்ந்த நாட்கள் என்றுதான் சொல்ல வேண்டும். நல்லவேளையாக சிறுநீர் செல்வதற்கான குழாய் ஒன்றை ஆண் குறியின் துவாரத்தின் உள்ளே செலுத்தியிருந்ததால் சிறுநீர் கழிப்பதற்காக உடம்பை அசைக்க வேண்டியிருக்கவில்லை. ஆனால் அது ஐஸீயூவிலிருந்த இரண்டு தினங்களுக்குத்தான். அங்கிருந்து தனியறைக்கு அனுப்பப்பட்டபோது அந்தக் குழாயை எடுத்துவிட்டார்கள்.

மூன்றாம் நாளிலிருந்து தனியறை. உடம்பை அசைத்தாலே நெஞ்சுக் கூட்டிலிருந்து உயிர் கொல்லும் வலி கிளம்பியது. உடம்பிலுள்ள நச்செல்லாம் வெளியேறுவதற்காக தினமும் இரண்டரை லிட்டர் தண்ணீர் குடிக்கச் சொல்லியிருந்தார் மருத்துவர். இதற்காக ஒரு ஏற்பாடும் செய்யப்பட்டிருந்தது. அதாவது - ஒரு நாளில் நான் என்னவெல்லாம் உட்கொள்ளுகிறேனோ அதையெல்லாம் மீரா ஒரு தாளில் குறித்து வைத்துக்கொள்ள வேண்டும். எப்போது எவ்வளவு சாப்பிடுகிறேன்; எப்போது எவ்வளவு தண்ணீர் குடிக்கிறேன். நேரத்தையும் அளவையும் குறிக்க வேண்டும். அதற்காக அவுன்ஸ் க்ளாஸ் கொடுக்கப்பட்டிருந்தது. பொதுவாக எனக்கு அடிக்கடி தாகமெடுக்கும்; அடிக்கடி சிறுநீர் வரும். இரவில்கூட மூன்று முறை சிறுநீர் கழிக்க எழுந்துகொள்வேன். இப்போதோ காலையில் ஒரு டஜன் மாத்திரையும், இரவில் ஒரு டஜன் மாத்திரையும் சாப்பிடுகிறேன். பாலைவனத்தில் மாட்டிக்கொண்டதுபோல் தாகமெடுத்தது.

Intakeஐக் குறிப்பது போல் Outputஐயும் குறிக்க வேண்டும். நேரம் மற்றும் அளவு இரண்டையும். சிறுநீரை அளப்பதற்காக முக்கால் லிட்டர் கொள்ளளவுள்ள ஒரு கண்ணாடிக் குடுவை கொடுக்கப்பட்டிருந்தது.

பகலில் எனக்கு ஐந்தாறு முறை சிறுநீர் வந்தது. ஆனால் இரவிலோ சுமார் 20 தடவைகள் வந்தது. சமயங்களில் அரை மணி நேர இடைவெளி என்றால் சமயங்களில் பத்து நிமிட இடைவெளியிலும் வந்தது.

ஒவ்வொரு முறையும் மீரா வர வேண்டும். நம்மால் எழுந்து கொள்ள

முடியாது. அதுதான் உடம்பை அசைக்கவே முடியாதே, எப்படி நாமாக எழுந்துகொள்வது? எழுந்துகொண்டாலும் சிறுநீர்க் குடுவை வேண்டும். சிறுநீர் அளவைப் பார்த்துவிட்டு, கழிவறையில் கொட்டிவிட்டு, குடுவையைச் சுத்தப்படுத்தி வைக்க வேண்டும். அளவையும் குறித்துக்கொள்ள வேண்டும்.

எத்தனை முறை மீராவை எழுப்புவது? முடிந்தவரை -அதாவது, படுக்கையிலேயே போய்விடுவோம் என்ற நிலையை எட்டும்வரை - பொறுத்துவிட்டு மீராவை உறக்கத்திலிருந்து எழுப்புவேன். களைப்பினாலும் சரியாகத் தூக்கமில்லாததாலும் ஆழ்ந்த உறக்கத்திலிருப்பாள் அவள். கொஞ்சம் விட்டுவிட்டு நான்கைந்து தடவை அழைத்த பிறகு அடித்துப் பிடித்துக் கொண்டு எழுந்துகொள்வாள். அவள் நிலையை எண்ணி வருத்தம் உண்டாகும். என் தொடையைத் தூக்குமளவு அவளிடம் பலமிருக்காது. எனவே அவள் என் முதுகுப்புறம் கையை வைத்துத் தூக்க முயற்சிக்கும்போது நான் என் இடது கையை அவளுடைய வலது தோளில் வைத்து உடம்பை முன்பக்கம் தள்ளுவேன். இப்படி இரண்டு பேருடைய முயற்சியால் எழுந்து உட்கார்ந்து குடுவையில் சிறுநீர் கழிப்பேன்.

இதயத்தின் ரத்தக் குழாய்களில் (artery) ஒட்டுப் போடுவதற்குத் தேவையான ரத்தக் குழாய்களை மருத்துவர்கள் பொதுவாக காலிலிருந்து எடுக்கிறார்கள். காலிலிருந்து எடுக்க முடியாவிட்டால் கையிலிருந்து எடுப்பார்கள். காலிலிருந்து எடுப்பதுதான் வசதி. எனக்கும் இரண்டு கால்களிலிருந்து எடுக்கப்பட்டது. அதனால் முழங்காலுக்குச் சற்று மேலிருந்து கணுக்கால் வரை கிழிக்கப்பட்டிருந்தது. முதலில் cotton crepe துணியால் கட்டியிருந்தார்கள். பிறகு வெள்ளை நிறத்திலான மெல்லிய ஸ்டாக்கிங்ஸ் போட்டு விட்டார்கள்.

பைபாஸ் சர்ஜரி செய்துகொள்பவர்கள் அனுபவிக்கும் வேதனையில் பாதியை நோயாளியின் உடனிருப்பவரும் அனுபவித்தாக வேண்டும் என்பதற்கு இந்த ஸ்டாக்கிங்ஸ் விஷயமும் ஒரு உதாரணம். இதைக் காலில் மாட்டுவதற்கு நர்ஸுக்கு அரை மணி நேரம் பிடித்தது. இதை ஒரு மாத காலம் போட்டுக்கொள்ள வேண்டும். மருத்துவமனையில் இருந்தவரை நர்ஸ் போட்டுவிட்டார். வீட்டுக்கு வந்த பிறகு மீராவின் தினசரிக் கடமைகளில் இதுவும் ஒன்றாயிற்று. இரண்டு ஜோடி வைத்துக்கொண்டு தினமும் ஒன்று மாற்றி ஒன்று போட வேண்டும். ஸ்டாக்கிங்ஸ் சதையை இறுக்கமாகப் பிடித்திருக்குமாதலால் இதை மாட்டுவதற்குள் மாட்டுபவரின் பிராணன் போய்விடும். ஆனால் மீரா அபாரமான பொறுமைசாலி என்பதால் என்னைக் குளிப்பாட்டி விட்டு கால் புண்ணிலிருக்கும் தண்ணீரை முதலில் துவாலையால் ஒற்றித் துடைத்துவிட்டு பிறகு பொறுமையாக டிஷ்யூ பேப்பரால் காயத்திலுள்ள ஈரத்தைத் துப்புரவாக ஒற்றி ஒற்றி எடுப்பாள். அதற்குப் பிறகுதான் ஸ்டாக்கிங்ஸ் பர்வம் துவங்கும்.

சிறுநீரிலுள்ள ஏதோ ஒன்று புண்ணுக்கு ஆகாது என்பதால் கால் காயத்தில் சிறுநீரே படக் கூடாது என்று எச்சரித்திருந்தார் டாக்டர். அதனால் குடுவையில் சிறுநீரை விட்ட பிறகு டிஷ்யூ பேப்பரால் ஆண்குறியைத் துடைக்க வேண்டும்.

சராசரியாக நூறு மில்லி போனது. ஆக, இரவில் இரண்டு லிட்டர். பகலில் ஒரு லிட்டர். ஆனால் கொள்ளளவு என்னவோ இரண்டு லிட்டர்தான் இருந்தது. கொள்ளளவு மற்றும் வெளியேற்றப் பட்டியலைப் பரிசோதித்த டாக்டர் கொள்ளளவும் வெளியேற்றமும் சரிசமமாக இருக்க வேண்டுமென்றும், இரவில் 20 முறை சிறுநீர் கழிக்கும் நான் இரவில் ஏன் தண்ணீரே குடிப்பதில்லை என்றும் கேட்டார். ‘இரவில் தண்ணீர் குடித்தால் இன்னும் அதிகம் சிறுநீர் கழிக்க வேண்டியிருக்கும்’ என்றேன். என்னுடைய இந்தப் பிரச்னைக்கும் டாக்டர் மருத்துவம் பார்த்துவிடலாம் என்பது போல் ஆரம்பிக்கவே நான் ‘எனக்கு இந்தப் பழக்கம் சிறு வயதிலிருந்தே இருக்கிறது; பயப்பட ஒன்றுமில்லை’ என்று கூறி சமாதானப்படுத்தினேன்.

இரவில் மீராவை இருபது முறை எழுப்பியதால் இரவு பூராவும் அவளுடைய தூக்கம் போயிற்று. ஆனால் இரண்டு தினங்கள்தான் அவளை அப்படி எழுப்பினேன். மூன்றாம் நாள் நானே சிரமப்பட்டு முழங்கையை ஊன்றி எழுந்து கழிவறை சென்றேன். சிறுநீர் வெளியேறும் அளவு குத்துமதிப்பாகத் தெரிந்து போனதால் காலையில் பட்டியலை நிரப்பச் செய்தேன். மீராவுக்கு அதில் துளியும் சம்மதமில்லை. கழிவறையில் நான் விழுந்து கிழுந்து வைத்துவிட்டால் என்ன செய்வது என்று பயந்தாள்.

‘நான் ஜாக்கிரதையாக இருப்பேன்; கவலைப்படாதே’ என்று அவளை தைரியப்படுத்தினேன்.

ஆனால் முழங்கையை ஊன்றி எழுந்துகொள்வதற்கு மிகுந்த பிரயாசைப்பட வேண்டியிருந்ததால் ஒரு முறை கட்டிலை விட்டு இறங்கினால் பிறகு இரண்டு மூன்று மணி நேரம் நாற்காலியிலேயே அமர்ந்துகொள்வேன் - முதுகில் ஒரு தலையணையை வைத்துக்கொண்டு.

இரவு முழுவதும் நீளும் தனிமையும் வலியும். மீண்டும் கை கொடுத்தது பாபாதான். அவருடைய முகத்தில் மட்டுமே கவனத்தைக் குவிப்பேன். என்னையுமறியாத ஒரு அரை விழிப்பு நிலையில் இரவு கடந்து விடும்.

ஆனால் நர்ஸ்கள் எவ்வளவு சொல்லியும் bedpanஐப் பயன்படுத்தமுடியவில்லை. முதல் இரண்டு தினங்கள் திரவ உணவே கொடுக்கப்பட்டதால் மலம் கழிக்க வேண்டிய அவசியமில்லாமல் இருந்தது. மூன்றாம் நாள் தனியறைக்கு வந்த பிறகு அதற்கு அவசியம் ஏற்பட்டது. bedpanஐ எப்படி உபயோகப்படுத்துவது? மல்லாந்து படுத்தபடியே அதைப் புட்டங்களின் கீழே வைத்துப் போக வேண்டும் என்றாள் மீரா.

கேட்கும்போதே என் உடல் கூசியது. சாதாரணமாக கழிவறையில் அமர்ந்து போவதே எனக்குப் பிரச்னையாக இருக்கும். அப்படியிருக்கும்போது படுத்துக்கொண்டே போவதா?

ஒருநாள் மலம் கழிக்காமலேயே சமாளித்துவிட்டு மறுநாள் தட்டுத்தடுமாறி கழிவறைக்குச் சென்றுவிட்டேன். ஆனால் நல்லவேளை, softovac என்ற மலமிளக்கியைக் கொடுத்திருந்ததால் முக்கி முனக வேண்டிய அவசியமில்லாமல் போயிற்று. இல்லாவிட்டால் மார்பெலும்பை இரண்டாகப் பிளந்து பிறகு சேர்த்திருக்கும் இந்த நிலையில் சிறிதளவு முக்கினாலும் நெஞ்சு பிளந்து விடுவதுபோல வலித்திருக்கும்.

***

எனக்கு பை பாஸ் அறுவை நடந்ததிலிருந்து மணிக்கும் மற்ற பீச் நண்பர்களுக்கும் விதியில் நம்பிக்கை வலுத்துவிட்டது. பிறகென்ன? எண்ணெயில் பொறித்த வடை, போண்டா, பஜ்ஜி எதையும் கண்டபடி முழுங்கமாட்டேன். சமையலுக்கு ஆலிவ் ஆயில். ('இல்லையே, மீரா எட்டு கரண்டி ஆயில் சாதா ஆயிலை ஊற்றி மீன் வறுப்பாள் என்று எழுதினாயே?' என்று என்னை இழுக்காதீர்கள். அதெல்லாம் மீராவை நக்கல் பண்ணுவதற்காக எழுதியது.) தண்ணியடிக்கும்போதுகூட தொட்டுக்கொள்ள ஆலிவ் காய்கள்தான். பீச்சில் இந்த ராயஸமெல்லாம் சாத்தியமில்லை என்பதால் ஆலிவ் காய்கள் கிடைக்கும் இடத்தில்தான் தண்ணியடிப்பது. தினமும் நடை, ஏரோபிக்ஸ், யோகா, இத்யாதி. பீச் நண்பர்களுக்கு விதியில் நம்பிக்கை பிறக்க இவ்வளவு காரணங்கள் போதாதா?

மரணம் என்பது நெற்றியில் எழுதப்பட்டிருக்குமாம். நெற்றியில் விபூதி பூசுவதுபோல் பட்டையிழுத்துக் காண்பித்தான் மணி.

விதியை வலியுறுத்துவதற்காக ஏகப்பட்ட சம்பவங்களை அடுக்கினான் நந்தா என்கிற நந்தகோபால். (கவனிக்கவும் நாவலில் முதல்முதலாக அறிமுகமாகிறது இந்தக் கதாபாத்திரம். இந்தக் கதாபாத்திரத்தை வைத்து நாவலில் பல காரியங்களை சாதித்துக்கொள்ளலாம் என்ற திட்டத்தில் இருக்கிறேன். குறிப்பாக, நந்தாவுக்கு சாமியார்களுடனும், சாமிகளுடனும், செக்ஸ் ஒர்க்கர் என்று politicallay correct ஆகவும், விபச்சாரி, வேசி, தேவடியாள், குச்சுக்காரி என்று politically incorrect ஆகவும் அழைக்கப்படுகிற பெண்களுடனும் நல்ல பரிச்சயம் கொள்ள ஆசையிருப்பதால் நந்தாவின் தயவு எனக்குத் தேவை. ஆனால் அதில் ஒரு சின்ன பிரச்னை இருக்கிறது. அதைத்தான் எப்படிக் கையாள்வது என்று எனக்கும் புரியவில்லை. பிரச்னை என்னவென்றால் - தண்ணியடிக்காத நேரங்களில் ஒரு மாதிரியும் (தங்கம், தங்கம்) தண்ணியடித்தால் வேறு மாதிரியும் நடந்துகொள்கிறான் நந்தா. Yes. City Lights மாதிரிதான். அதாவது, தண்ணியடிக்கும்போது நான்கு மணி நேரம், ஐந்து மணி நேரம் என்று பிளேட் போட்டு விடுகிறான். தற்சமயம் நான் தாற்காலிகமாகத் தண்ணியடிப்பதை நிறுத்தி வேறு வைத்திருப்பதால், அவன் போதையில் நான்கு மணி நேரம், ஐந்து மணி நேரம் உளறுவதை நான் சுயநினைவுடன் கேட்டுக் கொண்டிருக்க வேண்டும். இந்தப் பிரச்னையை மட்டும் சமாளித்துவிட்டால் அப்புறம் சாமியார்கள், சாமிகள், விபச்சாரி, வேசி, இத்யாதி, இத்யாதி எல்லாம் சாத்தியமாகிவிடும்.

ஒரு நாள் அவனும் நானும் சாலி கிராமத்திலுள்ள அவனுடைய கெஸ்ட் ஹவுஸுக்குச் சென்று கொண்டிருந்தோம். வழியில் ரோட்டில் ஒரு இடத்தில் திடீரென்று காரை நிறுத்தினான். 'ஒரு நிமிடம் பெருமாள்' என்று சொல்லிவிட்டு காரை விட்டு இறங்கி ரோட்டைக் கடந்து சென்று எதிர்ப்பக்கம் ஒரு மரத்தடியில் அமர்ந்திருந்த பைத்தியத்தைப்போல் தெரிந்த ஒருவரை வணங்கி கையிலிருந்த பணத்தைக் கொடுத்தான். அதற்குள் நானும் காரை விட்டு இறங்கி ரோட்டைக் கடந்து சென்றிருந்தேன். அவர் குளித்துப் பல காலம் ஆகியிருக்க வேண்டும் என்று தெரிந்தது. முடியெல்லாம் சடையாகி முதுகு வரை தொங்கிக் கொண்டிருந்தது. பைத்தியமா? சாமியாரா? அவர் என்னைப் பார்த்து சிரித்தபோது நான் ஒரு கையைத் தூக்கி 'ஹலோ' சொல்லும்

பாவனையில் சிரித்தேன். எனக்கு இரண்டு கரங்களையும் கூப்பி வணங்கத் தெரியவில்லை. அது ஏதோ அரசியல்வாதியின் வணக்கத்தைப்போல் செயற்கையாகத் தோன்றியது. வேண்டாம். அந்த வாக்கியத்தை அடித்து விட்டேன். சாமியார்களைச் சந்திக்கும் எழுத்தாளன்கள் அத்தனை பேரும் இதே வாக்கியத்தை எழுதி எழுதி வேசியின் சிதைந்துபோன தேகத்தைப்போல் ஆகிவிட்டது அந்த வாக்கியம். எனவே இப்படிச் சொல்லலாம்: அந்த ஜடாமுடிக்காரரின் கண்களில் ஒரு அபூர்வமான சிரிப்பு தெரிந்தது. நிச்சயமாகப் பைத்தியமில்லை என்று உறுதியானது எனக்கு.

பிறகு எங்கள் இருவருக்கும் விடை கொடுக்கும் பாவனையில் அவர் எழுந்து நின்றபோதுதான் கவனித்தேன். இடையில் அவர் துணியெதுவும் உடுத்தியிருக்கவில்லை. பதிலாக ஒரு பாலிதீன் தாளைச் சுற்றிக் கட்டிக்கொண்டிருந்தார்.

திரும்பும்போது 'இவர் ஒரு மகான்' என்றான் நந்தா. ஆச்சரியத்துடன் 'அப்படியா?' என்று கேட்டேன். அவர் பெயர் நாகராஜன். பூர்வாசிரமப் பெயர். இப்போது யார் அவரைப் பெயர் சொல்லிக் கூப்பிடுவது? சிறுவர் முதல் பெரியவர் வரை 'சாமி' என்றுதான் கூப்பிடுகிறார்கள். நாகராஜன் ஒரு சினிமா கம்பெனியில் ப்ரொடக்ஷன் மேனேஜராக இருந்தார். ஒரு நாள் திடீரென்று தன் வேலையையும், குடும்பத்தையும் ஆடைகளையும் உதறியெறிந்துவிட்டு இங்கே வந்து இந்த மரத்தடியில் அமர்ந்துவிட்டார். வெயில், மழை எல்லாம் இங்கேதான்.

சாப்பாடு?

யாராவது கொடுத்தால் உண்டு. அதுவும் எல்லோரிடத் திலிருந்தும் வாங்கிக்கொள்ள மாட்டார். அவர் வாங்கிக்கொள்ள மாட்டாரா என்று இங்கே ஒவ்வொருவரும் ஏங்கிக்கொண்டிருக்கிறார்கள். அவர் யாரிடமிருந்தும் ஏதேனும் ஒன்றை வாங்கிக் கொண்டால் அந்த நபருக்கு அன்றைய தினம் அதிர்ஷ்டம் பிய்த்துக்கொண்டு அடிக்கிறது. இதைப் பக்கத்திலுள்ள ஓட்டல் முதலாளியே சொல்கிறார். சாமி எப்போதாவது அங்கே போய் நிற்கும். ஓட்டல்காரர் பக்தியுடன் கொடுக்கும் சாப்பாட்டை வாங்கி சாப்பிடும். அன்றைய தினம் வியாபாரம் எப்போதையும் விட படு ஜோராக இருக்கும்.

இதுபோல் பல சாமியார் கதைகள் அவனிடம் உண்டு. மற்றொரு சாமியார் கதை: ஒரு ராஜாவுக்கு ஒரு நாள் இப்படி ஒரு சாமியாரைப் பார்க்க வேண்டும்போல் தோன்றியது. உடனே மந்திரியை அழைத்துச் சொன்னான்; இன்ன மாதிரி உலக பந்தங்களையெல்லாம் உதறிவிட்ட சாமியார்கள் இருப்பதாகக் கேள்விப்படுகிறேனே; நம் தேசத்திலும் அப்படிப்பட்ட சாமியார்கள் உண்டா? இருந்தால் அப்படி ஒரு சாமியாரை நான் பார்க்க வேண்டும்.

மந்திரி யோசித்தான். உத்தரவு போடுவதைத் தவிர ராஜாவுக்கு வேறு என்ன வேலை? வேலை செய்வதெல்லாம் நாம். நம்முடைய கஷ்டம் அவருக்கென்ன தெரியும்? - இந்த ரீதியில் யோசித்த மந்திரி நமக்கு இருக்கும் ஆயிரத்தெட்டு வேலையில் இப்படி சாமியாரைத் தேடிப் போவதெல்லாம் பைத்தியக்காரத்தனம் என்று முடிவு செய்து, அந்த ஊரிலேயே மாடு மேய்த்துக்கொண்டிருந்த ஒரு கோவணாண்டியைப்

பிடித்தான். ‘டேய், உன்னிடம் இந்தத் தேசத்து ராஜா வருவார். அவர் எதைக் கொடுத்தாலும் வேண்டாம் என்று சொல்ல வேண்டும். அப்படிச் சொன்னால் உனக்கு நூறு பொற்காசுகள் தருகிறேன்’ என்றான். மாடு மேய்ப்பவனுக்குப் புதையல் கிடைத்ததுபோல் இருந்தது. உடனே சம்மதித்தான். ராஜாவைச் சந்தித்த மந்திரி ‘இன்ன மாதிரி நீங்கள் சொன்ன சாமியார் ஒருவர் நம் ஊரிலேயே இருக்கிறார்’ என்றான். உடனே ராஜா தனது பரிவாரங்களுடனும் ஏகப்பட்ட பரிசுப் பொருட்களுடனும் சாமியாரைச் சந்திக்கப் புறப்பட்டான்.

கோவணாண்டியைப் பரிசோதிக்க விரும்பிய ராஜா ‘இந்தப் பரிசுப் பொருட்களையெல்லாம் ஏற்றுக்கொள்ளுங்கள்’ என்று தயவுடன் கூறினான்.

வைர வைடூரியங்களும், இன்னும் பல விலைமதிப்பற்ற பொருட்களுமாய் நிரம்பியிருந்தன பரிசுத் தட்டுக்கள். மந்திரிக்கே ஒரு கணம் கிலி ஏற்பட்டுவிட்டது - எங்கே இந்த மாட்டுக்காரன் பொன்னுக்கும், பொருளுக்கும் ஆசைப்பட்டு இவ்வளவு ஆபரணங்களையும் வாங்கிக் கொண்டுவிட்டால் என்ன செய்வது; ராஜாவை ஏமாற்றிவிட்டதற்காக கடும் தண்டனை கிடைக்குமே என்று. ஆனால் மாட்டுக்காரன் புத்திசாலி. அவன் அப்படிச் செய்யவில்லை. அவனுடைய குறி மந்திரி தருவதாகச் சொன்ன நூறு பொற்காசுகளிலேயே இருந்தது. ஒரு வேளை ராஜா தருவதை வாங்கிக்கொண்டு, மந்திரியின் பொல்லாப்புக்கு ஆளாகிவிட்டால்? இதற்காகத்தான் அரசனை நம்பி புருஷனை விட்டுவிடக்கூடாது என்று சொல்கிறது.

இப்படியும் ஒரு துறவியா என வியந்த ராஜா இன்னும் பல பெரிய பரிசுகளைத் தருவதாகக் கூறினான். எதற்கும் அசையவில்லை மாட்டுக்காரன். ஆச்சரியத்துக்கு மேல் ஆச்சரியமான ராஜா கடைசியில் ‘என் ராஜ்ஜியத்தையே உங்களுக்குத் தருகிறேன்’ என்றான். மாட்டுக்காரன் மறுத்துவிட்டான். கடைசியில் ராஜா ‘சாமி, நீங்கள் ஒரு மகான்’ என்றபடி மாட்டுக்காரனின் காலில் விழுந்தான்.

மந்திரிக்கு ஒன்றுமே புரியவில்லை. ராஜாவும் பரிவாரங்களும் கிளம்பிய பிறகு அந்த மாட்டுக்காரனிடம் ‘என்ன விஷயம்?’ என்று கேட்டான். அதற்கு மாட்டுக்காரன் சொன்னான்: ‘ஐயா, நான் வேண்டும் வேண்டும் என்று கேட்டபோதெல்லாம் எதுவுமே கிடைக்கவில்லை. இப்போது வேண்டாம் வேண்டாம் என்கிறபோது ராஜாவே காலில் விழுகிறார். ஒரு ராஜாவே என் காலில் விழுந்த பிறகு எனக்கு வேறு என்ன வேண்டும்?’

இனி வருவது சாமி கதைகள்:

1. திருக்கடையூரிலிருந்து சீர்காழி செல்லும் வழியில் பிரதான சாலையிலிருந்து 2 பர்லாங் தூரத்தில் உள்ளது தலச்சங்காடு என்று வழங்கப்படும் திருத்தலைச் சங்க நான்மதியம் என்னும் ஸ்தலம். 108 வைணவத் திருத்தலங்களுள் ஒன்று. 108 ஸ்தலங்கள் என்று சொல்கிறார்களே, உண்மையில் 107 ஸ்தலங்கள்தான் உண்டு. 108 ஆவது ஸ்தலம் எது தெரியுமா பெருமாள்? ஸ்ரீ வைகுண்டம். அங்கே செல்ல வேண்டுமானால் நாம் இங்கிருந்து டிக்கட் வாங்கிக்கொள்ள வேண்டும். போகும் வழியில் ஒரு சாராயக்கடை இருக்கிறது. சாலையெல்லாம் ஒரே குண்டும் குழியுமாக இருக்கும். என்னுடைய லேன்ஸர் காரைப் பார்த்ததும்

கோயிலில் வேலை செய்யும் சிறுவன் 'நீங்கள் சேவாத்ரியா?' என்று குஷியுடன் கேட்டான். நான் ஆமாமென்று தலையசைத்ததும் ஓடிச் சென்று பட்டாச்சாரியாரை அழைத்து வந்தான். வந்தவருக்கு 75 வயது இருக்கும். சந்நிதானத்தின் கதவைத் திறந்ததும் எங்களுக்குப் பெரிய அதிர்ச்சி. அங்கே தாயாரின் மார்பு தெரிகிறாற்போல் கிழிந்த சேலை கட்டியிருந்தது. பதறிப்போன பட்டாச்சாரியார் அவசரத்துடன் சென்று அதை சரி செய்தார். எனக்கு மட்டும் காசு வந்தால் நான் முதலில் செய்யப் போகும் காரியம், எல்லா கோயில்களிலும் உள்ள தாயார்களுக்கு நல்ல பட்டுச்சேலை வாங்கிக் கொடுப்பதுதான்.

2. ஒருமுறை வக்ரகாளியம்மன் கோயிலுக்குச் சென்றுகொண்டிருந்தேன். சென்னையிலிருந்து பாண்டிச்சேரி போகும் வழியில் கூட்டேரிப் பட்டைத் தாண்டி பெரும்பாக்கத்திலிருந்து எட்டு கிலோ மீட்டர் தூரத்திலிருக்கிறது அவள் கோவில். பௌர்ணமி அன்று நடுநிசியில் தரிசிப்பதுதான் விசேஷம். ஆனால் என் துரதிருஷ்டம் அம்பாளின் காலைப் பார்த்துவிட்டேன். (தொடை என்பதைத்தான் பயபக்தியின் காரணமாகக் கால் என்று குறிப்பிட்டான்.) என்னவென்று தெரியவில்லை. சேலை நழுவிவிட்டது. பாக்கியமா தரித்திரமா என்று தெரியவில்லை. ஒரே வாரத்தில் வியாபார விஷயமாக பாங்காக் செல்ல வேண்டியிருந்தது. அங்கிருந்து இந்தியா திரும்பியதிலிருந்துதான் என்னைப் பிடித்தது சனி. சனியைத் திரும்பக் கொண்டுபோய் பாங்காக்கிலேயே விட்டுவிட்டு வருவோம் என்று திரும்பவும் சென்றேன். பலனில்லை. பிறகு விதிப்படி நடக்கட்டும் என்று விட்டுவிட்டேன். ஆனால் பெருமாள்... அப்படி ஒரு காலை என் வாழ்நாளில் பார்த்ததில்லை. எந்த மானிடப் பிறவிக்கும் அப்படி ஒரு கால் சாத்தியமேயில்லை. (அவன் அப்படிச் சொன்னபோது அந்தச் சிலையை வடித்த சிற்பியின் கலைத்திறன் பற்றி நான் யோசித்துக் கொண்டிருந்தேன்.)

இனி வருவது செக்ஸ் ஒர்க்கர் என்று politically correct ஆகவும், விபச்சாரி, வேசி, தேவடியாள், குச்சுக்காரி என்று politicallay incorrect ஆகவும் அழைக்கப்படுகின்ற பெண்கள் பற்றிய கதை:

அப்படி ஒரு இருபது பெண்களுடன் எனக்குத் தொடர்பு இருந்தது பெருமாள். என்னுடைய முதல் பெண், கீதா மேனன். ஒரு நட்சத்திர ஓட்டலில் வரவேற்பாளினியாக இருந்தவள். அந்த ஓட்டலுக்கு அடிக்கடி வந்து தங்கிய ஒருத்தன் மீது காதலில் விழுந்து கர்ப்பமாகி விட்டாள். காதலில் விழுந்ததற்கு அடிப்படைக் காரணம், அவனுடைய பணம். குழந்தை பிறந்த பிறகுதான் தெரிந்திருக்கிறது. அவன் ஒரு போதைப் பொருள் கடத்தல்காரன் என்று. அவன் கைது செய்யப்பட்டு சிறைக்குப் போனதும் அவள் ஓட்டல் வேலையை விட்டுவிட்டு தொழிலில் இறங்கிவிட்டாள். ஒரு ப்ரோக்கர் மூலமாக எனக்கு அவள் அறிமுகம் கிடைத்தது. முதல் முறை அவளைப் பார்த்தபோது அவள் அழகில் மிரண்டு போனேன். சந்தன நிறம். அதில் கறுப்பு நிற மார்புக் கச்சை. எப்படியிருக்கும்? எதுவும் செய்யத் தோன்றாமல் கட்டிலிலேயே அமர்ந்திருந்தேன். 'முதல் முறையா?' என்று கேட்டாள். 'ஆமாம்' என்றதும் அவளே எனக்கு சகலத்தையும் கற்றுக்கொடுத்தாள். மிக நன்றாக ஆங்கிலம் பேசுவாள். 1985இலேயே 2000 ரூபாய் வாங்கினாள் என்றால் பார்த்துக் கொள்ளேன். பிறகு நான் ரெகுலராக அவளிடமே செல்ல ஆரம்பித்தேன். அவள் தன்னுடைய ப்ரோக்கரிடம் சொன்ன ஒரு வார்த்தையை என்றுமே என்னால் மறக்க

முடியாது பெருமாள். ‘என்னையும் இவனையும் பிரித்துவிடாதே’ என்று சொன்னாள் அவள்.

பிறகு அவளுக்கு பணத்தின் மீது மோகம் வந்துவிட்டது. அப்போதே என்னிடம் ‘என் தோழி ஒருத்தி வந்திருக்கிறாள், வா’ என்பாள். ‘தொழிலுக்குப் புதிது’ என்று கூறி 3000 வாங்குவாள். பிறகுதான் தெரியும், அந்தப் பெண்ணுக்கு அதில் பாதிதான் போனது என்று. கடைசியில் போலீஸில் மாட்டிக்கொண்டாள்.

ஒரு அடுக்குமாடிக் குடியிருப்பிலிருந்த ஒரு வீட்டுக்கு தினமும் நான்கைந்து காரில் யார் யாரோ வருவதும் போவதுமாக இருந்தால் யார்தான் பெருமாள் சும்மா இருப்பார்கள்? அதிலும் அது அய்யேயெஸ் அதிகாரிகள் வசிக்கும் பகுதி. கேட்கவா வேண்டும்? யாரோ போட்டுக்கொடுத்துவிட்டான்.

எல்லாம் பணத்தாசை. அதோடு, வேலையே செய்யாமல் பணம் வருகிறது என்பதில் ருசி கண்டுவிட்டாள். எல்லாம் சரி. டெக்னிக்கலாக ஒரு பெரிய தவறைச் செய்துவிட்டாள். குடிசைத் தொழில் மாதிரி யாருக்கும் தெரியாமல் தன்னை மட்டும் வைத்து ஓட்டல், கெஸ்ட் ஹவுஸ் என்று தொழில் செய்தவள், ஒரு ரெசிடென்ஷியல் ஏரியாவில் வைத்து லார்ஜ் ஸ்கேல் இண்டஸ்ட்ரியை ஆரம்பிக்கலாமா? இப்போது எங்கே இருக்கிறாளோ தெரியாது.

***

அந்த கீதா மேனனின் நினைவாக தனது கெஸ்ட் ஹவுஸிலிருந்த அத்தனைப் பொருட்களையும் சந்தன நிறத்திலேயே வாங்கிப் போட்டிருந்தான். அவன் சொன்ன மற்ற கதைகளை பிறகு பார்க்கலாம்.

விதியை வலியுறுத்துவதற்காக அவன் சொன்ன பல கதைகளில் இரண்டு:

1. என் நண்பன் ஒருவனுக்குச் சமீபத்தில் திருமணம் ஆனது. அமெரிக்காவில் வேலை. போய் ஒரு மாதம் இருக்கும். தினமும் ஆ·பீஸ் போனதும் மனைவிக்கு ·போன் செய்வான். ஒரு நாள் வெள்ளிக்கிழமை ·போன் செய்தால் பதில் இல்லை. கிளம்பும்போதே ‘இன்று எண்ணெய் தேய்த்துக் குளிக்கப் போகிறேன்’ என்றாள். ஒருவேளை குளித்துக்கொண்டிருக் கிறாளோ என்று விட்டுவிட்டான். பிறகு அரை மணி நேரம் கழித்து ·போன் செய்தான். பதில் இல்லை. பிறகு ஒரு அரை மணி நேரம் கழித்து மீண்டும் ·போன் செய்தான். பதில் இல்லை. கலவரமாகி வீட்டுக்கு வந்தான். உள்ளே தாளிடப்பட்டிருந்தது. கதவு திறக்கப்படவில்லை. போலீஸை அழைத்து கதவை உடைத்து உள்ளே நுழைந்தால் டி.வி பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்த நிலையிலேயே உயிர் பிரிந்திருக்கிறது. மரணத்துக்கான காரணம் போஸ்ட் மார்ட்டத்திலும் தெரியவில்லை. இதை எப்படி விளக்குவது?

2. அது நடந்து இருபது வருடம் இருக்கும். என் வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் ஒரு பெண் இருந்தாள். அய்யர் வீட்டுப் பெண். மாம்பழ நிறம். ஒரு நாள் நானும் என் அண்ணனும், எங்கோ வெளியே போய்விட்டு வீட்டுக்குத் திரும்பிக்கொண்டிருந்தோம். வீட்டை நெருங்கிய தருணத்தில் அந்தப் பெண் அவள் வீட்டுக் கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்தாள்.

அப்போதுதான் குளித்திருந்தாள் போல. தலைமுடியில் ஈரம் பளபளத்தது. காலிங் பெல்லை அழுத்தப்போன எங்கள் இரண்டு பேருடைய கைகளும் திடீரென்று செயலற்றுப் போயின. ஒரு கணம் காலிங் பெல்லை அழுத்தவே முடியவில்லை.

எங்கோ வேலையிலிருந்தாள். சனி, ஞாயிறு இரண்டு நாளும் வீட்டில் இருக்க மாட்டாள். சனிக்கிழமை காலை ஒரு கார் வந்து அவளை அழைத்துக்கொண்டு போகும். திங்கள் காலையில் சக்கையாகப் பிழியப்பட்டதுபோல் பஸ்ஸில் வந்து இறங்குவாள். நாலைந்து ஆண் நண்பர்களுடன் அவளுக்கு சிநேகிதம் இருந்தது. அவர்களுடன் சனி ஞாயிறுகளில் டிஸ்கோக்களில் கூத்து. எல்லாம் இருபது வருஷத்துக்கு முன்பு... யோசித்துப் பார்.

ஒருமுறை ஏதோ வேலையாக லண்டன் போனாள். திடீரென்று லண்டனில் ஆளைக் காணோம். மூன்று நாட்கள் கழித்து மார்ச்சுவரியில் பிணமாகக் கிடப்பது தெரிந்தது. தேம்ஸ் நதியில் பிணமாக மிதந்தாளாம். என்ன காரணமோ? நிச்சயமாகத் தற்கொலையாக இருக்காது. இரவில் தனியாக வந்திருப்பாள். ஏதாவது நடந்திருக்கலாம். தற்கொலை செய்துகொள்வதற்கு ஒருத்தி மெட்ராஸிலிருந்து லண்டன் வரைக்குமா போக வேண்டும்?

***

அறுவை சிகிச்சை முடிந்து ஒரு மாதம் கழித்து ரெவ்யூவுக்காக வரச் சொல்லியிருந்தார்கள். காலை ஒன்பது மணிக்கு அப்பாய்ண்ட்மெண்ட். ஆனால் பன்னிரண்டு மணி வரை டாக்டரிடமிருந்து அழைப்பு வரவில்லை. மூன்று மணி நேரம் ஒரு இடத்தில் சும்மாவே உட்கார்ந்திருக்க வேண்டும். இப்படி மனம் கொந்தளிக்காமல் ஒரே இடத்தில் சும்மாவே உட்கார்ந்திருப்பது எப்படி என்பதை இந்த ஒரு மாத காலத்தில் ஓரளவு நான் கற்றுக்கொண்டிருந்தபடியால் எனக்கு அது அவ்வளவு பிரச்னையாக இல்லை. கண்களை மூடி பாபாவின் பெயரை நினைத்துக்கொண்டிருக்க வேண்டும். தியானம் என்று சொல்கிறார்களே, அதுதான். முதலில் நான் கார்ப்பொரேட் சாமியார்களின் தியான வகுப்புகளை ஊரை ஏமாற்றும் வேலை என்றுதான் நினைத்தேன். ஆனால் நவீன வாழ்வின் நெருக்கடிகளுக்கு இதைத் தவிர வேறு எளிய வழி இருப்பதாகவும் தெரியவில்லை. மருத்துவமனையின் பக்கம் ஒதுங்கிய பிறகுதான் இந்த விஷயம் எனக்குத் தெரியவருகிறது. இதயத்துக்குச் செல்லும் ரத்தக் குழாய்களில் எனக்கு எட்டு இடங்களில் அடைப்பு ஏற்பட்டதற்கு மன அழுத்தமும், மனப் பதற்றமுமே காரணம் என்பது மருத்துவக் குழுவின் முடிவு. ஆக உடலைக் கட்டுக்குள் வைத்திருப்பதற்கும், அது கட்டுமீறிச் செல்வதற்கும் மனம் ஒரு பிரதானமான பங்கை வகிக்கிறது. கோபப்பட்டாலோ, கவலைப்பட்டாலோ ரத்த அழுத்தம் அதிகரிக்கிறது. கவலையினால் உடலின் சர்க்கரை அளவு அதிகரிக்கிறது. மனதை ஆசுவாசமாக வைத்துக்கொள்ள டாக்டர்கள் வாயுவை சிபாரிசு செய்கிறார்கள். அதாவது, ஆழ்ந்து மூச்சு விடுதல். பிராணாயாமம் என்று பதஞ்சலி முனிவர் குறிப்பிடும் சமாச்சாரம். இதையே தியானமாக மாற்றினால் அதற்கு ஒரு சொல் உதவுகிறது. அந்தச் சொல்லைப் பற்றிக்கொண்டு நமது உள்முகப் பயணத்தை மேற்கொள்ளலாம். அதற்காக

'யோனி' என்ற சொல்லைப் பற்ற முடியாது. பற்றினால் அது மனதை சாந்தப்படுத்துவதற்குப் பதிலாக கொந்தளிப்பை ஏற்படுத்திவிடும். எனவே சொற்களுக்கும் சரீரத்துக்கும்கூட நெருங்கிய உறவு இருக்கிறது. உடலைக் கட்டுக்குள் வைத்திருப்பதற்கு ஒவ்வொரு இறை நம்பிக்கையும் சில பயிற்சி முறைகளை ஏற்படுத்திக்கொடுத்திருக்கிறது. முஸ்லிம்களைப்போல் ஐந்து வேளைத் தொழுகையில் ஈடுபட்டால் பலவிதமான வியாதிகளிலிருந்து தப்பிக்கலாம்; முக்கியமாக, வயிறு மற்றும் இதய சம்பந்தமான வியாதிகள் அணுகாது.

தொழுகையின்போது முஸ்லீம்கள் அமரும் ஆசனத்தை வஜ்ராசனம் என்ற பெயரில் குறிப்பிடுகிறார் பதஞ்சலி. அந்த ஆசனத்தில் பத்து நிமிடம் அமர்ந்தால் கல்லை விழுங்கியிருந்தாலும் அது செரிமானமாகி பசியெடுக்கும். உடம்பை வஜ்ஜிரத்தைப்போல் ஆக்குவதால் வஜ்ராசனம்.

எனக்கு மன அழுத்தமும், மனப் பதற்றமும் ஏற்படப் பெருமளவு காரணமாக இருந்தது நான் பதினைந்து ஆண்டுகள் வேலை பார்த்த தபால் துறை. அதுவே என்னை மரணத்தின் விளிம்புவரை தள்ளியது. ஆனால் அதே தபால் துறைதான் பைபாஸ் சர்ஜரி மூலம் நான் உயிர் பிழைத்துக்கொள்ளவும் வழி செய்தது - ஒன்றரை லட்சம் ரூபாயைக் கொடுத்தது.

மன அழுத்தமும், மனப் பதற்றமும் ஏற்படுவதற்கு மற்றொரு காரணமாக அமைந்தது, செக்ஸ். அதாவது பசித்தவனுக்கு உணவு கிடைக்கவேண்டும். எனக்குக் கிடைக்கவில்லை. (காரைக்காலம்மையாரின் மறு அவதாரமான மீராவின் ஆன்மீகத் தேட்டம் இப்போது தீவிரமடைந்துள்ளது. புண்ணியம் கட்டிக்கொண்டது, தியானம். முன்பெல்லாம் அவளுக்கு காலையில் எழுந்துகொள்ள ஏழு மணியாகும் - இளம் வயதில் மனநோய் மருத்துவரிடம் சென்று அவர் கொடுத்த மாத்திரைகளை ஏகமாய்ச் சாப்பிட்டிருக்கிறபடியால் அவளுக்கு எப்போதும் தூக்கம் வந்துகொண்டேயிருக்கும். மாலை நேரம் முழுவதும் தொலைக்காட்சி சீரியல்கள். ஆனால் இப்போது காலை நான்கு மணிக்கே எழுந்து குளித்துவிட்டு ஒரு மணி நேரம் தியானம் செய்கிறாள். மாலையில் தொலைக்காட்சிப் பெட்டியின் திசையிலேயே திரும்புவதில்லை. மாலையும் ஒரு மணி நேரம் தியானம். இது தவிர, சனிக்கிழமைகளில் மௌன விரதம்.)

செக்ஸ் கிடைக்காவிட்டால் உடம்பும் மனமும் படாத பாடு படுகிறது. விளைவு: சுய போகம். சுய போகத்தினால் எந்த பாதிப்பும் இல்லை என்கிறது அலோபதி மருத்துவம். ஆனால் அது நூற்றுக்கு நூறு தவறு என்பதற்கு நானே ஒரு உதாரணம். சுய போகத்தினால் மனமும் உடலும் வெம்பி வெம்பிச் சாகும். இரவு தூக்கம் வராது. கண்கள் நெருப்புத் துண்டங்களாய் எரியும். ஒரு முறை சுய போகம் செய்தால் செக்ஸிலிருந்து விடுதலை கிடைப்பதற்குப் பதிலாக மேலும்மேலும் மேலும் அதிலேயே நாட்டம் போகும். ஒன்று இரண்டாகி இரண்டு மூன்றாகி மூன்று நான்காகும். ஆஸ்கார் ஒயில்ட் இறந்தது அப்படித்தான்.

Pentonville சிறையில் ஒரு நாளில் ஆறு மணி நேரம் அவர் treadmillஇல் நடக்க வேண்டியிருந்தது. வெளியுலகத்துடன் எல்லாவிதத் தொடர்புகளும் அவருக்கு மறுக்கப்பட்டது. முதல் மாதத்திலேயே 20 பவுண்ட் எடையை

இழந்தார் ஒயில்ட். இனி வருவது அச்சிறையிலிருந்த ஒரு மதகுருவின் டயரிக் குறிப்பு:

‘இங்கே வந்த புதிதில் அவர் உற்சாகமாகத்தான் இருந்தார். ஆனால் போகப் போக சிறைவாழ்வின் தனிமையில் அவர் நொறுங்கிப் போய்விட்டார். மேலும், துரதிருஷ்டவசமான ஒரு விஷயம் என்னவென்றால், வக்கிரமான சில பாலியல் நடவடிக்கைகளில் (சுய போகம்) அவர் ஈடுபட ஆரம்பித்ததுதான். அவருடைய வர்க்கத்தைச் சேர்ந்த மனிதர்களிடையே இது சகஜம். சிறைக் கொட்டடியில் அவர் தனிமையில் இருந்ததும் இதற்கு ஒரு காரணம். இதனால் அவருடைய அறையே நாற ஆரம்பித்துவிட்டது. சிறையதிகாரி தினந்தோறும் அவருடைய அறையில் Carbolic அமிலத்தை அடிக்க வேண்டியதாயிற்று... அவருக்குக் கொடுக்கப்பட்ட சிறைத் தண்டனையான இரண்டு ஆண்டுகளை அவரால் தாக்குபிடிக்க முடியும் என்று தோன்றவில்லை என்றே இங்குள்ள மூத்த அதிகாரிகள் கருதுகிறார்கள்.’

என்னுடைய நிலையும் கிட்டத்தட்ட இப்படித்தான் இருந்தது. இவ்வளவு பெண் சகவாசத்தை வைத்துக்கொண்டு நான் எப்படி இவ்வாறு எழுதலாம்? பொறுங்கள். அதற்காகத்தானே ராஸ லீலா என்ற ஒரு நாவலையே எழுதிக்கொண்டிருக்கிறேன்? இப்போது அந்தப் பிரச்னைக்குள் நாம் செல்ல வேண்டாம். காரணம், இது முன்னுரை.

ஆனால் -

எந்தக் குடும்ப அமைப்பு மன அழுத்தத்தையும், மனப் பதற்றத்தையும் ஏற்படுத்தி மரணத்தை நோக்கி அனுப்பியதோ அதே குடும்ப அமைப்புதான் என்னை மரணத்திலிருந்தும் காப்பாற்றி அழைத்து வந்து இதை எழுத வைத்துக்கொண்டிருக் கிறது.

அந்த ஒரு மாத காலமும் மீரா எனக்குச் செய்த சேவைக்கு நான் எதைக் கொடுத்தாலும் அது ஈடாகாது.

***

பாபா என்ற சொல் என்னை விட்டு அறுபடும் தருணங்களில் பிரபஞ்சத்தைப் பற்றி யோசிக்க ஆரம்பிப்பேன். Panspermia கோட்பாட்டின்படி, பல கோடி ஆண்டுகளுக்கு முன்பு பிரபஞ்சத்திலுள்ள வால் நட்சத்திரங்கள் பூமியின் மீது மோதி பூமிக்கு organic moleculesஐக் கொண்டுவந்தன. அவை சூரியனிலிருந்து வரும் ஒளியையும் வெப்பத்தையும் வைத்து உயிரணுக்களாக மாற்றம் கொண்டன.

இப்படி பூமியிலிருந்து சூரியன், சூரியனிலிருந்து சூரிய மண்டலம், சூரிய மண்டலத்திலிருந்து பால் வீதி, பால் வீதியிலிருந்து கோடிக் கணக்கான பால் வீதிகளைக் கொண்ட பிரபஞ்சம் என்று போகும் என் யோசனை. என்னுடைய இந்த விசனம் எதையும் அறியாத மீரா, நான் அமர்ந்திருந்த ஹாலுக்கும் டாக்டரின் அறைக்குமாக அலைந்து கொண்டிருந்தாள்.

பன்னிரண்டரை மணி ஆனதும் நான் பதற்றமடைந்தேன். மீராவையும் அழைத்துக்கொண்டு வீட்டுக்குக் கிளம்பலாம் என்று முடிவு செய்தேன். சென்னையில் இந்த ஒரு மருத்துவமனைதானா இருக்கிறது? ஆனால், நான் கொண்டுவந்த மெடிகல் ஹிஸ்டரி ஃபைல் டாக்டரின் அறையில்

இருக்கிறது. அதனால் டாக்டரின் உதவியாளரிடம் அதை எடுத்துக் கொடுத்துவிடுமாறு கோபத்துடன் சொன்னேன். நாங்கள் திரும்பிச் செல்கிறோம் என்பதைக் கேட்டுப் பதறிப்போன அவர், அதற்குப் பிறகு அதிரடி நடவடிக்கை எடுத்தார். அந்த அதிரடி நடவடிக்கையின் பேரில் எனக்கு ஈஸீஜி எடுக்கப்பட்டது. பின்னர், எக்கோவுக்காக ஒரு அறைக்கு அழைக்கப்பட்டேன். ஆனால் அங்கே அரை மணி நேரமாக நின்றுகொண்டிருக்க வேண்டியதாயிற்று. அங்கிருந்த ஒரு நாற்காலியில் ஸ்ரீசூர்ணம் அணிந்த ஒரு முதியவர் அமர்ந்திருந்தார். எக்கோ எந்திரத்தில் இரண்டு இளம் பெண் மருத்துவர்கள் ஏதோ மும்முரமாகத் தேடிக்கொண்டிருந்தார்கள்.

பிறகு வேறொரு அறைக்கு அழைத்துச்செல்லப்பட்டேன். எனக்கு எக்கோ பார்த்த பெண் ‘பைபாஸ் செய்து எத்தனை ஆண்டுகள் ஆயிற்று?’ என்று கேட்டார். ‘ஒரு மாதம்தான் ஆயிற்று’ என்றேன். ‘எந்த ஹாஸ்பிடல்?’ என்று கேட்டார். ‘இந்த ஹாஸ்பிடல்தான்’ என்றேன்.

எக்கோ முடிந்ததும், டாக்டரின் உதவியாளர் என்னை டாக்டரின் அறைக்குள் அனுப்பினார். எட்டு மணிக்குச் சாப்பிட்டது. மணி அப்போது ஒன்றரையை நெருங்கிக்கொண்டிருந்தது. பசியில் கண் காது எல்லாம் அடைத்தது. நடப்பதற்கே சிரமமாக இருந்தது.

டாக்டரின் அறைக்குள் நானும் மீராவும் நுழைந்ததும் அவர் ‘யார் நீங்கள்?’ என்பது போலவோ, ‘உங்களுக்கு என்ன வேண்டும்? உங்களை யார் உள்ளே விட்டது?’ என்பது போலவோ பார்த்தார். அந்த டாக்டர் பொதுவாக கண்களாலும், முக பாவனை யினாலும் மட்டுமே பேசுவார். வாய் திறப்பது மிக அரிது.

‘என் பெயர் கண்ணாயிரம் பெருமாள்’ என்று சொல்லி ‘ஹீ... ஹீ...’ என்று இளித்தேன். (இந்த ‘ஹீ...ஹீ...’ எல்லாம் தபால் துறையில் பதினைந்து ஆண்டுகள் குமாஸ்தா வேலை பார்த்ததன் hangover. இன்னும் என்னை விட்டுப் போகவில்லை.)

‘கொஞ்சம் வெய்ட் பண்ணுங்கள்’ என்று கடுகடுப்புடன் சொன்னார் அவர். ஏதோ ஒரு நிமிடம்கூடக் காத்திருக்கப் பொறுமையில்லாமல் அவருடைய அறையில் நாங்கள் அத்துமீறி நுழைந்துவிட்டது போன்ற எண்ணம் அவருக்கு.

பத்து நிமிடத்தில் எங்களை உள்ளே அழைத்தார். அவருடைய உதவியாளர் என் கையில் ரத்த அழுத்தத்தைப் பரிசோதிக்க டாக்டர் ஏதோ ஒரு காகிதத்தில் எதையோ எழுதிக்கொண்டே என்னிடம் ‘கொல்ஸ்ட்ரால், ஷுகர் ரிசல்ட் எங்கே?’ என்று கேட்டார்.

‘நாங்கள் அதெல்லாம் எடுக்கவில்லையே?’ என்றேன். ‘அதெல்லாம் எடுத்துக்கொண்டல்லவா என்னைப் பார்க்க வேண்டும்? பரவாயில்லை. அது இரண்டும் எவ்வளவு இருக்கிறது என்று ஃபோனில் சொல்லுங்கள்’ என்றார்.

பிறகு சில மாத்திரைகளை எழுதிக்கொடுத்து அனுப்பிவிட்டார்.

‘கொலஸ்ட்ராலும், ஷுகரும் பார்க்க வேண்டும் என்று எங்களுக்கு ஜோசியமா தெரியும்?’ என்ற கேள்வி எனக்குள் எழுந்தது. சரி, இந்த மருத்துவமனையைத் தேர்ந்தெடுத்தது நம்முடைய தவறு என்று

நினைத்துக்கொண்டு வெளியே வந்தேன்.

நேரில் வந்ததற்கே இத்தனை சித்ரவதை, இதில் ஃபோனில் வேறு சொல்ல வேண்டுமாக்கும்?

மற்றபடி, ரத்த அழுத்தம் எப்படியிருக்கிறது, ஈஸீஜி மற்றும் எக்கோ எப்படியிருக்கிறது என்று அவர் எதையுமே என்னிடம் சொல்லவில்லை. எழுதிக்கொடுத்த மாத்திரைகளும் எதற்காக என்று எனக்குப் புரியவில்லை. நான் சாப்பிடுகிற மாத்திரையை எதற்காகச் சாப்பிடுகிறேன் என்கிற விஷயத்தை அறிந்துகொள்ள வேண்டியது என் அடிப்படை உரியமையல்லவா? ஆனால் யார் போய் அந்தச் சடையனிடம் இதையெல்லாம் கேட்பது? அவர் ஒரு முசுடு என்று ஏற்கெனவே கேள்விப்பட்டிருந்தேன். பசி வேறு கண்களை இருட்டிக்கொண்டு வந்தது.

டாக்டரிடம் கேட்க வேண்டும் என்று ஒரு டஜன் சந்தேகங்களை ஒரு காகிதத்தில் எழுதிக்கொண்டு வந்திருந்தேன். மருத்துவமனை இருக்கும் லட்சணத்தில் அதையெல்லாம் எங்கே கேட்பது?

இதற்கிடையில் இவரைப் பார்த்த பிறகுதான் எனக்கு அறுவை சிகிச்சை செய்த சர்ஜனைப் பார்க்க வேண்டும். ஆனால் அதையெல்லாம் இப்போது நினைத்துக்கூட பார்க்க முடியாது. முதல் வேலையாக இந்த மருத்துவமனையிலிருந்து ஓட வேண்டும்; இங்கிருந்து நம் தொடர்பைத் துண்டித்துக்கொள்ள வேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன். அப்போது எனக்கு மணியின் ஞாபகமும், முந்தின தினம் செய்தித்தாளில் படித்த ஒரு செய்தியும் ஞாபகம் வந்தது. ‘ஜீ ஹச்’ என்று அழைக்கப்படுகிற அரசு மருத்துவமனையில் இரண்டு மாதங்களாக தொலைபேசிகள் வேலை செய்யவில்லை என்றும், நோயாளிகளைப் பார்க்கவும் கவனித்துக்கொள்ளவும் வரும் மக்கள் தொலைபேசி வசதியின்றி அவதிப்படுவதாகவும் கூறியது அந்தச் செய்தி. சரி. நம்மிடம் கைத்தொலைபேசி இருக்கிறது என்று ஆறுதல் பண்ணிக்கொள்ளலாம். ஆனால் ‘ஜீ ஹச்’சில் திடுமென்று மின்சாரமும் நின்றுபோனால்? நமக்குத் தேவையான மின்சாரத்தை கைத்தொலைபேசி அளவுள்ள பெட்டியில் வைத்துக் கொள்ளுமளவு விஞ்ஞானம் இன்னும் முன்னேறவில்லையே? இந்த ‘ஜீ ஹச்’சில்தானே பைபாஸ் செய்து கொள்ளலாம் என்று ஆலோசனை சொன்னான் மணி? சென்னையின் மகா பிரபலமான இந்தத் தனியார் மருத்துவமனையே இந்த நாறு நாறுகிறது. இந்த நிலையில் ‘ஜீ ஹச்’சின் லட்சணம் எப்படியிருக்கும்.

இன்னும் சிறிது காலத்தில் இந்த மருத்துவமனையும் ‘ஜீ ஹச்’ மாதிரி ஆகிவிடும் என்று தோன்றியது. அதற்கான அடையாளமாக இதன் லிஃப்ட்டைக் கூறலாம். தொண்ணூறு சதவிகிதம் நோயாளிகளைக் கொண்டிருக்கும் இந்திய நாட்டில், இந்த மருத்துவமனையில் இரண்டே இரண்டு லிஃப்ட்டுகள்தான் இருந்தன. நோயாளிகளோடு கூடத் தங்குபவர்களின் பாடு மிகவும் திண்டாட்டம். ஒரு முறை லிஃப்ட்டில் ஏறி இறங்க பத்து நிமிடம் காத்திருக்க வேண்டியிருந்தது. மீரா ஒரு மாதம் என் கூட இருந்தபோது என்னோடு இருந்த நேரத்தை விட அவள் லிஃப்ட்டுக்காகக் காத்திருந்த நேரம்தான் அதிகம். ஒரு எஸ்கலேட்டர் போட்டால் எவ்வளவு பேருடைய நேரம் மிச்சமாகும்? ம்ஹூம்... அதைப் பற்றியெல்லாம் யாருக்கு என்ன கவலை? கல்லாப்பெட்டி நிரம்பியதா,

கடையை மூடு.

எனக்கு அறுவை சிகிச்சை செய்த சர்ஜனின் முகம்கூட எனக்குத் தெரியாது. இந்தியாவின் புகழ்பெற்ற சர்ஜன்தான். வெளிநாடுகளிலிருந்து பலரும் இவரிடம் வந்து இருதய அறுவை சிகிச்சை செய்துகொள்கிறார்கள். இருந்தாலும் அவரிடம் எனக்கு ஓரிரு சந்தேகங்கள் கேட்க வேண்டியிருந்தது. ஏற்கெனவே இருதய நிபுணரான அந்தச் சடையனிடம் கேட்க நினைத்து எழுதிக்கொண்டு வந்திருந்த சந்தேகங்களில் இந்த ஒன்றிரண்டும் உண்டு. அவை: 1. என் தொண்டைக் குழியில் - அதாவது, நெஞ்செலும்பை இரண்டாகப் பிளக்க ஆரம்பித்திருக்கும் இடத்தில் கொய்யாக்காய் சைஸுக்கு ஒரு சதைக் கோளம் உருவாகியிருந்தது. இது ஏன்? அறுவை சிகிச்சையின்போது நடந்த தவறாகத்தான் இருக்க வேண்டும். ஏன் இப்படி ஆயிற்று? 2. இடது மார்பிலுள்ள சதை மரத்துப் போயிருக்கிறதே, அது ஏன்?

இவை தவிர மற்ற சந்தேகங்கள்:

1. எட்டு அடைப்புகள் இருந்தும் ஈஸீஜி, எக்கோ மற்றும் இருதயச் செயல்பாடு எல்லாம் எனக்கு மிகவும் நார்மலாக இருந்ததே, அது எப்படி?

2. கொலஸ்ட்ராலைக் குறைப்பதற்கு தேன் ஒரு மிகச் சிறந்த மருந்து. (சாப்பிடும் முறை: இரண்டு தேக்கரண்டி தேனை இரண்டு டீஸ்பூன் லவங்கப்பட்டைப் பொடியுடன் பால் சேர்க்காத ஒரு அவுன்ஸ் தேனீருடன் கலந்து தினந்தோறும் குடித்தால் கொலஸ்ட்ரால் அளவு குறைந்துவிடும்.) எனவே தேன் சாப்பிடலாமா? அடைப்புக் குறிக்குள் இருப்பவற்றை டாக்டரிடம் சொல்லப் போவதில்லை. ஏனென்றால் அலோபதி டாக்டர்களுக்கு மற்ற மருத்துவ முறைகள் என்றால் இளக்காரம். ஏதோ நாட்டு மருந்து என்று நினைத்து வேண்டாம் என்று சொல்லிவிடுவார். என்னுடைய சந்தேகம் என்னவென்றால் தேன் சாப்பிட்டால் அது சர்க்கரை அளவைக் கூட்டிவிடுமா? மற்றும் ஆஸ்ப்ரின், ஸ்டாடின் மாத்திரைகளைச் சாப்பிடும்போது தேன் சாப்பிடலாமா என்பதுதான்.

3. (a)பைபாஸ் சர்ஜரிக்குப் பிறகு தண்ணி அடிக்கலாமா? எவ்வளவு மாதங்கள் சென்று அடிக்கலாம்? (b)ஒயின் குடிக்கலாமா? ஒயின் இருதயத்துக்கு நல்லது என்கிறார்களே?

4. செக்ஸில் ஈடுபடலாமா? (This is purely for enriching my theoretical knowledge.)

எனக்கு அன்றைக்கு வந்த ஆத்திரத்தில் நான் எழுதிக்கொண்டு வந்திருந்த சந்தேககங்கள் அடங்கிய காகிதத்தைக் கிழித்துப் போட்டு விட்டேன். எனவே மீதிக் கேள்விகள் ஞாபகம் இல்லை. இதே கேள்விகளைப் பின்னர் ஜெகதீஸ்வரனுக்கு மின்னஞ்சல் செய்தபோது அவர் இந்த நான்காவது கேள்விக்கு என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வதுபோல் பதில் சொல்லியிருந்தார்.

அதாவது, செக்ஸில் ஈடுபடலாம். ஆனால் wild sex கூடாது, mild sex is preferable. இது நியாயமா அய்யா? நான்தான் கேள்வி கேட்டிருப்பதன் காரணத்தை அடைப்புக்குறியிலேயே சொல்லியிருக்கிறேனே?

பிறகு நந்தகோபால் மூலமாக வேறு ஒரு இருதய நிபுணரைக் கண்டுபிடித்து இப்போது ஆலோசனை பெற்றுக்கொண்டிருக்கிறேன். ஆனால் ஆரம்பத்தில் நந்தா ‘இந்த டாக்டர் மிகப் பெரிய திறமைசாலி;

நல்லவர்; ஆனால் கொஞ்சம் முசுடு. அட்ஜஸ்ட் பண்ணிக்கொள்' என்று சொன்னதும் நான் பயந்துபோனேன். நல்லவேளை, அவன் சொன்ன அளவுக்கு இல்லை. சிரித்தே பேசினார்; மனிதத்தன்மையுடன் நடந்துகொண்டார்.

'இல்லை பெருமாள். என்னிடம் ஜாலியாகத்தான் பழகுவார். ஆனால் மற்றவர்கள்தான் என்னிடம் 'அந்த டாக்டர் பெரிய முசுடு ஆயிற்றே; நீங்கள் எப்படிப் பழகுகிறீர்கள்?' என்று கேட்டு அவரைப் பற்றி எனக்குள் அப்படி ஒரு பிம்பத்தை உருவாக்கிவிட்டார்கள்' என்றான்.

அறுவை சிகிச்சை முடிந்து ஒரு மாதம் ஆனதும் நான் தினமும் சாக்ஸ் போட்டுக்கொள்வதை நிறுத்திவிட்டேன். அதைப் போடுவதற்கு மீரா அரை மணி நேரம் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது என்பதுதான் காரணம். ஆனால் சில தினங்களிலேயே கால்கள் இரண்டும் வீங்கிவிட்டன. பிறகுதான் பாரிஸிலிருந்து ஸ்வப்னா பேசும்போது சொன்னாள், மூன்று மாதத்திற்கு சாக்ஸைப் போட்டிருக்க வேண்டுமாம். 'இல்லாவிட்டால் ஐந்து ஆண்டுகள் கழித்து உங்களால் நடக்கவே முடியாது.' ஆக, அறுவை சிகிச்சை செய்த மருத்துவமனையில் இந்த சாக்ஸ் போடுவதைப் பற்றிகூட சரியான விபரத்தை என்னிடம் கூறியிருக்கவில்லை.

ஆனால் ஸ்வப்னா இப்படித்தான் ஏதாவது குண்டைத் தூக்கிப் போட்டுக்கொண்டிருப்பாள். இதற்கு முன்பு அவள் போட்ட குண்டு: தினமும் ஒரு மணி நேரம் நடக்க வேண்டும். ஆனால் நடக்கும்போது தடுக்கி விழுந்தால் நிச்சயம் மறுபடியும் ஹார்ட் அட்டாக்தான். (அது சரி, எனக்கு எப்போது ஹார்ட் அட்டாக் வந்தது?)

நந்தாவும் ஸ்வப்னாவைப் போன்றவன்தான். டாக்டர் என்னை ஷுகர் பார்க்கச் சொன்னார். பன்னிரண்டு மணி நேரம் சாப்பிடாமல் இருந்தபோது அளவு சரியாக இருந்தது. ஆனால் சாப்பிட்ட பிறகு பார்த்தபோது 10 எண்ணிக்கை கூடியிருந்தது. 'இதையெல்லாம் சுலபமாக சரிசெய்து விடலாம்' என்றார் டாக்டர்.

டாக்டரை விட்டுக் கிளம்பி வந்து பேசிக்கொண்டிருந்தபோது நந்தா சொன்னான்: நாம் ஷுகர் விஷயத்தில் ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். என் அப்பா ஹார்ட் அட்டாக்கில் சாகவில்லை. ஷுகரால்தான் செத்தார்.

அதன் பிறகு அவனிடம் நான் விடைபெறும்போது 'எதற்கும் கவலைப்படாதே பெருமாள். எல்லாவற்றையும் சரிசெய்து விடலாம்' என்றான்.

'அடப்பாவி... என்னை ஒரு சர்க்கரை வியாதிக்காரனாகவே ஆக்கிவிட்டானே' என்று நினைத்துக்கொண்டேன். அவன் சொன்ன வாசகமும் (என் அப்பா ஷுகரால்தான் செத்தார்) ஒரு நாளில் இரண்டு டஜன் தடவைகள் என் ஞாபகத்தில் வந்து வந்து போனது. ஆனால் முன்பு ஒருமுறை அவன் தன் தகப்பனார் ஹார்ட் அட்டாக்கில் செத்ததாகத்தான் கூறியிருந்தான். அதை வைத்து இந்த 'சர்க்கரை' எண்ணத்தை ஓட்ட முயற்சித்துக்கொண்டிருக்கிறேன். பார்ப்போம்.

***

# 1. நான் அவன் இல்லை

‘புண் இது என்று புடவையை மூடி
உள் நீர் பாயும் ஓசைச் செழும் புண்
......... ....... .......
தருக்கிய காமுகர் சாரும் படுகுழி,
செருக்கிய காமுகர் சேருஞ் சிறுகுழி...’

-பட்டினத்தார்

எங்கள் அலுவலகத்தில் புதிதாக ஒரு பெண் வேலையில் சேர்ந்தாள். அலுவலகத்தில் அத்தனை பேருடைய பார்வையும் அவள் மீதுதான் இருந்தது. ஆனால் அவளோ இதனாலெல்லாம் பாதிக்கப்படாததுபோல் அமைதியாக இருந்தாள். எனக்கு வேலை நிமித்தமாக அவளுடைய அறைக்கு அடிக்கடி செல்ல வேண்டியிருந்தது. அப்படி ஒருமுறை சென்றபோது அவள் இருக்கையில் இல்லை. ஆனால் கணினியில் ‘ஹாட்மெயில்’ பகுதி திறந்திருந்ததால் அவளுடைய மின்னஞ்சல் முகவரியைக் குறித்துக்கொண்டேன். உடனே அவளுக்கு ஒரு மின்னஞ்சல் அனுப்பினேன். ‘நான் ஃப்ரான்ஸிலிருந்து மிஷெல் எழுதுகிறேன். அகஸ்மாத்தாக உன்னுடைய மின்னஞ்சல் முகவரி கிடைத்தது... இத்யாதி... இத்யாதி...’ அவளும் அதை நம்பி பதில் எழுதினாள். இப்படியாக நட்பு தொடர்ந்தது.

நாளாக நாளாக, அவள் என்னுடைய மிக நெருங்கிய தோழியானாள். மணிக்கணக்கில் நாங்கள் அரட்டை அடித்தோம். தன்னைப் பற்றி அத்தனை விஷயங்களையும் அவள் என்னிடம் சொன்னாள். அவளுடைய காதல் தோல்வி, பெற்றோரின் காதல் திருமணம், இத்யாதி, இத்யாதி. எனக்கு அதிர்ச்சியளித்த மற்றொரு தகவல் - அவளுக்கு ஒரு கண்ணில் பார்வையில்லை என்பது.

நானும் அமைதியான குணமுடையவன்தான். அந்தத் தன்மையினால் அலுவலகத்திலிருந்த மற்றவர்களைவிட நானே அவளுக்கு நெருக்கமானவனாக ஆனேன். என்னை ஒரு சக ஊழியனாகப் பார்க்காமல் நெருங்கிய நண்பனாகவே கருதிப் பழகினாள் அவள். நெருக்கம் அதிகமாக அதிகமாக எனக்கும் மிஷெலுக்கும் உள்ள ஒற்றுமைகள் அவளுக்குப் புலப்பட ஆரம்பித்தன. ஒரு கணினி அரட்டையின் போது அவள் என்னைக் கேட்டாள்.

‘மிஷெல், நாம் மூன்று மாதங்களே பழகியிருந்தாலும் எனக்கு என்னவோ உன்னுடன் அதிக காலம் பழகியதுபோல் இருக்கிறது. ஏனென்று புரியவில்லை. உனக்கு என்ன தோன்றுகிறது?’

அவளுடன் அதிகமாக நெருங்க நெருங்க என் மனசாட்சி என்னை உறுத்த ஆரம்பித்தது. அவளை ஏமாற்றிக்கொண்டிருப்பதாகத் தோன்றியது. ஒரு அரட்டையின் போது அவளிடம் 'நான் மிஷெல் இல்லை' என்று சொல்லிவிட்டேன். அவ்வளவுதான். கோபத்தின் உச்சிக்குச் சென்ற அவள் தனக்குத் தெரிந்த அத்தனை கெட்ட வார்த்தைகளையும் சொல்லி என்னைத் திட்டினாள். 'சரி அப்படியானால் நீ யார்?' என்று கேட்டாள். 'நேரில் வந்து உன்னைச் சந்திக்கிறேன்' என்றேன்.

மறுநாள் அவளுடைய அறைக்குச் சென்று உண்மையைச் சொன்னேன். பத்து நிமிடம் அவள் எதுவுமே பேசவில்லை. பிறகு சொன்னாள்: 'நீ ஒரு ஜென்டில்மேன், மிஷெலைப் போலவே. நேற்று உன்னைத் திட்டியதற்காக வருந்துகிறேன். நீ ஒரு அற்புதமான நண்பனாக இருந்தாய். நான் பேசுவதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்தாய். என் சந்தோஷத்திற்குக் காரணமாக இருந்தாய். ஆனாலும் மிஷெல் என்று யாருமே இல்லை என்பதை என்னால் ஜீரணிக்க முடியவில்லை.'

எனக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. ஆனால் மறுநாள் அவள் தன் வேலையை ராஜினாமா செய்துவிட்டாள்.

இது நடந்து இரண்டு வருடம் ஆகிறது. அதற்குப் பின் அவளை நான் பார்க்க முடியவில்லை. மின்னஞ்சலில்கூட அவள் கிடைக்கவில்லை.

## 2. I want to cuckold you...

பெண்ணாகி வந்ததொரு மாயப்பிசாசம் பிடித்திட்டென்னைக்
கண்ணால் வெருட்டி முலையால் மயக்கிக் கடிதடத்துப்
புண்ணாம் குழியிடைத் தள்ளி...

- பட்டினத்தார்

என் நண்பன் ஒருவன் தன் தோழியை என்னிடம் அறிமுகப்படுத்தி வைத்தான். பிறகு தனியாக என்னிடம் 'எனக்குத் திருமண ஆசையே இல்லை. இப்படியே தனிக்கட்டையாக இருந்துவிடலாம் என்று பார்க்கிறேன். அதனால் என் தோழியை நீ காதலித்து மணந்து கொள்' என்றான். நான் அப்போது எக்ஸுடன் விவாகரத்து ஆகி தனியாக இருந்தநேரம். அந்தப் பெண்ணோடு பழகினேன். நட்பு வந்தது. காதல் வரவில்லை. ஒரு நாள் உடல் பகிர அழைத்தாள். 'I am not a gay' என்றேன் நான். கடும் கோபமடைந்த அவள் 'உனக்கு இந்த ஜென்மத்தில் எந்தப் பெண்ணும் கிடைக்க மாட்டாள். செக்ஸே கிடைக்காமல் தனியாகக் கிடந்தே நீ சாகப்போகிறாய்' என்று சபித்துவிட்டுப் போனாள்.

பிறகு அவளை என் நண்பனே காதலித்து மணந்துகொண்டான். ஆனால் என்னுடன் பழகியபோது கருகிய மலரைப்போல் இருந்த அவள் நண்பனுடன் சேர்ந்தபிறகு எதிர்பாராதவிதமாக புத்தம் புது மலராக பூத்துக் குலுங்கினாள். அப்போது நண்பனிடம் நான் சொன்னேன்... 'I want to cuckold you மச்சி.'

என் பேச்சை சீரியஸாக எடுத்துக்கொண்ட நண்பன் 'இனி என் வீட்டுக்கு வராதே' என்று சொல்லிவிட்டான். பிரியும்போது தமிழ் சினிமா பாணியில்

சற்று உணர்ச்சிவசப்பட்டு ‘உனக்கு எப்போது திருமணம்?’ என்றும் கேட்டான்.

## 3. Painkiller

வாய் நாறும் ஊழல் மயிர்ச்சிக்கு நாறிடும் மையிடுங்கண்
பீ நாறும் அங்கம் பிண வெடி நாறும் பெருங் குழி வாய்ச்
சீ நாறும் யோனிஅழல் நாறும் இந்திரியச் சேறு சிந்திப்
பாய் நாறும் மங்கையர்க்கோ இங்ஙனே மனம் பற்றியதே?

-பட்டினத்தார்

I tell you what I'am sick of
goddamn that one word love
with all its nastiness
my pain's as bad as that.

Violetta Parra

அவள் பிரபலமான தொலைக்காட்சி நடிகை. ஒப்பனை இல்லாமலேயே அழகாக இருப்பாள். சினிமாவில் ஏன் வாய்ப்பு கிடைக்கவில்லை என்று தெரியவில்லை. என்னுடைய ‘சூன்ய வெளியில்...’ நாவலை மலையாள மொழிபெயர்ப்பில் படித்திருக்கிறாள்.

‘பிடித்தது’ என்றாள்.

‘நீங்கள் என் ரசிகை என்பது சந்தோஷமாக உள்ளது.’

‘ரசிகை என்று சொல்ல முடியாது. உங்கள் எழுத்தின் பாவனையற்றதன்மை பிடித்திருக்கிறது. ஆனால் செக்ஸை நீங்கள் இவ்வளவு வெளிப்படையாக எழுதுவதில் எனக்குத் துளிகூட உடன்பாடு இல்லை.’

‘ஏன் வெளிப்படையாக எழுதக்கூடாது என்பதற்கு இதுவரை நியாயமான காரணம் ஏதும் எனக்குக் கிடைக்கவில்லை.’

‘உங்களைப்போல் எனக்கு சாமர்த்தியமாக பேசத் தெரியவில்லை. ஆனால் ஒன்று மட்டும் சொல்கிறேன். செக்ஸ் எழுத எத்தனையோ பேர் இருக்கிறார்கள். ஆனால் நீங்கள் மட்டுமே செய்யக்கூடிய காரியம் எவ்வளவோ இருக்கிறது.’

‘நான் சாமர்த்தியமாகப் பேசுகிறேன் என்று சொன்ன முதல் ஆள் நீங்கள்தான்... இந்த பெக் அதற்காகவே சமர்ப்பணம்’ என்று சொல்லி நான்காவது பெக் ஜானி வாக்கரை உள்ளே தள்ளினேன்.

இருவரும் அமர்ந்திருந்த இடம்: லெதர் பார். சென்னையிலுள்ள பார்களில் எனக்குப் பிடித்த பார் அது. காரணம்: பாரிஸ் கஃபேக்களைப்போல் அந்த பார் வடிவமைக்கப்பட்டிருந்தது. நடிகை மணியைக் காதலிக்கிறாள். இது

என்னைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது. அது பற்றி அந்தரங்கமாகப் பேசிக்கொண்டிருந்தாள். அந்தப் பேச்சில் உண்மையான காதலை என்னால் உணர முடிந்தது. ஆனால் துரதிருஷ்டவசமாக ஓரிரு நாட்களிலேயே நடிகையிடமிருந்து எனக்கு அழைப்பு. ‘உடனடியாக வீட்டுக்கு வாருங்கள்’ என்று சொல்லி ஃபோனை வைத்துவிட்டாள். குரலில் பதற்றம் தெரிந்தது. இந்த அதிகாலை நேரத்தில் என்ன அவசர விஷயமாக இருக்கும் என்று குழப்பத்துடன் போய்ப் பார்த்தால் அழுது அழுது முகமெல்லாம் வீங்கிப்போயிருந்தது.

‘பெருமாள், உடனே என்னை இங்கிருந்து எங்காவது அழைத்துச் செல்லுங்கள். அம்மா கோயிலுக்குப் போயிருக்கிறார். வந்து என் முகத்தைப் பார்த்தால் பெரும் பிரச்னையாகிவிடும்.’

அழைத்துக்கொண்டு நேராக ரவியின் கெஸ்ட் ஹவுஸுக்கு வந்தேன். முக்காடு போட்டபடியே காரிலிருந்து இறங்கி உள்ளே சென்றார். விஷயம் என்ன என்று பார்த்தால் மணியுடன் பிரச்னை. அதனால் தூக்கம் வரவில்லை. ‘தூக்க மாத்திரையைப் போட்டுப் போட்டுப் பார்த்தேன்... தூக்கம்தான் வரமாட்டேன் என்கிறது.’

‘... எவ்வளவு நேரம் அழுதுகொண்டிருந்தாய்?’

‘இதோ, இந்த நிமிடம் வரை.’

‘எத்தனை மாத்திரை?’

‘கணக்கே இல்லை.’

‘என்னது?’

பதறியபடி கேட்டேன். தற்கொலை செய்துகொண்ட நடிகைகளின் பட்டியல் என் மனத்திரையில் ஓட ஆரம்பித்தது.

‘பதறாதீர்கள். தூக்க மாத்திரை எனக்கு வேலை செய்யாது.’

வேறு யாராக இருந்தாலும் இந்நேரம் எமலோகம்தான் என்று நினைத்துக்கொண்டேன். அது ஒருபுறம் இருக்க, பணிவுடன் ‘என்ன பிரச்னை?’ என்று கேட்டேன். அது ஒரு உப்புப் பெறாத சமாச்சாரம். அப்படி நான் வாய்விட்டுச் சொல்லிவிடவில்லை. சொல்லியிருந்தால் அந்தக் கணமே எங்கள் நட்பு முறிந்திருக்கும். அதனால் பக்குவமாக எடுத்துச் சொன்னேன்.

‘இதற்குப் போய் இப்படிச் செய்யலாமா?’

அவளுடைய பிரச்னை மணியுடன் அல்ல. கடவுளுடன்! அதாவது ஒரு ஆணுக்கு பெண்ணின்மீது ஈர்ப்பே ஏற்படக்கூடாது என்கிறாள் அவள்.

‘நான் என்ன அப்படியா சொல்கிறேன்? நான் சொல்வதை நீங்கள் திரிக்கிறீர்கள்...’

பிரச்னை இதுதான். மணி மற்றொரு நடிகையுடன் குடித்தார்.

‘குடித்தார்... அவ்வளவுதானே?’

‘என்ன... அவ்வளவுதானா? அவளுக்கு என்ன என்னை மாதிரி நடிப்பு வெறும் தொழிலா? வேறு ஒரு தொழிலை மறைக்கப்போட்டுக்கொண்ட வேஷமல்லவா இந்த நடிப்பு? அவளுடன் என்ன இவருக்கு பேச்சு

வேண்டியிருக்கிறது?'

'இதோ பார்... தவறான நோக்கம் உள்ளவராக இருந்தால் அவரே இதை உன்னிடம் சொல்லுவாரா?'

'ஆமாம்... இது ஒரு பேச்சா? வெளிப்படையாகச் சொல்லிவிட்டு செய்தால்... யாரை வேண்டுமானாலும் ஓக்கலாம்?'

'நாம் மட்டும் லெதர் பாரில் குடிக்கவில்லையா?' என்று மெதுவாகக் கேட்டேன்.

'உங்களை நான் ஆண் என்றே நினைக்கவில்லை பெருமாள். நீங்கள் தானே பலமுறை சொல்லியிருக்கிறீர்கள், நான் ஆண் உருவில் வாழும் பெண் என்று. ஆனால் பிரச்னை அது அல்ல. அந்தத் தேவடியாளோடு அவர் எப்படிக் குடிக்கலாம் என்பதுதான்.'

அவள் இப்படியெல்லாம் தர்க்கரீதியாகப் பேசிக்கொண்டிருந்தாலும் அவளது உடல்நிலை அசாதாரணமாக இருந்தது.

கைகாலெல்லாம் நடுங்கிக்கொண்டிருந்தது. கண்ணீர் ஆறாகப் பெருகியபடி இருந்தது.

'உள்ளுக்குள் தலைவலி பிளந்துகொண்டிருக்கிறது. விட்டால் செத்துப் போய்விடுவேன்' என்றாள்.

'தற்கொலை தவறல்லவா?'

'தவறுதான். ஆனால் இந்த வலியிலிருந்து எனக்கு விடுதலை வேண்டும். தற்கொலை ஒன்றுதான் அதற்கு வழி. இந்த வலியைக் கடவுளால் கூடத் தாங்க முடியாது.'

எனக்குத் தெரிந்த மனநல மருத்துவரிடம் அழைத்துச் சென்றேன். காரணத்தைக் கேட்டு மருத்துவர் மிரண்டுபோனார். 'யார் அந்தக் காதலர்?' என்று எத்தனையோ முறை கேட்டார். 'நடிகையை குணப்படுத்துவதற்குகூட அந்தத் தகவல் எனக்கு உதவும்' என்றார். ஆனால் நான் சொல்லவில்லை.

ஐந்து தினங்கள் நடிகையின் பக்கத்திலேயே இருந்து கவனித்துக் கொண்டேன். அந்த ஐந்து தினங்களில் எனக்கு நேர்ந்த பல்வேறு அனுபவங்களில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியது, எனக்கு ஏற்பட்ட ஒரு பயம். எனக்கே தற்கொலையின் மீது ஒரு பிரியம் விழுந்துவிடும் போல் இருந்தது அவள் பேச்சு.

அவள் தன் சுயக் கட்டுப்பாட்டிலேயே இல்லை. இப்போதைக்கு மரணம் ஒன்றே விடுதலை என்பதைப் பல ஆயிரக்கணக்கான வார்த்தைகளில் தர்க்கரீதியாக என்னிடம் விளக்கிக்கொண்டிருந்தாள். இடையிடையே வலிப்பு வேறு வந்துகொண்டிருந்தது. டாக்டரோ 'நோயாளியை ஒரு நிமிடம்கூட தனியே விடக்கூடாது. தற்கொலை எண்ணம் மிகக் கூடுதலாக உள்ளது' என்று என்னிடம் அறிவுறுத்தியிருந்தார்.

இந்த நிலையில் என்னுடைய பயம் - அவளுக்கு ஏதாவது ஒன்று ஆகிவிட்டால் அந்தப் பழி என் மீதல்லவா வந்து சேரும்? எல்லாப் பத்திரிகைகளிலும் என்னையல்லவா கொலைகாரன் என்று எழுதுவார்கள்? காமக் கொடூரன் என்ற பட்டம் வேறு கொடுப்பார்கள்... கொலைக்கு

சாட்சியாக என் எழுத்திலிருந்தெல்லாம் ஆதாரம் காட்டுவார்கள். டாக்டர் வேறு சாட்சி சொல்வார். 'எவ்வளவோ கேட்டேன்... அந்தக் காதலன் யார் என்று. இவர் சொல்லவேயில்லை. அப்போதே சந்தேகப்பட்டேன்.'

இந்த நிலையில் என்னை ஆண் வடிவில் வாழும் பெண் என்றே அந்த நடிகை நம்பினாள் என்று சொன்னால் யார் நம்புவார்? கடைசியில் நிரபராதி என்று நிரூபணம் ஆனாலும் அதற்கு எட்டு ஒன்பது வருடங்கள் ஆகுமே? அதுவரை ஜெயிலில் அல்லவா இருக்க வேண்டும்? சரி. அதுதான் நம் தலையெழுத்து என்றால் அனுபவிப்போம்; இன்னும் எழுத வேண்டிய நாவல்களை ஜெயிலிலேயே எழுதி முடிப்போம் என்றெல்லாம் யோசனை ஓடிக்கொண்டிருந்தது எனக்கு.

'ஆனால் எவ்வளவு இழப்புக்கு ஆளானாலும் சரி, இந்தப் பெண்ணை இப்படியே விட்டுவிட்டுப் போகக்கூடாது' என்பதில் மட்டும் உறுதியாக இருந்தேன்.

பிறகு தேறி எழுந்தாள் நடிகை.

ஆனால் இச்சம்பவம் நடந்து இரண்டே மாதத்தில் எனக்கே இப்படி ஒரு நிலை வரும் என்று நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை. நடிகையிடம் எவ்வளவு விவாதித்தேன்? காதல் ஒரு முட்டாள்தனம்... அசட்டுத்தனம்... அப்படி இப்படி என்று!

'அவர் இல்லாவிட்டால் உன்னால் வாழவே முடியாதா? என்ன இது பைத்தியக்காரத்தனம்?' என்றெல்லாம் சொல்லியிருக் கிறேன்.

இப்போது?

கடந்த இரண்டு நாட்களாக உணவருந்தவில்லை. மெயில் பார்க்கவில்லை. மெயில் அனுப்பவில்லை. உறங்கவில்லை. படிக்கவில்லை. எழுதவில்லை. கோமா நிலையில் உள்ள ஒருவனைப்போல் அப்படியே அமர்ந்திருக்கிறேன். நடிகை சொன்ன அத்தனையும் உள்ளே நடந்துகொண்டிருந்தது.

சுவாசிப்பதே உன் தயவால் என ஆகிவிட்ட பிறகு உன் சுவாசக்காற்றைக் கேட்காமல் நான் சுவாசிப்பது எப்படி?

என்ன பிரச்னை?

ஒன்றுமேயில்லை. அவள் குரலைக் கேட்க வேண்டும். அவளுக்கு ஃபோன் கிடையாது. எனவே என்னால் பேச முடியாது. அவளாகப் பேசினால்தான் உண்டு. இக்கணமே அவள் வேண்டும். அவள் அதரங்களில் இதழ் பதிக்கவேண்டும். இதெல்லாம்கூட வேண்டாம். குறைந்தபட்சம் அவள் குரலாவது வேண்டும்.

ரஸ்புடின் கதை கேட்டிருக்கிறீர்களா?

ஹீமோஃபிலியா நோய் ஒருவருக்கு வந்து ரத்தம் நிற்காமல் கொட்டிக் கொண்டேயிருந்தால் ரஸ்புடினின் வார்த்தைக்கு மட்டுமே கட்டுப்படும் அந்த ரத்தம்.

என் நெஞ்சில் கொட்டும் உதிரத்தை நிறுத்த வாராதோ என் தேவதையின் குரல்?

# 4. Skin to Skin

என் நாக்கின் நுனியில் தேன்; நாக்கின் மூலத்தில், அதி இனிய தேனாகும் நீ, எனது சங்கற்பத்திலே ஆக வேண்டும்; நீ எனது சித்தத்திலே வருவாயோ?

எனது சலனம் தேன்மயம்; என் கமனம் தேன்மயம். நான் மொழியால் தேன்மயமாய் மொழிகிறேன். நான் தேன் தோற்றமாக வேண்டும்.

நான் தேனைவிட தேனாயுள்ளேன்; மதுகத்தைவிட மதுவாயுள்ளேன். நீ என்னை, என்னையே தேன் மிகும் சாகையாக விரும்பு.

நான் வெறுப்பை நீக்க, கரும்பின் அதி தந்துக்களால், நீ என்னுடன் இன்பமுள்ளவளாவதற்கும், என்னிலிருந்து தூரமாகாமலிருப்பதற்கும், என்னைச் சுற்றிக் கட்டியுள்ளேன்.

-அதர்வ வேதம் : காண்டம் 1, ஸூக்தம் 34. தேன்மயம்

தமிழ் மொழிபெயர்ப்பு : எம்.ஆர்.ஜம்புநாதன்.

தேவதையின் ஊர்: ஸில்ஸ் மரியா (சுவிஸ்). தேவதை பிறந்து வளர்ந்தது மும்பையில். அம்மா கூர்க். அப்பா தமிழ். கன்னடம், மராட்டி, தமிழ், இந்தி என்று பல மொழிகள் அத்துப்படி.

‘உன் வயதோ இருபத்தைந்து. என் வயது ஐம்பது. என்னிடம் எதைக் கண்டாய் பெண்ணே?’

‘அன்பு... திளைக்கத் திளைக்க அன்பு... மழையில் நனைவதைப் போல் இருக்கிறது...’

புகைப்படம் வந்தது ஒரு நாள்.

‘ஏய்... ஏதோ ஒரு இந்தி நடிகையின் புகைப்படத்தை அனுப்பி வைத்து என்னை ஏமாற்றப் பார்க்கிறாய்.’

‘ஐயோ... யார் மீது சத்தியம் செய்ய? நானேதான் அது.’

இரண்டு மூன்று இந்திப் படங்களில் பாடியிருக்கிறாளாம். ஃபோனில் பாடிக் காண்பித்தாள். ஒரு பின்னணிப் பாடகிக்கு வேண்டிய முழுத் தகுதியும் இருந்தது அக்குரலில்.

கல்லூரியில் படிக்கும்போது அழகிப்போட்டியில் முதல் பரிசு. ‘என்ன இது... ஏதோ fairy tale மாதிரி இருக்கிறது’ என்று நினைத்தேன். fairy tale அதோடு முடியவில்லை. மேலும் சொன்னாள்.

‘அழகிப் போட்டிக்கு நடுவர் யார் தெரியுமா? ராம்கோபால் வர்மா. அவர் தன் படத்தில் என்னை நடிக்க அழைத்தார்.’

எனக்கு மயக்கம் வந்துவிடும் போலிருந்தது. புகைப்படத்தைப் பார்த்தபோது அவள் சொல்வது உண்மைதான் என்று தோன்றியது.

ஒரு நாள் எனக்கு கவிஞர் தேவதச்சனிடமிருந்து ஃபோன் வந்தது. பேச்சின் இடையே தொடர்பு அறுந்துவிட்டது. சிறிது நேரத்தில் மீண்டும் ‘எஸ்ட்டீடி’ அழைப்பு. தொலைபேசியை எடுத்ததுமே குரலுக்குக் காத்திராமல்

‘சொல்லுங்கள் தேவதச்சன்’ என்றேன்.

‘முதல் பாதி சரி... அடுத்த பாதி தப்பு’ என்று சொல்லிச் சிரித்தாள் - தேவதை!

காதல் வந்தாலே இசையும் சேர்ந்துவிடுகிறது. நீண்ட காலத்துக்குப் பிறகு கென்னி - ஜீயில் மூழ்கினேன்.

Don't make me wait for love என்ற பாடல் ஜென்னி - ஜீயின் ஸாக்ஸஃபோனோடு மைக்கேல் போல்ட்டனின் குரலும் சேர்ந்துகொண்டு என்னை எங்கோ ஒரு கனவுலகத்துக்கு இழுத்துச் சென்றது. மரியா கேரி, ஸெலின் தியோன், ஷகீரா என்று விதவிதமாகக் கேட்டு ஆடிக்கொண்டிருந்தேன். (ஷகீராவின் Whenever, Whereverக்கு மரியாவுடன் ஆட வேண்டும்.)

அப்புறம், Let's be friends (skin to skin) என்ற அவருடைய பாடல் என்னுடைய நாடி நரம்புகளிலெல்லாம் ஊடுருவிச் சென்றது. ஒரு நாள் இந்தப் பாடலுக்கு ஆடிக்கொண்டிருந்தபோது தேவதையின் குரல்.

‘இந்த விசேஷமான தருணத்தில் உங்களை நினைத்துக் கொண்டேன்.’

‘உன் குரலைக் கேட்பதே எனக்கு விசேஷம்தானே?’

கலகலவென சிரித்துவிட்டு ‘உங்கள் நேரத்தைப் பாருங்கள். அதுதான் விசேஷம்’ என்றாள்.

மூன்று மணி. மூன்று நிமிடம். அது மட்டுமல்ல. அன்றைய தேதி மூன்று. மார்ச் மாதம். 2003ஆம் வருடம். சுவிஸ்ஸில் இருந்து கொண்டு நிமிடம் பிசகாமல் நேரத்தைக் கணக்கிட்டு அழைத்திருக்கிறாள்.

இதே போன்ற ஒரு நாள் அடுத்த ஆண்டும் வரும் என்பதெல்லாம் எனக்கு அப்போதே தோன்றவில்லை. நான் ஒரு Mills & Boon கதாநாயகனாகவே மாறிப்போயிருந்தேன்.

‘அது சரி, ஏன் உனக்கு இப்படி மூச்சு வாங்குகிறது?’

‘உங்களுடன் பேசுவதற்காக ஓடி வந்தேன்.’

‘இப்போது உன்னை என் இரு கரங்களிலும் ஏந்தி உன் நெற்றியில் முத்தமிட்டு உன்னை ஆசுவாசப்படுத்த விரும்புகிறேன் கண்ணே...’

‘ஒரே ஒரு நிமிடம்தான் மீதமிருக்கிறது இந்த அட்டையில். முடிந்தாலும்...’

## 5. ஹலோ மிஸ்டர்...

> There is always a first time. Reading, the imagination, the confrontation with reality. Must imagination shy away from encountering reality, or do they love each other? Can they become allies? Do they change when they meet? Do they swap roles? It's always the first time.

Lady Windermere in Johanna d'Arc of Mongolia.

இயக்குனர்: Ulrike Ottinger

காலையில் அனுப்பிய மின்னஞ்சலுக்கு மாலையில் ஒற்றை வார்த்தையில் பதில் வரும்.

‘படித்தேன்.’

‘இப்படி மொட்டையாகச் சொன்னால் எப்படி?’ என்று ஒரு மின்னஞ்சல் போகும்.

மறுநாள் மாலை பதில் வரும்.

‘படிக்கப் படிக்க கன்னமெல்லாம் சிவந்துகொண்டே வந்தது.’

‘ஏய்... கருப்பி, கருப்பாக இருப்பவர்களுக்கு கன்னம் எப்படி சிவக்கும்? இருந்தாலும் இந்த அளவுக்கு நம்மைப் பற்றி நாமே நினைத்துக்கொள்ளக் கூடாது?’

இதற்கு அவளிடமிருந்து வந்த பதில். சற்று காட்டமாகவே இருந்தது.

‘ஹலோ மிஸ்டர், ராத்திரியில் கருப்பாக இருக்கும் வானம் காலையில் சூரியனின் கிரணம் பட்டுச் சிவக்கவில்லையா? இது கூடத் தெரியாமல் ஒரு எழுத்தாளரா? நாங்கள் ஒன்றும் இங்கே எங்களைப் பற்றி, எந்த அளவுக்கும் நினைத்துக்கொண்டிருக்கவில்லை. ம்க்கும்...’

## 6. சுபானு வருடப் பலன்

> ஜோதியும் புவியும் எத்தனை விசாலமாயுள்ளனவோ, எத்தனை தூரம் அக்கினியுண்டோ, நீ அவற்றிற்கெல்லாம் உயர்ந்தவன். காமா! அத்தகைய உனக்கு நான் வணக்கமளிக்கிறேன்.
>
> திசைகளும், பிரதிசைகளும் எத்தனைப் பெரியனவோ வானங்களும் ஜோதிக் காட்சிகளும் எத்தனைப் பெரியனவோ, அவற்றிற்கு அதிகமான நீ சதா பெரியவன். காமா! அத்தகைய உனக்கு நான் வணக்கமளிக்கிறேன்.
>
> தேனீக்களும் வௌவால்களும் குரூருக்களும் எத்தனையுண்டோ, வகங்களும் மரப்பாம்புகளும் எத்தனையுண்டோ, அவற்றிற்கெல்லாம் நீ அதிகன். சதாப் பெரியவன். காமா! அத்தகைய உனக்கு நான் வணக்கமளிக்கிறேன்.
>
> எந்தக் காற்றும் காமனுக்குச் சமானமாவதில்லை; அனலுமில்லை, சூரியனுமில்லை, சந்திரனுமில்லை, அவற்றிற்கெல்லாம் அதிகன் நீ. சதாப் பெரியவன். காமா! அத்தகைய உனக்கு நான் வணக்கமளிக்கிறேன்.

-அதர்வ வேதம் : காண்டம் : IX ஸூக்தம் - 2:

‘காமன்’ ஸ்லோகங்கள்: 20-24

சுபானு என்ற தமிழ்ப் புத்தாண்டு பிறக்கிறதே, நம்முடைய ரிஷப ராசிக்கு என்ன எழுதியிருக்கிறது என்று அந்தப் பத்திரிகையின் பக்கங்களைப் புரட்டினேன். ரிஷப ராசியின் விசேஷ குணங்களாக அதில் எழுதப்பட்டிருந்தவை: இனிமையாகப் பேசி பிறரைக் கவரும் வாக்குச் சாதுர்யம், கவலையில்கூட இன்முகம் காட்டும் கவர்ச்சி, கலைகளில் ஈடுபாடு, சுற்றுலா செல்வது, அழகு, அலங்காரம் போன்றவற்றில் ரசிகத்தன்மை, தாராள மனப்பான்மை, பிறருக்கு உதவுவதில் தீவிரம்.

ஆகா... நூற்றுக்கு நூறு உண்மை என பாராட்டிக்கொண்டே அடுத்த பத்திக்குச் சென்றேன். ‘உங்கள் பலவீனம்’ என்ற தலைப்பில் இவ்வாறு எழுதியிருந்தது: பெண்களிடம் அதீத ஈடுபாடு...

சே... பெண்களைக் கண்டு காததூரம் ஓடும் என் மீதா இப்படி ஒரு அபாண்டம்! ‘சோதிடம்தனை இகழ்’ என்று பாரதி சொன்னது சரிதான்!

‘இல்லையில்லை... சரியாகத்தான் சொல்லியிருக்கிறார் சோதிடர்’ என்கிறாள் கனவுக்கன்னி. அநியாயம்... தவத்தைக் கலைத்தவளே இப்படிச் சொல்லலாமா?

‘ம்க்கும்... தவம் இருந்ததே பெண்களை மயக்கும் வரம் வாங்கத்தானே?’ என்று அதற்கும் ஒரு பதில் வந்தது.

## 7. Salute to Russia

> மது எனப்படுவது தேனும், முந்திரிப் பழச்சாறுமாகும்;
> ஆடுதின்னாப் பாளை, திப்பிலி ஆகியவற்றின் சாற்றைக்
> கொதிக்க வைத்து, அதனுடன் கருப்பஞ்சாறு, வெல்லம்,
> தேன் பாகு, நாவல் பழச்சாறு, பலாப்பழச் சாறு ஆகிய
> வற்றுள் ஒன்றைக் கலந்து, ஒரு மாதம், ஆறு மாதம்
> அல்லது ஒரு ஆண்டு வரை வைத்துப் பின்பு, அதனுடன்
> சிற்பிடம் (ஒரு வகைக் கொடிப் பழம்), வெள்ளரிப்
> பழம், கரும்பு, மாம்பழம், நெல்லிக்கனி ஆகியவற்றின்
> சாற்றில் கலந்தேனும் கலக்காமலேனும் செய்யப்படுவன
> சாராய வகைகளாம்.

-கௌடில்யர் : அர்த்த சாஸ்திரம்:

இரண்டாம் அதிகாரம்: பதினைந்தாம் இயல்.

நட்ராஜ் ஒரு வோட்கா போத்தலை எனக்காகக் கொண்டு வந்திருந்தார். பொதுவாக இப்படிக் கிடைக்கும் போத்தல்கள் திறக்கப்படாமலேயே நீண்ட காலம் வீட்டில் கிடக்கும். நான் தனியாக மது அருந்துவதில்லை. பார்க் ஷெரட்டனில் வெளியிலிருந்து கொண்டு வரும் பதார்த்தங்கள் அனுமதிக்கப் படுவதில்லை. நண்பர்களோடு சேர்ந்து குடிக்கலாம் என்றால் எனக்கு உள்ளூரில் மணியைத் தவிர வேறு நண்பர்கள் இல்லை.

நட்ராஜ் கொடுத்த வோட்கா, ரஷ்யாவிலிருந்து தருவிக்கப் பட்டது. விசேஷமானது. இருபது ஆண்டுகளுக்கு முன்பு ஒரு குளிர்கால நள்ளிரவில் முதல் முதலாக வோட்காவைக் குடித்த அன்று தில்லி கரோல் பாக் அஜ்மல்கான் ரோட்டில் கடும் போதையில் தள்ளாடியபடி ‘வோட்காவையும் தாஸ்தாவஸ்கியையும் இந்த உலகுக்கு வழங்கிய ரஷ்யாவுக்கு வந்தனம்’ என்று கூறியபடி தரையில் மண்டியிட்டு அமர்ந்து வணங்கிக்கொண்டே இருந்த என்னை எழுந்துகொள்ள வைப்பதற்குள்

நண்பர்கள் படாதபாடு பட்டிருக்கிறார்கள்.

அந்த வோட்கா குடித்து வெகு நாட்களாகியிருந்தன. இரவு பகலாக படிப்பதில் மூழ்கிக் கிடந்தேன். மணியையும் இரண்டு வாரமாகச் சந்திக்கவில்லை. வெளியூர் சென்றிருந்தான்.

மதியம் பன்னிரண்டு மணி அளவில் வோட்காவை எடுத்தேன். தண்ணீர் கலக்காமல் ஐஸ் கட்டிகளை மட்டுமே போட்டு அருந்தினேன். தேவ பானத்தைப்போல் இருந்தது. உக்கிரமான போதை. இரவு பத்து மணி அளவில் ஒரு லிட்டர் போத்தல் காலியாகியிருந்தது.

குடிப்பவர்களின் அகராதியிலுள்ள ஹேங் ஓவர், தலைவலி போன்ற விஷயங்களை நான் அறிந்ததில்லை. ஆனால் வோட்கா குடித்த மறுநாள் லேசாகத் தொண்டை கமறியது. ஐஸ் கட்டிகளின் வேலையாக இருக்கும். ஓமத்தை எடுத்து தண்ணீரில் போட்டு காய்ச்சி நாள் முழுதும் ஓமத் தண்ணீராகவே குடித்தேன். சரியாகிவிட்டது.

ஆஸ்துமாவைக்கூட சரிசெய்யும் சக்தி ஓமத்திற்கு உண்டு.

(இந்த நாவலில் ஓமக்குழம்பு பற்றி எழுதியே ஆகவேண்டும் என்பது என்னுடைய திட்டம். ஆனால் என் தபால் இலாகா கதைகளை எழுதிய சாரு நிவேதிதா அதை ஏற்கெனவே எழுதிவிட்டானோ என்று சந்தேகம். ஞாபக சக்தியுள்ள வாசகர்கள் தெரிவித்தால் நலம். இதுவரை எழுதவில்லை யெனில் இனி வரும் அத்தியாயமொன்றில் அது பற்றி எழுத வேண்டும்.)

சிறு பத்திரிகைகளில் எனக்குச் சில நண்பர்கள் உண்டு. அவர்களோடு அந்த ரஷ்ய வோட்காவைப் பகிர்ந்துகொண்டால் பூரித்துப் போவார்கள். ஆனால் கடைசியில் அதே போத்தலை எடுத்து என் மீது வீசிவிட்டுப் போவார்கள். தவறு அவர்களுடையது அல்ல. சமீபத்தில் நடந்த இரண்டு உதாரணங்கள். இரண்டுமே எனக்கு வந்த தொலைபேசி அழைப்புகள். இருவருமே சிறு பத்திரிகை நண்பர்கள். ஒருவனோடு பேசி ஆறு மாதங்கள் இருக்கும். மற்றவனோடு பேசி மூன்று ஆண்டுகள் இருக்கும்.

முதலாமவன் பேசியது சனிக்கிழமை இரவு பத்து மணி. ஒரு பாரிலிருந்து அழைத்தான். வழக்கமான குசல விசாரிப்புகளுக்குப் பிறகு 'என்ன பெருமாள், குடும்ப வாழ்க்கையில் தீவிரமாக மூழ்கி விட்டாயா?' என்று கேட்டான். அதற்குப் பிறகு அவனோடு உரையாடும் ஆர்வம் போய்விட்டது. இதே கேள்வியை ஒரு கிரிக்கெட் ஆட்டக்காரரிடம் கேட்க முடியுமா?

சமீபத்தில் மீராவின் தாயார் காலமானார். அப்போது அவர்கள் வீட்டிலும், மின்தகனம் செய்யும் இடத்திலும், பத்தாம் நாள் காரியம் நடக்கும் ஞானவாபி என்ற இடத்திலும் பல மணி நேரங்களைக் கழிக்க நேர்ந்தபோது நான் Assia Djebarஇன் So vast the prison நாவலைத்தான் படித்துக்கொண்டிருந்தேன். யாரையும் புண்படுத்தாமல் ஒரு ஒதுக்குப்புறத்தில் அமர்ந்தே வாசித்தேன். பதினான்காம் நாள் சுபஸ்வீகாரத்தின்போது மட்டும் படிக்க முடியவில்லை. கையில் கரும்புடன் எகல் கோஷ்டியினர் உரத்த குரலில் பாடும் திவ்யப்பிரபந்தம் உங்கள் ஐம்புலன்களையும் அப்போது முழுமையாக ஆக்ரமித்திருக்கும்.

தொலைபேசியில் அழைத்த இரண்டாவது நண்பன் கேட்டான்:

‘என்ன பெருமாள், சத்தத்தையே காணும்?’

‘ஹா ஹா... ஆமா... என்ன பண்றது?‘

‘என்ன பெருமாள், நீயே இப்படிச் சொல்லலாமா?’

‘ம்... பார்க்கலாம்.’

‘இல்ல பெருமாள், ஏதாவது எழுது, ஃபீல்டுல நிக்யணும்ல?’

‘ஆமா, ஆமா, ஃபீல்டுல நிக்யணும்ல...’

இதே ரீதியில் பத்து நிமிடங்கள் தொடர்ந்தது உரையாடல்.

எனக்கு ஒரு நண்பர். நான்கு திருமணங்கள் செய்துள்ளார். அது தவிர பல காதலிகள். ஒருநாள் அவரைச் சந்தித்தபோது ‘என்ன, ஏதாவது புதிய சமாச்சாரம் உண்டா?’ என்று கேட்டேன்.

‘ஆமாம், ஒரு பெண்ணைத் தீவிரமாகக் காதலித்துக் கொண்டிருக்கிறேன்’ என்றார்.

பெண்ணின் வயது?

இருபத்தைந்து.

அந்த நண்பர் கண்ணதாசன் காலத்தில் தமிழ் சினிமாவில் பாடல்கள் எழுதிக்கொண்டிருந்தவர். இப்போது வயது 65க்கு மேல் இருக்கும். தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்டவர். அந்த சிறு பத்திரிக்கை நண்பர்களைவிட இவரோடுதான் என் மனம் இணக்கம் கொண்டது.

## 8. என்றும் பதினாறு!

> எத்தனை தூரம் நான்கு பிரதிசைகள் விரிந்துள்ளனவோ - கண் எத்தனை தூரஞ் செல்லுகின்றதோ, அத்தனை தூரம், அந்த யானையின் உரமும் இந்திரியமும் என்னில் சேர்க.
>
> யானை ஸுந்தரமான வனப் பிராணிகளில் தலைமையாய் இங்கு வந்துள்ளதால் அதன் பாக்கியம், பலத்தால் நான் என்னை அபிஷேகஞ் செய்துகொள்கிறேன்.

-அதர்வ வேதம் : காண்டம் - 3 : ஸூக்தம்: 22,

‘யானை’ ஸ்லோகம் 5-6

‘ரீஜூவனேட் பண்ண வேண்டும் டாக்டர்.’

‘செய்துவிடலாம். ஆனால் ஒரு வாரம் குடிக்காமல் இருக்க வேண்டுமே?’

‘அது என்ன, சாதாரண விஷயம்.’

அப்போது டாக்டர் நாதமுனி பார்த்த பார்வையில் அவநம்பிக்கை தெரிந்தது. அதை நான் பொருட்படுத்தவில்லை.

முதல்நாள் ஒரு பேதி மருந்தின் மூலம் குடல் பாதை துப்புரவாக்கப்பட்டது. அன்று முழுதும் வெறும் மோர் சாதம் மட்டும்தான். (அது ஒன்றுதான் கொடுமையாக இருந்தது.) மற்ற தினங்களில் அவர் கூறிய பத்தியம் :

1. காஃபி, டீ, பால், பிஸ்கட், ப்ரெட், ஆப்பிள் சேர்க்கலாம்.

இவ்வளவு சேர்க்கும்போது ஒரு பியரையும் சேர்த்தால் என்ன டாக்டர், குறைந்தா போய்விடுவீர்கள்?

2. புளி, நல்லெண்ணை, கடுகு, உளுந்து சேர்க்கக்கூடாது.

சே, யாருக்கு வேண்டும் இந்த கண்றாவியெல்லாம்?

'புளிக்கு பதில் - எலுமிச்சை; நல்லெண்ணெய்க்கு பதில் - தேங்காய் எண்ணெய், நெய்; கடுகுக்கு பதில் - சீரகம்; உளுந்துக்கு பதில் - வெந்தயம்...'

'மிக்க நன்றி டாக்டர்.'

'தேங்காய், துவரம்பருப்பு, உப்பு, மிளகாய், வெங்காயம், பூண்டு, இஞ்சி.'

'டாக்டர், ரீஜூவனேட், பண்ண வேண்டாம், ஆளை விடுங்கள். வெங்காயம், உப்பு ரெண்டும் இல்லாமல் என்னால் வாழ முடியாது.'

'அட, பொறுங்கள் ஐயா, இந்த சமாச்சாரங்களையெல்லாம் நீங்கள் சேர்த்துக்கொள்ளலாம் என்கிறேன். இன்னும் லிஸ்ட் முடியவில்லை. முன்பு சொன்னதோடு இதையும் எழுதிக்கொள்ளுங்கள். கறிவேப்பிலை, கொத்துமல்லி இவ்வளவையும் சேர்த்துக்கொள்ளலாம். அடுத்து காய்கறியில் அவரை, புடல், பீர்க்கு, முருங்கைக்காய், பீன்ஸ், காரட், பீட்ரூட் சேர்க்கலாம். காலையில் அரிசிக் கஞ்சி, வெண் பொங்கல், சர்க்கரைப் பொங்கல், சப்பாத்தி சாப்பிடலாம்.'

'சப்பாத்தியை மற்ற வேளைகளிலும் சாப்பிடலாமா?' 'ஓ, சாப்பிடலாம்.' ஆகா, நான்தான் சப்பாத்திப் பிரியன் ஆயிற்றே. வெறும் சப்பாத்தியும், பருப்பும், வெங்காயமும் போதும். அசத்திவிடலாம்.

ஒரு வாரத்துக்குக் குடிக்கக்கூடாது. அது ஒன்றுதான் கொஞ்சம் இடித்தது.

காலையில் ஒரு குளிகை. இரவில் ஒரு குளிகை. அந்தக் குளிகையில் என்ன மூலிகையெல்லாம் இருக்கிறதோ, நாதமுனிக்கே வெளிச்சம். ஒரு வாரம் இவ்வாறு பத்தியமாய் இருந்துவிட்டு எட்டாவது நாள் சிறிது ஓமம் எடுத்து பாலில் விட்டரைத்து தலைக்குத் தேய்த்து வெந்நீரில் தலை முழுகவும். அன்று புளி சுட்டு சேர்க்கவும். (அதாவது, புளியை நேரடியாக நெருப்பில் வாட்டி சமையலில் சேர்த்துக் கொள்ளவும் என்று பொருள்.)

முதல் நாள். இரவு எட்டு மணிக்கு ஒரு நண்பனிடமிருந்து தொலைபேசி அழைப்பு. நண்பன் முன்பு ஹ்யூஸ்டனில் இருந்தான். இப்போது சென்னையில் குடியேறிவிட்டான். குடிக்க அழைத்தான். 'டயட்டில் இருக்கிறேன்' என்றேன்.

அதோடு, காரணத்தையும் விளக்கிச் சொன்னேன். ம்ஹூம். அவனுக்குப் புரியவில்லை.

'சர்க்கரை இருக்கிறதா?'

'இல்லை. அது பிரச்னையில்லை. நான் ரீஜூவனேட் பண்ணிக்...'

'நோ, நோ.. நீ ஷுகர் செக் பண்ண வேண்டும்.'

'செக் பண்ணிவிட்டேன். அது நார்மல். இப்போது நான் ரிஜூவனே...'

'அப்படியானால் B.P செக் பண்ணிவிட்டாயா?'

‘செக் பண்ணிவிட்டேன். அதுவும் நார்மல். இப்போது நான் ரீஜூவ...’

‘கொலஸ்ட்ரால் செக் பண்ணிவிட்டாயா?’

‘செக் பண்ணிவிட்டேன். நார்மல். இப்போது நான் டயட்டில் இருப்பது ரீஜு...’

கொலஸ்ட்ரால் செக் பண்ணவில்லை. ஆனால் அவனிடம் இப்போது உண்மையை விளம்ப நேரமில்லை.

‘உன் வயது ஐம்பதுதானே பெருமாள்?’

‘ஆமாம்.’

‘அப்படியானால் இதையெல்லாம் அடிக்கடி செக் பண்ணி ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.’

‘ஓ. செக் பண்ணுகிறேன்.’

‘ரெகுலராக வாக்கிங் போகிறாயா?’

‘இல்லை. யோகா செய்கிறேன்.’

‘வேண்டாம் பெருமாள். வாக்கிங் முக்கியம். இரண்டு வருடத்திற்கு முன்பு பார்த்தபோதே உனக்குத் தொப்பை இருந்தது. உன்னுடைய எழுத்து தமிழுக்குத் தேவை...’ என்று ஆரம்பித்து ஒரு பத்து நிமிடம் தொடர்ந்து பேசினான் அந்த நண்பன்.

பேச்சின் முடிவில் என் வயதைத் தொண்ணூறாக உணர்ந்தேன்.

## 9. I am not a gigolo...

> Ultimately the basis of love is banal.
>
> Elfriede Jelinek

> கைப்பிடி நாயகன் தூங்கையிலே அவன் கையெடுத்து
> அப்புறம் தன்னில் அசையாமல் முன்வைத்து அயல்வளவில்
> ஒப்புடன் சென்று துயில்நீத்தும் பின்புவந்து உறங்குவளை
> எப்படிநான் நம்புவேன்? இறைவா! கச்சி ஏகம்பனே!
>
> -பட்டினத்தார்

‘ரீஜூவனேட் செய்தாகிவிட்டதா? இப்போது எப்படி இருக்கிறது?’ என்று கேட்டாள் பத்மினி. மலேஷியா பத்மினி. ஒரு நொடி கூட யோசிக்காமல் நான் கூறிய பதில்:

‘Right now I want to fuck 12 gals’

இவ்வளவு வெளிப்படையான பதிலை சற்றும் எதிர்பார்க்காத அவள் ‘ம்... சரி, சரி. இப்போ நீ வேற மூட்ல இருக்காப்ல இருக்கு; நான் அப்புறம் பேசுகிறேன்’ என்று சொல்லி தொலைபேசியை வைத்துவிட்டாள்.

இது போக, வேறு சில தோழிகள் ‘இவன் ஒரு காலி டப்பா. அதனால்தான் அதிகம் சத்தம் போடுகிறான்’ என்று சொன்னார்கள்.

மலேஷியா பத்மினியுடன் பல மணி நேரங்கள் கணினியில் உரையாடியிருக்கிறேன். அப்போதெல்லாம் திவ்யா அனுபவத்தைச் சொல்லி எச்சரித்திருக்கிறேன். ‘இது போன்ற இணைய உறவுகளில் எனக்கு நம்பிக்கையில்லை; இப்போது உன் கையில் ஒரு கணினி இருக்கிறது; உறவினர்கள் யாருமில்லாத தனிமை, அது கொடுக்கும் சுதந்திரம் மற்றும் மன உளைச்சல் - இது எல்லாமாகச் சேர்ந்து என்னுடன் உன்னைப் பேச வைக்கிறது. தமிழ்நாட்டுக்கு வந்துவிட்டால் என்னைத் திரும்பிக்கூடப் பார்க்க மாட்டாய். இந்த விஷயத்தில் எனக்கு ஏகப்பட்ட அனுபவம் இருக்கிறது’ என்று அவளிடம் நான் சொல்லாத நாளே கிடையாது. அவளுடைய வகுப்புகள் மாலை நான்கு மணிக்கு முடிந்ததும் 4.05க்கு உரையாட வந்து விடுவாள். நான் ஆன்லைனில் இல்லாவிட்டால் தொலைபேசி மூலம் தொடர்புகொண்டு ‘உடனே உரையாட வாருங்கள்’ என்பாள். மூன்று அல்லது நான்கு மணி நேரம் தொடரும் உரையாடல். திவ்யா அனுபவம் மனசுக்குள் ஓடிக்கொண்டேயிருக்கும் எனக்கு. சமயங்களில் ‘bye’ சொல்லவே ஒரு மணி நேரம் ஆகும். அப்போது நான்தான் சட்டென்று தொடர்பைத் துண்டிப்பேன். மீண்டும் சந்திக்கும்போது ‘இது என்ன நாகரிகம்? முறையாக விடை பெறுவதற்குமுன் தொடர்பைத் துண்டிப்பது?’ என்று என்னைக் கடிந்துகொள்வாள். ‘திடீரென்று மின் இணைப்பு துண்டிக்கப்பட்டுவிட்டது’ என்று பொய் கூறிச் சமாளிப்பேன். இந்த நிலைமையில் தொலைபேசிக் கட்டணம் கன்னாபின்னா என்று எகிறவே, உரையாடலை வாரம் ஒரு முறை என மாற்றினேன். கணினி உரையாடலில் தொலைபேசிக் கட்டணம் ஐந்து மடங்கு அதிகமாகி என் லௌகீக வாழ்வு சிக்கலாகிவிடுகிறது என்று நூறு முறை சொன்னாலும் அவளுக்குப் புரிவதில்லையாதலால் ‘நான் கொஞ்சம் பிஸி; நான் கொஞ்சம் வெளியே போகிறேன்’ என்ற சாக்கு போக்குகளையே சொல்ல நேரிட்டது. ஆனால் மனசுக்குள் ஆயிரம் முறை சொல்லிக்கொள்வேன் - ‘திவ்யாவிடம் நடந்ததுபோல் இவளிடமோ அல்லது வேறு யாரிடமோ நடந்துவிடக்கூடாது’ என்று. திவ்யா கதை ஓடிக்கொண்டிருக்கும்போதே மணி என்னிடம் எச்சரித்தான்.

‘பெருமாள், இதுபோல் என்னிடம் குறைந்தது பத்து பெண்களாவது சொல்லியிருப்பார்கள். இதையெல்லாம் கேட்டு மயங்கிவிடாதே.’

எதையெல்லாம் கேட்டு?

‘முன்பெல்லாம் காலையில் எழுந்ததும் ஜீஸஸைத்தான் நினைப்பேன். இப்போது உன்னை நினைக்கிறேன். இத்யாதி, இத்யாதி. இப்படி ஆயிரம் வசனங்கள் பேசிய திவ்யா கலிஃபோர்னியாவிலிருந்து சென்னை வந்து சேர்ந்ததும் - சேர்ந்த அன்று அவனுடன் தொலைபேசியில் பேசினாள். பேசிய முதல் வாக்கியம்: ‘அப்பாடா, இப்போதுதான் நிம்மதியாயிற்று. இல்லாவிட்டால் இந்தியா வந்தபிறகு பேசவில்லை என்று எதிலாவது எழுதிவிடுவாய்.’

அதற்குப் பிறகு முழுசாக மூன்று மாதங்கள் அவளிடமிருந்து எவ்விதத் தொடர்பும் இல்லை. பிறகு ஒரு நாள் தொலைபேசியில் அழைத்தாள். சாதாரணமாகப் பேசினேன். வீட்டுக்குப் பேப்பர் போடும் பையனுடன் எப்படிப் பேசுவேனோ, அப்படி. இரண்டு நிமிடத்தில் ‘ஒரு கால் வருகிறது; ஐந்து நிமிடம் கழித்துக் கூப்பிடு’ என்று கூறி தொலைபேசியை வைத்துவிட்டாள். (வீட்டில் யாரும் இல்லை போலும்.)

அவள் வீட்டு எண் எனக்குத் தெரியும். ஆனால் கூப்பிடவில்லை. பதினைந்து நிமிடம் கழித்து மீண்டும் அழைத்தாள். அவள் குரலைக் கேட்டதும் துண்டித்து விட்டேன். பிறகு ஒரு மூன்று மாதங்கள் சென்று 'நாளைக்கு எனக்கு நிச்சயதார்த்தம்; உன் 'blessings' வேண்டும் என்றாள்.

'ம்... ம்...' என்று முனகினேன். முனகல் அல்ல. ஒரு மாதிரி உறுமல்.

'என்ன இது, blessings வேண்டும் என்கிறேன். பதில்கூட சொல்லமாட்டேன் என்கிறாய்?'

'ம்... ம்... அது எப்போதும் உண்டு' என்றேன்.

ம்... அப்புறம்... எப்படி இருக்கிறாய்?'

'ம்...'

'ஓ...'

'...'

'என்ன, என்னைத் திட்டி கதை எழுதிவிட்டாயா?'

'இல்லை.'

'சரி. என் நிச்சயதார்த்த விஷயத்தை எதிலாவது எழுதிவிடாதே?'

'எனக்கு என்ன, யார் வயதுக்கு வந்திருக்கிறார்கள், யாருக்கு சாந்தி முகூர்த்தம், யாருக்கு வளைகாப்பு என்று எழுதுவதுதான் வேலையா?' என்று கோபத்துடன் கேட்டேன்.

அவள் ஒன்றும் பதில் சொல்லவில்லை.

'மாப்பிள்ளை யார்?'

'உனக்குத் தெரியாதா? அதே பர்ஸன்தான்.'

'யார் ராம்குமாரா?'

'ம்

'ஓ...'

'ம்... சரி... ஓகே... பை...'

இதற்கு பதில் எதுவும் சொல்லாமல் தொடர்பைத் துண்டித்தேன்.

பத்மினி விஷயத்தில் இப்படி எதுவும் ஆகிவிடக்கூடாது என்பதில் கவனமாக இருக்க முனைந்தான். அப்போதுதான் டிசம்பர் முதல் தேதி இந்தியா வரப்போவதாகத் தெரிவித்தாள் பத்மினி. படு சாதாரணமாக 'அப்படியா?' என்று கேட்டேன். உடனே பத்மினி 'என்ன, என்னைப் பார்க்கப்போவதைப் பற்றி ஒரு எக்ஸைட்மென்ட்டையே காணோம்?' என்று ஆச்சரியத்துடன் கேட்டாள். 'இந்த மாதிரி கதையெல்லாம் எத்தனை முறை கேட்டிருக்கிறேன்?' என்று மனசுக்குள் நினைத்துக்கொண்டேன். பதில் எதுவும் சொல்லவில்லை.

மிகச் சரியாக டிசம்பர் இரண்டாம் தேதி காலை பத்மினியிடமிருந்து தொலைபேசி அழைப்பு. 'எப்போது சந்திக்கலாம் பெருமாள்.'

பத்மினியின் குரலில் ஏகப்பட்ட உற்சாகம். அவள் வார்த்தையில்

சொல்வதானால் ‘எக்ஸைட்மெண்ட்!’

நான் சற்றும் அலட்டிக்கொள்ளாத குரலில் ‘எப்போது வேண்டுமானாலும் பார்க்கலாம்’ என்றேன்.

‘எங்கே சந்திப்போம்?’

‘எங்கு வேண்டுமானாலும்.’

‘ஹிக்கின்பாதம்ஸ்?’

‘ஆகா, சந்திப்பதற்கு என்ன ஒரு அருமையான இடம்!’

‘சரி, வேண்டாம். மீனம்பாக்கம்?’

(மீனம்பாக்கம்தான் பத்மினி தங்கியிருந்த ஊர்.)

‘எங்கே, ஏர்போர்ட்டிலா?’

‘அடடா... அதில்லை பெருமாள். அங்கே நிறைய இடங்கள் உண்டு. சரி. நான் இப்போது அப்பாவைப் பார்க்க சொந்த ஊர் போகிறேன். அங்கிருந்து கூப்பிடுகிறேன்.’

‘சரி.’

பத்து தினங்கள் அமைதியாய்க் கடந்தன. பிறகு, சொந்த ஊரிலிருந்து அழைத்தாள் பத்மினி. ‘ஒரு கல்யாணத்துக்காக மதுரை செல்கிறேன் பெருமாள். சென்னை வந்ததும் உங்களை அழைக்கிறேன்.’

தொடர்ந்து ஒரு வாரம் அமைதி... பிறகு, டிசம்பர் 19ஆம் தேதி சென்னையிலிருந்து அழைத்தாள். நான் அப்போது பாண்டிச் சேரியில் இருந்தேன். கைத்தொலைபேசியில் பதில் கூறினாலும் கடுமையான கட்டணம் என்பதால் வெறும் ஐந்து ரூபாய்தான் அதில் எஞ்சியிருந்தது. அதனால் மிகச் சுருக்கமாக ‘மதியம் சென்னையில் இருப்பேன்’ என்றேன். ‘சரி, மதியம் மூன்று மணிக்கு அழைக்கிறேன். சந்திப்போம்’ என்றாள்.

19ஆம் தேதி மதியம் மூன்று மணிக்கு தொலைபேசி அழைப்பை எதிர்பார்த்தேன். அதற்கு மேல் என்னால் விட்டேற்றியாக இருக்க முடியவில்லை. ஆனால் பத்மினியிடமிருந்து மீண்டும் நீண்டதொரு மௌனம். பின்னர் 27ஆம் தேதி மதியம் மூன்று மணிக்கு அழைத்தாள்.

‘ஊருக்குப் போய்விட்டேன். அத்தைக்கு சீரியஸ். இப்போதுதான் வருகிறேன். எப்போது சந்திக்கலாம்?’ என்றாள்.

மீராவுக்கு கடுமையான ஜூரம். இரவு முழுவதும் உறக்கமில்லை. டைஃபாய்ட் ஜூரம். அப்போதுதான் லேசாகக் கண்ணயர்ந்திருந்தாள். அதிக நேரம் பேசினால் விழித்து விடுவாள் என்பதால் ‘இப்போது நான் பிஸி, அப்புறமாக நானே கூப்பிடுகிறேன்’ என்று கூறி அவளுடைய தொலைபேசி எண்ணைக் குறித்துக்கொண்டேன்.

அவள் ஊருக்குக் கிளம்பும் நாள் - ஜனவரி 1 என்பதால் அன்றைய தினம் இரவு விமான நிலையத்திலிருந்து தொலைபேசி அழைப்பு வரும் என்று எதிர்பார்த்தேன். இடையில் அவளை அழைக்கவில்லை. ஏற்கெனவே டிசம்பர் மாதம் முழுவதுமே பத்மினி கொடுத்துக்கொண்டிருந்த ‘ரன்னிங் கமென்ட்ரி’யால் மிகக் கடுமையான மன உளைச்சலுக்கு ஆளாகியிருந்தேன்; எல்லாவற்றையும்விட மலேஷியாவிலிருந்து அவள்

கேட்ட ‘எக்ஸைட்மென்ட்’ கேள்வி என்னைச் சித்ரவதை செய்து கொண்டிருந்தது.

ஜனவரி முதல் தேதி ‘எனக்கு பத்மினியிடமிருந்து ஃபோன் வந்தால் தயவுசெய்து என்னிடம் கொடுக்காதே. நான் கைத்தொலைபேசியை வீட்டில் வைத்துவிட்டு வெளியே போயிருக்கிறேன் என்று சொல்லி விடு’ என்று மீராவிடம் கூறினேன். அவள் என்ன விஷயம் என்று கேட்க, நான் விளக்கிக் கூறினேன்.

‘சே சே... பாவம் நான் அப்படியெல்லாம் செய்ய மாட்டேன்’ என்றாள் மீரா.

சரியாக ஜனவரி ஒன்று - இரவு ஒன்பது மணிக்கு பத்மினியிடமிருந்து தொலைபேசி அழைப்பு. மீராதான் எடுத்தாள். ‘பெருமாளா, இதோ இருக்கிறாரே’ என்று சொல்லி தொலைபேசியையும் கொடுத்து விட்டாள்.

‘உங்கள் அழைப்புக்காகக் காத்துக்கொண்டிருந்தேன்.’

‘ஓ... அடடா. நான் உன் தொலைபேசி எண்ணைத் தொலைத்து விட்டேன்.’

‘என்ன, பத்மினியைத் திட்டி எழுதியாயிற்றா?’

பிறகு ஜனவரி மூன்றாம் தேதி மலேஷிய நேரம் மாலை நான்கு மணிக்கு பத்மினியிடமிருந்து ஒரு குறுந்தகவல் வந்தது.

‘Are you free to chat with me now?’

வகுப்புகள் முடிந்திருக்கும். கல்லூரி நூலகத்தில் பல கணினிகள் உண்டு. அத்தையோ, அப்பாவோ, தம்பி, தங்கைகளோ அருகில் இல்லை. அனைவரும் இந்தியாவில் உள்ளனர். பாய் ஃப்ரெண்ட்ஸும் இல்லை. அதற்கெல்லாம் ஆசாரம் அனுமதிக்காது. அப்படியே வைத்துக்கொண்டாலும் எடுத்த எடுப்பிலேயே படுத்துக்கொள்ள அழைக்கிறான்கள். Idiots. Cyber sex is safe and secret, you know.

‘கூப்பிடு பெருமாளை!’

குறுந்தகவலுக்கு பதில் இல்லை என்றதும் தொலைபேசி அழைப்பு வந்தது. மீராதான் தொலைபேசியை எடுத்தாள். இணைப்பு உடனே துண்டிக்கப்பட்டது.

‘எவ அவன்னு தெரியலெ’ என்று சொல்லி ஒரு வசையை உதிர்த்தாள் மீரா. பிறகு, மறுநாளும் நான் கணினியில் வேலை செய்து கொண்டிருந்தபோது மலேஷிய நேரம் மாலை நான்கு மணிக்கு யாஹூவில் பத்மினியின் ‘Hi, Are you there?’ வந்தது.

‘ஓ.கே. நான் ஜிக்ளுவாக இருக்கவும் தயார். ஆனால் எனக்குக் கூலி வேண்டும். பத்மினி போன்றவர்களோ என்னை இலவச ஜிக்ளுவாக அல்லவா நடத்த விரும்புகிறார்கள்? செக்ஸ் ஒர்க்கரிடம் சென்று ஓசியில் ஒத்துவிட்டுச் செல்பவர்களை எந்த வார்த்தையால் அழைப்பது?’ என்று நினைத்துக்கொண்டேன்.

## 10. காதல் கட்டணம் : ரூ. 50,000/-

சுமனத்துடன் மஞ்சத்திலேறு: இங்கு இப்புருஷனுக்குப்

பிரசையைப் புலனாக்கு. இந்திராணியைப்போல் நல்ல உதயமாகி (முன் சோதியோடான) உஷைகளைக் காண நீ விழித்துக்கொள். ஆதியிலே தேவர்கள் தங்கள் மனைவிகளில் தோய்ந்தார்கள். காயங்களைக் காயங்கள் கலந்தன; சுந்தரியே! சூரியையைப் போலே விசுவரூபமாகி மகிமையோடு பிரஜை பொருந்தி இங்கு புருஷனுடன் சேர்.

-அதர்வ வேதம்: காண்டம் : XIVமிக்ஷி; ஸூக்தம்: 2

புருஷனும் மனைவியும்; ஸ்லோகம்: 31-32.

ஒரு நாள் திவ்யாவிடம் பேச வேண்டுமென்று மணியின் கைத் தொலைபேசியைக் கேட்டேன். அப்போது நானும் நண்பர்களும் பீச்சில் நின்றுகொண்டிருந்தோம். அதேபோல் மூன்று வெவ்வேறு சந்தர்ப்பங்களில் மணியின் கைத்தொலைபேசி மூலம் திவ்யாவிடம் பேசினேன். நான்காவது முறை பேசியபோது பீச் கோஷ்டி குற்றாலத்தில் இருந்தது.

நான் மணியிடம் கைத்தொலைபேசி கேட்டபோது அதில் பேட்டரி தீர்ந்திருந்தது. திவ்யாவிடம் பேச வேண்டுமென்று துடித்துக்கொண்டிருந்தேன். குற்றாலத்தில் இருந்ததால் நான்கு தினங்களாக மெயில் பார்க்கவில்லை. என்னுடைய நிலையைப் பார்த்து மனம் இளகிய மணி தனது தம்பியின் கைத்தொலைபேசியை வாங்கிக் கொடுத்தான். மணியின் சகோதரனின் தொலைபேசி என்பதால் அன்றைய தினம் நான் நீண்ட நேரம் பேசவில்லை. முக்கால் மணி நேரத்தோடு நிறுத்திக்கொண்டேன் - அதுவும் கோபாலகிருஷ்ணன் நினைவூட்டியதால்.

மறுநாள் காலை. கோபாலகிருஷ்ணன் என்னைப் பார்த்து குறும்புச் சிரிப்புடன் ‘என்ன பெருமாள்... 7000 ரூபாய்க்கு ஃபோன் பேசியிருக்கிறாய், ஜமாய்’ என்றான். தூக்கிவாரிப்போட்டது எனக்கு. உடனே எழுந்து மணியின் தம்பியிடம் சென்று வருத்தம் தெரிவித்தேன். அவனும் சிரிப்புடன் ‘எஞ்ஜாய் பெருமாள், எஞ்ஜாய்’ என்றான். பிறகு மணியிடம் சென்று விஷயத்தைக் கூறினேன்.

‘சரி, அதற்கென்ன?’

‘அமெரிக்காவுக்குப் பேச இவ்வளவு தொகையா ஆகும்?’

‘ஆகாது. கைத்தொலைபேசி என்பதால் இரட்டிப்புக் கட்டணம்.’

‘ஓ... அப்படியானால் இதுவரை பேசியதற்கு எவ்வளவு தொகை ஆகியிருக்கும்?’

‘ஒரு 50,000 ருபாய் ஆகியிருக்கும்.’

‘இதை ஏன் மணி என்னிடம் முன்பே சொல்லவில்லை?’

‘காவியக் காதலுக்கு என்னால் இயன்ற ஒரு சிறு உதவி...’

‘அப்படியானால் இன்னும் கொஞ்சம் சேர்த்துப் போட்டு அமெரிக்காவுக்கு ஒரு டிக்கட்டே வாங்கிக் கொடுத்திருக்கலாம். ஃபோனில் பேசியதற்கு

பதிலாக நேரிலேயே பேசியிருப்பேன் அல்லவா?'

## 11. ஆயிரம் மணி நேர உரையாடல்...

எனது தேகத்தை விரும்பு; பாதங்களை விரும்பு;
கண்களை விரும்பு; எனது ஊருக்களை விரும்பு;
உனது கேசமும், கண்களும் என்னை நாடி காமத்தால் காய்க.
எனது சங்கற்பத்துக்குச் சாய எனது விருப்பம் போலாக
எனது புஜத்தில் உன்னை சாயச் செய்கிறேன்
எனது இருதயத்தில் சாயச் செய்கிறேன்.

-அதர்வ வேதம் : ஸூக்தம் : 9:

என்னை நாடு: ஸ்லோகம் : 1-2.

திவ்யாவை நேரில் சந்திப்பது நடக்கவே போவதில்லை என்று எங்களுடைய உறவின் (?) முதல் தினமே எனக்குத் தெரிந்து விட்டது: அதனால்தான் அதை ஸைபர் உறவு என்று அவ்வப்போது அவளிடம் சொல்லித் திட்டு வாங்கிக் கொண்டிருந்தேன்.

ரொம்பவும் கோபப்படுவாள். தன் காதலை அவமதித்து விட்டதாக ஆவேசப்படுவாள். அப்போதெல்லாம் நான் கூறும் பதில்: 'மூன்று காரணங்களினால் நமக்குள்ள தொடர்பு அறுந்து போகும். ஒன்று - உனக்கு வேலை கிடைத்தால், இரண்டு - உனக்குத் திருமணமானால், மூன்று - நீ இந்தியா வந்தால்.'

வேலை கிடைத்ததுமே தொடர்பு விட்டுப்போனது. நான்கு மாதங்கள் தகவலே இல்லை. பிறகு ஒரு மெயில் வந்தபோது 'அட, நீ இன்னும் உயிருடன் இருக்கிறாயா?' என்று கேட்டு எழுதினேன்.

'நீ ரொம்ப குரூரமானவன்' என்று பதில் வந்தது. பின்னர் 'நான் என் திருமண விஷயமாக சென்னை வருகிறேன். உனக்கு இங்கிருந்து என்ன வேண்டும்?' என்று ஒரு மெயில்.

'உன்னுடைய நிலைமையில் நீ என்னைச் சந்திக்கக்கூடும் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை. எதுவும் வேண்டாம்.'

'நாளை கோவில்பட்டி கிளம்புகிறேன். அடுத்த வாரம் சந்திக்க அப்பாய்ண்ட்மெண்ட் கிடைக்குமா?'

சொற்களால் மட்டுமே கட்டியமைக்கப்படும் இணைய உறவுகளின் அபத்தத் தருணங்களில் அது ஒன்று.

தினமும் ஐந்து மணி நேரம் வீதம் வாரத்தில் நான்கு தினங்கள் கணினி உரையாடல். சமயங்களில் அது இடைவெளியே இல்லாமல் 12 மணி நேரம் வரைகூட நீடித்திருக்கிறது. உதாரணமாக, இரவு ஒரு மணியிலிருந்து மறுநாள் மதியம் 12 மணி வரை.

'என்ன, அப்பாய்ண்ட்மெண்ட்டா? விளையாடுகிறாயா?'

‘இல்லை... நீங்கள்ளாம் பெரிய எழுத்தாளர். அதனால்தான். கேட்டேன்.’

ஓகோ... பன்னிரண்டு மணி நேரம் ‘சாட்’ பண்ணும்போது நான் பெரிய எழுத்தாளன் என்று தெரியவில்லையோ? மொத்தம், சுமார் 1000 மணி நேரம். நான் சொன்ன மாதிரியே ஆயிற்று. திவ்யா இந்தியா வந்து ஒன்றரை மாத காலம் ஆகியும் ஒரு தகவலும் இல்லை. ‘இனிமேல் தொடர்பு கொண்டாலும் என்னை அணுக முடியாது. அவளுக்குத் தரப்பட்ட கெடு முடிந்துவிட்டது’ என்று நினைத்துக்கொண்டேன்.

12. கடைசி மூச்சு

1. ஆதியில் இவன் விராஜை; அவளது சன்மத்தில் இவளே இது’[1] என நினைத்து அனைத்தும் பயந்தன.
2. அவள் ஏறினாள்.[2] அவள் காருஹபத்திய அனலில் இறங்கினாள். இங்ஙனம் இவளையறியாமல் கிருக யக்ஞஞ் செய்பவனாய் கிருகபதியாவான்.
3. அவள் ஏறினாள்; அவள் ஆஹவனீயத்தில் இறங்கினாள்: அவனது தேவ அழைப்புக்கு தேவர்கள் செல்வார்கள்; இங்கன மறிபவன் தேவர்களுக்குப் பிரியமானவான்.
4. அவள் ஏறினாள்; அவள் தென் அனலில் இறங்கினாள்: இங்ஙனம் இவளையறிபவள் யக்ஞத்தால் அருகனாயும் அளிப்புக்கு உரியவனாயும் வசதிக்குப் பக்குவனுமாவான்.
5. அவள் ஏறினாள்; அவள் சபையில் இறங்கினாள்: அவனது சபைக்கு மனிதர்கள் செல்லுவார்கள். இவனை இங்ஙனமறிபவன் ஸப்யனாவான்.
6. அவள் ஏறினாள்; அவள் சமிதியில் இறங்கினாள். அவனது சமிதிக்கு மனிதர்கள் செல்லுவார்கள்: இவளை இங்ஙனமறிபவன் ஸ்மிதிகளுக்கருகனாவான்.
7. அவள் ஏறினாள்; அவள் மந்திராலோசனையிலிறங்கினாள்; மனிதர்கள் அவனது மந்திராலோசனைக்குச் செல்லுகிறார்கள்; இவனை இங்ஙனமறிபவன் மந்திராலோசனைக்கு அருகனாவான்.
8. அவள் ஏறினாள்; அவள் வானத்தில் நான்காய்ப் பிரிந்து நின்றாள்.
9. தேவர்களும் மனிதர்களும் அவளைப் பற்றி நாம் இருவரும் எவளில் ஆதாரமாயுள்ளோமோ அவளே அறிவாள் நாம் அவளையழைப்போம் எனச் சொன்னார்கள்.
10. அவர்கள் அவளை அழைத்தார்கள்.
11. உறுதியே! வா. உணவே! வா. உயரிய மொழியே! வா. உற்சாகமளிப்பவளே வா.
12. அவளுக்கு இந்திரனே பாலன், காயத்திரியே பந்தம். முகிலே ஸ்தனம்.
13. பிருஹத்தும் இரதந்தரமும் அவளது இரண்டு ஸ்தனங்கள். யக்ஞா யக்ஞியமும் வாமதேவ்யமும் அவளது இரண்டு பயோதரங்கள்.

-அதர்வ வேதம்

காண்டம்: 8; ஸூக்தம் : 9 - விராஜை: ஸ்லோகம் : 1-13.

ஒரு நாள் திவ்யாவிடம் சொன்னேன். ‘என் கடைசி மூச்சுவரை நான் உன்னை மறக்க மாட்டேன்’ என்று. உடனே அவளுக்கு அன்று முழுவதும் எந்த வேலையும் ஓடவில்லையாம். மறுநாளும் மனம் சரியில்லையாம். என்ன விஷயமென்று துருவித் துருவிக் கேட்டேன். கடைசி மூச்சு என்று சொல்லிவிட்டேனாம். ஒரே திட்டு. சமாதானப்படுத்துவதற்குள் போதும் போதும் என்றாகிவிட்டது. சே...

## 13. சிருஷ்டி

1. எப்படி காற்று புவியின்மேல் இப்புல்லை இங்குமங்கும் அசைக்கின்றதோ, அப்படியே உன் மனத்தை, உன்னிடமிருந்து நீங்காமலிருப்பதற்கும் என்னுடன் நீ விருப்பமுள்ளவளாவதற்கும், அசைத்துக் கடைகிறேன்.
2. அசுவினிகளே! அவளை, விரும்புவனோடு நீங்கள் அழைத்து வாருங்கள்; உங்களது செல்வங்கள் ஒன்றுசேர்ந்துள்ளன: உங்களது விரதங்களும் நினைவுகளும் ஒன்று குவிந்துள்ளன.
3. ஸூபர்ணன் சொல்வதுபோல் சுகசீவன் முழங்குவதுபோல் அம்புக்கு அம்புத் தண்டைப்போல், இனி எனது அழைப்புக்கு அவள் வருக.
4. அகத்திலுள்ளது புறத்திலாகும், புறத்திலுள்ளது அகத்திலாகும். ஔஷதியே! விசுவ ரூபங்களான கன்னிகைகளின் மனத்தை கிரகி.

- அதர்வ வேதம்

காண்டம்: 2; ஸூக்தம்:31 - காதல் வழி: ஸ்லோகம்: 1-4

நானும் மீராவும் ஆட்டோவில் சென்றுகொண்டிருந்தோம். வாகன நெரிசல் அதிகமாக இருந்ததால் ஆட்டோ மெதுவாகச் சென்று கொண்டிருந்தது. மனத்தைச் சுண்டியிழுக்கக்கூடிய ஒரு அழகுப் பதுமை. உயிர் பெற்று எழுந்து நடக்கும் சிற்பத்தைப் போன்ற தோற்றம். சிருஷ்டியின் அற்புதத்தை வியந்து கொண்டிருந்தபோது சட்டென்று ஆட்டோ பக்கவாட்டில் திரும்பிவிட்டது. எனக்கு அந்தப் பதுமையின் முன்னழகைப் பார்க்க ஆசை. ஆட்டோவிலிருந்து தலையை வெளியே நீட்டி எக்கிப் பார்த்தேன். சே, என்ன ஒரு ஏமாற்றம். தலையை உள்ளுக்கிழுத்தபோது என்ன விஷயமென்று கேட்டாள் மீரா. விஷயத்தைச் சொன்னேன். ‘அட சைட்டெல்லாம் அடிப்பியா?’ ‘ஓ... இதுக்குப் பேர்தான் சைட் அடிக்கிறதா? கேள்விப்பட்டிருக்கிறேன். இன்றுதான் அர்த்தம் தெரிந்தது.’

‘தெரியும்டா... தெரியும்’ என்றாள் மீரா.

## 14. நிஜ வாழ்விலிருந்தும் வெளிநடப்பு செய்ய முடியுமா?

பிஸ்டலுக்குக் கீழே அம்மாவின் பெண்குறியைக் காண்பிக்கும் புகைப்படங்கள் கிடந்தன. அந்தப் பெண்குறியின் மூலமே அவன் இந்த உலகில் நுழைந்திருந்தானெனினும், அது அவனுள் எந்தச்

> சலனத்தையும் ஏற்படுத்தவில்லை... (அம்மா, சகோதரி மற்றும் அப்பா மூவரையும் சுட்டுக் கொன்றுவிட்டு) டாய்லெட்டிலிருந்து கோடரியை எடுத்துக்கொண்டு வந்தான் ரெய்னர்...
>
> அப்பாவின் உடல் துண்டுதுண்டாகும்வரை வெட்டிக் கொண்டேயிருந்தான். அடுத்து ரெய்னர் கோடரியை எடுத்துக்கொண்டு அம்மாவிடம் சென்றான். களகளவென்ற சப்தத்துடன் நுரையெழுப்பியபடி ரத்தம் கொப்பளித்து ஓட, மனித குலத்தின் ஒரு பார்ஸல் அந்த ஹாலில் கிடந்தது. கோடரியால் அவளையும் வெட்டினான். பிறகு தன் சகோதரியிடம் சென்றான்...
>
> - Elfriede Jelinek: Wonderful, Wonderful Times.

செலின் சிங்கப்பூரில் ஸாஃப்ட்வேர் துறையில் பணிபுரிகிறான். தியோடர் அவன் நண்பனின் மாமா. டிப்ளமா படித்தவர். கட்டிடம் கட்டும் கூலியாக வேலை பார்க்கிறார். வேறு வேலை கிடைக்கவில்லை. சொற்பமான ஊதியம். ரத்தத்தையே வியர்வையாகச் சிந்தியும் அவரால் ஒரு சில ஆயிரம்தான் வீட்டுக்கு அனுப்ப முடிகிறது. வார விடுமுறை தினங்களில் அவர் செலினின் வசிப்பிடத்திற்கு வருவார். சரீர உழைப்பில் ஈடுபடும் நண்பர்கள் சிலர் வார விடுமுறைகளில் இப்படி அவன் வீட்டுக்கு வருவதுண்டு. அவர்களுடைய ஒரே பொழுதுபோக்கு சன் டி.வி. வீட்டில் சன் டி.வி இணைப்பை அவன் வைத்திருப்பதன் ஒரே காரணம் இதுதான். அந்த சேனலைப் பார்க்கும்போது அவர்களுக்கு தங்கள் வீட்டில் இருப்பதைப் போன்ற உணர்வு ஏற்படுகிறது.

தியோடர் பார்ப்பதற்கு ஐம்பது வயதைக் கடந்ததைப் போன்று தோற்றமளித்தார். ஆனால் வயது என்னவோ நாற்பதுதான். ஒரு நாள் தியோடரின் மனைவி இறந்துவிட்டதாக இந்தியாவிலிருந்து செய்தி வந்தது. ஏதோ ஹார்ட் அட்டாக் அல்லது இயற்கையான மரணம் என்றே ஆரம்பத்தில் நினைத்தான் செலின். தியோடரிடம் கைத்தொலைபேசி கிடையாது. எனவே எப்படி அவரிடம் அந்தச் செய்தியை சேர்ப்பது என்று யோசித்தார்கள் செலினும் நண்பர்களும். செலினை அந்தச் செய்தி அதிகம் பாதிக்கவில்லை. தியோடருக்கு எத்தனை குழந்தைகள் என நண்பனிடம் விசாரித்தேன். ‘மூன்று பெண்கள்’ என்றான் நண்பன். கடைசிக் குழந்தைக்கு ஒன்றரை வயது. முதல் குழந்தைக்குப் பதினோரு வயது. 3000 மைல் தூரத்தில் ஒரு அந்நிய தேசத்தில் இருந்துகொண்டு, அவன் பார்த்தேயிராத ஒருவரின் மரணத்தைப் பற்றி வேறு எப்படி அவனால் யோசிக்க முடியும்? கடந்த மாதம் செலினின் தாத்தாவும் பாட்டியும் அடுத்தடுத்த மாதத்தில் இறந்துபோனார்கள். அப்போது அவன் கூறினான்: அவர்கள் இருவரும் பூரணமான ஒரு வாழ்க்கையை வாழ்ந்திருக்கிறார்கள். க்ரிக்கெட் ஆட்டக்காரர்கள் இருவரிடையேயுள்ள நீண்டதொரு பார்ட்னர்ஷிப்பை போன்றது அவர்கள் வாழ்க்கை. ஒருவர் அவுட் ஆனதும் மற்றொருவரும் தவிர்க்க முடியாமல் அவுட் ஆகத்தான் செய்வார். முதியோருக்கு மரணம் ஒரு விடுதலை.

எதைப் பற்றியும் கவலையில்லாமல் உறங்கச் சென்றான் செலின். சிறிது நேரமே உறங்கினாலும், அது ஆழ்ந்த உறக்கமாக இருக்கும். நித்திரையில் அவனை எழுப்புவது கடினம். காலையில் எழுந்தபோது அவன்

கைத்தொலைபேசியில் ஒரு missed call. அதில் தியோடரின் அழுகுரல். அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. இவரே இப்படி அழுதால், குழந்தைகளுக்கு யார் ஆறுதல் சொல்வது? நண்பர்கள் அனைவரும் சேர்ந்து அவருக்கு விமான டிக்கட் எடுத்துக் கொடுத்தார்கள். அவரது ‘ஒர்க் பர்மிட்’டை ரத்து செய்ததால், அதன் மூலமும் சிறிது பணம் கிடைத்தது. (இந்த ‘ஒர்க் பர்மிட்’டைப் புதுப்பிப்பதற்காக சமீபத்தில்தான் அவர் ஒரு பெரும் தொகையைச் செலவு செய்திருந்தார்.)

சில தினங்கள் சென்றுதான் செலினுக்கு அந்த மரணத்தின் உண்மை விவரம் தெரியவருகிறது. அவர்கள் வீடு அரியக்குடியின் ஊர்க்கோடியில் உள்ளது. தியோடரின் மனைவி வழக்கம்போல் சுள்ளி பொறுக்குவதற்காக வயற்காட்டுக்குச் சென்றுவிட்டு சூரியன் அஸ்தமிக்கும் சமயம் வீடு நோக்கித் திரும்பியிருக்கிறார். வரும் வழியில் ஐந்து குடிகாரர்களின் பார்வையில் அவர் பட்டிருக்கிறார்.‘Irreversible’ என்ற ஃப்ரெஞ்ச் திரைப்படத்தைப் பார்த்திருக்கிறீர்களா, அதில் ஒரு பெண்ணை ஒருவன் வன்கலவி செய்கிறான். செய்து முடித்த பின் அவளுடைய முகத்தைக் கடுமையாகச் சிதைக்கிறான். இதேதான் அந்த அரியக்குடி சம்பவத்திலும் நடந்துள்ளது. அந்த ஆட்கள் அவருடைய கண்களையும் தோண்டி எடுத்துள்ளனர். அப்பெண்ணின் உடல் தூக்கில் தொங்கவிடப்பட்டுள்ளது. அவர்கள் ஒரு பெண்ணை மட்டும் கற்பழிக்கவில்லை; அவருடைய மூன்று பெண் குழந்தைகளையும் மற்றும் அந்தக் குடும்பம் முழுவதையுமே நிர்மூலமாக்குகிறார்கள் என்பது அந்த குரூர மிருகங்களுக்கு ஏன் தெரியவில்லை என்று கோபத்துடன் யோசிக்கிறான் செலின். ‘அழுவதை நிறுத்திவிட்டு அந்த மிருகங்களைக் கண்டுபிடித்து கொன்றுபோடுங்கள்’ என்று தியோடரிடம் சொல்ல விரும்புகிறான். ஆனால் சொல்லவில்லை. அப்படிச் செய்தால் மட்டும் அது அவருடைய மனைவியையும், அவரது நம்பிக்கைகளையும் கனவுகளையும் திரும்பக் கொடுத்து விடுமா என்ன?

சென்ற ஆண்டு செலின் இந்தியா வந்திருந்தபோது, அவனுடைய உறவினர் ஒருவர், தான் வெளியே செல்லும்போதெல்லாம் மனைவியை வீட்டுக்குள் வைத்து பூட்டிவிட்டுச் செல்வதாக அறிந்தான். அவன் வீட்டில் இதுபற்றி அவரைக் கேட்டபோது அவருடைய அப்பாதான் இப்படி செய்யச் சொன்னதாகச் சொல்லியிருக்கிறார். ஒரு மாதத்துக்கு முன்பு அந்தப் பெண் மர்மமான முறையில் இறந்துவிட்டார். விபரம் வெளியே தெரிவதற்கு முன்பே சாவுச் சடங்குகளை சடுதியில் முடித்துவிட்டிருக்கின்றனர் புகுந்த வீட்டில். ஆனால் கிராமத்து மக்கள் சும்மா இருக்கவில்லை. போலீஸை வரவழைத்துவிட்டனர். பிறகு, பிணம் தோண்டியெடுக்கப்பட்டு பரிசோதனைக்கு அனுப்பப்பட்டது. பிணத்தின் கழுத்தில் அழுத்தமான நகக்கீறல்கள்... அந்த ஆள் இப்போது ஜெயிலில் இருக்கிறான்.

பொதுவாக அவனுடைய உறவினர் வட்டத்தில் போலீஸ் தொடர்பான எந்தப் பிரச்னையாக இருந்தாலும் செலினின் அப்பாவிடம்தான் ஆலோசனையும், உதவியும் கேட்டு வருகிறார்கள். ஆனால் இந்த விவகாரத்தில் ‘நான் அப்படி ஒரு பாவ காரியத்தைச் செய்ய மாட்டேன்’ என அப்பா திட்டவட்டமாக மறுத்துவிட்டார். அந்தப் பாவப்பட்ட ஜீவன் எப்போது தன் பெற்றோர் வீட்டுக்குச் சென்று புலம்பினாலும், அப்போதெல்லாம் அப்பெண்ணை சமாதானம் செய்து கணவனிடமே திருப்பி அனுப்பியிருக்கின்றனர் அவள் பெற்றோர் - அப்பெண்

கொலையுண்டு சாகும்வரை.

சிங்கப்பூர் என்கிற டாம்பீகமான நகரத்தில் வசதியாக வாழ்ந்து கொண்டிருக்கும் அவனுக்குத் தன் சமூகத்தில் நிலவும் இவ்வளவு குரூரமான வன்முறைச் சூழலை எப்படி எதிர்கொள்ள வேண்டும் என்று புரியவில்லை.

Irreversible படம் எல்லாவற்றையும் reverse orderஇல் சொல்லி, இச்சம்பவங்களெல்லாம் பின்னோக்கிச் செலுத்தப்பட முடியுமா என்ற கேள்வியை முன்வைக்கிறது. Do we have a chance to reverse/recover what Time had done?

ஒரு Gay க்ளப்பில் நடக்கும் பயங்கரமான கொலை ஒன்றுடன் படம் துவங்குகிறது. பழிக்குப் பழியாக நடந்தேறும் ஒரு கொலை அது. வன்கலவியில் ஈடுபட்ட அவன் பிடிபடுகிறான் - அவன் கொலையுறும் தருணத்தில் அவன் இப்படி ஒரு குற்றம் செய்தவன் என்று நமக்கு சொல்லப்படுவதில்லை - பிறகு வன்கலவிக் காட்சி.

ஒரு குற்றச் செயலை ஆய்வு செய்யும் ஒரு கலைஞனின் முயற்சி இது. ஆனால் அந்தக் காட்சியில் பார்வையாளர்கள் பலரும் எழுந்து வெளிநடப்பு செய்துவிட்டார்கள் என்பது செய்தி. அப்படியானால் நிஜ வாழ்விலிருந்தும் நாம் வெளிநடப்பு செய்ய முடியுமா என்ன? - அடுத்து வருவது, ஒரு தம்பதி அளிக்கும் விருந்து, கேளிக்கை மற்றும் இரவு நேரக் கொண்டாட்டங்கள். பிறகு, கதாநாயகியின் முன்னாள் கணவன் அத்தம்பதியிடம் ‘இப்போது இவளுக்கு கலவியின்போது ஆர்கஸம் உண்டாகிறதா? என்னுடன் இவள் ஆர்கஸம் அடைந்ததில்லை’ என்கிறான். (இந்தக் காட்சியின்போது இவர்கள் மூவரும் ஒரு ரயிலில் சக பயணிகளிடையே அமர்ந்து இதைப் பேசிக்கொண்டிருக்கின்றனர்.) அடுத்து, அத்தம்பதியினரின் சந்தோஷமான மணவாழ்க்கை, அவர்களின் பாலியல் உறவு போன்றவை வெளிப்படையாகக் காண்பிக்கப்படுகின்றன. குறிப்பாக, கதாநாயகி தனது சிறுநீரின் மூலம் தான் கர்ப்பமடைந்திருப்பதைக் கண்டு கொள்ளும் காட்சி.

தம்பதிகள் ஈடுபடும்போது பரவசமாக இருக்கும் செக்ஸ், வன்புணர்ச்சியாக மாறும்போது, மிகப்பெரும் வாதையாகி விடுகிறது. செக்ஸின் இரண்டு முரண்பட்ட நிலைகள்...

## 15. என்னை உனக்கு நேரில் பிடிக்குமா?

> 1. இன்னலுணவு நீங்குக. தேன் மிகுந்த மொழி உணவினின்று தோன்றும். 2. நீங்கள் தேன் மிகுந்தவர்கள். நான் தேன் மிகும் மொழியைப் பேச வேண்டும். 3. நான் கோபனை அழைத்துள்ளேன். நான் அவனது காப்பையும் அழைத்துள்ளேன். 4. இரு செவிகளும் நல்ல சுருதிகளுள்ளவை. இரு காதுகளும் மங்களக் கேள்விகளுள்ளவை. நான் மேலான சுலோகத்தைக் கேட்க வேண்டும். 5. திவ்யச் சுருதியும், துரிதச் சுருதியும் என்னை விட்டு நீங்காமலாகுக. நான் கருடக் கண்ணோடு கழியாத சோதியோடாக வேண்டும். 6. நீ ரிஷிகளின் விரிப்பு: திவ்ய விரிப்புக்கு வணக்கமாகுக.

-அதர்வ வேதம்; காண்டம் : 16;

ஸூக்தம் : 2 - துதி; ஸ்லோகம் : 1-6.

சான்ஃப்ரான்ஸிஸ்கோவிலிருந்து தன்னுடைய புதிய கேம்ரியில் சென்றுகொண்டிருந்தபோது ஒரு திருப்பத்தில் வேறொரு காரின் மீது மோதியிருப்பாள் திவ்யா. காரணம், பெருமாள்.

அவளுடைய கணினி மூன்று தினங்களாக வேலை செய்யவில்லை. அதனால் மூன்று தினங்களாகப் பெருமாளுடன் பேச முடியவில்லை. அதனால் அவன் நினைப்பிலேயே காரை ஓட்டியிருக்கிறாள்.

‘நீ செய்த புண்ணியம்தான் பிழைத்தேன்’ என்றாள் பெருமாளிடம்.

‘இதோ பார் தாயே... உன் உயிரைக் காபந்து பண்ணிக்கொள்ள வேண்டியது உன்னுடைய பொறுப்பு. ஏனென்றால் என் உயிரும் உன்னிடம்தான் இருக்கிறது’ என்றான் பெருமாள்.

இதற்குச் சில தினங்களுக்கு முன்பு நடந்த ஒரு சம்பவம்: எப்போதும் குதூகலமாக இருக்கும் அவன் ஒரு நாள் விசனத்துடன் இருந்தான். என்ன விஷயம் என்று கேட்டதற்கு திவ்யா இவனைத் திட்டி விட்டதாகக் கூறினான். என்ன திட்டினாள்?

‘நீ ரொம்ப cruel. முன்பெல்லாம் நீ என்னை ரொம்ப அழ வைப்பாய் தெரியுமா? நான் அழுவதை நீ பார்த்துவிடக்கூடாது என்று வெப்கேமை ஆஃப் செய்துவிட்டு அழுவேன். ச்சே... இடியட்.’

ஆனால் மறுநாளே பெருமாளின் குதூகலம் திரும்பிவிட்டது. காரணம். திவ்யாவின் பின்வரும் மெயில்:

My sweet idiot...

(இப்போதெல்லாம் நான் யாரையும் இடியட் என்று திட்டுவதில்லை. உனக்குப் பயன்படுத்தும் இந்த வார்த்தையை வேறு யாருக்கும் பயன்படுத்த என் மனம் ஒப்பவில்லை.) ஒரு குழந்தை தன் அம்மாவிடம் கோபத்தில் சொல்வதில்லையா, ‘போ, உன்னை எனக்குப் பிடிக்கவில்லை, நீ மோசம்’ என்று? அதுபோலத்தான் இதுவும். உரிமையாக, அன்பாக, கோபமாக, வருத்தமாகச் சொன்னது அந்த வார்த்தை. நீ காரணமாக இல்லாமலிருக்கலாம்; இருந்தாலும் நான்தான் முட்டாள்தனமாக எதையாவது நினைத்துக்கொண்டு அழுதிருக்கிறேன். சரியா?

நல்லது. உன்னை இதுவரை யாரும் இப்படிச் சொன்னதில்லை. அதற்கு என்ன அர்த்தம்? என்னை மாதிரி யாரும் உன்னிடம் இவ்வளவு நெருக்கமாக இருந்தது இல்லை. நீயும் யாரிடமும் இருந்திருக்க மாட்டாய், புரிகிறதா?

ஏய்... நீ செக்ஸில் ‘வீக்’ என்று சும்மா உன்னை வெறுப்பேற்றுவதற்காகச் சொன்னேன். ச்சே, இது கூடவா உனக்குப் புரியவில்லை. ஐயோ கடவுளே... உன்னைச் சமாளிப்பது கஷ்டம்தான்.

‘என் கண்ணீர்த் துளிகள் உன்னைத் தேடிக்கொண்டிருக் கின்றன’ என்று எழுதியிருக்கிறாய். உண்மையில் இந்த வாக்கியத்தைப் படித்து அழுதுவிட்டேன். எங்கேயிருந்து தான் இப்படியெல்லாம் எழுதுகிறாயோ போ. நான் அதிர்ஷ்டசாலிதான்.

ஏய் முட்டாள்... என் அம்மா, அப்பா, மற்ற உறவினர்கள் வேறு. நீ வேறு. எனவே அவர்கள் மீது பொறாமைப் படுவதை நிறுத்து. உன் இடத்திற்கு இந்த ஜென்மத்தில் வேறு யாரும் வர முடியாது. அதுதான் நிஜம்.

பத்துப் பதினைந்து முறை உன் கடிதத்தைப் படித்தேன். ‘என் கண்ணீர் துளிகள்...’ அந்த வாக்கியத்தைப் படிக்கும்போது ஒரு நிமிடம் என் இதயமே நின்றுவிட்டது போல் இருந்தது.

அப்புறம் ஒரு விஷயம். இங்கே குளிர் முடிந்து இளவேனில் துவங்கிவிட்டது. எனக்குப் பிடித்த இளஞ்சிவப்பு ரோஜா செடி. முழுவதுமாக துளிர்விட்டுவிட்டது. அதிகப் பழுப்பும், லேசான பச்சையும் கலந்த இலைகள். குட்டிக்குட்டியாய் இப்போதுதான் பிறந்த பச்சிளம் குழந்தையைப் போல் இருக்கின்றன.

உன்,

திவ்யா.

ஆமாம், உன்னிடம் ஒன்று கேட்க வேண்டும். என்னை உனக்கு நேரில் பிடிக்குமா?

## 16. ஒரு பத்திரிகைச் செய்தி

நான் அதனால் அவனைக் குத்துகிறேன்; நான் செல்வச் சூனியத்தால் அவனைச் சோதிக்கிறேன்; அவனை நிர்மூலத்தால் மாய்க்கிறேன்; அவனைத் துக்கத்தால் படுத்துகிறேன், கிராகியால் கொய்கிறேன்; அவனை நான் இருளால் குத்துகிறேன்.

-அதர்வ வேதம், காண்டம்: 16

ஸூக்தம் : ஸம்ஹாரம் ; ஸ்லோகம் :1

இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு கொலை வழக்காக மாறிய தற்கொலை வழக்கு: 2 பேர் கைது!

காரைக்குடி: காரைக்குடி அருகே தற்கொலை செய்து கொண்டதாகப் பதிவு செய்யப்பட்ட வழக்கு இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு கொலை வழக்காக மாற்றப்பட்டு இரண்டு பேர் கைது செய்யப்பட்டனர்.

காரைக்குடி அருகே கே.அழகாபுரி என்ற ஊரில் மருதன் என்பவரின் இடத்தை அதே ஊரைச் சேர்ந்த நெல்லியான் 15 ஆண்டுகளுக்கு முன்பு விலைக்கு வாங்கினார். பெயிண்டர் தொழில் புரியும் நெல்லியான் பின்னர் குடும்பத்துடன் திருச்சிக்குச் சென்றுவிட்டார். இதைத் தங்களுக்கு சாதகமாக்கிக்கொண்ட அதே ஊரைச் சேர்ந்த ரியல் எஸ்டேட் தொழில் செய்யும் சகோதரர்கள் சுப்ரமணி (51). அழகப்பன் (39) ஆகியோர் நெல்லியானின் இடத்தை மீண்டும் மருதனிடம் பேசி வேறு ஒரு நபருக்கு விற்றுள்ளனர். இதைக் கேள்விப்பட்ட நெல்லியான் தனது குடும்பத்தைத் திருச்சியில் விட்டுவிட்டு தனது இடத்தில் குடிசை போட்டுள்ளார். அதையடுத்து அந்த இடத்தை விலைக்கு வாங்கிய நபர் சுப்பிரமணியிடம் முறையிட்டுள்ளார். தொழிலில் நன்கு வளர்ந்து வரும் நேரத்தில் இந்தச் சிக்கலை எதிர்பார்க்காத சகோதரர்கள் இருவரும் கடந்த 2002ஆம் ஆண்டு

குடிசைக்குள் தனியாகத் தூங்கிக்கொண்டிருந்த நெல்லியானின் கழுத்தைக் கட்டையால் அழுத்திக் கொலை செய்து, பிணத்தைத் தூக்கில் மாட்டிவிட்டுத் தப்பியோடினர். நெல்லியான் தற்கொலை செய்துகொண்டதாகப் போலீசார் வழக்குப் பதிவு செய்தனர். ஆனால் பிரேதப் பரிசோதனை அறிக்கையில் அவர் கழுத்து நெரிக்கப்பட்டு கொலை செய்யப்பட்டிருப்பதாகக் கூறப்பட்டது. அதையடுத்து பள்ளத்தூர் இன்ஸ்பெக்டர் (பொறுப்பு) மற்றும் எஸ்.ஐ இருவரும் தீவிர விசாரணையில் இறங்கினர். பெயிண்டரைக் கொலை செய்ததாக அண்ணன் தம்பிகள் இருவரையும் கைது செய்து ரிமாண்டிற்கு அனுப்பி வைத்தனர். கைது செய்யப்பட்டவர்களில் அண்ணன் சுப்ரமணி சமையல் வேலை செய்கிறார். தம்பி அழகப்பன் அரசு போக்குவரத்துக் கழகத்தில் பணிபுரிகிறார். இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு இவ்வழக்கில் இரண்டு பேர் கைது செய்யப்பட்டது குறிப்பிடத்தக்கது.

செலின் எழுதிய பெண் படுகொலை பற்றிய பத்திரிகைச் செய்தி:

> காரைக்குடி அருகே பெண் படுகொலைக்கான காரணம் குறித்து போலீஸார் விசாரித்து வருகின்றனர். காரைக்குடி - அரியக்குடி ரோட்டில் தொல்காப்பியர் நகரில் வசிப்பவர் தைனீஸ் ஆரோக்கிய செல்வி (35). இவரது கணவர் சிங்கப்பூரில் உள்ளார். நேற்று முன்தினம் இவரது வீட்டிற்கு எதிரே உள்ள தோப்பிற்குப் புல் பறிக்கச் சென்ற இவர் ஒரு குடிசை வீட்டிற்குள் அரை நிர்வாண நிலையில் பிணமாகக் கிடந்தார். கழுத்தில் நைலான் கயிற்றால் இறுக்கப்பட்டு, முகத்தில் பலத்த காயமடைந்த நிலையில் பிணமாகக் கிடந்த இவரது உடலுக்கு அருகிலேயே காலி மது பாட்டிலும், ஆண்கள் அணியும் உள்ளாடையும் கிடந்தது. இவரது சாவிற்குக் கள்ளக்காதல் காரணமா என போலீஸார் விசாரித்து வருகின்றனர்.

இச்சம்பவம் பற்றி செலின் எனக்கு எழுதியது:

சாமான்ய மனிதர்களைப் பற்றிய போலீஸின் அணுகுமுறை எவ்வளவு குரூரமாக உள்ளது என்று பாருங்கள். போலீஸ் கருதுவதுபோல் கள்ள உறவு இருந்திருந்தால், கொலையின் காரணம் என்னவாக இருக்கும்? இந்தக் கொலையை ஒரு கும்பலே சேர்ந்து செய்திருக்கிறது என்றுதான் மக்கள் சந்தேகப்படுகின்றனர். காரணம்: அந்தப் பெண்ணின் முகம் படுமோசமாக சிதைக்கப்பட்டிருக்கிறது. உடம்பிலிருந்த நகைகள் கொள்ளையடிக்கப்பட்டுவிட்டன. அவர்களின் நோக்கம், அப்பெண்ணின் அடையாளத்தை அழித்துவிட வேண்டும் என்பதாகவே இருந்துள்ளது. அதனால்தான் அவர் முகம் அவ்வளவு மோசமாகச் சிதைக்கப்பட்டு, கண்களும் பிடுங்கப்பட்டுள்ளன. அந்தப் பெண்மணி வழக்கம் போலவேதான் சுள்ளி பொறுக்குவதற்காக அந்தத் தோப்புக்குச் சென்றிருக்கிறார். பொதுவாக மற்ற பெண்களும் செல்வதுண்டு. அன்றைக்கு என்று பார்த்து அவரோடு வேறு யாரும் செல்லவில்லை.

அந்தக் குடிசையில் யாரும் குடியிருக்கவில்லை. அந்தத் தோப்பின் காவலாளிதான் அவ்வப்போது அதில் தங்குவது.

கொலைக்கும், வன்கலவிக்கும் போலீஸ் யூகித்திருக்கும் காரணத்திற்கான முகாந்திரம் என்ன? எந்த அடிப்படையில் இது கள்ளக்காதல் என்று அவர்கள் முடிவுக்கு வந்தார்கள்? இது அந்தப் பெண்ணின் பெயருக்கும்

அந்தக் குடும்பத்திற்கும் எவ்வளவு பெரிய களங்கத்தை உண்டுபண்ணும் என்பது போலீஸாருக்குத் தெரியாதா?

ஒரு பெண் தன்து குழந்தையுடன் தனியாக இருக்கிறார். கணவர் வெகு தொலைவில் சிங்கப்பூரில் வேலை பார்க்கிறார். பெண்ணின் உடல் அரை நிர்வாண நிலையில் ஒரு குடிசையில் கிடக்கிறது. பக்கத்தில் ஒரு ஆணின் உள்ளாடை. மது பாட்டில். எனவே, இது கள்ளக் காதலாகத்தான் இருக்கும் என்று முடிவுக்கு வந்திருக்கின்றனர் போலீஸார். சரி, அவர்களிடம் பிரேதப் பரிசோதனை முடிவு இருக்கிறதா? கொலையாளிகளைப் பற்றிய துப்பு கிடைத்துள்ளதா? அந்தப் பெண்ணுக்கு சமீபத்தில்தான் குழந்தை பிறந்துள்ளது என்பதாவது போலீஸாருக்குத் தெரியுமா? குற்றவாளிகளைப் பிடிக்காமல் வெறும் யூகத்தின் அடிப்படையில் இப்படி ஒரு அபாண்டத்தை அந்தப் பெண்மணியின் மேல் சுமத்தி பத்திரிகைகளுக்குச் செய்தி கொடுத்திருக்கும் போலீஸாரின் பொறுப்பின்மையை என்னவென்று சொல்வது? இந்தச் செய்தியால் அக்குடும்பம் எவ்வளவு தூரம் பாதிக்கப்பட்டிருக்கும்? போலீஸாரின் யூகம் தவறென்று நிரூபிக்கப்பட்டால், இழந்துபோன குடும்ப கௌரவத்துக்கு அவர்களால் நஷ்ட ஈடு வழங்க முடியுமா? இத்தகைய ஆட்களால் எப்படி குற்றவாளிகளைப் பிடிக்க முடியும்?

முதல் கேஸைப் பாருங்கள். ஆரம்பத்தில் அது தற்கொலை என்பதாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. ஆனால் பிரேதப் பரிசோதனை அறிக்கையோ வேறு மாதிரி கூறுகிறது. இரண்டு ஆண்டுகள் கழித்து திடீரென்று இது கொலை வழக்காக மாற்றப்பட்டு இரண்டு பேர் கைது செய்யப்படுகின்றனர். அப்படியானால், பிரேதப் பரிசோதனை அறிக்கை ‘இது ஒரு கொலை’ என்று கூறியும் இரண்டு வருடமாக போலீஸார் என்ன செய்துகொண்டிருந்தனர்? நல்லவேளை, இந்த வழக்கில் கொலை செய்யப்பட்டது ஒரு ஆண். பெண்ணாக இருந்திருந்தால், கள்ளக் காதலால் நடந்த தற்கொலை என்று கேஸை முடித்திருப்பார்கள்.

## 17. 143

நீ ஒஜஸூ : எனக்கு ஒஜஸை அளி : சுவாஹா!

நீ சக்தி : எனக்குச் சக்தியை அளி : சுவாஹா!

நீ பலம் : எனக்குப் பலத்தை அளி : சுவாஹா!

நீ ஆயுஸூ : எனக்கு ஆயுஸை அளி : சுவாஹா!

நீ செவி : எனக்குச் செவியை அளி : சுவாஹா!

நீ கண் : எனக்குக் கண்ணை அளி : சுவாஹா!

நீ பெருந்துணை : எனக்குப் பெருந்துணையை அளி : சுவாஹா!

-அதர்வ வேதம்; காண்டம்: 2

ஸூக்தம்: 18 - துதி; ஸ்லோகம்: 1 - 7

ஒரு நாள் மணியிடம் ‘ஒன் ஃபோர் த்ரீ ன்னா என்ன?’ என்று கேட்டேன்.

‘எதற்குக் கேட்கிறாய்?’ என்றான் மணி. ‘இல்லை... வந்து... வந்து...’ என்று மென்று விழுங்கிவிட்டு ‘ஒரு பெண் எனக்கு மெயில் அனுப்பியிருக்கிறாள் ‘பெருமாள் 143’ என்று. எனக்கு ஒன்றும் புரியவில்லை’ என்றேன். மணி தலையில் அடித்துக் கொண்டான். 143 என்றால் I Love You என்று அர்த்தமாம். கேட்டதும் ‘சரி, நான் வருகிறேன்’ என்று அவசரமாகப் புறப்பட்டேன். அந்தப் பெண்ணைத்தான் சந்திக்கச் செல்கிறேன் என்று நினைத்துக்கொண்டது பீச் கோஷ்டி.

மறுநாள் அவர்களுக்கு எல்லா விபரமும் புரிந்தது: அந்தப் பெண்ணை நான் சந்தித்ததே இல்லை; அவள் அமெரிக்காவில் இருக்கிறாள்; கணினியின் வழியே கனிந்த காதல்; முந்தின தினம் நான் அவசரமாக ஓடியது கணினி மையத்துக்குத்தான் என்று. ஒரு வருடம் நட்பாக இருந்தது பின்னர் காதலாக மாறிவிட்டது. எப்படி? ‘யாருக்குத் தெரியும்?’ ஒரு வருடமாக சார் என்று அழைத்துக்கொண்டிருந்தாள். பிறகு? வாடா, போடா.

சந்திக்கும்போதெல்லாம் இந்தக் கதையைச் சொல்வேன். மணியும் ஆர்வத்துடன் கேட்டுக்கொண்டிருப்பான். ஒரு நாள் சொன்னேன், ‘என்ன இருந்தாலும் இது ஒரு ஸைபர் உறவுதானே?’ என்று. இப்படித்தான் ஒரு சண்டையின்போது (அவ்வப்போது சண்டையும் போட்டுக்கொள்வோம்) குட்பை சொல்லிவிட்டேன். என்ன ஆயிற்று தெரியுமா? இரண்டு நாள் அழுதாள் பார். அப்படி ஒரு அழுகை. இப்போது எனக்கு ஸைபர் என்கிற வார்த்தையைக் கேட்டாலே பயமாக இருக்கிறது. இன்னொரு நாள் இன்னொரு சண்டையின்போது மறுபடியும் குட்பை சொல்லிவிட்டேன். மயக்கம் போட்டு விழுந்து மூன்று நாள் ஆஸ்பத்திரியில் கிடந்திருக்கிறாள். அந்த நிலைமையிலும் அவளுடைய மெயில் இல்லாததால் நான் என்ன நினைப்பேனோ என்றுதான் கவலைப்பட்டுக்கொண்டிருந்தாளாம். அந்தச் சம்பவத்துக்குப் பிறகு எக்காரணத்தைக் கொண்டும் அந்த வார்த்தையை அவளிடம் பிரயோகிப்பதில்லை என்று சத்தியம் செய்திருக்கிறேன்.

## 18. Good Bye!

ஸீட்டின் கைப்பிடி மேலிருந்த அவள் கை மீது படுகிறாற்போல் என் கையை வைத்துக்கொண்டேன். அவள் எதுவுமே நடக்காதது போலத் திரையையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

(அ) அவளுக்கு ஆட்சேபணையில்லாமல் இருக்கலாம்.

(ஆ) அவளுக்குப் பிடிக்கவில்லை, ஆனால் உடனே கையை விலக்கி என்னைப் புண்படுத்த வேண்டாமென்று கையை அப்படியே வைத்துக்கொண்டிருக்கிறாள்.

(இ) ஒருவேளை தற்செயலாக என் கை அந்த நிலையில் இருப்பதாக நினைத்து என் அடுத்த இயக்கத்துக்காகக் காத்திருக்கிறாள்.

(ஈ) கை தொடப்படுவது அவளுக்குப் பெரிய விஷயமேயில்லை. நான் வேறு எதையாவது தொட வேண்டும், அல்லது பேசாமலிருக்க வேண்டும்.

ஆனால் என் தைரியத்தின் எல்லை கையைத் தொடுவதாகத்தான்

இருந்தது. சில நிமிடங்களுக்குப் பிறகு இந்தத் தைரியமும் தணிந்துவிட, நான் என் கையை விலக்கி வைத்துக்கொண்டேன்.

- ஆதவன்: என் பெயர் ராமசேஷன்

நீதானே சொன்னாய், மெயில் அனுப்பக்கூடாது என்று. நீ பெரிய இவன். நான் உன்னைத் தொந்தரவு செய்ய விரும்பவில்லை. அதனால்தான் யாஹூ மெஸஞ்சர் மூலம் இதை அனுப்பு கிறேன். எப்படி நீ குட் பை சொல்லலாம். ஓகே. நான் மெயில் அனுப்புவேன்தான். நீ block பண்ணிக்கொள். Ignoreஐப் பயன் படுத்திக்கொள். நீ இப்படிச் சொன்னதற்காக பிறகு நிச்சயம் ஸாரி கேட்பாய். யாருக்கு வேண்டும் உன் ஸாரி? இதற்குத்தான் நான் யாரிடமும் நெருங்கிப் பழகுவதில்லை. ம்... என்ன செய்வேன்? என்ன, குட்பையா? இப்படி நீ சொல்வது இரண்டாவது தடவை.

என்னைத் திமிர் பிடித்தவள் என்று எல்லோரும் சொல்வார்கள். உன்னிடம்தான் நான் அதையெல்லாம் காண்பிக்காமல் ஒரு அடிமையைப்போல் நடந்துகொள்கிறேன். உனக்கு ஞாபகமிருக்கிறதா? ஒரு நாள் ‘சாட்டின்’போது சொன்னேன், நீ உட்கார் என்றால் உட்காருவேன், நில் என்றால் நிற்பேன் என்று. நீ உடனே நில் என்றாய். நின்றேன். உட்கார் என்றாய். உட்கார்ந்தேன். இப்படியே மாற்றி மாற்றி நில், உட்கார், நில், உட்கார் என்று பத்து நிமிடம் போல் சொல்லிக் கொண்டிருந்தாய். நானும் அசரவில்லை. அப்போது நீ மணிக்கணக்கில் சொல்லியிருந் தாலும் நான் அப்படித்தான் செய்திருப்பேன். அப்போது மட்டுமல்ல, எப்போதும்தான். நீ என்ன சொன்னாலும் நான் செய்வேன். இதை உனக்கு நான் எத்தனை முறை சொல்லியிருக் கிறேன்?

அப்புறம்தான் கடைசியாக நீ சொன்னாய். நான் எழுந்து நிற்கும் போது வெப்கேமில் என்னுடைய --------- தெரிகிறது; அதைப் பார்க்கத்தான் அப்படிச் சொன்னாய் என்று. வெட்கம் கெட்டவனே. உனக்காக நான் அன்று போட்டிருந்த ஜீன்ஸைக் கூட கழற்றிப் போட்டிருப்பேன். வேண்டாம். நீ என்னை நேரில் பார்க்க வேண்டும்; நேரில் அனுபவிக்க வேண்டும் என்றுதான் அதைச் செய்யவில்லை. இடியட். எப்படி இருந்த நான் இப்படி வெட்கம் கெட்டுப் போய் விட்டேன் பார். நீ குட்பை சொல்லியும் சிறிதும் வெட்கமில்லாமல் உன்னிடம் வந்து காலில் விழுகிறேன் பார்.

எனக்கு ஒரு சந்தேகம்... நீ ஏன் என்னை விரும்பினாய்? இப்போது நீ குட்பை சொல்லும் அளவுக்கு நான் என்ன தவறாக நடந்து கொண்டுவிட்டேன்? அப்படி உண்மையிலேயே அது தவறாக இருந்தால் அது என் மனசாட்சியை உறுத்த வேண்டுமே?

இதெல்லாம் உனக்குப் புரியாது. பல முறை நீ என்னைக் காயப்படுத்தியிருக்கிறாய். ஆனால் நான் என்றுமே குட்பை சொன்னதில்லை. இப்போது நீ குட்பை சொன்னபோதுகூட உன்னை நினைத்து எனக்கு ஒரு சின்ன சந்தோஷம்தான்; உனக்கு இனிமேல் நிறைய நேரம் கிடைக்கும். என் பொருட்டு உன் நேரத்தை வீணடிக்க வேண்டாம். நிறைய படிக்கலாம்; எழுதலாம்.

பெருமாள், Are you serious? நீ இனிமேல் மெயில் அனுப்பச் சொன்னால்தான் மெயில் அனுப்புவேன். எனக்கும் கோபம்தான். ஆனால் நான் குட்பை சொல்ல மாட்டேன். குட்பை சொல்ல உனக்கு எந்த உரிமையும் கிடையாது.

ஏனென்றால் முதல் முதலில் நான்தான் உனக்கு ஐ லவ் யூ சொன்னேன்.

இந்த மெஸேஜ் தொந்தரவாக இருந்தால் மன்னித்துவிடு. ஒரு அலையன்ஸ் வந்தது. நான் வேண்டாம் என்று சொல்லிவிட்டேன். முடியவில்லை. ஓ.கே. பை...

## 19. பூஜ்யமும் ஒன்றும்

ஒரு ராஜாவுக்கு ஒரு சந்தேகம். அந்த சந்தேகத்தை நிவர்த்தி செய்து வைப்பவருக்கு ராஜ்யத்தில் பாதியைத் தருவதாகச் சொல்கிறான் ராஜா. ஆனால் தவறான பதிலைச் சொன்னால் தலை துண்டிக்கப்படும். தலை பயத்தினால் ராஜாவை அணுகி அவனுடைய சந்தேகத்தைப் போக்க யாரும் முன்வரவில்லை. பார்த்தான் ராஜா. இப்படியே போனால் ஒரு ஆத்மாவும் தன் சந்தேகத்தை நிவர்த்திக்கப்போவதில்லை என்பதை உணர்ந்து மந்திரியை விளித்து ‘இன்று சூர்யாஸ்தமனத்துக்குள் ஒரு அறிஞன் என் சந்தேகத்துக்குப் பதில் சொல்லியாக வேண்டும். இல்லாவிட்டால் உம்முடைய உடம்பில் தலை இருக்காது’ என்று கூறிவிட்டான்.

ஆனால் ராஜாவின் முன்னால் வருவதற்கு ஒரு அறிஞப் பயலுக்கும் ‘தில்’ இல்லை. பயத்தில் மந்திரிக்கு மூத்திரம் வந்துவிட்டது. மூத்திரத்தை அடக்கிக்கொண்டு ‘தலையைத் தக்க வைத்துக்கொள்ள என்ன பண்ணலாம்?’ என்று யோசித்தான். கடைசியில் ஒரு தந்திரம் செய்து ஊர்க் கடைசியில் சென்று அங்கே வெறும் கோவணத்துடன் ஆடு மேய்த்துகொண்டிருந்த ஒருவனை அழைத்துக்கொண்டு வந்து ராஜாவின் முன்னே நிறுத்தினான்.

ராஜா அவனிடம் தன் ஆட்காட்டி விரலைக் காட்டினான். பதிலுக்கு ஆடு மேய்ப்பவன் இரண்டு விரல்களைக் காட்டினான். உடனே ராஜா தன் ஆட்காட்டி விரலால் காற்றில் ஒரு வட்டம் வரைந்தான். அதற்குப் பதிலாக ஆடு மேய்ப்பவன் செய்த செயல் சபையோரை அதிர்ச்சியில் ஆழ்த்தியது. அப்படி அவன் செய்த காரியம்; ராஜாவுக்குத் தன் கோவணத்தை அவிழ்த்துக் காட்டியதே!

ஆனால் அதற்குப் பதிலாக ராஜா செய்த காரியம் சபையோரை ஆச்சரியத்தின் எல்லைக்கே கொண்டுபோய்விட்டது. ராஜா ஆடு மேய்ப்பவனின் செயலால் ஆரவாரித்து தன் ராஜ்யத்தில் பாதியை அவனுக்குத் தந்துவிட்டதாக அறிவித்தான்.

மந்திரிக்கு ஒரே குழப்பம். ராஜாவிடமே கேட்டுவிடலாம் என்று துணிந்து, அவர் தனியாக இருக்கும்போது கேட்டான்.

ராஜா விளக்கினான். ‘இந்த உலக வாழ்க்கைக்கு ஆதாரமாக இருக்கும் விஷயம் ஒன்று உண்டு. உனக்குத் தெரியுமா?’ என்று அவனிடம் சைகையால் கேட்டேன். அதற்கு அவன் ‘ஒன்று அல்ல, இரண்டு’ என்றான். நான் ‘அந்த இரண்டாவது என்ன? பெண்குறிதானே?’ என்று சைகையால் கேட்டேன். உடனே அவன் ‘இன்னும் என்ன சந்தேகம்? அதேதான்’ என்பதாகத் தன் ஆண்குறியைக் காட்டினான். என் சந்தேகமும் தீர்ந்தது. இந்த உலக வாழ்வின் ஆதாரமாக இருப்பது, இரண்டு விஷயங்கள்; அது, ஆண் பெண் இரு பாலரின்

ஜனனேந்திரியங்கள்.'

மந்திரிக்கு ஒரு மாதிரியாக இருந்தது. அந்த இடையன் இவ்வளவு பெரிய அறிஞனா என்று ஐயமுற்ற அவன், அவனிடமே கேட்டுவிடுவோம் என்று எண்ணி அவனைப் பார்த்துக் கேட்டான். அப்போது அந்த ஆடு மேய்ப்பவன் கூறியதாவது; ராஜா என்னிடம் விருந்துக்காக ஒரு ஆடு கேட்டார். ராஜாவே கேட்கும்போது ஒன்றுக்கு இரண்டாகக் கொடுப்போமே என்று நினைத்து 'இரண்டு ஆடுகள் தருகிறேன்' என்றேன். அவரோ என்னை இளிச்சவாயன் என்று நினைத்துக்கொண்டு எல்லா ஆட்டையும் கேட்டார். எனக்குக் கோபம் வந்துவிட்டது. அதனால்தான் கடுப்புடன் கோவணத்தை அவிழ்த்துக் காட்டினேன்.

-ஒரு தமிழ்நாட்டு கிராமியக் கதை.

அவளுக்கு செக்ஸ் பற்றி எதுவுமே தெரியவில்லை. நான் ஏதாவது செக்ஸ் ஜோக் சொன்னால் ஜோக் முடிந்த பிறகும் 'ம்' கொட்டிக்கொண்டிருக்கிறாள். அதைவிட கொடுமை, அந்த ஜோக்குக்கு அர்த்தம் வேறு கேட்கிறாள்.

என்னிடம் வெட்காம் இல்லை. அவளிடம் இருந்தது. ஒரு நாள் அவள் என்னிடம் 'உனக்கு சைகை பாஷை தெரியுமா?' என்று கேட்டாள். நான் தெரியாது என்று சொல்ல, 'நான் சொல்லித் தருகிறேன், இதோ பார்' என்று சொல்லி கட்டைவிரல் மற்றும் ஆட்காட்டி விரல் இரண்டையும் 'எல்' வடிவத்தில் காட்டி 'இது என்ன?' என்று கேட்டாள். ஒன்றும் புரியவில்லை. பிறகு அவள் 'டேய் மடையா, இது என்ன எழுத்து? எல். எல் என்றால் லவ்' என்று விளக்கினாள். இதே போல் மேலும் இரண்டு மூன்று சைகை பாஷைகளை அவள் சொல்ல அதுவும் எனக்குப் புரியவில்லை.

'இரு, நான் உன்னைக் கொஞ்சம் கவனிக்கிறேன்' என்று மனசுக்குள் நினைத்துக்கொண்டு 'நான் ஒரு சைகை பாஷை சொல்கிறேன், கேள்' என்றேன்.

'முதலில் உன் இடது கையை எடுத்துக்கொள்.'

'ம்.'

'கட்டை விரலையும் ஆள்காட்டி விரலையும் சேர்'.

'ம்.'

'என்ன, ஸீரோ மாதிரி தெரிகிறதா?'

'ஆமாம்.'

'இப்போது உன் வலது கையை எடு.'

'ம்.'

'ஆட்காட்டி விரலை அந்த பூஜ்யத்துக்குள் விடு.'

'ம்.'

'புரிகிறதா?'

‘இல்லையே.’

வெப்காம் மூலம் பார்த்துக்கொண்டேயிருக்கிறேன். ஒன்றும் புரியாமல் இரண்டு மூன்று முறை அப்படிச் செய்து பார்க்கிறாள். என்னால் சிரிப்பை அடக்கமுடியவில்லை. இருந்தாலும் இன்னும் கொஞ்சம் வேடிக்கை பார்க்கத் தோன்றியது.

‘சரி, என்ன அர்த்தம் சொல்லு’ என்றாள்.

‘உன் தோழிகள் யாரையாவது கேள்.’

‘ம்ஹூம். நீ ஒரு கேடி. ஏதாவது தப்பு அர்த்தம் இருக்கும். என்னை மாட்ட வைக்கப் பார்ப்பாய்.’

‘சே சே... அதெல்லாம் இல்லை கண்ணே. நல்ல அர்த்தம்தான். சத்தியமாகக் கெட்ட அர்த்தமே இல்லை.’

‘உன்னை நம்ப மாட்டேன். நீயே சொல்லு.’

சொன்னேன் அவ்வளவுதான். ஐந்து நிமிடம் சிரித்தாள். சிரித்துச் சிரித்து இருவருக்கும் கண்கள் கலங்கிவிட்டன.

பிறகு அந்த சைகையை மறுபடியும் செய்துகாட்டச் சொன்னேன். அவள் மறுத்துவிட்டாள். உரையாடல் தொடர்ந்தது. வழக்கம்போல் ஐந்து ஆறு மணி நேரம் பேசிவிட்டுப் பிரியும் போது கடைசி நிமிடத்தில் நான் சற்றும் எதிர்பாராத விதத்தில் அவள் அந்த விரல் சைகையைச் செய்து காட்டினாள். அந்தத் தருணத்தை இன்னமும் என்னால் மறக்க முடியவில்லை.

## 20. முதல் சந்திப்பு

வருசங்க வீதிதன்னில் வசந்தபூங் கோதை காலில்
இரு பந்து குதிகொண்டாட இருபந்து முலைகொண்டாட
ஒரு பந்து கைகொண்டாட ஒருசெப்பில் ஐந்து பந்துந்
தெரிகொண்டு வித்தை ஆடுஞ் சித்திரை யெதிர் கொண்டாளே

-திரிகூடராசப்பக் கவிராயர் : திருக்குற்றாலக் குறவஞ்சி

ஒருநாள் அவளிடம் கேட்டேன். ‘நம்முடைய முதல் சந்திப்பு எப்படி இருக்கும்?’

‘எந்த இடத்தில் சந்திக்கிறோம்?’

‘பீச்சில் என்று வைத்துக்கொள்ளேன்.’

‘ஓ...’

‘என்னைப் பார்த்து என்ன செய்வாய்?’

‘முதலில் ஹாய் சொல்லுவேன்.’

‘அப்புறம்?’

‘நீயும் ஹாய் சொல்லுவாய்.’

‘ம்... வெரி குட்.’

‘நான் உடனே ஹவ் ஆர் யூ என்று கேட்பேன்.’

‘ஆஹா!’

‘நீயும் கேட்பாய்.’

‘அடடா... அப்புறம்?’

‘பிறகு நான் மீரா எப்படி இருக்காங்க. அழைச்சுக்கிட்டு வரலியான்னு கேட்பேன்.’

‘ம்...’

‘நீ உடனே சண்டை போட ஆரம்பிச்சுடுவே.’

‘ஓ...’

‘யா... நமக்குத்தான் சண்டை போடுறது கைவந்த கலையாச்சே?’

‘கரெக்ட்.’

‘அப்புறம் நீ சொல்வாய்...’

‘ம்...’

‘கேள்.’

‘ம்...’

‘நான் எவ்வளவு பிஸியான ஆள் தெரியுமா? எனக்காக எத்தனை பேர் காத்திருக்கிறார்கள் தெரியுமா? ஆனால் உனக்குத்தான் அப்பாய்ண்ட்மெண்ட் கொடுத்திருக்கிறேன். நீ சரியான வேஸ்ட் என்று திட்டுவாய். உடனே எனக்கு ஜிவ்வென்று ஏறும்.’

‘என்ன ஏறும்?’

‘எரிச்சல்.’

‘அடடா...’

‘கிளம்பிப் போய்விடுவாயா?’

‘சீ சீ... நான் ஏன் போகிறேன்? நான் சொல்லுவேன். போ போ யார் வெயிட் பண்றாங்களோ அங்கே போய் பேசுன்னு சொல்லுவேன். எனக்கு பீச் என்றால் ரொம்பப் பிடிக்கும் தெரியுமா?’

‘ஆஹா.’

‘அதனால் நான் மட்டும் கடல் அருகில் போய் நின்றுகொண்டிருப்பேன். சந்தோஷமாக இருக்கும். அப்புறம் பீச்சில் உள்ள சிப்பி அது, இதுன்னு பொறுக்குவேன். சரியா?’

‘ம்...’

‘பிறகு கால் வலிக்கும். அதனால் அலைகள் கரையைத் தொடும் இடத்தில் வந்து உட்கார்ந்து கடலையே பார்த்துக்கொண்டிருப்பேன். பிறகு நீ வந்து ஸாரி கேட்பாய். நீ ரொம்ப ஸ்பெஷல்னு விளக்கம் சொல்வாய்.’

‘அடடா...’

‘அப்போ நான் என்ன பண்ணுவேன் தெரியுமா?’

‘சொல்லு கண்ணே.’

‘ஓங்கி ஒரு அறைடா உனக்கு... இடியட்.’

‘ம்... இன்ட்ரஸ்டிங். அப்புறம்?’

‘அந்த நேரத்தில் அங்கே பலூன் விற்றால் வாங்குவேன். அப்புறம் அதை காற்றில் பறக்க விடுவேன். பிறகு அங்கே குழந்தைகள் இருந்தால் கூப்பிட்டுக் கொடுப்பேன். கொஞ்ச நேரம் அதுகளோடு விளையாடுவேன்.’

‘ம்...’

‘நீ மறுபடியும் மூஞ்சைத் தூக்கி வைத்துக்கொண்டு இருப்பாயா? நான் பாட்டுக்கு அதைக் கண்டுகொள்ளாமல் ஏய் வா டைம் ஆயிடுச்சு, இப்படி குளிரில் உட்கார்ந்து உடம்பைக் கெடுத்துக் கொள்ளாதே என்று சொல்லி உன்னை அழைத்துக்கொண்டு கிளம்புவேன்.’

‘ம்.’

‘பிறகு நான் உன் எழுத்து பற்றி பேசுவேன். உன் புகைப்படங்களையெல்லாம் பார்ப்பேன். பிறகு உன் வீட்டுக்கு வந்து மீராவையும் பார்த்துவிட்டு... அப்புறம் என்ன? அவ்வளவுதான்.’

‘உன் கால்ல பிஞ்ச செருப்பு இருக்கான்னு கொஞ்சம் சொல்லு.’

‘ஏன் டியர். அடிச்சுக்கப் போறியா?’

‘இல்லை. உன் கையில் கொடுத்து என்னை அடிக்கச் சொல்லலாம் என்றுதான்.’

‘இல்லை டியர். பீச் என்றால் இவ்வளவுதான் எனக்குத் தெரியும். இதுவரை இதைத்தான் நான் செய்திருக்கிறேன்.’

‘குட். குட்.’

‘ஏய், எனக்குத் தெரிந்ததைச் சொன்னேன்.’

‘ம்...’

‘மகாபலிபுரம் பீச்சில் மீன் வறுப்பான் அல்லவா? அது எனக்கு ரொம்பப் பிடிக்கும். ஆனால் என் வீட்டில் வாங்கித் தரமாட்டார்கள். அது நல்லதில்லை என்று சொல்லி. அதனால் ஒரு ஆசை, அதை வாங்கிச் சாப்பிட வேண்டும் என்று.’

‘நான் வாங்கித் தருகிறேன்.’

‘அப்புறம் எனக்கு பலூன் என்றால் கொள்ளை ஆசை. கை நிறைய பலூன் இருக்கவேண்டும். பிரமாதமாக இருக்கும் தெரியுமா?’

‘ம்ஹூம். இது சரிப்பட்டு வராது. இன்னொரு பெண்ணைத்தான் நான் தேட வேண்டும்.’

‘googleலில் போய் தேடிப்பார்.’

‘என்னால் சின்னப் பசங்களோடு எல்லாம் பீச்சுக்குப் போக முடியாது.’

‘நீயும் வேண்டுமானால் இதையெல்லாம் செய்து பார். சுவாரசியமாக

இருக்கும். அப்புறம், சுண்டல் வாங்கிச் சாப்பிட வேண்டும். மறந்து விட்டேன். அதற்கும் எங்கள் வீட்டில் தடை.'

'உன்னை ரேப் பண்ணுவதைத் தவிர வேறு வழியில்லை கண்ணே... அதிர்ச்சி வைத்தியம்தான் உனக்கு லாயக்கு என்று நினைக்கிறேன்.'

'பாவம் நீ... உனக்கு இப்படி ஒரு காதலி. பேசாமல் நீ என்னை ரேப் பண்ணிவிடு. உனக்கு அனுமதி கொடுத்துவிட்டேன்.'

'இல்லை செல்லம். இது எதுவுமே நடக்காது.'

'எது நடக்காது?'

'பலூன், சுண்டல், மீன் அதெல்லாம் உண்டு.'

'அப்படியானால் கவலை இல்லை.'

'ஆனால் நீ சொன்ன மற்ற எதுவும் நடக்காது.'

'மற்ற எதுவுமா? அப்படியென்றால்?'

'ஹாய் சொல்லுவேன் என்று சொன்னாய் அல்லவா? ஆனால் அதுக்கு முன்னாடி பாய்ந்து வந்து உன்னை கிஸ் அடிச்சிடுவேன் உதட்டில். எங்கே நீ ஹாய் சொல்றது.'

'ஓ... பந்தயம்.'

'பந்தயம்.'

'ஆனால் பீச்சில் நிறைய பேர் இருப்பார்களே?'

'அவர்கள் ரொம்ப பிஸியாக இருப்பார்கள்.'

'நீ சொன்ன மாதிரி பிஸியா?'

'ஆமாம். அப்புறம் கேள். முத்தம்னா அப்படி இப்படி இல்லை. ஒரு பத்து நிமிட முத்தம். நீ மயக்கம் போட்டு விழுந்துவிடுவாய். உடனே நான் உனக்கு சோடா வாங்கிக் கொடுத்து எழுப்பிவிட்டு மீன் வாங்கிக் கொடுத்து... ஒரு விஷயம்... நம் காதல் கதையில் நமக்கு வசனம் கிடையாது. ஏனென்றால் ஒரு நூறு ஆண்டுக்கால அளவுக்கு இந்த சாட்டில் நாம் பேசிவிட்டோம். பேச்சு போதும் கண்ணே. இனி பேச்சு வேண்டாம். நம் தேகங்கள் பேசட்டும். என் உதட்டிலிருந்து இனி வார்த்தைகள் வராது. அதற்கு வேறு வேலை இருக்கிறது.'

'ம்... ஐ லவ் யூ டார்லிங்.'

'சரி. நீ சொல்லிவிட்டாய் பீச் கதையை. நான் சொல்லவா?'

'ம்.'

'முதலில் ஹாய் சொல்லுவேன். பிறகு உனக்கு கை கொடுப்பேன். அப்புறம் உன்னை அழைத்துச் சென்று என் பீச் நண்பர்களுக்கு அறிமுகம் செய்து வைப்பேன். அவர்கள் என்னைக் குடிப்பதற்கு அழைப்பார்கள். நான் நரேனைக் கூப்பிட்டு 'ஒரு உதவி செய்ய வேண்டும் நண்பா, பைக் வேண்டாம். இந்தப் பெண் என்னைத் தவிர வேறு யார் பைக்கிலும் ஏற மாட்டாள். அதனால் ஒரு ஆட்டோ பிடித்து இவளை இவள் வீட்டில் விட்டுவிட்டு வா' என்று சொல்லுவேன். நீ அவனுடன் கிளம்பும்போது

மீண்டும் கைகுலுக்கி உன்னை அனுப்பி வைப்பேன்.’

‘அடிதான் வாங்குவாய். என்னை என்ன பேக்குன்னு நினைச்சியா?’

‘அது மட்டுமல்ல. நீ கிளம்பும்போது உன் தோளில் லேசாக, அன்பாக ஒரு தட்டி பெட்டர் லக் நெக்ஸ்ட் டைம் என்று சொல்லுவேன்.’

‘ஏய் நிறுத்து. இடியட்.’

‘சரி. நிறுத்திவிட்டேன்... செல்லம், எனக்கு ஒரு யோசனை.’

‘என்ன, சொல்லு.’

‘நாம் முதல் முதலில் எங்கே சந்திப்பது என்று.’

‘ஆமாம். யோசித்து வை.’

‘தனிமையான இடமாக இருக்கவேண்டும்.’

‘அமைதியான இடமாகவும் இருக்க வேண்டும்.’

‘ஒன்று செய்யலாம்.’

‘என்ன, ஓடிப்போய்விடலாமா?’

‘உத்தமமான காரியம்.’

‘எங்காவது மலைப்பிரதேசமாகப் போய்விடலாம்.’

‘ஆனால் சொல்லாமல் ஓடிப்போகக் கூடாது.’

‘ஆமாம். அதுதான் சரி. நீ மீராவிடம் சொல்லிவிட்டு வா. நான் என் அம்மா அப்பாவிடம் சொல்லிவிட்டு வருகிறேன்.’

‘ஏய், எனக்கு ஒரு ஆசை...’

‘என்ன?’

‘சொன்னால் திட்டுவாயே.’

‘பீடிகை போடாமல் சொல்வது.’

‘நான் சிகரெட் குடிக்கும்போது உனக்கும் ஒரு இழுப்பு கொடுக்க வேண்டுமென்று ஆசை...’

‘சே, இவ்வளவுதானா? எனக்கே ஆசைதான் அடிச்சுப் பார்க்கணும் என்று.’

‘அடப்பாவி...’

‘ம்... சொல்றதெல்லாம் நீ. ஆனால் நான் பாவியா?’

‘செல்லம், ஏன்டி என்னை இப்படிப் பைத்தியமாக்கி வேடிக்கை பார்க்கிறாய்? இது உனக்கே நல்லா இருக்கா?’

‘நானும் உன்னிடம் இதைத்தான் கேட்க வேண்டும் என்று நினைத்தேன்.’

‘ஏய், ரொம்ப தாகமா இருக்கு...’

‘வெயிட் பண்றேன். போய் தண்ணி குடிச்சிட்டு வா.’

‘அது அவ்வளவு சுலபமில்லையே. 1300 டாலர் வேணுமே?’

‘ஏய், என்ன சொல்றே நீ? ஏதாவது ஸ்பெஷல் ப்ராண்ட் விஸ்கியா?’

‘விஸ்கியைவிட உயர்ந்த திரவம்... குடித்தால் செம போதை வரும்.’

‘ஓ...’

‘இப்போது கொடுப்பாயா?’

‘ரொம்ப அனுபவிச்சு சொல்றே?’

‘ஆமாண்டீ... உன் vaginal juice அல்லவா? அதனால்தான்.’

‘ஏய்... ச்சீய்ய்ய்ய்ய்ய்... அசிங்கம் பிடித்தவனே...’

## 21. சான்ஸே இல்லை

> What finally frightens you and throws you into disorder is the knowledge that desire makes you its victim... Desire throws identity into turmoil: you cannot buy your way out.
>
> Ken Hollings : In the Slaughterhouse of Love

எங்கள் பீச் கோஷ்டியில் எப்போதாவது வந்து சேர்ந்து கொள்ளும் ஒருவன் : மணி ரத்னம். இயக்குனர் மணி ரத்னம் அல்ல. இவனுடைய தோற்றம் இயக்குனர் மணி ரத்னத்தின் தோற்றத்தை அச்சு அசலாக ஒத்திருந்ததால் அதே பெயர் இவனுக்கு நிலைத்துவிட்டது. இயக்குனர் மணி ரத்னத்துக்கும் இவனுக்கும் உள்ள வித்தியாசம்; நிறம். இயக்குனர் மணி ரத்னம் மாநிறம் என்றால் இவன் தங்கத்தை உருக்கியதுபோல் ஜொலிப்பான்.

மணி ரத்னத்துக்கு பாண்டிச்சேரியில் ஒரு தோழி. நேரில் சந்தித்ததில்லை. ஆனால் மணிக்கணக்கில் ஃபோனில் பேசிக்கொள்வார்கள். என்னதான் பேசுவார்களோ தெரியாது. அப்படி ஒரு பேச்சு. பீச்சில் அப்போதுதான் முதல் சுற்று ஓடிக்கொண்டிருக்கும். மணி ரத்னத்துக்கு ஃபோன் வரும். ‘இதோ ஒரு நிமிஷம்’ என்று சொல்லிவிட்டுத் தனியே செல்வான். அவ்வளவுதான், பத்தரை மணிக்கு எல்லோரும் கிளம்பும்போதுதான் வருவான் - முகத்தில் அசடு வழிய. இந்தக் கதை இப்படியே சென்றுகொண்டிருந்தபோது ஒரு நாள், மணி ரத்னம் வழக்கம்போல் கைத்தொலைபேசியுடன் தனியாகச் செல்லாமல் நண்பர்களோடு சேர்ந்து குடித்துக் கொண்டிருந்தான். என்ன ஆயிற்று என்று கேட்டேன். கைத்தொலைபேசியைக் காட்டினான். நிறுத்தப்பட்டிருந்தது. பிறகு அவன் சொல்லிய கதை இது:

அவள் பெயர் சந்தனா. பாண்டிச்சேரியில் ஜிப்மர் மாணவி. மூன்றாம் ஆண்டு. சந்தனாவுக்கும் அவள் தோழிகளுக்கும் ஒரு பொழுது போக்கு என்னவென்றால் தொலைபேசியில் வெளியூர் எண்களைக் கூப்பிட்டு ஆண் குரல் கேட்டால் பேசுவது. குரலில் இனிமையும் சிநேகபாவமும் தெரிந்தால் தொடர்ந்து பேசுவது. அதுபோல் ஏற்பட்டதே சந்தனா - மணி ரத்னம் நட்பு. மணி ரத்னத்துக்கு ஏக ‘கிக்.’ மருத்துவம் பயிலும் மாணவி - நிச்சயம் மேல்தட்டு வர்க்கமாகத்தான் இருக்க வேண்டும். பெயர் வேறு கனவுப் பெயர். சந்தனா. How sweet! பெயர் மட்டுமல்ல. குரலும் அப்படித்தான். நிலா, நிலா, நிலா. (மூன்று முறை சொன்னான் மணி ரத்னம்) ஐயாவுக்கு போதை தலைக்கேறிவிட்டது.

‘ஏய் செல்லம், எப்போடீ நாம் சந்திப்பது?’

‘சென்னை வரும்போது சந்திப்போம்... ஆனால் ரத்னம், சென்னை பாய்ஸ்

எல்லாம் எப்படி?’

‘ஏன் கேட்கிறாய்?’

‘இங்கே பாண்டியில் என்னால் வெளியே தலைகாட்டவே முடியவில்லை.’

‘ஏன்?’

‘இந்த பாய்ஸ் பண்ற லொள்ளுதான். பின்னாலேயே துரத்துறானுங்க. நான் வேற மாடர்னா ஜீன்ஸ், ஸ்கர்ட்னு போடுவனா. அவ்வளவுதான். பின்னால் ஒரு பட்டாளமே வருது.’

‘ஓ... ஜீன்ஸ்லாம் போடுவியா?’

‘சரியா போச்சு. ஸ்கர்ட்கூட போடுவேன். எப்பவும் மாடர்ன் ட்ரஸ்தான்.’

இதே ரீதியில் பேசிக்கொண்டிருந்ததால், கிட்டத்தட்ட டயானா ரேஞ்ஜூக்குக் கற்பனை செய்துவிட்டான் மணி ரத்னம்.

இப்படியே சில மாதங்கள் கழிந்தபிறகு - ஒரு நாள் அவள் சென்னை வருவதால், சந்திப்பதென்று இருவரும் முடிவு செய்திருக்கிறார்கள். முடிவு செய்த பின்னர் இரண்டு நாட்களாகத் தன்னை தயார் செய்திருக்கிறான் மணி ரத்னம் - அதுவும் அலுவலகத்துக்கு லீவு போட்டுவிட்டு, முதலில் ஃபேஷியல். பிறகு ஜிம்முக்குப்போய் ஆவிக் குளியல். இருப்பதிலேயே மிகச் சிறந்த ஆடையைத் தேடியெடுத்து அதற்குத் தானே இஸ்திரி போட்டிருக்கிறான். அப்படியும் திருப்தி வராமல் ‘கலர் ப்ளஸ்’ கடைக்குப் போய் ஒரு டி ஷர்ட். ‘ஆஹா.. எதை எதையோ செய்துவிட்டு ஒரு முக்கியமான காரியத்தை மறந்துவிட்டோமே’ என்று முடி வெட்டும் கடைக்குச் சென்று முடியை வெட்டிக்கொண்டிருக்கிறான். மீசையைக் கொஞ்சம் சின்னதாக்கு ப்ரதர். (பெரிதாக இருந்தால் இரண்டு வயது கூடுதலாகத் தெரிகிறதாம்) வீட்டுக்கு வந்து முகத்தை சோதித்ததில் புருவத்தில் ஒரு முடி பெரிதாக வளர்ந்து தனியாகத் தெரிய, அதைக் கத்திரிக்கோலால் வெட்டியிருக்கிறான். உடனே மணி ரத்னத்தின் மனைவி (ஆம், அவனுக்குத் திருமணமாகி குழந்தையும் இருக்கிறது.) ‘என்ன பாவா... (மணி ரத்னம் தெலுங்குக்காரன்.) லேடீஸ் மாதிரி புருவத்தையெல்லாம் ட்ரிம் பண்றீங்க?’ என்று வியந்துபோய் கேட்டிருக்கிறாள்.

இப்படியே இரண்டு நாட்கள் போனதே தெரியாமல் போயிருக்கிறது. ஷூவுக்கு பாலிஷ்கூட போட்டிருக்கிறான். முதன்முதலாகப் பார்க்கப்போகிறோம். அடையாளம் தெரியாது. எனவே உடை அடையாளங்களைப் பற்றி பரஸ்பரம் தெரிவித்துக்கொண்டார்கள். மணி ரத்னம் - ப்ளூ ஜீன்ஸ். இள மஞ்சள் டி ஷர்ட். இயக்குனர் மணி ரத்னம் கண்ணாடி. பஜாஜ் எலிமினேட்டர் பைக். (விலை எண்பதாயிரம்!) சந்தனா கறுப்பு ஜீன்ஸ். வெள்ளை டி ஷர்ட்.

‘ஸ்கர்ட்டில் வாயேன்.’

‘அது நீ பாண்டிச்சேரி வரும்போது.’

மூன்றாம் நாள் வந்தது. தலைக்கு ஷாம்பூ போட்டு குளித்தான் மணி ரத்னம். புதிதாக வாங்கி பீரோவில் வைத்திருந்த ‘கலர் ப்ளஸ்’ டி-ஷர்ட்டை மீண்டும் ஒரு முறை இஸ்திரி போட்டான். எல்லாவற்றையும் விட ஒரு முக்கியமான விஷயம் - வாழ்விலேயே முதல் முறையாக ஷூவை ப்ரஷ்

பண்ணினான். உதயம் தியேட்டர் வாசலில் காலை பத்து மணிக்குச் சந்திப்பதாக ஏற்பாடு. ஆனால் சந்திப்பு அரை மணி நேரம்தான்.

‘என்னடீ இது. ஆசை காட்டி மோசம் பண்றே? ஈவ்னிங் வரை என்னுடன் இருக்கக் கூடாதா?’

‘நோ, நோ. ஃப்ரண்ட்ஸோடு வந்திருக்கேன். பிச்சுப் புடுவாங்க. நீ பாண்டிச்சேரி வா. ஃபுல் கால்ஷீட் தர்ரேன்.’

சே... வெறும் அரை மணி நேரம். என்ன பேச முடியும்? இருந்தாலும் மணி ரத்னத்துக்கு ஒரு நம்பிக்கை. கொஞ்சம் பேசிப் பேசி ஒப்புக் கொள்ள வைத்துவிடலாம். பார்ப்போம். முயற்சித் திருவினையாக்கும்.

‘ம்... அப்புறம் என்ன ஆச்சு மணி ரத்னம். சீக்கிரம் சொல்டா?’ என்று கேட்டேன், ஆர்வம் தாங்காமல்.

அவன் விரிவாகச் சொன்ன பதிலை ஒரே வரியில் சொல்லிவிடலாம்.

எத்தியோப்பிய அகதிகளைத் தொலைக்காட்சியில் பார்க்கிறோமே... அந்த மாதிரி இருந்திருக்கிறாள் மிஸ். சந்தனா, மூன்றாம் ஆண்டு எம்.பி.பி.எஸ். கறுப்பும் அழகுதான். நிறத்தைப் பற்றி மணி ரத்னத்துக்கு யாதொரு தவறான எண்ணமும் இல்லை. ஆனால் என்ன ஒரு வறட்சியான தோல்! கையெல்லாம் செம்பட்டை முடி வேறு... உதடுகளுக்கு நடுவே இரண்டு ஓரங்களிலும் வெடிப்பு.

‘36 - 26 - 36?’ - இது நான்.

‘அட நீ வேற, வயித்தெறிச்சலைக் கிளப்பாதடா. 20 - 20 - 20. போ’ என்று எரிந்து விழுந்தான் மணி ரத்னம்.

‘ஓ... ’ என்று இழுத்தேன்.

‘எனக்கு என்ன ஆச்சரியம் என்றால் அவளுடைய தன்னம்பிக்கை... தன்னை அவள் கண்ணாடியிலேயே பார்த்துக்கொண்டதில்லையா? எப்படியெல்லாம் பேசினாள் தெரியுமா?’

இதற்கிடையில் மணி ரத்னத்துக்கு மற்றொரு கவலை. பீச் நண்பர்கள் யாராவது பார்த்துவிட்டால் நம் மானம் கப்பலேறிவிடும் என்று. கேர்ள் ஃப்ரெண்ட் என்றும் சொல்ல முடியாது. மச்சினி என்றும் சொல்ல முடியாது. கூட வேலை பார்ப்பவள்? ம்ஹூம். சான்ஸே இல்லை.

இருக்கும் அரை மணி நேரத்தில் எங்கே ஒளியலாம் என்பதே மணி ரத்னத்தின் அப்போதைய பிரச்னையாக இருந்திருக்கிறது. பக்கத்திலிருந்த சரவண பவன் ஓட்டலில் ஏ.சி அறையில் தஞ்சம் புகுந்திருக்கிறான். அங்கே அந்த நேரத்தில் கூட்டம் வருவதற்கு வாய்ப்பு இல்லை. ஒரு காப்பி குடித்தால் அரை மணி நேரம் சடுதியில் பறந்துவிடும்.

ஆனால் இந்த சந்தனாவுக்கு (பெயரைப் பாரேன்...) என்ன ஆயிற்று? இவ்வளவு நேரம் அரை மணி நேரம்தான் இருக்க முடியும் என்று சொல்லிக்கொண்டிருந்தவள் இப்போது மாலை வரை இருக்கலாம் என்கிறாள். இந்த திடீர் மன மாற்றத்திற்குக் காரணம் என்ன? மணி ரத்னத்துக்குப் புரியவில்லை.

ஆனால் எப்படியோ சமாளித்துக் கிளம்பிவிட்டான். சொல்லி

முடித்துவிட்டு ‘யாரிடமும் சொல்லிவிடாதே பெருமாள்’ என்று கேட்டுக்கொண்டான்.

ரகசியத்தை எப்படி வெளியே சொல்லாமல் இருக்க முடியும்? எனவே மணி ரத்னம் சொன்ன விஷயம் உடனடியாக மற்ற நண்பர்களிடமும் தெரிவிக்கப்பட்டது. பதிலுக்கு மணி ஒரு கதை சொன்னான்: அதாவது, அவனுக்கும் இதேபோல் ஒரு முறை நடந்துள்ளது. ஆனால் ஆசாமி இந்த விஷயத்தில் பழம் தின்று கொட்டை போட்டவன் ஆயிற்றே? அதனால் மணி ரத்னத்தைப் போல் மாட்டிக்கொள்ளவில்லை.

முதல் சந்திப்பு ஸ்பென்ஸர் வாசல்.

என் உயரம் ஐந்தடி நான்கு அங்குலம் (உண்மையில் ஆறடி.) குறுந்தாடி வைத்திருப்பேன். (உண்மை: மீசை இல்லாத மழிக்கப்பட்ட முகம்.)

பைக்கில் வருவேன். புல்லட். (உண்மை: ஸொனாட்டா கார்.) கறுப்பு நிற டி ஷர்ட் (வெள்ளை முழுக்கைச் சட்டை.)

அம்மணி பைக்கில் செல்பவர்களைத் தீவிரமாக நோட்டம் விட்டுக் கொண்டிருக்க ஹாயாக நடை பயின்று சென்று பெண்மணியைப் பார்த்து பயந்துபோய் (மல்யுத்த வீரனைப் போல் இருந்தாளாம்!) விழுந்தடித்துக்கொண்டு ஓடி வந்திருக்கிறான்.

பின்குறிப்பு: சான்ஸே இல்லை என்ற தலைப்பின் பின்னணி?

சிலருக்கு சில மேனரிஸம் உண்டு. அப்படி சிலர் ஒரு குறிப்பிட்ட வார்த்தையை அடிக்கொரு தடவை பயன்படுத்துவதை நீங்கள் கண்டிருக்கலாம். என்னுடைய வார்த்தை: அச்சா. சந்தனாவின் வார்த்தை: சான்ஸே இல்லை.

முதல் முறை மணி ரத்னம் அவளிடம் நாம் எப்போது நேரில் சந்திக்கலாம் என்று கேட்டபோது அவள் சொன்ன பதில்.

சான்ஸே இல்லை.

பின்னங்கால் பிடறியில் பட அவளிடமிருந்து தப்பியோடி வந்தபோது சந்தனா சொல்லியிருக்கிறாள்: சீக்கிரம் பாண்டிச்சேரி வா என்று.

‘சான்ஸே இல்லை என்று மனதிற்குள் சொல்லிக் கொண்டேன்’ என்றான் மணி ரத்னம்.

வீட்டுக்கு வந்து மீராவிடம் இந்தக் கதையைச் சொன்னேன். அவள் காலையில் மணி ரத்னத்துக்கு ஃபோன் போட்டு ‘சான்ஸே இல்லை’ என்று சொல்ல, ‘ஐயோ வதினை உங்க கிட்டேயும் சொல்லிவிட்டானா?’ என்று அலறினானாம்.

பிறகு ஒரு நாள் இந்த இரண்டு கதைகளையும் சந்திரிகாவிடம் சொல்லிக்கொண்டிருந்தேன். சந்திரிகாவின் உண்மையான பெயர், மற்ற விபரங்கள் ஏதும் எனக்குத் தெரியாது. எனக்கு சற்று ஈகோ உண்டு என்பதால் இது பற்றிக் கேட்டு அலட்டிக்கொள்வதில்லை. கதைகளைக் கேட்டுவிட்டு மிக வருத்தத்துடன் ‘அடடா’ என்றாள் சந்திரிகா.

‘ஏன், என்ன விஷயம்?’ என்றேன்.

‘நானும் அடிக்கொரு தடவை சான்ஸே இல்லை என்றுதான் சொல்வேன்.’

22. I am crazy of you...

True desire exists in the inescapable presence of unbearable loss. It invests the object with such high value that its absence becomes painful. The fear of this possible loss demands that the object of desire be experienced to the point of exhaustion.

Ken Hollings: In the Slaughterhouse of Love.

‘நீ வீட்டை விட்டு வெளியே சென்றாலே எனக்கு ஏதோ பயமாக இருக்கிறது’ என்று சொல்லிக்கொண்டிருந்தாள் திவ்யா.

‘முட்டாள்’ என்று திட்டினேன். அவள் பொருட்படுத்தவில்லை. சான்ஃப்ரான்ஸிஸ்கோ வளைகுடாவிலிருந்து ஃபோன் வந்துகொண்டேயிருந்தது.

‘பெருமாள், ஒரு நல்ல யோசனை...’

‘என்ன?’

‘வீட்டை விட்டு நீ கிளம்பும்போது எனக்கு ஒரு மெயில் கொடு. பிறகு வெளியிலிருந்து ஒரு மெயில். பிறகு வீட்டுக்குத் திரும்பியவுடன் ஒரு மெயில்...’

‘நீ என்ன பைத்தியமா திவ்யா?’

‘உன் மேல் பைத்தியம். உன் எழுத்தின் மேல் பைத்தியம். உனக்கு எதுவும் ஆகிவிடக்கூடாது. மனசுக்குள் ஏதோ உறுத்திக்கொண்டே இருக்கிறது...’

## 23. முகம்

> With a screech of highenergy radiation brighter than a million billion suns, a pair of stars in a faraway galaxy collided two billion years ago and disappeared into a black hole.
>
> That cataclysm, recorded by a battery of telescopes and Nasa satellites on July 9, has provided scientists with the answer to the last remainning piece of a 35 year old astronomical mystery, the origin of explosions that sporadically shower outer space with gamma rays, the most energetic and deadly form of electromagnetic radiation.
>
> The results suggest that the universe is peppered with the titanic collisions of the remnants of dead stars, either the dense cinders known as neutron stars or black holes too dense for even light to escape. Such a collision would result in a black hole, theorists said.

- தேதி கிழிந்த நியூயார்க் டைம்ஸ் இதழிலிருந்து.

தில்லித் திரைப்பட விழாவுக்கு சுமார் 25 ஆண்டுகளாகச் சென்று கொண்டிருக்கிறேன். அப்படிச் செல்லும் போதெல்லாம் நான் கவனித்த ஒரு விஷயம் இது: ஒரே நேரத்தில் நான்கு அல்லது ஐந்து படங்கள் திரையிடப்படும். இதில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துச் செல்லும்போது அங்கே ஒரு முதியவரைத் தவறாமல் பார்ப்பேன். நல்ல ஆஜானுபாகுவான உயரம். பஞ்சாபி. குடுமி வைத்திருப்பார். 70 வயதுக்கு மேல் இருக்கலாம். கம்பீரமான தோற்றம். ஆச்சரியம் என்னவென்றால், இந்த 25 ஆண்டுகளில் அவருடைய படத் தேர்வும், என்னுடைய தேர்வும் ஒன்றாகவே இருந்து வந்திருக்கிறது. படம் மட்டுமல்ல, இடமும்தான். அரங்கத்தின் முதல்

வரிசையில் மத்தியில் அமர்வதே என்னுடைய வழக்கம். அப்போதுதான் சிரமமில்லாமல் subtitlesஐப் படிக்க முடியும். அந்த முதியவரும் எனக்கு இரண்டு மூன்று இருக்கைகள் தள்ளி அமர்ந்திருப்பார்.

அவரைப் பற்றிய எந்த விபரமும் அறியாமலேயே அவருக்கும் எனக்கும் ஒரு பந்தம் ஏற்பட்டுவிட்டதுபோல் தோன்றியது.

***

சென்னையைப் பற்றி நம் ஸக்கரியா கூறும் எதையும் நம்பாதீர்கள். மனிதர்கள் மனோரம்மியமாக வாழ்வதற்குத் தேவையான எந்த வசதிகளும் இந்த நகரத்தில் இல்லை. முக்கியமாக, பொழுது போக்குவதற்கு ஏற்ற வசதி. மெரீனா பீச் இருக்கிறதே என்பார் ஸக்கரியா. ஆனால் சதா சர்வ காலமும் தென்னை மரம் அளவுக்கு உயர்ந்தெழுந்து அடிக்கும் ராட்சஸ அலைகளைப் பார்த்தால் மனிதனுக்கு மரணபயம் அல்லவா வரும்?

சென்னையில் இப்படி பொழுது போக்குவதற்கேற்ற இடம் ஏதும் இல்லாததால்தான் மக்கள் புத்தகச் சந்தையில் ஆயிரக்கணக்கில் கூடுகிறார்களே தவிர தமிழர்களுக்குப் புத்தகங்களின் மீது ஆர்வம் வந்துவிட்டது என்று சொல்வதில் சிறிதளவும் உண்மையில்லை.

அந்தச் சந்தையில் விற்கும் புத்தகங்களின் தலைப்பைப் பார்த்தாலே இது விளங்கிவிடும். 'நன்றாக சாம்பார் வைப்பது எப்படி?', 'பொது அறிவுக் கேள்விகள்', 'பிரபலமானவர்களின் விலாசம்', 'தியானம் செய்வது எப்படி?' - இன்னும் இதுபோல் ஆயிரக்கணக்கான தலைப்புகள். இந்தக் காரணத்தினால் இதுவரை சென்னை புத்தகச் சந்தைக்கு நான் போனதேயில்லை. ஒருமுறை என்னுடைய புத்தகங்கள் அங்கே விற்பனைக்கு வைக்கப்பட்டிருந்ததால் நான் அங்கே செல்ல நேர்ந்தது.

மூச்சைத் திணற வைக்கும் அந்தக் கூட்டத்தில் ஒரே ஒரு முகம் மட்டும் திரும்பத் திரும்ப என் பார்வையில் தென்பட்டது. பத்து கடைகளுக்கு ஒரு கடை என்ற ரீதியில்தான் சென்றுகொண்டிருந்தேன். அதிலும் சிறு பத்திரிகைகள் சம்பந்தப்பட்ட கடைகள் ஒவ்வொன்றிலும் அந்த முகத்தைப் பார்க்க நேர்ந்தது. கல்லூரி மாணவி என்று தெளிவாகவே தெரிந்தது. முதல் இரண்டு மூன்று கடைகளில் அசட்டையாகவே இருந்துவிட்டேன். ஆனால் தொடர்ந்து அதே முகம் தென்பட்டபோது அவரிடம் பேசத் தோன்றியது. சிறு பத்திரிகை எழுத்தாளர்கள் என்றாலே பொது ஜனங்களிடம் ஏதோ வினோத ஜந்துக்களைப் பார்ப்பது போன்ற ஒரு முகபாவம் ஏற்படுவதைக் கண்டிருக்கிறேன். ஆனால் இந்த முகத்தில் அப்படியான பாவம் ஏதும் இல்லை. வெகு சுவாதீனமாகப் புத்தகங்களையும், சிறு பத்திரிகை களையும் பார்த்துக்கொண்டிருந்தது அந்த முகம். யார் இவர்? கவிஞரா? இப்படியொரு அழகான முகத்தை பெண் கவிஞர்கள் பட்டியலில் பார்த்ததில்லையே? இப்படி நினைக்கும்போதே எனக்கு வேர்க்க ஆரம்பித்துவிட்டது. தமிழ்நாட்டுப் பெண்ணியவாதிகளைப் பற்றி நினைக்கும் போது எனக்கு இவ்வாறு வேர்ப்பது வழக்கம்.

சிறுபத்திரிகைச் சூழலில் முன்பெல்லாம் வாசகர் என்று தனியாக யாரும் கிடையாது. எழுபவரே வாசகர். வாசகரே எழுத்தாளர். இந்தப் பெண் வாசகியா? எழுத்தாளரா? வாசகி மட்டும்தான் என்றால் நிலைமை மாறி

வருகிறது என்று அர்த்தம்.

வெள்ளை சுடிதார். படு கவர்ச்சியான உருவம். சாந்தமான முகம். பேசிவிடலாமா என ஆர்வம் மேலிட்டது எனக்கு. என்னவென்று பேசுவது? ‘சே, என்ன இது சிறு பிள்ளையைப் போல்’ என்று நினைத்தபடி புத்தகச் சந்தையை விட்டு வெளியேற ஆரம்பித்தேன். வளைந்து நெளிந்து சென்றுகொண்டிருந்தது பாதை. இனிமேல் இந்தப் பக்கம் தலைகாட்டக்கூடாது என நினைத்துக்கொண்டேன்.

வெளியேறும் தருணத்தில் எனக்குத் தெரிந்த ஒரு புத்தகக் கடை. கடை வாசலில் நின்றுகொண்டிருந்தான் நண்பன் பாரி.

அவன் என்னிடம் க்ஷேமலாபம் விசாரித்துக்கொண்டிருக்கும் போதே ‘என்ன இது, இங்குமா?’ என வியக்குமாறு அங்கேயும் அந்த முகம். எதேச்சையாக என்னைப் பார்த்தபோது அந்த முகத்திலும் ஒரு வியப்பு. புன்முறுவல்? ம்ஹூம். என்னால் அனுமானிக்க முடியவில்லை. பாரியிடம் நடந்த விஷயத்தைச் சொன்னேன். கடைசியாக ‘அந்த முகம் இதோ இங்கே உன் கடையிலும்...’ என்றேன். ஆர்வத்துடன் ‘யாரது?’ என்று கேட்டான். யாருக்கும் தெரியாமல் எப்படிச் சுட்டிக் காண்பிப்பது என யோசிக்கும் வேளையில் வேறொரு நண்பர் அவனிடம் பேச வந்து விட்டார். நானும் புத்தகங்களைப் புரட்ட ஆரம்பித்தேன். சிறிது நேரம் சென்றிருக்கும். பாரியிடம் சொல்லிக்கொண்டு கிளம்பலாம் என்று தேடியபோது, அவன் அந்தப் பெண்ணோடு பேசிக்கொண்டிருந்தான். பிறகு என்னிடம் வந்த அவனிடம் ‘இந்த விஷயத்தைக் கேள்...’ என்று ஆரம்பித்தேன். ‘நீ என்ன சொல்லப் போகிறாய் என்று எனக்குத் தெரியும். இந்தப் பெண்ணைத்தானே குறிப்பிட்டாய்?’ என்று முந்தினான் பாரி.

‘ஓ... உனக்குத் தெரிந்த பெண்ணா?’

ம். உன்னைப் பற்றியும் சொன்னேன். அறிமுகப்படுத்தவா என்று கேட்டேன். ‘ஐயோ வேண்டாம், பயமாக இருக்கிறது’ என்று சொன்னாள்.’

இது எனக்கு அடிக்கடி கேட்டுப் பழகிய விஷயம்தான். புத்தகச் சந்தையைவிட்டு வெளியே வந்து அங்கிருந்த புல்தரையில் அமர்ந்தேன். அப்போது எனக்கு ஒரு முப்பதடி தூரத்தில் அமர்ந்திருந்தாள் அந்தப் பெண்.

சரி, பேசிவிட வேண்டியதுதான் எனத் தீர்மானித்தேன். கொஞ்ச நேரம் ஆகட்டும் என்று நினைத்தபடி, வாங்கி வந்த போகர் வைத்தியம் - 700 என்ற நூலைப் புரட்ட ஆரம்பித்தேன். கண்ணில் தென்பட்ட பக்கம் சுவாரசியமாக இருந்தது.

‘உலகத்தில் மக்கள் கழுதையை இழிவாகக் கருதுகிறார்கள். ஆனால் உண்மை அப்படியன்று. கழுதைப் பிறவி மாண்புடையதாகும். அதற்கு மறுபிறவி இல்லை. கழுதையைக் கொண்டு பற்பல வித்தைகளை உலகில் செய்து முடிக்க முடியும்.

உதாரணமாக, சுழல் வண்டு, குழியானை, மின்மினிப்பூச்சி, ஈப்புலி என்னும் பூச்சி, நாய்ப் பால், மருள் ஊமத்தை விதை, ஐவிரலிச்சாறு, பேய்க் கரும்பின் சாறு, செந்நெல் முளையரிசி, பாதரசம், கோரோசனை ஆகியவற்றைச் சம அளவு எடுத்துக் கல்வத்தில் இட்டு அதோடு கழுதையின் விந்தை எடுத்துச் சேர்த்து அரைக்க வேண்டும். இதனோடு சல்லிக் கொடியின் வேரையும் அரைத்துச் சேர்த்துக் குளிகையாகக் கட்டிக்கொள்ள வேண்டும்.

இக்குளிகையோடு பெண்ணை வசியம் செய்ய நினைப்பவனுடைய கண் பீளை, காதுக் குறும்பி, மூக்குச் சளி, எச்சில், வேர்வை ஆகிய ஐந்து அழுக்குகளையும் அவனுடைய விந்தையும் சேர்க்க வேண்டும். இவ்வாறு செய்யப்பட்ட குளிகையைப் பால், பழம், காய்கறி, சாப்பாடு, வெற்றிலைப் பாக்கு, பலகாரம் ஆகியவற்றுள் எதனுடனாவது சேர்த்துத் தனக்கு வேண்டியவளை உட்கொள்ளச் செய்தால் அவள் வசியமாவாள்...'

என்னவென்று சொல்ல முடியாத ஒரு உணர்வுடன் புத்தகத்தை மூடி வைத்துவிட்டு நிமிர்ந்தேன். அந்தப் பெண்ணைக் காணவில்லை.

## 24. காத்திருப்பீங்களா, மிஸ்?

'In becoming an object of desire you become flesh, without identity and without meaning. In extreme forms of erotic experience, you become meat.'

Ken Hollings : In the Slauthterhouse of Love.

சில மாணவர்கள் என்னைக் காதலித்தார்கள் தெரியுமா? இறுதி ஆண்டுக்கு - யு.ஜி. - என்னை வகுப்பு எடுக்கச் சொல்லிவிட்டார்கள். முதல் நாள். பயத்துடன் வகுப்புக்குள் நுழைந்தேன். ஊசி விழுந்தால் சத்தம் கேட்கும் என்பது போன்ற அமைதி. ஒரு நொடிதான். என் குரல் ஒலிக்க ஆரம்பித்ததும் சகஜமாகிவிட்டது. என் உருவத்துக்குச் சம்பந்தமில்லாத கம்பீரமான குரல். அத்தனை மாணவர்களையும் கட்டிப்போட்டுவிட்டது அந்தக் குரல். எண்பது பேர் இருப்பார்கள். எல்லாருமே பெரிய பையன்கள். வகுப்பு முடியும்வரை என்னையே வைத்த கண் வாங்காமல் உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

கல்லூரியில் எல்லா வகுப்புகளும் நான்தான் எடுக்க வேண்டும் என்று ஒரே போட்டி. நான் மிக நேர்த்தியாக ஆடை அணிவேன். ஒரு நாள்... தலை குளித்திருந்தேன். தலை பின்ன நேரம் இல்லை. தலைமுடி விரிந்து கிடந்தது. கருஞ்சிவப்பு நிறப் புடவை. நான் கரும்பலகையில் எழுதிக்கொண்டே இருந்தேன். பொதுவாக மாணவர்கள் முன்னே புடவைத் தலைப்பைப் பறக்க விட மாட்டேன். இதிலெல்லாம் நான் மிகவும் கண்டிப்பு. ஆனால் அன்றைக்கு என்று பார்த்து செருகியிருந்த புடவைத் தலைப்பு அவிழ்ந்துவிட்டது. மிகவும் வழுக்கிக்கொண்டு போகும் சேலை அது. அந்த வகுப்பில் குறும்பு செய்பவர்கள் அதிகம் என்று பேர். மற்ற ஆசிரியர்கள் அங்கே வகுப்பு எடுக்கவே தயங்குவார்கள். ஆனால் இதற்கெல்லாம் நான் சளைத்தவள் அல்ல. ரௌடி பாஷைதான் பேசுவேன்.

'உதாரணமாக?'

'ரொம்ப பேசாதடா, மூடிட்டு போ.'

'ஓ...'

சரி, கதையைக் கேள். அன்றைக்கு ஷாம்பூ போட்டு வேறு குளித்திருந்தேன். இடுப்புக்குக் கீழே இறங்கும் தலைமுடி. கற்பனை செய்துகொள். எனக்கே அன்றைக்கு என்னைப் பிடித்துப்போய்விட்டது. அப்போது ஒரு பையன் எழுந்து நின்று 'மேம்' என்று அழைத்து தன் கையிலிருந்த காகிதத்தைக் காண்பித்தான். எழுதுவதை நிறுத்திவிட்டு அவனருகில் சென்றேன். அந்தக்

காகிதத்தில் அச்சு அசலாக நான். அருமையாக வரைந்திருந்தான். பிறகு அவன் பாட்டுக்கு என்னென்னவோ பேச ஆரம்பித்துவிட்டான். வகுப்பே அதிர்ச்சியில் ஸ்தம்பித்துவிட்டது.

‘அப்படி என்னதான் சொன்னான்.’

‘நீங்கள் காத்திருப்பீர்களா?’ என்று கேட்டான். ‘நமக்குள் வயது வித்தியாசம் அதிகமில்லை. நான் நன்றாகப் படிக்கும் மாணவன். அதனால் சீக்கிரமே வேலை கிடைத்துவிடும்’ என்றான். நான் என்ன சொல்லியிருப்பேன் என்று நினைக்கிறாய்? சொல், பார்க்கலாம்.’

‘காத்திருக்கிறேன் என்று சொல்லியிருப்பாய்.’

‘சே... நீயும் உன் பதிலும். நான் என்ன சொன்னேன் தெரியுமா? நன்றாக வரைந்திருக்கிறாய் என்று பாராட்டினேன். பிறகு அவன் கையைப் பிடித்து ‘relax’ என்று சொன்னேன். ‘காத்திருக்கலாம், பிரச்னை இல்லை’ என்றேன்.’

‘ஏன் அப்படியே ஒரு டூயட் பாட வேண்டியதுதானே?’

‘சே. இடியட். நான் அவனுடைய குரு. அவன் என்னுடைய குழந்தையைப் போல. கேள்.’

‘ம்...’

‘நான் சொன்னேன்: ‘காத்திருக்கலாம். பிரச்னை இல்லை. ஆனால் அதற்கு முன்னால் இந்த Programmeஐ சரியாக எழுது பார்ப்போம்’. எல்லோருடைய முகத்திலும் அதிர்ச்சி. சட்டென்று அவன் ‘sorry mam’ என்று சொல்லிக்கொண்டே என் காலில் விழுந்துவிட்டான். பிறகு எழுந்து நின்று சொல்கிறான். ‘மேம்... ஆனால் என் மனைவி உங்களை மாதிரிதான் வர வேண்டும்.’ நான் சொன்னேன்... ‘ஓ.கே. நோ ப்ராப்ளம். என் பெண்ணையே உனக்குக் கட்டி வைக்கிறேன்.’ சொல்லிவிட்டு எதுவுமே நடக்காதது போல் வகுப்பை எடுக்க ஆரம்பித்துவிட்டேன். அந்தச் சம்பவத்திலிருந்து எனக்கு ஏக மரியாதை. ஆனால் அதற்குப் பிறகு அந்தப் புடவையை நான் கட்டுவதில்லை. இதை மட்டும் கல்லூரி முதல்வரிடம் சொல்லியிருந்தால் என்ன ஆகியிருக்கும்? அவனுக்கு டி.சி கொடுத்திருப்பார். சரி, கேள். விஷயம் இதோடு முடியவில்லை. ஒரு முப்பது நிமிடம் சென்றிருக்கும். இன்னொரு பையன் எழுந்து நின்று ‘மேம். யு ஆர் ரியலி சூபர்ப். நீங்கள் மாடலிங் செய்யலாம். நான் வேண்டு மானாலும் உங்களுக்கு ஒரு வெப்சைட் ஆரம்பிக்கிறேன். உங்கள் எக்ஸ்ப்ரஷன் பிரமாதமா இருக்கு’ என்று ஏதேதோ உளற ஆரம்பித்துவிட்டான். நான் என்ன சொல்லியிருப்பேன் என்று சொல்?’

‘ம்ஹூம். தெரியவில்லை.’

‘சரி, கேள். ‘செருப்பு பிஞ்சிடும்டா நாயே. முதலில் உன் அம்மாவை வைத்து வெப்சைட் க்ரியேட் பண்ணு. அதை நான் பார்த்துவிட்டு நன்றாக இருந்தால் சொல்லுகிறேன்.’ என்றேன். மாணவர்களுக்கு ஒரே குழப்பம். எல்லாம் நடந்து இப்போது இரண்டு வருடம் இருக்கும். பிறகு எல்லோரும் என்னை அக்கா என்று அழைக்க ஆரம்பித்தனர்.’

‘இப்படி இன்னொரு சம்பவம். என் மாணவன் ஒருவனுக்கு விபத்து நடந்துவிட்டது, பஸ்ஸில் போகும்போது.’

'ஃபுட் போர்டில் போனால் அப்படித்தான்.'

'சே. இடியட். என் மாணவர்கள் ஒன்றும் அப்படியில்லை. இவன் இறங்கும்போது பஸ்ஸை எடுத்துவிட்டான். எனக்கு மாதக் கடைசி. ஆஸ்பத்திரி செலவுக்காக ஆயிரம் ரூபாய் கடன் வாங்கிக்கொண்டு சாயங்காலம் அவனைப் பார்க்கப் போனேன். ஆட்டோவுக்கு இருபது ரூபாய். ப்ரெட், பழம் என்று வேறு செலவு. என் கையில் வெறும் ஐம்பது ரூபாய்தான் மிச்சம். அவன் இருந்த அறைக்குள் சென்றேன். எனக்கு மனசே தாங்கவில்லை. உள்ளே நுழைந்ததும் ஒரே அழுகை. தாங்கவே முடியவில்லை. பயங்கர அடி. அவன் கையில் 'ட்ரிப்ஸ்' ஏறிக்கொண்டிருந்தது. அவன் அம்மாவும் அப்பாவும் என்னைப் பார்த்துவிட்டு ஒரே அழுகை. உங்கள் ப்ரின்ஸிபால் வந்து பார்க்கவில்லை. அது இது என்று. உடனே அந்தப் பையன் எழுந்து 'குட் ஈவினிங் மேடம்' என்று சொல்லி என்னை 'விஷ்' பண்ணினான். சீரியஸ் கண்டிஷன். காலையிலிருந்து கண்ணே திறக்கவில்லையாம். எனக்கு எப்படி இருந்திருக்கும்? ஒரு நிமிடம் ஆடிப்போய்விட்டேன். அவன் அம்மாவிடம் பணத்தைக் கொடுத்தேன். பணத்தை வாங்காமல் 'அம்மா... நீ வந்து பார்த்ததே போதும். என் பையன் பிழைத்துக் கொள்வான். நீ ரொம்ப சின்ன பொண்ணா இருக்கே...' என்று சொல்லிக்கொண்டே அந்த அம்மா சட்டென்று என் காலில் விழுந்துவிட்டார்கள். 'உங்களைப் பற்றித்தான் என் பையன் சொல்லிக்கொண்டே இருப்பான்' என்றார் அவனுடைய அப்பா. ட்ரக் அடிக்ட் ஆனவர்கள், காதல் தோல்வி கேஸ் என்று இப்படி நிறைய பேரைக் காப்பாற்றியிருக்கிறேன். எத்தனை பெற்றோர் தெரியுமா என் கையைப் பிடித்துக்கொண்டு அழுதிருக்கிறார்கள்? எல்லாம் பழைய கதை...

ம்... இதோ இப்போது இந்த சான்ஃப்ரான்ஸிஸ்கோவில் என் அறையிலுள்ள மல்லிகைச் செடியில் ஒரு பூ மலர்ந்துகொண்டிருக்கிறது பெருமாள்...

## 25. எலக்ட்ரா

Daddy, I have had to kill you.

you died before I had time.

...

I was ten when they buried you.

At twenty I tried to die

And get back, back, back to you,

I thought even the bones would do.

Sylvia Plath : Daddy

நான் மணியிடம் திவ்யா பற்றி அடிக்கடி புலம்பும் மற்றொரு விஷயம் - திவ்யா என்னைத் தன் தந்தையின் பிம்பமாகவே காண்கிறாள் என்பது.

'இருந்தால் என்னடா? அவள் அப்பாவைப் போன்ற தோற்றம் உனக்கு இருக்கிறது. அதை அவள் சொல்கிறாள். அதற்கு ஏன் இப்படி விசனப்படுகிறாய்?'

‘இல்லை. அது மட்டும் இல்லை. இதைக் கேள். அவளுக்கு வறுத்த மீன் என்றால் மிகவும் பிடிக்கும். எனக்கும் பிடிக்கும். ஆனால் அவளுக்கு முள் எடுத்து சாப்பிடத் தெரியாது. நீ இந்தியா வரும்போது ஒரு நாள் உன்னைக் குமரகம் ரெஸ்டொரண்டுக்கு அழைத்துச் சென்று கறிமீனை (பொளிச்சது) முள் எடுத்து ஊட்டிவிட வேண்டும் என்று சொன்னேன். உடனே உருக்கமான குரலில் ‘உன்னை எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு பெருமாள்’ என்று சொன்னாள். ஆனால் அதையடுத்து அவள் என்ன சொன்னாள் தெரியுமா?’

‘சொல்லு...’

‘எங்கப்பா இந்த மாதிரிதான் எனக்கு மீனை முள் எடுத்து ஊட்டி விடுவாங்க என்று சொன்னாள். எனக்கு ஒரு கணம் துணுக்கென்றது. ஆனாலும் கண்டுகொள்ளவில்லை. ஏனென்றால் அவளுடைய அப்பாவைப் பற்றிக் குறிப்பிடாமல் அவளால் எந்த விஷயத்தையுமே பேச முடியாது என்று எனக்குத் தெரியும். இருந்தாலும் இப்படிச் சொல்லி வைத்தேன், குழந்தைகளுக்கு அம்மா அப்பாதானே அதெல்லாம் செய்ய வேண்டும் என்று. அதற்கு அவள் சொன்ன பதில் இருக்கிறதே... ஓ. ஜீஸஸ். எந்தக் காதலனுக்கும் அப்படி ஒரு நிலைமை வர வேண்டாம்.’

‘அப்படியா என்ன சொன்னாள்?’

‘குழந்தையாக இருக்கும்போது மட்டும் அல்ல. சென்ற ஆண்டுகூட அப்படி ஊட்டிவிட்டாராம். எப்படி இருக்கு கதை? இப்போது அவளுக்கு வயது 26. ஆக, ஒரு 25 வயதுப் பெண்ணுக்கு ஒரு தகப்பன் செய்யும் காரியத்தைப் பார். இப்படி எல்லாவற்றையும் இவரே செய்துவிட்டால் அப்புறம் நான் எதற்கு? குழந்தை பெறுவதற்கு மட்டுமா? Am I a surrogate? குழந்தை பெற்றுக்கொள்வது மட்டுமா காதல்?’

இன்னொரு முக்கிய சம்பவத்தையும் குறிப்பிடலாம். எனக்கு அப்போது ஐம்பது வயது என்றாலும் சற்று இளமையாகவே தோற்றமளிப்பேன். இது பற்றி ஏதோ பேச்சு வந்தபோது என் அப்பாவுடன் போகும்போது உங்கள் அண்ணனா என்று கேட்பார்கள். அதுவாவது பரவாயில்லை. ஒரு இடத்தில் ஏடாகூடமாகக் கேட்டுவிட்டார்கள். காரணம், அன்று நான் சேலை கட்டியிருந்தேன். அது மட்டுமல்ல, அவர் அவ்வளவு இளமையாக இருப்பார். அதிலிருந்து நான் அவர்கூடப் போகும்போது சேலை கட்டுவதேயில்லை. வெறும் ஜீன்ஸ், ஷர்ட் தான்’ என்று சொன்னாள்.

இன்னொரு சம்பவம். திவ்யாவுக்கு மூன்று அடிக்கு மேல் நீண்ட கூந்தல் உண்டு. ஒரு வெள்ளிக்கிழமை அன்று எண்ணெய் தேய்த்துக் குளித்திருக்கிறாள். ‘இவ்வளவு நீள கூந்தலைக் காய வைப்பதுதான் பிரச்னையாக இருக்கிறது பெருமாள்’ என்று சொல்ல, உடனே நான், ‘நீ இங்கே வரும்போது நானே உனக்கு எல்லாம் செய்துவிடுகிறேன். உன்னை நாற்காலியில் அமரச் செய்து உன் கூந்தலைத் தேங்காய்ப்பூ துவாலையால் துடைத்துவிட்டு, பிறகு, உனக்குப் பின்னே இரண்டு மோடாக்களை வைத்து அதன்மேல் கூந்தலை நீளவாக்கில் கிடத்தி அதன் கீழிருந்து சாம்பிராணி போட்டு உலர்த்திவிடுகிறேன்’ என்றேன். அதற்கு அவள் ‘சென்னை நகரத்தில் தீக்கங்களுக்கு எங்கே போவாய்?’ என்று கேட்க ‘கொட்டாங்கச்சிகளை எரித்து நெருப்புத் துண்டுகளை உண்டாக்கி அதை சம்புடத்தில் இட்டு உனக்கு சாம்பிராணி போட்டுவிடுவேன்’ என்றேன்.

அப்போது திவ்யா கூறிய ‘தங்க’ வார்த்தைகள்: ‘ஓ பெருமாள்... இதை எனக்கு என் அப்பாதான் செய்திருக்கிறார். இப்போது நீ செய்கிறாய்.’

ஒரு கணம் அவளை உதறிவிட்டு ஓடிவிடத் தோன்றியது எனக்கு. பிறகு ‘சே பாவம். அவள் ஒரு குழந்தை. அப்பன் செய்ததுக்கு அவளை எப்படி நொந்துகொள்ள முடியும்’ என்று என்னையே தேற்றிக்கொண்டேன். கடைசியில் வருத்தமாக நினைத்துக்கொண்டேன்: எல்லாவற்றையும் இந்தத் தகப்பன்களே செய்து தொலைத்துவிட்டால் பிறகு எனக்கெல்லாம் என்னதான் எஞ்சியிருக்கிறது?

இதேபோல் எனக்குப் பல முறை நடந்திருக்கிறது. அப்போது நான் தில்லியில் இருந்தேன். அங்கே எனக்கு ஒரு தோழி இருந்தாள். தமிழ்க் குடும்பம். ஆனால் அவள் தில்லியிலேயே பிறந்து வளர்ந்தவள். அவள் தந்தை பெரிய தொழிலதிபர். என் மாவட்டத்தைச் சேர்ந்தவர்.

அந்தத் தோழியும் என்னிடம் சொல்லுவாள். நீங்கள் என் அப்பாவைப் போலவே இருக்கிறீர்கள். அவரைப் போலவே பேசுகிறீர்கள். அதே குறும்பு. அதே நக்கல். அதே தந்திரம். அதே வார்த்தைகள். அதே... அதே... அதே...

ஒரு நாள் இரவு பதினோரு மணி. அவளுடன் தொலைபேசியில் பேசிக்கொண்டிருந்தேன். திடீரென்று பரபரப்புடன் ‘அப்பா வந்து விட்டார். நாளை பேசலாம்’ என்றாள். ‘அப்பா வந்தது உனக்கு எப்படித் தெரியும்?’ என்று கேட்டேன்.

அவசரம் என்பதால் ஒரே வார்த்தையில் ‘horn’ என்றாள். உடனே ஒரு கணம்கூட யோசிக்காமல் சட்டென்று ‘அப்பாவுக்குக் கொம்பு கூட உண்டா?’ என்று கேட்டேன்.

‘இருங்கள். அப்பாவிடம் சொல்லி உங்களை கவனிக்கச் சொல்கிறேன்’ என்று கூறி ஃபோனை வைத்துவிட்டாள்.

என்னுடைய சிலேடையை வெகுவாக ரசித்திருக்கிறாள் போலும். மறுநாள் ஃபோன் செய்து ‘அப்படியே அச்சு அசல் அப்பாவேதான் நீங்கள். அதே குறும்பு’ என்றாள்.

இது மட்டுமல்ல. பழக்கவழக்கங்களிலும்கூட நான் அவரைப் போலவே தான் இருக்கிறேனாம். இரவு மூன்று மணி வரைகூட படித்துக் கொண்டிருப்பாராம் அவர்.

எங்கள் ஊரில் குச்சுக்காரி என்று ஒரு வசை வார்த்தை உண்டு. அவ்வார்த்தையை நான் வேறு எங்குமே பழக்கத்தில் கேட்டதில்லை. சமீபத்தில் என் நண்பர் ஒருவரிடம் பேசிக்கொண்டிருந்தேன். அவர் என் தோழியின் தந்தையிடம் முன்பு நெருக்கமாக இருந்தவர். ஒரு நாள் அந்தத் தொழிலதிபர் கூறிய அவ்வார்த்தையின் பொருள் என் நண்பருக்குப் புரியவில்லை. அவரையேதான் கேட்டுத் தெரிந்து கொண்டிருக்கிறார். அந்த வார்த்தையை நான் ஒரு முறை பயன்படுத்தியபோது என் நண்பர் அந்தத் தொழிலதிபரிடமும் இதே வார்த்தையைக் கேட்ட கதையைக் கூறினார்.

முதிர்கன்னிப் பருவத்தில் இருந்தபோது என் தோழி ஒருவரை மணம் செய்துகொண்டாள். பின்னர் ஒரே வருடத்தில் விவாகரத்தும் செய்துவிட்டாள். காரணம் கேட்டபோது அவள் கூறியது: என் தந்தையைப் பிரிந்து என்னால் வாழ முடியவில்லை.

தில்லியில் இப்போது நாடகத் துறையில் தீவிரமாக இயங்கிக் கொண்டிருக்கிறாள் அந்தத் தோழி.

ஒரு நாள் மீராவுடன் ஒரு உணவு விடுதியில் அமர்ந்திருந்தேன். மீரா சாப்பிட்டுக்கொண்டிருந்தாள். நான் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன். (நான் வெளியே எங்கும் சைவ உணவு சாப்பிடும் வழக்கமில்லை.) எதிரே ஒரு இளம் பெண்ணும் ஒரு நடுத்தர வயது மனிதரும். அந்தப் பெண் கைத்தொலைபேசியில் தன் சகோதரியுடன் பேசிக் கொண்டிருந்தாள். ஒரு நொடியில் விஷயம் புரிந்துவிட்டது. இந்தப் பெண் சென்னையில் வேலை செய்து கொண்டு மகளிர் விடுதியில் தங்கியிருக்கிறாள். இவளைப் பார்க்க வெளியூரிலிருந்து வந்திருக்கிறார் தந்தை. இந்த ஊரில் இவளுடைய மூத்த சகோதரியைக் கல்யாணம் செய்து கொடுத்திருக்கிறது. பின் வருவது என்னைக் கவர்ந்த வசனம்:

‘அக்கா, தப்பா நினைச்சுக்காதீங்க அக்கா. அப்பா வந்ததும் உங்களுக்கு ஃபோன் பண்ணி உங்களையும் அழைச்சுக்கிட்டு வந்து லஞ்ச் சாப்பிடலாம்னுதான் திட்டம். ஆனா அப்பாவைப் பார்த்ததும் எல்லாம் மறந்துபோச்சு. அப்படியே வந்துட்டேன்.’

‘அப்பாவைப் பார்த்ததும் எல்லாம் மறந்துபோய்விட்டது’ என்ற வாக்கியத்தைச் சொன்னபோது அந்தப் பெண்ணின் குரலில் தெரிந்த உணர்ச்சிகளின் கலவை இருக்கிறதே. அதை வார்த்தைகளில் விளக்குவது கடினம்.

எனக்கு எலெக்ட்ராவின் கதை ஞாபகம் வந்தது. (அக்கதை தெரிந்தவர்கள் பின்வரும் சில பக்கங்களைப் புரட்டிவிட்டு மேலே சொல்லலாம்.)

இக்காவியத்தின் முக்கியப் பாத்திரமான எலெக்ட்ராவின் தந்தை பெயர் அகமெம்னான். தாய், க்ளேடெம்னெஸ்ட்ரா. எலெக்ட்ராவின் சகோதரன், ஓரிஸ்டிஸ். சகோதரி, க்ரிஸோதிமிஸ். அகமெம்னான் Mycenae தேசத்தின் அரசன். ட்ராய் போரில் ஈடுபடுகிறான். பத்து ஆண்டுகள் நீடிக்கிறது அப்போர். அதில் வெல்வதற்காக தன் மகள் இஃபிஜீனியாவை பலியிடுகிறான் அகமெம்னான்.

அகமெம்னான் ட்ராய் போரில் ஈடுபட்டிருந்தபோது அரண்மனையில் அரசி க்ளேடெம்னெஸ்ட்ரா எகிஸ்தஸ் என்பவனோடு கள்ள உறவு கொள்கிறாள். போரிலிருந்து வெற்றியுடன் திரும்பும் அகமெம்னானை ஏகிஸ்தஸை வைத்துக் கொன்றுவிடுகிறாள் க்ளேடெம்னெஸ்ட்ரா. சிறுவன் ஓரிஸ்டிஸ் தன் அம்மாவை வெறுத்து தன்னையே தேசப்ரஷ்டம் செய்துகொள்கிறான். காலம் செல்கிறது. எப்படியும் ஒரு நாள் திரும்பி வந்து நம் தந்தையைக் கொன்ற அம்மாவையும் அவளுடைய கள்ளக் காதலனையும் பழி வாங்கியே தீருவேன் என்று எலெக்ட்ராவுக்கு ரகசியமாகத் தூது அனுப்புகிறான் ஓரிஸ்டிஸ்.

சகோதரன் வருவான் எனக் காத்திருந்து காத்திருந்து கடைசியில் பொறுமையிழந்து கடவுளிடம் கதறுகிறாள் எலெக்ட்ரா. ‘என் தந்தையின் இடத்தில் வேறொருவன் கிடக்கும் அந்தப் படுக்கையை நினைத்தால் என் இதயத்தில் குருதி வடிகிறது. ரத்தக்கறை படிந்த என் வாழ்க்கையைப் பார். என் பிரார்த்தனைக்கு செவி சாய்த்து எனக்கு உதவி செய். என் சகோதரனை அனுப்பி வை. என் தந்தையைக் கொன்றவர்களை நான் பழிவாங்க

வேண்டும். என் மீது அழுத்தும் இந்த வேதனையை இனிமேலும் என்னால் தனியாகச் சுமப்பதற்கான வலிமை என்னிடம் இல்லை. எனக்குத் திருமணம் இல்லை. குழந்தை இல்லை. தனியாகவே என் சகோதரனுக்காகக் காத்திருக்கிறேன் - கண்ணீரில் மிதந்தபடி.'

'பொறு. காலம் எல்லாவற்றையும் சொஸ்தமாக்கும்' என்று அவளுக்கு அறிவுரை கூறுகின்றனர் ஊர்ப் பெரியோர்.

'பொறுத்துவிட்டேன். பொறுமையும் அவநம்பிக்கையாகவுமே என் காலம் கழிந்துவிட்டது. இனிமேலும் பொறுக்க முடியாது. இறந்தவர்களை எப்படி நாம் புறக்கணிக்க முடியும்? இறந்தவர்கள் குப்பைத் தொட்டியில் சூன்யமாய்க் கிடக்க, அவர்களைக் கொன்றவர்கள் பழிக்குப் பழி வாங்கப்படாமல், ரத்தத்துக்கு ரத்தம் சிந்தாமல் போனால் பிறகு சொர்க்கத்துக்கும் பூலோகத்துக்கும் என்ன வித்தியாசம்? இன்னமும் நம்புகிறேன், என் சகோதரன் வருவான். இல்லாவிட்டால் நான் எப்போதோ இறந்திருப்பேன்...' இந்த இடத்தில் எலெக்ட்ராவின் நீண்ட வசனம் அதியற்புதமான ஒன்று.

எலெக்ட்ராவின் சகோதரி க்ரிஸோதிமிஸ் அவளை எச்சரிக்கிறாள். 'அம்மா உன்னை பாதாளச் சிறையில் போடுவதற்குத் திட்டமிட்டிருக்கிறாள். ஏகிஸ்தஸ் இப்போது நகரில் இல்லை. வந்ததும் உனக்குச் சிறை. கவனமாக இரு.'

எலெக்ட்ரா: அப்படியானால் அந்த ஏகிஸ்தஸ் சீக்கிரம் வரட்டும்.

க்ரிஸோதிமிஸ்: உன்னைப் பற்றி உனக்கு அக்கறையில்லையா?

எலெக்ட்ரா: தயவுசெய்து துரோகம் செய்வது பற்றி எனக்கு சொல்லிக் கொடுக்காதே.

க்ரிஸோதிமிஸ்: இல்லை. வலிமையின் முன்னே நாம் தலைகுனிந்தே ஆக வேண்டும் என்கிறேன். மேலும் நாம் பெண்கள். ஆண்கள் அல்ல. பிறகு க்ளேடெம்னெஸ்ட்ரா கண்ட ஒரு தீக்கனவு பற்றியும், அதற்குப் பரிகாரமாக அகமெம்னானின் கல்லறையில் சில படையல் பொருட்களையும் வைத்துவிடச் சொல்லி தன்னிடம் கொடுத்தனுப்பியுள்ளது பற்றியும் க்ரிஸோதிமிஸ் கூறுகிறாள். அப்போது எலெக்ட்ரா கேட்கும் கேள்வி: 'இந்தப் படையல் பொருட்களெல்லாம் பாவத்தின் கறை படிந்த அவளுடைய கரங்களைத் தூய்மையாக்கிவிடுமா என்ன?' இதற்கடுத்து க்ளேடெம்னெஸ்ட்ராவும் எலெக்ட்ராவும் சந்தித்துக்கொள்ளும் காட்சி. அப்போது க்ளேடெம்னெஸ்ட்ரா எலெக்ட்ராவிடம் அவள் நினைப்பதைத் தயக்கமில்லாமல் சுதந்திரமாகச் சொல்லுமாறு கூறுகிறாள்.

எலெக்ட்ரா தன் தந்தையை க்ளெடெம்னெஸ்ட்ராவும் ஏகிஸ்தஸும் சேர்ந்து கொன்றது பற்றி ஆவேசமாகப் பேசுகிறாள். அப்போது க்ளெடெம்னெஸ்ட்ரா பதில் வாதமாக 'உன் தந்தை அகமெம்னான் ஏன் என் மகள் இஃபிஜீனியாவைக் கொன்றான்? அதனால்தான் அவனைக் கொன்றேன்' என்கிறாள்.

'இல்லை. நீயாகக் கொல்லவில்லை. உன் கள்ளக் காதலன் சொன்னதை நீ செய்தாய். என் தந்தையைக் கொல்ல அவனுக்கு என்ன காரணம்? அவனோடு வாழ்கிறாயே, அதன் நியாயம் என்ன?' என்று கேட்கும் எலெக்ட்ரா தன் தந்தை இஃபிஜீனியாவை பலி கொடுக்க நேர்ந்த

சூழ்நிலையைப் பற்றிக் கூறுகிறாள்,

அதாவது, ட்ராய் போருக்குச் செல்லும்போது வனம் ஒன்றில் ஒரு மானைக் கொன்றுவிடுகிறான் அகமெம்னான். உடனே வன தேவதை அகமெம்னான் கொன்ற உயிருக்குப் பதிலாக ஒரு உயிர்ப்பலி கேட்கிறது. ‘கொடுக்காவிட்டால் அகமெம்னான் மட்டுமல்ல. அவனுடைய சைன்யம் முழுவதையுமே இந்த வனத்திலிருந்து வெளியேற விட மாட்டேன்’ என்கிறது வனதேவதை. எனவே ‘தன் சைன்யத்தினரைக் காப்பாற்றும் பொருட்டே மகளென்றும் பாராமல் இஃபிஜீனியாவை பலியிட்டார் என் தந்தை’ என்கிறாள் எலெக்ட்ரா.

க்ளேடெம்னெஸ்ட்ரா: ஆனால் உன் தாயையே கொல்வதற்கு சதித் திட்டம் போடுகிறாயே, உனக்கு வெட்கமாக இல்லையா?

எலெக்ட்ரா: எனக்கும் என் செயல் வெட்கத்தையே ஏற்படுத்துகிறது. என்ன செய்வது? கயமையைக் கயமையின் மூலமாகத்தானே வெல்ல முடியும்?

க்ளே: ஏகிஸ்தெஸ் வந்ததும் இதற்கு நீ பதில் சொல்லியாக வேண்டும்.

எலெக்ட்ரா: நீதானே என்னைச் சுதந்திரமாகப் பேசச் சொன்னாய்? அப்படிச் சொல்லிவிட்டு இப்போது ஏன் மிரட்டுகிறாய்? இனிமேல் எனக்கு உயிர் பயம் ஏதும் இல்லை. நான் இறந்தால் அது பெருமைக்குரிய விஷயம். ஆனால் நான் வாழ்ந்தால் அது ஒரு வலி. இனிமேல் வாழ்வின் மீது ஆசையில்லை.

(It is a grace if die, but if I live a pain. I desire life no more)

அப்போது ஓரிஸ்டிஸுக்கு தெய்வவாக்கு கிடைத்திருக்கிறது. ‘வேறு பெயருடன் உன் தேசத்துக்குச் செல். ஓரிஸ்டிஸ் இறந்துவிட்டதாகச் சொல். அவர்களுக்கு இப்போது உன்னை அடையாளம் தெரியாது. பிறகு உன் காரியத்தை முடி.’

அதன்படி ஓரிஸ்டிஸ் வேறு பெயரில் தன் தேசத்துக்கு வருகிறான். கையில் ‘இறந்துபோன’ ஓரிஸ்டிஸின் புதைகலம்.

ஓரிஸ்டிஸ் இறந்துவிட்ட செய்தி அரண்மனையை எட்டுகிறது. எலெக்ட்ரா நிலைகுலைந்துபோகிறாள். அப்போது க்ரிஸோதிமிஸ் வந்து ஓரிஸ்டிஸ் உயிருடன்தான் இருக்கிறான் என்ற செய்தியைக் கூறுகிறாள். ‘என் துக்கத்தைப் பார்த்து நகைக்காதே’ என சீற்றம் கொள்கிறாள் எலெக்ட்ரா.

‘இல்லை. விளையாட்டில்லை. நம் தந்தையின் கல்லறைக்கு ஓரிஸ்டிஸ் வந்திருக்க வேண்டும். அங்கே காணிக்கை அளிக்கப்பட்ட முடிக்கற்றைகளை நான் பார்த்தேன். ஓரிஸ்டிஸைத் தவிர நம் தந்தைக்கு வேறு யார் இந்தக் காணிக்கையை அளிக்க முடியும்?’

இதையடுத்து, ஓரிஸ்டிஸ் எலெக்ட்ராவைச் சந்தித்து ஓரிஸ்டிஸ் இறந்துவிட்ட செய்தியைக் கூறி அவளிடம் அவனுடைய புதைகலத்தைக் கொடுக்கிறான். தன் சகோதரனின் இழப்பைத் தாங்க முடியாமல் கதறுகிறாள் எலெக்ட்ரா.

‘ஓ... ஓரிஸ்டிஸ்! நம் தந்தையும் இறந்து விட்டார். என் உயிருக்குயிரான நீயும் இறந்துவிட்டாய். இனி நான் இருந்தென்ன இறந்தென்ன? இப்போது பார், நம் தாய் குதூகலித்துக்கொண்டிருக்கிறாள். இதை இனிமேலும்

என்னால் தாங்க முடியாது. என்னையும்நீ சென்ற சூன்யத்துக்கே எடுத்துக்கொண்டுவிடு...'

தன் தகப்பனைக் கொன்ற தாயையும், அவளுடைய கள்ளக் காதலனையும் பழிவாங்கும்வரை தன் அடையாளத்தை வெளியிடக்கூடாது என்று திட்டமிட்டிருந்த ஓரிஸ்டிஸ் சகோதரியின் வேதனையைக் காணச் சகிக்காமல் 'அந்த மண்ணைக் கொட்டி விடு' என்கிறான். அதற்கு எலெக்ட்ரா 'இந்த மண்தான் என் சகோதரன். இதுதான் என் வாழ்வின் மிக முக்கியமான அருந்தவச் செல்வம். இதையும் என்னிடமிருந்து பறிக்காதே' என்கிறாள். 'இல்லை நீ இதை வைத்திருக்கக் கூடாது' என்று சொல்லி அதை வாங்கிக் கொள்கிறான் ஓரிஸ்டிஸ்.

'அப்படியானால் அவனுடைய கல்லறையாவது எங்கே இருக்கிறதென்று சொல்.'

'உயிரோடு இருப்பவர்களுக்குக் கல்லறை கிடையாது.'

'என்ன சொல்கிறாய் நீ?'

'ஓரிஸ்டிஸ் சாகவில்லை.'

'அப்படியா? ஓரிஸ்டிஸ் உயிரோடு இருக்கிறானா?'

'If there be life in me.'

இதன்பிறகு துரிதமாக நடந்தேறுகின்றன சம்பவங்கள். திட்டமிட்டபடி தன் தாயைக் கொல்கிறான் ஓரிஸ்டிஸ். அப்போது அரண்மனைக்கு வரும் ஏகிஸ்தஸிடம் ஓரிஸ்டிஸ் இறந்துவிட்ட செய்தியைக் கூறுகிறாள் எலெக்ட்ரா. அதைக் கேட்டு அளவற்ற மகிழ்ச்சியடையும் அவனிடம் க்ளேடெம்னெஸ்ட்ராவின் மூடிய உடலைக் காண்பிக்கும் ஓரிஸ்டிஸ் 'துணியை விலக்கிப் பாருங்கள்' என்கிறான். துணியை விலக்கிப் பார்த்து அதிர்ச்சியடையும் ஏகிஸ்தஸ் இதைச் செய்திருக்கும் அந்தப் புதிய மனிதன் ஓரிஸ்டிஸாகத்தான் இருக்க வேண்டும் என்பதைப் புரிந்துகொண்டு ஏதோ பேச முற்படுகிறான். அப்போது ஓரிஸ்டிஸ் 'பிரச்னை இங்கே வார்த்தைகள் அல்ல; உன் வாழ்க்கை' என்கிறான்.

'கொல்ல வேண்டுமானால் சீக்கிரம் கொன்றுவிடு. ஏன் தாமதம் செய்கிறாய்?'

'அதை நீ சொல்லாதே. நீ விரும்புகிற முறையில் உன்னை நான் சாக விட மாட்டேன். எங்கே என் தந்தையைக் கொன்றாயோ அதே இடத்தில்தான் நீ சாக வேண்டும்.' இப்படியாக எலெக்ட்ரா என்ற காவியம் முடிவுறுகிறது. இக்காவியத்தின் அற்புதமான இடங்களில் ஒன்று - ஓரிஸ்டிஸ் எப்படி இறந்தான் என்பதற்காக ஜோடிக்கப்படும் ஒரு நிகழ்ச்சி. அதாவது, ரதப் போட்டி ஒன்றில் இறந்தான் என்பதே அந்தப் புனைவு. காவியத்தில் மிக விஸ்தாரமாகக் கண் முன்னே நடப்பதுபோல் அந்த ரதப் போட்டியை எழுதியிருக்கிறார் ஸோஃபாக்ளிஸ். 'பென்ஹர்' படத்தில் வரும் ரதப் போட்டியின்... இந்த விபரத்துக்கும் இந்த நாவலுக்கும் என்ன சம்பந்தமென்று ஒரு கணம் யோசிக்கிறேன். தெரிந்த விபரங்களையெல்லாம் கொட்டி விட வேண்டும் என்ற ஆர்வமா? அப்படியானால் இதை வெட்டித் தூக்கியெறிந்துவிடலாமே என்ற எண்ணம் எழுகிறது. இருந்தாலும் ஏதோ ஒன்று என்னைத் தடுக்கிறது.

## 26. நலம் விரும்பி

O, then, dear saint, let lips do wthat hands do;

They pray, grant thou, lest faith turn to despair.

Shakespeare: Romeo Juliet, Act: I, Scene:V

என்னுடைய கணினி வேலை செய்யாத தருணங்களில் நான் கணினி மையத்துக்குச் செல்வது வழக்கம். அப்படிச் சென்ற சமயத்தில் ஒருமுறை sign out செய்யாமல் வந்துவிட்டேன் போலிருக்கிறது. இதை அறிந்த ஒருவன் அல்லது ஒருத்தி என்னுடைய மின்னஞ்சல் பெட்டிக்குள் புகுந்து என்னுடைய பழைய காதல் வாழ்க்கையையெல்லாம் ஆராய்ந்து அந்த மின்னஞ்சல்களையெல்லாம் திவ்யாவுக்கு அனுப்பி வைத்து விட்டான்/ள் - அறிவுரைக் கடிதத்துடன்.

'அன்புச் சகோதரி,

பெருமாள் ஒரு ப்ளேபாய். அதற்கான ஆதாரங்கள் இத்துடன் உள்ளன. அது தவிர அவனுடைய வயது 50. நீங்களோ 25. அவனோ, ஏற்கெனவே திருமணமானவன். நீங்களோ மணமாகாதவர். எனவே...'

இப்படியாக அந்தக் கடிதம் பல பக்கங்கள் நீள்கிறது. நான் பல பெண்களுக்கு எழுதிய காம ரசம் சொட்டும் கடிதங்கள், அதற்கு அப்பெண்கள் எழுதிய பதில்கள் எல்லாம் அடங்கியது அக்கடிதம். அத்தனை கடிதங்களையும் எனக்குத் திருப்பி அனுப்பி வைத்து விட்டாள் திவ்யா. காரணம், அந்தக் கடிதங்களில் எதுவுமே திவ்யாவுக்குப் புதிதல்ல. ஏனென்றால், எனது பழைய வாழ்க்கை முழுவதையும் திவ்யாவின் காலடியில் கிடத்திவிட்டு, ரகசியங்கள் ஏதுமற்று அவளிடம் என்னை ஒப்புக்கொடுத்திருந்தேன் நான். அந்த நலம் விரும்பி கூறுவதுபோல் நான் ஒரு ப்ளேபாயாக இருந்திருக்கலாம். ஆனால் இப்போது நான் அப்படியில்லை என்றுதான் சொல்ல வேண்டும். மேலும் திவ்யாவை நான் எனது தெய்வமாகவே ஆராதித்துக் கொண்டிருந்தேன்.

## 27. Butter

But, she, good soul had as lief

see a toad, a very toad, as see him.

Shakespeare: Romeo Juliet.

ஒரு கடிதத்தில் திவ்யா கூறுகிறாள், அடிக்கடி தனக்கு வாந்தி வந்துகொண்டு இருப்பதாக. 'என்ன மசக்கையா?' என்று கேட்டேன். இனி வருவது உரையாடல்:

'அப்படித்தான் சந்தேகிக்கிறேன்.'

'என்னது? நான் இங்கே இந்தியாவில் இருக்கும்போது உனக்கு எப்படி மசக்கை?'

‘இது கூடவா புரியவில்லை. உன் கடிதத்தைப் படித்தாலே கர்ப்பமாகிவிடுவேன் போலிருக்கிறதே...’

மற்றொரு உரையாடலில்:

‘காலையில் என்ன சாப்பிட்டாய்?’

‘ப்ரெட், பட்டர்.’

‘ஆகா... நினைத்தாலே இனிக்கிறதே.’

‘என்ன உளறுகிறாய்? ப்ரெட், பட்டர் சாப்பிட்டதில்லையா நீ?’

‘ப்ரெட் சாப்பிட்டிருக்கிறேன். பட்டரைச் சாப்பிட வேண்டிய விதத்தில் இன்னும் சாப்பிட்டதில்லை.’

‘அப்படியென்றால்?’

‘பட்டரை ப்ரெட்டிலா போட்டு சாப்பிடுவது? வேஸ்ட். உன் அல்குலில் தடவி சுவைத்துச் சாப்பிட வேண்டும்.’

‘அட முட்டாள்... அதுவே பட்டர் மாதிரிதானே இருக்கும்? பட்டருக்கே எதுக்கு பட்டர்?’

## 28. "You kiss by the book...'

You can capture any woman if you exploit her awareness of her own physical inadequcies.

Elfriede Jelinek: The Piano Teacher

யார் கண் பட்டதோ தெரியவில்லை. எங்கள் இருவரிடையே ஒரு சின்ன பிணக்கு. ஊடல் என்று சொல்ல முடியாது. என் மூர்க்க குணத்தினால் ஒரு சின்ன விஷயம் பெரிய சண்டையாகிவிட்டது. திவ்யா வேலை தேடிக்கொண்டிருப்பவள். அது சம்பந்தமாக கலிஃபோர்னியா மாநிலத்தில் Brea என்ற ஊரிலுள்ள ராம்குமார் என்பவனோடு பேசி இருக்கிறாள். ராம்குமாரை அவள் பார்த்ததுண்டா, ஸைபர் நண்பனா, எப்படி அவளுக்கு அறிமுகம் என்பதெல்லாம் எனக்குத் தெரியாது. ஆனால் ‘ஸைபர் நட்பாகத்தான் இருக்கும்’ என்று நினைத்தேன். இருக்கலாம். குடியாத்தத்திலுள்ள சத்யன் என்ற என் நண்பன் ஒரு நாள் எனக்கு ஃபோன் செய்து ஒரு விஷயம் சொன்னான். ‘சாட்’ மூலமாகக் கிடைத்த தோழியாம். ஈரான் தேசத்துப் பெண். அடிக்கடி ‘சாட்’ செய்துகொள்வார்களாம். திடீரென்று அவளிடமிருந்து எந்தத் தகவலுமே இல்லை. இரண்டு மாத காலம் ஓடிய பின் ஒரு நாள் சத்யனின் ‘சாட்’ பெட்டியில் ‘ஹாய்’ என்ற வார்த்தை வந்ததாம். பார்த்தால் அது அவள் இல்லை. அவளுடைய சகோதரி. சமீபத்தில் அங்கே ஏற்பட்ட பூகம்பத்தில் தோழி இறந்த செய்தி அவள் சகோதரி மூலமாகக் கிடைத்திருக்கிறது.

ஒரு நாள் ராம்குமார் வேலை விஷயமாக திவ்யாவிடம் தொலைபேசியில் பேசியிருக்கிறான். பேச்சு இரண்டு மணி நேரம் நீடித்திருக்கிறது. அது பற்றிய திவ்யாவின் கடிதம்:

‘நேற்று அவன் ரம்பம் போட்டபோது அது கடலை என்று எனக்குத் தெரியும். ஆனால் நட்பாகத்தான் பேசினான். (முதலில் இப்படித்தானே

ஆரம்பிக்கும்?)'

இந்தக் கடிதத்தைப் பற்றி மணியிடம் நீண்ட நேரம் புலம்பிக் கொண்டிருந்தேன். அடுத்த நாளும் விசனத்துடனேயே இருந்தேன். 'திவ்யாவை இன்னும் நேரில்கூடப் பார்க்கவில்லை. அதற்குள் இந்தக் காதல் முடிவுக்கு வந்துவிட்டதே' என்றெல்லாம் பலவாறாகப் புலம்பினேன். 'சரி, அப்படி என்ன ஆயிற்று?' என்று கேட்டான் மணி. திவ்யாவின் அடுத்த கடிதத்தைக் காண்பித்தேன்.

நான் உன்னிடம் ஒன்று சொல்லப்போகிறேன். நீ எப்படி எடுத்துக் கொள்வாய் என்று தெரியவில்லை. ஆனாலும் நீ எனக்குத் தாயும் ஆனவன் இல்லையா? எனவேதான் உன்னிடம் சுதந்திரமாக இருக்கிறேன். பேசுகிறேன். அதனால் திட்டாதே. ம்ம்ம்... எப்படி ஆரம்பிப்பது? ம்ம்...சரி. நேற்றும் அவன் ஃபோன் பண்ணினான். ஆஃபீஸிலிருந்து நான்கு மணிக்கு ஃபோன் செய்கிறேன் என்று சொன்னான். நான் அப்போது வெளியே செல்கிறேன் என்று சொல்லி விட்டதால் இரவு ஃபோன் செய்தான்.

நிறைய பேசினான். இல்லை. பேசினோம். வேலை விஷயம். ஆனாலும் அவ்வப்போது வேறு விஷயங்களும் வந்தன. நிறைய ஒத்துப்போகிறது. உன்னை மாதிரியே ரொம்ப பொறுமையான பேச்சு. ரொம்...ப நே...ர...ம் பேசினோம்.

அப்புறம் நான் கொஞ்சம்தான் சிரித்தேன். நீ சொன்னது சரிதான். அவனும் நீ சொன்னதையே சொன்னான். (நீங்கள் சிரிக்கும்போது ரொம்ப அழகா இருக்கு.') உடனே நான் என் கெக்கே பிக்கேவை நிறுத்திவிட்டேன். நல்ல நண்பனாக இருந்தால் நன்றாக இருக்கும். இந்த நட்பு முன்பே கிடைத்திருந்தால் இன்னும் நன்றாக இருந்திருக்குமே என்று தோன்றியது. (இது தவறா?) நான் யாரிடமும் இது பற்றிச் சொல்லவில்லை. ஆனால் ஆச்சரியமாக இருந்தது. அவனுக்கு ஏன் திடீரென்று என்மீது இத்தனை அக்கறை என்று. இன்றைக்கும் ஃபோன் செய்கிறேன் என்று சொன்னான். ஆனால் இன்னமும் வரவில்லை. என்ன, ஒரே அவன் புராணமாக இருக்கிறதே என்று பார்க்கிறாயா?'

'பெண்களை வசீகரிப்பது எப்படி?' என்ற தலைப்பில் ஒரு புத்தகம் எழுதச் சொன்னால் அதற்கு மிகத் தகுதியான ஆள் கோபாலகிருஷ்ணனாகத்தான் இருக்க முடியும் என்பது என் எண்ணம். காரணம், அவனுக்கு நூறு தோழிகள். அனைவரோடும் பாலியல் உறவு உண்டு என்று சொல்லவியலாது. பலரோடு பாலியல் ஈடுபாட்டையும் கடந்த நிஜமான நட்புறவும் உண்டு. அறுபது வயதுப் பெண்மணி முதல் பதினாறு வயது மாணவி வரை அவனது நட்பு வட்டம் மிகவும் பரந்தது. அப்பேர்பட்ட கோபால கிருஷ்ணனையே மிஞ்சி விடுவான் போலிருக்கிறதே இந்த ராம்குமார் என்று மணியும் நானும் பேசிக்கொண்டிருந்தோம்.

திவ்யா பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். ஆனால் இந்தக் கடலை போடும் ஆட்களின் மேல்தான் ஆவேசம் வருகிறது. நானும் ஒரு பெண்ணிடம் பத்து மணி நேரம் பேசுவேன். ஆனால் அவள் என் நெருங்கிய தோழியாக இருக்க வேண்டும். இப்படி அறிமுகம் இல்லாத பெண்ணிடம் தினம் இரண்டு மணி நேரம் கடலை போடுவது... அப்படியே இடையில் சந்து கிடைத்தால் சிந்து பாடுவது... உங்கள் சிரிப்பு அழகாக இருக்கிறதாம். பாஸ்டர்ட்... இதற்கு மேல் நான் பேசியதெல்லாம் வெறும் வசை. இங்கே எழுதத்

தேவையில்லை.

இதற்கு மறுநாள் ஒரு காரியம் செய்தேன். ‘உங்கள் நட்பு காதலாக மலர எனது வாழ்த்துக்கள்’ என்று திவ்யாவுக்கு மெயில் அனுப்பிவிட்டேன். ‘என்னை இதைவிட மோசமாக யாரும் அசிங்கப்படுத்த முடியாது’ என்று எழுதியிருந்தாள் திவ்யா. கடிதத்தின் ஒவ்வொரு வார்த்தையும் நெருப்பைப் போல் சுட்டது. உடனே திவ்யாவுக்கு ஃபோன் செய்தேன். பேசிக்கொண்டு இருக்கும்போதே வெடித்து அழுதுவிட்டேன். (வாழ்க்கையில் முதல்முதலாக மற்றொரு ஜீவனுக்கு முன்னே அழுதேன்.) சுமார் அரை மணி நேரம் திட்டினாள் திவ்யா.

அவள் திட்டிய ஒவ்வொரு வார்த்தையும் என் கழுத்தில் விழுந்த மலர்ச்சரமாகத் தோன்றியது. முடிவாக ‘கம்பீரமாக இரு’ என்றாள். இந்த கம்பீரத்தைப் பற்றி அவளுக்கு ஒரு கடிதம் எழுதினேன்.

திவ்யா, என் உயிரே...

உன் மெயிலில் ஒரு சின்ன குறிப்பு இருந்தது. ‘அவ்வளவுதான்டா மகனே, உனக்கும் எனக்கும்’ என்று. துடித்துப்போய்விட்டேன் கண்ணே. எதற்காக இன்னும் உயிர் தரித்திருக்கிறேன் என்று தோன்றியது. காரணம், நீ இல்லாத ஒரு வாழ்க்கையும் வாழ்க்கையா? ஏதோ கம்பீரம் பற்றிச் சொன்னாய். என் உடல், பொருள், ஆவி எல்லாவற்றையும் உன் காலடியில் சமர்ப்பித்த பிறகு எவ்வாறு நான் கம்பீரமாக இருக்க முடியும்? இந்த உலகில் கம்பீரமான ஒரு காதலனைக் காட்டு பார்ப்போம். நீ நினைத்தால் என்னை ஆக்கலாம். நீ நினைத்தால் என்னை அழிக்கலாம். உன்னுடைய ஒரு சொல் போதும் எனக்கு சங்கு ஊத. இந்த நிலையில், எங்கிருந்து வரும் கம்பீரம்? நான் உன்னுடைய அடிமை. லைலா லைலா என்று தன் காதலியின் பெயரைச் சொல்லிக்கொண்டு தெருக்களில் திரிந்தானே மஜ்னூ... அவனைப் போலவே நானும் ஒரு பித்தன். என் நண்பன் ஒருவன் ஒரு பித்தனைப் பற்றிக் கூறினான். அதை உனக்குச் சொல்கிறேன். இங்கே கீழ்ப்பாக்கம் மனநோய் விடுதியில் ஒருவன் சேர்க்கப் பட்டானாம். அவன் பேசியது ஒரே ஒரு வார்த்தை. அது மாயா. யார் மாயா? அவன் காதலி. இல்லையில்லை. தப்பு. மாயா என்பது அவன் காதலித்த பெண்ணின் பெயர். ஆனால் அவளுக்கு இவன் பெயர் தெரியாது. கைக்கிளை...

‘உன் பெயர் என்ன?’

‘மாயா.’

‘உன் தந்தை பெயர் என்ன?’

‘மாயா.’

‘உன் அம்மா பெயர் என்ன?’

‘மாயா’

‘உன் மனைவி பெயர் என்ன?’

‘மாயா.’

எல்லாக் கேள்விகளுக்கும் ஒரே பதில் - மாயா, மாயா, மாயா... அவனுக்குத் தெரிந்த ஒரே வார்த்தை - மாயா. மற்ற வார்த்தைகள் அனைத்தும் அவனது ஞாபக அகராதியிலிருந்து அகன்றுவிட்டன.

அதேபோல் இப்போது நானும் உன் பெயரை மட்டும் இடைவிடாது ஸ்மரித்துக்கொண்டிருக்கிறேன் கண்ணே... இப்படிச் சொல்வதுகூட தவறு. நான் என்ன பிரக்ஞா பூர்வமாகவா இதைச் செய்துகொண்டிருக்கிறேன்? இல்லை. உன் நினைவு எனது குருதி நாளங்களுக்குள் சென்றுவிட்டது. எனது எலும்பு மஜ்ஜைக்குள் சென்று பொதிந்து விட்டது. எனது சுவாசமாகவே மாறிப்போய்விட்டாய் நீ.

என்னை எல்லோரும் மிக மென்மையானவன் என்பார்கள். அப்படிப்பட்ட நானா உன்னிடம் இவ்வளவு மிருகத்தனமாக நடந்துகொண்டு விட்டேன்? எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது. ஏனென்றால் இந்த உலகத்திலேயே உன்னைத் தான் நான் மிக அதிகமாக நேசிக்கிறேன். இந்த அதீத நேசம்தான் எல்லாவற்றுக்கும் காரணமாகிவிட்டது. இந்த அதீத பிரியத்தினால், பற்றுதலினால் உன்னை வெகுவாகக் காயப்படுத்திவிட்டேன். சரி திவ்யா... இனி இப்படி நடக்காது. என்னை நான் மாற்றிக்கொள்கிறேன்.

திவ்யா... உன் கால் விரலில் ஒட்டிக்கிடக்கும் ஒரு சின்ன தூசு நான். அதுவே எனது சொர்க்கம். நீ சொல்லும் கம்பீரமெல்லாம் எனக்கு வேண்டாம்.

நான் உன்னைத் திட்டியதெல்லாம் வெறும் சொற்குப்பைகள். அதை மறந்துவிடு. உன் பாத தூளியில் முத்தமிடும் இந்த அடிமையைப் புரிந்துகொள்.

என் மீது நீ கொண்ட காதல் என்றும் வற்றிவிடாமலிருக்க உன்னைப் பிரார்த்தித்தபடியே முடிக்கிறேன்.

-பெருமாள்

23.03.2004.

***

கண்ணே பெருமாள்,

நான் மிகவும் அதிர்ஷ்டசாலிடா. இந்த அளவு தீவிரமாக யாராலும் யாரையும் காதலிக்க முடியாது. எனக்கு நீ காதலன் மட்டுமல்ல. தாய், தந்தை, நண்பன் எல்லாமே நீதான். உன் அளவுக்கு இந்த உலகில் யாரும் என்னை நெருங்க முடியாது. ஏன் நீ அதைப் பற்றி கவலைப்படுகிறாய்? நேற்று இரவு முழுவதும் தூக்கமே வரவில்லை. உன் கடிதத்தைப் பற்றித்தான் யோசித்துக்கொண்டிருந்தேன்.

அன்றைய தினம் ஃபோனில் உன்னைத் திட்டிவிட்டேன். என் தவறு எனக்குப் புரிந்துவிட்டது. திடீரென்று பல விஷயங்களை அறிந்துகொண்டதால் உணர்ச்சி வசப்பட்டேன். அதுதான் பிரச்னை. என்னை அறியாமல் நேர்ந்த தவறு. இதற்காக என்னை மன்னித்துவிடு. ஆனால் பெருமாள், நீ என் கேரக்டரை தவறாகச் சொல்லிவிட்டாய். அதுவும் நீ... சொல்லிவிட்டாய். நான் உன்னை நேரில் பார்த்ததில்லை. நேரில் பேசினதில்லை. எல்லாம் இந்தக் கணினி மற்றும் தொலைபேசி வழியேதான். ஆனாலும் உன்னை நான் நம்புகிறேன். காரணம், உன் கடிதங்கள்... அதிலுள்ள பாசம், அன்பு, காதல்... இப்போது அதே கடிதத்தில்

இப்படி நீ என் கேரக்டரையே தப்பாகச் சொல்லும்போது - அதிலும் மிக மோசமாகச் சொல்லும்போது - என்னை என்ன செய்யச் சொல்கிறாய்? சொல்.

ஆனாலும் உன்னை நம்புகிறேன் பெருமாள்... எதிர்காலத்தில் நீ இப்படி என்னைச் சொல்ல மாட்டாய் என. திட்டு. நன்றாகத் திட்டு. ஆனால் என் நடத்தையை மட்டும் மோசம் என்று சொல்லாதே. காரணம், நான் அப்படிப்பட்டவள் அல்ல. அதுவும் உனக்குத் தெரியும். சரி பெருமாள், முடிக்கிறேன். மிகவும் களைப்பாக இருக்கிறது. இறுதியாகச் சொல்கிறேன். ஒன்றே ஒன்றை மட்டும் ஞாபகத்தில் வை. நீ நீதான். மற்றவர்கள் மற்றவர்கள்தான். மறக்காதே.

-திவ்யா

24.03.2004.

***

கண்ணே பெருமாள்,

இரண்டு தினங்களாக ஒரே ஜுரம். சாப்பிட்டால் வாந்தி வருகிறது. மிகவும் களைப்பாக இருக்கிறது. அதோடு, கடுமையான வீட்டு வேலை. கூடவே படிக்க வேண்டிய கடமை வேறு. அதனால்தான் உனக்கு மெயில் கொடுக்க முடியவில்லை. ‘சாட்டு’க்கும் வர முடியவில்லை. அதனால் என்னிடமிருந்து மெயில் வரவில்லையானால், உடனே ‘இவள் என்னை மறந்துவிட்டாள்; யாரோவாக ஆகி விட்டாள்’ என்றெல்லாம் முட்டாள் மாதிரி யோசிக்க ஆரம்பித்து விடாதே! என்றைக்கும் நான் உன்னுடையவள் தான். உனக்காக நான் என்ன வேண்டுமானாலும் செய்யத் தயார். ஆமாம். என்ன வேண்டுமானாலும்...

-உன் திவ்யா

26.03.2004.

***

பெருமாள்,

இன்னமும், களைப்பாகவே இருக்கிறது. உடலின் தன்மையே மாறிவிட்டது போல் தோன்றுகிறது.

நீ அழுததை நினைக்க நினைக்க என் மனம் வேதனை அடைகிறது. என்ன பாவம் செய்தேனோ, நான் இப்படி இருக்கிறேன். உன்னைத் துன்பப்படுத்தி அந்தப் பாவம் வேறு என்னைச் சேர வேண்டுமா? ஐ மிஸ் யூ ஸோ மச் டா...

- திவ்யா

27.03.2004

டியர்,

என்னுடன் பேச முடியவில்லையே என்று கவலைப்படாதே. உன்னுடன் ‘சாட்’ பண்ணாமல் எனக்குப் பல தினங்களாக உறக்கமே இல்லை. இரவு முழுதும் உன் கடிதத்தையேதான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஒரு நிமிடம்கூடத் தூங்கவில்லை. சாப்பாடும் இறங்கவில்லை. மிகவும் பலகீனமாகி விட்டேன். பெருமாள், நீயும் என்னைப்போல் ஆகிவிடாதே. நன்றாகச் சாப்பிடு. நன்றாகத் தூங்கு. மனசைப் போட்டு குழப்பிக்கொள்ளாதே.

- திவ்யா

28.03.2004

ஏய்... ஒரு பின்குறிப்பு: அன்றைக்கு உன்னைத் திட்டிவிட்டு நாள் பூராவும் அழுதேன். அப்போது ஆரம்பித்த தலைவலி தான். இன்னமும் போகவில்லை. என்னவோ படி, படி என்கிறாய். இப்போது பார். நீ ஏதாவது சொல்லி நான் அதற்காக உன்னைத் திட்டி... சே, என்னமோ போ.

***

பெருமாள்,

நீ எனக்குக் கண்ணன் மாதிரி. என்னுடைய தூய்மையான காதல் - முதல் காதல் - உனக்குத்தான். உனக்கு மட்டும்தான். என்னை மீராவுடன் ஒப்பிடும் அளவுக்கு நான் இல்லை. ஆனாலும் எனக்குத் தோன்றியது. நம்முடைய காதலில் எதுவுமே எனக்குத் தவறாகத் தெரியவில்லை.

-உன் திவ்யா,

29.03.2004.

***

## 29. ‘அகலகில்லேன்’

> ‘ஏன் தூங்கும்போது உங்கள் ஆணுறுப்பில் கையை வைத்துக்கொண்டு தூங்குகிறீர்கள்? என் மானம் போகிறது.’
>
> - கண்ணாயிரம் பெருமாளின் எக்ஸ் மனைவி அவனிடம் அடிக்கடி கூறுவதாக ‘பெண்கள்’ நாவலில் வரும் ஒரு வசனம்.

ஒரு நாள் காலை கறிக்கடைக்குச் செல்லும்போது கணினி மையத்துக்குள் எட்டிப் பார்த்தேன். நுழையக்கூட இடமில்லாதபடி இளைஞர் கூட்டம். தோழிகளுடன், தோழர்களுடன் அரட்டை. சிலர் கதவை மூடிக்கொண்டு போர்னோ சைட்டில் மும்முரமாக ஈடுபட்டிருந்தனர்.

‘சரி, வேண்டாம்’ என்று திரும்பும்போது ஒரு ‘எக்ஸ்கியூஸ் மீ’ கேட்டது தேன் குரலில்.

‘என்ன?’

‘ஒரு பத்து நிமிடம் மட்டும் பயன்படுத்திக்கொள்வதாக இருந்தால் உங்களுக்கு விட்டுத்தருகிறேன். காத்திருக்கிறேன்.’

என்னால் யோசிக்கவே முடியவில்லை. ஏதோ உத்தரவுக்குக் கட்டுண்டவனாய் கணினியின் எதிரே அமர்ந்தேன். அந்தத் தேன் எனக்குப் பின்னாலிருந்த ஒரு ஸ்டூலில் அமர்ந்து கொண்டது.

அஞ்சல் பெட்டியைத் திறந்தேன்.

‘டேய் மடையா... நீ வருவாய் என்று பதினோரு மணியிலிருந்து உட்கார்ந்திருக்கிறேன் - இரண்டு மணி நேரமாக. இப்போது மணி பன்னிரண்டரை...’

அடக் கடவுளே... எனக்கு இங்கே காலை பதினொன்று. அவளுக்கு இரவு பன்னிரண்டரை. ஐந்து நிமிடம் பேசினேன். வெப்கேமில் எட்டிப் பார்த்தேன். பின்னால் அமர்ந்திருந்த தேன்மொழியும் ஓரக்கண்ணால் கவனிப்பது தெரிந்தது. வெப்கேமை மூடினேன்.

‘உன்னை யார் காத்திருக்கச் சொன்னது? கணினியில் வைரஸ் புகுந்துவிட்டது என்று சொன்னேன்தானே?’

‘தெரியும். இருந்தாலும் வைரஸை அகற்றியிருப்பாய் என்று நினைத்தேன்.’

‘யார், நானா?’

‘ஆமாம்; வேறு யார்?’

‘யேசுவே!’

‘ஏன் யேசுவை அழைக்கிறாய்? நான் இரண்டு மணி நேரம் காத்திருந்து சோர்ந்துவிட்டேன்.’

‘இரண்டு நிமிடத்திற்கு மேல் காத்திருக்க வேண்டாம் என்று சொன்னேன் அல்லவா?’

‘ஆமாம். இருந்தாலும் ஐம்பது அறுபது ஆஃப்லைன் மெஸெஜ் கொடுத்திருந்தேனே, அதைப் பார்த்துவிட்டு வருவாய் என்று நினைத்தேன்...’

‘சிக்கன் வாங்க வந்தேன். மீரா காத்திருப்பாள். கோபித்துக்கொள்வாள் என்று நினைக்கிறேன்.’

‘நன்றாக கோபிக்கட்டும்.’

‘சரி, நான் கிளம்புகிறேன்.’

‘ஓ... நோ...’

‘கணினியைப் பத்து நிமிடம் கடன் கொடுத்த பெண் பின்னால் உட்கார்ந்திருக்கிறாள். அநேகமாக படித்துக்கொண்டும் இருப்பாள் என்று நினைக்கிறேன். முப்பது நிமிடம் ஆகிவிட்டது...’

‘சரி தொலை. இடியட்.’

## 30. போஸ்ட் கார்டும், மின்னஞ்சலும்

There is so much hurt in this game of searching for a mate, of testing, trying. And you realize suddenly that you forget it was game, and turn away in tears.

Sylvia Plath : The Journals

இந்தக் காதல் கதை நடந்துகொண்டிருந்தபோது என்னுடைய கணினி ஒரு மாத காலம் பழுதடைந்திருந்தது. அதைச் சரிசெய்வதற்கு என்னிடம் பைசா இல்லை. அதனால் கணினி மையத்துக்கும் வீட்டுக்குமாக அலைந்துகொண்டிருந்தேன்.

கணினி மையம் என்பது இந்தியாவிலுள்ள ரயில்வே ஸ்டேஷன், போஸ்ட்டா.ஃபீஸ், தாசில்தார் ஆ.ஃபீஸ், ரேஷன் கடை, பொதுக் கழிப்பறை போன்ற மட்டமான இடங்களில் ஒன்று. காரணங்கள் பல; கட்டுக்கடங்காத கூட்டம், பொறுமையைச் சோதிக்கும் மிக மெதுவான வேகமுள்ள கணினிகள், அவ்வப்போது ஏற்படும் மின் தடங்கல், இத்யாதி.

இப்படிப்பட்ட நிலைமையில் ஒரு நாள் - சின்மயா நகர்தான் சுடுகாடாக இருக்கிறதே என்று நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலையில் உள்ள டிஷ்னெட்டுக்குக் கிளம்பினேன். அவசரமாக ஒரு மெயில் அனுப்ப வேண்டியிருந்தது. பஸ்ஸுக்காகக் காத்திருப்பதற்கெல்லாம் நேரமில்லை. ஆட்டோ பிடித்து ஓடினேன்.

லி.ஃப்டில் ஏறும்போது ஒருவர் 'நீங்கள் என்ன ரோல் செய்கிறீர்கள்?' என்று கேட்டார். அவரை ஏற இறங்கப் பார்த்தேன். மனநோயாளி என்பதற்கான எந்த அறிகுறியும் இல்லாமல் சாதாரணமாகவே தெரிந்தார்.

நான் பதில் ஏதும் சொல்லவில்லை.

டிஷ்னெட்டுக்குள் நுழைந்தபோதுதான் லி.ஃப்டில் அந்த மனிதர் கேட்டதன் அர்த்தம் புரிந்தது. ஜோதிகா, சூர்யா எல்லாம் நின்று கொண்டிருந்தார்கள். சினிமா ஷூட்டிங் நடந்துகொண்டிருந்தது. வெறுத்துப்போய் திரும்பி வந்து, வேறு கணினி மையம் ஏதும் இங்கே பக்கத்தில் உண்டா என விசாரித்தேன். எதிரே பார்ஸன் காம்ப்ளெக்ஸில் இருப்பதாகத் தெரிந்தது. அங்கே சென்று மேலும் கீழும் அலைந்து ஒரு வழியாகக் கணினி மையத்தைக் கண்டுபிடித்தபோது, அந்த இடம் இருளில் மூழ்கிக் கிடந்தது. மின்சாரம் இல்லை. ஒரு இடத்தில் நின்று நிதானமாக யோசித்தேன். இங்கே பக்கத்தில் கணினி மையம் இருக்கக்கூடிய இடம் ஸ்பென்ஸர் பிளாஸாதான் என்று தோன்றியதால் ஆட்டோ பிடித்து அங்கே கிளம்பினேன்.

'இரண்டாவது தளத்தில் வலது புறம்' என்றாள் வரவேற்பறை பெண்.

ஆனால் அந்த இடம் பூட்டப்பட்டிருந்தது. பக்கத்தில் இருந்த கடைக்காரர் சற்று முன்னர்தான் பூட்டப்பட்டதாகச் சொன்னார்.

'வேறு கணினி மையம் இங்கே உள்ளதா?' என்று அவரைக் கேட்டேன்.

மூன்றாவது தளத்தில் இருப்பதாகத் தெரிவித்தார். மூன்றாவது தளத்துக்கு விரைந்தேன்.

பதினைந்து நிமிடம் தேடியிருப்பேன். கிடைக்கவில்லை. அங்குமிங்கும் அலைந்ததுதான் மிச்சம். சலித்துப்போய் வெளியே வந்தபோது மணி

ஐந்தரை.

பக்கத்தில் தான் மணியின் அலுவலகம் இருந்தது. அவனைப் பார்க்கலாமா என்று தோன்றியது. முன்கூட்டியே திட்டமிடாமல் திடுதிப்பென்று அவனைச் சந்திப்பதில்லை. ஆனால் அன்றைய தினம் அப்படியில்லை. யோசித்தபடியே நடந்துகொண்டிருந்தபோது எதிரே மணியின் உதவியாளர். நான் அப்போதிருந்த மனநிலையில் அவரிடம் சொல்லலாமா கூடாதா என்றெல்லாம் யோசிக்கவில்லை. மதியத்திலிருந்து நடந்ததைச் சொன்னேன். உடனே அவர் 'ஆபத்துக்குப் பாவமில்லை. நம் அலுவலகத்திலிருந்து அனுப்பிக் கொள்ளுங்கள்' என்றார்.

ஐந்தே நிமிடத்தில் ஐநூறு வார்த்தைகள் டைப் செய்திருப்பேன். நரம்புகள் வலித்தன. அஸ்வத்தாமன் சொன்ன ஒரு சம்பவம் எனக்கு ஞாபகம் வந்தது. அவனும் ஒரு எழுத்தாளன். பத்து ஆண்டுகளுக்கு முன்பு - அவன் ஒரு பெண்ணைக் காதலித்தான். பக்கம்பக்கமாக காதல் கடிதப் போக்குவரத்து நடந்துகொண்டிருந்தது. இடையில் திடீரென்று ஒரு வார காலம் காதலியிடமிருந்து கடிதம் இல்லை.

முதல் நாள் அவளிடமிருந்து கடிதம் வராதபோது ஒன்றும் தோன்றவில்லை. ஆனால் இரண்டாம் நாளும் வராதபோது மனத்தில் முள் தைத்தது. மூன்றாம் நாள் ஆனபோது அவள் என்னை மறந்து விட்டாளோ என்று தோன்ற ஆரம்பித்தது. நான்காம் நாள் அவள் வேறு யாரையோ காதலிக்க ஆரம்பித்துவிட்டாள் என்று முடிவு செய்துவிட்டது மனம். ஐந்தாம் நாள், ஆறாம் நாள் என்று ஆனபோது தற்கொலை எண்ணம் தலைதூக்கியது. ஒரு வாரம் ஆனபோது அவளிடமிருந்து ஒரு போஸ்ட் கார்ட் வந்தது. சாவதற்கு இதை விட வேறு என்ன காரணம் வேண்டும்? ஆனாலும் சாவதற்கு முன் அவளை ஒரு முறை பார்த்துவிட்டு சாகலாம் என்று தோன்றியதால் அந்தக் கணமே சைக்கிளில் கிளம்பினேன். அவள் தங்கியிருக்கும் ஹாஸ்டல், நான் இருந்த ஊரிலிருந்து எண்பது கிலோ மீட்டர் தூரம். பஸ் பிடித்துப் போவதற்கெல்லாம் கையில் பைசா இல்லை. லுங்கிதான் கட்டியிருந்தேன். அப்படியே கிளம்பிவிட்டேன். எண்பது கிலோ மீட்டர் தூரத்தை அந்த ஓட்டை சைக்கிளில் எப்படித்தான் மிதித்தேன் என்று தெரியவில்லை. ஹாஸ்டலுக்கு வந்து வாட்ச்மேனிடம் அவசரமாக அந்தப் பெண்ணைப் பார்க்க வேண்டும் என்று சொன்னேன். பொதுவாக அந்த ஹாஸ்டலில் ஆண்களை அனுமதிப் பதில்லை. ஆனால் அப்போதைய என் தோற்றம்தான் வாட்ச்மேனின் மனத்தை மாற்றியிருக்க வேண்டும். கூப்பிடாவிட்டால் இந்த ஆள் செத்துவிடுவான் என்று அவனுக்குத் தோன்றியிருக்க வேண்டும். அப்படித்தான் இருந்தது என் தோற்றம். வந்தாள். ஒரு வாரமாக வயிற்றுப்போக்கின் காரணமாக மருத்துவமனையில் இருந்தாளாம். இடையில் ஒரு நாள் அவளைப் பார்க்க வந்த தோழியிடம் இருந்த போஸ்ட் கார்டை வாங்கி எழுதி அவளிடமே கொடுத்து தபாலில் சேர்க்கச் சொன்னாளாம். 'இவ்வளவுதான் விஷயம். இதற்குப் போய் இப்படிச் செய்துவிட்டீர்களே' என்று சொல்லி அழுதாள். 'சைக்கிளை இங்கேயே வைத்துவிட்டு பஸ்ஸில் செல்லுங்கள்' என்று சொல்லி பணமும் கொடுத்தாள்.

அன்று போஸ்ட் கார்ட்; இன்று மின்னஞ்சல். மற்றபடி ஏதும் வித்தியாசம் இல்லை என்று தோன்றியது.

**பின்குறிப்பு:** அஸ்வத்தாமனின் காதல் கதை அதிரடியான பல திருப்பங்களைக் கொண்டது. இரண்டு முக்கிய திருப்பங்களை மட்டும் சொல்லிவிடுகிறேன். ஒன்று: அவனுக்கும் அவன் காதலிக்கும் திருமணம் நடந்தது. இரண்டு: சில ஆண்டுகளில் விவாகரத்தும் நடந்தது.

31. என் இருபது வருட வாழ்க்கையில்...

Man delights not me: no, nor woman neither though by your smilling you seem to say so.

Shakespeare: Hamlet, Act II, Scene 2.

அன்புள்ள பெருமாள்,

என் பெயர் லயா. உங்களுடைய எல்லா எழுத்துக்களையும் நான் படித்ததில்லை என்ற போதிலும் படித்தவரையில் உங்கள் மீது எனக்கு மிகுந்த மரியாதையை ஏற்படுத்தியது. இந்த மரியாதை ஒரு சிலர்மீதுதான் எனக்கு ஏற்படுவதுண்டு. ஆனால் உங்களின் சமீபத்திய பக்கங்களால் அந்த மரியாதைக்கு பங்கம் வந்துவிட்டது என்று சொல்ல வேண்டும். முற்றாகவே போய்விட்டது என்று சொல்ல மாட்டேன். என்னிடம் மற்றொரு பழக்கம், நான் ஏதாவது முடிவு செய்துவிட்டால் அதை மாற்றிக்கொள்ள மாட்டேன். அது எவ்வளவு முட்டாள்தனமான முடிவாக இருந்தாலும் சரி. நீங்கள் மிகப் பெரிய எழுத்தாளர். இருந்தாலும் இப்போது முன்புபோல் சகஜமாக உங்கள் எழுத்தை என்னால் படிக்க முடியவில்லை. நான் மிகவும் மதித்த அந்தப் பெருமாளுக்கு ஒரு ‘ஹாய்’ சொல்லுங்கள்.

-லயா.

சுய அறிமுகம் இல்லை. அதை அறிந்துகொள்ள ஒருவருக்கு இருக்கக்கூடிய இயல்பான ஆர்வமும் எனக்கு இல்லை. எனவே ஒரு வரியில் நன்றிக் கடிதம் மட்டும் அனுப்பி வைத்தேன்.

லயாவிடமிருந்து பதில் வந்தது. மனித வாழ்வில் நாம் காணக்கூடிய உள் முரண்களையும், சிடுக்குகளையும், தர்க்கத்திற்கும் தார்மீகத்திற்கும் பொருந்தி வராத புதிர்களையும் அதனதன் பிரதேசங்களிலேயே சந்திக்கும் திராணி கொண்ட பதிலாக இருந்தது அது.

பிறகு ஏதோ ஒரு பேச்சின்போது ‘என் இருபது வருட வாழ்க்கையில்’ என்ற ஒரு வாக்கியம் லயாவிடமிருந்து வந்து விழுந்தது.

மிகுந்த ஆச்சரியத்தை அளித்த ஒரு தருணம் அது. அந்தப் பெண்ணுக்கு நான் முப்பது வயதுக்கு மேல் மதிப்பிட்டிருந்தேன். பிறகுதான் அறிமுகப் படலம் ஆரம்பமாயிற்று.

இலங்கையில் நடக்கும் போரினால் அங்கிருந்து இந்தியா வந்தவர்களில் ஒருவர் லயா. இந்தியாவிலுள்ள மருத்துவக் கல்லூரி ஒன்றில் சேர்ந்து படிப்பைத் தொடர முடியாமல் இப்போது டொராண்டோ சென்று விட்டவர். இன்னும் ஒரிரு மாதங்களில் மருத்துவப் படிப்பில் சேர்ந்துவிடுவார்.

இந்தியாவில் படிப்பைத் தொடர முடியாததன் காரணம்:

‘சிம்பன்ஸிகளின் தொல்லை தாங்க முடியவில்லை.’

‘சிம்பன்ஸி?’

சீனியர் மாணவர்களுக்கு லயா கொடுத்த பட்டப் பெயர்!

‘மாணவர்களைவிட மாணவிகள் படு மோசம். அந்த மாதிரி சேடிஸ்டுகளைப் பார்ப்பது மிகவும் கடினம். அது மட்டுமல்ல, இந்தியாவில் ஏழைகளை நடத்தும் விதம் நம்ப முடியாததாக உள்ளது.’

உரையாடலின் இடையே அவரது வயது குறித்து நான் யூகித்ததைக் குறிப்பிட்டேன். உடனே தன் புகைப்படங்களை அனுப்பி வைத்தார். கூடவே ஒரு குறிப்பு: என் குரல் அவ்வளவு நன்றாக இருக்காது. என் குரல்தான் என் பலவீனம்.

‘ஓ... எல்லாப் பெண்களுக்குமா சில்ஸ் மரியா குரல் வாய்த்துவிடும்’ என்று நினைத்துக்கொண்டேன்.

இரண்டு தினங்கள் கடந்து ஒரு நாள் மாலை -

சின்மயா நகர் பாலத்தின் அருவே மெஹபூபுக்காகக் காத்துக் கொண்டு நின்றிருந்தேன். அன்றைய தினம் காலையில்தான் அங்கே ஒரு சம்பவம் நடந்திருந்தது. ஒரு மனிதனின் கை, கால், முண்டம் எல்லாம் தனித்தனியாகக் கிடந்தன. தலையைக் காணவில்லை. அதைத் தேடிக்கொண்டு நின்றிருந்தது போலீஸ் கூட்டம். எனவே மெஹபூபுக்காகக் காத்திருக்க அந்த இடத்தைத் தேர்ந்தெடுத்த முட்டாள்தனத்தை நொந்துகொண்டே நின்றுகொண்டிருந்தபோது கைத்தொலைபேசியில் ஒரு அழைப்பு.

பார்த்தால் சில்ஸ் மரியாவின் குரல். அவள் பொதுவாகக் கைத்தொலைபேசியில் அழைப்பதில்லையே? மற்ற தொலைபேசியில் பத்து நிமிடம் பேசினால் அதே தொகைக்கு கைத்தொலைபேசியில் இரண்டு மூன்று நிமிடம்தான் பேச முடியும்.

ஆனால் லயா என்றது குரல். நான் நம்பத் தயாராக இல்லை. லயாவுக்குத்தான் குரல் பலவீனம் என்று சொல்லியிருக்கிறார். எனவே இந்தக் குரல் சில்ஸ் மரியாவின் குரல்தான். சந்தேகமே இல்லை. இந்த முறை நான் ஏமாற மாட்டேன்.

ஏப்ரல் ஒன்றாம் தேதி முட்டாளாக்கப்பட்டது போதும்.

ஏப்ரல் ஃபூல் வேலையெல்லாம் இதற்குமுன் நான் செய்தது கிடையாது. ஆனால் அந்த ஆண்டு ஏதாவது செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தேன். முக்கியமாக சில்ஸ் மரியாவுக்கு மெயில் அனுப்பி ‘நான் இரண்டு நாளில் சுவிஸ் வர இருக்கிறேன்’ என்று சொல்லலாமா என்று ஒரு தீவிர யோசனை ஓடிக்கொண்டிருந்தது. அப்போது தொலைபேசி அடிக்கவே, எடுத்தேன்.

சில்ஸ் மரியா...

‘திடீரென்று சித்தப்பா இறந்துவிட்டதாக தகவல். சித்தப்பா சென்னையில்தான் இருந்தார். அதனால் நேராக சென்னை வருகிறோம்... இன்று இரவு இரண்டு மணிக்கு விமான நிலையம் வந்துவிடுங்கள். ஃப்ளைட் நம்பர் குறித்துக் கொள்ளுங்கள். அவசர அவசரமாக பேனாவைத் தேடி எடுத்து தகவலைக் குறித்துக்கொண்டேன்.’

ஆனால் ஒரு சந்தேகம் எழுந்தது. அந்தக் காலத்து அரசிளங் குமரிகளைப் போல் அந்தப்புரத்தில் சிறை வைக்கப்பட்டிருக் கும் இவளை இரவு நேரத்தில் விமான நிலையத்தில் சந்திப்பது எப்படி சாத்தியம்? யோசித்து

முடிப்பதற்குள் அவளே சொல்லிவிட்டாள்.

‘விமான நிலையத்துக்குப் போய் நின்றுகொண்டிருக்காதீர்கள். பாவம். இன்றைய தேதியைப் பாருங்கள்!’

அந்தச் சம்பவம்தான் இப்போது ஞாபகம் வந்தது. மேலும், சில்ஸ் மரியாவிடம்தான் நான் லயா பற்றிச் சொல்லியிருந்தேன்.

எனவே நானும் விளையாட்டைத் துவக்கினேன்.

‘எனக்கு லயா என்று யாரையும் தெரியாதே?’

சுமார் பத்து நிமிடங்கள் தொடர்ந்த அந்த உரையாடலில் எதிர்ப்பக்கக் குரல் ஆங்கிலத்திலேயே பேசியது. அதிலும் அமெரிக்க உச்சரிப்பு.

குழப்பமும் ஆச்சரியம் மிஞ்ச லாகவமாகப் பேசிக்கொண்டிருந்தேன்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு, என் அலுவலக சகா ஒருவனை நானும் ஒரு நண்பனும் ‘கஞ்சி காய்ச்சியது’ ஞாபகம் வந்தது.

அவன் ஒரு மகா ஜொள்ளுப் பேர்வழி. அலுவலகத்தில் அவன் அடிக்கும் லூட்டியைப் பார்த்து எனக்கும் என் நண்பனுக்கும் எரிச்சலாயிற்று. என்ன செய்யலாம் என்று யோசித்து ஒரு தோழியிடம் சொல்லி அவனைத் தொலைபேசியில் அழைக்கச் செய்தோம்.

‘ஹலோ... உங்களுக்கு என்னைத் தெரியாது. ஆனால் எனக்கு உங்களைத் தெரியும்.’

இது தோழி. தொடர்ந்து என்ன பேச வேண்டும் என்பதையும் சொல்லிக்கொடுத்திருந்தேன்.

‘நான் உங்கள் அலுவலகத்திற்குப் பக்கத்தில் உள்ள குடியிருப்பில்தான் வசிக்கிறேன். தினமும் நீங்கள் ஹீரோ மாதிரி பைக்கில் வரும்போது வாசலில் நின்று பார்ப்பேன்.’

‘உங்கள் அலுவலகத்தில் எனக்குத் தெரிந்தவர் ஒருவர் இருக்கிறார். அவர் மூலம் உங்கள் பெயரைத் தெரிந்து கொண்டேன்.’

‘ஈவினிங் ஷோ வேண்டாம். நூன் ஷோ...’

‘ஓ.கே. சரியாகப் பன்னிரண்டு மணி. சத்யம் வாசலில் நிற்கிறேன்.’

‘உங்களுக்கு எந்த நிறம் பிடிக்கும்?’

‘ஓ.கே. உங்களுக்குப் பிடித்த நிறத்தில் வருகிறேன். கறுப்பு ஜீன்ஸ். கறுப்பு டி ஷர்ட்.’

‘அதை நேரில் சொல்கிறேன்.’

‘ஓ... நானும் சஸ்பென்ஸ் தாங்க மாட்டேன். சரி. சொல்லி விடுகிறேன். ஃபில்ம் இன்ஸ்டியூட்டில் ஃபைனல் இயர் படிக்கிறேன்.’

இவ்வளவு போதாதா பயலை ஃபான்டஸிக்கு அழைத்துச் செல்ல?

ஃபான்டஸியை நேரில் தரிசிக்க அந்த ஞாயிற்றுக்கிழமை சத்யம் தியேட்டருக்கு வந்துவிட மாட்டானா என்ன? நானும் நண்பனும் சாவகாசமாகப் பன்னிரண்டரை மணிக்குப் போய்ச் சேர்ந்தோம்.

கொளுத்தும் வெயிலில் வியர்வையைத் துடைத்தபடி நின்று கொண்டிருந்தான் ஹீரோ.

‘என்ன மச்சி இங்கே?’

‘ஒரு ஃப்ரெண்டுக்காக வெய்ட் பண்றேன்.’

‘வெயிட் பண்ணு’ என்று அவனை ஆசிர்வதித்துவிட்டு நாங்கள் கிளம்பிவிட்டோம். மறுநாளே தோழி அவனைத் தொலைபேசியில் அழைத்து மன்னிப்புக் கேட்டாள் - உறவினர் வீட்டில் ஒரு திடீர் மரணம்.

பிறகு அடுத்த வாரம் அவன் கலங்கரை விளக்கத்தின் அருகே காத்திருந்தான். அங்கேயும் நானும் நண்பனும் சென்று அவனுக்கு ‘ஹலோ’ சொன்னோம்.

மூன்றாம் வாரம் அவள் ஃபோன் செய்தபோது பையன் விழித்துக்கொண்டுவிட்டான். அவள் குரலைக் கேட்டதுமே ‘வைடீ ஃபோனை’ என்று கத்தினானாம்.

அந்த மாதிரிதான் யாரோ லயா என்று சொல்லி என்னைக் கலாய்க்கிறார்கள் என்று எனக்கு சந்தேகம். பிறகு மறுநாள் ஃபோன் வந்தது. இந்த முறை லயா தமிழில் பேசினார்.

‘குரல் பற்றி ஏன் ஏமாற்றினீர்கள் லயா?’

‘ச்சும்மா.’

இந்திய நேரம் காலை ஒன்பதரை மணிக்குத் துவங்கிய உரையாடல் மதியம் இரண்டரை மணிக்கு முடிவுற்றது.

‘நீங்கள் என்ன பணக்காரரா லயா?’

‘ம்ஹூம்... அவ்வப்போது சிறுகச் சிறுகச் சேர்த்தது. பார்ட் டைம் வேலைக்குப் போனால் கிடைப்பது. இப்படி... பணத்தைப் பற்றி பேசாதீர்கள். எனக்குப் பிடிக்காது.’

வேறு எது பற்றி லயாவும் நானும் ஐந்து மணி நேரம் பேசினோம்?

இப்போது உலகப் புகழ்பெற்றுவிட்ட லயாவின் சொந்த ஊரான வல்வெட்டித்துறை பற்றி. பச்சைப் பசேல் என்ற சொர்க்கத் தீவை விட்டுவிட்டு இப்படி கனடாவில் வெள்ளை வெளேர் பனிக்காட்டில் வாழ்வது பற்றி.

‘இப்போது மைனஸ் இருபது டிகிரி. உறைந்துபோய் விடுவேன் போலிருக்கிறது. இந்தக் குளிரை என் அறையிலுள்ள ஹீட்டரால் ஒன்றும் செய்ய முடியவில்லை. இந்தக் குளிர் மரணத்தை நினைவூட்டுகிறது எனக்கு.’

பூனைக் குட்டிகளைப் பற்றி... நாய்களைப் பற்றி...

நாய்களைப் பற்றி மட்டுமே என்னால் நாள்கணக்கில் பேச முடியும்.

பறவைகள் பற்றி...

அன்றொரு நாள் என் வீட்டுக்கு மணிப்புறா ஒன்று வந்து, ஒரு மணி நேரம் தங்கி, கொஞ்சிப் பேசிவிட்டு, அரிசி தின்று தண்ணீர் குடித்துச் சென்ற கதையைக் கூறினேன்.

அதன் வாழ்க்கைப் பயணத்தையெல்லாம் சொல்லி ‘நீதான் என்னிடம் இவ்வளவு அன்பாக இருக்கிறாயே... இங்கேயே உன்னுடன் தங்கி விடுகிறேனே?’ என்று அந்தப் புறா கேட்டது. ஆனால் நான் வளர்க்கும் ‘ரைட்டர்’ பயங்கர பொஸஸிவ். மணிப்புறா செல்லத்தைக் கடித்துக் குதறிவிடும். புறாவுக்கு அதைப் புரிய வைத்து ஆகாயவெளிக்கு அனுப்பி வைத்தேன். பிரிய மனமில்லாமலேயே சென்றது அந்த மணிப்புறா.

மற்றும், இலக்கியம் பற்றி, தமிழ் சினிமா பற்றி, இசைப் பற்றிப் பேசினோம்.

பாப் இசை பற்றிப் பேசி எவ்வளவு காலம் ஆகிறது. ரோலிங் ஸ்டோன்ஸ், பிங்க் ஃப்ளாய்ட், மார்க் ஆன்டனி, எரிக் க்ளாப்டன், கென்னி ரோஜர்ஸ் (இவருடைய அற்புதமான பாடலான ‘லேடி’யைக் கேட்டிருக்கிறீர்களா?) என்று வந்து கடைசியில் எமினெம் பற்றிக் குறிப்பிட்டார் லயா.

என்னுடைய எழுத்துக்கும் Eminemஇன் பாடல்களுக்கும்... சரி வேண்டாம். அதை விட்டுத்தள்ளுங்கள். என் எழுத்தைப் பற்றி லயா கூறியதைச் சொன்னால் அது என்னைப் பற்றி நானே பீற்றிக் கொள்வதாகிவிடும். அதற்குத் தமிழில் வேறு ஆட்கள் இருக்கிறார்கள். விடுங்கள்.

32. Let me suck your cock

‘I am not alone in feeling the way I feel. I believe that a lot of people can relate to my shit whether white, black, it does not matter. Every body has been through some shit. whether is drastic or not so drastic. Every body gets to the point of "I don't give a fuck.’

Eminem

லயா மூலமாக எமினெம் பற்றிய அறிமுகம் கிடைத்த பிறகு எமினெம்மின் ஆல்பங்களைத் தேட ஆரம்பித்தேன். ஆனால் சிரமமில்லாமல் என்னுடைய தொலைக்காட்சி சேனலிலேயே வேண்டுமளவுக்குக் கிடைத்தார் எமினெம். த்ராஸ் டீவி என்ற ஃப்ரெஞ்ச் சேனல் சென்னை நகரம் முழுக்கவும் கிடைத்துக்கொண்டிருந்தது. தமிழ்க் கலாச்சார போலீஸின் கண்களில் இந்த சேனல் எப்படி மாட்டாமல் போனது என்பது ஆச்சரியம்தான். எமினெம்மின் டெட்ராய்ட் நகர நண்பர்களான D12 குழுவினரோடு சேர்ந்து பாடிய பாடல் ஒன்று:

நிர்வாணமாக நடனமாடும் பெண்கள். சுமோ வீரரைப் போல் பருத்த சரீரமுள்ள கறுப்பினப் பாடகர் ஒருவர் ஆடை களைகிறார். எமினெம் தரையில் கலவி கொள்கிறார். பெண் பார்வையாளர்கள் ஒருவித களிவெறியுடன் தங்கள் உள்ளாடைகளைக் கழற்றி எமினெம் மீது வீசி எறிகின்றனர்.

‘Won't you please let me suck your cock’ என்று கேட்கிறார்கள் பெண்கள். அதைத் தொடர்ந்து,

‘All the chicks start yellin', all the hot babes

Through their bras and panties on stage...

My salsa, salsa, salsa, salsa, my salsa

Makes all the pretty girls wanna dance

And take off their underpants...’

என்று போகிறது பாடல்.

33. I have a dream!

How complex and intgricate are the workings of the nervous system. The electric shrill of the phones sends a tingle of expectancy along the uterine walls; the sound of his voice, rough, brash and intimate across the wire tightens the intestinal tract.

Sylvia Plath: The Journals

‘ஏய் பிசாசு, ‘ர்’ விகுதி போட்டீன்னா உதை வாங்குவே.’

சொன்னது லயா. பிசாசையே உதைக்கக்கூடிய பெண்ணா? அப்படியானால் சொல்பேச்சைக் கேட்க வேண்டியதுதான். லயா பற்றிக் குறிப்பிடும்போது ‘ர்’ விகுதி போடக்கூடாது; பன்மையில் அழைக்கக்கூடாது.

தோழர்களுக்குள் என்ன மரியாதை வேண்டியிருக்கிறது என்பது அவர் - ஸாரி - அவள் வாதம்.

பிறகு தொடர்ந்த உரையாடல்:

‘ரோஹிந்தன் மிஸ்த்ரியின் ‘எ ஃபைன் பேலன்ஸ்’ படித்திருக்கிறாயா?’

‘நீ படித்திருக்கிறாயா?’

‘படித்திருக்கிறேன்.’

‘எப்போது?’

‘இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு.’

இப்போதே வயது இருபது. அப்படியானால் பதினெட்டு வயதிலேயே படித்துவிட்டாளா?

மருத்துவ மாணவி ஒருத்தி படித்து முடித்துவிட்ட ஒரு நாவலை, இலக்கியவாதியாகிய நான் இன்னும் படிக்காமல் இருப்பது அவமானம் இல்லையா?

‘எத்தனை நாட்களில் முடித்தாய்?’

‘நான்கு நாட்கள்.’

என் ஆச்சரியம் அதிகரித்தது. பொடி எழுத்தில் 600 பக்கம் வரும் ஒரு நாவலை எப்படி நான்கு தினங்களில் படித்து முடித்தாள்?

‘என்னுடைய படிப்பு வேகம் மிகவும் கம்மி. குறைந்தபட்சம் இருபது நாட்களாவது ஆகும்.’

‘1975 எமெர்ஜென்ஸி பற்றிய நாவல் அது.’

‘அதெல்லாம் தெரியும். நேரத்தை வீணடிக்காதே.’

‘என்ன, இன்றைக்குக் கோபமாகப் பேசுகிறாய்?’

இன்னும் படிக்கவில்லையே என்ற ஆற்றாமையினால்

என்னையறியாமலேயே ஏற்பட்ட கோபம்... லயாவுக்குத் தெரிந்துவிட்டது.

‘சரி, இப்போது விடுமுறையில் இருக்கிறேன். என்ன புத்தகம் படிக்கலாம்?’

இந்தக் கேள்வியைக் கேட்டதும் மனம் குளிர்ந்து, சுய நிலைக்குத் திரும்பியது.

மரியோ பர்கஸ் யோஸாவின் நாவல்களைப் பற்றிச் சொன்னேன். பிறகு, Roald Dahl பற்றியும். இருவரையும் லயா இன்னும் படித்ததில்லையாம். (ஆகா!)

‘விசிட்டர் கதை பற்றிச் சொன்னாயே, அதன் முடிவை அனுமானிக்க முடிகிறதா என்று பார்க்கிறேன்.’

லயாவுடன் பேசும்போது எனக்கு ஒரு நூலகத்துக்குள் சென்று வருவதைப் போன்ற உணர்வு ஏற்படும். சில சமயம் குறிப்புகளும் எடுத்திருக்கிறேன் - முக்கியமாகப் பறவைகள் பற்றிப் பேசும்போது.

பறவைகள், விலங்குகள், தாவரங்கள் மீதான அவளுடைய அதீத ஈடுபாடு என்னை எப்போதும் ஆச்சரியப்படுத்தும். உதாரணமாக, உரையாடல் இப்படித் துவங்கும்: ரைட்டர் எப்படி இருக்கு?

லயா என்னிடம் முதல்முறை பேசியபோது முழுக்கவும் ஆங்கிலத்திலேயே பேசி மிரட்டினாள் அல்லவா? பிறகு அவள் தமிழில் பேசியபோது அதைக் குறிப்பிட்டுக் கேட்டேன். ‘ஒன்றுமில்லை, சும்மாதான்’ என்று மழுப்பிவிட்டாள். ஆனால் பல நாட்கள் கழித்துச் சொன்னாள், ‘உன் குரல் பற்றி ஒரு மாதிரி கற்பனை செய்து வைத்திருந்தேன். ஆனால் இவ்வளவு மென்மையாக இருந்ததும் தடுமாறிவிட்டேன். அதனால்தான் ஆங்கிலத்திலேயே பேசிச் சமாளித்தேன்.’

## 34. மின்னல் காட்சி

> If they substituted the word "lust' for "love' in the popular
> songs it would come nearer the truth.
>
> Sylvia Plath: The Journals

ஒரு நாள் நான் கணினியில் வேலை செய்துகொண்டிருந்த போது ‘ஹாய் பெருமாள், நான்தான் த்ரிஷா’ என்று ஓடி வந்தது ஒரு சொல். உடனே எனக்கு சென்ற வாரம் நடந்த அரட்டை ஞாபகம் வந்தது. ஆனால் அது பகல் நேரம். மதியம் ஒரு மணி.

‘சொல்லுங்கள் த்ரிஷா... ஏன் இப்படி பெண் பெயரில் வருகிறீர்கள்?’

‘என்னது, பெண் பெயரா? நான் ஒரு பெண் தெரியுமா?’

‘பெண்ணா?’

‘உங்கள் ஊரில் ஆணுக்குத்தான் த்ரிஷா என்று பெயர் வைப்பீர்களோ?’

‘சரி நீங்கள் பெண்தான். நம்புகிறேன்.’

‘பாராட்டுகிறேன்.’

‘இணையதளத்தில் என் எழுத்தைப் படிப்பதுண்டா?’

‘ரைட்டரின் புகைப்படத்தை வெளியிடுங்களேன்.’

‘ஓ... ரைட்டரை உங்களுக்குத் தெரியுமா?’

‘கார்த்திக்கின் புகைப்படத்தை வெளியிடுங்களேன்.’

‘அவனுக்கு அது பிடிக்காதே?’

‘மீராவின் புகைப்படத்தை வெளியிடுங்களேன்.’

‘நான் என்ன குடும்பப் பத்திரிகையா நடத்திக்கொண்டிருக் கிறேன்?’

‘நான் கோபமாக இருக்கும்போது இணையதளத்தில் உங்கள் எழுத்தைப் படிப்பேன்.’

‘உங்கள் பெயரில் ஒரு நடிகை இருக்கிறார். தெரியுமா?’

‘கார்த்திக், ரைட்டர், மீரா எல்லாருடைய புகைப்படத்தையும் வெளியிடுங்களேன்.’

இந்த இடத்தில் எனக்கு ஒரு சந்தேகம் தோன்றியது. ‘இது பெண் அல்ல, யாரோ ஒரு ஆண்தான். நன்றாகக் குடித்துவிட்டு நம்முடன் மல்லுக்கு நின்றுகொண்டிருக்கிறான்.’ எனவே நான் அவனிடம் சொன்னேன்.

‘இதோ பாருங்கள்... என் நேரத்தை வீணடிக்காதீர்கள். நான் ஒன்று கேட்டால் நீங்கள் ஒன்று சொல்கிறீர்கள், போதும். முடித்துக் கொள்வோம் நமது அரட்டையை.’

‘உங்கள் பீச் நண்பர்கள் புகைப்படங்களை மட்டும் வெளியிடுகிறீர்கள்... ரைட்டர், கார்த்திக், மீரா படங்களை வெளியிடக் கூடாதா?’

மீரா என்ற துருப்புச் சீட்டைப் போட்டுவிட்டதால் எனக்கு அரட்டையை நிறுத்த மனம் வரவில்லை.

‘உங்கள் பெயரில் ஒரு நடிகை இருக்கிறார், தெரியுமா?’

‘கேள்விப்பட்டிருக்கிறேன்.’

(என்னது, கேள்விப்பட்டிருக்கிறேனா? அப்படியானால் ஆசாமி அல்லது அம்மணி தமிழ்நாட்டில் இல்லை. ஒரு விஷயத்தில் குழப்பம் தீர்ந்தது. ஆனால் பெயரைப் பற்றிய குழப்பம் தீரவில்லை.)

‘த்ரிஷா என்ற பெயரை அந்த நடிகையைத் தவிர வேறு எங்கும் இதுவரை நான் கேள்விப்பட்டதில்லை.’

‘ஐயோ... திருச்சியில் எனக்குக் கொடுத்த பிறப்புச் சான்றிதழிலேயே த்ரிஷா என்றுதான் போட்டிருக்கிறது.’

‘ஓ... நீங்கள் திருச்சியா.’

‘பிறந்து வளர்ந்தது அங்கே. ஆனால் இப்போது இல்லை.’

‘ஓ... இப்போது எந்த ஊர்?’

‘என்னைப் பற்றிய விவரங்களை இந்தியாவில் உள்ளவர்களுக்குக் கொடுத்துக் கொடுத்து அலுத்துவிட்டது. அது மட்டும் வேண்டாமே?’

‘ஓ.கே. வேண்டாம்.’

‘இன்னும் நம்பிக்கை வரவில்லையென்றால் ஒன்று செய்யலாம். உங்கள் கணினியில் மைக் வசதி இருக்கிறதா?’

‘இருக்கிறது. ஆனால் அதை எப்படிப் பொருத்துவது என்றெல்லாம் எனக்குத் தெரியாது.’

‘மிகவும் சுலபம்... நான் சொல்லித் தருகிறேன். முதலில் உங்கள் கணினியின் பின்பக்கம் சிவப்பு, நீலம், பச்சை மூன்று நிறங்களில் மூன்று ப்ளக் உள்ளதா?’

‘ம்...’

‘அதைச் சரியாகப் பொருத்துங்கள்...’

(என்று ஆரம்பித்து என்னென்னவோ செய்யச் சொன்னார். அவர் சொன்னவற்றை ஒவ்வொன்றாகச் செய்தேன். ஆனாலும் மைக் வேலை செய்யவில்லை.)

‘சரி. விடுங்கள் த்ரிஷா, நாம் பேச்சைத் தொடர்வோம்.’

‘ஒரே ஒரு நிமிஷம் எனக்காகக் காத்திருக்க முடியுமா? தூக்கம் வருகிறது. போய் முகத்தைக் கழுவிக்கொண்டு வருகிறேன்.’

‘தூக்கம் வருகிறதா? இப்போது உங்களுக்கு என்ன நேரம்?’

‘மூன்று மணி நாற்பத்தைந்து நிமிடம்.’

‘அடடா... ஊரைச் சொல்ல மாட்டேன் என்று மறுத்துவிட்டு இப்போது சொல்லிட்டீங்களே?’

‘எங்கே சொன்னேன்?

‘3.45 என்றீர்களே... அப்படியானால் நீங்கள் இருப்பது நியூயார்க்.’

‘அட... எப்படித் தெரியும்?’

‘அது இருக்கட்டும்... நான் காத்திருக்கிறேன். நீங்கள் சென்று முகம் கழுவி வாருங்கள். அல்லது உறக்கம் வந்தால் உறங்குங்கள். பிறகு சந்திப்போம்.’

‘ம்ஹூம்... பிறகு சந்திக்கும் வாய்ப்பு அவ்வளவாக இருக்காது.’

‘ஏன்?’

‘நான் அரட்டைப் பெட்டிப் பக்கமே வர மாட்டேன்.’

‘இப்போது வந்திருக்கிறீர்கள்?’

‘அது உங்களுக்காக. விதிவிலக்கு. ஒரு நிமிஷம் பொறுங்கள். இதோ வந்துவிடுகிறேன்.’

‘ம்... வந்துவிட்டேன் பெருமாள். பேசலாம்.’

‘இவ்வளவு நேரம் வரை தூங்காமல் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்.?’

‘படித்துக் கொண்டிருந்தேன். இரவில் கண்விழித்துப் படிப்பேன். பகலில் தூங்குவேன்?’

(பகலில் தூக்கமா? ஒருவேளை, வேலைக்குச் செல்லாமல் வீட்டில்

இருக்கும் பெண்மணியோ?)

‘பகலில் ஒன்றும் வேலை இருக்காதா?’

‘ஸ்கூலுக்குப் போய்விடுவேன்.’

‘கடவுளே... நீங்கள் என்ன எட்டாம் வகுப்பு மாணவியா? ஒரு பள்ளி மாணவியுடனா இவ்வளவு நேரம் பேசிக்கொண்டிருந்தேன்?’

‘இல்லை... இல்லை... இங்கே கல்லூரியையும் ஸ்கூல் என்றுதான் சொல்கிறார்கள்.’

‘ஓ யெஸ்... மறந்துவிட்டேன்.’

‘கோபம் வரும்போது நான் உங்கள் எழுத்தைப் படிப்பேன்.’

‘கோபம் அடிக்கடி வருமா?’

‘நீங்கள் இந்தப் பக்கம் வந்திருக்கிறீர்களா?’

‘எந்தப் பக்கம்?’

‘துப்பறியும் புலிதான் கண்டுபிடித்துவிட்டதே... நியூயார்க் என்று.’

‘வந்ததில்லை.’

‘வரும் உத்தேசம் உண்டா?’

‘உண்டு.’

‘வந்தால் என் அபார்ட்மென்டில் நீங்கள் தங்கிக்கொள்ளலாம். தயக்கமே வேண்டாம்.’

‘நன்றி த்ரிஷா... ஆனால்...’

‘என்ன ஆனால்?’

‘உங்களைப் பற்றி ஒரு விபரம்கூட எனக்குத் தெரியாது. த்ரிஷா, நியூயார்க் என்றால் டாக்ஸி டிரைவர் உங்கள் வீட்டு வாசலில் கொண்டுவந்து விட்டுவிடுவார் இல்லையா?’

‘கேலி செய்யாதீர்கள் பெருமாள். Be serious. நீங்கள் இங்கே வரும்போது மெயில் அனுப்புங்கள். என் முகவரியைத் தருகிறேன்.’

இப்படியாக மேலும் அரை மணி நேரம் அரட்டை தொடர்ந்தது. இது நடந்து, இரண்டு மூன்று தினங்கள் சென்று நான் த்ரிஷாவுக்கு அனுப்பிய மெயில் திரும்பிவிட்டது.

## 35. காதலி

> If I didn't think, I'd be much happier; if I didn't have any sex organs, I woudn't waver on the brink of nervous emotion and tears all the time.
>
> Sylvia Plath: The Journals

My dear respectable Kannayiram Perumal,

இதுதான் நான் உங்களுக்கு எழுதும் முதல் கடிதம் என்பதால் என்னை

அறிமுகப்படுத்திக்கொள்ள வேண்டியது முறையல்லவா? நான் ஃபௌஸியா. D/o லேட் திரு.முகம்மது பஷீர். ஐந்து வயதாக இருக்கும்போதே நான் என் தந்தையை இழந்துவிட்டேன். எனக்கு அவரைப் பற்றிய ஞாபகம் மிகவும் கொஞ்சமாகவே உள்ளது. பிறகு என் உறவினர் ஒருவரது வீட்டிலேயே வளர்ந்து வந்தேன். (அவரைப் பற்றி உங்களுக்கு நான் சொல்லியே ஆகவேண்டும். அதற்கான சமயம் வரும்போது சொல்கிறேன்.) அவர் எனக்கு நல்ல கல்வியையும் மற்ற வசதிகளையும் கொடுத்தார். ஹைதராபாதிலுள்ள ஒரு கல்லூரியில் பி.ஏ. உர்தூ படித்தேன். ஒரு சிற்றூரில் பிறந்து வளர்ந்த நான் பலதரப்பட்ட மனிதர்களையும், பல்வேறு வாழ்க்கை முறைகளையும் அறிந்துகொண்டது இந்த ஹைதராபாதில்தான். ஒருமுறை நான் ‘உர்தூ இலக்கியத்தில் ஃபெமினிஸம்’ என்ற தலைப்பில் ஒரு செமினாருக்காகக் கட்டுரை சமர்ப்பிக்க வேண்டியிருந்தது. ஆங்கிலமும் தமிழும் எனக்கு சரளமாக வரும். ஆனால் இப்போதுதான் உர்தூவையும் நன்கு பயின்றுகொள்ள வாய்ப்பு கிட்டியிருக்கிறது. இலக்கிய ஆர்வமுள்ள என்னைப் போன்ற ஒரு கத்துக்குட்டிக்கு இது எத்தனை பெரிய சவால் என்று மலைப்பாகவே இருந்தது. பிறகு நான் பெண்ணியம் குறித்த தகவல்களைத் திரட்டுவதற்காக பல தமிழ் இணையதளங்களைப் படித்துப் பார்த்தேன். அப்போது உங்களுடைய எழுத்துக்களை வாசிக்க நேர்ந்தது உண்மையில் இறைவனின் சித்தம் என்றே சொல்ல வேண்டும். ‘உர்தூ இலக்கியத்தில் பெண்ணியம்’ என்ற தலைப்பை "An Ontological Journey through a Tamil Novel' என்று மாற்றிக்கொண்டு உங்களுடைய ‘சூன்ய வெளியில்...’ நாவலைப் பற்றி நீண்டதொரு கட்டுரை எழுதினேன். உங்கள் அனுமதியின்றி அப்படிச் செய்ததற்காக வருந்துகிறேன் பெருமாள். I really love your writing. அது எனக்கு ஒரு அங்கீகாரத்தை ஏற்படுத்திக்கொடுத்ததோடு, எனது மேற்படிப்புக்கும் ஒரு புதிய பாதையை வகுத்துக்கொடுத்தது. கல்லூரி செமினாரில் எனது ஆய்வுக் கட்டுரையைக் கொடுத்தபோது நான் அது பற்றி அவ்வளவு சீரியஸாக எடுத்துக்கொள்ளவில்லை. ஆனால் அந்தக் கட்டுரை ஏற்படுத்திய அதிர்வலைகளைப் பார்த்தபோதும், அதன் காரணமாகவே இந்தியாவிலிருந்து லண்டனில் நடந்த செமினாருக்கு நான் அனுப்பப்பட்டபோதும் எனக்குப் புரிந்துவிட்டது. Hatts off to you, Perumal.

சில பொதுவான விஷயங்களைப் பற்றி என் கருத்துக்களை உங்களோடு பகிர்ந்துகொள்ள விரும்புகிறேன். நமது சமூகத்தைப் பற்றியும், அதில் பெண்களின் நிலை பற்றியும் உங்களுக்கு நன்றாகவே தெரியும். ம்... நான் குறிப்பிட்ட உறவினர் பற்றி உங்களிடம் சொல்ல வேண்டிய தருணம் வந்துவிட்டது. மற்ற உறவினர்களெல்லாம் என் படிப்பை நிறுத்திவிட்டு எனக்குத் திருமணம் செய்து வைக்க வேண்டும் என்று வற்புறுத்திக்கொண்டிருந்தபோது, இவர் மட்டும் நான் படிக்க வேண்டும் என்றே என்னை ஊக்கப்படுத்திக் கொண்டிருந்தார். நான் மேற்படிப்பு படிக்க வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தார். இப்படி ஒரு உறவினரைக் கொடுத்ததற்காக நான் இறைவனுக்கு நன்றி தெரிவித்தேன். ஆனால் கடைசியில்தான் தெரிந்தது, அவருடைய திட்டம். யாருக்கும் என்னைத் திருமணம் செய்து வைக்க அவருக்கு விருப்பமில்லை. காரணம், அவரே என்னைப் பெண்டாள நினைத்ததுதான். திருமணம் செய்துகொள்கிறேன் என்று அவர் என்னிடம் முறையாகச் சொல்லியிருந்தால் நான் அவருக்குச் சம்மதித்திருப்பேன். அன்பையும் பிரியத்தையும் சரீர ரீதியாகப்

பகிர்ந்துகொள்வதில் என்ன தவறு? மக்கள் இதை காமம் என்கிறார்கள். எனக்கு அதைப் பற்றி கவலையில்லை. ஆனால் அந்த மனிதரோ என் இதயத்தை விட்டுவிட்டு என் அழகை மட்டும் அனுபவிக்க நினைத்தார். என்னைச் சம்மதிக்கவைக்க பல வகையிலும் முயன்றார். தொடர்ந்து அதை மறுத்து வந்த நான் ஒரு நாள் அம்மாவிடம் சொல்லிவிட்டேன். ஆனால் என்ன ஆச்சரியம்! 'நமக்கு அவர் எவ்வளவோ உதவியிருக்கிறார். எனவே அட்ஜஸ்ட் செய்துகொள்.' - இதுதான் என் அம்மா தந்த பதில்! அதற்கு மேல் நான் ஒரு வார்த்தைகூட பேசவில்லை. வீட்டை விட்டு வெளியேறிவிட்டேன். இப்போது இங்கே ஒரு மகளிர் அமைப்பின் உதவியில் இயங்கிவரும் விடுதியில் தங்கி எம்.ஏ உர்தூ படித்து வருகிறேன். பகுதி நேர உர்தூ ஆசிரியையாகவும் வேலை செய்கிறேன். எனக்கு ஒன்றும் அதிக தேவைகள் இல்லை என்பதால் பண நெருக்கடி ஏதும் இல்லை. கல்லூரியிலேயே இண்டர்நெட் வசதியும் இருக்கிறது. சமயங்களில் நான் நினைப்பதுண்டு - நம் எண்ணங்களைப் பகிர்ந்துகொள்ள இந்த உலகில் யாருமே இல்லை என்று. இதைப் பற்றியே யோசித்துக்கொண்டிருந்ததில் ஒரு நாள் உறங்குவதற்கு மிகவும் தாமதமாகிவிட்டது. உறக்கம் வர மறுத்தது. என்ன செய்வதென்று தெரியாமல் உங்கள் புத்தகங்களை எடுத்து மீண்டும் படிக்க ஆரம்பித்தேன். I felt enlightened about few unknown things that I had. தமிழில் எழுத முடிந்தால்... என் இதயத்திலிருக்கும் எண்ணங்களை யெல்லாம் நேரடியாகவே சொல்வதற்கு எவ்வளவு சௌகரியமாக இருந்திருக்கும்! ஆனால், இக்கடிதத்தை ஆங்கிலத்தில்தான் எழுத வேண்டியிருக்கிறது. சரி, விஷயத்திற்கு வருகிறேன். என் சமூகம் என்னை நரகத்தைப் போல் அழுத்துகிறது. ஆடைகளைகூட என் விருப்பத்திற்கேற்றபடி அணிய முடியவில்லை. ஏன் நாம் வாசனைத் திரவியங்களைப் பயன்படுத்துகிறோம்? நம்மைச் சுற்றியுள்ளவர்கள் ஒரு இனிமையான நறுமணத்தை உணர்வதற்காக. இல்லையா? அதே போல், நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அழகும் மற்றவர்கள் பார்ப்பதற்கும் ரசிப்பதற்கும்தானே? நான் சொல்வதை நீங்கள் ஒத்துக் கொள்வீர்கள் என்று நினைக்கிறேன். முதலில் நான் உங்களை ஒரு பெண் என்றே நினைத்தேன். பிறகுதான் உங்கள் புகைப்படத்தைப் பார்த்து ஆச்சரியமடைந்தேன். எப்படி ஒரு ஆண் இந்த அளவுக்கு ஒரு பெண்ணைப் போலவே சிந்திக்க முடிகிறது?

என் personal chemistryயைப் படித்து வருத்தம் கொள்வீர்களோ என்று எனக்குப் பயமாகவும் இருக்கிறது பெருமாள். தயவுசெய்து, தயவுசெய்து பதில் எழுதுங்கள். உங்களுக்கு ஒன்று தெரியுமா, உங்களுக்கு லண்டனில் ஏகப்பட்ட வாசகர்கள் இருக்கிறார்கள். அங்கேயுள்ள ஒரு இலக்கிய அமைப்பு நடத்திய சர்வேயில் கிழக்குக்கும், மேற்குக்குமான பாலமாகத் திகழும் எழுத்தாளர்களில் உங்களைத்தான் முதன்மையாகத் தேர்ந்தெடுத்துள்ளனர்.

உங்கள் பதிலோடு உங்கள் புகைப்படம் ஒன்றையும் அனுப்புங்கள். அப்போதுதான் என் தோழிகள் நீங்கள் எனக்கு எழுதியிருப்பதை நம்புவார்கள். ஒரு சிறு விண்ணப்பம்: உங்களுடைய ஒரே ஒரு படைப்போடு நானும் சக படைப்பாளியாய் சேர்ந்து எழுத வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். ஒரு மன்னிப்பு: இப்படி ஒரு நீண்ட கடிதம் எழுதி உங்கள் நேரத்தை வீணடித்துவிட்டதற்காக வருந்துகிறேன்.

அன்புடன்,

ஃபௌசியா.

***

இந்தக் கடிதத்தைப் படித்ததும் என்னால் முதலில் நம்பமுடியவில்லை. ஒரு ஆண்தான் என்னைக் காலை வாருவதற்காக இப்படி ஒரு கடிதம் எழுதியிருக்கிறான் என்றே சந்தேகப்பட்டேன். ஆனால் கடிதத்திலிருந்த இரண்டு விஷயங்கள் இந்தச் சந்தேகம் தவறு என யூகிக்க இடம் கொடுத்தது. ஒன்று, கடைசி வரி. இரண்டு, கடிதத்திலிருந்த Passion.

***

என் புத்தகங்கள் ஃபௌஸியாவுக்கு எப்படிக் கிடைத்தன என்பது போன்ற சில விபரங்களைக் கேட்டு பதில் மெயில் அனுப்பினேன். அதற்கு வந்த பதில் இது:

புத்தகங்கள் இங்கேயுள்ள நூலகத்தில் கிடைத்தன. ஆனால் விரைவிலேயே திருப்பிக் கொடுக்கும்படி ஆகிவிட்டது. இந்தியாவிலிருந்து 14 பேர் தேர்ந்தெடுக்கப்படிருந்தோம். ஏழு பேர் வட இந்தியா (பெங்காலி மற்றும் இந்தி), நான்கு பேர் - மலையாளம், இரண்டு பேர் - குஜராத் (உர்தூ), நான் - தமிழ். எங்கள் ஆய்வுக் கட்டுரையை ஒரு மாதத்திற்கு முன்னதாகவே கொடுக்கச் சொல்லியிருந்தனர். அக்கட்டுரைகள் பல ஐரோப்பிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டன. கேம்ப்ரிட்ஜ் பல்கலைக்கழக வளாகத்தில் நான் தங்கினேன். கருத்தரங்கம் ஒரு வாரம் வரை நடந்தது. எங்கள் இந்தியக் குழுவில் மூவர்தான் பெண்கள். உங்களுடைய எழுத்திலிருந்து நான் மேற்கோள் காட்டிய சில பகுதிகளைப் பார்த்துவிட்டு அங்குள்ள ஒரு இலக்கியக் கழகம் என்னை அவர்களுடைய மாதாந்திரக் கூட்டம் ஒன்றிலும் உரையாற்ற அழைத்தனர். எனக்கே தெரிந்திராத உங்களுடைய சில எழுத்துக்களைக்கூட அவர்கள் அறிந்திருந்தார்கள். ஆச்சரியமாக இருந்தது.

அன்புடன்,

ஃபௌஸியா.

**பின்குறிப்பு:** 1. உங்களைப் பல பேர் அசிங்கமாகத் திட்டி மெயில் அனுப்புவதாக எழுதியிருந்தீர்கள். அந்த ஆசாமிகளின் ஈ மெயில் முகவரிகளைத் தாருங்கள். நான் கொடுக்கும் பதிலடியில் அவர்களால் இனி எழுதவே முடியாது. அம்மாதிரி ஆட்கள் தண்டிக்கப்பட வேண்டியவர்கள்.

***

ராம்குமாரின் வருகைக்குக் பிறகு திவ்யாவுடனான உறவில் சிறியதொரு விரிசல் ஏற்பட்டது.

அதன் முதல் கட்டமாக, மெயில்களின் போக்குவரத்து குறைந்தது.

தினமும் இரண்டு மூன்று மெயில்கள் என்பது, மூன்று மாதத்திற்கு ஒரு மெயில் என்று குறைந்தது. தினமும் நடந்துகொண்டிருந்த எட்டு மணி நேர chat அறவே நின்றுபோயிற்று. ஒரு கட்டத்தில் ஆறு மாத காலமாக திவ்யாவிடமிருந்து தகவல் ஏதும் இல்லாதிருந்தபோது திடீரென்று அவளிடமிருந்து வந்த ஒரு மெயில் இது:

பெருமாள்,

என்னைப் பற்றிக் கவலைப்படாதே. நான் எப்போதும் போலவேதான் இருக்கிறேன். ஆனால் இப்போது வேலைக்கு முயற்சி செய்துகொண்டிருப்பதால் முன்னைப்போல் தினமும் உனக்கு மெயில் அனுப்ப முடியவில்லை. அதற்காக என் அன்பை - என் காதலைச் சந்தேகிக்காதே.

-திவ்யா

இந்த நிலையில் திவ்யாவின் இடத்தைப் பிடித்துக் கொண்டாள் ஃபெளஸியா. இனி வருவது ஃபெளஸியா எழுதிய கடிதங்கள்:

என் அன்பு பெருமாள்,

உன் மெயில் பார்த்தேன். உன்னை அழ வைத்துவிட்டது பற்றி மிகுந்த குற்றவுணர்வு கொண்டேன். ஆனால் எனக்கு பயமாக இருக்கிறது பெருமாள். By the way, உன்னை இதுவரை யாருமே அழைத்திராதபடி ஒரு விசேஷமான முறையில் நான் அழைக்கட்டுமா? உனக்கு நான் தேர்ந்தெடுத்த பெயர் சின்னூ. அந்தப் பெயரிலேயே இனி நான் உன்னை அழைக்கப் போகிறேன். நான் மட்டுமே அப்படி உன்னை அழைக்க முடியும்.

மீரா அக்காவுக்கு என்னைப் பற்றித் தெரியுமா? தயவுசெய்து ஜாக்கிரதையாக இரு சின்னூ. என் மீது அன்பு கொண்டவர்கள் திடீரென்று என்னிடமிருந்து பிரிந்துவிடுவதே இதுவரையிலான என் அனுபவம். நம் இருவரிடையே அப்படி நேர்ந்துவிடாமலிருக்க எல்லாம் வல்ல இறைவனிடம் இறைஞ்சுகிறேன் சின்னூ. என்னைவிட்டு நீ பிரிந்துவிடுவதை என்னால் தாங்கிக்கொள்ள முடியாது. உன் வார்த்தைகள்தான் என் வலியையும் வேதனையையும் குறைத்தன. என் வாழ்க்கை முழுவதும், ஸாரி, நம் வாழ்க்கை முழுவதும் என்னை நீ ஒரு குழந்தையைப் போல்தான் பேணிச் சீராட்டுவாய். முதல் முறையாக நான் அன்பின் முழுப் பரிமாணத்தையும் உன்னிடம்தான் கண்டேன். இனிமேலும் உன்னைப் பார்க்காமல் இருக்க முடியாது சின்னூ. ப்ளீஸ் டா சின்னூ... ப்ளீ... ஸ். Plan for a visit or I will come to chennai whichever you feel better. உன் தோளில் முகம் புதைத்து அழ வேண்டும் சின்னூ. I want to shed all the tears over your knees, and I believe after that I won't have an opportunity to cry in this world. என்னை நீ கவனித்துக்கொள்வாய் என்று எனக்குத் தெரியும்.

இந்த உலகத்திலேயே எனக்கு மிகவும் பிடித்தமான ஒரு பையனைப் பற்றி உன்னிடம் சொல்ல வேண்டும்... என்னடா பொறாமையா? அவன் பெயர் ஃபெரோஸ். (உனக்குப் பிடித்த மாதிரியே அவன் பெயரும் "F"-ல் ஆரம்பிப்பதைக் கவனித்தாயா?) ரொம்ப கற்பனை வேண்டாம் கதாசிரியரே... அந்தப் பையன் யார் தெரியுமா? வேறு யாருமில்லை. நமக்குப் பிறக்கப்போகும் குட்டிப்பையன்தான். அவன் தன் தந்தையைப்

போலவே புத்திசாலியாக இருப்பான். தன் தந்தையைப் போலவே பெரிய எழுத்தாளனாக வருவான். வீட்டுக்குள் ஒரு உண்மையான முஸ்லீமாகவும், வெளியுலக வாழ்வில் மற்ற மதத்தினரோடு இணக்கமுள்ளவனாகவும் இருப்பான். நீ மணமானவன் என்று தெரிந்த பிறகு என்னை மணம் புரிந்து கொள் என்று உன்னைக்கேட்பதற்கான தைரியத்தை இழந்துவிட்டேன் சின்னூ... ஸாரிடா... அதனால்தான் எனக்குள்ளேயே ஒரு கற்பனை உலகை உருவாக்கிக்கொண்டு அதில் உன்னோடு வாழ்ந்து கொண்டிருக்கிறேன். நீ நம்பமாட்டாய் சின்னூ... நான்... இப்போது... அழுதுகொண்டிருக்கிறேன். நான்... ஒரு அனாதை என்றே நினைத்து வந்திருக்கிறேன். ஆனால்... இப்போது... நீ... உண்மையிலேயே நீ... ஸாரி டா I have lost the flow of my words... வார்த்தைகள் தோற்றுப்போகின்றன சின்னூ... சரி, உன் நாவலில் வரும் அந்த ஜென்னி யார்? ஜென்னி ஜென்னி என்று உருகியிருக்கிறாயே? I am very possessive, you know? மற்றொரு விஷயம்... நான் உன்னைக் காதலிப்பது உன் புற அழகைக் கண்டு என்றா நினைக்கிறாய்? தவறு சின்னூ. வெளிப்படையாகச் சொல்ல வேண்டுமானால்... I think of our togherness every night... அது தவறு என்று தெரிந்தும்.

உனக்காக ஒரு சட்டை வாங்கி வைத்திருக்கிறேன். குரியர் மூலமாக நான் அதை உனக்கு அனுப்பி வைக்கிறேன். என்னை நீ முதல் முதலாகச் சந்திக்க வரும்போது அந்தச் சட்டையைத்தான் அணிந்திருக்க வேண்டும். அதில் நான் பூக்களையும் என் பெயரையும் எம்ப்ராய்டரி செய்யட்டுமா? எந்த முகவரிக்கு அதை அனுப்பி வைக்க என்று எழுது. நாம் பேசுவதற்காக எனக்கு ஒரு மொபைல் ஃபோன் வாங்கித் தருவதாக எழுதியிருக்கிறாய். வேண்டாம் சின்னூ. I feel guilty. ஏற்கெனவே நான் உனக்கு எக்கச்சக்கமாகக் கடன் பட்டிருக்கிறேன். இதற்கிடையில் நான் உன்னிடமிருந்து மேலும் மேலும் பிடுங்கக்கூடாது. புரிந்துகொள். நான் செய்யக்கூடியது என்னவென்றால் நீ இங்கு வரும்போது உன்னிடம் என்னை முழுமையாக ஒப்புவிப்பதுதான். என் தோழியின் நண்பனின் முகவரியைத் தருகிறேன். சரியா?

என்ன, நீ கடிப்பாயா, இரு, இரு, நீ இங்கே வந்ததும் உன்னை நான் என்ன செய்கிறேன் என்று பார்.

என் நகைகளை அடகு வைத்துவிட்டேன். அடுத்த மாத முடிவில்தான் ஸ்காலர்ஷிப் கிடைக்கும். கிடைத்ததும் நகைகளை மீட்டுவிடுவேன். இப்போது ஒரு மொபைல் வாங்க வேண்டும். இன்னும் இரண்டு வாரத்தில் வாங்கி விடுவேன் என்று நினைக்கிறேன். வாங்கியதும் நம்பர் தருகிறேன். உன்னை நான் எப்படித் தொடர்பு கொண்டு பேசுவது என்று எழுது. உன்னுடன் நான் உடனடியாகப் பேச வேண்டும். இத்துடன் என் புகைப்படத்தை அனுப்பியிருக் கிறேன்... அந்தப் புன்னகைக்குப் பின்னே ஒரு சோகமான கதை இருக்கிறது. அது என் நிக்காஹ்வை முன்னிட்டு எடுத்த புகைப்படம். ஆனால் என்னை வளர்த்த என் மாமாவே அதை நிறுத்திவிட்டார். எப்படியோ... அதெல்லாம் பழங்கதை. அந்தப் புகைப்படத்தில் சிரித்த பிறகு என் வாழ்வில் சிரிப்பே இல்லாமல் போய்விட்டது. ஏன், ஆண்களிடம் பேசுவதுகூட இல்லை. பயமாக இருக்கிறது. பதில் அனுப்புமா சின்னூ... உன் புகைப்படம் எப்போது அனுப்புவாய்?

நீ குடிப்பாயா? புகை பிடிப்பாயா? புகை பிடிக்கும் பழக்கம் இருந்தால் அதை விட்டுவிடு. அது உடம்புக்குக் கெடுதல். குடிப்பது பரவாயில்லை. இன்னொரு ரகசியம். வாழ்க்கையில் ஒரு முறையாவது மதுவை அருந்திப் பார்க்க வேண்டுமென்று எனக்கொரு ஆசை. என்னைத் தவறாக நினைக்காதே. நாம் இருவரும் முழு நிலவொளியில் மொட்டை மாடியில் மதுக் கோப்பைகளுடன் நிறைய பேசிக் கொண்டிருக்க வேண்டும், நிர்வாணமாக.

***

என் கண்மணி பெருமாளுக்கு, நீங்கள் எழுதிய நாடகத்தை நான் மீண்டும் மீண்டும் படித்துப் பார்த்தேன். நீங்கள்தான் எப்பேர்ப்பட்டதொரு படைப்பாளி! ம்... என்னைப்போய் கரிஷ்மா அது இது என்று சொல்லாதீர்கள். உண்மையில் நீங்கள் என்னுடைய கடிதத்துக்கு பதில் எழுதுவீர்கள் என்று நான் நம்பவே இல்லை.

(ஸாரி, ஆர்வக் கோளாறின் காரணமாகக் கடிதங்களை முன்னுக்குப் பின்னாகக் கோர்த்துவிட்டேன். சமாளித்துப் படித்துக்கொள்ளுங்கள் - பெருமாள்.)

எனது கனவு நாயகனிடமிருந்து கடிதமா? இன்னமும் என்னால் நம்ப முடியவில்லை. ஆனால் எனக்கு ஒரு வருத்தம் பெருமாள். உங்கள் தூக்கத்தைக் கெடுத்துவிட்டதாக எழுதியிருந்தீர்களே, அதைப் படித்து மிகவும் வருந்தினேன். ஆனால் நீங்கள் என்னை வா, போ என்று அழைத்திருப்பது - உங்களுடைய அந்த சமிக்ஞை - எனக்குப் பிடித்திருந்தது. பெருமாள் நான்... நான்... உங்களை... ஸாரி... உன்னை... போ பெருமாள், இப்போது வேண்டாம். (பிடிச்சிருக்கா?)

நீங்கள் கைப்பட எழுதும் கடிதங்கள் எனக்கு வேண்டும். ஆனால் என் கல்லூரியிலும், ஹாஸ்டலிலும் அது சாத்தியமில்லை. சோகம் என்னவென்றால், இந்த உலகில் நமக்கு யார் கடிதம் எழுதப் போகிறார்கள் என்றே நான் நினைத்திருந்தேன். இப்போதுதான் தெரிகிறது... என்னைப் பற்றியும் கவலைப்பட ஒரு ஆத்மா இருக்கிறதென்று. என் வகுப்புத் தோழியின் பாய் ஃப்ரண்ட் ஒரு நம்பகமான ஆள். அவன் முகவரி மூலமாக நாம் கடிதத் தொடர்புகொள்வது சாத்தியம் என்று நினைக்கிறேன். அதுவரை பொறுத்திருடா செல்லம். ('டா' சொன்னால் கோபம் வருமா என் பெருமாளுக்கு?) விரைவில் ஒரு மொபைல் வாங்க முயற்சி செய்கிறேன். எனக்கு உன்னோடு பேச வேண்டும், உன்னோடு மட்டுமே... எந்த நிபந்தனையும் இல்லாமல் நீ என் மீது பொழிந்திருக்கும் அன்பை என்னால் உயிருள்ளவரை மறக்க முடியாது பெருமாள். நீதான் எவ்வளவு அற்புதமானவன். வெறும் மெயிலும், ஃபோனும் அன்பைப் பொழிய போதுமா? ஆனால் தற்சமயம் என் நிதி நிலைமையின் காரணமாக உடனடியாக மொபைல் வாங்க முடியவில்லை. எப்படியிருந்தாலும் என் நகைகளை விற்றாவது மொபைல் வாங்கிவிடலாம் என்று இருக்கிறேன். ஒரு நிஜமான தங்கத்திற்காக சாதாரண தங்க நகையை விற்பதில் தவறில்லைதானே? அஸீம் ஃபத்தக் என்ற உர்தூ கவிஞரின் கவிதை வரிகள் எனக்கு ஞாபகம் வருகிறது. ஓரளவுக்கு இவ்வாறு அதை மொழிபெயர்க்கலாம்: 'பொன்னிருந்தால் பெண்ணாகிவிடுவேனோ?

பொறுத்திருந்தால் மண்ணாகி விடுவேனோ?’

பெருமாள், நான் உன் மீது கோபம். நான் உனக்கு பதில் எழுத மாட்டேன் என்று நீ எப்படி நினைக்கலாம்? நான் உனக்கு எழுதுவேன். யாராலும் அதைத் தடுக்க முடியாது. இனிமேல் எனக்கு யாரும் வேண்டாம். நீ ஒருத்தன் போதும்.

ஆமாம் பெருமாள், நீ இங்கே ஹைதராபாதுக்கு என்னைப் பார்க்க வருவதாக எழுதியிருக்கிறாயே, என்ன ஜோக் அடிக்கிறாயா? My Maasha... என் கல்லூரி மிக மிகக் கண்டிப்பான ஒரு நிறுவனம், பார்க்கலாம். வேறு ஏதாவது ஒரு திட்டம் செய்து சந்திக்கலாம். ஆனால் எனக்கு உன்னைச் சந்திக்கவே பயமாக இருக்கிறது பெருமாள். ஏன் தெரியுமா? என் படிப்பு, கல்லூரி எல்லாவற்றையும் விட்டுவிட்டு உன்னோடு ஓடி வந்துவிடுவேனோ என்றுதான். (கோபிக்காதே... வெளிப்படையாகப் பேசுவதே என் பழக்கம்.) அப்படிச் செய்தால் உன் குடும்ப வாழ்க்கை பாதிக்கும் அல்லவா? அதனால்தான் உன்னைச் சந்திக்கப் பயப்படுகிறேன்.

ஸாரி பெருமாள், இதுபோல் நான் இதற்கு முன்பு எழுதியதே இல்லை. உன் அன்பைத் திரும்பப் பொழிய எனக்கு வார்த்தைகள் கிடைக்கவில்லை. தினமும் எனக்கு ஒரு மெயில் அனுப்ப வேண்டும் நீ. கண்டிப்பாக உடம்பைப் பார்த்துக்கொள். தபால் மூலம் உனக்கு எழுதுவதானால் எந்த முகவரிக்கு எழுத வேண்டும்?

Love, hugs and kisses,

ஃபௌஸியா.

***

டேய் சின்னு,

அழாதேடா என் தங்கமே.

எனக்கு நீ குழந்தையா அல்லது நான் உனக்கு குழந்தையா என்று எனக்குப் புரியவில்லை.

நேற்று இரவு உன்னை ஃபோனில் அழைத்தபோது நான் உன் மீது மிகவும் கோபமாக இருந்தேன். ஏனென்றால், உன் கடிதத்தில் நீ என்னென்னவோ சூசகமான விஷயங்களை யெல்லாம் எழுதியிருந்தாய் - ஏதோ முயல்கள் அது இது என்று. எனக்கு உன் அர்த்தம் விளங்கவில்லை. ஆனால் என்னயறியாமலேயே எனக்கு அது பிடித்திருந்தது என்பதை ஒத்துக்கொள்ளத்தான் வேண்டும். இருந்தாலும் உன் மீது நான் கொஞ்சம் பொய்க் கோபத்தைக் காட்ட விரும்பினேன். (ஊடல், கூடல் பற்றியெல்லாம் உனக்குத் தெரியாதா என்ன?)

ஆனால் உன்னுடைய மிக மோசமான கடந்த காலத்தைப் பற்றி அறிந்த பிறகு என்னுள் ஒருவித சோகம் கவிழ்ந்தது. கவலைப்படாதேடா சின்னூ... உனக்கு நான் இருக்கிறேன். நீயே எனது தாய், தந்தை, காதலன், நண்பன், குழந்தை. நீ நானாகி நான் நீயாகி பின் இருவரும் ஒன்றே ஆவோம் சின்னூ. இனிமேலும் என்னால் காத்திருக்க முடியாது கண்ணே... நான் அங்கே வருவதற்கு முயற்சிக்கிறேன். ஆனால் நான் எங்கே தங்குவது? உன்

வீட்டிலா அல்லது லாட்ஜிலா? என்னால் ஒரு நாளைக்கு சுமார் 150ரூ வாடகையுள்ள லாட்ஜில்தான் தங்க முடியும். என் நிதி நிலைமை அதற்கு மேல் இடம் கொடுக்காது. சீக்கிரம் எழுது. உன் வாழ்க்கை பூராவும் தியாகம் செய்திருக்கிறாய் சின்னூ. அதற்குப் பதிலாக உனக்குக் கிடைத்தவை - வெறும் காயங்களும் ரணங்களும்தான். அதனால் உனக்கு எது தேவையோ அது எல்லாவற்றையும் நான் தருகிறேன். மொட்டை மாடியில் - நிலவொளியில் - மதுபானத்துடன் - பக்கத்தில் நீ இருக்க - இருவருமே நிர்வாணமாக - பேசிக்கொண்டே இருக்க வேண்டும். அதில் எனக்குக் காமம் தெரியவில்லை. காதல் மட்டுமே தெரிகிறது. உன் மொபைல் எண்ணைக் கொடுடா சின்னூ. I honestly admit I am dying for you. உனக்குத் தெரியுமா சின்னூ... நேற்று இரவு ஃபோனில் உன்னைக் கூப்பிட்டேன் சின்னூ... ஆனால் நீதான் கிடைக்கவில்லை. என் துரதிருஷ்டம். உன்னோடு பேச முடியாமல் போனதில் எனக்கு ரொம்ப வருத்தம்...

சின்னூ... உன்னைப் பிரிய மனமே இல்லைடா... முத்தங்களுடன்

ஃபௌஸியா.

***

இந்தக் காதல் கதையில் என்னை மிகக் கவர்ந்த விஷயம் - ரோமியோ ஜூலியட்டைப்போலவே கண்டதும் காதல் என்பதுதான். இரண்டாவது மெயிலிலேயே இருவரும் காதலிக்கத் துவங்கிவிட்டோம். மேற்கண்ட கடிதங்கள் எல்லாமே ஒரு வாரத்தில் எழுதப்பட்டவை என்பதே இவற்றின் விசேஷம்.

இப்போது கதையின் முக்கியமான பகுதிக்கு வருகிறோம். அதாவது அதன் முடிவு. ஆம். மோகமும், தாபமும் கூடிய இந்தக் காதல் ஒரே வாரத்தில் முடிவுக்கு வந்துவிட்டது. ஏன் எப்படி என்று எதுவுமே விளங்கவில்லை. இவ்வளவு தீவிரமான கடிதங்களை எழுதிய ஃபௌஸியாவிடமிருந்து அதன்பிறகு மூன்று வாரங்களாக எனக்கு ஒரு மெயில் கூட வரவில்லை. நான் அனுப்பிய மெயில்களுக்கும் பதில் இல்லை. ஃபோனும் வரவில்லை. எந்தத் தகவலும் இல்லை.

நான் பாட்டுக்கு ஏதோ ஒரு மூலையில் கிடந்தேன். என்னிடம் ஒரு பொக்கிஷத்தைக் காண்பித்துவிட்டு மறுநாளே பிடுங்கிக்கொண்டதுபோல் இருந்தது. அவளுடன் தொடர்பு இருந்த அந்த வாரத்தில் ஒரு நாள் - ஒரே நாள் - அவளிடமிருந்து மெயில் வராததால் மிகவும் வருத்தப்பட்டு எழுதியிருந்தேன். அதற்கு ஒரு பக்கத்திற்கு மன்னிப்புக் கேட்டு பதில் எழுதினாள். அப்படிப்பட்டவளிடமிருந்து இத்தனை நாட்களாகத் தகவல் இல்லை என்பதை நினைத்தபோது பயமாக இருந்தது. அவள் உயிரோடு இருக்கிறாளா என்று கூட சந்தேகம் ஏற்படுகிறது. ஏனென்றால் மரணம் ஒன்றுதான் அவளை என்னிடமிருந்து பிரிக்கக்கூடியது...

***

என்னுயிர் சின்னூ...

நீ நினைத்தது தவறு. என்ன நடந்தது தெரியுமா? ஹாஸ்டல்

ஃபோனிலிருந்து யாருக்கும் தெரியாமல் நான் உன்னிடம் பேசியபோது எங்கள் ஆங்கிலப் பேராசிரியை (அவர்தான் எங்கள் வார்டனும்கூட) பார்த்து ப்ரின்ஸிபாலிடம் புகார் செய்துவிட்டார். ப்ரின்ஸிபால் நான் யாரிடம் பேசினேன் என்று விசாரித்தார். தொலைபேசிக் கட்டண ரசீது வரும்போது 'செக்' பண்ணலாமென்று நான் பேசிய நேரத்தைக் குறித்துக்கொண்டார். நான் மயக்கம் போட்டு விழுந்து விட்டேன். இந்தப் பிரச்னையில் உன் பெயர் வந்துவிடவே கூடாது என்று முழு முயற்சி எடுத்துக் கொண்டேன். ஆனால் அவர்களாகவே உன்னைத் தொடர்பு கொண்டு பேசினால்... அந்த எண்ணம்தான் என்னைப் பெரிதும் கலவரப்படுத்தியது. உன்னை யாராவது இங்கிருந்து விசாரித்தார்களா? அப்படிக் கேட்டால் இங்கே யாரையும் தெரியாது என்று சொல்லிவிடு. கடைசியில் ஒருவாறாக, 'நான் என் தோழி ஜெனிஃபரோடு பேச நினைத்தபோது தவறான எண் கிடைத்துவிட்டது' என்று சொல்லி சமாளித்தேன். ஆனால் அவர்கள் அதை நம்பவில்லை. ஹாஸ்டலிலிருந்து என்னை ஒரு மாதம் சஸ்பெண்ட் செய்தார்கள். என் கேம்ப்பஸுக்கு வெளியே எனக்கு ஒரு ஆத்மாவைக்கூடத் தெரியாது. அதனால்தான் இத்தனை நாட்களாக நான் மெயில் அனுப்பவில்லை. கையில் ஒரு பைசா கிடையாது. நெட்கஃபேவின் பக்கமே திரும்பவில்லை. ஒரு பெண்கள் விடுதியில்தான் தங்கியிருந்தேன். ஸ்காலர்ஷிப் பணம், மொபைல் வாங்குவதற்காக நகையை அடகு வைத்த பணம் இரண்டும்தான் என் தங்கும் செலவுக்கும் சாப்பாட்டுக்கும் உதவியது. என் தோழிகள் பண உதவி செய்ய முன்வந்தார்கள். ஆனால் என் சுயமரியாதை அவர்களுடைய உதவியை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டது. இப்போது என் ஹாஸ்டல் நிர்வாகிகளால் நான் முயற்சி செய்த தொலைபேசி எண்ணைக் கண்டுபிடிக்க முடியவில்லை. எனவே அவர்களுக்குத் தேவையான ஆதாரம் கிடைக்காததால் நான் திரும்பவும் ஹாஸ்டலுக்கு வந்திருக் கிறேன். ஆனால் வெளியே செல்லவே கூச்சமாகவும் அவமானமாகவும் இருக்கிறது. எல்லோரும் என்னை ஏதோ ஒரு நடத்தை கெட்ட பெண்ணாகப் பார்ப்பதைப் போன்ற ஒரு உணர்வு ஏற்படுகிறது.

எனக்கு அழுகை அழுகையாக வருகிறதடா சின்னூ. எனக்கு மட்டும் ஏன்டா இப்படியெல்லாம் நடக்கிறது. அல்லாஹ்வின் மீது ஆணையிட்டுச் சொல்கிறேன். நான் யாருக்கும் கெடுதல் நினைத்தது கிடையாதுடா. எனக்கு உன் தோளில் சாய்ந்துகொள்ள வேண்டும்போல் இருக்கிறது. அந்த விஷயத்தைப் பற்றி இனிமேல் நான் பேசவோ நினைக்கவோ விரும்பவில்லை. ஆனால் உனக்கு சிரமம் கொடுத்து விட்டேனே என்ற குற்றவுணர்வினால்தான் உன்னைத் தொடர்பு கொள்ளாமல் இருந்தேன்.

உன்னைப் பற்றி யார் என்ன சொன்னாலும் எனக்குக் கவலையில்லை. அதையெல்லாம் நான் நம்பமாட்டேன். அவர்களுக்கு என்ன பதில் கொடுக்க வேண்டுமென்று எனக்குத் தெரியும். என் காதல் மிகவும் வலுவானது. யார் பேச்சுக்கும் அது அசைந்து கொடுக்காது. ஃபெரோஸை இந்த உலகுக்கு எப்போது அறிமுகம் செய்யலாம் என்று நினைக்கிறாய்? நான் சிரிக்க நினைக்கிறேன்... ஆனால்... முடியலடா சின்னூ... முடியல. கண்டிப்பாக மெயில் அனுப்புடா. என்னைப் புரிஞ்சுக்கோ... தப்பா நினைக்காதேடா சின்னூ...

எனக்கு ஒரு உதவி செய்வாயா? உன்னுடைய அடுத்த நாவலில் ஃபௌஸியா மற்றும் சின்னுவைப் பாத்திரங்களாக ஆக்கி உலவ

விடுவாயா? அப்படியாவது நான் நம்முடைய சங்கமத்தை அனுபவித்துத் திருப்தியடைவேன். இனிமேல் என்னை சந்தோஷப்படுத்த வேண்டியது உன் பொறுப்புடா சின்னூ.

உன்னை மட்டும் விரும்பும்,

ஃபௌஸியா.

***

டேய் சின்னூ,

உன்னுடைய பீஜம் ரொம்ப சின்னதென்று கேள்விப்பட்டேன். உண்மையா?

***

டேய் சின்னூ,

என்னடா பண்றே?

***

டேய் புருஷா,

என்ன ஆயிற்று உனக்கு? எப்போது இங்கே வருகிறாய்? என் தோழி ஒருத்தியின் குடும்பம் முழுவதுமே நாகப்பட்டினத்தில் சுனாமியில் அடித்துக்கொண்டு போய்விட்டது. இப்போது அவள் அனாதை. அதனால்தான் உனக்கு நான் மெயில் அனுப்ப முடியவில்லை. இங்கே பஸ் ஸ்டாண்டுக்குப் பக்கத்தில் ஒரு ஓட்டல் இருக்கிறது. பெயர்: ஓட்டல் சுப்ரீம். நீ அங்கே தங்கிக்கொள்ளலாம். அதன் மேனேஜர் என் தோழியின் உறவினர் என்பதால் பிரச்னை இல்லை. நான் உன்னை மாமா என்றுதான் கூப்பிடுவேன். (கவலைப் படாதே, தனியாக இருக்கும்போது டேய் சின்னூ). என் தோழி நஷாவின் எண்ணுக்குக் கூப்பிடு. அவளிடம் நீ என் மாமா யாசின் என்று சொல். அவள் புரிந்துகொள்வாள். டேய் சின்னூ... இனிமேலும் உன்னை என்னால் பார்க்காமல் இருக்க முடியாதுடா. என்னை நீ எப்போதுடா எடுத்துக்கொள்ளப்போகிறாய்?

***

அன்பே சின்னூ,

உன்னை நான் உடனே சந்திக்க வேண்டும். உன்னிடம் நிறைய பேச வேண்டும். தயவுசெய்து சொல். எப்போது சந்திக்கப் போகிறோம்? (நேற்று இரவு நான் ஒரு கனாக் கண்டேன். அதில் உன் மீசை குத்தி என் அதரம் புண்ணாகிவிட்டது?)

இத்துடன் நான் உன்னைப் பற்றிப் பாடிய பாடலை என் குரலிலேயே பதிவு செய்து அனுப்பி வைத்திருக்கிறேன். டேய், எனக்குக் கொஞ்சம் ஜலதோஷம் என்பதால் குரல் நன்றாக இருக்காது. பொறுத்துக்கொள். இதுபோல் உன்னைப் பற்றி 1000 பாடல்கள் புனைய வேண்டும் என்று எனக்கு ஆசை.

***

அன்பே சின்னூ,

ஒரு செமினாருக்காக பெங்களூர் சென்று வந்தேன். க்ளைமேட் மாறியதால் உடம்புக்கு ஒத்துக்கொள்ளவில்லை. லேசான ஜுரம். அப்போதுதான் தோன்றியது. இந்த உலகில் நமக்கு யாருமே இல்லையென்று. ஆமாம். எனக்கென்று யாருமில்லை. இப்படிச் சொன்னால் நான் நன்றி மறந்தவளாவேன் சின்னூ. உன் நினைப்பும் ஒரு அரவணைப்புதான். அதை மறுக்க முடியாது.

***

என் கண்ணே சின்னூ,

நான் உன்னை மறக்கவில்லை. உன்னை மறப்பது சாத்தியமும் இல்லை. ஆனால் நான் செய்வது துரோகம் என்று மனசாட்சி சொல்கிறது. நான் செய்வது மீரா அக்காவுக்கு துரோகம்தானே? அழகான உன் குடும்பத்தில் சூறாவளி வீச நான் காரணமாக இருக்கலாமா? ஆனால் ஒன்று, உன்னைத் தவிர ஒரு ஜீவனை என்னால் நினைத்துக்கூட பார்க்க முடியவில்லை. எனக்கு உன்மேல் காதலும் உண்டு. காமமும் உண்டு. ஆனால் காமத்தைத் தணிக்க வழி? நான் உன்னை மட்டும், உன்னை மட்டும்தானே காதலிக்கிறேன். எனவே நீதான் என்னைப் புசிக்க வேண்டும். நீ என்னைத் தின்றால் என் பசி அடங்கும். என்ன ஒரு வேடிக்கை பார். காதலில் எல்லாமே தலைகீழ்.

நான் செய்வது சரியோ தவறோ தெரியவில்லை. நான் உன் காலடியில்தான் கிடக்க விரும்புகிறேன். எனவே இந்தக் கற்பனை ஒன்றே போதும் சின்னூ. என் வாழ்வின் கடைசி நிமிடம் வரை இந்தக் கனவிலேயே வாழ்ந்து முடித்துவிடுகிறேன். உன்னை அடைய முடியாமலும் மறக்க முடியாமலும் தவிக்கும் துர்பாக்கியவதி.

## 36. சொற்கள், சொற்கள், சொற்கள்...

> Erika lifts up a tissue from the floor; it is encrusted with sperm. She holds it to her nose, she deeply inhales the aroma, the fruits of someone else's hard labour.

Elfriede Jelinek: Piano Teacher

இந்த நாவலின் முந்தின பக்கம் ஒன்றில் ‘யார் இந்த ஜாய்ஸ்?’ என்ற வார்த்தைகளை எழுதிக்கொண்டிருக்கும்போது ஒரு தொலைபேசி அழைப்பு வந்தது.

‘ஹலோ பெருமாள்?’

‘யெஸ்?’

‘உங்கள் நாவல்களைப் படித்திருக்கிறேன்.’

‘அப்படியா? நன்றி. உங்கள் பெயரென்ன?’

‘ஜாய்ஸ்.’

‘ஓ... என் நம்பர் உங்களுக்கு எப்படிக் கிடைத்தது?’

‘என் நண்பர் கொடுத்தார். சரி, பிறகு பேசுகிறேன்.’

இந்தத் தொலைபேசி உரையாடலுக்கு மறுநாள் காலை, அந்த ஜாய்ஸின் கைத்தொலைபேசி எண்ணுக்கு ‘குட் மார்னிங், ஹாவ் எ நைஸ் டே’ என்று ஒரு குறுந்தகவல் அனுப்பினேன். உடனடியாக நன்றி கூறி பதில் வந்தது. பிறகு அன்றைய தினம் முழுவதும் விட்டுவிட்டுத் தொடர்ந்த குறுந்தகவல் உரையாடல் இது:

‘காபி குடித்தீர்களா?’

‘இதோ குடித்துக்கொண்டிருக்கிறேன். நீங்கள் குடித்து விட்டீர்களா?’

‘ம். குடித்துவிட்டேன். என் கைத்தொலைபேசி எண்ணை உங்களுக்கு யார் கொடுத்தது? எனக்கு சஸ்பென்ஸ் தாங்கவில்லை.’

‘ஏன்?’

‘ஒரு நாலைந்து பேருக்கு மட்டுமே என் நம்பர் தெரியும். அதனால் கேட்டேன்.’

‘ஓ... நான் உங்களை சங்கடப்படுத்திவிட்டேன் என்று நினைக்கிறேன். இனிமேல் எஸ்ஸெம்மெஸ் கொடுத்தும், ஃபோனில் பேசியும் உங்களைத் தொந்தரவு செய்ய மாட்டேன்.’

‘ஓ... மை காட். ஸாரி. ஸாரி. ஸாரி.’

‘ஏன் மூன்று முறை ஸாரி?’

‘சரி விடுங்கள். இனிமேல் அதைக் கேட்கவில்லை.’

அரை மணி நேரம் கழித்து -

‘என்ன ஜாய்ஸ், ஆளையே காணோம். எங்கே போயிருந்தீர் கள்?’

‘துணிகளை ஊற வைக்கப் போயிருந்தேன். அரை மணி நேரம் கழித்துத் துவைக்க வேண்டும்.’

‘வாஷிங் மெஷின் இல்லையா? Maid இல்லையா?’

‘இல்லை, நானேதான் செய்ய வேண்டும்.’

‘நீங்கள் வேலைக்குச் செல்பவரா அல்லது மாணவியா?’

‘யூகியுங்களேன்.’

(இது ஒரு கஷ்டமா? ஞாயிற்றுக்கிழமை காலை ஏழு மணிக்கு ஹாயாக காஃபி குடித்துக்கொண்டு, வாஷிங் மெஷினோ பணிப்பெண்ணோ இல்லாமல் துணிகளை ஊறப் போட்டுக்கொண்டு, குறுந்தகவலில் அரட்டை அடித்துக்கொண்டு இருக்கக்கூடிய ஒரு பெண், திருமணமாகி குழந்தை குட்டிகளுடன் இருப்பவராகவா இருக்க முடியும்? ஆனால் பெண்களிடம் இப்படியெல்லாம் நம் புத்திசாலித்தனத்தைக் காண்பித்துக்கொள்ள முடியாதே? அதனால் ஒரு அசட்டு பிம்பத்தை எடுத்து அணிந்துகொண்டு - ஆதவன், மன்னிக்கவும். உன்னுடைய ஏரியாவுக்குள் அத்து மீறுகிறேன் - மீண்டும் குறுந்தகவல் கொடுக்க ஆரம்பித்தேன்.

‘ஸிம்பிள். இரண்டும் இல்லை. மூன்று குழந்தைகளுக்குத் தாய்...’

‘கிட்டத்தட்ட சரி. இரண்டு குழந்தைகள்.’

‘நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்?’

‘அடையார்.’

‘அடையார் அருமையான இடம்.’

‘ஆமாம், நான் இருக்கிறேன் இல்லையா?’

பிறகு நான் எழுத ஆரம்பித்துவிட்டேன். மூன்று மணி நேரம் கழித்து ஜாய்ஸிடமிருந்து ஒரு குறுந்தகவல்.

‘Am I under your observation? ஏன் பதில் இல்லை? ஏன் நீண்ட மௌனம்? என் மீது கோபமா?’

‘சேசே... அதெல்லாம் இல்லை.’

‘எங்கே இருக்கிறீர்கள்? வீட்டிலா? வெளியிலா?

‘குகையில் இருக்கிறேன். உங்களுக்குப் பிடித்த எழுத்தாளர் யார்?

‘ஆதவன், ப.சிங்காரம்...’

‘நீங்கள் என்னை மிகவும் ஆச்சரியப்படுத்துகிறீர்கள்.’

‘ஏன்?’

‘இப்படி ஒரு பெண்ணை நான் சந்தித்ததே இல்லை. நீங்கள் என்ன கவிஞரா?’

‘இல்லையே...’

‘உங்களுக்கு யார் நவீன இலக்கியத்தை அறிமுகம் செய்தது?’

‘என் பாய் ஃப்ரெண்ட்.’

‘நீங்கள் அதிர்ஷ்டசாலி.’

‘ஏன்?’

‘என் கேர்ள் ஃப்ரெண்ட்ஸெல்லாம் இலக்கியத்தில் ஈடுபாடற்றவர்களாக இருக்கிறார்கள். சிங்காரத்தையே படித்திருக்கிறீர்களே... ஆச்சரியமாக இருக்கிறது.’

‘நான் ஒரு பெண் கவிஞரில்லை. அதனால்தான் எல்லாப் புத்தகங்களையும் படித்தேன்.’

‘இருங்கள், கௌதமியிடம் சொல்கிறேன்.’

‘ஐயோ, ப்ளீஸ்... அந்த டெரரிஸ்ட்டிடம் என்னை மாட்டிவிட்டு விடாதீர்கள்.’

மதியம் மூன்று மணி.

‘ஸாரி. நான் ஸ்கூட்டரில் வந்துகொண்டிருந்தேன். அதனால்தான் உடனே பதில் கொடுக்க முடியவில்லை.’

‘பரவாயில்லை. என்ன, தூங்கவில்லையா?’

‘தூக்கம் கண்களை அசத்துகிறது. ஆனால் நண்பரின் வீடு, தூங்க முடியாது.’

‘உங்களுக்கு என் புத்தகங்களைக் கொடுக்க வேண்டும். தபாலில் அனுப்பி

வைக்கவா? நேரில் கொடுக்கவா?'

'வேண்டாம். என் ஃப்ரெண்ட் அலெக்ஸிடம் கொடுத்து விடுங்கள். நான் வாங்கிக்கொள்கிறேன்.'

'ஓ, அலெக்ஸை உங்களுக்குத் தெரியுமா?'

'ம்... தெரியும்... நான் உங்களை ஏற்கெனவே ஒரு முறை பார்த்திருக்கிறேன் தெரியுமா?'

'என்னது? அப்படியா? எங்கே?'

'இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு, புத்தகச் சந்தையில் பார்த்தேன். பாரியிடம் நான் பேசிக்கொண்டிருந்தபோது நீங்கள் அங்கே வந்தீர்கள்...'

'ஓ... அந்தப் பெண்ணா நீங்கள்? அப்படியானால் அதற்குச் சற்று முன்பாக அலெக்ஸின் புத்தகக் கடையிலும் உங்களைப் பார்த்தேன், இல்லையா?'

'எக்ஸாக்ட்லி.'

'சரி. நாளை மீண்டும் சந்திப்போம்...'

'முடியாது. இந்த ஃபோன் என்னுடையதல்ல. என் பாய் ஃப்ரெண்டினுடையது. நாளை வந்து வாங்கிக்கொண்டு விடுவான்.'

'ஓ... அப்படியானால் நீங்களே பிறகு தொடர்பு கொள்ளுங்கள்.'

இந்த எஸ்ஸெம்மெஸ் நட்பு இப்படியாக தொடர்ந்து கொண்டிருந்தபோது ஒருநாள் தான் படிக்கும் அண்ணா பல்கலைக்கழகத்துக்கு வர முடியுமா என்று கேட்டாள் ஜாய்ஸ். அவர்கள் நடத்தும் FM ரேடியோவுக்காக ஒரு நேர்காணல். அந்த நேர்காணலில் ஜாய்ஸின் தோழி என்னைப் பார்த்து கேட்ட முதல் கேள்வி: உங்கள்பெயர் என்ன?

உடனே நேர்காணலைப் பதிவு செய்வதை நிறுத்தச் சொன்னேன். இது நடந்து ஒரு ஆண்டு இருக்கும். அதற்குப் பிறகு ஜாய்ஸிடமிருந்து எந்தத் தொடர்பும் இல்லை.

## 37. முதல் ப்ளேஜியரிஸ நாவல்

"I am a bit weary of mankind. It is a good change to have robots and dogs."

Michel Houellebecq

இந்த நாவல் எப்போது முடியும் என்று அடிக்கடி கேட்டுக் கொண்டிருக்கிறான் அலெக்ஸ். காரணங்கள் மூன்று: ஒன்று, அவன் ஒரு பதிப்பாளன். அந்த வகையில் நாவல் எப்போது முடியும் என்று தெரிந்தால் அவனுக்கு இதன் பதிப்பைத் திட்டமிட வசதியாக இருக்கும். இரண்டு, அவனும் இதில் ஒரு கதாபாத்திரமாக வருவதால் இந்த நாவலுடன் அவனுக்கு ஒரு ரத்த சம்பந்தம் ஏற்பட்டுவிட்டது; பாவம். மூன்று, அவன் இந்த நாவலின் முதல் வாசகனாக இருந்து வருகிறான். அதாவது, இந்தப் பிரதியை அச்சில் வருவதற்கு முன்னதாகவே படித்துவிடுகிறான் என்பதல்ல இதன் பொருள். அப்படியானால் முதல் வாசகன் என்றால் என்ன? இது பற்றிக் கொஞ்சம் சொல்ல வேண்டும்.

நான் எழுதிய ‘சூன்ய வெளியில்...’ நாவலைத் தாங்களே எனக்கு எழுதிக்கொடுத்ததாக இதுவரை ஏழுபேர் அறிவித்திருக்கின்றனர். ஆனால் உண்மையில் ‘ராஸ லீலா’தான் அந்தப் பெருமைக்குரியது. ஏனென்றால், இதை இதன் கதாபாத்திரங்களே எழுதி வருகின்றனர். (அவ்வகையில் இந்த நாவலை தமிழ் மற்றும் மலையாளத்தின் முதல் ப்ளேஜியரிஸ நாவல் என்று கூறலாம்). அந்த எழுத்துக்களை அலெக்ஸ் அப்போதைக்கப்போதே படித்து வருவதால், அவன் இந்த நாவல் உருவாவதற்கான கச்சாப் பொருட்களையே படித்து விடுகிறான் என்று ஆகிறது.

எனவே, இந்த நாவல் எப்போது முடியும் என்பதை என்னைவிட என் கதாபாத்திரங்களே நன்கு அறிவர். ஆனால் அவர்களிடமும் இது எப்போது முடியும் என்று கேட்பதற்கில்லை. காரணம், அவர்களெல்லாம் கனவுலகைச் சேர்ந்தவர்கள். கணினியின் வழியே வந்துவிட்டு மின்னல் வேகத்தில் மறைந்துவிடுவது அவர்களின் இயல்பு. அவர்களின் சொற்களை அலெக்ஸுக்கு அப்படியே ‘ஃபார்வர்ட்’ செய்வேன். படித்துவிட்டு ‘பெருமாள், நீ ஒரு பயங்கரமான ஆள்’ என்றோ, ‘மெயில்கள் எல்லாம் படித்தேன்; ஒரே பதற்றமாக இருக்கிறது’ என்றோ எஸ்ஸெம்மெஸ் அனுப்புவான்.

எனக்கும் அலெக்ஸுக்கும் பல ஒற்றுமைகள் இருப்பதாகத் தோன்றுகிறது. உதாரணமாக, தமிழ்ப் பெண் கவிஞர்களுடனான எங்கள் உறவு. டெய்ஸி பற்றிச் சொன்னேன், இல்லையா? அதிலிருந்த சூட்சுமக் குறிப்பை நீங்கள் உணர்ந்துகொண்டீர்களா என்று எனக்குத் தெரியவில்லை. நான் முப்பது ஆண்டுகளாக எழுதி வருகிறேன். ஆனால் என் பெயர்கூட ராஜ் கிஷோருக்குத் தெரியாது. ஆனால் நேற்று வந்த டெய்ஸி அவருடன் இரவு பத்து மணிக்கு மேல் படு சாதாரணமாகப் பேசுகிறாள். என்னுடன் பேசியபோதுதான் ராஜ்கிஷோரின் குரலில் என்ன குழைவு! நான் அந்தத் தருணத்தில் மிகவும் அவமானகரமாக உணர்ந்தேன்.

மக்கள் தொடர்பில் டெய்ஸியை மிஞ்ச யாராலும் முடியாது. இரண்டு வாரம் அமெரிக்கா போய் வருகிறேன் என்று கிளம்புவாள். ஆறு மாதம் கழித்துத் திரும்புவாள். இரண்டு வாரங்களுக்கு மட்டுமே அனுமதிக்கப்பட்ட வீசா ஆறு மாதங்களுக்கு நீட்டிக்கப்பட்டது எங்ஙனம்? அதெல்லாம் நமக்குப் புரியாத சமாச்சாரம்.

திடீரென்று ஒரு நாள் பார்க் ஷெரட்டன் வெஸ்ட் மினிஸ்ட்டர் பாரிலிருந்து ஃபோன் செய்தாள், ‘உடனே இங்கு வர முடியுமா?’ என்று. என்ன விஷயம் என்று கேட்டால் ‘ஹொடரோவ்ஸ்கியுடன் பேசிக்கொண்டிருக்கிறேன். நீயும் இருந்தால் நன்றாக இருக்கும்’ என்று பதில் வந்தது. ‘ஹொடரோவ்ஸ்கியை உனக்கு எப்படித் தெரியும்?’ கேள்வி வாய்வரை வந்துவிட்டது. கேட்கவில்லை. ஆனால் வேறொரு விஷயம் கேட்டேன்; ‘ஹொடரோவ்ஸ்கியின் படங்களைப் பார்த்திருக்கிறாயா?’ ‘இல்லை’ என்று பதில் வந்தது.

அதுதான் விஷயம். எனக்குத் தெரிந்தவரை ஹொடரோவ்ஸ்கியைப் பார்த்திருப்பவர்கள் தமிழ்நாட்டில் இரண்டு பேர்தான் உண்டு. அதில் நான் ஒருவன். ஹொடரோவ்ஸ்கியைப் பற்றி பல கட்டுரைகள் எழுதியிருக்கிறேன். ஹொடரோவ்ஸ்கி என் சகா. என் தோழன். என் காதலன். என் கடவுள். ஆனால் ஹொடரோவ்ஸ்கி என்றால் யார் என்றே

தெரியாத ஒரு பெண் அவனோடு வெஸ்ட் மினிஸ்ட்டர் பாரில் அமர்ந்து உரையாடிக்கொண்டிருக்கிறாள். என்னால் அந்தச் சந்திப்புக்குப் போக முடியவில்லை. சர்ஜரி முடிந்து அப்போது ஒரு சில தினங்களே ஆகியிருந்தன.

என் பெண் கதாபாத்திரங்கள் யாரோடும் எனக்கு நல்லுறவு இருந்ததில்லை. அதேதான் டெய்ஸியோடும் நடந்தது. நட்பு நீடித்தது ஒன்பது மாத காலம். (மெயில் நட்பு ஆறு மாதம் + நேர் நட்பு மூன்று மாதம்) அதற்கு முன்பே அவளை எனக்குத் தெரியும் என்றாலும் நேரில் பரிச்சயமில்லை. என்னை அவளுக்குத் தெரியும். ஒரே ஒருமுறை ஒரு இலக்கியக் கூட்டத்தில் நேரில் பார்த்தபோது முகத்தைத் திருப்பிக் கொண்டுவிட்டாள். நானோ வழக்கம்போல் அவள் உடலை மேய்ந்தேன். பிறகு திடீரென்று அமெரிக்காவிலிருந்து ஒரு ஈமெயில் அனுப்பியிருந்தாள். பதில் அனுப்பினேன். அவள் அங்கிருந்த ஆறு மாத காலம் தினமும் ஈமெயில்களில் எங்கள் நட்பையும் அன்பையும் பரிமாறிக்கொண்டோம். ஆனால் ஆரம்பத்திலேயே எச்சரித்துவிட்டாள், நமக்குள் காதல் மட்டும் வேண்டாம் என்று. ஏன் என்று கேட்காமலேயே விளக்கமும் சொன்னாள். காதல் என்ற பிரச்னையால் அவள் பல நல்ல நண்பர்களை இழந்துவிட்டாளாம். 'காதல் வந்தால் கூடவே பொஸஸிவ்னெஸ்ஸும் வந்துவிடுகிறது; மிகுந்த மனவலியுடன் அந்த நட்பு முறிந்துபோகிறது' என்றாள். 'சரி, அப்படியானால் 'பொஸஸிவ்னெஸ்' இல்லாமல் காதலிக்கலாமா?' என்ற கேள்வி எனக்கு வாய் வரை வந்து விட்டது. ஆனால் கேட்கவில்லை. 'உன் நிபந்தனைக்கு ஒப்புக்கொள்கிறேன்; சத்தியமாக உன்னைக் காதலிக்க மாட்டேன்' என்று வாக்குக் கொடுத்தேன். ம்... ஒரு பெண்ணுடன் பழக என்னென்னவோ நாடகமெல்லாம் போட வேண்டியிருக்கிறது!

ஊருக்குத் திரும்பியதும் நேரில் சந்தித்தோம். துரதிருஷ்ட வசமாக அப்போது நான் மருத்துவமனையில் இருந்தேன்.

என்னைப்போல் அவளும் மதுவின் ரசிகை. 'விதவிதமாக காக்டெயில்கள் தயார் பண்ணுவேன்; கொண்டாடுவோம்' என்று சொல்லியிருந்தாள். கடைசி வரை அது நடக்கவே யில்லை. அதற்குள்ளேயே நட்பு முறிந்துவிட்டது. நட்பு முறியாமல் இருந்திருந்தாலும் நான் அவளுடன் சேர்ந்து குடித்திருக்க முடியாது. ஏனென்றால் நான் குடிப்பதை நிறுத்திவிட்டேன். சர்ஜரிக்கும் இதற்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. இது வேறு கதை. அப்புறம் சொல்கிறேன்.

இதற்கிடையில் ஒரு நாள் மணி பற்றிப் பிரஸ்தாபித்தாள் டெய்ஸி. மணியின் அலுவலகத்தில் சில மாதங்கள் பணிபுரிந்திருக்கிறாளாம். 'எல்லாம் உப்பு புளி மிளகாய்க்காக' என்றாள்.

மணியின் அலுவலகத்தில் பணிபுரிந்தால் இவளுக்கு அதிகபட்ச மாத ஊதியம் பத்தாயிரம் இருந்திருக்கும். பத்தாயிரம் ரூபாய் சம்பளத்தில் வேலை பார்த்தவள் இவ்வளவு குறுகிய காலத்தில் எப்படி இத்தனை வசதியான நிலைமைக்கு வந்திருக்க முடியும் என்ற எண்ணம் தோன்றியது. (மணியைப் போலவே கேம்ரி கார் வைத்திருக்கிறாள் டெய்ஸி. அவள் வயது முப்பதுக்குள்தான் இருக்கும்).

'மணி பயங்கர flirt தெரியுமா?' என்று கேட்டாள்.

'ஓ... அப்படியா?'

(வேறு என்ன சொல்வது? எனக்கும் flirt பண்ண ஆசைதான். ஆனால் அதற்கு கையில் ஒரு சொகுசு காரும், தினசரி flirt செலவு குறைந்தபட்சம் 5000 ரூபாயும் வேண்டுமே?)

இந்த உரையாடல் நடந்த மறுநாள் மணியின் கைத்தொலைபேசி எண்ணைக் கேட்டாள் டெய்ஸி. 'அவனுடைய எண்ணை யாருக்கும் கொடுப்பதில்லையே' என்றேன். அவள் நடத்தும் பத்திரிகைக்கு மணியிடமிருந்து விளம்பரம் வாங்குவதற்காக அவனுடைய தொலைபேசி எண் தேவைப்படுகிறதாம்.

விளம்பரம் என்றால் மாதம் பத்தாயிரம் ரூபாய். 'என்ன இது, முதலமைச்சரே பேச விரும்பினால்கூட அதைத் தட்டிக் கழித்து விடும் மனோபாவமுள்ள மணியின் தொலைபேசி எண்ணை இவ்வளவு சுலபமாகக் கேட்கிறாளே?' என்று நினைத்துக்கொண்டேன்.

நானும் டெய்ஸியும் மிக நெருங்கிய நண்பர்களான பிறகு அவள் என்னுடைய ஒரு கட்டுரைத் தொகுதியைப் பதிப்பிக்க விரும்புவதாகக் கூறினாள். (அவள் ஒரு பதிப்பகமும் வைத்திருக்கிறாள்.)

தொகுதி வந்தது. பிறகு திடீரென்று 'உன் புத்தகங்களை வெளியிடும் நோக்கத்தில் நான் உன்னோடு பழகுகிறேன் என்று நினைத்துவிடாதே' என்று சொன்னாள். அது எனக்குச் சற்று மனவருத்தத்தை ஏற்படுத்தியது. காரணம், நான் ஒன்றும் பாவ்லோ கோய்லோ அல்ல, மில்லியன் கணக்கில் புத்தகங்கள் விற்பதற்கு. மேலும், அவள் அதைச் சொன்ன போது நாங்கள் நட்பின் துவக்க காலத் தயக்கங்களைக் கடந்து வந்திருந்தோம். அல்லது, அப்படி நான் நினைத்துக் கொண்டிருந்தேன்.

ஆனால் பிறகு அவள் என்னிடம் என் புத்தகங்களைப் பதிப்பிக்கும் விஷயம் பற்றியே எப்போதும் பேசிக்கொண்டிருந்தாள். உடனடியாக என்னுடைய ஐந்தாறு புத்தகங்களைக் கொண்டுவர வேண்டும் என்றாள். அப்புத்தகங்களையெல்லாம் பதிப்பிப்பதற்கு அலெக்ஸிடம் நான் ஏற்கெனவே ஒப்புதல் அளித்திருந்தேன். 'வாய் வார்த்தையாகத்தானே சொன்னாய்? அதையெல்லாம் வாங்கி என்னிடம் கொடு' என்றாள்.

'அதற்கு என் மனசாட்சி ஒப்புக்கொள்ளவில்லை' என்றேன்.

'அலெக்ஸ் உனக்கு ராயல்டி தர மாட்டான். அவன் ஒரு ஏமாற்றுப் பேர்வழி.'

'ராயல்டி தராவிட்டால் பரவாயில்லை; நான் பணத்துக்காக எழுதவில்லை' என்று மனதிற்குள் நினைத்துக்கொண்டேன். மேலும், மூன்று வருட காலத்தில் விற்கப்போகும் ஆயிரம் பிரதிகளுக்குக் கிடைக்கும் ராயல்டியில் என்ன மயிரா பிடுங்க முடியும் என்றும் தோன்றியது.

இந்த உரையாடலுக்குப் பிறகு என்னோடு தொடர்பை துண்டித்துக்கொண்டாள் டெய்ஸி. ஆனால் அவள் நடத்தும் 'சினிமா' என்ற பத்திரிகைக்கு கட்டுரை கேட்டு அவளுடைய அலுவலகத்திலிருந்து பிச்சப்பா என்ற பெயருள்ள ஒருவர் என்னைத் தொடர்பு கொள்ள ஆரம்பித்தார்.

'சினிமா'வுக்கு நான் எழுதித் தருவதாக டெய்ஸியிடம் கூறியிருந்த

கட்டுரைத் தொடரின் முதல் அத்தியாயத்தைக் கேட்டு ஒரு நாள் அவர் என்னோடு பேசினார். உடனே நான் டெய்ஸியையே நேரடியாகத் தொடர்பு கொண்டு, 'ஏற்கெனவே நான் ஏழு பத்திரிகைகளுக்கு எழுதிக் கொண்டிருக்கிறேன். கிட்டத்தட்ட என் நிலைமை முருகன் இட்லி கடையைப்போல் ஆகிவிட்டது. உன் பத்திரிகைக்கும் எழுதச் சொல்லி வற்புறுத்தாதே டெய்ஸி' என்று கூறினேன். ஆனால் அவள் என் மீது பெரும் ஊடல் கொண்டு இரண்டு நாள் பேசாமல் இருந்து என்னைப் பணிய வைத்தாள். அந்தக் கட்டுரையைக் கேட்டுத்தான் பிச்சப்பா என்னைத் தொடர்பு கொண்டது.

'ஏற்கெனவே அனுப்பிவிட்டேன்' என்றேன்.

'ஓ... அப்படியா சார்? படித்துவிட்டுப் பேசுகிறேன்.'

'என்னது, படித்துவிட்டுப் பேசுகிறீரா? நீர் யார் என் கட்டுரையைப் படித்துவிட்டுப் பேச? முதலில் உமக்கு அந்தக் கட்டுரை புரியுமா என்று பாரும்' என்று அவரிடம் சொல்லத் தோன்றியது. சொல்லவில்லை.

இது நடந்து ஒரு மாதம் கழித்து பிச்சப்பா என்னைத் தொடர்பு கொண்டார்.

'சார், இஷ்யூ கிடைத்ததா?'

'இல்லையே.'

'அப்படியா, என்ன சார் இது? அப்பவே அனுப்பிட்டமே சார்?'

'எப்பவே?'

'அது ஆச்சு சார், ஒரு வாரம் இருக்கும்.'

பத்திரிகை வெளிவந்து ஒரு வாரம் ஆகிவிட்டது என்று எனக்கும் தெரியும். என் கட்டுரையைப் படித்து பல பேர் எனக்கு ஃபோன் செய்திருந்தார்கள்.

'எனக்குக் கிடைக்கலியே?'

'அப்படியா, அனுப்பி ஒரு வாரம் ஆச்சே சார்?'

'ஓ...'

'சரி சார்...'

பிறகு மறுநாளும் பிச்சப்பாவிடமிருந்து ஃபோன்.

'சார், இஷ்யூ கிடைத்ததா?'

'அதுதான் நேற்றே சொன்னேனே, இல்லை என்று?'

'இல்ல சார், இன்னிக்குக் கிடைச்சுதான்னு கேட்டேன்.'

'ஓ.. மை காட்! இன்னிக்கும் கிடைக்கலீங்க...'

'ஓ, அப்படியா சார்? அனுப்பி ஒரு வாரம் ஆச்சே?'

'ஓ...'

'சரி சார், நான் குரியர்ல விசாரிக்கிறேன்.'

பிறகு மறுநாளும் பிச்சப்பாவிடமிருந்து ஃபோன்.

'சார், நான் பிச்சப்பா பேசுறேன். இஷ்யூ கிடைத்ததா?'

‘என்னங்க இது, நேத்தேதான் சொன்னனே கிடைக்கலேன்னு?’

‘ஆமா சார். சாரி சார். இன்னிக்குமா கிடைக்கலே?’

‘இல்லியே?’

‘அப்படியா, குரியர்ல விசாரிச்சேன். அவங்க அனுப்பிட்டதா சொல்றாங்களே சார்?’

‘அதுக்கு நான் என்ன பண்ண முடியும் பிச்சப்பா?’

‘ஓகே, சரி சார்...’

பிறகு, மறுநாளும் பிச்சப்பாவிடமிருந்து ஃபோன்

‘சார், பிச்சப்பா பேசுறேன்... இஷ்யூ கிடைத்ததா?’

‘ஏங்க, நான்தான் சொன்னேன்ல கிடைக்கலேன்னு? ஏங்க இப்படி என் உயிரை வாங்கறீங்க?’

‘ஓ... சாரி சார். குரியர்ல அனுப்பிட்டதா சொல்றாங்க...’

‘அதுக்கு நான் என்னங்க பண்ண முடியும்? ஏங்க என் உயிரை...’

நான் வாக்கியத்தை முடிப்பதற்குள் குறுக்கிட்ட பிச்சப்பா ‘சரி சார், நான் மறுபடியும் அனுப்பி வச்சுடறேன்’ என்றார்.

பிறகு மறுநாளும் பிச்சப்பாவிடமிருந்து ஃபோன்.

‘சார், பிச்சப்பா பேசுறேன். இஷ்யூ கிடைத்ததா?’

‘ஓ, மை காட்! என்னங்க இது, அநியாயமா இருக்கு... ஏங்க இப்படி என் உயிரை எடுக்கறீங்க?’

‘சாரி சார்... நேத்து மறுபடியும் உங்களுக்கு இஷ்யூவை அனுப்பி வச்சிருக்கேன் சார். அதைச் சொல்லத்தான் ஃபோன் பண்ணினேன்.’

பிறகு, மறுநாளும் பிச்சப்பாவிடமிருந்து ஃபோன்.

‘சார், பிச்சப்பா...’

அதற்குள் அவரைக் குறுக்கிட்ட நான் ‘இஷ்யூ கிடைச்சது. தேங்ஸ்’ என்று சொல்லி உரையாடலை முடித்தேன்.

இந்தச் சம்பவம் நடந்து சரியாக ஒரு மாதம் கழித்து இருபதாம் தேதியன்று பிச்சப்பாவிடமிருந்து ஃபோன்.

‘சார், நான் பிச்சப்பா பேசுறேன். இஷ்யூ கிடைத்ததா?’

நான் அப்போது அடைந்த பீதியை என்னால் வார்த்தைகளால் விளக்க முடியவில்லை. வாசகர்களே.. மன்னியுங்கள். சுருக்கமாகச் சொன்னால், ஒரு மன நோயாளியைப் போலானேன் நான். ஏனென்றால், எனக்கு இஷ்யூ கிடைக்கவில்லை. உரையாடல் அனைத்தும் கடந்த மாதம் போலவே நடந்தேறியது. ஒரு வார்த்தை பிசகாமல் அப்படி அப்படியே அதே உரையாடலை நாங்கள் நிகழ்த்தி முடித்தோம். ஒரு நாள் அல்ல; ஒரு வாரம் தினந்தோறும் பிச்சப்பாவின் ஃபோனை நினைத்து பீதியுற ஆரம்பித்தேன். அவ்விஷயம் என்னைக் கனவிலெல்லாம் பயமுறுத்த ஆரம்பித்தது.

பிறகு ஒரு வாரம் கழித்து இஷ்யூ எனக்குக் கிடைத்த பிறகுதான் பிச்சப்பாவினால் எனக்கு ஏற்பட்ட மனநோய் விலகியது.

ஆனால் மறுமாதம் பதினைந்தாம் தேதி துவங்கியதுமே எனக்குள் ஒருவித குளிர் ஜுரம் பரவுவதுபோல் பிச்சப்பாவின் குரல் கேட்க ஆரம்பித்தது. என்னைப் பிடிக்காத ஆள் யாராவது எனக்கு செய்வினை வைத்திருப்பார்களோ என்றெல்லாம் கூட நினைக்க ஆரம்பித்துவிட்டேன். சரியாக இருபதாம் தேதி ஆரம்பித்த சித்ரவதை ஒரு வாரம் நீடித்து இஷ்யூ கிடைத்ததும் நின்றது.

மூன்றாவது மாதம் பதினைந்தாம் தேதி வந்ததும் எனக்குள் ஒருவித குளிர் ஜுரம் பரவ ஆரம்பித்ததும் நான் வெறிபிடித்தவன் போலானேன். இந்த முறை நான் அவனை சும்மா விடப்போவதில்லை. அவன் என் குரல்வளையைக் கடித்து ரத்தத்தை உறிஞ்சுவதற்குள் நான் அவனுடைய குரல் வளையைக் கடித்திட வேண்டுமென்று பற்களைக் கடித்தபடி திட்டமிட்டுக்கொண்டிருந்தேன்.

இருபதாம் தேதிக்காகக் கொலை வெறியுடன் காத்திருந்தேன். இடையில் அலெக்ஸ் கூறிய இரண்டு விஷயங்கள் என் மனதில் திரும்பத் திரும்ப தோன்றிக்கொண்டேயிருந்தன. ஒன்று, டெய்ஸியின் நட்பைப் பற்றி அவனிடம் கூறியபோது அவன் சொன்னது: ‘கடவுள்தான் உன்னைக் காப்பாற்ற வேண்டும்.’ இரண்டு, என்னைப் பரிசோதித்த இதய நிபுணர்கள் ‘பதற்றம் மற்றும் மன அழுத்தம் காரணமாகத்தான் எனக்குப் பிரச்னை வந்தது’ என்று கூறியதை அலெக்ஸிடம் சொன்னபோது அவன் கூறினான் : ‘அது நம் கையில் இல்லையே? நம்மைச் சுற்றியுள்ளவர்களின் கையில் அல்லவா இருக்கிறது?’

இருபதாம்தேதி பிச்சப்பாவின் குரலைக் கேட்டதும் பயங்கரமாக வெடித்தேன்.

‘ஏய்யா... உனக்கு வெட்கமாக இல்லையா? உங்கள் பத்திரிகைக்கு கட்டுரை எழுதிக்கொடுப்பதைத் தவிர வேறு என்னய்யா கெடுதல் செய்தேன்? ஏன் இப்படி மாதாமாதம் என் கழுத்தை அறுக்கிறாய்? முதலில் ஃபோனை டெய்ஸியிடம் குடுய்யா.’

டெய்ஸியிடம் ஃபோன் கொடுக்கப்பட்டதும் பிச்சப்பாவைக் குறித்து ஒரு வசைச் சொல்லை உதிர்த்துவிட்டு அந்த ஆள் எனக்குச் செய்துவரும் சித்ரவதையை ஒரு வார்த்தை விடாமல் இதில் விவரித்துள்ளபடி விளக்கினேன்.

இடிஇடியென்று சிரித்த அவள் ‘சரி, நான் விசாரிக்கிறேன். இனிமேல் இப்படி நடக்காது’ என்று உறுதி கூறினாள்.

பிறகு சிறிது நேரம் கழித்து அவளிடமிருந்து ஒரு எஸ்ஸெம்மெஸ் வந்தது. ‘பெருமாள், நான் பிச்சப்பாவை விசாரித்தேன். தவறுதான். ஆனால் அதற்காக நீ இவ்வளவு கொடூரமாக நடந்துகொள்வாய் என்று நான் எதிர்பார்க்க வில்லை.’

கிளம்பியது மறுபடியும் ஆவேசம். ஃபோனை எடுத்து அவளிடம் கத்தினேன். அதற்கு அவள் ‘பாவம் பெருமாள் அந்தப் பையன்... கேட்டதும் அவன் கைகாலெல்லாம் நடுங்குகிறது’ என்றாள். ‘எனக்கும்தான் டெய்ஸி கைகாலெல்லாம் நடுங்குகிறது. இந்தப் பதற்றம் குறைய எனக்கு மூன்று

நாட்கள் ஆகும்' என்று சொன்னேன். ஆனால் அவளுக்கு என் பிரச்னை புரிந்ததற்கான எந்த அறிகுறியும் அவள் பேச்சில் தெரியவில்லை.

பிறகு சிறிது நேரம் கழித்து என் கட்டுரையின் அடுத்த பகுதியை எப்போது அனுப்புவேன் என்று கேட்டு ஒரு எஸ்ஸெம்மெஸ் கொடுத்தாள். மேற்கொண்டும் பொறுப்புகளை ஏற்பது எவ்வளவு கடினமானது என்று விளக்கி பதில் அனுப்பினேன். K என்று ஒரு எழுத்தில் பதில் வந்தது. அதோடு அவள் நட்பு முடிந்தது.

ஆனால் கதை அதோடு முடியவில்லை. மறுநாள் காலை எனக்கு ஒரு ஃபோன் வந்தது. பிச்சப்பாவுக்கு பதிலாக இப்போது குரியர் ஆஃபீஸ். 'நீங்கள் எங்கள் மீது புகார் செய்திருப்பதாக தகவல் வந்தது சார். ஆனால் தவறு எங்களுடையது அல்ல. உங்கள் வீடுதான் பூட்டியிருந்திருக் கிறது' என்றார் பேசியவர்.

ஆனால் வீட்டு பூட்டியிருக்க வாய்ப்பேயில்லை. நான் மருத்துவமனைக்குச் சென்ற நாளிலிருந்து வீட்டு வேலைக்காக கீதா என்ற பணிப்பெண் வந்து சேர்ந்திருந்தாள். அவள் மட்டும் வந்திருக்காவிட்டால் நான் வளர்க்கும் ரைட்டர் பட்டினி கிடந்தே செத்திருக்கும். அது யாரிடமும் பழகாது. அதனால் அதற்குச் சாப்பாடு வைக்கச் சொல்லி யாரிடமும் சொல்லிவிட்டும் போயிருக்க முடியாது. எந்த அந்நியரைப் பார்த்தாலும் கடித்துக் குதறிவிடும் சுபாவமுள்ல ரைட்டர், கீதாவை மட்டும் பார்த்த மாத்திரத்தில் ஏற்றுக்கொண்டது மற்றுமொரு அதிசயம். 'எல்லாம் பாபாவின் அருள்' என்றாள் மீரா.

எப்போதும் கீதா வீட்டிலேயே இருப்பதால் வீடு பூட்டியிருக்கும் வாய்ப்பு இல்லை.

பிறகு, அன்றைய தினம் மாலை குரியர் ஆஃபீஸிலிருந்து திரும்பவும் ஃபோன் வந்தது. அதே 'தபால் கிடைத்துவிட்டதா?' ஃபோன்தான்.

அப்போதுதான் கைத்தொலைபேசியிலுள்ள ஒரு வசதி என் அறிவுக்குப் பட்டது. அதாவது, ஒரு பட்டனை அழுத்தினால் அழைப்பைத் துண்டித்துவிட முடிந்தது. ஆகா, இதே பாணியை பிச்சப்பாவிடமும் பின்பற்றாமல் போனோமே என்று நொந்துகொண்டேன்.

ஆனால் கதை இதோடு முடிந்துவிடவில்லை.

மறுநாள் காலை ஏழு மணிக்கு ஒரு ஆள் என் வீட்டுக் கதவைத் தட்டினார். கதவைத் திறந்ததும் தடாலென்று என் காலில் விழுந்தார் அவர்.

கதை என்னவென்றால், அவர்தான் 'சினிமா' பத்திரிகையை என்னிடம் சேர்ப்பிக்க வேண்டிய குரியர் பணியாளர். தினமும் சைக்கிளில் அறுபது கிலோமீட்டர் மிதிக்க வேண்டியிருப்பதால் அவரால் கொடுக்க முடியாமல் போக, அது இப்போது அவருடைய வேலைக்கே உலை வைத்துவிட்டது. நான்தானே கண்ணாயிரம் பெருமாள்? நான்தான் அவருக்கு எதிராகப் புகார் செய்திருக்கிறேன். இப்போது அவருடைய குடும்பமே பட்டினி கிடக்கப்போகிறது.

என்ன செய்யட்டும் நான்? அந்தப் பிச்சப்பா தான் சித்ரவதை செய்தது போதாதென்று குரியர் அலுவலகத்துக்கும் என் தொலைபேசி எண்ணைக் கொடுத்துத் தொலைத்திருக்கிறான்.

தன் குடும்பத்தை நடுத்தெருவுக்குக் கொண்டுவந்துவிட்ட என்னை அந்தக் குரியர் பணியாளர் கத்தியால் குத்திவிட்டது போல் ஒரு பயங்கரக் கனவு அன்றிரவு எனக்கு வந்தது.

***

கதையின் இந்தப் பகுதியைப் படித்துப் பார்த்த அலெக்ஸ் கூறிய ஒரு தகவல் சுவாரசியமாக இருந்தது. டெய்ஸி தண்ணியடிப்பதாகக் கூறுவது ஒரு கப்ஸாவாம். சும்மா பந்தாவுக்காக அப்படிச் சொல்லிக்கொண்டு திரிகிறாளாம். மேல்தட்டு வர்க்கத்துடன் பழகுவதற்கு தண்ணி அடிப்பதாகக் கூறுவதுதான் பாந்தமாக இருப்பதால் அப்படி ஒரு பாசாங்கு. மற்றபடி ஒரே ஒரு பெக்கை வைத்துக்கொண்டே ஒரு முழு செஷனையும் ஓட்டிவிடுவாளாம். கேட்டால் இன்று தலைவலி, அது இது என்று ஏதாவது சாக்குபோக்கு. ‘அடடா, அந்த ட்ராமாவைப் பார்க்கும் சந்தர்ப்பம் இல்லாமல் போயிற்றே...’ என்று நினைத்துக்கொண்டேன். தர்மு சிவராமு எழுதிய நாடகம் ஒன்று ஞாபகம் வந்தது. அதில் வரும் பெண் ஒருத்தி தன்னை ஒரு கலகக்காரியைப் போல் காண்பித்துக்கொள்வதற்காகப் பலரோடும் பாலியல் உறவு இருப்பதாகக் கூறிக்கொண்டு திரிவாள். கடைசியில் பார்த்தால் அவள் கன்னித்திரை கிழியாத ஒரு வர்ஜின் என்பது தெரியவரும்!

## 38. கிராம அபிவிருத்தித் திட்டம்

> பத்திர சேனன் என்னும் கலிங்க மன்னன் தன் மனைவியின் இல்லத்தில் மறைந்திருந்த உடன்பிறந்தானால் கொல்லப் பட்டான். கரூச நாட்டு வேந்தனை அவனுடைய மைந்தன் தன் தாயின் படுக்கையறையில் மறைவாக இருந்து கொன்றான். காபி மன்னனை அவனுடைய மனைவி நஞ்சைத் தேன் எனக் கூறிப் பொறியுடன் கலந்து உண்ணச் செய்ததன் மூலம் கொன்றாள். வைரந்தியன் என்ற மன்னனை நஞ்சு பூசப்பட்ட சிலம்பினால் அவன் மனைவி கொன்றாள். சௌவீர தேசத்து மன்னனான பரந்தபனை மேகலை மணிகளால் அவனுடைய தேவி கொன்றாள். சாலூதன் என்பவனைக் கண்ணாடியால் அவனுடைய மனைவி கொன்றாள். விடுதரன் என்பவனைச் சடைப்பின்னலில் மறைத்து வைத்திருந்த கருவியால் அவனுடைய மனைவி கொன்றாள். எனவே தேவியருள் எவரையும் குறித்து அவருடைய இல்லத்துக்குப் போதல் கூடாது.
>
> -கௌடில்யரின் அர்த்த சாஸ்திரம்:
>
> முதலாம் அதிகாரம் - பயிற்சி பகர்தல்

ஒரு அரசியல் கட்சியில் அக்கட்சியின் ஸ்தாபகருக்குப் பிறகு வரும் அடுத்த கட்ட தலைவர் எப்படி தலைமைப் பொறுப்பை ஏற்றார் என்ற வரலாற்றைப் படித்தீர்களானால் அதில் எத்தனையோ பயங்கரமான சம்பவங்கள் நிகழ்ந்திருப்பதைக் காணலாம். அல்லது, மன்னராட்சியில் ஒரு மன்னனுக்குப் பிறகு அடுத்தவன் எப்படி ஆட்சிப் பொறுப்பை ஏற்றான்; அதற்காக எத்தனை சதித் திட்டங்கள், நயவஞ்சகங்கள், கொலைகள்

எல்லாம் நடந்தேறின என்பதெல்லாம் நாம் வரலாற்றின் ஏடுகளின் படித்தவை. படித்ததோடு மட்டும் அல்லாமல் அதைச் செயல்படுத்தும் திறமை கொண்டவள் ஹெலன். அதற்காக அவளைக் கொலைகாரி என்று சொல்வதாக நீங்கள் நினைத்துவிடக் கூடாது. அந்த அளவுக்கெல்லாம் அவள் போகவில்லை. அவள் செய்தது மிகச் சிறிய விஷயம்.

ஹெலன் திருநெல்வேலிக்குப் பக்கத்தில் ஒரு கிராமத்தில் வசிப்பவள். 'ராஜீவ் காந்தி கிராம் வ்ருத்தி யோஜனா' என்ற திட்டத்தின் திருநெல்வேலி பிரிவின் ப்ரெஸிடெண்ட். இத் திட்டத்தினால் அந்தப் பகுதி அபிவிருத்தி அடைந்ததோ இல்லையோ, ஹெலனின் வாழ்வில் நல்ல அபிவிருத்தி ஏற்பட்டது. அஞ்சுக்கும் பத்துக்கும் சிங்கியடித்துக் கொண்டிருந்த அந்தப் பெண் கவி சில வருடங்களிலேயே ஒரு கோடி ரூபாய்க்கு சொந்தக்காரியானாள். இந்தியாவில் வளர்ச்சித் திட்டங்களுக்காக அரசு ஒதுக்கும் தொகையில் பத்து சதவிகிதம்கூட மக்களைச் சென்று அடைவதில்லை என்பதால் அதை ஒரு பெரிய விஷயமாகவும் யாரும் எடுத்துக் கொள்ளவில்லை. கோடி என்றதும் ஞாபகம் வருகிறது. டெய்ஸி ஒரு படம் எடுக்கப்போகிறேன் என்று சொல்லி ஒரு என்னாரய்யிடம் பதினைந்து லட்ச ரூபாய் வாங்கியதாகவும், பிறகு படத்தை எடுக்காமல் அந்தப் பணத்தை 'ஸ்வாஹா' செய்துவிட்டதாகவும், அதனால் அந்த என்னாரய் லோக்கல் அடியாட்களை வைத்து டெய்ஸியின் கணவரைக் கடத்திக் கொண்டுபோய் வைத்திருந்து, பிறகு ஐந்து லட்சம் ரூபாய் கொடுத்து அவரை மீட்டதாகவும் ஊரில் எல்லோரும் பேசிக் கொண்டார்கள்.

இது ஆஸ்திரேலியாவிலிருந்து வந்திருக்கும் என் நண்பன் சாமிக்கும் தெரிந்திருந்தது. 'டெய்ஸியிடம் கொஞ்சம் ஜாக்கிரதையாக இரு, நீ என்னாரய் என்று தெரிந்தால் ஒரே அமுக்காக அமுக்கிவிடுவாள்' என்று சொன்னபோது அவன் அவ்விஷயத்தைச் சொன்னான். மேலும், அவள் அவனை ஏற்கெனவே அமுக்கப் பார்த்திருக்கிறாள். இவன்தான் சிக்காமல் தப்பியிருக்கிறான்.

'ஒரு சங்கோஜம்கூட இல்லாமல் வெளிப்படையாகவே செய்கிறாள். அதுதான் ஆச்சரியமாக இருக்கிறது' என்றான் சாமி. ஆஸ்திரேலியாவிலிருந்து வந்து இறங்கியதுமே எப்படியோ டெய்ஸியின் கண்களில் பட்டிருக்கிறான். சாமி புகைப்படங்கள் எடுப்பவன். ஆவணப்படம் ஒன்று எடுப்பதற்காக இந்தியா வந்திருக்கிறான். அவனைச் சந்தித்த உடனேயே 'எப்போது ஆஸ்திரேலியா கிளம்புவீர்கள்?' என்று கேட்டாளாம் டெய்ஸி. 'படம் எடுத்து முடித்த பிறகுதான் கிளம்ப வேண்டும்; படம் எப்போது முடியும் என்பது என் கையில் இல்லை' என்று சொல்லியிருக்கிறான் சாமி.

தான் எடுத்த ஆவணப் படங்களை ஆஸ்திரேலியாவில் திரையிட்டு அவற்றை நல்ல விலைக்கு விற்றுத்தர வேண்டும் என்று அவனிடம் கோரிக்கை வைத்திருக்கிறாள் டெய்ஸி. இவ்வளவும் அவனைச் சந்தித்த முதல் தினமே. பிறகு அவனைச் சந்திக்கும்போதெல்லாம் 'எப்போது ஆஸ்திரேலியா கிளம்புவீர்கள்?' என்று துளைத்தெடுத்திருக்கிறாள். 'என்ன இது, இன்றைக்கே ஆஸ்திரேலியா போய் என் படங்களை விற்று காசு அனுப்பு என்று சொல்வாய் போலிருக்கிறதே?' என்று பச்சையாகக் கேட்டிருக்கிறான் சாமி. 'சே சே... அதற்கில்லை... சும்மாதான் கேட்டேன்'

என்று அசடு வழிந்தாளாம் டெய்ஸி. உடனே அவள் மீது இரக்கப்பட்டு அன்பாக hug பண்ணியிருக்கிறான் சாமி.

தமிழ்நாட்டு ராஜீவ் காந்தி க்ராம் வ்ருத்தி யோஜனா ப்ரெஸிடென்ட்டுகள் நாற்பது பேரும் பாங்க்ளாதேஷின் பேகம் கலீதா ஜியா க்ராம் வ்ருத்தி திட்ட ஏற்பாடுகளைப் பார்த்து வருவதற்காக பாங்க்ளாதேஷ் அரசு அழைப்பு விடுத்திருந்தது. அது பற்றி ஹெலன் தன் ஊரிலுள்ளவர் களிடம் 'இந்த கலீதா வேற கூப்டுக்கிட்டே இருக்கா... பாங்க்ளாதேஷ் போகணும்' என்று சொல்லியிருக்கிறாள். இதைப் பற்றி அந்த ஊர்க்காரர் ஒருவர் அலெக்ஸிடம் 'ஏன் தம்பி, ஒரு ப்ரைம் மினிஸ்டர் போய் நம்ம ஹெலனெக் கூப்பிடுவாங்களா?' என்று வெகுளியாகக் கேட்க, 'அவுங்க ப்ரைம் மினிஸ்ட்ரா இருந்தாலும் ஹெலன் ஒரு ப்ரெஸிடென்ட் இல்லையா? என்ன இருந்தாலும் பதவி பெருசாச்சே?' என்று பதில் சொல்லியிருக்கிறான் அலெக்ஸ்.

ஹெலனின் பாங்க்ளாதேஷ் பயணக் கட்டுரை ஒரு வெகுஜனப் பத்திரிகையில் தொடராக வெளிவந்தது. உண்மையில் இந்தக் கட்டுரைக்காக அப்பத்திரிகையில் ஒரு 'டீமே' வேலை செய்திருக்கிறது. எப்படியென்றால் ஹெலன் தான் போகும் ஊரின் பெயரையும், அங்கே தங்கள் குழு கலந்துகொண்ட கூட்டம் மற்றும் அதன் தீர்மானங்கள் பற்றியும் எழுதி அனுப்பிவிடுவாள். அதை வைத்துக்கொண்டு அந்த ஊரைப் பற்றி சுவாரசியமான தகவல்களை கணினியில் பீராய்ந்து பீராய்ந்து கட்டுரையைத் தயாரித்துவிடும் பத்திரிகைக் குழு.

மேற்படி கட்டுரையைப் பற்றி ஹெலன் இரண்டு விதக் கருத்துக்களை பத்திரிகைக்குத் தெரிவிப்பது வழக்கம். ஒன்று, இந்த வாரம் கட்டுரைக்கு ஏகப்பட்ட வரவேற்பு இருந்தது. இரண்டு, இந்த வாரம் கட்டுரைக்கு அவ்வளவாக வரவேற்பு இல்லை. இதற்கு என்ன காரணம் இருக்கக்கூடும் என்று பத்திரிகைக்காரர்கள் தலையைப் பிய்த்துக்கொண்டு யோசித்தும் பதில் கிடைக்கவில்லை. பிறகுதான் கடைசியில் தெரிந்திருக்கிறது. அதாவது, பத்திரிகையில் ஹெலனின் வண்ணப் புகைப்படம் வந்திருந்தால் கட்டுரைக்கு பலத்த வரவேற்பு இருந்ததாகவும், கறுப்பு வெள்ளை புகைப்படம் வந்திருந்தால் அவ்வளவாக வரவேற்பு இல்லை என்பதாகவும் சொல்லியிருக்கிறாள்!

ஹெலன் பாங்க்ளாதேஷ் சென்றிருந்தபோது கேரளாவிலிருந்து சென்னை வந்திருந்தான் சன்னி. அவன் ஒரு இலக்கியப் பத்திரிகையில் முக்கியமான பொறுப்பில் இருந்தான். அவன் என்னிடம் 'ஹெலன் என்பது யார்?' என்று கேட்டான். நான் விபரம் சொன்னேன். அதற்கு அவன் 'அந்தப் பெண்ணுக்கு என் மொபைல் நம்பர் எப்படிக் கிடைத்தது என்று தெரியவில்லை. ஒரு நாளைக்கு ஐம்பது எஸ்ஸெம்மெஸ் அனுப்புகிறார்' என்றான். அவளுடைய நாவலின் மலையாள மொழிபெயர்ப்பை அவனுடைய பத்திரிகையிலோ அல்லது வேறு ஏதாவதொரு பத்திரிகையிலோ தொடராக வெளிவர அவன் உதவி செய்ய வேண்டும் என்று நச்சரித்துக்கொண்டிருக்கிறாளாம். 'நான் அவருடைய கவிதைகளையே இன்னும் படித்ததில்லை. மேலும் ஒரு பிரச்னை என்னவென்றால், அந்த நாவல் ஆயிரம் பக்கங்களைத் தாண்டிவிட்டதாம். இன்னும் முடியவில்லையாம். எழுதிக்கொண்டுதான் இருக்கிறாராம். அவ்வளவு பெரிய நாவலைப் படிக்காமல் நான் எப்படி அதன் பிரசுரத்தில் உதவி செய்ய முடியும்?' என்று பரிதாபமாகக் கூறினான்

சன்னி. எல்லாம் இந்த இரண்டாம் உத்தமத் தமிழ் எழுத்தாளனால் வந்தது. அவன்தான் ஆயிரம் பக்கத்துக்கு ஒரு நாவலை எழுதி மற்ற எழுத்தாளர்களின் வயிற்றில் புளியைக் கரைத்துவிட்டான். அதன் விளைவு, இப்போது தலையணை சைஸில் நாவல் எழுதுவதே மோஸ்தராகிவிட்டது. அதோடு ஹெலன் எழுதிக்கொண்டிருக்கும் அந்த நாவலைப் பற்றி ‘இந்து’ நாளிதழில் மூன்று முறை நான்கு பத்தியில் செய்தி வந்திருந்தது - அவளுடைய புகைப்படத்துடன். அதைப் பார்த்து பொறாமையில் என் வயிறு எரிந்தது. பொதுவாக அந்நாளிதழைப் பொறுத்தவரை, தமிழ் எழுத்தாளன் என்ற ஒரு ஜீவராசியே இந்தப் பூமியில் இல்லை என்கிற வித்தில்தான் நடந்து கொள்வார்கள். அப்படியே ஏதாவது செய்தி வந்தாலும் அது ஏதாவது பைங்கிளி எழுத்தாளர்களைப் பற்றியதாகவே இருக்கும். இந்த நிலையில் தமிழ்ச் சிறு பத்திரிகையைச் சேர்ந்த ஹெலனின் நாவல் பற்றி, அதுவும் நாவல் எழுதப்பட்டுக் கொண்டிருக்கும் நிலையிலேயே - அந்நாளிதழ் நான்கு பத்தி செய்தி வெளியிட்டதை என்னால் ஜீரணிக்கவே முடியவில்லை. மேலும் ஒரு வினோதம் என்னவென்றால், மலையாளத்தில் வெளிவரும் கவிதைத் தொகுதிகள் பற்றி தச்சம் போயில் ராஜீவன் எழுதும் முழுப் பக்கக் கட்டுரைகளை சென்னைப் பதிப்பில் மாதம் ஒருமுறை வெளியிடும் அந்நாளிதழில் தமிழின் சமகால இலக்கியம் பற்றி ஒரு வரி கூட இதுவரை வந்ததில்லை.

சன்னி என்னுடன் பேசிக்கொண்டிருக்கும்போதே அவனுக்கு ஹெலனிடமிருந்து எஸ்ஸெம்மெஸ்கள் வந்தவண்ணமாக இருந்தன. இப்போது நான் டாக்காவில் இருக்கிறேன். இப்போது நான் பேகம் கலீதாவுடன் பேசிக்கொண்டிருக்கிறேன் என்று ‘ரன்னிங் கமெண்ட்ரி’ கொடுத்துக்கொண்டிருந் தாள் ஹெலன்.

ஹெலனின் வளர்ச்சி பற்றி அவதானிக்கும்போது விரைவில் அவள் தமிழக மந்திரியாகவும் ஆகிவிடக்கூடும் என்று தோன்றுகிறது. நாட்கள் தூரத்தில் இல்லை. எதை வைத்துக் கூறுகிறேன் என்றால் - ஒருமுறை ஒரு அரசியல் கட்சித் தலைவரின் புதல்வர் அவளுடைய ஊருக்குச் சென்றிருக்கிறார். அப்போது நடந்த பொதுக் கூட்டத்தில் நானும் பேசுவேன் என்று அக்கூட்டத்தை நடத்திக் கொண்டிருந்த உள்ளூர்ப் பிரமுகர்களிடம் அடம் பிடித்து, அவர்கள் தயங்கவே, கிட்டத்தட்ட அனுமதியில்லாமலேயே மேடையேறி மைக்கைப் பிடித்து பின்னியெடுத்திருக்கிறாள். நீண்ட நேரம் பேசவில்லை. ஆனால் அவளுடைய நோக்கம் நிறைவேறிவிட்டது. அவள் பேசிக் கொண்டிருந்தபோது கட்சித் தலைவரின் புதல்வர் ‘யாரிந்தப் பெண்?’ என்று ஊர்ப் பிரமுகரை விசாரித்திருக்கிறார்.

ஹெலனின் வாழ்க்கையைத் திருப்பிப் போட்ட வரலாற்று முக்கியத்துவம் பெற்ற அன்றைய தினம் அவள் பேசிய பேச்சின் ரத்தினத் துளிகள் இவை:

‘தமிழினத் தலைவன் ஈன்றெடுத்த தனயனே! தமிழகத்தின் வருங்கால முதல்வனே! நீ இங்கே வந்தது இந்த மண் செய்த புண்ணியம்!

இந்தியாவின் தலைநகர் தில்லி என்று கூறுவார்கள். ஆனால் அவர்கள் வரலாறு தெரியாதவர்கள். என்னைக் கேட்டால் இந்தியாவின் தலைநகர் ஆழ்வார்திருநகர் என்றுதான் கூறுவேன். ஏனென்றால் நீ அங்கே வாழ்கிறாய்!

வெள்ளையரை எதிர்த்து வீரப்புகழ் பெற்றவன் பாண்டியன் கட்ட பொம்மன்... ஆனால் நீயோ வெள்ளையரை மட்டுமல்ல, வெள்ளையர் கறுப்பர் செவ்விந்தியரென்று எல்லா நிறத்தவரையும் வென்று இந்த அகிலத்தையே ஆளப் பிறந்தவன்...'

ஆனால் உண்மை என்னவென்றால், கட்சித் தலைவரின் புதல்வர் மிகவும் பயந்த சுபாவம் கொண்டவர். தமிழகத்தை சுனாமி தாக்கியபோது எல்லா அரசியல் கட்சித் தலைவர்களும் நாகப்பட்டினம் மற்றும் கடலூரில் மையம் கொண்டபோது இவர் மட்டும் ஆழ்வார் திருநகரை விட்டு அசையவேயில்லை. அப்போது அவருடைய நெருங்கிய நண்பர் ஒருவர் 'என்ன தலைவரே... நாகப்பட்டினம் செல்ல வேண்டாமா?' என்று கேட்டபோது 'மீண்டும் சுனாமி தாக்கும் என்று தெரிகிறது; இன்னும் ஒரு வாரம் கழித்துப் போய்க் கொள்ளலாம்' என்று பதில் சொன்னாராம். பல இடங்களிலும் ரகசியமாக ஊடுருவியிருக்கும் மணியின் உளவாளி ஒருவர் ஒற்றறிந்து கூறிய தகவல் இது. அது கிடக்கட்டும்.

***

இது எல்லாவற்றையும் படித்துவிட்டு அலெக்ஸ் ஒரு பெருமூச்சுடன் சொன்னான்:

ஒரு ஆண் எழுத்தாளன் ஈடுபடும் அதிகபட்ச கிரிமினல் நடவடிக்கை என்னவென்றால், குடித்துவிட்டு தன்னோடு உட்கார்ந்து குடித்துக் கொண்டிருக்கும் சக எழுத்தாளனை அடிப்பான். அவ்வளவுதான் அவனுடைய எல்லை. ஆனால் பெண் எழுத்தாளர்களின் விஷயத்தில் அது லட்சம், கோடி, தேர்தல் என்று ஆரம்பித்து இப்போது ஆள் கடத்தல்வரை வந்துவிட்டது. இன்னும் கொலைதான் பாக்கி!

## 39. சந்திரபாபு நாயுடு

> ஒருமுறை ஒரு பெண்கள் சிறையில் நிறைமாத கர்ப்பிணி ஒருத்தி அடைக்கப்பட்டாள். சிறையில் பிறந்த அவள் குழந்தை வெளியுலகைப் பார்க்காமல் சிறையிலேயே வளர்ந்தது. ஒன்றிரண்டு ஆண்டுகள் கழித்து ஒரு நாள், சிறையில் கூட்டிய குப்பையைக் கொட்டுவதற்காக இடுப்பில் குழந்தையுடன் வெளியே வந்துவிட்டு தன் செல்லுக்குத் திரும்பினாள். அவள் வெளியே வந்தபோது ஒரு கழுதை கத்தியதைப் பார்த்திருந்தது குழந்தை. பிறந்ததிலிருந்து அக்குழந்தை பார்த்த முதல் மிருகம் அக்கழுதை. அன்றிலிருந்து அந்தக் குழந்தை தான் பார்த்த கழுதை ஏற்படுத்திய சப்தத்தைப் போலவே தானும் கத்திக் கத்திப் பார்க்க ஆரம்பித்தது.

-The Other Prison என்ற கட்டுரையில்

Mohammad Ali Atassi

அல்-ஜதீத் : தொகுதி - 40: எண் - 49 (2004)

ஒரு காலத்தில் மரியோ பார்கஸ் யோசாவைப் பற்றிப் பேசாமல் ஒரு

தினம்கூட கடந்ததில்லை எனக்கு. அப்போது நான் மந்தைவெளியில் தனியாக இருந்த காலம். சங்கர் வேளச்சேரியில் தனியாக இருந்தான். இருவரும் பத்து ஆண்டுகளுக்கு மேலாக நண்பர்கள். ஒரு நாள் இரவு அவனுடைய வேளச்சேரி வீட்டில் வைத்து தண்ணியடித்துக் கொண்டிருந்தபோது அறுபது லட்சம் பேர் வாழ்ந்து கொண்டிருக்கும் இந்த ஊரில் நம் இருவருக்கும் ஆ்ப்டரால் குட்நைட் சொல்வதற்குக்கூட ஒரு பெண் இல்லாமல் போய்விட்டாளே என்று புலம்பினான் சங்கர். எனக்கும் தன்னிரக்கம் மிகுந்து பதில் எதுவும் சொல்லாமல் அமைதியானேன். பெண்ணுடன் படுத்தே பல ஆண்டுகள் ஆகியிருக்கும். செக்ஸ் ஒர்க்கரிடம் போக முடியாது. செக்ஸ் ஒர்க்கர்களிடம் செல்லும் வழக்கமுள்ள நண்பர்கள் சொல்லும் கதையைக் கேட்டால் அருவருப்பில் உடம்பே கூசுகிறது.

நண்பன் ஒருவன் திருத்தணியில் ஒரு செக்ஸ் ஒர்க்கரிடம் சென்றிருக்கிறான். வயது பதினேழு பதினெட்டுதான் இருக்குமாம். படு சோர்வாக இருந்திருக்கிறாள்.

‘அப்போது எத்தனை மணி? இரவா?’

‘இல்லை, காலை. முந்தின இரவு முழுவதும் மாறி மாறி கஸ்டமர்களை கவனித்திருப்பாள் போலிருக்கிறது.’

சாப்பிடுகிறாயா என்று கேட்டிருக்கிறான். சாப்பிடுகிறேன் என்று சொல்லி பியரும் கேட்டிருக்கிறாள். சாப்பிட்டு முடித்தவுடன் தொட்டிருக்கிறான். அப்படியே ஐஸ் கட்டியைத் தொட்டதுபோல் சில்லிட்டுக் கிடந்ததாம் உடம்பு. இவனைப் பற்றிய எந்த உணர்வும் இல்லாமல் கால்களை அகட்டிக்கொண்டிருந்தாளாம். ‘ஐநூறு ரூபாயைக் கொடுத்துக் கும்பிடு போட்டுவிட்டு ஓடியே வந்துவிட்டேன்’ என்றான். ஒரு மணி நேரத்துக்கு ஐநூறு ரூபாய். இதுவே ஒரு இரவுக்குப் பத்தாயிரம் கொடுக்கத் தயார் என்றால் தொலைக்காட்சி நடிகையையே வரவழைத்து விடலாம். பாலு அய்யேயெஸ்தான் சொன்னான். ஒரு அழகான தொலைக்காட்சி நடிகையை ஏஜெண்ட் மூலம் அணுகினானாம். ஒரு இரவுக்குப் பதினைந்தாயிரம் ரூபாய். ஏஜெண்ட்டுக்கு ஐந்து. நடிகைக்குப் பத்து. காலையில் கிளம்பும்போது, அடிக்கடி வரச் சொல்லி தன்னுடைய கைத்தொலைபேசி எண்ணையும் கொடுத்திருக்கிறாள். (‘ஏஜெண்ட் மூலமாகத் தொடர்பு கொள்ள வேண்டாம். எதற்கு உங்களுக்கு அனாவசியமாக ஐந்தாயிரம் செலவு?’) அவளுடைய வீட்டிலேயேதான் எல்லாம். இரவு பத்து மணிக்கு ஆரம்பித்து காலை நான்கு வரை.

‘அவ்வளவு நேரமா?’

‘அதை ஏன் கேட்கிறாய்? நான் ஸோ்பாவில் உட்கார்ந்தபடி தண்ணியடித்துக்கொண்டிருக்கிறேன். அவள் தரையில் அமர்ந்தபடி பியர் சாப்பிட்டுக்கொண்டிருக்கிறாள். இருவர் உடம்பிலும் பொட்டுத் துணி கிடையாது. அவ்வப்போது பியர் அடித்தபடியே ்ப்ளூட் வாசிப்பு.’

‘பத்தாயிரம் என்பது ரொம்ப மலிவாகத் தெரிகிறது.’

‘அப்போது அவள் அவ்வளவு பிரபலமாகவில்லை. இப்போது ஐம்பது அறுபது என்கிறார்கள். ஒரு வேளை பணம் சேர்ந்துவிட்டதால் நிறுத்தியிருக்கலாம். அல்லது, நிரந்தரமாக யாராவது ஒரு பணக்கார

சிநேகிதன் கிடைத்திருக்கலாம்.'

திருத்தணி ஒர்க்கருக்கும் இவளுக்கும்தான் எவ்வளவு வித்தியாசம்? பணத்துக்கேற்ற சாமான். அவ்வளவு பணத்துக்கு நான் எங்கே போவது? ஆனால் கோபாலகிருஷ்ணன் சொல்லும் கதைகள் வேறு மாதிரி உள்ளன. ஆந்திராவில் உள்ள ஏதோ ஒரு ஊருக்கு அவனும் அவன் நண்பனும் அடிக்கடி செல்வது வழக்கம். கிராமம் மாதிரி சின்ன ஊர். பெயர் மறந்துவிட்டது. ஒவ்வொரு பெண்ணையும் சேவிக்கலாம். அப்படி ஒரு தெய்வீகக் களை. அம்மனே நேரில் வந்துவிட்டது போன்ற தோற்றம். மூன்று நாட்கள் வீட்டிலேயே தங்க வைத்து, உடம்பில் எண்ணெய் தேய்த்து குளிப்பாட்டிவிட்டு, மணக்க மணக்க சமைத்துப்போட்டு (நெற்றியில் வழியும் ஆந்திரா காரத்தைப் புடவைத் தலைப்பால் ஒற்றியெடுப்பாள்) போதும் போதும் போதும் என்று சொல்லும் அளவுக்கு செக்ஸை வாரி வழங்குவார்கள். இவ்வளவும் வெறும் 500 ரூபாய்க்கு.

ஆனால் இப்போது அந்த கிராமங்கள் சுடுகாடாகிவிட்டன. அப்பெண்கள் நகரங்களை நோக்கி நகர்ந்துவிட்டார்கள். எல்லாவற்றுக்கும் காரணம், அந்த சந்திரபாபு நாயுடுதான் என்கிறான் கோபாலகிருஷ்ணன்.

## 40. ஐஸ்வர்யா ராய்

> The men who came into the shop I undressed with my eyes, I saw them become erect, I stuffed them between my legs. The women that the butcher and the boss desired, I raised their skirts, opened their legs and gave them to them. My head was full of obscene thoughts, my sex rose up in my throat, I wanted to relieve myself by hand behind the till, but that would not have been enough, not enough.

The Butcher: Alina Reyes.

மணிக்கு அதிகப்படி சத்தம் கூடாது. ஆனால் டிஸ்கோ பார்களில் ராக் இசை பிளந்து கட்டும். அதனால்தான் அவன் தண்ணியடிக்க பீச்சைத் தேர்ந்தெடுத்தது. ஆனாலும் நானும், அவனும் வாரம் ஒரு முறை பகலில் சந்திப்பது வழக்கம். சந்திப்பு வழக்கமாக பார்க் ஷெரட்டனில் நடக்கும். ஒருமுறை காரிடாரில் கையில் சிகரெட்டோடு போயிருக்கிறான். உடனே ஒரு பணியாள் ஓடி வந்து - யெஸ்... ஓடி வந்து - மணியிடம் பதற்றமான குரலில் 'ஸர், இங்கே சிகரெட் குடிக்கக் கூடாது' என்று சொல்லியிருக்கிறான். உடனே மணி 'இங்கே எங்கேயாவது No smoking area என்று போட்டிருக் கிறதா? சரி, இந்தா பிடி சிகரெட்டை' என்று புகைத்துக் கொண்டிருந்த சிகரெட்டை அவன் கையில் கொடுத்திருக் கிறான். பணியாள் சற்றுத் தயங்க 'இந்தாப்பா... வாங்கிக்கோ... நீதானே குடிக்கக் கூடாதுங்கிறே?' என்று சொல்லிக் கொடுத்துவிட்டு அன்றிலிருந்து பார்க் ஷெரட்டனுக்கு ஒரு குட் பை. ஆனால் அதற்குப் பிறகு நாங்கள் சந்திக்கும் இடம் ஒரு பிரச்னை ஆகியது. லெ மெரிதியன் கிண்டியில் இருக்கிறது.

தூரம். சோளா ஷெரட்டன் பாரில் ஏ.சி சரியாக இருக்காது. கடுமையாக வேர்க்கும். ஒருமுறை, மணி, அவர்களுக்கு உறைக்க வேண்டும் என்பதற்காக ஓலை விசிறிகூட எடுத்து வந்து விசிறிக் காண்பித்தான். ம்ஹூம். எதுவும் பலிக்கவில்லை. தாஜ் ஓட்டலை நாங்கள் ஓட்டலாகவே கருதுவதில்லை.

நான் மணியிடம் லெதர் பார் லெதர் பார் என்று அரித்துக் கொண்டிருந்ததால் ஒரு நாள் மதியம் அங்கே சென்றோம். ஆகா... என்ன ஒரு காட்சி! இரவில் களியாட்டம் போட்டுக் கொண்டிருக்கும் லெதர் பார் பகலில் ஒரு பஞ்சாபி டாபாவாக மாறியிருந்தது. தந்தூரி ரொட்டி, குல்ச்சா, பனீர் டிக்கா, மட்டர் பனீர், கோஃப்த்தா, பாலக் பனீர், ஆலு கோபி என்று வட இந்திய 40 ப்ளஸ் மாமிகள் பின்னி எடுத்துக்கொண்டிருந்தார்கள். பக்கத்தில் சரக்கு வேறு. பல்கேரிய, ரஷ்ய மாமிகளைப் பார்ப்பது போல் இருந்தது. உடம்பு முழுவதும் கிலோகிலோவாக மாமிசம். மணி வேறு சாய்மானம் இல்லாமல் நெளிந்துகொண்டிருந்தான்.

ஏன் இப்படி சாய்மானம் இல்லாத ஸ்டூல் என்று ஒரு நாள் இரவு வேளையில் அங்கே சென்றபோது கண்டுபிடித்துவிட்டேன். சாய்மானம் இருந்தால் இப்படி அழகு அழகான பிருஷ்டங்களைக் கண்டு களிக்க முடியுமா? சமயங்களில் பிரபல சினிமா நடிகைகள்கூட இந்த ஸ்திதியில் அமர்ந்திருப்பார்களே!

பார்க் ஷெரட்டனுக்கு குட் பை சொல்லி மூன்று மாதம் ஆகியிருக்கும். அங்கிருந்தும் மணிக்கு தூதுக்கு மேல் தூது வந்துகொண்டிருந்தது. குடிக்க இடம் தேடி நாங்கள் அனாதைகளாய் அல்லாடிக் கொண்டிருந்தபோது நாளடைவில் மணியும் பார்க் ஷெரட்டனைப் பிரிந்தது தாய்வீட்டைப் பிரிந்தது போல் இருக்கிறதென்று புலம்ப ஆரம்பித்துவிட்டான். பிறகு இருவரும் பழையபடி தாய்வீட்டுக்கே செல்ல ஆரம்பித்தோம். ஓட்டல்காரர்களும் நீங்கள் 'சிகரெட் என்ன, கஞ்ஜாகூட அடித்துக்கொள்ளுங்கள்' என்று சொல்லிவிட்டனர்.

ஒருநாள் இரவு பதினோரு மணியிருக்கும். நானும், கல்யாணும் லெதர் பாரில் அமர்ந்திருந்தோம். என் இடதுபுறம் அமர்ந்திருந்த பெண்ணின் ஜீன்ஸ் நழுவிக் கீழறங்கி அவள் பிருஷ்டம் தெரிந்தது. அந்த பிருஷ்டத்தை இரண்டு கையாலும் உயர்த்தி, ஜீன்ஸை இன்னும் சிறிது கீழே இறக்கி அவளைப் பின்புறமிருந்து புணர வேண்டும் போலிருந்தது எனக்கு. அப்படி ஒரு இன்பமான கற்பனையில் மிதந்துகொண்டிருந்தபோதுதான் எல்லோரும் ஏதோ பூகம்பம் வந்ததுபோல் அலறியடித்துக்கொண்டு ஓட ஆரம்பித்ததைக் கவனித்தேன். மரணம் மற்றும் பெண் - இந்த இரண்டுக்கும் முன்னால் எல்லா மனிதர்களும் சமம்தானே? நானும் கல்யாணும் எழுந்து நின்று என்னவென்று பார்த்தோம். பார் வாசலில் நாலைந்து போலீஸ்காரர்கள் சீருடையுடன் நின்றுகொண்டு பெருங்குரலில் உத்தரவிட்டுக்கொண்டிருந்தார்கள். புரிந்துவிட்டது. பாரை 11 மணிக்கு மூடி விட வேண்டுமென்பது போலீஸ் உத்தரவு. ஆனால் இப்படியெல்லாம் சட்டம் போட்டால் அதை யார் மதிப்பார்கள்? அவர்களின் சீருடையைப் பார்த்தபோது ஏஸி, டீஸி ரேஞ்ஜ் அதிகாரிகளாக இருக்க வேண்டும் என்று தெரிந்தது. நாங்கள் இருவரும் அங்கிருந்து நைஸாக நழுவினோம். பார் மேனேஜரிடம் அந்த ஏஸிடீஸிக்களில் ஒருவர் 'பாரில்தான் டான்ஸ் ஆடக்கூடாது என்று விதி இருக்கிறதே, எப்படி இவர்கள் இங்கே

ஆடிக்கொண்டிருக்கிறார்கள்?' என்று அதிகார தோரணையில் கேட்டார். 'அப்படி எதுவும் இல்லை ஸர்... கொஞ்சம் குடித்திருப்பதால் சரியாக நிற்க முடியாமல் இருந்திருக்கும்' என்று சாவதானமாக பதில் சொன்னார் மேனேஜர்.

'என்ன இது அநியாயம் கல்யாண்? ராக் ம்யூஸிக்குக்கு எந்த மனித உடலாவது ஆடாமல் இருக்குமா?' என்று கேட்டேன் நான்.

அந்தப் போதையிலும் எனக்கு ஸ்டிங் கூறியது ஞாபகம் வந்தது:

'நீங்கள் அமெரிக்கரோ, ப்ரிட்டிஷ்காரரோ அல்லது இஸ்லாமிய உலகைச் சேர்ந்தவரோ யாராக இருந்தாலும் நம்மையெல்லாம் ஒரு சக்தி பிணைத்துப்போடுகிறது. அது இசை.'

There is no religion but sound and dancing என்ற ஸ்டிங்கின் பாடலை முனகிக்கொண்டே வெளியே வந்த என்னை அந்த ஓட்டலின் பதிமூன்றாவது மாடியிலிருந்த அக்வா உணவகத்துக்கு அழைத்துச் சென்றான் கல்யாண். அது 24 மணி நேரமும் திறந்திருக்கும் உணவகம்; தண்ணியும் அடிக்கலாம்.

ஒரு பெக் ரூ.1800க்கு விற்கக்கூடிய நட்சத்திர ஓட்டல் பாராக இருந்தாலும் சரி 30 ரூபாய் ஓல்ட் மாங்க் பாராக இருந்தாலும் சரி; போலீஸுக்குப் பயந்து நாய் மாதிரிதான் ஓட வேண்டியிருக்கிறது என்று நினைத்துக்கொண்டேன் நான்.

சிறு பத்திரிகை நண்பர்களுடன் நான் குடித்துக்கொண்டிருந்த காலத்தில் அவர்கள் செல்லும் பார்களில் ஒன்று, நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலையில் தாஜ் ஓட்டலுக்குப் பக்கத்திலுள்ள பார்க் ஒய்ன்ஸ். அது ஒரு open air பார். தமிழ்நாட்டில் நாடாறு மாதம் காடாறு மாதமாக கொஞ்ச நாள் பார்களுக்கு லைசன்ஸ் வழங்கப்படும்.

பிறகு கொஞ்ச நாள் பார்கள் வைத்திருப்பது சட்டவிரோதமென்று அறிவிக்கப்படும். ஆனால் என்ன சட்டம் கொண்டுவந்தாலும் பார்கள் மட்டும் ஆண்டு முழுவதும் திறந்தேயிருக்கும். நாடாறு மாதத்தில் போலீஸுக்கு லஞ்சம் கொடுக்கும் அவசியமில்லாமல் நடத்துவார்கள்; இதற்கிடையில் யாராவது நேர்மைத் திலகங்கள் ஏஸீ, டீஸீக்களாக வந்துவிட்டால் தொலைந்தது. அடிக்கடி ரெய்ட் செய்து குடிகாரர்களை ஓட ஓட விரட்டுவார்கள். அகப்பட்டவர்களை அள்ளிப்போட்டுக்கொண்டு போய் இரவு முழுவதும் லாக்கப்பில் போட்டு மறுநாள் காலையில் விடுவார்கள். அல்லது, கேஸ் போடுவார்களோ என்னவோ, எனக்குத் தெரியாது. நான் மாட்டியதில்லை. காரணம், எப்போதுமே போலீஸை நினைத்துக்கொண்டுதான் குடித்துக் கொண்டிருப்பேன். ஏதாவது வித்தியாசமான அசைவு தெரிந்தால் சுவரேறிக் குதித்து ஓடும் முதல் ஆள் நான்தான். பல முறை அப்படி சுவரேறிக் குதித்திருக்கிறேன்.

இந்த நிலையில் ஸ்வப்னாவோடு எப்படி நட்சத்திர ஓட்டலில் தங்குவது?

ஸ்வப்னா ஒரு டான்ஸர். 18 வயதிலிருந்து 25 வயது வரை உலகின் பல நாடுகளில் ஆடியவள். பரதம், கதக், பாலே மூன்றையும் பயின்றவள். இருபத்தைந்து வயதில் அவளுடைய ரசிகன் ஒருவனை மணந்து, ரசிகன் கணவனாக மாறியதும் நடனத்துக்குத் தடை விதிக்க, பிறகு நடனத்தை நிறுத்திவிட்டவள்.

முதலில் நட்பாகத்தான் ஆரம்பித்தது. பாரிஸின் Rotonde கஃபேயில் அமர்ந்திருந்தபோது நான்தான் மெதுவாக ஆரம்பித்து வைத்தேன்.

'உங்களைப் பார்த்தால் ஐஸ்வர்யா ராய் ஞாபகம் வருகிறது.'

'அவளை நேரில் பார்த்திருக்கிறீர்களா?'

'மிகப் பக்கத்தில் பார்த்திருக்கிறேன். ஆனால் நேரில் பார்க்கும்போது அவ்வளவு கவர்ச்சி இல்லை. உங்கள் கண்களும் சிரிப்பும் அவளை ஞாபகப்படுத்தினாலும் நீங்கள் அவளைவிட அழகாக இருக்கிறீர்கள்.'

பொதுவாக நான் பெண்களைப் புகழும்போது உண்மையைத்தான் குறிப்பிடுவது வழக்கம். அதிலும் அதிகம் வழியாமல் matter of fact தொனியில்தான் பேசுவேன்.

நான் பாரிஸ் செல்வதற்குச் சற்று முந்தி ஒரு தமிழ் எழுத்தாளன் பாரிஸ் சென்றிருக்கிறான். எழுத்தாளன் என்ன எழுத்தாளன்? எல்லாம் நம்முடைய பாரிதான். அங்கே பாரிஸில் ஸ்வப்னா சற்று பிரபலமான புள்ளி என்பதால் ஒரு இலக்கியக் கூட்டத்தில் அவளைச் சந்தித்திருக்கிறான். அவளுடைய அசாதாரணமான அழகில் கிறங்கிப் போயிருக்கிறான். என்ன செய்திருக்க வேண்டும்? தைரியம் இருந்தால் அவளிடம் சொல்லியிருக்கலாம். அவளும் சந்தோஷப்பட்டிருப்பாள்.

தன் அழகும், சிரிப்பும் பாராட்டப்படும் தருணங்களை வெளிப்படையாகவே ரசித்து தன் ஆமோதிப்பையும் நன்றியையும் தெரியப்படுத்தும் பண்புள்ளம் கொண்டவள் அவள். அவளிடம் போய் இவன் பதுங்கியிருக்க வேண்டிய தில்லை. அப்படித் தைரியமில்லாதவன் மூடிக்கொண்டாவது இருந்திருக்க வேண்டும். அதுவும் இல்லை. பாரிஸில் தமிழ் ஜனங்களிடையே பிரபலமான ஒரு ரேடியோக் கவிஞரிடம் ஸ்வப்னாவின் அழகு பற்றி உருகோ உருகு என்று உருகியிருக்கிறான். அந்தக் கவிஞப் பெண்ணுக்கு மிகவும் எரிச்சலாகி விட்டது. பார்ப்பவர்களிடமெல்லாம் இவன் ஒரு ஜொள்ளு என்று சொல்லி மானத்தை வாங்கிவிட்டாள்.

ஐஸ்வர்யாவின் கண்கள் என்ன நிறம் என்று எனக்கு ஞாபகமில்லை. ஆனால் நிச்சயமாக இந்தியர்களின் கண்களைப்போல் அசட்டுத்தனமான ஆட்டுக் கண்கள் அல்ல. ஸ்வப்னாவின் கண்கள் பச்சை நிறத்தில் இருந்தன. ஐரோப்பியர்களிடையேதான் நான் இம்மாதிரி கண்களைப் பார்த்திருக்கிறேன்.

சிரிப்பு? அப்படி ஒரு சிரிப்பை நான் வாழ்நாளில் கண்டதில்லை. அவள் இருக்கும் இடமே சிரிப்பால் நிறைந்திருந்தது. ஆனால் அதில் எள்ளளவும் செயற்கைத்தனம் கிடையாது என்பதுதான் விசேஷம்.

'நீங்கள் இரண்டாவது ஆள்.'

என்ன இரண்டாவது ஆள் என்று புரியாமல் விழித்தேன்.

'சென்ற ஆண்டு சென்னை வந்திருந்தபோது பார்க் ஓட்டலில் தங்கியிருந்தேன். வந்தால் எப்போதும் அங்கேதான் தங்குவது. வாசலில் நின்றுகொண்டு, நானும் சந்தோஷும் பேசிக்கொண்டிருந்தோம்.'

'யார் சந்தோஷ்?'

'சந்தோஷ் தெரியாது? The famous cinematographer...

‘ஓ...’

‘அவர்தான். அப்போது எங்கள் பக்கத்தில் ஒரு பெண் நின்று கொண்டிருந்தாள். காருக்காகக் காத்திருக்கிறாள் என்று நினைத்தேன். சட்டென்று தோன்றியது. இவள் ஐஸ்வர்யா ராய் இல்லை? ‘ஆமாம். அவர்தான்’ என்றார் சந்தோஷ். ‘என்ன இது, யாருமே இவளைக் கண்டுகொண்ட மாதிரி தெரியவில்லையே... இப்படித் தனியாக நிற்கிறாளே?’ என்று அவரிடம் கேட்டேன். அதற்கு அவர் என்ன சொன்னார் தெரியுமா? ‘உங்களைப்போல் இருந்தால் எல்லோரும் பார்ப்பார்கள். இவளைப்போய் யார் பார்ப்பது?’ என்றார். நீங்களும் அதேபோல் சொல்கிறீர்கள் பெருமாள்...’

‘நான் எப்போதுமே இரண்டாவது ஆளாகவே வந்து சேர்கிறேன்.’

என்ன புரிந்ததோ அதற்கும் சிரித்து வைத்தாள். அதோடு நிறுத்திவிட்டு சென்னைக்கு வந்து அவளிடம் கூறியபடி மெயில் எதுவும் அனுப்பாமல் இரண்டு வாரம் சும்மா இருந்தேன்.

சிக்கிக்கொண்டது பட்சி. "I miss you Perumal" என்று ஒரு மெயில் அனுப்பியது. பதிலுக்குக் காட்டடியாக அடித்துவிட்டேன். வேறென்ன? ‘ஐ லவ் யூ’ தான்.

## 41. An erotic catharsis

தவள இளம் பிறை, துள்ளும் முந்நீர்,

தன் மலர்த் தென்றலோடு அன்றில் ஒன்றி

துவள, என் நெஞ்சகம் சோர ஈரும்;

கூழ் பனி நாள் துயிலாதிருப்பேன்.

இவளும் ஓர் பெண் கொடி என்று இரங்கார்;

என் நலம் ஐந்தும் முன் கொண்டு போன

குவளை மலர் நிற வண்ணர் மன்னு

குறுங்குடிக்கே என்னை உய்த்திருமின்.

-பெரிய திருமொழி : திருமங்கை ஆழ்வார்.

உங்களை என்னால் புரிந்துகொள்ளவே முடியவில்லை பெருமாள். உங்களோடு நீண்ட நேரம் அமர்ந்துதான் இந்தத் தொல்லை தரும் பிரச்னையைப் பேசித் தீர்க்க வேண்டும். I'm not a fickle. நான் ஒரு சாதாரண மனுஷி. நான் எதைச் செய்தாலும் அது என் குடும்பத்தினரை பாதிப்பதாக இருந்துவிடக்கூடாது...? எனக்கு நிறைய ரசிகர்கள் இருக்கிறார்கள் என்பது தெரியும். சமயங்களில் இந்தத் தனியார் தொலைக்காட்சி சேனல்கள் சென்னையிலும் காணக் கிடைக்கின்றன. நான் வழங்கும் நிகழ்ச்சி இங்கே பிரபலமானதுதான். ஆனால் என்னுடைய எல்லா ரசிகர்களும் என்னைக் காதலிக்க ஆரம்பித்துவிட்டால் நான் என்ன செய்ய முடியும்? உங்களுடைய ‘சுவாசிக்கும்’ என்ற வார்த்தையைப் பார்த்ததும் தமிழ்நாட்டின் அந்தப் புகழ்பெற்ற சினிமாக் கவிஞர் இங்கிருந்து சென்னை கிளம்பும் போது விமான நிலையத்தில் வைத்து என்னிடம் கூறியது

ஞாபகம் வருகிறது. அவர் சொன்னார்: 'உங்கள் அன்பை சுவாசிக்க எனக்கு மீண்டும் ஒரு சந்தர்ப்பம் கிடைக்கும் என்று நான் உறுதியாக நம்புகிறேன்.'

பெருமாள், நீங்கள் ஒருமுறை என்னிடம் சொன்னதுபோல், உங்களை நான் பல வருடங்களுக்கு முன்பே சந்தித்திருக்க வேண்டும். அப்போது நீங்கள் வேறொரு ஸ்வப்னாவைப் பார்த்திருப்பீர்கள். ஒவ்வொரு சந்தர்ப்பத்திற்கும் நான் ஒரு பாடலை வைத்திருப்பேன். பாடுவேன். ஆனால் என் கணவர் அந்தப் பாட்டையும் நிறுத்திவிட்டார். ஆனால் என் மனதின் உள்ளாழத்தில் இன்னும் ஈரமாக இருக்கும் இசையை அவரால் நிறுத்த முடியவில்லை. But my dear perumal... நீங்கள் உண்மையில் கடவுளால் அனுப்பப்பட்டிருக்கிறீர்கள். நான் திரும்பவும் இசையில் வாழ முடியும் என்ற நம்பிக்கை பிறந்து விட்டது. இசையின் மாயக் கம்பளம் என்னை எங்கெல்லாம் தூக்கிச் செல்கிறதோ அங்கெல்லாம் என்னால் பறந்து செல்ல முடியும். நாம் மீண்டும் சந்திக்கும்போது நாம் இருவருமே அந்த மாயக் கம்பளத்திலேறி பறந்து செல்வோம்.

என் இனிய பெருமாள்... Alina Reyesஇன் எல்லா நாவல்களையும் நான் படித்திருக்கிறேன். அவளுடைய வாழ்க்கை மற்றும் எழுத்து பற்றி ஒரு மணி நேர ஆவணப் படம் ஒன்றும் எடுத்திருக்கிறேன். அவளுடைய ஒவ்வொரு பிறந்தநாள் அன்றும் கூப்பிட்டு நான் வாழ்த்துச் சொல்வது வழக்கம். But my dream man, இவ்வளவு காலமும் எனக்கு Alina Reyes-ஐப் போலவே ஒருவர் தமிழிலும் இருக்கிறார் என்பது தெரியாமல் போய்விட்டது.

என்னைப் பற்றி நீங்கள் என்ன நினைத்திருக்கிறீர்கள் என்று நான் கவலைப்படவில்லை. ஆனால் உங்களுக்கு உண்மையாக இருக்க விரும்புகிறேன். பெருமாள், உங்கள் எழுத்துப் பணிக்கு இங்கே ஐரோப்பாவிலிருந்து நீங்கள் தேவதை என்று நினைக்கும் ஒரு பிசாசிடமிருந்து (அந்தப் பிசாசைச் செல்லம் என்று வேறு அழைக்கிறீர்கள்!) இடையூறு வந்துவிட்டதாக எண்ணாதீர்கள். நான் உங்களைத் தொந்தரவு செய்ய மாட்டேன்.

***

பெருமாள்,

நான் உங்களை எப்படி அழைப்பது? நீங்கள் வாழ்க்கையை அணுஅணுவாய் ரசித்து ருசித்து வாழ்வதை நான் உணர்கிறேன். நேற்று மாலை உங்கள் குரலைக் கேட்டு ஒருவித பரவச நிலைக்குப் போய்விட்டேன். I miss you too, பெருமாள். நல்ல வேளையாக நாம் விடைபெறும்போது என் கணவர் அறைக்குள் நுழைந்தார். யார் என்று கேட்டார். ஆனால் நான் பதில் சொல்லவில்லை. சொன்னாலும் பயனில்லை. அந்தப் பெயர் அவரது ஞாபகக் கூட்டுக்குள் செல்லப் போவதில்லை. பெயர்களை மறந்து பத்து ஆண்டுகள் ஆகின்றன. பெயர்களை மட்டுமா? எல்லாமே போய்விட்டது. கம்ப்யூட்டரில் delete போட்டால் காணாமல் போகுமே, அந்த மாதிரி... ஆனால் ஒரேயடியாய் காணாமல் போகவில்லை. எல்லாவற்றையும் இணைக்கும் ஒரு மையச்சரடு கழன்றுவிட்டது. அதனால் எல்லாமே குழப்பமாகிவிட்டது. நமக்குள் ஞாபகங்கள் எப்படிச் சேகரமாகின்றன? அம்மா, அப்பா, ரோஸ், ஆகாயம், நாய்கள், மெத்ரோ, எலி, ஓவியம்,

ப்ளத்தான் மரங்கள், ஸ்நோ, கசாப்புக்கடை, ஆகாய விமானம், நட்சத்திரங்கள், நிலா, அருவி, கட்டாரி, மைனா, இந்திரியம், அகல், லாகிரி, கனவு, பௌருஷம், பாதரசம், காமம், காற்று, மழை, ஊழி, சாம்பல், உதிரம், இருள், சக்கரம், பாறை, ஒய்ன், துப்பாக்கி, தேவதை, கடவுள், நதி, தற்கொலை, கொலை, ஸாந்த்தா க்ளாஸ், ஸலோ(ன்), நடனம், கடல், கதை, குருதி, முத்தம், தேவாலயம், சிறைச்சாலை, அபிநயம், தியானம், தவளை, கேசம்...

- இந்த எல்லாவற்றுடனும் தொடர்புபடுத்தக்கூடிய பல நூற்றுக்கணக்கான சம்பவங்கள் நம் ஞாபகத்தில் பொதிந்து கிடக்கின்றன அல்லவா? எப்படி? மொழி ரூபமாகவா அல்லது காட்சிப் பதிவுகளாகவா?

ஒரு புத்தாண்டுக் கொண்டாட்டத்தின் மறுநாள் பனிப்பொழிவில் ஸெய்ன் நதியின் ஓரத்தில் தனியே நடந்துகொண்டிருக்கிறேன். ‘இனி நடனமாடக் கூடாது’ என்று என் கணவர் முதல்முதலாகச் சொன்னதைக் கேட்டு சில மணி நேரங்களே ஆகியிருந்தன. அதிர்ச்சியிலிருந்து மீளாத நிலையில் அப்படியே அந்த நதியில் குதித்து விடலாமா என்று தோன்றியது. நீச்சல் தெரியுமா இல்லையா என்பதல்ல பிரச்னை. அந்தக் குளிரிலேயே விறைத்துச் செத்திருப்பேன். அந்தத் தருணத்தை இப்போது என் மனம் எதன் மூலமாக மீட்டுருவாக்கம் செய்கிறது? வெறும் காட்சியா? சொற்களா? என் கணவருக்கு இரண்டுமே பிரச்னையாகிவிட்டது. திடீரென்று டாய்ச்ஷ் மொழியில் பேச ஆரம்பித்துவிடுகிறார். அவருக்கு டாய்ச்ஷ் நன்கு தெரியும். என்னால் ஓரளவுதான் புரிந்துகொள்ள முடியும். அவர் சொன்னதன் அர்த்தம் என்ன தெரியுமா? கேளுங்கள்:

காமத்தின் உச்சக் கட்ட வெளிப்பாடு உன் நடனம். நீ ஆடவில்லை. உனது பெண் குறிதான் ஆடியது. நீ ஒரு மகா அற்புதப் பெண்குறி. உன் நடனத்தின் ஒவ்வொரு அசைவும் பெண்குறியின் அழைப்பு. சம்போகத்தின் பலவித நிலைகளே உனது ஒவ்வொரு அசைவும். நீ மாமிசம். உன் கண்கள், கன்னம், செவி, கழுத்து, முலைகள், முலைக் காம்புகள், தொப்புள், யோனி, யோனிச் சிமிழ், தொடை, கால், புட்டம், கால் விரல் எல்லாவற்றையும் நக்கி நக்கிச் சுவைக்க வேண்டும். இங்கே எல்லோரும் உன்னை நக்கிக்கொண்டிருக்கிறார்கள். உன்னைப் புணர்ந்து கொண்டிருக்கிறார்கள். சுய மைதுனம் செய்து கொண்டிருக் கிறார்கள். நான்கைந்து பேர் உன்னைப் புணர்கிறார்கள். ஒருவன் தன் குறியை உன் வாயில் திணிக்கிறான். ஒருவன் தன் குறியை உன் குறியில் நுழைக்கிறான். ஒருவன் தன் குறியை உன் குதத்தில் நுழைக்கிறான். இரண்டு மூன்று பேர் உன் முலைகளில் குறிகளை வைத்து அழுத்துகிறார்கள். எங்கு பார்த்தாலும் விந்துத் துளிகள். ஒருவன் புணர்ந்ததும் வேறொருவன் வருகிறான். தரையெங்கும் விந்து. சிலர் விந்து வெள்ளத்தில் வழுக்கி விழுகிறார்கள். நான் எங்கே சென்றேன். இந்தக் கயவர்களின் குறிகளை அறுத்தெறியக்கூடிய நான் எங்கே...

இவ்வளவையும் மூச்சு இரைக்க இரைக்க டாய்ச்ஷ் மொழியில் சொன்னார் என் கணவர். எங்கள் திருமணம் முடிந்து ஒன்றரை வருட காலம் நான் மேடையேறவில்லை. அதற்குள் எனக்குக் குழந்தையும் பிறந்தது. அதற்குப் பிறகு நான் மேடையேறிய முதல் நிகழ்ச்சி நடந்துகொண்டிருந்த வேளையில் ஒரு சம்பவம் நடந்தது. நான் பொதுவாக என் நிகழ்ச்சி நடக்கும்போது இருமுவதோ செருமுவதோ கூடாது என்று பார்வையாளர்களிடம் வலியுறுத்துவது வழக்கம். என் நடன

அசைவுகளுக்கேற்ற இசையினூடே மௌன வெளிகளும் உண்டு. மௌனமும் ஒரு இசைதானே? அது ஒரு மகா அற்புதமான இசை. பிரபஞ்ச இசை.

நான் குறிப்பிட்ட அன்றைய தினம், நிகழ்ச்சியினிடையே ஒருவர் பெரும் சப்தத்துடன் ஓங்கரித்துக் கொண்டு ஹாலை விட்டு வெளியே ஓடினார். ஒருகணம் அந்தக் குறுக்கீடு லயத்தைக் கெடுத்தது உண்மைதான். ஆனால் கண்ணிமைக்கும் பொழுதில் யாருமறியா வண்ணம் சமாளித்துவிட்டேன்.

அப்புறம் நிகழ்ச்சி முடிந்த பிறதுதான் தெரிந்தது. அந்த ஆள் என் கணவர்தான் என்று. கழிப்பறையில் வாந்தியெடுத்த நிலையில் பிரக்ஞையற்று விழுந்து கிடந்தார்.

அதிலிருந்துதான் அவருக்கு அந்த மொழி நோய் தொற்றிக்கொண்டது.

அவருக்கு நான்கைந்து மொழிகள் தெரியுமாகையால் திடீரென்று டாய்ச்ஷ் மொழியில் பேசுவார். தமிழில் பேசுவார். ஃப்ரெஞ்ச். ஆங்கிலம். எப்போதோ ஒரு காலத்தில் சிறுவனாக இருந்தபோது தன் அம்மாவிடம் பேசியதைக் கோர்வையாகப் பேசுவார். பத்து நாட்களுக்கு முன்பு நான் கேட்டிருந்த ஒரு விஷயத்துக்கு பதில் சொல்லுவார்.

‘எங்காவது வெளியே போக வேண்டும் என்று நினைக்கிறீர்களா?’

‘எங்கேயாவது போக வேண்டுமானால் நானாகச் சொல்ல மாட்டேனா? நீ ஏன் என் விஷயத்தில் தலையிடுகிறாய்? நான் என்ன நினைக்கிறேன் அல்லது நினைக்கவில்லை என்பதை நான் ஏன் உன்னிடம் சொல்ல வேண்டும்?’

சொல்லிவிட்டு மௌனமாகிவிடுவார். சொற்கள் மறந்துபோகும். மொழி மறந்து போகும். நான் யார், அவர் யார் எல்லாம் மறந்துபோகும். என்னையே வெறித்துப் பார்த்தபடி நின்றுகொண்டிருப்பார்.

காஃபி போட்டுக்கொள்வதற்காக குசினிக்குப் போவார். ஆனால் அங்கே எதற்கு வந்தோம் என்பது மறந்துபோகும். அப்போது பார்த்து மூத்திரம் வரும். குசினிக்கும் கழிப்பறைக்குமான வித்தியாசம் மறந்து போகும். குசினியிலேயே இருந்து வைப்பார்.

திடீரென்று ‘நீ யார்?’ என்று கேட்பார். ‘நான் ஸ்வப்னா’ என்பேன். புரியாது. அதற்குள் நான், யார் என்ற வார்த்தைகளுக்கான அர்த்தம் மறந்துபோயிருக்கும். அர்த்தமாவது போகட்டும். நான் என்ற வார்த்தையை உச்சரிக்க வாயைத் திறந்து நாக்கை மேல் அண்ணத்திலிருந்து பிரித்து கீழே இறக்கி பிறகு மீண்டும் மேல் அண்ணத்தைத்... ம்ஹூம். அதற்குள் பேசுவதற்காக வாயைத்தான் திறக்க வேண்டும் என்பதே மறந்துபோயிருக்கும். ஞாபகத்தைத் தொலைத்துவிட்ட ஒருவரிடம் பொய் சொல்வது மிகக் கொடூரமான விஷயம் என்று நினைத்தே அவருக்குப் பதில் சொல்லாமல் இருந்துவிட்டேன்.

உங்களுடைய அந்த ஒரு ஃபோன் கால் என்னை மகிழ்ச்சியின் உச்சத்துக்குக் கொண்டுபோய்விட்டது. அதற்குப்பின் அன்றைய தினம் முழுவதும் உங்களைப் பற்றிய நினைவுகளிலேயே கழிந்தது. இப்படிப்பட்ட சின்னச் சின்ன விஷயங்கள்தான் வாழ்க்கையை எவ்வளவு தூரம் சுவாரசியப்படுத்துகின்றன தெரியுமா? இதனாலேயே நீங்கள் என்றென்றும்

போற்றப்பட வேண்டியவர் என்று நினைக்கிறேன். I count myself fortunate to have met you, my dear man. What did I do to deserve you? உங்களுடைய அந்த அழகான புகழ்ச்சி மொழிகளுக்காக எனது நன்றி. புகழ்ச்சி என்றாலும் அதெல்லாம் உண்மையும் கூடத்தான். அதே சமயம் நான் ஒரு கெட்ட மனுஷியாகவும் இருக்கலாம். ஆனால் பெருமாளைப் போன்ற இனிய மனிதர்களிடம் நான் எப்போதும் மென்மையாகத்தான் இருப்பேன்.

நாம் பழகியது கொஞ்ச காலம்தான். இன்னும் சிறிது நாட்கள் நாம் ஒன்றாக இருந்து இயற்கை இந்த பூமியில் விசேஷித்திருக்கும் அற்புதங்களை அனுபவித்திருக்கலாம்.

ஆம், என் சிரிப்பில் மயங்கியது நீங்கள் முதல் ஆள் அல்ல. என் தந்தைதான் அந்த முதல் மனிதர். என் அம்மா சொல்வார்கள், நான் குழந்தையாக இருக்கும்போது என் அப்பா என்னைச் சிரிக்க வைத்து ரசிப்பார் என்று. அப்போதும் என் தலைமுடி சுருள் சுருளாகத்தான் இருக்கும். நான் சிரிக்கும்போது அது என் முகத்தில் விழுந்து பின்னால் செல்லுமாம்.

எனக்கு வேலைப் பளு மிக அதிகமாக இருந்தாலும் இரண்டு நாட்களுக்கு முன்பு நீங்கள் இணையதளத்தில் எழுதியிருந்த நீண்ட கதையைப் படிக்காமல் விட முடியவில்லை. முக்கியமாக, அந்தக் கதாபாத்திரங்களெல்லாம் எனக்குத் தெரிந்தவர்களாக இருந்தார்கள்!

நான் ஒரு வகையில் அதிர்ஷ்டசாலி. காரணம். தங்களது முட்டாள்தனங்களையும் சொந்த துக்கங்களையும் பார்த்து பலராலும் சிரிக்க முடிவதில்லை. என்னால் முடிகிறது. நான் என்னையே பார்த்து நகைத்துக் கொள்கிறேன். எனவே பெரும்பாலும் சந்தோஷமாகவே இருக்கிறேன். அலுவலகத்தில் என்னுடன் வேலை பார்ப்பவர்கள் என் சிரிப்பு ஒரு தொற்று நோய் மாதிரி பரவிவிடுவதாகச் சொல்கிறார்கள். ஆக, இப்போது என் சிரிப்பில் மயங்கிய மற்றுமொரு மனிதரைப் பார்க்கிறேன். நீங்கள் எல்லாப் பெண்களையும் செல்லம் என்றுதான் அழைப்பீர்களா?

பெருமாள், நான் உங்கள் நட்பை அரியதொரு பொக்கிஷமாகவே கருதிப் பாதுகாப்பேன்.

Perumal, I'll call you occasionally, just to haunt you with my laughter. Till then...

***

பெருமாள்,

என்ன, நீங்கள் பாட்டுக்கு கன்னாபின்னாவென்று ஒரே போர்னோ மெயில் அனுப்பியிருக்கிறீர்கள்? நீங்கள் என்ன ரோமியோ என்று நினைப்பா, கண்டவுடன் காதல் கொள்ள? அதெல்லாம் ஷேக்ஸ்பியர் சொன்ன வெறும் கதை. நீங்கள் வேண்டுமானால் ரோமியோவாக இருந்துகொள்ளுங்கள். நான் ஜூலியட் இல்லை. வெறும் ஸ்வப்னாதான். அப்புறம், நான் திட்டுகிறேன் என்ற குற்றச்சாட்டு வேறு!

உங்கள் வேகத்தை, ஆண்மையை என்னால் நிச்சயமாகத் தாங்க முடியாது. இவ்வளவு பச்சை பச்சையான வார்த்தைகளை நான் ஜார்ஜ் பத்தாயிடமும், Alina Reyes இடமும்தான் படித்திருக்கிறேன். ஆனால் இதை ஒருவர் என் மீதே பிரயோகிப்பது இதுதான் முதல் தடவை. யாருக்கும் என்னிடம்

இதுவரை இப்படிப்பட்ட துணிச்சல் வந்ததில்லை. சிலரிடம் அவர்கள் மனம் புண்படும்படி திட்டியும் இருக்கிறேன்.

நீங்கள் காதல் வசப்படும் எல்லாப் பெண்களிடமும் இப்படித்தான் உங்கள் ஆசையைக் கொட்டுவீர்களா? அப்படியென்றால் உங்கள் நாவலின் பாகம் - 1, 2, 3 என்று இதுவரை நிறைய 'ஸ்டாக்' இருக்க வேண்டுமே?

ஓரல் செக்ஸ் பற்றிக் கேட்டிருக்கிறீர்கள்; பெண்ணுக்கு அதில் இன்பம் உண்டா என்று. தன் காதலன் அடையும் இன்பத்தைப் பார்த்தாலே அவளுக்கும் பரவசம்தானே? அவள் காரியத்தில் கண்ணாக இருக்கும்போது அவன் அடையும் பரவசம் போதுமே? உங்களுக்கு மட்டும்தான் இதெல்லாம் தெரியும் என்று நினைத்தீர்களா கண்ணா?

நேற்று பேசும்போது நான் ஏன் உங்களைக் கோபிக்கவில்லை? ஏக்கம் கோபத்தை முந்திக்கொண்டது.

Perumal, You're trying to seduce me with your filth... சில நேரங்களில் இந்த ஸ்வப்னாவும் பெருமாள் எழுதியதையெல்லாம் நினைத்துச் சிரித்து... வெட்கி... பெருமாளுக்காக ஏங்குகிறாள்.

***

என்னை சுவாசிக்கும் இதயமே,

உங்களிடம் பேச ஆரம்பித்தால் ஒரு நாள் போதாது. நீங்கள் அவ்வளவு இனிமை. உங்களால் ஒரு நாள் பூராவும் என்னைத் தொடாமல் என் பக்கத்திலிருந்து பேச மட்டும் முடியுமா?

ஓரல் செக்ஸ் பற்றி நீங்கள் சொன்னது சரிதான். There is not much joy in ejaculation as there is in oral sex.

நீங்கள் சொல்வதை முழுமையாக ஒப்புக்கொள்கிறேன். உங்கள் முத்தத்தை என்னால் நிச்சயமாகத் தாங்க முடியாது. ஏனென்றால் நான் மிகவும் மென்மையானவள். உங்களுக்கு வாடாமலர் வேண்டுமென்றால் இந்த மலரைக் கசக்கி விடாமல் முத்தமிடுங்கள். அதற்குப் பிறகு கொஞ்சம் கொஞ்சமாக உங்கள் பாணியில் ஆய்வைத் தொடரலாம்.

மொராக்கோ பற்றிய உங்கள் கட்டுரைகளைப் படித்தேன். 2000-ஆம் ஆண்டு 'கான்' திரைப்பட விழாவுக்குச் சென்றிருந்த போது அப்படியே மொரோக்காவுக்கும் போயிருந்தேன். என்னுடன் சேர்ந்து நீங்கள் செல்ல விரும்பும் விசேஷமான இடம் ஏதாவது உண்டா? இருந்தால் அந்தக் கனவு நிறைவேற ஆசைப்படுகிறேன்.

உங்களுக்கு ஒன்று தெரியுமா? இப்போதெல்லம நானும் உங்கள் ஈமெயிலைத் திரும்பத் திரும்பப் படித்து... வயிறு குலுங்கச் சிரித்து... அடுத்த ஈமெயிலுக்காகக் காத்திருக்கிறேன். பாவம் இந்தப் பெண்.

***

என் அன்பே,

உங்களுக்கு என்னிடம் உங்கள் நாக்கையும், rod-ஐயும் பற்றிப் பேசாவிட்டால் பொழுது புலராதா? எனக்கு எது பிடிக்குமென்று சொல்ல

மாட்டேன். அது ரகசியம்.

இல்லை. நேற்றிரவு எதுவும் செய்யவில்லை... No self service. Too tired. So slept off soon after hitting the pillow. No wonder you couldn't imagine anything.

ஆமாம். பாரிஸில் ஒரு பெண்ணைப் பார்த்து சொக்கிப்போய் விட்டீர்கள் என்று தெரியும். நான் காதுகளைத் தொட்டாலே போதும், உங்கள் rod எனக்கு ஸலூட் அடிக்கும். அதில் எனக்குச் சந்தேகமே இல்லை. எனக்கு என்னுடைய திறமையைப் பற்றி நன்றாகத் தெரியும். My dear, ஒரு அவசர வேலை இருக்கிறது. நாளை அவசியம் உங்களுடன் பேசுவேன்.

உங்கள்,

குட்டி.

இதுபோல் தினமும் ஒரு கடிதம் என மூன்று மாதங்கள் கணினி வழியே நடந்த சொற்களின் பரிமாற்றத்துக்குப் பிறகு சென்னை வந்தாள் ஸ்வப்னா. ஐந்து நாட்கள் அவள் தோழியின் பங்களா எங்களுடைய தேக சங்கமத்துக்கு சாட்சியாய் நின்றது. போதும் போதுமென்று குடித்தோம். ஆடினோம். எனக்கு ஆட்டத்தில் கவனமில்லை. அவள் உடலோடு உடல் சேர்த்து என்னை உஷ்ணமாக்கிக் கொள்ளவே ஆடுவதைப்போல் பாசாங்கு செய்தேன். ஆட்டம் முடிந்ததும் பங்களாவுக்குள்ளேயே இருந்த சிறிய நீச்சல் குளத்தில் ஒரு ஆட்டம்.

***

...மற்றவர்களுக்காகவே வாழப் பழகிக்கொண்டேன் பெருமாள். என்னைப் பற்றி நினைத்தால் என் சித்தம் கலங்கி விடுமல்லவா? என்னைப் பற்றி நினைக்காமலிருப்பதை ஒரு தவம் போல் பயின்று கொண்டேன். எப்படித் தெரியுமா? என் கணவருக்கு அவர் மூளையிலுள்ள .0001 மில்லிமீட்டர் அளவுள்ள அச்சு ஒன்று கழன்று விட்டது. அந்த அச்சு, மொழியுடனும் ஞாபகக் கல்லறையுடனும் - என்ன, கிடங்கு என்று சொல்ல வேண்டுமா? Fuck off your asshole Derrida. கிடங்கைவிட கல்லறையென்று சொல்வதே என்னைப் பொறுத்தவரை சரி - சம்பந்தப்பட்டது என்பதால் அவர் மொழியற்றுப் போய்விட்டார். நான் என்ன இப்படி ஆகுமென்று எண்ணியா Ma mere-ஐ என் கொரியாக்ர.ஃபிக்குத் தேர்ந்தெடுத்தேன். ஜார்ஜ் பத்தாய் எனக்குப் பிடித்த எழுத்தாளர். My creation was a tribute to my master.

என் கணவருக்கு மொழி போனதால் காந்தாரியைப் போல் நானும் என் கண்ணைக் கட்டிக்கொள்ள வேண்டியதாயிற்று. நான் மூடியது மொழியையல்ல. அப்படி ஒரு உலகில் மற்றவர் தோள் பற்றி என்னால் நடக்க முடியாது. அதனால், காலத்தின் சாளரங்களை மூடினேன். கடந்த காலம் என்பது மலர் வனமாய்ப் பூத்துக் கிடக்கிறது என் மனதில். நடனம் நடனம் என்று எங்கெல்லாம் ஓடினேன் தெரியுமா? 5 வயதிலிருந்து 25 வயது வரை ஓடினேன். ஸிட்னி, சிங்கப்பூர், தில்லி, நியூயார்க், டோக்யோ, சென்னை, டப்ளின் என்று நான் ஆடாத ஊரில்லை. அதையெல்லாம் நினைத்துப் பார்த்தால் - ஒன்று, தற்கொலை செய்துகொள்ள வேண்டும் அல்லது, மனச்சிதைவுக்கு ஆளாக வேண்டும். எனவே, கடந்த காலத்தை ரத்து செய்தேன். என்னைப் பொறுத்தவரை, அது எழுத்துக்கள் அழிந்த வெற்றுக் காகிதம். வலியில்லை. வேதனையில்லை. எதிர்காலமும்

மூச்சுத் திணறலை ஏற்படுத்தக்கூடியதுதான். கனவுகளால் நிரப்பப்பட்ட பக்கங்களல்லவா? அந்தக் கனவுகளில் எந்த வித நம்பிக்கைக் கீற்றுகளும் தெறிக்கவில்லை என்பதனால் அந்தப் பாரமும் நம்மை அழுத்திச் சிதைத்துவிடும். எனவே கனவுகளை ரத்து செய்தேன். delete. delete. delete. இப்போது என்னை எந்தப் பாரமும் அழுத்தவில்லை. நிகழ்காலத்தின் கதகதப்பில் ஆசுவாசமடைகிறேன். இந்தக் கணம். இது போதும். வா பெருமாள். என்னைத் தீண்டு. என்னைப் புணர். இந்த சரீரத்தைப் புசி. இந்த சரீரத்தின் கிளர்ச்சியை அடக்கு. என்னை உன் நாவினால் நக்கு. ஐந்தரை ஆண்டுகளாக ஆணின் ஸ்பரிசமற்று கிடக்கிறது இந்த தேகம். நிதம்பத்தின் காம ஊற்றுக்கள் தூர்ந்துவிட்டனவா என சந்தேகமாயிருக்கிறது பெருமாள். என்னை உயிர்ப்பித்து எழச் செய். எழாவிட்டால் சவுக்கினால் விளாசு. என்னைக் கடி. என் தொடைகளில் உன் பல் தடங்கள் பதியட்டும். உன் நகக் கீறல்களிலிருந்து ரத்தம் பெருகட்டும். ரத்தக் கவுச்சியும் பால் வாடையும் கலந்த என் முலைகளைச் சுவை. என் முகத்தில் மூத்திரத்தை அடி. உன் மூத்திரச் சூடு என் முகத்தில் பரவட்டும். என் நாவினால் உன் மூத்திரத்தைச் சுவைக்கிறேன்.

***

நீச்சல் குளத்தில் வைத்து தண்ணீருக்குள்ளேயே அவளைப் புணர்ந்த போது எனக்கு இரண்டு விஷயங்கள் ஞாபகம் வந்தன. சிறு பிராயத்தில் குளத்தில் குளிக்கும்போது நீருக்கடியில் வைத்து சுய போகம் செய்வது மற்றும் ரோஜலியோ சினானின் சிறுகதை.

சரீர சேர்க்கையின்போதும், அதற்கு முன்பான விளையாட்டுக்களின்போதும் ஸ்வப்னா பேய் பிடித்தவளைப் போலிருந்தாள். உன்மத்தம் கொண்டவளைப்போல் கிடுகிடுத்துச் சப்தமிட்டாள். குரஸவாவின் Red Beard படத்தில் வரும் பைத்தியக்காரியைப் போல் தோன்றினாள். ஆனால் கையில் கொண்டை ஊசி இல்லை. அந்தப் பைத்தியக்காரியைப் போல் நான் உருவாக்கிய கதாபாத்திரம் எதுவும் என்னைக் கொல்லப்போவதில்லை. ஆனால் ஸ்வப்னா தன்னையே அழித்துக்கொள்வாள் போலிருக்கிறது. அவளுடைய அழிவுதான் அவளுக்கு ஆர்கஸத்தைத் தரும் போல் இருக்கிறது. கழுத்து நெறிபட்டுச் சாகிறவனின் ஆண்குறி விறைத்து விந்துத் துளிகளைச் சிந்துவதைப் போல் அவள் உடலின் தாங்கவொண்ணா வலிதான் அவளை உச்சத்தை அடைய வைக்கிறதென்று தோன்றியது எனக்கு.

புல்தரையில் முக்காலியில் அமர்ந்திருக்கிறேன் நான். தரையில் அமர்ந்திருக்கும் அவள் வாயில் என் உறுப்பை திணித்து முன்னும் பின்னுமாக மூர்க்கமாய் இயங்குகிறேன். குறி அவள் தொண்டைக் குழிக்குள் இறங்கிவிடுகிறது. மூச்சு விட முடியாமல், கண்கள் பிதுங்க மிருக ஓலம் எழுப்புகிறாள். என் கைகள் அவள் தலைமுடியைப் பற்றி என்னை நோக்கி வெறியுடன் அழுத்துகின்றன. கடித்துத் துண்டாக்கி விடுவாளோ எனத் தோன்றுகிறது. ஆனாலும் நிறுத்தாமல் இயக்குகிறேன். ஒரு கட்டத்தில் என்னுடைய உயிர்த்தாது பீய்ச்சியடிக்க அவள் தன் வாயை வெளியே எடுத்து தன் முகத்தில் அதை வாங்கிக்கொள்கிறாள். அப்படியே புல்தரையில் சாய்ந்து I am coming, I am coming என்று அலறுகிறாள். சட்டென்று அந்தப் புல்தரையில் மண்டியிட்டு அமர்ந்து அவளது மதன

நீரைச் சுவைக்கத் துவங்குகிறேன் நான்.

## 42. ஒரு கோப்பைத் தேநீர்

ஒழுக்கம், நற்குணம் என்பதையெல்லாம் கடைப்பிடிப்பது மிகவும் எளிது. ஆனால் தீமையின் பக்கம் வாழ்வதுதான் கடினமானது - அது தரும் அசாதாரணமான பாதை மற்றும் வலியின் காரணமாக. ஓஷோ சொன்னார், 'பாவத்தைச் செய்வதே ஒரு தண்டனைதான்' என்று. முதலில் அதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. ஏனென்றால், மற்றவர்கள் நமக்குத் தீங்கு செய்யும்போது நாம் ஏன் துன்பப்படுகிறோம்? அவர்களை எப்படி நம்மால் மன்னிக்க முடியும்? அடுத்தவர் நமக்குச் செய்யும் தீமையை என்னால் மறக்க முடியுமா? என்னைப் பொறுத்தவரை, மன்னிப்பு என்பது ஒரு சாக்கு (Pretext) தான். அந்தத் தீமையை மறப்பதுதான் ஒரு மனிதன் செய்யக்கூடியது. மறக்க முடியும் என்றால், மன்னிப்பு என்ற பேச்சுக்கே இடமில்லை. மன்னிப்பு என்றால் என்ன?

சில தீய சம்பவங்களை எதிர்கொள்ளும்போது நான் பதற்றம் அடைவதைக் கவனித்திருக்கிறேன். இதற்குக் காரணம் - அந்தச் சம்பவங்களுக்குக் காரணமானவர்களை நான் அவர்களுடைய வழியிலேயே சந்திக்க விரும்புவதுதான். ஒரு தீமையைச் செய்வது சுலபமாகவே தோன்றுகிறது. தீமை நம்மை எளிதில் வசீகரித்து விடுகிறது. ஆனால் அதிலிருந்து மீட்டுக்கொள்வதும், அது தரும் வேதனையிலிருந்து நம்மை விலக்கிக்கொள்வதும்தான் மிகப் பெரிய சவால். நற்பண்பு, நற்குணம் என்பது சுலபம் - because it is built above all the temptation and pain. Supreme consciousness என்ற நிலையை அடைந்தவர்களுக்கு அது சுலபம். தீமை என்பது இதற்கு நேர் எதிர் நிலை. அது ஒரு அதீத வசீகரத்தைக் கொண்டுள்ளது. ஆனால் தீமையைச் செய்யும் போதே ஒருவர் அதன் விளைவை அனுபவித்து விட முடியும் இல்லையா?

- அலெக்ஸ் எழுதிய ஒரு கடிதத்தில்

லெனி ஒரு போலீஸ் அதிகாரி. இந்திய அரசியலில் பெரும் புயலை உருவாக்கிய அரசியல் கொலை வழக்கு ஒன்றில் குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கும் குழுவில் பணியாற்றியவர். குற்றவாளிகளை அக்குழு கண்டுபிடிக்கவும் செய்தது. பார்ப்பதற்கு லெனி போலீஸ்காரரைப்போல் தெரியமாட்டார். சினிமா நடிகரைப் போன்ற கவர்ச்சிகரமான தோற்றம். வசீகரமான சிரிப்பு. எதிராளியை வசியப்படுத்திவிடக்கூடிய பேச்சு. போலீஸ் அதிகாரிகளுக்கு உரிய உயரம் கிடையாது. நடுத்தர உயரம்தான். ஆனால் குரல் மட்டும் கணீரென்று இருக்கும். குற்றவாளிகளுடனேயே தனது 25 ஆண்டு கால வாழ்க்கையைக் கழித்தவர். மேடைப் பேச்சாளரைப் போல் நீண்ட நேரம் பேசுவார். ஆனால் பேச்சு படு சுவாரசியமாக இருக்கும். அதே சமயம், மற்றவர்கள் பேசுவதையும் ஆர்வத்துடன் கேட்பார். பழைய தமிழ் இலக்கியத்திலிருந்து அடிக்கடி மேற்கோள் காட்டுவார். அப்படி ஒரு நாள் அவர் மேற்கோள் காட்டியது சிலம்பிலிருந்து :

'நீர்வார் கண்ணை, எம்முன் வந்தோய்!

யாரையோ நீ மடக்கொடியோய்? என -
‘தேரா மன்னா! செப்புவது உடையேன்,
எள்ளறு சிறப்பின் இமையவர் வியப்பப்
புள்ளுறு புன்கண் தீர்த்தோன்; அன்றியும்
வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சுடத் தான்தன்
அரும்பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன்;
பெரும்பெயர்ப் புகாரென பதியே; அவ்வூர்
ஏசாச் சிறப்பின், இசை விளங்கு பெருங்குடி
மாசாத்து வாணிகன் மகனை ஆகி,
வாழ்தல் வேண்டி ஊழ்வினை துரப்பச்
சூழ்கழல் மன்னா! நின்னகர்ப் புகுந்து, ஈங்கு
என்காற் சிலம்பு பகர்தல் வேண்டி, நின்பாற்
கொலைக் களப்பட்ட கோவலன் மனைவி!
கண்ணகி என்பது என் பெயரே’

மடைதிறந்த வெள்ளமென சொல்லிக்கொண்டே போனார். இடையிடையே அர்த்தம் கூறுவதும் உண்டு.

இவ்வளவு இனிமையான சுபாவம் இருந்தாலும், சமயங்களில் நம்மைக் கலவரப்படுத்திவிடுவார். உதாரணமாக, குற்றவாளிகளைப் பிடிக்கும் அவரது தந்திரோபாயங்களைப் பற்றி விவரிக்கும்போது இப்படி ஆரம்பிப்பார்.

‘பிரதம மந்திரியை நம்ம பெருமாள் கொலை பண்ணிட்டாரு...’

நான் பாம்பை மிதித்தது போல் தூக்கிவாரிப் போட்டு எழுந்து கொள்வேன்.

‘அட, ஒரு உதாரணத்துக்குச் சொன்னேன், பெருமாள்... உக்காருங்க’ என்று சொல்லி கதைக்குள் சென்றுவிடுவார்.

நான் ஒரே நிமிடத்தில் பிரதம மந்திரியைக் கொன்ற கொலையாளியாகி விட்ட அதிர்ச்சியில் விதிர்விதிர்த்து நின்றுகொண்டிருப்பேன். இப்படியே ஒரு வங்கிக் கொள்ளைக்காரனாகவும், பதினெட்டு பெண்களைக் கற்பழித்துக் கொன்ற காமக் கொடூரனாகவும், ஆயிரம் கோடி ரூபாயை விழுங்கி ஏப்பம் விட்ட அரசியல்வாதியாகவும், இன்னும் எப்படியெப்படியெல்லாமோ மாறிக்கொண்டிருப்பேன்.

தன்னைப் பற்றிய அறிமுகத்தின்போது லெனி கூறிய ஒரு விஷயம் - தான் இதுவரை ஒரு பைசாகூட லஞ்சம் வாங்கியதில்லை என்பது.

‘ஒருமுறை ஐந்து பெட்டிகளில் கொண்டுவந்து கொடுத்தார்கள். சுட்டுவிடுவேன் என்றேன்.’

‘எவ்வளவு இருக்கும்?’

‘ஒரு பெட்டியில் ஒரு கோடி.’

நான் நம்பவில்லை. பணத்தைத் தொட்டதே இல்லை என்று சொல்லிய பல போலீஸ் அதிகாரிகளை எனக்கு நெருக்கமாகத் தெரியும். ஆனால் அதில் துளிக்கூட உண்மை இருந்ததில்லை.

ஆனால் பிறகுதான் தெரிய வந்தது, லெனி கூறிய அத்தனையும் அப்பழுக்கற்ற உண்மை என்பது. எப்படியென்றால், லெனியை நான் என்னுடைய நண்பன் குமாரசாமிக்கும் அறிமுகப்படுத்தி வைத்திருந்தேன். ஒரு நாள் லெனி அவனிடம் தன் மகனுக்கு அவன் பணிபுரியும் ஸாஃப்ட்வேர் துறையிலேயே ஒரு வேலை வாங்கித் தரும்படி கேட்டார்.

‘என்ன படித்திருக்கிறான்?’

‘பி.ஏ. பொருளாதாரம்.’

‘பொருளாதாரம் படித்துவிட்டு ஸாஃப்ட்வேர் துறையில் வேலை வாங்குவது சாத்தியமில்லையே?’

‘சம்பளம் அதிகம் வேண்டாம். ஒரு பத்தாயிரம் போதும்.’

பிறகு குமாரசாமி அவரிடம் மெய்ன்ஃப்ரேம் பற்றிச் சொன்னான். அதைப் படித்தால் எடுத்த எடுப்பில் சம்பளம் 20 ஆயிரம் கிடைக்குமாம். இல்லாவிட்டால் SAP என்று ஒரு கோர்ஸ் உள்ளது. ஆனால் அதைப் படிக்கவே ஒன்றரை லட்சம் செலவாகும். படித்துவிட்டால் பெங்களூரில் ஒன்றரை லட்சம் வரை போகிறது சம்பளம்.

‘பேசாமல் நம்ம பையனை அதில் சேர்த்துவிட்டுவிடலாமே?’

‘பொருளாதாரம் படித்தவர்கள் அதில் சேர முடியாதே?’

‘வேறு எதில் சேரலாம்?’

‘லண்டன் ஸ்கூல் ஆஃப் இகனாமிக்ஸில் சேரலாமே?’

இந்த ஆலோசனையை வழங்கியது நான்.

‘அவ்வளவு பணம் இருந்தால் நான் ஏன் பெருமாள் இப்படி இருக்கிறேன்?’

லெனியின் மற்றொரு குணாம்சம், குற்றவாளிக்கு சிம்ம சொப்பனமாக இருக்கும் அவர், வீட்டில் பூனையாகப் பதுங்குவது. ‘ஏன் லெனி, அண்ணியிடம் மட்டும் இவ்வளவு பயப்படுகிறீர்கள்?’ என்று ஒரு நாள் அவரை நேரடியாகவே கேட்டேன்.

அதற்கு அவர் கூறிய பதில்: ‘நான் கடவுளுக்கே பயப்படாதவன். அப்படியிருக்கும்போது வாழ்க்கையில் ஒருத்தரிடமாவது பயப்பட வேண்டாமா?’

லெனி எனக்கு நிறைய கதைகள் சொல்லியிருக்கிறார். அதில் ஒரு கதை இது:

ஒரு நபரை சந்தேகத்தில் பிடித்து விசாரித்துக் கொண்டிருக்கிறார் லெனி. அது ஒரு மிகப் பெரிய வங்கிக் கொள்ளை. வங்கிக் கொள்ளை என்றால் அந்தக் காலத்தில் செய்வதுபோல், நடுநிசியில் வங்கியின் ஷட்டரைப் பெயர்த்துவிட்டு லாக்கரை உடைத்துத் திருடுவது அல்ல. இந்தத் திருடன் செய்தது ஒரு ஹைடெக் மோசடி. அதாவது, காசோலையில் போலிக்

கையெழுத்து போட்டு மிகச் சுலபமாக கோடிக்கணக்கில் கொள்ளையடிப்பது. திருடன் செய்த ஒரே ஒரு தவறு, இந்த விஷயத்தை அவன் தன் உயிர் நண்பன் ஒருவனிடம் சொன்னது. ஆனால் ஒரு விஷயம் நிச்சயம்: அந்த நண்பன் தன் உயிரே போனாலும் காட்டிக்கொடுக்க மாட்டான். அப்படியானால் இதை போலீஸிடம் போட்டுக்கொடுத்தது யார்?

லெனியிடம் கேட்கிறான் திருடன். லெனி வாயையே திறக்கவில்லை. கெஞ்சுகிறான் திருடன்.

'முடியாதுப்பா... அது என் தொழில் தர்மத்துக்கே எதிரானது' என்று மறுத்துவிடுகிறார் லெனி.

விடாமல் கெஞ்சுகிறான். அவன் கேட்பதன் காரணம், இனிமேலாவது தனக்கு துரோகம் செய்தவனிடம் ஜாக்கிரதையாக இருந்து கொள்ளலாமே என்பதுதான். மற்றபடி பழி வாங்குவதற்கோ எதற்குமோ அல்ல.

மனம் இரங்கிய லெனி, அவனைக் காட்டிக்கொடுத்தவனின் பெயரைச் சொல்கிறார். திருடனுக்கு ஒரே அதிர்ச்சி. அவனால் அதைச் சற்றும் நம்ப முடியவில்லை. லெனிதான் பொய் சொல்கிறார் என்று தோன்றுகிறது அவனுக்கு.

'சார், நீங்க சொல்றதை என்னால் நம்ப முடியாது. அவன் எனக்கு ப்ரதர் மாதிரி. எனக்காக உயிரையே கொடுப்பான். நீங்க இல்ல, கடவுளே வந்து சொன்னாலும் நான் நம்ப மாட்டேன்.'

இப்போது லெனிக்குப் பிரச்னையாகிவிடுகிறது. தான் சொன்னதை உண்மை என்று நிரூபிக்க வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது அவருக்கு. ஒரு தந்திரம் செய்கிறார். திருடனைக் காட்டிக்கொடுத்தவனுக்கு ஃபோன் செய்து அந்த உரையாடலைத் திருடனும் கேட்பதுபோல் ஏற்பாடு செய்கிறார். உரையாடல் இப்படிச் செல்கிறது:

'என்ன சார், அவனெ விசாரிச்சிங்கிளா?'

'என்னப்பா இது, அவன் சொல்லவே மாட்டேங்கிறாம்ப்பா.'

'சார்... கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி நாங்க ரெண்டு பேரும்தான் சாப்பிட்டோம். அப்பகூட சொன்னான். நீங்க நல்லா அவனை உதைச்சுக் கேளுங்க சார். அடி பின்னி எடுத்தீங்கன்னா சொல்லிவிடுவான்.'

இந்தச் சம்பவத்தை என்னிடம் விவரித்துவிட்டு லெனி சொன்னார். இதுதான் பெருமாள் க்ளாசிக் பெட்ரேயல்!

இப்படி ஏகப்பட்ட சம்பவங்கள். ஏகப்பட்ட கதைகள்...

'உங்களைக்கூட நம்ப மாட்டேன் பெருமாள். நீங்கள் யார், எப்படிப்பட்டவர் என்பதைத் தெரிந்துகொண்ட பிறகுதான் நம்புவேன். நீங்கள் ஒரு கோப்பை தேநீர் கொடுத்தால்கூட நான் குடிக்கக்கூடாது, தெரியுமா?'

நான் கேட்டுக்கொண்டிருந்தேன். லெனி அடுத்த கதையை ஆரம்பித்தார்.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து தொண்ணூற்று ஒன்றாம் வருடம், மே பதினைந்தாம் தேதி, காலை ஒன்பதரை மணி. லெனி பேசும்போது இப்படித்தான் வருடம், தேதி, நேரம் எல்லாவற்றையும் துல்லியமாகக் குறிப்பிட்டுப் பேசுவார். எக்மோர் ரயில்வே ஸ்டேஷன். ரிஸர்வேஷன்

கௌண்ட்டர். அப்போதெல்லாம் இப்போது இருப்பது போல் கம்ப்யூட்டர் வசதி கிடையாது. ஒரே ஒரு க்ளார்க்தான் எழுதிக் கொண்டிருப்பார். முன்பதிவு செய்ய மணிக்கணக்கில் நிற்க வேண்டும். அதனால் சில இடைத்தரகர்கள் அங்கே இருப்பதுண்டு. ஐந்து ரூபாய் கூடுதலாகப் பெற்றுக்கொண்டு ஐந்தே நிமிடத்தில் பயணச் சீட்டை வாங்கிக் கொடுத்துவிடுவார்கள்.

சரி, இப்போது ஆயிரத்துத் தொள்ளாயிரத்து தொண்ணூற்று ஒன்றாம் வருடம், மே மாதம் பதினைந்தாம் தேதி காலை ஒன்பதரை மணிக்கு வாருங்கள். அந்த நேரம் அங்கே ஒரு பெரிய க்யூ நின்று கொண்டிருந்தது. திருச்சியிலிருந்து ஏதோ மாநாட்டுக்காக சென்னை வந்திருந்த ஆசிரியர் கூட்டம். அப்போது ஒரு இடைத்தரகன் வந்து ‘உங்கள் அனைவருக்கும் ஒரே நொடியில் டிக்கட் எடுத்துக் கொடுத்து விடுகிறேன். ஆளுக்கு ஒரு ரூபாய் போட்டால் கூட முப்பது ரூபாய்தான் வரும்’ என்று சொல்லியிருக்கிறான். அந்த நேரம் பார்த்து ஒரு போலீஸ்காரர் சீருடையுடன் அங்கே வர இந்த இடைத்தரகன் ‘சார் வணக்கம். வீட்ல மேடம் சௌக்கியங்களா?’ என்று விசாரிக்க, அவரும் ‘சௌக்கியம்’ என்று சொல்லியிருக்கிறார். அதற்குள் ஐந்து கோப்பை தேநீர் வாங்கி போலீஸ்காரருக்கும், கௌண்ட்டரில் இருந்த ஊழியருக்கும், ஆசிரியர் குழுவில் இருந்த இரண்டு முக்கியஸ்தர்களுக்கும் கொடுத்துவிட்டு தானும் குடித்திருக்கிறான் அவன். தேநீரைக் குடித்துவிட்டு போலீஸ்காரர் கிளம்பிவிட்டார். ஆசிரியர் குழு முப்பது பயணச்சீட்டுகளுக்கான தொகையை அவனிடம் கொடுத்திருக்கிறது. தொகையைப் பெற்றுக்கொண்டவன் கௌண்ட்டர் பக்கம் சென்று தேநீர் கோப்பையை எடுத்துக்கொண்டு வெளியே சென்றிருக்கிறான். சென்றவன் சென்றவன்தான். ஒரு மணி நேரமாகியும் ஆளைக் காணோம். கௌண்ட்டரில் இருந்தவரைக் கேட்டால் அவருக்கு எதுவுமே தெரியவில்லை. அவர் நம்முடைய லெனியைப் போன்ற ஒரு நேர்மைத் திலகம் போல.

‘நீங்கதானே சார் அவன் குடுத்த டீயைக் குடிச்சீங்க?’ என்று கோபாவேசத்துடன் கேட்டுள்ளனர் ஆசிரியர்கள்.

‘இதுல என்னங்க தப்பு? இப்போ நீங்க வாங்கிக் குடுத்தா கூடத்தான் குடிப்பேன்.’

உடனே அந்த போலீஸ்காரரைத் தேடி போலீஸ் நிலையத்துக்கு ஓடியிருக்கிறது ஆசிரியர் கூட்டம். போலீஸ்காரர் அப்போதுதான் ட்யூட்டி முடிந்து வீட்டுக்குக் கிளம்பிக்கொண்டிருக்கிறார். நேரம் மதியமாகிவிட்டது.

‘சார்... உங்க ஃப்ரண்ட் எங்க பணத்தை எடுத்துக்கிட்டு ஓடிட்டான்.’

‘யோவ் யார்யா நீங்க? எவன்யா என் ஃப்ரண்டு?’

‘சார், நீங்க காலையில ரயில்வே ஸ்டேஷன் வந்த போது உங்க கூட டீ குடிச்சானே...?’

போலீஸ்காரர் உஷாராகி விட்டார்.

‘ஓ, அவனா? அவனை நான் முன்ன பின்ன கூட பார்த்தது இல்லையே? டீ வாங்கிக் குடுத்தான், குடிச்சேன்.’

‘சார், உங்க ஒ்ப்பைப் பத்திக்கூட விசாரிச்சான். இப்ப தெரியாதுங்கிறீங்களே?’

போலீஸ்காரருக்கு உண்மையிலேயே அவனைத் தெரியாது. அதற்குள் இன்ஸ்பெக்டர் வந்துவிட்டார். ஆசிரியர் கூட்டத்தைப் பார்த்ததும் அவரும் அந்த போலீஸ்காரரைப் பிடித்துக்கொண்டார்.

‘இதோ பார்யா. உனக்குத் தெரியாதவனா இருந்தா நீ எப்படி அவன் கூட டீ குடிச்சே? நம்புற மாதிரி இல்லை நீ சொல்றது. சாய்ந்திரம் வரைக்கும் டைம் தர்ரேன் சொல்லிடு.’

அதற்குள் காவல் நிலையம் எதிரிலேயே ஆசிரியர் குழு தர்ணாவில் உட்கார்ந்துவிட்டது. ‘ரயில்வே அதிகாரிகள் போலீஸ் துணையுடன் கள்ள டிக்கட்’ என்ற தலைப்பில் மாலைப் பத்திரிகைகளில் தலைப்புச் செய்தி! டெபுடி கமிஷனரும் ஆஜராகி, டீ குடித்த போலீஸ்காரருக்கு சஸ்பென்ஷன் உத்தரவு கொடுக்கப்பட்டுவிட்டது. ரயில்வே உயர் அதிகாரிகள் வந்து சமாதானப் பேச்சுவார்த்தை நடத்தி அந்த ஆசிரியர்களுக்காகத் திருச்சிக்கு இலவசமாகவே ஒரு ‘கோச்’ விடப்பட்டது.

‘எல்லாம் ஒரு கோப்பை தேநீரால் வந்த வினை!’ என்று முடித்தார் லெனி.

லெனி பற்றி இங்கே நான் சொல்ல வந்த காரணம் - நானும் கிட்டத்தட்ட அவரை மாதிரியே மாறிவிட்டேன் என்பதைக் குறிப்பிடுவதற்காகத்தான். யாரைப் பார்த்தாலும் சந்தேகமாக இருக்கிறது. காரில் போகும்போது யாரேனும் லி்ப்ட் கேட்டால், மறைத்து வைத்துள்ள கத்தியைக் காண்பித்து நம்மிடமுள்ள பணத்தைப் பிடுங்கும் கும்பலைச் சேர்ந்தவனோ என்று தோன்றுகிறது. ஒரு பெண்ணோடு தோழமை ஏற்பட்டால் அந்தத் தோழமை மீது சந்தேகம் வருகிறது. சமீபத்தில் ஒரு தோழி - வெளிநாட்டில் வசிப்பவள் - எனக்கு ஒரு பரிசு அளித்தபோது அதை வாங்க மறுத்துவிட்டேன். அதில் ஏதோ செய்வினை செய்யப்பட் டிருக்குமோ என்று ஒரு சந்தேகம்.

ஆரம்பத்தில் ஒழுங்காகத்தான் இருந்தேன். ஆனால் வாழ்க்கை அனுபவங்கள்தான் என்னை இப்படி மாற்றிப் போட்டன. தெருவில் அனாதையாய் கையில் பச்சிளம் சிசுவுடன் நின்ற பெண்ணைக் காப்பாற்றினேன். அவள் இப்போது என்னைக் கொல்வதற்காகக் கையில் கத்தியுடன் அலைகிறாள். ஒரு சிறுவன் - புத்திசாலி - படிப்பதற்கு வசதியின்றி மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தான். அவனுக்கு ஆதரவு அளித்து படிக்க வைத்து ்ப்ரெஞ்ச் மொழியில் பாண்டித்யம் பெறச் செய்தேன். இப்போது அவன் தனது வியப்பைக்கூட ்ப்ரெஞ்ச் மொழியில்தான் வெளிப்படுத்துகிறான். வாழ்க்கையில் நன்கு முன்னேறிய பின் ‘கண்ணாயிரம் பெருமாளுக்கு மரண தண்டனை அளிக்க வேண்டும்’ என்று ஒரு பத்திரிகையில் எழுதியிருக்கிறான். நான் எனது கரத்தால் வித்திட்டால் அது விஷச் செடியாய் வளர்கிறது.

இது ஒரு பக்கம் இருக்க, ஒரு நாள் காலையில் கையில் அகத்திக் கீரையுடன் வந்தாள் மீரா. ஆச்சரியத்துடன் பார்த்தேன். காரணம் - எனக்கு அகத்திக் கீரையைத் தடை செய்திருந்தாள் அவள். மணி சொன்ன தகவல் ஒன்றை போதையில் அவளிடம் உளறிவிட்டேன். அதிலிருந்துதான் அந்தத் தடை. அதாவது, மணியின் நண்பன் ஒருவன் ஒரு நாள் குடித்துவிட்டு

அகத்திக் கீரை சாப்பிட்டு விட்டானாம். உடனே உடல்நிலை பாதிக்கப்பட்டு உயிருக்கே ஆபத்தாகும் அளவு நிலைமை மோசமாகிவிட்டதாம். நான் இத்தனை ஆண்டு காலமாக அகத்திக் கீரை சாப்பிட்டு வருகிறேன். குடித்து விட்டும் சாப்பிட்டிருக்கிறேன். ஒன்றும் ஆகவில்லை. இப்போது இந்த விஷயம் கேள்விப்பட்ட பிறகு எனக்கே பயமாகத்தான் இருக்கிறது. பொதுவாக, அகத்திக் கீரை மாடுகளுக்குப் பிரீதியான உணவு. மானிடர் சாப்பிட்டால் மாட்டு பலம் வரும் என்பார்கள். ஆனால் பொதுவாக பிராமணர்கள் அகத்திக் கீரை உண்பதில்லை. ஏகாதசி விரதம் இருந்துவிட்டு மறுநாள் துவாதசி அன்று மட்டும் அகத்திக் கீரை உண்பது அவர்கள் வழக்கம். முந்தின நாள் கிடந்த பட்டினியையும், அதனால் உண்டாகும் பலவீனத்தையும் போக்கும் சக்தி அகத்திக் கீரைக்கு உண்டு.

‘எதற்கு இப்போது அகத்திக் கீரை?’ என்று கேட்டேன்.

‘தெருவில் திரியும் மாடுகளுக்காக வாங்கினேன்’ என்றாள்.

சொல்லிவிட்டு வீட்டில் அவளுக்கு உதவி செய்யும் லட்சுமி என்ற பணிப் பெண்ணை அழைத்து அவசரமாக ஒரு ஆட்டோ பிடித்து வரும்படிக் கூறினாள். (அப்போது வீட்டில் கீதா இல்லை; கீதாவுக்குப் பதிலாக லட்சுமி. இந்தக் கதை நடந்து ஒரு வருடம் இருக்கும்.) ‘என்ன விஷயம், இவ்வளவு அதிகாலையில் ஆட்டோ?’ என்று வினவினேன். கதை சொல்ல ஆரம்பித்தாள்:

ஒரு முதியவர்; வயது எண்பது இருக்கும். தறி நெய்பவர். வீட்டில் மருமகள்களின் தொல்லை தாங்க முடியாமல் சென்னைக்கு வேலை தேடி (?) ரயிலேறிவிட்டார். ஊர்: சிதம்பரம். தாம்பரத்தில் இறங்கி வேலை தேடியிருக்கிறார். ஒரு நாள் பூராவும் தேடியும் பலனில்லை. கையில் காசில்லை. ஏதோ ஒரு பஸ்ஸைப் பிடித்து கோயம்பேடு வந்துவிட்டார்.

‘சிதம்பரம் திரும்பிவிட்டால் போதும். இல்லையேல் இந்த ஊரில் அனாதைப் பிணமாகிவிடுவேன் என்று அழுகிறார். பாவம் பெருமாள்…’ என்று சொல்லிக்கொண்டிருக்கும் போதே மீராவின் கண்கள் கலங்கிவிட்டன. நான் உடனே லெனியாக மாறினேன். ‘ஆக… இதில் ஏதோ சூது இருக்கிறது’ என்று தோன்றியது. பிச்சையெடுப்பதில் இது ஒரு வகை. பிறந்த குழந்தையை மருத்துவமனையிலிருந்து திருடி கைகளில் வைத்துக்கொண்டு பிச்சையெடுப்பது, சிறுவர் சிறுமியரைக் கடத்தி வந்து அவர்களது கண்களைக் குருடாக்கி பிச்சையெடுக்க வைப்பது என்பன போன்ற பல்வேறு விதமான பிச்சைகளில் இது ஒரு வகை. இதற்கு நீங்கள் ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் என்று பிச்சையிட முடியாது. ஐம்பது, நூறு என்று கொடுக்க வேண்டும். ஊருக்குப் போகப் பயணச்சீட்டு வாங்க வேண்டும் அல்லவா? ‘நேரில் பார்த்துவிடுவோம்’ என்று வெளியே வந்தேன். அது ஒரு பரிதாபகரமான காட்சி. உண்மையிலேயே எண்பதைத் தாண்டிய முதியவர். காது கேட்கவில்லை. கண் பார்வையும் மந்தம். அழுதுகொண்டிருந்தார் முதியவர்.

குமுறிக் குமுறி என்னிடம் ‘யாருமே நான் பேசுவதைக் கேட்க மாட்டேன் என்கிறார்கள்’ என்று சொன்னார்.

‘எவ்வளவு பேரிடம் சொன்னேன் தெரியுமா?’ என்று குழந்தையைப் போல் கேட்டார்.

அவருக்கு தோசை சுட்டு வந்து கொடுத்தாள் மீரா.

ஆட்டோ வந்துவிட்டது. முன்னூறு ரூபாயை ஆட்டோக் காரரிடம் கொடுத்து 'கோயம்பேடு சென்று இந்தப் பெரியவரை சிதம்பரத்துக்கு பஸ் பிடித்து ஏற்றிவிட வேண்டும்' என்று அவரை வினயத்துடன் கேட்டுக்கொண்டாள் மீரா.

ஆட்டோக்காரர் எங்கள் பகுதியைச் சேர்ந்தவர். சபரிமலை சீருடையில் இருந்தார். கையெடுத்துக் கும்பிட்டுவிட்டுக் கிளம்பினார் முதியவர்.

'எனக்கு ஒரு கோடி ரூபாய் வேண்டும் பெருமாள்' என்றாள் மீரா.

'ஏனம்மா?' என்று கேட்டேன்.

'இதுபோல் ஆதரவில்லாத மக்களுக்கு உதவ வேண்டும். அதற்காகத்தான்.'

அந்தக் கணம் என்னை சந்தேகப் பிசாசு பிடித்துக்கொண்டது. ஆட்டோக்காரர் அந்த முதியவரைப் பஸ் ஏற்றிவிடாமல் எங்காவது இறக்கி விட்டுவிட்டு பணத்தைத் தான் எடுத்துக்கொண்டால்?

அப்போது மீரா 'இன்றைக்கு லட்சுமி செய்த காரியத்தை நினைத்து ரொம்ப பெருமைப்படுகிறேன்' என்று சொல்லி அவருக்கு ஐந்தாறு முறை நன்றி தெரிவித்துக் கொண்டிருந்தாள்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை. கேட்டேன். 'சரியான நேரத்தில் ஆட்டோ பிடித்து வந்து கொடுத்தார்களே?' என்றாள் மீரா.

## 43. பெருமாள் சி...

"Under our feet, Ibn Rashed, there are oceans of oil, oceans of gold," replied the emir. "Our friends have come to extract the oil and the gold."

Abdelrahman Munif: Cities of Salt.

வெள்ளியங்கிரிக்கு அருகில் இருக்கிறார் அந்த யோகி. வயது முப்பதுதான் இருக்கும். கையில் கைத்தொலைபேசி இருக்கும். தொலைக்காட்சியெல்லாம் பார்ப்பார். இளைஞர்களிடம் ஜாலியாக அவர்களைப் போலவே பேசுவார். முகச்சவரம் செய்துகொள்வார். (துறவி போன்ற வெளித் தோற்றத்துக்கு அவசியம் இல்லை என்றார்.) எல்லோரையும் - சிறு குழந்தைகளைக்கூட - பகவான் என்றே அழைப்பார். ஒரு குருவிடம் பதினைந்து ஆண்டுகள் யோகம் பயின்று யோகத்தில் பல நிலைகளைக் கடந்தவர். நாள்கணக்கில் ஏதும் உண்ண மாட்டார். பல மணி நேரங்கள் உடன் இருந்து பார்த்தேன். தண்ணீர்கூட அருந்தவில்லை. களைப்புறவும் இல்லை.

பிரியும் வேளையில் 'என்ன பகவான், ஒன்றுமே கேட்காமல் செல்கிறீர்கள்?' என்று கேட்டார். பணத்தையோ, பொருளையோ கையாலும் சீந்தமாட்டார். ('தேவைகளைக் கடந்து வந்துவிட்ட எனக்கு எதற்குப் பொன்னும் பொருளும்?') ஆனால் அதை மற்றவர்களுக்குத் தருவார்.

என்ன கேட்பதென்று எனக்குத் தயக்கம். ஒருகணம் யோசித்தேன். நம்மிடம் இல்லாததைத்தானே கேட்க வேண்டும்?

‘கோடி வேண்டும் பகவான்.’

‘கிடைக்கும் பகவான்.’

பகவானை எனக்கு அறிமுகப்படுத்தி வைத்தது, குமாரசாமி. அவனேதான் எனக்கு மற்றொரு ஆசாமியையும் அறிமுகப்படுத்தி வைத்தான். அவர் உலக வங்கியுடனும், அதுபோன்ற மற்ற நிறுவனங்களுடனும் தொடர்புடையவர் என்று தெரிந்தது. அவருடைய வேலை, அந்நிறுவனங்களிடமிருந்து கடன் வாங்கி இந்தியா போன்ற ஏழை நாடுகளில் விநியோகிப்பது. ‘அப்படிப்பட்ட ஒரு கடன் பரிவர்த்தனைக்கு நீங்கள் செயல் முகவராகப் பணியாற்ற முடியுமா, நல்ல கமிஷன் கிடைக்கும்’ என்றார்.

‘எவ்வளவு?’

‘2 சி’

‘சி என்றால்?’

‘க்ரோர்.’

நான் சற்றும் அசரவில்லை. இந்த சி, எல் எல்லாம் கையில் கிடைத்தால்தான் நிச்சயம் என்பதை நன்கு அறிந்திருக்கிறேன்.

2 சி கிடைத்தால் முதலில் இந்த ஆட்டோவிலிருந்து விடுதலை என்று எண்ணினேன். அதோடு, பார்க் ஷெரட்டன் வாயில் காப்போனிடம் எனக்கு இருந்த ஒரு சிறு பிரச்னையும் தீர்ந்துவிடும். அவர் என்னை ஆட்டோவுடன் உள்ளே அனுமதிக்க மறுக்கிறார். கார் மற்றும் மோட்டார் சைக்கிளுக்கு அனுமதி உண்டாம்; ஆட்டோவுக்கு இல்லையாம். அதனால் ஆட்டோவை ரோட்டிலேயே நிறுத்தி பணத்தைக் கொடுத்துவிட்டு உள்ளே போக வேண்டியிருக்கிறது. அந்தப் பிரச்னை இனி இல்லை. முதலில் ஒரு நல்ல கார் வாங்க வேண்டும். கார்களின் மீது எனக்கு அலாதி பிரியம் உண்டு. யாரிடமும் இல்லாத காராக வைத்துக்கொள்ள வேண்டும். கார்களைப் பற்றி நிறைய குறிப்புகள் வைத்திருக்கிறேன். இப்படிச் சொல்வதால் ஸ்டியரிங் எங்கே இருக்கிறது, ப்ரேக் எங்கே இருக்கிறது என்றெல்லாம் என்னைக் கேட்கக் கூடாது. அது எனக்குத் தெரியாது. ஏன் தெரிய வேண்டும்? அதற்குத்தான் Chauffeur இருக்கிறாரே... (எனக்கு டிரைவர் என்ற வார்த்தை பிடிக்காது!)

வாங்கினால் கீழ்க்கண்ட கார்களுள் ஏதாவது ஒன்றைத்தான் வாங்க வேண்டும் என்று திட்டமிட்டேன்:

Cadillac Convertible, 1941

Packard 733, 1930

Mercedes Benz 290 CabrioletA, 1935

Bugatti 50 Coupe MillionGuiet, 1932

Jaguar XK 120C, 1957

இதில் கடிலாக்-இன் விலை 25 லட்சம். மற்ற கார்களின் விலை அதைவிட

அதிகம் இருக்கலாம். எல்லாவற்றையும் விட அழகான கார் ஜாக்குவார் என்பது என் கருத்து. சல்மான் ருஷ்டி தனது நிகாராகுவா பயணத்திற்குப் பயன்படுத்திய கார். யோசித்தேன், இரண்டு சி என்றால் அதில் வருமான வரியே 120 எல் போய்விடும். மீதி 80எல்லில் எப்படியும் வாங்கிவிடலாம் என்று தோன்றியது. ஆனால் ஜாக்குவார் வாங்கினால் ஒரு பிரச்னை உண்டு. அதில் இரண்டு பேர்தான் உட்கார முடியும். ஒரு இருக்கை Chauffeur என்றால் மீதி ஒரு இருக்கைதானே இருக்கும்? எப்படிச் சமாளிப்பது? ஆனால் எந்தக் கார் வாங்கினாலும் கவனிக்க வேண்டிய விஷயம்: பாதுகாப்பு மற்றும் வசீகரம். பாதுகாப்பு விஷயத்தில் ஜெர்மானிய கார்கள்தான் முதலிடம் வகிப்பவை. நம்மூர் சான்ட்ரோ மாதிரி கார்கள் ஆட்டோவைவிட மோசம்: ஸொனாட்டா பரவாயில்லை. காரும் பெரிது. பார்க்கவும் கவர்ச்சியாக இருக்கும். அதற்கு ஒரு விசேஷமான exotic தோற்றம் உண்டு. ஆனால் 80 எல்லில் மேற்கண்ட பட்டியலில் உள்ள கார்களை வாங்குவது சிரமம் என்று கூறினான் மணி. காரணம், அதெல்லாம் 'ஆன்ட்டிக்' கார்களாம். ஒரு சி இருக்குமாம். சரி, சி வரட்டும், பிறகு பார்க்கலாம் என்று அந்தப் பிரச்னையைத் தற்காலிகமாக ஒத்திப் போட்டேன். சி பற்றி மற்றொரு விஷயம் சொல்ல வேண்டும். ஒரு நாள் மதியம் உலக வங்கி நண்பருடன் பார்க் ஷெரட்டனில் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தேன். திடீரென்று பார்த்தால் பக்கத்தில் மணியும், நரேனும்.

'எப்போது வந்தீர்கள்?'

'இப்போதுதான்.'

மறுநாள் பீச்சில் நண்பர்களைச் சந்தித்தேன். பொதுவாக பீச் நண்பர்கள் ஒருவரையொருவர் ஜி போட்டு அழைப்பதே வழக்கம். (பெருமாள்ஜி, மணிஜி...) அன்றைய தினம் வழக்கத்திற்கு மாறாக அனைவரும் கோரஸாக 'வணக்கம், பெருமாள் சி...' என்றார்கள். முதலில் எனக்குப் புரியவில்லை. அப்புறம்தான் தெரிந்தது. முந்தின தினம் மணியும், நரேனும் என் பக்கத்தில் வந்து அமர்ந்து அரை மணி நேரம் ஆகியிருக்கிறது. நான் அவர்களைக் கவனிக்காமலேயே சி பேச்சில் மூழ்கியிருந்திருக்கிறேன்.

கார் வாங்குவது பற்றி பணம் கையில் கிடைத்த பிறகு யோசித்துக் கொள்ளலாம் என்று என்னதான் அந்த விஷயத்தை ஒத்திப்போட்டாலும் அது மனதை விட்டு அகலுவதாயில்லை. காரணம், நான் மட்டுமல்ல; குமாரசாமி தன்னுடைய அலுவலகத்திலிருந்து நீண்ட விடுப்பு எடுத்துவிட்டான். 'பிச்சைக்காரக் காசு 50,000 தருகிறான். இந்த மேட்டர் முடிஞ்சால் நமக்கு சுளையாக 40 சி வரும்' என்றான் குமாரசாமி. 50,000 ரூபாய் என்பது அவனுடைய மாதச் சம்பளம். எங்களுடைய குழுவில் நாங்கள் நான்கு பேர் இருந்தோம். குமாரசாமி, நான், டாக்டர் நாதமுனி, டீயெஸ்ப்பி லெனி. லெனியை நாங்கள் சேர்த்துக்கொண்டதற்குக் காரணம், போலீஸ் துணையோடு செய்தால் பிரச்னை இருக்காது என்பதால். மேலும் ஒரு முக்கியமான விஷயம், இந்தக் கடனுதவித் திட்டத்தில் எந்த வில்லங்கமோ, சட்டத்துக்குப் புறம்பான எதுவுமோ நடக்கப்போவதில்லை. எல்லாமே சட்டத்துக்கு உட்பட்டுத்தான். அதனால்தான் லெனி இவ்விஷயத்தில் தன்னை ஈடுபடுத்திக்கொள்ள முன்வந்திருந்தார். இருந்தாலும், எந்நேரமும் ஒரு இன்ட்டர்நேஷனல் மாஃபியா ஒன்றை எங்கள் துணையோடு பிடிக்கப்போகும் ஆர்வம் அவரது ஒவ்வொரு

வார்த்தையிலும் செய்கையிலும் இருந்ததை கவனித்து வந்தேன். ஒன்று, பத்து சி. கிடைக்க வேண்டும். அல்லது, இந்த ‘ஆபரேஷன்’ மூலம் அவருக்கு ஒரு ப்ரமோஷன் கிடைக்க வேண்டும். பிரதம மந்திரியைக் கொன்ற ஒரு வெளிநாட்டுத் தீவிரவாத கும்பலையே பிடித்துவிட்ட அவருக்கு இது என்ன சுண்டைக்காய் விஷயம்...

லெனி, அரசின் அங்கமான போலீஸ் துறையைச் சேர்ந்தவராயிருந்தாலும் அரசுக்கு எதிராகச் சதி செய்பவர்களை அவர் ஒருபோதும் பயங்கரவாதி என்று அழைக்க மாட்டார். தீவிரவாதி என்று மரியாதையுடன்தான் குறிப்பிடுவார். ஒரு நாள் அவர் நக்ஸலைட்டுகளைப் பற்றி எனக்கு ஒரு லெக்சர் கொடுத்தார் பாருங்கள்... அதை நீங்கள் நேரில் கேட்டிருந்தால் நிச்சயம் அவரை ஒரு போலீஸ் அதிகாரி என்றே நம்பியிருக்கமாட்டீர்கள்; ஆந்திராவைச் சேர்ந்த ஒரு நக்ஸலைட் தலைவர் என்றுதான் நினைத்திருப்பீர்கள்.

அப்போது நான் நக்ஸலைட்டுகளின் மீது சற்று மன வருத்தத்தில் இருந்தேன். என்ன காரணமென்றால், உத்தமத் தமிழ் எழுத்தாளர் கும்பலைச் சேர்ந்த கவிஞன் ஒருவன் ஏதோ ஒரு கூட்டுக் கவிதையில் ஏதோ அர்த்தம் புரியாமல் உளறி வைத்திருக்கிறான். மேற்கத்திய நாடுகளில் கூட்டுக் கலவி என்றால், தமிழ்நாட்டில் கூட்டுக் கவிதை. நான்கைந்து கவிஞர்கள் மூக்கு முட்டத் தண்ணியடித்துவிட்டு ஆளுக்கு ஒரு வாக்கியத்தை உளறினால் அதன் பெயர் கூட்டுக் கவிதை. இக்கவியரங்கில் கலந்துகொள்வதற்கான தகுதிகள்:

1. ஆங்கிலம் தெரிந்திருக்கக் கூடாது.
2. கா∴ப்காவுக்குப் பிறகு பிறந்த எந்த உலக எழுத்தாளனையும் பிடித்திருக்கக்கூடாது. பெயர்கூடத் தெரியாமலிருப்பது உத்தமம்.
3. ஆங்கிலத்தில் படிக்கும் ஒன்றிரண்டு சக எழுத்தாளன்களை மடையன்கள் என்றும், போலிகள் என்றும் சமயம் கிடைக்கும் போதெல்லாம் திட்ட வேண்டும்.
4. ஓல்ட் மாங்க், மானிட்டர் போன்ற சரக்குகளைக் குறைந்தபட்சம் அரை போத்தல் குடித்துவிட்டு எந்த எழுத்தாளன் அதை வாங்கிக் கொடுத்தானோ அவன் வீட்டிலேயே வாந்தியெடுத்து வைக்க வேண்டும்.
5. விழாக்களில் எல்லோர் எதிரிலும் பணக்காரர்களின் காலில் விழ வேண்டும். (அப்போதுதான் குடிப்பதற்குக் கையில் காசில்லாத போது காசு கிடைக்கும்.)
6. ஸ்பெல்லிங் கூடத் தெரியாமல் அடிக்கடி போர்ஹே, போர்ஹே என்று தப்பும் தவறுமாக உச்சரித்துக்கொண்டிருக்க வேண்டும்.
7. எவனாவது தலித் கவிஞனைக் கண்டால் ‘பறையனுக்கெல்லாம் எப்பர்ரா கவிதை வரும்?’ என்று கேட்க வேண்டும்.
8. சுய ஜாதியிலேயே திருமணம் செய்துகொண்டு குறைந்த பட்சம் இரண்டு குழந்தைகளையும் பெற்றுக்கொண்டு பிறகு மனைவியையும், குழந்தைகளையும் நடுத்தெருவில் விட்டு விட்டு கலக வாழ்க்கையை ஆரம்பித்துவிட வேண்டும். கலகம் என்றால்

இருபத்து நான்கு மணி நேரமும் தண்ணியிலேயே மிதப்பது என்று பொருள். யாராவது கேட்டால் 'இதுதான் விளிம்பு நிலை வாழ்க்கை' என்று சொல்ல வேண்டும்.

9. எக்காரணம் கொண்டும் வேலைக்குச் செல்லக் கூடாது. வேலைக்குச் செல்பவர்கள் 'ப்ளடி மிடில் க்ளாஸ் பீப்புள்'. ஆனால் அவ்வப்போது அந்த ப்ளடி மிடில் க்ளாஸ் பீப்புளை அவர்களது அலுவலகத்தில் சந்தித்து ஆஃப் பாட்டில் அடிக்க காசு வாங்கிக்கொள்ளலாம்.
10. அப்படியே தப்பித் தவறி கிரகக் கோளாறினால் வேலையில் சேர்ந்தாலும், முதல் மாத சம்பளத்தை வாங்கிக்கொண்டு நேராக பாருக்கு வந்து குடித்துவிட்டு தெருவோரத்தில் விழுந்து கிடந்து சம்பளப் பணத்தைத் தொலைத்துவிட வேண்டும். (ஏதோ நம்மால் முடிந்த கலகம்...)
11. ஜோதிடம் சம்பந்தப்பட்ட டெர்மினாலஜி தெரிந்திருத்தல் நலம். தண்ணி வாங்கிக் கொடுக்கும் எழுத்தாளன்களின் சகதர்மிணிகளை ஏமாற்றுவதற்குப் பயன்படும். (மற்றபடி ஜோதிட அறிவெல்லாம் தேவையில்லை. அதாவது, ஒருவன் இலக்கியவாதியாக இருக்க என்ன தேவை? இலக்கிய மெல்லாம் படித்திருக்க வேண்டாம்; இலக்கிய டெர்மினாலஜி மட்டும் தெரிந்திருந்தால் போதுமல்லவா? அதேதான் ஜோதிட விஷயத்திலும்...)
12. எல்லாவற்றுக்கும் மேலாக, ஓர் உயர் ஜாதியில் பிறந்திருக்க வேண்டும்.

இத்தனை தகுதிகள் கொண்ட ஒரு கவிஞர் குழுவின் கூட்டுக் கவிதை எப்படியிருந்தால் யாருக்கென்ன? அதை மொத்தம் ஒன்பது பேர் படித்திருந்தாலே பெரிய விஷயம். ஆனால் அக்கவிதை கலாச்சாரச் சீரழிவை முன்வைப்பதாகக் கூறி மக்கள் விடுதலைப் படையைச் சேர்ந்த தோழர்கள் முப்பது பேர் அக்கவிஞர்களில் ஒருவனின் வீட்டுக்குச் சென்று அவனை மிரட்டியிருக்கிறார்கள். கைப்பட மன்னிப்பு எழுதிக் கொடுத்த பிறகே அவனுக்கு மன்னிப்பு வழங்கப்பட்டிருக்கிறது. இல்லாவிட்டால் மக்கள் மன்றத்தில் என்ன தண்டனை வழங்கப்பட்டிருக்குமோ!

எல்லாம் சரி. என் ஆதங்கம் என்னவென்றால், ஒன்பது பேர் மட்டுமே படிக்கக்கூடிய வாய்ப்புள்ள அந்தக் கவிதையை எழுதியவனுக்கு இவ்வளவு பெரிய தண்டனையென்றால், ஒன்பது கோடி மக்களுக்கும் (கேரள ஜனத்தொகையையும் சேர்த்து) பால்வினை நோயை பரப்பிக்கொண்டிருக்கும் தமிழ் சினிமாக்காரர்களுக்கு என்ன தண்டனை கொடுக்கலாம்? மக்கள் விடுதலைப் படை தோழர்கள் ஏன் அந்த சினிமாக்காரர்களின் வீட்டுக்குச் சென்று அவர்களை மிரட்டவில்லை?

இதுபற்றி நான் லெனியிடம் புலம்பிக்கொண்டிருந்தபோது தான் அவர் ஒரு நக்ஸலைட் தலைவரைப் போல் பிரசங்கம் செய்ய ஆரம்பித்தார்:

'பெருமாள்... அவர்கள் அப்படித்தான் செய்வார்கள். உங்கள் வீட்டுக்கும் வருவார்கள். முடிந்தால் போலீஸில் புகார் செய்யுங்கள். ஆனால் போலீஸால் உங்களுக்கு இருபத்து நான்கு மணி நேரமும் பாதுகாப்புத் தர முடியாது. மேலும், அப்படியெல்லாம் போனால் உங்கள் உயிருக்குத்தான் ஆபத்து. உங்கள் எழுத்துக்காக உயிரைக் கொடுங்கள். வேறு வழியில்லை.

இல்லாவிட்டால் வெளிநாட்டுக்குச் சென்றுவிடுங்கள்.

நான் இன்ஸ்பெக்டராக இருக்கும்போது நக்ஸலைட்டுகளால் ஒரு பிரச்னை ஏற்பட்டது. நான் சட்டப்படி அவர்கள் மீது நடவடிக்கை எடுத்தேன். பதிலுக்கு அவர்கள் என் மீது அவதூறு செய்து ஊர் பூராவும் நோட்டீஸ் ஒட்டினார்கள். நான் என்ன செய்தேன் தெரியுமா? நான்கைந்து நக்ஸலைட்டு களைப் பிடித்து வந்து லாடம் கட்டினேன். பிறகு நானே அவர்களுக்கு டீயும், பீடியும் வாங்கிக் கொடுத்தேன். சட்டப்படி எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. சட்டப்படி நடவடிக்கை எடுத்தால் நோட்டீஸ் ஒட்டுகிறாய். அதனால் தான் இப்போது சட்டத்துக்குப் புறம்பாக நடந்து கொண்டேன். இப்போது நீ ஆனதைப் பார்த்துக்கொள். கிளம்பும்போது அவர்களுக்கு இன்னொரு டீ ஆர்டர் செய்தேன். அவர்கள் மறுத்துவிட்டார்கள். 'இன்ஸ்பெக்டர்... நீங்கள் நியாயமாக நடந்துகொண்டதால்தான் நீங்கள் கொடுத்த டீயையும், பீடியையும் குடித்தோம். ஒரு தடவை போதும். ஆனால் நீங்கள் எங்களை அடித்ததற்கு உங்களுக்கு தண்டனை உண்டு' என்று சொல்லிவிட்டுச் சென்றார்கள். என்னைக் கொன்றுவிடலாம் என்று உயர்மட்டக் குழுவிடம் தெரிவித்தார்களாம். ஆனால் 'ஒரு போலீஸை அனாவசியமாகக் கொன்றால் நம்மைத்தான் annihilate செய்வார்கள். அதனால் வேண்டாம்' என்று உயர்மட்டக் குழுவில் முடிவெடுத்துவிட்டார்களாம். அப்போது எனக்கு இருபத்தைந்து வயது.

அந்த நக்ஸலைட்டுகளும் நானும் ஒன்றுதான் பெருமாள். அவர்கள் இடத்தில் நான் இருந்தால் நானும் அப்படித்தான் இருப்பேன். இங்கே எதில் ஒழுங்கு இருக்கிறது சொல்லுங்கள். பத்து வருடங்களுக்கு முன்பு திருமண வீடுகளில் வீடியோ எடுத்துக்கொண்டிருந்த ஒரு நபரின் கையில்தான் இன்றைய தென்னிந்தியாவின் தொலைக்காட்சி ஊடகமே அடங்கியிருக்கிறது. போட் க்ளப்பில் இருக்கும் அவருடைய வீட்டின் மதிப்பு மட்டும் 100 கோடி ரூபாய். தமிழ்நாட்டின் கலாச்சார சீரழிவுக்கான காரணிகளில் ஒன்று, அவருடைய சேனல். இன்னொரு பக்கம், இன்னொரு குடும்பம்... நீங்கள் என்ன குடிக்கலாம், என்ன குடிக்கக்கூடாது என்பதையே அந்தக் குடும்பம்தான் நிர்ணயம் செய்கிறது. சீமைச் சாராய பிஸினஸ் அந்தக் குடும்பத்திடம் இருப்பதால் தமிழ்நாட்டில் கள்ளுக்கும், உள்ளூர் சாராயத்துக்கும் தடை. திருடனைச் சுடுவதற்குப் பதிலாக நாங்கள் கள்ளுப் பானைகளைச் சுட்டுக் கொண்டிருந்தோம்.

அலெக்ஸாண்டர் என்ற பிராண்ட் பெயரைக் காசு கொடுத்து வாங்கி அதே பெயரில் லோக்கலாக சாராயத்தைக் காய்ச்சி விற்கிறது அந்தக் குடும்பம். ஒரிஜினல் விலை 300 ரூபாய் என்றால் இந்த லோக்கல் அலெக்ஸாண்டரைத் தயாரிக்க 30 ரூபாய் ஆகும். ஆக, லாப விகிதம் எத்தனை? நான் கணக்கில் கொஞ்சம் வீக். முப்பது ரூபாய்க்குத் தயாரான அலெக்ஸாண்டர் ப்ராண்ட் பிராந்தியை நீங்கள் 300 ரூபாய் கொடுத்து வாங்கிக் குடிக்கிறீர்கள். ஆனால் சில பேர் இதையே மோசடி செய்து, இந்த முப்பது ரூபாயைக்கூட செலவு செய்ய மனசில்லாமல் இதிலேயே கள்ளச் சாராயத்தை ஊற்றி விற்றுவிடுகிறார்கள். இதற்கு ஆகும் செலவு பத்து ரூபாய். ஆக, பத்து ரூபாய் சரக்கின் விலை 300 ரூபாய். ஏன் உருவாக மாட்டார்கள் நக்ஸலைட்டுகள்?'

லெனி சொன்னபோதுதான் ஒரு விஷயம் எனக்கு விளங்கியது. ஒரு நாள்

முன்னூறு ரூபாய் கொடுத்து வாங்கி வந்த ஆர்ஸி கோல்ட் சாராய நாற்றம் நாறியது. டாஸ்மாக் கடையில் கொண்டுபோய் காண்பித்தேன். கடையில் இருந்தவனோ வெறும் கூலியாள். ‘எங்களுக்கு வருவதைத் தானே நாங்கள் ஸப்ளை பண்ண முடியும்?’ என்று அவன் அழ ஆரம்பித்துவிட்டான். அரசாங்கமே கள்ளச் சாராயத்தை விற்றால் யாரிடம் போய் புகார் செய்வது?

உலக வங்கி கடனுதவித் திட்டம் சட்டபூர்வமானதுதான் என்பதற்கான நிரூபணத்தை நேரில் காண்பதற்காக நாங்கள் அனைவரும் கோயம்புத்தூர் வரை சென்றிருந்தோம். விமானத்தில்கூட அழைத்துச் செல்வதற்குத் தயாராக இருந்தான் குமாரசாமி. நான்தான் ‘பணம் கையில் வரும்வரை நாம் அதிகம் செலவு செய்யக்கூடாது’ என்று அவனை எச்சரித்திருந்தேன்.

ஒரு தேசத்தின் ராணுவ ரகசியத்தைக் காண்பிக்கப்போவதைப் போல் பில்ட்-அப் கொடுத்துக்கொண்டிருந்தார் சுதிர். உலக வங்கிக் கடனுதவித் திட்டத்தின் மூலவர்.

ஆனால் இத்தனை பில்ட்-அப் தேவைதான் என்பது சுதிர் காட்டிய நிரூபணத்தைப் பார்த்தபோது தோன்றியது. இந்திய நிதி அமைச்சரின் ஒப்புதல் கடிதமே அந்த நிரூபணம். இந்திய அரசின் முத்திரையுடனிருந்த ஒரிஜினல் கடிதம் அது.

நான் குமாரசாமியிடம் சொன்னேன்: இந்த விஷயம் நிஜமாக இருந்தால் சரி; இல்லையானால், இது மிகப் பெரியதொரு கிரிமினல் குற்றம். இந்திய நிதி அமைச்சரின் கையெழுத்தை ஃபோர்ஜரி செய்வது சாதாரண விஷயமல்ல. எனவே, இது பொய்யாக இருந்தால் நான் போலீஸில் புகார் செய்வேன். பத்திரிகையில் எழுதுவேன். மிகப் பெரிய பிரச்னை ஆக்குவேன்.

குமாரசாமி ஒப்புக்கொண்டான்.

அதற்கடுத்து காரியங்கள் அனைத்தும் துரித கதியில் செல்ல ஆரம்பித்தன. உலக வங்கி, இந்தியாவிலுள்ள ஒரு பிரபலமான நிறுவனத்துக்கு 500 சி ரூபாய் கடன் தருவதாக ஒப்புக் கொண்டது. எங்களுக்கு அதில் நாற்பது சதவிகிதம் கமிஷன் தருவதாக உடன்பாடு ஏற்பட்டது. ஆக, எங்கள் நான்கு பேருக்கும் ஆளுக்கு 50 சி ரூபாய் கமிஷனாகக் கிடைக்கும். உடனே என் மனம் திட்டமிட ஆரம்பித்தது. முன்பு வாங்க நினைத்திருந்த கார்கள் வேண்டாம். Maybach MS62 காரே வாங்கிவிடலாம். விலை 6 சி. முகேஷ் அம்பானி, க்ளிண்ட் ஈஸ்ட்வுட் போன்றவர்களிடம் உள்ள கார். முதலில் பணம் கைக்கு வரட்டும்.

அன்றைய தினம் இரவு இரண்டு மணி அளவில் டாக்டர் நாதமுனி எனக்கு ஃபோன் செய்தார். இரவில் கைத்தொலைபேசியை அணைத்து விடும் பழக்கமுள்ள நான், இந்த சி. மேட்டர் ஆரம்பித்த அன்றிலிருந்து அதை எப்போதும் என் பக்கத்திலேயே வைத்திருக்க ஆரம்பித்தேன். கிட்டத்தட்ட அது என்னுடைய உடலுறுப்புகளில் ஒன்றாகவே மாறிப்போயிருந்தது. குளிக்கும்பொதும் கக்கூஸ் போகும்பொதும்கூட கைத்தொலைபேசியை எடுத்துக் கொண்டே செல்லும் வழக்கம் ஏற்பட்டது.

நாதமுனி கேட்டார்: ‘ஏன் பெருமாள்... ஒரு விஷயத்தை யோசித்தீர்களா? 50 கோடி ரூபாயை எங்கே வைப்பது? எப்படிப் பாதுகாப்பது? நான் கணக்குப்

போட்டுப் பார்த்தேன். ஒரு பெட்டியில் அதிகபட்சம் ஒரு கோடிதான் வைக்க முடியும். அப்படியானால் 50 கோடிக்கு 50 பெட்டி வேண்டும்... 200 கோடிக்கு 200 பெட்டி...’

நாதமுனி பேசப் பேச என் மனம் வேறொரு விஷயத்தை யோசிக்க ஆரம்பித்தது.

## 44. ஹீராலால் நந்தானி

"Your heart is troubled, Ibu Rashed.'

"People have troubled it, Your Excellency.'

"Peopleor money?'

"Money does not disease the heart, my dear friend.'

"Money is the disease and the cure.'

Abdelrahman Munif :Cities of Salt

ஒரு ஆள் ராத்திரி இரண்டு மணிக்கு 200 கோடி ரூபாயை வைக்க எத்தனை பெட்டி வேண்டும், அதை எப்படி வைக்க வேண்டும், எங்கே வைக்க வேண்டும் என்று யோசித்துக்கொண்டிருந்தான் என்றால் அவனுக்கு நிச்சயம் பைத்தியம்தான் பிடிக்கப்போகிறது என்று எனக்குத் தோன்றியது. மேலும், டாக்டர் நாதமுனி சமீபகாலமாக என்னை ‘அண்ணே...’ என்று அழைக்க ஆரம்பித்திருப்பதைக் கவனித்தேன். ‘இனிமேல் வாழ்க்கையில் இம்மாதிரி ஆட்களோடு தான் பழக வேண்டும் போலிருக்கிறது’ என்று நினைத்துக்கொண்டேன். பணம் கைக்கு வருவதற்குள்ளாகவே நான் அண்ணனாக மாறிவிட்டது கவலையையும் பீதியையும் அளித்தது. பணத்தோடு சேர்ந்து இதுபோல் என்னென்ன விபரீதங்களெல்லாம் வரப்போகிறதோ என்று எண்ணி விசனமுற்றேன். ஒட்டுமொத்தமாகப் பணக்காரர்களை எண்ணி மிகுந்த பரிதாப உணர்ச்சி ஏற்பட்டது. நான் பணக்காரனாகப் போவதால்தான் பணக்காரர்களின் மீது இவ்வித வர்க்க நேசம் உண்டாகிறதோ என்று நினைத்து சிந்தனையை வேறு திசையில் செலுத்தலானேன். இன்னும் இந்த டீமில் யார் யாருக்குப் பைத்தியம் பிடிக்க வாய்ப்பிருக்கிறது? லெனிக்குப் பிடிக்க வாய்ப்பில்லை. அவர் ஆரம்பத்திலிருந்தே இவ்விஷயத்தில் ஒரு இன்ட்டர்நேஷனல் மா.ஃபியாவைப் பிடிக்கப்போகும் எண்ணத்திலேயே ஈடுபட்டு வருகிறார். குமாரசாமிக்குப் பிடிக்க வாய்ப்பிருக்கிறது. எனக்கு வாய்ப்பில்லை. வேறு ஏதாவது விஷயத்தினால் பிடிக்கலாம். இந்த சி மேட்டரைப் பொறுத்தவரை வாய்ப்பில்லை. நான் இதை ஒரு பார்வையாளனாகவே இருந்து பார்த்துக்கொண்டிருந்தேன். மேலும், பணம் கிடைக்காவிட்டால் இருக்கவே இருக்கிறது எழுத்து. இந்த அனுபவத்தை அடிப்படையாக வைத்து ‘சி’ என்ற தலைப்பில் ஒரு நாவலை எழுதிவிடலாம். இப்படிச் சொல்வதால் என்னை ஏதோ ஒரு பற்றற்ற துறவியாக நினைத்துவிடாதீர்கள். இந்த 50 சி கிடைத்தால் என்னென்ன செய்யலாம் என்று நானும் திட்டங்கள் தீட்டிக்கொண்டுதான் இருந்தேன். இதற்கிடையில் ஆளுக்கு 100 சீயே கிடைப்பதற்கான சாத்தியங்கள் அதிகரித்துக் கொண்டிருந்தன. அது 100

சீயோ, 1000 சீயோ எத்தனை சீயாக இருந்தாலும் அதனால் எனக்கு ஏன் பைத்தியம் பிடிக்காது என்றால் - முதலில் பணம் கைக்குக் கிடைக்கட்டும், பிறகு பார்க்கலாம் என்று ஒருவித அவநம்பிக்கை ஓடிக்கொண்டிருந்தது எனக்குள். ஆனால், அப்படி அவநம்பிக்கை கொள்வதற்கான எந்த முகாந்திரமும் இல்லை என்பதுபோல் காரியங்கள் நடந்துகொண்டிருந்தன. ஒரு நாள் சுதிர் பத்துப் பதினைந்து பேருடன் வந்து இறங்கினார். கூடவே அரை டஜன் கவுன்ட்டிங் மெஷின்கள்.

400 சீயை எண்ணுவதென்றால் அது கையால் ஆகக்கூடிய சமாச்சாரமா என்ன?

‘என்னது 400 சீயா? கணக்குப்படி எங்களுக்குச் சேர வேண்டியது 200 சீ தானே?’ என்று சுதிரைப் பார்த்து கேட்ட என்னுடைய முதுகில் சுதிருக்குத் தெரியாமல் பலமாகக் கிள்ளினான் குமாரசாமி. பிறகு ‘ஒரு நிமிஷம் சுதிர்’ என்று கூறிவிட்டு என்னைத் தனியாக அந்த அறையை விட்டு வெளியே அழைத்து வந்தான்.

‘என்ன பெருமாள் நீங்கள், காரியத்தைக் கெடுக்கிறீர்கள்? 1000 சீக்கு ஃபார்ட்டி பர்ஸெண்ட் என்றால் எத்தனை சி வரும்?’

‘அது எப்படி 1000 சி? இதுவரை 500 சி என்றுதானே பேச்சு?’

‘அது நேற்று கதை. அது சரி, நேற்று இரவு ஏன் ஃபோனை ஆஃப் செய்துவிட்டீர்கள்?’

‘இல்லையே, நாதமுனிகூட இரண்டு மணிக்குப் பேசினாரே?’

‘அது இரண்டு மணி. நான் உங்களைக் கூப்பிட்டது மூன்று மணிக்கு. ஆனால் ஃபோன் ஆஃப் ஆகியிருந்தது. அதனால் டாக்டரிடம் பேசினேன். விஷயம் இதுதான்: கம்பெனிக்கு வேர்ல்ட் பேங்க் 1000 சி கொடுப்பதாக ஃபேக்ஸ் வந்திருக்கிறது. அதன்படி நம்முடைய ஷேர் 40சி ஆகிறது. ஆனால், எல்லா ட்ரான்ஸாக்ஷனும் சட்டப்படியே நடக்கப்போவதால் நமக்குத் தேவை ஒரு நல்ல லாயர். அதனால் மணியின் உதவி நமக்குத் தேவை. மணியையும் நாம் ஒரு பார்ட்னராகப் போட்டுக்கொள்ளலாம். லாயர் நியாயமாக எவ்வளவு ஃபீஸ் கேட்கிறாரோ அதைக் கொடுத்துவிடுவோம்.’

‘சரி குமாரசாமி, ஆனாலும் இதில் எனக்குப் பல விஷயங்கள் சந்தேகமாக இருக்கிறது. முதலில் ஒரு இந்திய நிறுவனத்துக்கு வேர்ல்ட் பேங்க் ஏன் இவ்வளவு பணத்தைக் கடனாகக் கொடுக்க வேண்டும்? சரி, அப்படியே கொடுத்தாலும், 400 சி வெறும் கமிஷனுக்கே போய்விட்டால் கம்பெனிக்கு 600 சிதானே கிடைக்கும்? அதனால் அவர்களுக்கு என்ன லாபம்?’

‘பெருமாள், உங்களோடும் லெனியோடும் இதுவே பெரிய லொள்ளாகப் போய்விட்டது. உங்கள் இருவரையும் நம்ப வைக்க தினமும் நான் ஏகப்பட்ட குட்டிக்கரணம் அடிக்க வேண்டியிருக்கிறது. இதையெல்லாம் நீங்கள் முதல் நாள் கேட்டீர்கள். நியாயம். இதோ இப்போது ஆறு மாதங்கள் ஆகி மேட்டரே முடியப்போகிறது; இப்போதும் கேட்கிறீர்கள். 1000 சி என்பது உங்களுக்கும் எனக்கும்தான் பெரிய பணம். வேர்ல்ட் பேங்குக்கு இது வெறும் சில்லறை. நம்முடைய அரசாங்கம் ஏழை விவசாயிகளுக்கு ஆயிரம் ரெண்டாயிரம் என்று லோன் தருவதில்லையா, அதைப் போலத்தான் வேர்ல்ட் பேங்கும் ஏழை நாடுகளுக்கு ஆயிரம்,

ரெண்டாயிரம் என்று லோன் தருகிறது. இங்கே ஆயிரம், ரெண்டாயிரம் சி. தேர் என்ட்ஸ் த மேட்டர்.'

'ஆனால் என்னுடைய கேள்வி அது அல்ல. 1000 சீயில் 400 சீ கமிஷனாகவே போய்விட்டால் பிறகு கம்பெனிக்கு என்ன லாபம்?'

'400 சி மட்டுமல்ல பெருமாள். கமிஷனே 800 சி போய்விடும். கம்பெனிக்குக் கிடைக்கப்போவது வெறும் 200 சீதான்.'

'அய்யய்யோ, இன்னும் 400 சீ யாருக்குக் கமிஷன்? கமிஷனே 800 சீ போய்விட்டால் பிறகு கம்பெனிக்கு என்ன லாபம்?'

'200 சீ என்றால் சும்மாவா, அது லாபம்தானே?'

'என்னது லாபமா? 1000 சீயில் கைக்கு 200 சீதான் கிடைக்கிறது என்றால் அதில் என்ன லாபம் இருக்கிறது?'

'ஓ மை ஜீஸஸ்! நீங்கள் ரொம்ப வெகுளியாக இருக்கிறீர்கள் பெருமாள். லோன் என்றால் என்ன அர்த்தம்? திருப்பிக் கொடுக்க வேண்டிய தேவையில்லாத பணம்...'

'என்னது, திருப்பிக் கொடுக்கத் தேவையில்லையா? அதற்கு அவர்கள் 'நிதி உதவி' என்ற பெயரிலேயே தானமாகத் தந்துவிட்டுப் போகலாமே?'

'அப்படிச் செய்தால் தென்னமெரிக்க நாட்டுச் சர்வாதிகாரிகளும், ஆஃப்ரிக்க நாட்டுச் சர்வாதிகாரிகளும் சும்மா இருப்பார்களா? அமெரிக்காவின் செல்லப் பிள்ளைகளாயிற்றே அவர்கள்? அமெரிக்காவிடமிருந்து 4000 சி, 5000 சி என்று வாங்கிக்கொண்டு, அமெரிக்கக் கம்பெனிகளுக்குத் தன் நாட்டை அடமானம் வைத்துவிட்டு, பத்து ஆண்டுகள், பதினைந்து ஆண்டுகள் ஆட்சியில் இருந்துவிட்டு கடைசியில் ஐரோப்பிய நாடு ஒன்றில் குடும்பத்தோடு செட்டில் ஆகிவிடுகிறார்கள் அந்த சர்வாதிகாரிகள். நாட்டு மக்கள் பூராவும் பிச்சைக்காரர்களாக அலைந்துகொண்டிருப்பார்கள். ராணுவம் வைத்ததுதான் சட்டம். இது அமெரிக்காவுக்குப் பிடிக்கவில்லை. கம்யூனிஸ்ட் நாய்களை விரட்டுவதற்காக இந்த சர்வாதிகாரிகளை ஆட்சியில் வைத்தால், இவர்கள் பண்ணும் அராஜகத்தில் மக்கள் கூட்டம் பூராவுமே கம்யூனிஸ்டுகளாகி விடுகிறார்கள் என்று நினைக்கிறது அமெரிக்கா. எனவேதான் அமெரிக்கா இப்போது ஆசிய நாடுகளை நோக்கித் திரும்பியிருக்கிறது. அதோடு, நம்முடைய டீலில் கடன் வாங்கும் நிறுவனம் மதரீதியானதாக இருக்கக்கூடாது என்றும் ஒரு நிபந்தனை இருக்கிறது. ஏனென்றால், அம்மாதிரியான நிறுவனங்களுக்கும் ஆயிரக்கணக்கான கோடிகள் அமெரிக்காவிலிருந்து வந்து கொண்டிருக்கிறது. ஆனால், நம்முடைய டீல் அப்படிப் பட்டதல்ல. Its very transparent and straightforward...'

'சரி, அது இருக்கட்டும். அந்த இன்னொரு 400 சி கமிஷன் யாருக்கு?'

'நம்மிடம் 400 சீயைக் கொடுத்துவிட்டு பிறகு சுதிர் என்ன பண்ணுவார்? அவர் என்ன சமூக சேவையா செய்கிறார்? அவர் மட்டுமல்ல, அவரைப்போல் இன்னும் சிலரும் இருக்கிறார்கள். அவர்களெல்லாம் இன்விஸிபிள் பார்ட்னர்ஸ்.'

ஆனால் எவ்வளவு பேசியும் அமெரிக்காக்காரன் ஏன் இவ்வளவு பணத்தை இனாமாக மற்றொரு தேசத்துக்குக் கொடுக்கிறான் என்ற என்னுடைய

கேள்விக்கு விடை கிடைக்கவில்லை.

‘என்ன, எல்லா சந்தேகங்களும் தீர்ந்ததா?’ என்றார் சுதிர்.

சிரித்தேன். ஏனென்றால், இன்னும் பல சந்தேகங்கள் மீதமிருந்தன.

‘இன்னும் என்ன சந்தேகங்கள்?’

நான் அமைதியாக இருந்தேன். ஏனென்றால். என்னுடைய சந்தேகங்களைக் கூறினால் அது அவருடைய நேர்மையைத் தான் சந்தேகிப்பதாக இருக்கும்.

‘சரி, பெருமாள். உங்கள் சந்தேகங்களை நானே கூறுகிறேன். உதாரணமாக கட்டுகளின் மேலே மட்டும் நல்ல நோட்டை வைத்து உள்ளே கௌண்ட்டர்ஃபீட்டை வைத்துக் கட்டி ஏமாற்றிவிட்டால் என்ன செய்வீர்கள்? 400 சீயையும் நாம் தனித்தனியாக எண்ணி சோதனை செய்து கொண்டிருக்க முடியுமா?’

‘ஒரு நிமிஷம் சுதிர்’ என்று சொல்லிவிட்டு ‘கௌண்ட்டர்ஃபீட் என்றால் என்ன?’ என்று குமாரசாமியிடம் கிசுகிசுத்தேன். ‘கள்ள நோட்டு’ என்று அவன் பதிலுக்குக் கிசுகிசுத்தான்.

‘அதற்குத்தான் இந்த கௌண்ட்டிங் மெஷின். இது கௌண்ட்டர்ஃபீட்டை வெளியே தள்ளிவிடும். அது மட்டுமல்ல பெருமாள். இந்த டீல் பற்றி உங்களுக்கு எந்தச் சந்தேகம் இருந்தாலும் அதை நீங்கள் நந்தானிஜீயிடம் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம். ஏனென்றால், அவருடைய இன்னொரு கம்பெனிக்கு நான் ஏற்கெனவே 2000 சி டீல் ஒன்றை முடித்துக் கொடுத்திருக்கிறேன். இப்போது இந்த டீலைக்கூட 2000 சீயாக வைத்துக்கொள்ளலாம். வேர்ல்ட் பேங்க் ஓக்கே சொல்லிவிட்டது. குமாரசாமியிடம் நேற்று இரவு பேசினேன். அவர்தான் 1000 சி போதும் என்றார்...’

குமாரசாமியைப் பார்த்தேன்.

‘அது எத்தனை ஆயிரம் சீயாக இருந்தாலும் சரி சுதிர், பெருமாளை நீங்கள் இரவில் தொடர்பு கொள்ள முடியாது’ என்று சிரித்துக்கொண்டே சொன்னான் குமாரசாமி. சுதிர் என்னைப் பார்த்து கண் சிமிட்டினார்.

‘ஐ லைக் யுவர் ஆட்டியூட் பெருமாள். ஆரம்பத்திலிருந்தே நான் உங்களை கவனித்துக்கொண்டிருக்கிறேன். யு ஆர் நாட் அட் ஆல் எக்ஸைட்டட்; ஒன்று சொல்கிறேன், குறித்து வைத்துக்கொள்ளுங்கள். எனக்கு ஓரளவு ஜோதிடம் தெரியும். இந்த டீல் தோல்வியில் முடிந்தாலும் நீங்கள் வேறு வகையில் பெரிய கோடீஸ்வரராகப் போகிறீர்கள். அதில் எனக்குச் சந்தேகமேயில்லை.’

சுதிர் சொன்ன திசையில் சிந்தனையைக் கொஞ்சம் ஓடவிட்டேன். இலக்கியம் தவிர வேறு எதுவும் எனக்குத் தெரியாது. இலக்கியத்தின் மூலமாகக் கோடீஸ்வரனாகும் வாய்ப்பு இப்போது மட்டுமல்ல; இன்னும் 2000 ஆண்டுகளில் கூட சாத்தியமில்லை. ஏனென்றால், நான் எழுதும் மொழி வாங்கி வந்துள்ள வரம் அப்படி. ஹீப்ரூ, கிரேக்கம், லத்தீன் போன்ற மொழிகள் அளவுக்கு நான் எழுதும் மொழிக்கும் வயதாகியிருந்தாலும், கடந்த 2000 ஆண்டுகளாகவே இந்த மொழியில் எழுதும் ஆட்கள் அத்தனை பேரும் தெருத்தெருவாகப் பிச்சையெடுத்தே செத்திருக்கிறான்கள். அதேதான் என் விஷயத்திலும் நடந்துகொண்டிருக்கிறது என்பதால்

வேறுவித சாத்தியத்திற்கே வழியில்லை - இப்படி உலக வங்கி மாதிரி ஏதாவது அதிர்ஷ்டக்காற்று அடித்தால்தான் உண்டு. ஆனாலும் சுதிர் கூறிய வார்த்தைகள் எனக்கு இதமாகவே இருந்தன. சுதிரிடம் ஒரு நல்ல சோதிடனுக்குரிய அடிப்படைத் தகுதி இருந்தது.

'ஏன் 2000 சி வேண்டாம் என்றாய்?' என்று குமாரசாமியின் காதைக் கடித்தேன். 'முதலில் இந்த டீலை முடித்து கையில் பணத்தை வாங்கிக்கொள்வோம். பிறகு அடுத்த டீலுக்குப் போவோம். இது போல் இன்னும் அரை டஜன் டீல்கள் இருக்கின்றன' என்றான் அவன்.

'100 சி போதுமே, அதற்கு மேல் எதற்கு?'

'எனக்கு குறைந்தபட்சம் 1000 சி தேவை.'

இது பற்றி பிறகு விவாதித்துக்கொள்ளலாம் என்று சுதிரிடம் திரும்பினேன்.

'நீங்கள் விரும்பினால் நந்தானிஜீயிடம் பேசலாம்' என்றார் சுதிர்.

ஹீராலால் நந்தானி இந்தியாவின் புகழ்பெற்ற பணக்காரர்களில் ஒருவர். பாராளுமன்ற உறுப்பினர். இப்போது உலக வங்கியிடம் கடன் வாங்கப்போகும் இந்த நிறுவனத்தைப் போல் இன்னும் பல நிறுவனங்களின் அதிபதி. ஆனால் இந்தியாவில் இதுபோல் பல நூறு நந்தானிகள் இருந்தாலும் இந்த நந்தானியை மட்டும் எனக்குப் பிடிக்கும். ஏனென்றால், இந்தியப் பணக்காரர்களிடம் இல்லாத பல அடையாளங்களையும், பழக்க வழக்கங்களையும் கொண்டிருந்தார் இவர். முக்கியமாக, தொப்பை கிடையாது. சிரிக்காதீர்கள். இந்தியாவில் தொப்பை இல்லாத ஒரு கோடீஸ்வரரைக் காட்டுங்கள், பார்ப்போம். சரி, ரத்தன் டாட்டா, அனில் அம்பானி... அப்புறம்? அவ்வளவுதான். நந்தானிக்குத் தொப்பை இல்லாதது மட்டுமல்ல; 50 வயதிலும் ஒரு கல்லூரி மாணவனைப் போல் டிரிம்மாக இருக்கிறார். காலையில் மரைன் ட்ரைவில் ஓடுகிறார். எல்லா பணக்காரர்களும்தான் ஓடுகிறார்கள். ஆனால் நந்தானி மட்டும்தான் செக்யூரிட்டி இல்லாமல் ஓடுகிறார். அதுதான் விசேஷம். மெஹ்பூபின் நெருங்கிய கூட்டாளி என்பதால் இப்படி அவர் செக்யூரிட்டி இல்லாமல் ஓடுவது பற்றி ஒருமுறை விசாரித்தேன். 'அவர் என்ன மெஹ்பூபைப் போலவா? மெஹ்பூபுவுக்குத்தான் திரும்பின பக்கமெல்லாம் எதிரிகள். நந்தானிஜீக்கு எதிரிகளே கிடையாது; அதனால்தான் அவர் செக்யூரிட்டியே வைத்துக் கொள்வதில்லை' என்றார் மெஹ்பூப்.

நந்தானி பற்றிப் பல கதைகள் சொல்லியிருக்கிறார் அவர்:

திடீரென்று காரை நிறுத்திவிட்டு தெருவோரத்துக் கையேந்தி பவனில் சாப்பிடுவார். கேட்டால் 'நான் இன்னமும் மனசுக்குள் ஒரு கம்பெனி வாட்ச்மேனாகத்தான் இருக்கிறேன்' என்று சொல்வார். மகாராஷ்டிராவின் ஏதோ ஒரு கிராமத்திலிருந்து மும்பைக்கு ஓடி வந்த நந்தானி தன் வாழ்க்கையை ஒரு வாட்ச்மேனாகத்தான் துவக்கியிருக்கிறார்.

'அது ஏன் பையா, ஒரு சில வாட்ச்மேன்கள் மட்டும் இப்படி கோடீஸ்வர நந்தானிகளாக ஆகிவிடுகிறார்கள்; ஆனால் பல நந்தானிகள் இன்னமும் வாட்ச்மேன்களாகவே கேட் வாசலில் நின்று கொண்டிருக்கிறார்கள்?'

மேலே ஆகாயத்தை நோக்கி இரண்டு கைகளையும் உயர்த்திக்

காண்பித்தார் மெஹபூப். இந்த ஆகாயம் தவிர ஹீராலால் நந்தானியின் உயர்வுக்கு வேறொரு காரணமும் இருப்பதாக எனக்குத் தோன்றியது.

இந்தியா பூராவும் எல்லா ரக மனிதர்களும் பயன்படுத்தும் அத்தியாவசியப் பொருட்களையெல்லாம் மலிவு விலையில் தயாரித்து விற்றார் நந்தானி. உப்பு என்றால் நம் ஞாபகத்துக்கு வருவது டாட்டா தானே? அதைப்போல் ஒவ்வொரு வீட்டிலும் நந்தானியின் பெயரே புழக்கத்தில் இருக்கும்படி பார்த்துக்கொண்டார்.

தெருவில் காய்கறி விற்பவர்களுக்குக்கூட அம்பானியின் தயவால் கைத்தொலைபேசி கிடைத்ததல்லவா? அதைப் போல் தொலைக்காட்சிப் பெட்டியையும், கணினியையும் நம்ப முடியாத மலிவு விலையில் இறக்கினார். அது மட்டுமல்ல, சமையலறையிலும் நந்தானியால் ஒரு புரட்சி நடந்தது. ரசாயன உரங்களாலும் பூச்சிக்கொல்லி மருந்துகளாலும் இந்தியர்களின் தேக ஆரோக்கியம் க்ஷீணமடைந்து வருவதால், இயற்கை உரங்களால் உருவாக்கப்பட்ட தானியங்களை உற்பத்தி செய்து விநியோகித்தார் நந்தானி.

நந்தானியின் பொருட்கள் வரும்வரை, ஆர்கானிக் உணவுப் பொருட்கள் பணக்காரர்களுக்கு மட்டுமே உரியதாக இருந்தன. உதாரணமாக, ஒரு லிட்டர் கடலை எண்ணெய் 80 ரூபாய் என்றால், ஆர்கானிக் எண்ணெய் 200 ரூபாய். 80 ரூபாய் எண்ணெயில் எக்கச்சக்கமாக கொலஸ்ட்ரால் இருக்கும். தொடர்ந்து உபயோகித்து வந்தால் ஹார்ட் அட்டாக், பைபாஸ் சர்ஜரி எல்லாம் உத்தரவாதம். 200 ரூபாய் ஆர்கானிக் எண்ணெயில் ஒரு சதவிகிதம் கூட கொலஸ்ட்ரால் இல்லை. நந்தானி செய்த புரட்சி என்னவென்றால், கொலஸ்ட்ரால் இல்லாத ஆர்கானிக் எண்ணெயை 60 ரூபாய்க்குக் கொடுத்தார். அதேபோல், மனித உடலுக்குத் தேவையான இயற்கை மூலகங்களான மக்னீசியம், கால்சியம், சல்ஃபர், க்ளோரைட், காலியம் போன்றவைகள் அடங்கிய படிக உப்பு ஒரு கிலோ 56 ரூபாய்க்கு ஆர்கானிக் கடைகளில் மட்டுமே கிடைத்துக்கொண்டிருந்ததை கிலோ 7 ரூபாய்க்கு தெருமுனைக் கடைகளிலும் கிடைக்கச் செய்தார் நந்தானி. நந்தானியின் வரவுக்கு முன்னால், சென்னை போன்ற பெரு நகரங்களிலேயே ஆர்கானிக் கடைகள் ஒன்றிரண்டுதான் இருந்தன. கீழ்ப்பாக்கத்தில் அஹூம்காரா என்று ஒரு கடை; ஆழ்வார்பேட்டையில் ஒரு கடை. ஒரு படத்திற்கு மூன்று சி சம்பளம் வாங்கும் சினிமா நடிகர்களை மட்டுமே இக்கடைகளில் காண முடியும்.

இது எல்லாவற்றையும் புரட்டிப்போட்டுவிட்டார் நந்தானி.

இவ்வாறாகவே, நந்தானியின் பெயர் இந்தியா முழுவதும் சாமான்ய மனிதர்களிடையே பிரபலமாயிற்று.

‘இவ்வளவு மலிவு விலையை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?’ என்று பத்திரிகைக்காரர்கள் ஒருமுறை கேட்டபோது ‘இதில் எந்த ரகசியமும் இல்லை; இதற்கெல்லாம் என் குரு மகாத்மாதான். கிராம மக்கள் வேலையில்லாமல் பட்டினி கிடக்கிறார்கள். நான் அவர்களை வைத்தே இப்பொருட்களை உற்பத்தி செய்கிறேன். அவர்களுக்கும் வேலை கிடைத்தது போல் ஆயிற்று. உற்பத்திச் செலவும் கம்மி. இதையே வேறு கம்பெனிகளும் செய்தால் என்னுடைய பளு குறையும்’ என்றார் நந்தானி.

ஒருநாள் மும்பையில் மெஹபூபும் நந்தானியும் காரில் சென்றுகொண்டிருந்தார்கள். இரவு ஒன்பது மணி. பேய் மழை பெய்து கொண்டிருக்கிறது. சாலையின் குறுக்கே வந்து லி∴ப்ட் கேட்கிறார் ஒருவர். எந்தத் தயக்கமும் இல்லாமல் காரை நிறுத்தி லி∴ப்ட் கொடுத்து அந்த மனிதரை எங்கே விட வேண்டுமோ அங்கே கொண்டு சேர்த்திருக்கிறார் நந்தானி. இறங்கும்போது அந்த மனிதர் மிகுந்த நெகிழ்ச்சியுடன் 'உங்கள் பெயர் என்ன?' என்று கேட்க, 'மக்கள் என்னை நந்தானி என்று அழைப்பார்கள்' என்று கூறியிருக்கிறார்.

நந்தானியிடம் எனக்கு மிகுந்த பிடித்த பழக்கம், எங்கே வெளிநாடு சென்றாலும் தன்னுடைய நெருங்கிய நண்பர்களுக்கு அவர்களுக்குப் பிடித்தமான பரிசுப் பொருட்களை வாங்கி வந்து தருவது.

ஒருமுறை அவர் அமெரிக்கா சென்றிருந்தபோது மெஹபூபுக்கு வாங்கி வந்து தந்த பொருள்: Zippo லைட்டர்.

## 45. Zippo கதைகள்

> ஜூன் 9ஆம் தேதி, 2006ஆம் ஆண்டு வியாழக்கிழமை இரவு. மன்னாரிலிருந்து தென்கிழக்கே 12 கி.மீ தூரத்திலுள்ள வன்கலை என்ற ஊரில் துப்பாக்கி மற்றும் கத்திகளோடு ஒரு தமிழர் வீட்டுக்குள் புகுந்த இலங்கை ராணுவத்தினர் அங்கிருந்த நான்கு பேரை சித்ரவதை செய்து கொன்றனர். சம்பவத்தை நேரில் பார்த்தவர்கள் சிப்பாய்களைத் தங்களால் அடையாளம் காட்ட முடியும் என்று கூறுகின்றனர். மதத் தலைவர்களும், இலங்கை பாராளுமன்ற உறுப்பினர்களும், மனித உரிமை அமைப்பினரும் வன்கலை விரைந்துள்ளனர்.
>
> கொல்லப்பட்ட நான்கு பேரின் பெயர்கள்: சித்ரா என்கிற மேரி (27), மூர்த்தி மார்ட்டின் (35), ஆன் நீல்சன் (7), ஆன் லூக்ஸிகா (9).
>
> மார்ட்டின் தச்சுத் தொழில் செய்பவர். நால்வரையும் சித்ரவதை செய்வதற்கு மார்ட்டினின் உபகரணங்களையும் சிப்பாய்கள் உபயோகித்துள்ளனர்.
>
> மார்ட்டின் குடும்பத்தினர் சிறிது காலம் இந்தியாவில் அகதிகளாக இருந்து, பின்னர், புலிகளுக்கும் ராணுவத்தினருக்கும் அமைதி உடன்படிக்கை ஏற்பட்டபோது இலங்கைக்குத் திரும்பியவர்கள்.
>
> சித்ரவதை செய்யப்பட்ட நால்வரின் உடல்களும் நைலான் கயிறால் தூக்கில் தொங்க விடப்பட்டிருந்தன. மேரி மற்றும் லூக்ஸிகாவின் ஜனன உறுப்புகள் க்ரில்லிங் மெஷினால் 'க்ரில்' செய்யப்பட்டிருந்தன.
>
> -புகைப்படங்களுடன் இலங்கைத் தமிழ்ப் பத்திரிகைகளில் வெளிவந்த செய்தி.

ஒரு பார்ட்டியின்போது நவீன மோஸ்தரில் உடையணிந்திருந்த ஒருவர் தன் கையில் அவருடைய மோஸ்தருக்குச் சற்றும் பொருத்தமில்லாத ஒரு 'டப்பா' லைட்டரைக் கொண்டு சிகரெட் பற்ற வைப்பதைப் பார்த்து 'ஏன் இவ்வளவு பழைய மாடல் லைட்டரை வைத்திருக்கிறீர்கள்?' என்று கேட்கிறார் George G.Blaisdell என்ற அமெரிக்கர். 'எந்தப் பிரச்னையும்

இல்லாமல் பற்றுகிறது: அதனால் வைத்திருக்கிறேன்' என்று அவர் சொல்ல, அந்த ஆஸ்திரேலிய மாடலின் உரிமையை வாங்கும் ஜார்ஜ் ப்ளேஸ்டெல், அதன் வடிவத்திலும் வேலைப்பாட்டிலும் சிலபல மாற்றங்களைச் செய்து ஒரு லைட்டரை உருவாக்குகிறார். பென்ஸில்வேனியாவில் உள்ள Bradford என்ற ஊரில் 1932ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட அந்த லைட்டருக்கு 'ஸிப்போ' என்று பெயரிடுகிறார் ஜார்ஜ். 'ஸிப்போ' என்ற வார்த்தையின் லயம் அவருக்குப் பிடித்திருக்கிறது. முதல் மாதம் 100 லைட்டர்களே விற்றன. விலை 1.95 டாலர். அப்போது Great Depression காரணமாக அமெரிக்க மக்கள் புதுப் பொருட்கள் எதையும் வாங்கிப் பார்க்கும் மனோநிலையில் இல்லை.

***

1949ஆம் ஆண்டிலிருந்து ஸிப்போவின் அடிப்பகுதியில் அது தயாரிக்கப்படும் மாதம் மற்றும் ஆண்டு பற்றிய விபரங்கள் புள்ளிகளாகவும், சாய்ந்த கோடுகளாகவும் குறிக்கப்பட்டன. இரண்டாம் உலகப் போரின்போது பிற தேசங்களில் போரிடச் சென்ற அமெரிக்கச் சிப்பாய்கள் தங்களுடன் ஸிப்போ லைட்டர்களை எடுத்துச் சென்றனர்.

1934 முதல் 1940 வரை மூன்று லட்சத்துக்கு அதிகமான ஸிப்போ லைட்டர்கள் விற்றன. ஸிப்போ நிறுவனம் விதவிதமான அபூர்வ விஷயங்களை லைட்டரில் பொறித்தது. சிப்பாய்களும் லைட்டரின் மீதியுள்ள இடங்களில் தங்கள் பெயரையும், பல நினைவுச் சின்னங்களையும் பொறித்தனர்.

ஐம்பதுகளில் வியட்நாமுக்குச் சென்ற அமெரிக்கச் சிப்பாய் ஒருவன் பாங்காக்கின் ஒரு பாரில் வைத்து தனக்குக் கொடுத்த ஸிப்போ லைட்டர் பற்றி ஒரு தாய்லாந்துக்காரன் எழுதுகிறான்.

ஏதோ ஒரு நாட்டுக்கு அனுப்பி வைக்கப்பட்ட அமெரிக்க ராணுவச் சிப்பாய், அந்நாட்டிலிருந்து அமெரிக்காவிலுள்ள தன் மனைவிக்கு ஒலிநாடாவில் ஒரு கடிதத்தைப் பதிவு செய்து அனுப்பி வைக்கிறான். பின்னர், அமெரிக்கா திரும்பியதும் அவன் மனைவி 'இன்னும் நீ சிகரெட் குடிப்பதை விடவில்லை' என்கிறாள். 'இல்லையே, இங்கிருந்து கிளம்பும்போதே உன்னிடம் வாக்குக் கொடுத்திருந்தபடி நான் சிகரெட்டை விட்டுவிட்டேன்' என்கிறான் சிப்பாய். அவன் அனுப்பி வைத்திருந்த ஒலி நாடாவை ஒலிக்கச் செய்கிறாள் மனைவி. ஒலி நாடாவில் ஸிப்போவின் சப்தம் தெளிவாகக் கேட்கிறது.

ஸிப்போவின் விசேஷத் தன்மைகளில் முக்கியமானது, அதைப் பற்ற வைப்பதற்காக அழுத்தும்போதும், பிறகு மூடும்போதும் அது எழுப்பும் அலாதியான சப்தம். ஸிப்போவின் சப்தம் உங்களுக்குப் பரிச்சயமாகியிருந்தால் நீங்கள் உலகின் எந்த மூலையில் இருந்தாலும் உங்களுக்கு அருகில் ஸிப்போ பற்றவைக்கப்பட்டால் அதை உங்களால் அடையாளம் கண்டுகொண்டுவிட முடியும்.

எத்தனையோ ஹாலிவுட் படங்களில் ஸிப்போ பயன்படுத்தப் பட்டிருக்கிறது. ஆனால் இந்திய சினிமாவில் ராம்கோபால் வர்மாவின் 'ப்ளாக்'கில் மட்டும்தான் நான் ஸிப்போவின் சப்தத்தைக் கேட்டிருக்கிறேன்.

பழமையான நாணயங்களைச் சேகரிப்பதைப் போல் ஸிப்போ பயன்படுத்துபவர்களும் ஸிப்போவை சேகரித்துக்கொண்டிருக்கிறார்கள். சேகரிப்பாளர்களின் பட்டியலில் ஸிப்போ இரண்டாவது இடம் வகிக்கிறது. ஸிப்போவைப் பயன்படுத்துபவர்களில் 21 சதவிகிதம் பேர் ஸிப்போ சேகரிப்பாளர்களாகவும் உள்ளனர். (மெஹபூபிடம் 300 ஸிப்போக்களும், ராமிடம் 50 ஸிப்போக்களும் உள்ளன). உலகில் ஸிப்போ சேகரிப்பாளர்கள் க்ளப் 15 உள்ளன. (அமெரிக்காவில் 5, இங்கிலாந்தில் 2, ஆஸ்த்ரியா, கனடா, டென்மார்க், இத்தாலி, ஜப்பான், தென்னாஃப்ரிக்கா, சுவிட்ஸர்லாந்து, நெதர்லாந்து ஆகிய நாடுகளில் தலா - 1).

ஸிப்போ கதைகள் என்று நூற்றுக்கணக்கான கதைகள் தொகுக்கப்பட்டுள்ளன: தொலைந்து போன தன்னுடைய ஸிப்போ 30 ஆண்டுகள் கழித்துக் கிடைத்தது பற்றி ஒருவர்; ஒரு ஏரியில் விழுந்துவிட்ட தன் ஸிப்போ ஒரு ஆண்டு கழித்து அந்த ஏரி வற்றியபோது அதே இடத்தில் கிடைத்தது பற்றி ஒருவர் (அதற்குப் பிறகு புதிதாகத் திரியும் எண்ணெயும் போட்ட பிறகு எரிந்ததாம் அந்த ஸிப்போ); 100 மைல் வேகத்தில் அடித்த சூறாவளியிலும் தன் ஸிப்போவைப் பற்ற வைக்க முடிந்தது பற்றி ஒருவர் (ஸிப்போவின் விசேஷ அம்சங்களில் மற்றொன்று: அதை எவ்வளவு பலமான காற்றிலும் பற்ற வைக்க முடியும். அதன் பெயரே Zippo Windfree Lighter என்பதுதான்); ஏ.கே. 47 துப்பாக்கியால் சுடப்பட்ட போதும் தன் மீது குண்டு பாயவில்லை; காரணம், சட்டைப் பாக்கெட்டிலிருந்த ஸிப்போ குண்டைத் தடுத்துவிட்டது; அந்த ஸிப்போவை இன்னமும் பாதுகாத்து வைத்திருக்கிறேன் என்பதாக ஒருவர். (தன் மீது பாய்ந்த துப்பாக்கிக் குண்டு ஸிப்போவில் பட்டுத் தெறித்ததாக இன்னொருவரும் கூறுகிறார்); தனது பத்து வயது மகள் தனக்கு ஒரு முறை ஸிப்போவைப் பரிசளித்தபோது, அத்தந்தை தான் சிறுவனாக இருந்தபோது இரவில் தன் தந்தை ஸிப்போவைப் பற்ற வைக்கும் சப்தம் தனக்கு எவ்வளவு பாதுகாப்பு உணர்வைத் தந்தது - அதே போல் இப்போது தன் மகளுக்கும் தோன்றுமா என்று நினைத்துப் பார்க்கிறார்... இப்படி ஏராளமான ஸிப்போ கதைகள் தொகுக்கப்பட்டுள்ளன. ஸிப்போவின் மற்றொரு விசேஷ அம்சம்: அது கெட்டே போகாது. உலகில் ஆயுட்கால உத்தரவாதம் தரப்படும் ஒரே பொருள் ஸிப்போ மட்டும்தான். யாருடைய ஆயுள்? அதை உபயோகிப்பவரின் ஆயுள் அல்ல. ஸிப்போவின் ஆயுள் எவ்வளவு என்று இன்னும் முடிவாகத் தெரியவில்லை. ஆக, எத்தனை ஆண்டுகள் கழித்து அது பழுதடைந்தாலும் ப்ராட்ஃபோர்டுக்கு அனுப்பி வைத்தால் கட்டணமின்றி பழுது பார்க்கப்பட்டு உங்கள் முகவரிக்கு அனுப்பி வைக்கப்படும்.

ஆனால் ஸிப்போவைப் பயன்படுத்துவதற்கு நாம் சில சிரமங்களை மேற்கொள்ள வேண்டும். அதற்கு வாரம் ஒரு முறை எண்ணெய் போட வேண்டும். (அதாவது, தினம் 20 சிகரெட் குடிக்கும் ராம் வாரம் ஒரு முறை எண்ணெய் போடுகிறான்). கண்ட எண்ணெயையும் ஊற்ற முடியாது. ஸிப்போவுக்கென்று தனியாக ஒருவித திரவம் உள்ளது. அதை ‘ஸிப்போ ஃப்ளூய்ட்’ என்று சொல்கிறார்கள். Naphtha என்று அழைக்கப்படும் ரசக்கற்பூரத் தைலமே அது. மாதத்திற்கு ஒரு முறை ஸிப்போவின் கல் தேய்ந்துவிடும். (தினம் 20 சிகரெட்டுக்கு இந்தக் கணக்கு. நீங்கள் 10 சிகரெட் குடிப்பவராக இருந்தால் இரண்டு மாதத்திற்கு ஒரு முறை என்று ஆகும்.) இந்தக் கல்லை ‘flint’ என்று அழைக்கிறார்கள். அதாவது, ஸிப்போ எரிவது

சிக்கிமுக்கிக் கல்லின் அடிப்படையில்தான். இரண்டு மாதத்திற்கு ஒரு முறை திரியின் முனை கருகும். அப்போது ஒரு சிறிய கத்தரிக்கோலால் திரியின் முனையை வெட்டிவிட்டு அதை மேலே இழுத்து விட வேண்டும். கண்ணிமைகளைச் சீராக்க உதவும் Pincher-ஐ உபயோகப்படுத்திக் கொள்ளலாம். (கையால் அச்சுக் கோர்த்துக்கொண்டிருந்த காலத்தில் இந்த Pincher-ஐ விட்டுத்தான் சரியான எழுத்துக்களை எடுப்பார்கள்.)

ஸிப்போவின் கீழ்ப்பகுதியில் ஒரு ஸ்ப்ரிங் இருக்கும். அதை ஸ்க்ரூ ட்ரைவர் மூலம் கழற்றினால் உள்ளே பஞ்சு இருக்கும். அதில்தான் ஸிப்போ திரவத்தை ஊற்ற வேண்டும். ஸிப்போவில் திரவத் தொட்டி என்று தனியாக எதுவும் இருக்காது. பஞ்சுதான் எரிதிரவத்தை உறிஞ்சி வைத்துக்கொள்ளும். இந்தப் பஞ்சை வெளியே எடுப்பதற்கு Tongs -உம் வைத்திருக்க வேண்டும்.

ஆக, ஸ்க்ரூ ட்ரைவர், சின்னக் கத்தரிக்கோல், பிஞ்ச்சர், எரிதிரவம், கல், tongs என்ற சாதனங்களையெல்லாம் ஒரு தோல் பையில் போட்டு வைத்துக்கொள்ள வேண்டியது அவசியம். ராம் இப்படி மூன்று தோல் பைகளை அலுவலகம், கார், வீடு என்று தனித்தனியே வைத்திருக்கிறான்.

சென்னையிலுள்ள சோளா ஷெரட்டனின் பெஷாவரி உணவகத்தில் கடந்த 18 ஆண்டுகளாக மெனுவில் எந்த மாற்றமும் இல்லை. வடமேற்கு எல்லைப் பகுதியில் கிடைக்கும் உணவு வகைகளே இந்த உணவகத்தின் விசேஷம். விலையும், பணியாளர்களும் மாறுவார்களே தவிர மெனுவில் மாற்றமில்லை. அதேபோல் 1932-இலிருந்து இன்றுவரை ஸிப்போவின் அமைப்பிலோ, வேலைப்பாட்டிலோ எந்த மாற்றமும் இல்லை.

2003, செப்டம்பர் மூன்றாம் தேதி ஸிப்போவின் விற்பனை 40ஆவது கோடியைத் தொட்டது. ‘ஸிப்போ பற்றி ஏகப்பட்ட புத்தகங்கள் வந்துள்ளன. அவற்றில் என்னைக் கவர்ந்தது: 100 Ways to Light Zippo.

***

மணி ஒரு நாளைக்கு 40 சிகரெட் குடிப்பவன் என்றாலும் ஸிப்போ வைத்திருப்பதில்லை. தொலைந்து விடுமாம். அதனால் 50 பைசா விலையுள்ள ‘வெட்டும் புலி’ தீப்பெட்டிதான் வைத்திருக்கிறான்.

## 46. கோடம்பாக்கத்துக் கதைகள்

> ‘மேல்தட்டு வர்க்கம் ஏன் நாறுகிறது?’ என்ற கேள்விக்கு சமீத் பாஸூவின் பதில்: ‘ஏழ்மை நாறுகிறது; ஊழல் நாறுகிறது; படிப்பறிவின்மையும், நோயும், வேலையில்லாத் திண்டாட்டமும் நாறுகிறது. நம் தேசமே - ஏன், இந்த மொத்த உலகமே நாறுகிறது.’
>
> -3.9.2005 தேதியிட்ட டெஹல்காவில்.

> உன் இரவுகள் தனிமையிலேயே கழிகின்றனவே, ஏன்? என்னை ஏற்றுக்கொள். என்னை ஆலிங்கனம் செய். என் தேகம் உன் தேகத்துக்குள் செல்லட்டும். தனிமையின் வாடை தோய்ந்த உன் குகைக்குள் என் காமத்தின் தீராத வேட்கையின் தூரிகைகளால் சில

கோடுகளை வரைகிறேன்...

-ம்யூஸுக்கு நான் அனுப்பிய ஒரு குறுந்தகவலில்.

‘சரி, நந்தானியிடம் எப்படிப் பேசுவது? அவரைப் பிடிப்பது சாதாரண விஷயம் இல்லையே?’ என்று கேட்டேன் சுதிரிடம்.

‘அவருடைய தொலைபேசி எண்ணைத் தருகிறேன். என் பெயரைச் சொல்லுங்கள். பேசுவார்.’

‘நல்ல யோசனை.’

‘என்ன பெருமாள். இவ்வளவு வெகுளியாக இருக்கிறீர்கள்? மகா மட்டமான யோசனை. நான் கொடுக்கும் நம்பரில் பேசுவது நந்தானிஜீதான் என்பதற்கு என்ன உத்தரவாதம்? நம்பரைத் தருகிறேன். அது நந்தானிஜீயின் நம்பர்தானா என்பதை உறுதிப்படுத்திக்கொண்டு பிறகு பேசுங்கள்.’

இந்த மீட்டிங்கை அடுத்து ஏகப்பட்ட காரியங்களைச் செய்ய வேண்டியிருந்தது. முதலில் மணியைச் சந்தித்து அவனும் ஒரு பார்ட்னராக இருப்பது பற்றிப் பேசினேன். ‘என்னுடைய பிஸினஸைத் தவிர வேறு எதன் மூலமாகக் கிடைக்கும் பணமும் எனக்கு வேண்டாம்’ என்று மறுத்துவிட்டான். அதைக் குமாரசாமியிடம் வந்து தெரிவித்தபோது ‘அவர் பெயரே வெளியில் வராது; வெறும் இன்விஸிபிள் பார்ட்னராக இருந்தால் போதும்’ என்றான் அவன். அதற்கு மணி ‘நான் சொன்னது சொன்னதுதான். ஆனால் ஒன்று செய்யலாம். என்னுடைய ஷேரையும் நீயே எடுத்துக்கொள்’ என்றான். இதை நான் குமாரசாமியிடம் சற்று மாற்றிக் கூறினேன். ‘மணி ஒப்புக்கொண்டுவிட்டார். ஆனால், அவருடைய ஷேரையும் என்னிடமே கொடுக்கச் சொல்லிவிட்டார்.’ இதன் மூலம் எனக்கு இரண்டு ஷேராக மொத்தம் 160 சி கிடைக்கும் என்று கணக்குப் போட்டது மனம்.

மணியிடம் லாயர் விஷயத்தையும் பேசி முடித்திருந்தேன். மணியின் சிபாரிசு என்பதாலும், நந்தானியின் நிறுவனம் என்பதாலும் லாயர் மறு பேச்சின்றி ஒப்புக்கொண்டார். தொடர்ந்து தினந்தோறும் சந்திப்புகள் நடந்தன; லாயருடன், நந்தானியின் கம்பெனி அதிகாரிகளுடன்... ஆனால் மெஹபூபுடன் நடந்த சந்திப்பு மட்டும் முதல் சந்திப்பிலேயே முடிவுக்கு வந்துவிட்டது. நந்தானியின் தொலைபேசி எண்ணைத் தருவதற்கு அவர் ஒரு எல் ஃபீஸ் கேட்டார். அது மட்டுமல்ல, ‘நந்தானிஜீயின் நம்பரை மட்டும்தான் தருவேன்; அவர் பேசுவாரா இல்லையா என்பதற்கு நான் உத்தரவாதமில்லை’ என்றார் மெஹபூப். மெஹபூப் அப்படித்தான். நட்பு வேறு; தொழில் வேறு.

கைக்கு ஒரு கட்டணம்; காலுக்கு ஒரு கட்டணம்; முகத்தில் அமிலம் ஊற்ற ஒரு கட்டணம்; ஆளையே தீர்த்துக் கட்ட ஒரு கட்டணம் என்று வாழ்ந்தவர் மெஹபூப்...

கையை எடுப்பது, காலை எடுப்பது, முகத்தில் அமிலம் ஊற்றுவது, ஆளையே தீர்த்துக்கட்டுவது என்பதெல்லாம் மனித விரோதமான செயல்கள் என்பதுதான் என்னுடைய கருத்தும். ஆனால் ஒருமுறை நானே மெஹபூப்பின் உதவியை நாடிச் செல்ல வேண்டியிருந்தது என்பதை இப்போது நினைத்தாலும் என் மனம் மிகுந்த பதற்றம் கொள்கிறது. நல்ல

வேளை, என்னிடம் கைத்தொலைபேசி இல்லாத காலகட்டம் அது. ஒரு நாள் ரங்கன், மணிவண்ணன், முத்துக்குமார், செல்வா ஆகிய நண்பர்களுடன் நான் குடித்துக்கொண்டிருந்தபோது ‘உன்னுடைய நாவலின் 20 சதவிகிதத்தை நான்தானே எழுதிக்கொடுத்தேன்?’ என்று ரங்கன் சொல்ல, அதன் காரணமாக நடந்த அடிதடி பற்றியும், அப்போது நான் ஆடை களைந்து நிர்வாணமானது பற்றியும் ஒரு முறை சாரு நிவேதிதா எழுதியிருந்தான் அல்லவா? கூட இருந்து பார்க்காததால், அந்தச் சம்பவத்தைப் பற்றி மிகவும் லேசாக, போகிற போக்கில் எழுதிவிட்டான். உண்மையில் அன்றைய தினம் அங்கே ஒரு கொலையே நடந்திருக்கும். ரங்கன் அந்த மாதிரி என்னிடம் சொன்னதும் அந்த அறையிலிருந்த ஒரு குடையை எடுத்துவிட்டேன். அதன் முனைப் பகுதி கத்தியைப் போல் கூர்மையாக இரும்பால் ஆகியிருந்தது. உடனே ரங்கன் ஒரு பாட்டிலை உடைத்துக் கையில் பிடித்துக்கொண்டான். அடுத்த கணம், நான் பக்கத்தில் கிடந்த ஒரு துவாலையை எடுத்து இடுப்பில் கட்டிக்கொண்டு தடதடவென்று படிகளில் இறங்கி எதிரேயிருந்த பெட்டிக்கடைக்கு ஓடினேன். போதையில் மெஹபூபின் எண் ஞாபகமில்லை. மாற்றி மாற்றி ராங் நம்பராகப் போய்க்கொண்டிருந்தது. அன்றைய தினம் மட்டும் என் கையில் கைத்தொலைபேசி இருந்திருந்தால் மறுநாள் தினசரிகளில் ‘ஜாம்பஜார் போலீஸ் ஸ்டேஷனுக்கு எதிரில் விபரீதம்! இளைஞர் முகத்தில் ஆஸிட் வீச்சு!’ என்று தலைப்புச் செய்தி வந்திருக்கும்.

ஒரு பிரபலமான ஆஸிட் வழக்கில் மெஹபூபின் அடியாள் மாட்டிக்கொண்டு, போலீஸ் சித்ரவதையின்போது தன்னை அனுப்பியவரை அடையாளம் காட்டிவிட்டதால் மெஹபூபும் மாட்டி, அவருடைய புகைப்படம் இந்திய தினசரிகளில் முதல் பக்கத்தில் வெளி வந்ததிலிருந்து மெஹபூப் தன்னுடைய பழைய வாழ்க்கையை மாற்றிக் கொண்டுவிட்டதாகத் தெரிகிறது.

நம்ப முடியாத துல்லியத்துடன் காரியங்களைச் செய்து முடிப்பது மெஹபூபின் வழக்கம். காரியம் முடிந்தபிறகு அந்த இடத்தில் போலீஸுக்கு ஒரு துப்பும் கிடைக்காது. இதனாலேயே அவருக்குப் பிரதம மந்திரி, உள்துறை மந்திரி, மாநில மந்திரி, போலீஸ் அதிகாரிகள் என்று பலதரப்பட்டவர்களும் கஸ்டமர்களாக இருந்தனர். அவருடைய கஸ்டமர்களில் ஒருவர் இங்கிலாந்து இளவரசர் என்றால் பார்த்துக்கொள்ளுங்கள். கப்ஸா இல்லை. இளவரசரும் மெஹபூபும் ஒன்றாக இருக்கும் பல புகைப்படங்களை நான் அவருடைய ஆல்பத்தில் பார்த்திருக்கிறேன். மற்றும், லண்டனிலுள்ள Palm Beach கஸினோவில் மெஹபூப் உறுப்பினராக இருக்கும் அட்டைகளையும் காண்பித்திருக்கிறார். போலீஸுக்கும் மெஹபூப்புக்கும் இருக்கும் நெருங்கிய உறவுக்கு சாட்சியாக இரண்டு சம்பவங்களை என்னால் கூற முடியும்:

ஒருமுறை தன் மகளின் பிறந்தநாளை முன்னிட்டு நெருங்கிய நண்பர்களுக்குத் தனது இல்லத்தில் ஒரு விருந்து கொடுத்தார் மெஹபூப். தேவலோகத்திலிருந்து இறங்கிய குட்டி தேவதையைப் போலிருந்த அவர் மகளுக்கு அன்று நான்கு வயது நிறைவடைந்திருந்தது.

முப்பது பேர் இருக்கும். ஸ்காட்ச்சும், கோனியாக்கும், ஒயினும் வெள்ளமாக ஓடிக்கொண்டிருந்தது. அப்போது மெஹபூபுக்கு வந்த ஒரு தொலைபேசி அழைப்பில் அவர் கூறிய பதில்கள் அன்றைய தினக்

கொண்டாட்டங்களுக்குச் சற்று முரண்பாடாக இருந்தது.

‘நோ சார்... ஐ வில் ஸெண்ட் யூ தெ பிரியாணி சார். நோ சார்... நோ சார்... ஐ வில் நெவர் ஃபர்கெட் யூ சார். திஸ் டைம் ப்ளீஸ் எக்ஸ்க்யூஸ் மீ சார்... மெனி ப்ரஸ் பீப்பிள் ஆர் தேர் சார்... ஸம் அதர் டைம் ஐ வில் டெஃபனட்லி இன்வைட் யூ சார்...’

இதே ரீதியில் நீண்ட நேரம் பேசிவிட்டு தொலைபேசியை ஆஃப் செய்துவிட்டோமா என்று ஒரு முறைக்கு இரண்டு முறை பார்த்து விட்டு, தன் தம்பியை அழைத்து உடனடியாக ராபின்ஸன் சாருக்கு பிரியாணியை அனுப்பி வைக்குமாறு பணித்தார் மெஹபூப். பிறகு ஆசுவாசமடைந்தவராக மணியிடம் திரும்பி ‘இப்போதே இங்கு வருகிறேன் என்கிறார்; நீங்கள் வேறு இருக்கிறீர்கள். எனக்கு என்ன சொல்வதென்றே தெரியாமல் போய்விட்டது. நல்ல வேளை, தப்பித்தேன்’ என்றார். சென்னை நகரின் மிக முக்கியமான காவல்துறை அதிகாரிகளில் ஒருவர் ராபின்ஸன்.

புதிதாக யாரையும் தனக்கு அறிமுகம் செய்து வைக்கக்கூடாது என்பதைத் தன் நண்பர்களிடம் எப்போதும் வலியுறுத்தி வருபவன் மணி. அதிலும் காவல்துறை அதிகாரி என்றால் காததூரம் ஓடுவான். ‘போலீஸிடமிருந்து நாம் தூரத்திலேயே இருந்துகொள்ள வேண்டும்; அப்போதுதான் அவர்கள் நம்மிடம் உதவி கேட்டு வருவதைத் தவிர்க்க முடியும்’ என்பான்.

உண்மைதான். அப்போது நான் மணியின் பத்திரிகை ஒன்றில் பல்வேறு புனைப்பெயர்களில் கிசுகிசு செய்திகள் எழுதிக்கொண்டிருந்தேன்.

அப்போது ஒருமுறை ஒரு ரசமான கிசுகிசுவை எழுத நேர்ந்தது. சார்லஸ் என்ற பெயரில் சென்னையில் ஒரு போலீஸ் அதிகாரி இருந்தார். கவர்ச்சியான தோற்றம் கொண்டவர். நடுத்தர வயது. அவரும் ஒரு சினிமா நடிகையும் ஒரு நட்சத்திர ஓட்டலுக்குச் சென்றனர். குடித்தபடி பேசிக்கொண்டிருக்கும் போது இருவருக்கும் தகராறு வந்துவிட்டது. ‘என்னை யார் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய்?’ என்று கேட்டு நடிகையின் கன்னத்தில் அறைந்து விட்டார் சார்லஸ். பலர் முன்னிலையில் அடி வாங்கிய வேதனை ஒரு பக்கம், வலி மறுபக்கம் - பலமாக அழ ஆரம்பித்துவிட்டார் நடிகை.

மற்ற நடிகைகளாக இருந்தால் அழுது ஆர்ப்பாட்டம் பண்ணி ரகளையே செய்திருப்பார்கள். ஆனால் இந்த நடிகை வித்தியாசமானவர். தன் பெயருக்கேற்றபடி தோற்றத்திலும் மனதிலும் மென்மையானவர். தயாரிப்பாளர்களையும், இயக்குனர்களையும் பார்க்கும்போது எழுந்து நின்று வலது கையை இடது மார்பில் வைத்து பவ்யமாக வணக்கம் சொல்லும் சினிமா பாணியைக் கடைப்பிடிக்காததாலேயே பல வாய்ப்புகளை இழந்தவர். நான் ஒரு கட்டத்தில் விளம்பரப் படங்களில் நடித்து வந்தபோது என்னுடன் நடித்திருக்கிறார். அப்போது அவர் கேமராவுக்குப் புதிது. கல்லூரிப் படிப்பு முடிந்த கையோடு கேரளாவிலிருந்து சென்னைக்கு ரயிலேறிவிட்டார். குழந்தை மாதிரி இருப்பார். ஒரு நாள் காலை அவரை அழைத்துச் செல்வதற்காக படப்பிடிப்புக் குழுவினருடன் அவர் வீட்டுக்குச் சென்றிருந்தேன். தெருப் பசங்களுடன் வீட்டு வாசலில் பாவாடை, சட்டையுடன் பாண்டி விளையாடிக்கொண்டிருந்தார் நடிகை. இயக்குனர் சோமு என் நெருங்கிய நண்பன் என்பதாலோ என்னவோ என் மீது விசேஷ மரியாதையுடன்

பழகுவார்.

ஒரு பால் விளம்பரத்தின்போது நடந்த சம்பவம் ஞாபகம் வருகிறது: அந்தக் குறிப்பிட்ட பிராண்ட் பால் பாக்கெட்டை வாங்கிக்கொண்டு வீட்டுக்குள் நுழைகிறான் கணவன். நடிகை அந்த ப்ராண்டைப் பார்த்து குதூகலமாகி என்னிடம் - அதாவது, கணவனிடம் - 'நீங்கள் ஒரு இனிமையான கணவர்' என்று ஆங்கிலத்தில் கூற வேண்டும். 'ஏன் ஆங்கிலம்?' என்று சோமுவிடம் கேட்டேன்.

'தமிழில் கொஞ்சினால் ப்ராடக்ட்டுக்கு வேல்யூ இருக்காது' என்றான் சோமு. விளம்பரப் படமெடுப்பதில் கொடிகட்டிப் பறந்துகொண்டிருந்தான். அவன் சொன்னால் சரியாகத்தான் இருக்கும்.

நடிகை இரண்டு மூன்று டேக் வாங்கிக்கொண்டிருந்தார். விஷயம் என்னவென்றால், தனக்குப் பிடித்த ப்ராண்ட் என்பதால் மனைவி தன் முகத்திலும் பேச்சிலும் மகிழ்ச்சியைக் காட்ட வேண்டும். நடிகையோ அந்த மகிழ்ச்சியைக் கூடுதலாக வெளிப்படுத்திக் கொண்டிருந்தார். அதாவது, என் மீது சாய்ந்து சாய்ந்து என்னை அணைத்தார்.

நான்காவது டேக்கிலும் நடிகை என்னை அணைப்பதைக் கைவிடாததைக் கண்ட சோமு எரிச்சலுடன் அவரிடம் 'இதோ பாரும்மா, நான் என்ன காண்டம் விளம்பரமா எடுத்துக்கொண்டிருக்கிறேன்? ஏன் இப்படி அவர் மேல் விழுந்து அள்ளுகிறாய்?' என்று கேட்டு விட்டான். நடிகைக்கு முகம் சுண்டிவிட்டது.

'உலகத் தரமான படங்களை எடுக்க நினைத்து நான் இப்போது பால் விளம்பரம், புண்ணாக்கு விளம்பரம் என்று எடுத்துக்கொண்டிருக்கிறேன். அதையும் இந்தப் பெண் ப்ளூ ஃபில்ம் ரேஞ்ஜுக்கு மாற்றிவிடுவாள் போலிருக்கிறது' என்று அன்றைய இரவு என்னோடு சேர்ந்து தண்ணியடித்துக் கொண்டிருந்தபோது வருத்தப்பட்டான் சோமு.

இப்போது அந்த நடிகை தமிழின் பிரபலமான ஹீரோயின்களில் ஒருவராக ஆன பிறகும் என்னுடன் தொடர்பு வைத்திருக்கிறார். மாதம் ஒரு முறையாவது தொலைபேசியில் பேசுவார்.

இதற்குக் காரணம் அவர் பழசை மறக்காதது என்று சொன்னால் அதை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன் - ஒரு இயக்குனரை வாடா, போடா என்று அழைக்கும் அளவுக்கு அவருடைய நெருங்கிய நண்பனாக இருக்கிறேன்; தயாரிப்பாளர் தாயன்பனோடு என்னைப் பல முறை பார்த்திருக்கிறார் நடிகை; தாயன்பனை நான் பெயர் சொல்லி அழைப்பதையும் பதிலுக்கு அவர் என்னை 'அண்ணே' என்று அழைப்பதையும் பார்க்கும்போது நடிகையின் கண்களில் மின்னி மறையும் வியப்பை ரசித்திருக்கிறேன். (ஆனால் நான் எல்லோரையுமே பெயர் சொல்லி அழைப்பதுதான் வழக்கம் என்பதையோ, எல்லோரையுமே 'அண்ணே' என்று அழைப்பதுதான் தாயன்பனின் வழக்கம் என்பதையோ அறியமாட்டார் நடிகை.) நடிகை என்னோடு பழைய நட்புடன் பழகுவதற்கு இதெல்லாம் காரணமாக இருக்கலாம். அல்லது, நான் மணியின் நண்பன் என்பதால்கூட இருக்கலாம். எப்படியிருந்தாலும் அந்த நடிகையின் மீது எனக்கு ஒரு தனிப்பட்ட பிரியம் உண்டு. என்னவென்று தெளிவாகச் சொல்லத் தெரியவில்லை. மற்ற நடிகைகளிடம் அவர்களின் ஒப்பனை முகப்பூச்சைப்

போலவே பல பாவனைகளும், வெளிப்பூச்சுகளும் இருந்தன.

ஒருமுறை நானும் மணியும் சோளா ஷெரட்டனின் எட்டாவது மாடியிலுள்ள சாகிரி ரெஸ்த்தொராந்தில் அமர்ந்து குடித்துக் கொண்டிருந்தோம். எங்கள் எதிர் டேபிளில் அப்போது பிரபலமாகிக்கொண்டிருந்த ஒரு ஹீரோயின் நடிகை தன் அம்மாவுடனும், பெரியம்மாவுடனும் அமர்ந்து தனது கறுப்பு நிற 2110 ரக 'நோக்கியா' கைத்தொலைபேசியில் பேசிக்கொண்டிருந்தார்.

1995 என்று நினைக்கிறேன். கைத்தொலைபேசி அறிமுகமான காலகட்டம். சென்னை நகரில் ஒரு நூறு பேரிடம்தான் கைத்தொலைபேசி இருந்தது. பேசும்போது ஆன்ட்டெனாவைத் தூக்கி விட்டுக்கொண்டு பேச வேண்டும். கைத்தொலைப்பேசியில் பேசிக்கொண்டிருந்தால் நாம் ஏதோ ட்ரான்ஸிஸ்டரில் கமெண்ட்ரி கேட்டுக்கொண்டிருக்கிறோம் என்று நினைத்து மக்கள் நம்மிடம் 'ஸ்கோர் என்ன?' என்று கேட்பார்கள். ஒரு நிமிடத்திற்கு அவுட்கோயிங் 16 ரூபாய் இன்கமிங் 8 ரூபாய் என்று இருந்த காலம்.

நடிகை கறுப்புநிற ஜீன்ஸ் பேண்ட்டும், மெஜந்தா நிற வெல்வெட் டாப்ஸும் அணிந்திருந்தார். கைத்தொலைபேசியை எடுத்துக்கொண்டு அங்குமிங்கும் உலாத்தியபடி பேசியதும், பேசும்போது அவர் வெளிப்படுத்திய அங்க சேஷ்டைகளும் வினோதமாக இருந்தன. அப்போது திடீரென்று அவர் பேசிக்கொண்டிருந்தபோதே அவருடைய கைத்தொலைப் பேசியில் மணி அடித்தது! மணியும் நானும் பெரிதாகச் சிரித்துவிட்டோம். நடிகைக்கு அவமானமாகப் போய்விட்டது. உடனேயே 'பேரரை' அழைத்து பணத்தை 'செட்டில்' பண்ணிவிட்டுக் கிளம்பிவிட்டார். அப்போது அந்த நடிகையின் ஒரு இரவுக்கான ரேட் 4 எல். பிறகு அது பத்து எல், பதினைந்து எல்லாக மாறியதெல்லாம் தமிழ் சமுதாயத்தின் பரிணாம வளர்ச்சியின் விளைவுகளில் ஒன்று!

ரொம்பக் காலத்திற்கு முன்பு நடந்த சம்பவம் இது: நான் அப்போது தில்லியில் இருந்தேன். விடுமுறையில் சென்னை வந்திருந்தேன். சோமு தன்னுடைய புதிய படத்திற்கு நடிகர்களைத் தேர்ந்தெடுத்துக் கொண்டிருந்தான். அப்போது ஒரு பெண்ணை மேக்கப் டெஸ்ட்டுக்குத் தயாராகச் சொன்னான். ஓரிரு நிமிடங்களில் கேமராவுக்கு முன்னால் வந்து நின்ற அந்தப் பெண்ணைப் பார்த்து அங்கிருந்த அத்தனை பேரும் பேச்சுமூச்சற்று ஸ்தம்பித்துப் போனார்கள். காரணம், அந்தப் பெண் கேமராவுக்கு முன்னால் ஒரு பொட்டுத் துணி இல்லாமல் வந்து நின்றாள்! முன்கோபக்காரனான சோமு 'நான் என்ன ப்ளூ ஃபில்மா எடுக்கிறேன் ஆ ஊ' என்று கத்த ஆரம்பித்துவிட்டான். அந்தப் பெண்ணுக்கோ அவன் சொல்வதில் ஒரு வார்த்தை கூடப் புரியவில்லை. மூன்றாம் வகுப்பு வரை மட்டுமே படித்த தெலுங்குப் பெண். புலிக் கூட்டத்தினிடையே மாட்டிக் கொண்ட மான் குட்டியைப்போல் பயத்துடன் திருதிருவென்று விழித்துக் கொண்டிருந்தாள். யூனிட்டிலிருந்த தெலுங்கு தெரிந்த ஒரு ஆள் வந்து சொன்ன பிறகுதான் அவளுக்கு விஷயம் புரிந்தது. பின்னாளில் அவள் தென்னிந்திய சினிமா உலகத்தையே தன் காலடியில் விழ வைத்ததும், சோமுவின் நெருங்கிய தோழியாக மாறியதும், அவளுக்காக என்னுடைய ஒரு நாவலையே சமர்ப்பணம் செய்ததும் வேறு கதை. அவளைப் பற்றி நினைக்கும்போது அவள் வீட்டிலிருந்த அதியற்புதமான 'பார்'தான் ஞாபகம்

வருகிறது. தெலுங்கைத் தவிர வேறு எந்த மொழியும் தெரியாதிருந்த அவள், பின்னாளில் ஹாலிவுட் நடிகைகளைப் போல் ஆங்கிலத்தில் பிய்த்து உதறினாள். ஆனால் தமிழ் மட்டும் வரவில்லை. தமிழை ஒரு மாதிரி கொஞ்சிக் கொஞ்சித் தான் பேசுவாள். இயல்பிலேயே மொழி வெறியர்களான தமிழர்கள் அவள் விஷயத்தில் மட்டும் அதை மன்னித்து அவளைத் தங்களது காம தேவதையாக ஏற்றுக்கொண்டாடினார்கள். என்ன நடந்ததோ தெரியவில்லை. அவள் தனது முப்பதாவது வயதில் தூக்கு மாட்டிக் கொண்டு செத்துப் போனாள்.

கல்யாணின் பாண்டிச்சேரி க்ளப்புக்கு அவ்வப்போது வந்து போகிறவர்களில் ஒருவர் க்யான் போரா. சினிமாத் துறையினருக்கு வட்டிக்குக் கடன் கொடுக்கும் தொழில் செய்பவர். ஆனால் சினிமாக்காரர்களோடு மட்டும் சேர்ந்து எக்காரணம் கொண்டு குடிக்க மாட்டார். 'குடித்தால், 'தண்ணி' வாங்கிக் கொடுத்துவிட்டு, நடிகைகளோடு 'தொடர்பு' ஏற்படுத்திக் கொடுத்துவிட்டு வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்க மாட்டான்கள். அதுவும் நடிகைகளுக்குக் கடன் கொடுத்தால் தொலைந்தோம். எந்த நிமிஷத்திலும் என்னைக் கையைப் பிடித்து இழுத்தான் என்று சொல்லிவிடுவாள்கள். அதனால் நடிகைகளை மட்டும் நான் நான்கைந்து பேரோடு சேர்ந்துதான் பார்ப்பது வழக்கம்' என்பார் போரா.

'நான்கைந்து பேரும் சேர்ந்து என்னைக் கற்பழித்து விட்டார்கள் என்று சொல்லிவிட்டால்?' என்று கேட்டேன்.

'இன்னும் அந்த அளவுக்குப் போகவில்லை' என்றார் போரா.

அவர் சொன்ன ஒரு சம்பவம் இது:

ஒரு நடிகைக்கு ஒரு சி கடன் கொடுத்திருக்கிறார். 'நடிகைக்கு ஏன் ஒரு சி?' என்று கேட்டேன். பொதுவாக நடிகைகளின் பழக்கம் என்னவென்றால் - அமெரிக்காவிலுள்ள ஏதாவதொரு என்னாரய்யைக் கல்யாணம் செய்துகொண்டு அங்கே போவார்கள். ஒரே வருடத்தில் அமெரிக்க வாழ்க்கை அலுத்துவிடும். விவாகரத்து செய்துவிட்டு இந்தியாவுக்கு ஓடி வந்துவிடுவார்கள். அல்லது, எவனாவது ஒரு உருப்படாத டைரக்டரைத் திருமணம் செய்துகொண்டு அவன் படம் எடுப்பதற்காகப் பணத்துக்கு நாயாய் அலைவார்கள். அல்லது, யாராவது சக நடிகன் ஒருவனைத் தீவிரமாகக் காதலிப்பார்கள். அவனோ செக்ஸை அனுபவித்துவிட்டு வேறு இடம் தாவி விடுவான். நடிகை தற்கொலை செய்துகொள்வாள். போராவிடம் ஒரு சி கடன் வாங்கியவர் தமிழில் இழுத்துப்போர்த்திக்கொண்டு நடிக்கும் ஹீரோயின் நடிகை. ஒரு உருப்படாத டைரக்டரை மணம் செய்து கொண்டார். அவருடைய படத்துக்காக போராவிடம் ஒரு சி கடன் வாங்கினார். பணத்தைத் திருப்பவில்லை. வட்டியும் கொடுக்கவில்லை. ஃபோனையும் எடுப்பதில்லை. போரா நடிகையின் வீடு தேடிச் சென்றிருக்கிறார். அப்போது நடிகையின் வீட்டு ஏர் கண்டிஷனரை சரி செய்துவிட்டு கூலிக்காக நின்று கொண்டிருந்த தொழிலாளியிடம் 'என்னப்பா... இதுக்குப் போயி கூலி கேக்குற? அதுதான் என்னெப் பார்த்துட்டேல்ல, அதுவும் நைட்டியோட... அவ்வளவுதான் போ' என்று சொல்லியிருக்கிறார் அந்த நடிகை.

***

ஒரு படத்துக்கு ஒரு சி சம்பளம் வாங்கும் நடிகர் ஒருவரை வைத்துப் படம் எடுத்துக்கொண்டிருந்தார் தாயன்பன். 50 எல்லை கறுப்பிலும், 50 எல்லை வெள்ளையாகவும் கொடுக்க வேண்டும் என்பது பேச்சு. படம் முடியும் தறுவாயில் இருக்கிறது. முழுச் சம்பளமும் கொடுத்தாகிவிட்டது. படத்தில் தன் மனைவியையே காஸ்ட்யூம் டிஸைனராகப் போட வேண்டும் என்பது நடிகரின் நிபந்தனை. அதையும் ஒப்புக்கொண்டாகிவிட்டது. (ஒரு காலத்தில் தமிழ் சினிமாவில் காஸ்ட்யூம் டிஸைன் செய்பவர்களெல்லாம் தெலுங்குக்காரர்களாகவே இருந்தார்கள். அதற்கு என்ன காரணம் என்று தெரியவில்லை. ஒருவேளை, கோடம்பாக்கத்தை நோக்கி நடந்த தெலுங்குப் படையெடுப்பின்போது இங்கேயே தங்கிவிட்டவர்களாக இருக்கலாம். அவர்களின் சம்பளம் சில ஆயிரங்களில் மட்டுமே இருந்தது. ஆனால், பின்னர் தொண்ணூறுகளில் நடந்த கோடம்பாக்கப் புரட்சியின்போது சினிமா நடிகர்களின் மனைவிமார்களே இந்தத் துறையைக் கைப்பற்றிக் கொண்டனர். அதனால், ஆயிரங்களில் இருந்த சம்பளம் ஒரேயடியாக எல்களாக மாறியது. மேலும் மும்பையிலிருந்து பறந்து வந்த ஃபேஷன் டிஸைனிங் கல்லூரி மாணவிகளும் இதில் சேர்ந்துகொண்டதால் கோடம்பாக்கத்தில் இத்துறையில் ஒரு ‘நிரந்தரப் புரட்சி’யே நடந்து கொண்டிருக்கிறது. ஹீரோயின்களின் உடைகளைவிட இந்தக் குட்டிகளின் உடையலங்காரம் கனஜோராக இருப்பது ஒரு விசேஷம். மார்பைக் கவ்விப் பிடித்திருக்கும் மிக மெலிதான பட்டை எப்போது அறுந்து விழுமோ என்று மனம் பதறும். பேண்டீஸின் ப்ராண்ட் பெயரைக் கூடத் தெளிவாகப் படித்துவிடலாம் என்ற அளவுக்கு டிரான்ஸ்பரண்ட் ஆடைகளை உடுத்திக்கொண்டு வலம் வருவார்கள் அந்தப் பெண்கள்.)

இவ்வளவுக்குப் பிறகும் நடிகர் கடைசிக் கட்டப் படப்பிடிப்புக்கு வரவில்லை. ஆளுக்கு மேல் ஆள் அனுப்பியும் பலனில்லை. தாயன்பன் ஃபோன் செய்தால் ‘இதோ கிளம்பிக்கொண்டே இருக்கிறேன்’ என்று சொல்கிறாரே தவிர வருகிற வழியாய் தெரியவில்லை. எல் எல்லாக வட்டி கட்டியும் இந்த நடிகர்கள் பண்ணும் அட்டகாசத்தினால் பட்ஜெட் இரண்டு மடங்காக எகிறியதில் இப்போது வட்டியே சீயைத் தொட்டுவிடும் போல் தெரிகிறது. எப்படியென்றால், பாதி படம் எடுக்கப்பட்ட நிலையில் ‘ஹீரோயினை மாற்று’ என்பார் ஹீரோ. மாற்றித்தான் ஆகவேண்டும். என்ன காரணம்? ‘சரியா ஊம்பியிருக்க மாட்டா, ஏண்ணே நீங்க வேறே?’ என்றார் தாயன்பன்.

கமல், ரஜினியைப் போட்டு எடுத்தபோதுகூட தாயன்பன் இவ்வளவு டென்ஷன் ஆனதில்லை. இந்த நடிகர் இப்படிப் படுத்தியெடுக்கிறார். நிம்மதியாகத் தூங்கியே ஆறு மாதம் ஆகிறது.

மதியம் ஆகிவிட்டது. நடிகரைக் காணோம். மொத்த யூனிட்டுமே நடிகருக்காகக் காத்திருக்கிறது. தாயன்பன் நினைத்துப் பார்த்தார். ஒரு காலத்தில் அவர் வைத்திருந்த கைத்தொலைபேசியை வாங்கிப் பார்த்து ஏதோ அதிசயப் பொருளைப் பார்ப்பதுபோல் பார்த்தவர் அந்த நடிகர். ரொம்பக் காலத்திற்கு முன்பெல்லாம் அல்ல. நான்கு வருடங்களுக்கு முன்புதான். அப்போது அவருடைய சம்பளம் ஐந்து எல். இப்போது ஒரு சி.

மதியத்துக்கு மேல் பொறுமையை இழந்துவிட்டார் தாயன்பன். தன் உதவியாளரை விட்டு ‘என்ன பிரச்னை?’ என்று கேட்கச் சொன்னார்.

ஒன்றுமில்லை. காஸ்ட்யூம் டிஸைனுக்காக நடிகரின் மனைவிக்குச் சேர வேண்டிய இரண்டு எல்லில் இன்னும் 20,000 ரூபாய் பாக்கியாம். அதைக் கொடுத்தால்தான் வருவேன் என்கிறார் நடிகர்.

நடிகருக்கு ஃபோன் போட்டார் தாயன்பன். தாயன்பனின் ஃபோனை எப்போதும் எடுத்துவிடுவார் நடிகர். மொத்த யூனிட்டுக்கும் எதிரில் தாயன்பன் நடிகரிடம் போனில் பேசியது இது:

‘டேய் ங்கொம்மாள ஓக்க... நீ இன்னும் அரை மணி நேரத்துல இங்கே இல்லேன்னா உன்னை மாறு கால் மாறு கை வாங்கிவிட்டு ஜெயிலுக்குப் போயிடுவேன்டா நாயே...’

இச்சம்பவத்தை என்னிடம் விஸ்தாரமாகச் சொன்ன தாயன்பன் ‘இந்தப் பயலுகள்ளாம் பொணத்து நெத்தியில இருக்கிற ஒருரூவா காசைக்கூட விட்டு வைக்க மாட்டானுவ அண்ணே...’

கோடம்பாக்கத்தில் இப்படிப்பட்ட ஆட்களே நிரம்பியிருப்பதால்தான் எனக்கு அந்த நடிகையைப் பிடித்துப்போயிற்று.

சார்லஸுக்கு ஏன் அந்த நடிகையைப் பிடித்தது என்று தெரியவில்லை. ‘நான் இன்று இரவு உன்னுடன் உறவு கொள்ள வேண்டும்’ என்றார்.

‘சரி, அதற்கென்ன இப்போது?’

‘நான் இன்று இரவு உன்னுடன் உறவு கொள்ள வேண்டும்.’

‘சரி, நான் ஒன்றும் மறுக்கவில்லையே?’

‘அப்படியா, ஓகே... ஆனால் நான் ‘காண்டம்’ பயன்படுத்தமாட்டேன். சரியா?’

வளர்ந்து வரும் ஒரு நடிகை இத்தகையதொரு நிபந்தனைக்கு எப்படி ஒத்துக்கொள்வாள்? உடல்தானே அவள் மூலதனம்? நடிகை கடுமையாக மறுத்துப் பேச, இருவருக்கும் நடந்த வாக்குவாதம் ஒரு கட்டத்தில் சார்லஸ் நடிகையின் கன்னத்தில் அறைவதாக முடிவுற்றது.

அழுகையினூடே நடிகை ‘என்னைச் சந்திக்க வேண்டும் என்று எத்தனை நாட்களாகக் கெஞ்சினீர்கள்? அதை மதித்துத்தானே இன்று வந்தேன்? அதற்குக் கொடுக்கும் மரியாதையா இது?’ என்றெல்லாம் புலம்பியிருக்கிறார்.

ஓட்டல் சிப்பந்திகள் நடிகையைச் சமாதானப்படுத்தி ஓட்டல் காரிலேயே அவரது வீட்டில் கொண்டுபோய்ச் சேர்த்திருக்கிறார்கள்.

அதன் பிறகு ஓட்டலிலேயே ஒரு ரூம் போட்டு காலை வரை குடித்துக்கொண்டிருந்திருக்கிறார் சார்லஸ்.

எனக்கு இந்தத் தகவல் காலை எட்டு மணிக்கு வந்து சேர்ந்தது. மணிக்கு ஆயிரம் காதுகள். கோட்டை, அரசியல் கட்சி அலுவலகம், முக்கியஸ்தர்கள் செல்லும் மருத்துவமனை, நட்சத்திர ஓட்டல் என்று எல்லா இடங்களிலும் அவனுக்கு ஒற்றர்கள் இருந்தனர்.

அந்த ஒற்றர் படையைச் சேர்ந்த ஒருவரே என்னிடம் அத்தகவலைக் கூறினார். மறுநாள் மணியின் பத்திரிகையில் ‘இங்கிலாந்து இளவரசர் பெயர் கொண்ட போலீஸ் அதிகாரிக்கும் ஒரு மலரின் பெயர் கொண்ட

நடிகைக்கும் நட்சத்திர ஓட்டலில் வாய்த் தகராறு' என்று கிசுகிசு எழுதி விட்டேன். தகராறுக்கான காரணத்தையும் குறிப்பிட்டிருந்தேன். ஆனால் அது தமிழ்க் கலாச்சாரத்துக்கு ஆகாது என்று தணிக்கைச் செய்துவிட்டான் மணி.

அன்றைய தினம் இரவு நானும் காத்தவராயன் என்ற சிறு பத்திரிக்கை எழுத்தாளனும் பீச்சுக்குச் சென்றோம். பொதுவாக நான் இலக்கிய சிறு பத்திரிகை அன்பர்களை பீச் கோஷ்டிக்கோ பாண்டிச்சேரி கல்யாண் கோஷ்டிக்கோ அறிமுகப்படுத்தி வைப்பதில்லை. அந்த இடங்களுக்கு அவர்களை அழைத்துச் செல்வதும் இல்லை. அதற்கு ஒரு காரணம் உண்டு:

ஆனந்தன் என்ற கதாபாத்திரத்தை ஏற்கெனவே சாரு நிவேதிதா உங்களுக்கு அறிமுகப்படுத்தியிருக்கிறான் அல்லவா? அந்த ஆனந்தன் பாண்டிச்சேரியில் வசிப்பதால் நான் அங்கே கல்யாணைப் பார்க்கச் செல்லும்போதெல்லாம் கல்யாணைத் தனக்கும் அறிமுகப்படுத்தி வைக்கும்படி என்னை நச்சரித்துக் கொண்டிருந்தான். கல்யாணிடம் சொன்னேன். 'பாவம் பெருமாள், அவரை அழைத்து வா' என்றான் கல்யாண்.

ஆனால் முதல் தடவையே பிரச்னையாகிவிட்டது. அளவு தெரியாமல் கன்னாபின்னாவென்று குடித்துவிட்டு மாஸ் ஓட்டலின் நந்தா ரெஸ்த்தொராந்தையே நாற அடித்து விட்டான் ஆனந்தன். நாங்கள் பல வருடங்களாகச் செல்லும் ஓட்டல் என்பதால் யாரும் கண்டுகொள்ளவில்லை.

ஆனாலும் இந்தச் சம்பவத்தால் மிரண்டுபோன நான் ஆனந்தனை அதற்கு மேல் அங்கே அழைத்துச் செல்வதை நிறுத்தினேன். கல்யாண்தான் 'வாழ்க்கையில் இதெல்லாம் சகஜம் பெருமாள்; அவரை அழைத்து வா' என்றான். அதற்குப் பிறகு ஆனந்தனை மீண்டும் அங்கே அழைத்துச் செல்ல ஆரம்பித்தேன்.

ஆனால் ஆனந்தனின் நடையுடை பாவனை தாங்கிக்கொள்ள முடியாததாக இருந்தது. ஒரு பெக் உள்ளே போனதும் தன்னை ஃபூக்கோவின் வாரிசாகக் கற்பித்துக்கொண்டு, தான் அமர்ந்திருக்கும் நாற்காலியின் மேல் ஏறி நின்று பேச ஆரம்பித்துவிடுவான் அவன். திடீரென்று ஒரு நாள் டாக்டர் வைத்தியைப் பார்த்து 'உங்களுக்கு உளவியல் பற்றி என்ன தெரியும்? நீங்கள் ஒரு முட்டாள்' என்று கத்தினான். (டாக்டர் வைத்தி ஸோர்போன் பல்கலைக்கழகத்தில் உளவியல் டாக்டர் பட்டம் பெற்றவர்.) பிறகு ஒரு நாள் போராவைப் பார்த்து 'டேய் சேட்... உன்னையெல்லாம் தமிழ்நாட்டை விட்டுத் துரத்தியடிக்க வேண்டும்' என்றான். அன்றிலிருந்து நான் ஆனந்தனை க்ளப்புக்கு அழைத்துச் செல்வதை நிறுத்தினேன்.

அதற்குப் பிறகு ஒரு சம்பவம் நடந்தது. ஒரு நாள் பாரதி பூங்காவில் வைத்து என் காலில் விழுந்தான் ஆனந்தன். ஆச்சரியமும் வருத்தமும் பொங்க அவனைப் பார்த்தேன். கண்களில் கண்ணீர் மல்க 'என் இரண்டு வயது மகளுக்குப் பால் வாங்கக்கூட காசில்லை. மணியிடம் சொல்லி அவர் பத்திரிகையில் ஒரு வேலை வாங்கிக் கொடுங்கள்' என்றான்.

அந்த நிமிடம் வரை நான் மணியிடம் இம்மாதிரி உதவி எதற்கும் சென்றதில்லை. அவனுக்கு உடனே ஃபோன் செய்து 'என் நண்பனுக்கு

உடனடியாக ஒரு வேலை வேண்டும்' என்றேன். என் குரலின் தொனியைப் பார்த்தோ என்னவோ ஆனந்தனை உடனே வேலையில் சேர்த்துக்கொண்டான் மணி. ஆனால் சிறு பத்திரிகைக்காரன் என்பதால் சற்று உஷாராகவே இருந்தான். அதாவது, ஆஃபீஸுக்கெல்லாம் வர வேண்டாம்; தமிழ்நாட்டிலுள்ள கோவில்களுக்குச் சென்று அவற்றின் ஸ்தல புராணங்களை வாரம் ஒரு கட்டுரையாக எழுதி என்னிடம் தந்துவிட வேண்டும். நான் அதை மணியிடம் சேர்க்க வேண்டும். சம்பளம்: மாதம் 5000 ரூபாய். ஊர்களுக்குச் சென்று வர செலவுக்கு மாதம் 5000 ரூபாய்.

ஃபோன் பேசி முடித்து ஒரு மணி நேரத்தில் ஆனந்தனின் மனைவியிடம் மணி கொடுக்கச் சொன்னதாக ஒருவர் 5000 ரூபாயைக் கொண்டுவந்து கொடுத்துவிட்டுப் போயிருக்கிறார்.

ஆனந்தனுக்கு அளவற்ற சந்தோஷம். ஆனால் எனக்கு வருத்தம்தான் - தன்னை ஃபூக்கோவின் வாரிசாக நினைத்துக்கொண்டிருக்கும் ஒருவன் இப்படி கோவில் ஸ்தல புராணம் எழுதும்படி ஆகிவிட்டதே என்று. கூடவே ஒரு ஆறுதல் என்னவென்றால், சினிமா கிசுகிசு எழுதும் என்னைவிட இவன் நிலை தேவலாம் என்பது. என்ன இருந்தாலும் காமத்துப் பாலைவிட அறத்துப் பால் ஒஸ்தி இல்லையா, என்ன சொல்கிறீர்கள்?

இதற்கிடையில் நான் அவனைப் பாண்டிச்சேரி க்ளப்புக்கு அழைத்துச் செல்லாமலேயே இருந்தேன். அதனால் அவன் 'கல்யாணைப் பார்க்க வேண்டும்' என்று பழையபடி என்னைத் துளைக்க ஆரம்பித்தான். இந்த நிலையில் ஆனந்தனை ஒரு நாள் வேலையைவிட்டு நீக்கினான் மணி. ஏனென்று கேட்டபோது, சம்பளப் பணம் கொண்டு வந்து கொடுக்கும் மணியின் உதவியாளர்களிடம் என்னைப் பற்றி தவறாகச் சொல்லியிருக்கிறான்: அதாவது, நான் அவனை கல்யாணிடமிருந்தும் மணியிடமிருந்தும் திட்டமிட்டுப் பிரிக்கப் பார்க்கிறேன்; அதனாலேயே அவனை பாண்டிச்சேரி க்ளப்புக்கு அழைத்துச் செல்வதில்லை; மணிக்கும் நேரடியாக அறிமுகம் செய்து வைக்கவில்லை. காரணம், அவனை அறிமுகம் செய்து வைத்தால் அவனுக்கும் மணிக்கும் நெருக்கம் ஏற்பட்டு என்னுடைய இடம் காலியாகிவிடும் என்று நான் அஞ்சுகிறேன்; ஏற்கெனவே ஆனந்தனுக்கும் கல்யாணுக்கும் நெருக்கம் அதிகமாகிவிட்டதை மோப்பம் பிடித்துவிட்டதால்தான் அவனை பாண்டிச்சேரி க்ளப்புக்கு அழைத்துச் செல்லாமல் தவிர்த்து வருகிறேன்...

இந்தச் சம்பவத்தைத் தொடர்ந்துதான் ஆனந்தன் முதலாம் உத்தமத் தமிழ் எழுத்தாளனின் புதல்வன் பரந்தாமன் நடத்தி வந்த சிறு பத்திரிகையில் 'சூன்ய வெளியில்...' நாவலை தானே எழுதிக் கொடுத்ததாக எழுதியது. முதலாம் உத்தமத் தமிழ் எழுத்தாளனை நான் பல வருடங்களாகத் தாக்கி எழுதி வருவதால் என்னைத் தனது ஜென்ம விரோதியாக பாவிக்கும் பரந்தாமனும் அக்கட்டுரையை மகிழ்வுடனே பிரசுரித்து என்னைப் பழி தீர்த்துக்கொண்டான். வழக்கம்போலவே அதற்கு நான் பதில் எதுவும் எழுதாமல் மௌனம் சாதித்துவிட்டதற்குக் காரணம் நான் முன்பு எப்போதோ படித்திருந்த ஒரு ஜாதகக் கதைதான்:

ஒரு குளத்தில் இரண்டு வாத்துக்களும் ஒரு ஆமையும் வாழ்ந்து வந்தன. ஒரு சமயம் குளத்தில் நீர் வற்றியபோது வாத்துகள் இரண்டும் குளத்தை விட்டு வேறிடம் செல்லத் திட்ட மிட்டன. அப்போது ஆமை அந்த

வாத்துகளிடம் 'நான் நீரில் மட்டுமே வாழ முடியும்; ஆனால் நீங்கள் அப்படியில்லை. நிலத்திலும் வாழலாம்; நீரிலும் வாழலாம். எனவே என்னை எங்காவது நீருள்ள இடத்துக்கு அழைத்துச் செல்லுங்கள்' என்றது. அதற்குச் சம்மதித்த வாத்துகள் ஒரு கம்பை எடுத்து அதன் இரண்டு முனைகளையும் தங்கள் வாயினால் பற்றிக் கொண்டு, ஆமையை அதன் நடுப்பகுதியைக் கவ்விக் கொள்ளும்படியும் இடையில் வாயைத் திறந்து எதுவும் பேச வேண்டாம் என்றும் கூறின. ஆமையும், அந்தப்படியே கம்பைத் தன் வாயினால் பற்றிக் கொள்ள, வாத்துகள் இரண்டும் கம்பின் முனைகளைக் கவ்விக் கொண்டு ஆகாயத்தில் பறந்தன. இந்தக் காட்சியைப் பார்த்த மக்கள் சிலர் ஆமையைப் பரிகாசம் செய்ய, அவர்களைத் திட்டுவதற்காக வாயைத் திறந்த ஆமை அப்படியே கீழே விழுந்து இறந்தது.

***

ஆனந்தனுடன் எனக்குத் தொடர்பு விட்டுப்போய் பல ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு நாள் கல்யாணின் அலுவலகத்துக்குச் சென்றிருக்கிறான் அவன். புதுவை அரசு ஆண்டுதோறும் அந்த ஊரிலுள்ள ஒரு எழுத்தாளருக்கு 5000 ரூபாய் மதிப்புள்ள ஒரு பரிசை அறிவிக்கும். (புதுச்சேரியிலுள்ள சொல்தாக்களுக்கு ஃப்ரெஞ்ச் அரசாங்கம் மாதந்தோறும் வழங்கிவரும் சோமாஸ் பணமே மாதம் 35,000 ரூபாய் என்பதை இங்கே ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும்.)

எழுத்தாளர்களுக்கான அந்தப் பரிசை ஆண்டுதோறும் கல்லூரித் தமிழாசிரியர்களே வாங்கி வருவது வழக்கம். ஆனால் அந்த ஆண்டு என்ன ஆனதோ தெரியவில்லை, அந்தப் பரிசை ஆனந்தனுக்கு வழங்குவதாக முடிவு செய்தது புதுவை அரசு. இதையறிந்து வயிறெரிந்த தமிழாசிரியர் கூட்டம் ஆனந்தனின் புத்தகங்களைப் படித்துப் பார்த்து ஆதில் ஆபாச வார்த்தைகள் கலந்திருப்பதைக் கண்டு ஆஹாகாரம் செய்து அரசாங்கத்திடம் பேசி அந்தப் பரிசை ரத்து செய்துவிட்டது. கைக்கு வந்தது வாய்க்குக் கிடைக்கவில்லையே என விசனப்பட்ட ஆனந்தனுக்கு அப்போது ஒரு யோசனை உதித்தது: கல்யாண் நினைத்தால் இழந்த பரிசை மீட்கலாம். ஆனால் கல்யாணின் அலுவலகத்தில் அவ்வளவு எளிதில் அந்நியர் யாரும் நுழைந்து விட முடியாது. பிரம்மாண்டமான அந்த கேட்டின் முன்னே நின்று யோசித்திருக்கிறான் ஆனந்தன். யாரென்று கேட்க கேட் கீப்பரிடம் 'கண்ணாயிரம் பெருமாளின் நண்பன்' என்று கூறி உள்ளே நுழைந்து, கல்யாணைப் பார்த்து 'என்னைத் தங்களுக்கு ஞாபகம் உள்ளதா?' என்று கூறி பிரச்னையைச் சொல்லி தீர்த்து வைக்குமாறு கெஞ்சியிருக்கிறான். கல்யாணின் தலையீட்டால் கைவிட்டுப் போன பரிசு மீண்டும் கிடைத்திருக்கிறது. அந்தப் பரிசு கிடைத்த தைரியமோ என்னவோ, விரைவில் தான் நோபல் பரிசு பெறப் போவதாக ஒரு பத்திரிகையில் எழுதியிருந்தான் ஆனந்தன்!

இந்த அனுபவத்திலிருந்துதான் நான் சிறு பத்திரிகை அன்பர்களை மேற்படி இடங்களுக்கு அழைத்துச் செல்வதை நிறுத்தினேன். ஆனால் காத்தவராயன் முதலாம் உத்தமத் தமிழ் எழுத்தாளனின் பத்திரிகையில் வேலை செய்தாலும் வெகுளியானவன்; கல்மிஷம் இல்லாதவன்.

அன்றைய இரவு அந்த இடத்தைப் பார்த்து மிரண்டுபோனான் காத்தவராயன். அப்போதுதான் மெஹபூபுக்கு சார்லஸிடமிருந்து ஃபோனுக்கு மேல் ஃபோன் வந்துகொண்டிருந்தது. அந்த நேரத்தில் பேசினால்தான் மெஹபூப் மணியுடன் இருப்பார் என்பது சார்லஸின் திட்டம். எப்படியாவது மெஹபூப் மணியிடம் பேசி அச்செய்திக்கு ஒரு மறுப்பு போட வேண்டும் என்பது சார்லஸின் வேண்டுகோள்.

(காத்தவராயனுக்கு எல்லாம் கனவுலகில் நடப்பது போலிருந்தது: என்ன இது, தமிழ்நாடே அஞ்சும் ஐ.ஜி. சார்லஸ் இங்கேயுள்ள ஒரு மனிதரிடம் இப்படி கெஞ்சிக் கொண்டிருக்கிறார்! இங்கே என்ன நடந்துகொண்டிருக்கிறது? யார் இவர்கள்?)

அப்போது பார்த்து நடிகையிடமிருந்து எனக்கு ஃபோன். நண்பராக இருந்தும் தன்னைப் பற்றி அவதூறாக என் நண்பரின் பத்திரிகையிலேயே வந்திருப்பதை நான் தடுக்கவில்லை, வெளியிலேயே தலைகாட்ட முடியாமல் போய்விட்டது, இத்யாதி, இத்யாதி.

நல்லவேளை, அதை எழுதியது நான்தான் என்று புகார் கூறவில்லை நடிகை.

மணியின் நண்பனாக இருந்ததால்தான், நிருபர் 'மல்லிகை' நடிகை என்று எழுதியிருந்ததை வெறும் 'மலர்' நடிகை என்று என்னால் மாற்ற முடிந்தது; மேலும் தகராறு என்றுதான் வந்திருந்ததே ஒழிய தகராறுக்கான காரணத்தை 'எடிட்' செய்தது நான்தான்... இப்படியெல்லாம் கூறிச் சமாளித்தேன். ஆனாலும் நடிகைக்குச் சமாதானமாகவில்லை. 'நண்பராக இருந்தும் இப்படிச் செய்துவிட்டீர்களே?' என்பதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டிருந்தார்.

காத்தவராயன் வாயையே மூடாமல் என் பேச்சைக் கவனித்துக்கொண்டிருந்தான்.

நான் நடிகையிடம் கூறினேன்: அவர் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது அவருடைய காதலனாக இருந்தவன் இப்போது அவருடைய வாழ்க்கை வரலாற்றையே எனக்கு தினமும் மின்னஞ்சல்களாக அனுப்பிக்கொண்டிருக்கிறான். நான் அதையெல்லாம் படிப்பது கூட இல்லை. அப்படி அப்படியே 'டெலீட்' செய்துவிடுகிறேன். நேற்றுகூட எழுதியிருந்தான், என்னுடன் பழகவில்லையென்று அந்த நடிகையால் இயேசுவின் மீது சத்தியம் செய்து கூற முடியுமா என்று. சொல்லுங்கள், இது பற்றி உங்களிடம் ஒரு வார்த்தை பேசியிருப்பேனா?

'சரி, நான் நாளை சுவிட்ஸர்லாந்து செல்கிறேன், வருவதற்கு ஒரு வாரம் ஆகும். வந்த பிறகு உங்களைச் சந்திக்க வேண்டும்.'

'ஓ, சந்திக்கலாமே, எங்கே சோளா ஷெரட்டனில்தானே?'

'சே, யு ஆர் நாட்டி...'

என்று சொல்லி ஃபோனை வைக்கப் போனவர் திடீரென்று ஞாபகம் வந்தவராய் 'உங்கள் மணியையும் ஒரு நாள் பார்க்க வேண்டும் பெருமாள்' என்றார். 'ஓ, பார்க்கலாமே' என்று சொல்லிவிட்டு 'என்ன இது, நம் தொழிலையே மாற்றப் பார்க்கிறார் என்று நினைத்தேன். அப்போது முதுகில் யாரோ விரலைத் துப்பாக்கியாக மாற்றி அழுத்துவது

போலிருந்தது. மெஹபூப்தான். வேறு யாருக்கு விரல்கூட துப்பாக்கியாக மாறும்?

‘பையா, பார்த்தீர்களா? உங்கள் ஃப்ரெண்ட் என்பதால் மல்லிகை என்று எழுதாமல் மலர் என்று எழுதிவிட்டீர்கள். ஆனால், என் ஃப்ரெண்டை மட்டும் இங்கிலாந்து இளவரசர் என்று பட்டவர்த்தனமாக எழுதியிருக்கிறீர்கள். இதற்குப் பேசாமல் சார்லஸ் என்றே எழுதியிருக்கலாம். ஏன், இங்கிலாந்து அரசர் என்றாவது எழுதியிருக்கலாம் அல்லவா? இப்போது பாருங்கள், ஏதாவது மாற்றம் போடச் சொல்லி என் உயிரை எடுக்கிறார்...’ என்றார் மெஹபூப்.

‘தொழில் வேறு, நட்பு வேறு பையா’ என்று அவருடைய வசனத்தையே எடுத்து விட்டுத் தப்பினேன். பிறகு மணியிடம் சென்று நிலைமையை விளக்கினார்.

ஏதாவது திருத்தம் எழுதினால் அது சார்லஸ்தான் என்று நிரூபித்ததுபோல் ஆகிவிடும். இம்மாதிரி விஷயங்களை ரொம்பவும் தோண்டித் துருவாமல் அப்படியே விட்டு விடுவதுதான் பாதிக்கப்பட்டவர்களுக்கு நல்லது... என்பதைப் பல உதாரணங்களுடன் விளக்கினான் மணி.

‘இதையெல்லாம் நானே சார்லஸிடம் சொல்லிவிட்டேன். அவர் கேட்க மாட்டேன் என்கிறார். ஏதாவது செய்யுங்கள் பையா...’

பிறகு, யோசித்து ‘அந்தப் போலீஸ் அதிகாரி தமிழ்நாட்டைச் சேர்ந்தவர் அல்ல’ என்று திருத்தம் எழுதினேன். பீச்சிலிருந்து திரும்பும்போது ‘இதெல்லாம் கனவா, நனவா என்றே தெரியவில்லை’ என்று அரற்றியபடியே வந்துகொண்டிருந்தான் காத்தவராயன். ‘அடிக்கடி என்னை அங்கே அழைத்துச் செல், பெருமாள்’ என்றும் சொன்னான்.

மறுநாள் இரவு பீச்சுக்குச் சென்றபோது பதற்றத்துடன் என்னை அணுகினார் மெஹபூப்.

‘பெரிய பிரச்னையாகிவிட்டது பையா... ‘தமிழ்நாட்டைச் சேர்ந்தவர் அல்ல’ என்று எழுதியதால் அது சார்லஸ்தான் என்று தெளிவாகத் தெரிந்துவிட்டதாம். ஏனென்றால், சார்லஸ் கேரளாவைச் சேர்ந்தவர். ‘நேற்றாவது 50 ஃபோன்தான் வந்தது. இன்று 100 பேர் ஃபோன் பண்ணி விசாரிக்கிறார்கள்’ என்று அழுகிறார்.’

## 47. வீடு, மழை, மரணம்...

விஞ்ஞானிகள் இரண்டு மிகப் பெரிய சூரியக் குடும்பங்களைக் கண்டுபிடித்திருக்கின்றனர். அவற்றில் கிரகங்களை உருவாக்கும் தூசுகளான பிரம்மாண்டமான வளையங்கள் சூழ்ந்த நட்சத்திரங்கள் காணப்படுகின்றன. இந்தத் தூசுத் தகடுகள்தான் எதிர்காலத்தில் கிரகங்களாக உருவாகலாம் அல்லது உருவாகிக்கொண்டிருக்கலாம் என்று நம்பப்படுகிறது. நமது சூரியனைச் சுற்றியிருக்கும் வளையத்தின் பெயர் Kuiper Belt. தூசு மண்டலம், வால்மீன்கள் மற்றும் இன்ன பிற பொருட்களால் ஆனவை இந்தத் தகடு.

மேற்கூறிய கண்டுபிடிப்பு விண்வெளி ஆராய்ச்சியில் மிக முக்கியமானதாகக் கருதப்படுகிறது. ஏனென்றால் இதுவரை

இவ்வளவு பெரிய நட்சத்திரங்கள், கிரகங்கள் உருவாவதற்குரிய சாதகமான தன்மைகளைக் கொண்டிருக்காது என்றே நம்பப்பட்டு வந்தது.

இந்தப் புதிய நட்சத்திரங்கள் சூரியனைவிட 30இலிருந்து 70 மடங்கு அதிக அளவுள்ளதாக இருக்கின்றன. இந்த நட்சத்திரங்களின் அளவு கடந்த உருவத்தின் காரணமாக, இவற்றைச் சுற்றியுள்ள தகடுகளும் குய்ப்பர் பெல்ட்டைவிட பல மடங்கு பெரிதாக உள்ளன.

நட்சத்திரங்களைச் சுற்றியுள்ள தட்டையான தகடுகளில்தான் கிரகங்கள் உருவாவதற்கான ரகசியங்கள் பொதிந்திருக்கின்றன என்று கருதுகின்றனர் விண்வெளி ஆய்வாளர்கள்.

R66 மற்றும் R126 என்று அழைக்கப்படும் இந்த இரண்டு நட்சத்திரங்களும் நமது பால்வீதிக்கு அடுத்ததாக உள்ள Large Megallanic Cloudஇலிருந்து ஒரு லட்சத்து எழுபதாயிரம் ஒளி ஆண்டுகளுக்கு அப்பால் உள்ளன. இந்த நட்சத்திரங்கள் சூரியனைவிட நூறு மடங்கு அகலம் கொண்டவை.

-10.2.2006 தேதியிட்ட ‘இந்து’ நாளிதழில்

வாழ்க்கையில் முதல்முதலாக தினசரிகளில் வரும் Property Plus பகுதியைப் பார்க்க ஆரம்பித்தேன்.

வாடகை வீட்டில் இருந்து வீட்டுச் சொந்தக்காரர்களுடன் மல்லுக்கு நின்றதிலேயே வாழ்வின் பெரும்பகுதி வீணாகிவிட்டது.

அட்வான்ஸ் தொகை 25,000 ரூபாய் வாங்கிக்கொண்டு வீட்டைக் காலி பண்ணும்போது திருப்பித் தர மாட்டான்கள். ‘புதிதாய் குடித்தனம் வரும்போதுதான் தர முடியும்’ என்றான் ஒரு வீட்டின் சொந்தக்காரன்.

‘என்னது, புதிய குடித்தனமா? ரிப்பேர் பண்ணப்போவதாகச் சொல்லித்தானே எங்களைக் காலி பண்ணச் செய்தீர்கள்?’

‘ரிப்பேர் பண்ணும் அளவுக்கு தற்சமயம் பணமில்லை. அதனால் புதியதாகக் குடி வைத்து அவர்களிடமிருந்து அட்வான்ஸ் வந்ததும் உங்களுக்குக் கொடுத்துவிடுகிறேன்.’

ஆனால் அவன் சொன்ன வாடகை என்னிடமிருந்து வசூலித்ததைவிட இரண்டு மடங்கு என்பதால் யாரும் குடியிருக்க வரவில்லை. அட்வான்ஸையும் திருப்பிய பாடில்லை. நாட்கள் ஆக ஆக வார்த்தைகள் தடித்தன.

மூன்று மாதம் ஆயிற்று. கேட்டதற்கு ‘திடீர்னு கேட்டா எங்க சார் போறது?’ என்றான் படு சாவகாசமாக.

‘உன் மகளைக் கூட்டிக்கொடு... கிடைக்கும்.’

இந்த திடீர்த் தாக்குதலை அவன் எதிர்பார்க்கவில்லை.

‘டேய்... என்னடா சொன்னே?’

ஒரு வருடம் இனிக்க இனிக்கப் பேசிய இருவரும் தெருச் சாக்கடையில் கட்டிப் புரண்டோம்.

பிறகு எப்படியோ ஒருவாறாக அட்வான்ஸ் தொகை - 3000 கழிவு போக - திரும்பி வந்தது.

மூவாயிரம் போன இடம்? ஃபியூஸ் போன பல்பு, கதவின் தாழ்ப்பாளில் காணாமல் போன ஆணி, பாத்ரூமில் துணி போடுவதற்காக மாட்டப்பட்டிருந்த கம்பி உடைந்துபோனது போன்ற செலவுகளுக்காக அந்தத் தொகை கழித்துக் கொள்ளப்பட்டது.

இன்னொரு வீட்டு உரிமையாளன். அவனும் அவன் மனைவியும் அரசில் உயர் பதவியில் இருப்பவர்கள். எந்தத் தொந்தரவும் இல்லை. வாடகையை வசூலிக்கக்கூட வர மாட்டான். நாமே காசோலையாக தபாலில் அனுப்பிவிடலாம்.

இப்படியே இனிதாய் சென்றுகொண்டிருந்த எங்கள் உறவு பதினோராவது மாதத்தில் ‘பிரேக்’ அடித்தது. ஒரு நாள் இரவு எட்டு மணி அளவில் அவனுடைய கார் எங்கள் வீட்டு வாசலில் வந்து நின்றது.

உள்ளே நுழைந்தவன் வாடகையில் ஆயிரம் ரூபாய் உயர்த்தப்போவதாக சொன்னான். அதுவரை நான் கொடுத்து வந்த வாடகை 2500 ரூ. ‘கவலைப்படாதீர்கள். DAவேறு ஏற்றியிருக்கிறார்கள். ஒன்றும் சிரமம் இருக்காது. இப்போதே முடிவு சொல்ல வேண்டாம். ரெண்டு நாட்கள் யோசியுங்கள்’ என்று ஏதோ மனோவசியம் செய்பவனைப் போல் சொன்னான்.

அந்த வீட்டிலேயே இருப்பதா, வீடு மாற்றுவதா என்பதிலுள்ள சாதக பாதகங்களைத் தீர ஆராய்ந்த நானும் மீராவும் அந்த வாடகை உயர்வை ஏற்றுக்கொள்வதென்று முடிவு செய்தோம்.

ஆனால் பதினோரு மாதம் கழித்து மீண்டும் அந்த வீட்டுச் சொந்தக்காரனின் கார் எங்கள் வீட்டுக்குள் வந்து நுழைந்தது.

‘வெளியே போடா நாயே’ என்று கத்தினேன். மீராவின் புண்ணியத்தில் கைகலப்பு தவிர்க்கப்பட்டது. ஆனால் அவன் அடிபட்ட வேங்கையைப் போல் ஆனான்.

‘அட்வான்ஸைத் திருப்பித்தர முடியாது. ஆனதைப் பார்த்துக் கொள்’ என்றான்.

மறுநாள் அவன் வீட்டுக்குச் சென்ற மீரா அட்வான்ஸ் தொகையோடு வந்து சேர்ந்தாள்! (ஸ்க்ரூ, நட்டு, போல்ட்டுகளுக்கான கழிவு ஆயிரம் ரூபாய் போகத்தான்).

‘என்ன மேஜிக் செய்தாய்?’

‘மன்னிப்பு கேட்டுக்கொண்டேன்.’

‘அந்த நாயிடம் நீ ஏன் மன்னிப்பு கேட்க வேண்டும்?’

‘பிறகு? அவனை அடித்துவிட்டு நீங்கள் ஜெயிலுக்குப் போய்விட்டால் நானும் கார்த்திக்கும் அல்லவா நடுத்தெருவில் நிற்க வேண்டும்?’

அடுத்த வீட்டின் உரிமையாளர் நல்லவர். எண்பது வயது. ஆசிரியராக இருந்து ஓய்வு பெற்றவர். ஆனால் அந்த வீட்டுக்குக் குடிவந்ததும்தான் அதிலுள்ள பிரச்னை தெரிய வந்தது. வீட்டில் தண்ணீர் இல்லை. கக்கூஸ்

போவதற்குக்கூட தண்ணீர் இல்லை. பாத்ரூமில் தண்ணீர் இல்லை. எல்லாவற்றுக்கும் தண்ணீர் லாரியிலிருந்தா தண்ணீர் எடுக்க முடியும்? தெரிந்தே ஏமாற்றியிருக்கிறான் வீட்டுக்காரன்.

'பெரியவர்ங்க.'

ஃபோன் செய்து சொன்னபோது 'சென்னையில் எங்கேதான் தண்ணீர்ப் பிரச்னை இல்லை, சொல்லுங்கள்?' என்றான்.

'அட, அது இல்லீங்க... கக்கூஸ்லயே தண்ணி இல்லெ.'

ஏதோ ஜோக்கைக் கேட்டது போல் சிரித்துவிட்டு 'ஹஹா... எங்க வீட்டிலும் அதே நிலைமைதான்' என்றான்.

எங்கள் ஃப்ளாட் இருப்பதோ முதல் மாடியில். கீழேயிருந்து தான் தூக்கிக்கொண்டு ஏற வேண்டும். மீராவுக்கு வயிற்றில் பிரச்னை. சுமை தூக்கக்கூடாது என்பது மருத்துவர் உத்தரவு. ஆனால் அதையெல்லாம் பார்த்தால் வாழ முடியாது.

தண்ணீர் தூக்கி வரும்போது படிக்கட்டில் சிதறியிருந்த தண்ணீரில் பக்கத்து ஃப்ளாட்டில் இருந்தவர் வழுக்கி விழுந்து காலில் எலும்பு முறிவு. எழுந்து நடக்க மூன்று மாதம் ஆயிற்று. இன்னமும் விந்தி விந்தித்தான் நடக்கிறார். நமக்கும் காலோ கையோ முறிவதற்குள் வீட்டைக் காலி செய்துவிட வேண்டும் என்று முடிவு செய்தோம்.

பதினோரு மாதம் பல்லைக் கடித்துக்கொண்டு நாட்களை எண்ணினோம். ஆனால் வழக்கம்போல் கிளம்பியது அட்வான்ஸ் பூதம்.

'கொலை... கொலை செய்துவிடுவேன் அந்த கிழவனை... இந்தமுறை உன் பேச்சைக் கேட்பதாக இல்லை' என்று கத்தினேன்.

என்னவோ எங்கள் அதிர்ஷ்டம்... முதலில் வம்பு செய்ய ஆரம்பித்த அந்த ரிட்டையர்டு பள்ளி ஆசிரியன், பிறகு தானாகவே அட்வான்ஸைக் கொண்டு வந்து கொடுத்தான்.

சொந்தமாக ஒரு வீடு வாங்கிவிடலாம் என்று முடிவு செய்தோம்.

வீடு வாங்குவது எவ்வளவு சுலபம் என்று செய்தித்தாள்களில் விளம்பரங்கள் தூள் பரத்தின. வீட்டுக் கடன் மேளா. ஐந்தே நிமிடத்தில் வீட்டுக் கடன் ரெடி. ஒரே நாளில் சொந்த வீடு. மாதாமாதம் மிக எளிய தவணை...

போட்டி போட்டுக்கொண்டு வீடு வாங்கிக் கொடுத்தன வங்கிகள்.

போய் விசாரித்தேன். 'சம்பளச் சான்றிதழ் வேண்டும்' என்றார்கள். அலுவலகத்திலிருந்து வாங்கிக்கொண்டு போய் கொடுத்தேன்.

'இப்படி இல்லை சார்... நீங்கள் வாங்கும் சம்பளம் பத்தாயிரம். ஆனால் நாலாயிரம் பிடித்தம் போய்விடுகிறதே. பிடித்தம் இல்லாமல் சான்றிதழ் கொண்டு வாருங்கள்' என்றார்கள்.

பிடித்தம் இல்லாத சான்றிதழ் கிடைக்காது.

ஏற்கெனவே, பிடித்தம் இல்லாத பொய்ச் சான்றிதழைக் கொடுத்து நான்கு பேர் எங்கள் அலுவலகத்தில் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்பட்டு சஸ்பென்ஷனில் இருக்கிறார்கள்.

‘வீடு வாங்க நினைத்து வேலையைப் போக்கிக்கொள்வதா?’ என்று மேனேஜரிடம் புலம்பிக்கொண்டிருந்தேன். அன்று இரவு எங்கள் அலுவலகத் தலைமை அதிகாரி என் வீட்டுக்கு ஃபோன் செய்தார்.

‘பெஸ்ட் ஆஃப் லக்... நீங்கள் வீடு வாங்கப்போவதாக மேனேஜர் சொன்னார். சம்பளச் சான்றிதழ் பற்றிக் கவலைப்படாதீர்கள். பிடித்தம் இல்லாமல் நான் கொடுக்கிறேன்...’

‘என்ன மீரா இது? கொடுக்கிற தெய்வம் இப்படி கூரையைப் பிய்த்துக்கொண்டு கொடுக்கிறது’ என்றேன். மீரா பொறுமையின் அவசியத்தைப் பற்றியும், உயர் அதிகாரிகளிடம் எப்போதும் அவர்களின் மனம் கோணாமல் நடந்து கொண்டால் கிடைக்கும் அரிய பயன்களைப் பற்றியும் எனக்கு உபதேசிக்க ஆரம்பித்தாள்...

ஆனால் சொந்த வீடு வாங்கியும் வங்கிக் கடனுக்கு மாதம் 10,000 ரூபாய் கட்ட வேண்டியிருந்தது ஒரு தனிக் கழுத்தறுப்புதான் என்றாலும் வீட்டுக்கார ஓனர்களின் அராஜகத்திலிருந்து விடுதலை!

***

100 சீயில் வீட்டுக்கென்று எத்தனை சீயை ஒதுக்குவது என்று குழப்பமாக இருந்தது. சென்னையின் ஆகச் சிறந்த இடம் போட் க்ளப். அரசியல்வாதிகள்கூட நெருங்க முடியாத பகுதி. ஆனால் அந்த இடத்திலேயே எப்படியோ அந்தத் தொலைக்காட்சி நிலைய முதலாளி ஒரு வீட்டைக் கட்டிவிட்டார். ‘100 சி ஆயிற்றாம்’ என்றான் மணி.

நீச்சல் குளம் 1 சி, உடற்பயிற்சி நிலையம் 1 சி, பார் 1 சி, மின்சாரத் தளவாடங்கள் 1 சி, ஹோம் தியேட்டர் 1 சி என்று வீட்டின் ஒவ்வொரு அய்ட்டத்திற்கும் 1 சி ஆயிற்றாம். எல்லாம் சரி; ஒரு மனிதனின் ஆயுள் 500 ஆண்டுகள் என்றால் இத்தனையும் செய்யலாம். நமக்கு இருப்பதோ கொசு சம்போகம் செய்ய எடுத்துக்கொள்ளும் நேரத்தைப் போன்ற ஒரு பிசுக்கட்டான் ஆயுள். அதில் சோற்றுக்கு சிங்கியடிப்பதிலேயே 53 ஆண்டுகள் காலி. சொச்சமிருக்கும் காலத்துக்கு இத்தனை ஆடம்பரம் தேவையில்லை என்றது மனம். மேலும், கிடைப்பதே 100 சீதான். அதில் கணக்குப் பார்த்துதான் செலவு செய்ய வேண்டும். மனை, வீடு இரண்டுக்கும் சேர்த்து ஒரு 20 அல்லது 30 சி செலவு செய்யலாம். ஆனால் ஏரியா முக்கியம். இனிமேல் எக்காரணத்தைக் கொண்டும் ஊரின் மேற்குப் பகுதியில் வசிக்கக் கூடாது.

பிறந்து வளர்ந்த நாகூரிலும் ஊரின் மேற்குப் பகுதிதான் சுடுகாட்டுப் பிணங்களுக்கும், தாழ்த்தப்பட்டவர்களுக்கும் ஒதுக்கப்பட்டது. இதோ இப்போது வசிக்கும் சென்னையிலும் அதன் மேற்குப் பகுதி முழுவதும் குப்பைக்காடுதான்.

வசிப்பிடத்தை வாழத் தகுதியற்ற குப்பைக் காடாக்குவதில் மக்கள், அதிகாரிகள், அரசியல்வாதிகள் என்ற மூன்று பிரிவினரும் போட்டி போட்டுக்கொண்டு வேலை செய்துகொண்டிருந்தார்கள்.

கடந்த மழையின்போது தண்ணீர் வீட்டுக்குள் வந்துவிட்டது என்று எழுதினால் எல்லாருடைய வீட்டுக்குள்ளேயும்தான் வந்துவிட்டது என்று

சொல்வீர்கள். ஆனால் எங்கள் வீட்டுக்குள்ளே வந்தது வெறும் மழைத் தண்ணீர் அல்ல. மேலும், தெருவில் ஓடுவதும் மழைத் தண்ணீர் அல்ல. வீட்டைச் சுற்றி ஓடும் கூவத்தின் சாக்கடை மழைநீரோடு கலந்து முழுவதும் சாக்கடையாக ஓடியது. ஆனால் சாக்கடையாவது பரவாயில்லை. வீட்டுக்குள் நிரம்பியது, இரண்டு குளியலறைகளிலுமிருந்த கக்கூஸ்களிலிருந்து பெருகி ஓடிவந்த மலமும், மூத்திரமும். இந்த அடுக்குமாடிக் குடியிருப்பின் பாதாள சாக்கடை மூலம் வெளியேற வழியில்லாததால் மேல் வீடுகளிலிருந்த கக்கூஸ்களிலிருந்து என் வீட்டுக் கக்கூஸ் குழாய் மூலமாக வீட்டுக்குள் புகுந்துவிட்டது.

வீடு முழுவதும் முழங்கால் அளவுக்கு சாக்கடை நீர், மூத்திரம். அதில் மிதக்கும் மலம். ஓங்கரித்தபடியே கட்டில் மேல் பதுங்கிக் கொண்டுவிட்டாள் மீரா. கூடவே ரைட்டர். தண்ணீர் வடிவதற்கு எடுத்துக்கொண்ட இரண்டு நாட்களுமே மீரா அந்தக் கட்டிலை விட்டு இறங்கவில்லை. மலஜலம் கழிக்க வழியில்லை என்பதால் இரண்டு தினங்களுமே அவள் வெறும் ஒன்றிரண்டு பிஸ்கட் துண்டுகளும், ஸ்பூன் ஸ்பூனாகத் தண்ணீரும் மட்டுமே உட்கொண்டாள். எனக்குப் பசி தாங்காது என்பதால் மணியிடம் ‘ரெசிப்பி’ கேட்டு பூண்டுக் குழம்பு வைத்து சுடச்சுட சோறு ஆக்கி அந்த மலத்தண்ணீர் மீதே அமர்ந்து சாப்பிட்டேன்.

என்னுடைய மலஜலமா? மொட்டை மாடியில் ஒரு டாய்லட் உள்ளது. ஆனால் அந்த டாய்லட்டைப் பயன்படுத்த மாட்டேன் என்று தீர்மானமாகச் சொல்லிவிட்டாள் மீரா. காரணம், மேலே விடுவதெல்லாம்தானே கீழே எங்கள் வீட்டு கக்கூஸ் வழியாக வீட்டுக்குள் புகுந்துகொண்டிருக்கிறது? இது அவளுடைய தர்க்கம்.

அவ்வளவு வெள்ளத்துக்கும் மின்சாரம் இருந்தது. ஆனால் அதுவும் ஆபத்துதான். மறுநாள் தினசரியில் கீழ்ப்பாக்கம் பகுதியில் ஒருவர் மின்சாரம் தாக்கி இறந்துவிட்டதாகக் கண்டிருந்தது. துரதிருஷ்டம் என்னவென்றால், வீட்டுக்குள் தண்ணீர் புகுந்துவிட்டதால் அந்தத் தண்ணீரில் மின்சாரம் பாய்ந்துவிடக்கூடாது என்பதற்காக மெயின் ஸ்விட்சை அணைத்திருக்கிறார்; மின்சாரம் தாக்கிவிட்டது. அவ்வளவு முன்னெச்சரிக்கையான ஆள் ஒரு கட்டையை எடுத்து அதன் மூலம் அணைத்திருக்க வேண்டும். அது சரி, இப்படியெல்லாம் ஏன் ஒரு அரசியல்வாதிக்கு சாவு வர மாட்டேன் என்கிறது?

அந்த முழங்கால் அளவு பீக்காட்டில் அமர்ந்துகொண்டுதான் இந்த நாவலின் சில அத்தியாயங்களை எழுத வேண்டியதாயிற்று. ‘என் வீட்டுக்குள் தண்ணீர் புகுந்துவிட்டது; அதனால் இந்த வாரம் அனுப்ப வேண்டிய பகுதியை அனுப்ப முடியவில்லை’ என்று கலாகௌமுதி ஆசிரியரிடம் சொல்ல முடியுமா என்ன? எழுதியது மட்டுமல்ல; அதை எடுத்துக்கொண்டு போய் கணினி மையத்தில் கொடுத்து, டைப் செய்து, பிழை திருத்தம் பார்த்து ராமகிருஷ்ணனுக்கு அனுப்பி வைக்க வேண்டியிருந்தது. வீட்டுக்குள் முழங்கால் அளவு என்றால், வீட்டுக்கு வெளியே இடுப்பளவு நீர். லைவான் மின் கம்பிகள் கிடக்கலாம்; பட்டால் பட்டென்று கதி மோட்சம். அல்லது, திறந்து கிடக்கும் மேன்ஹோல்கள் இருக்கலாம். விழுந்தால் இன்ஸ்டண்ட் ஜலசமாதி. ஆங்காங்கே பாம்புகள் தலையை மட்டும் தூக்கியபடி நீரின் போக்கில் விரைந்து சென்று கொண்டிருந்தன. ‘இப்படியெல்லாம்தான் இந்த நாவலை எழுதினேன்’

என்று எழுதினால் எவனாவது ஒருவன் ‘நாவலில் சுய இரக்கம் தூக்கலாக இருக்கிறது’ என்பான். அதுவாவது பரவாயில்லை. ‘ராஸ லீலாவை எழுதிக் கொடுத்ததே நான்தான்’ என்று சொல்லிக்கொண்டு கிளம்பும் ஒரு கூட்டம்.

கிடக்கட்டும். தெருவிலிருந்த மற்ற ஜனங்கள் பெரும்பாலும் தத்தம் உறவினர் வீடுகளுக்குச் சென்றுவிட்டனர். நான் அப்படிப் போக முடியாது. ஒன்று, என்னுடைய விலை மதிக்க முடியாத புத்தகங்கள். நீர் மட்டம் ஏற ஏற, அவற்றை நான் மேலே மேலே ஏற்றிக் கொண்டிருந்தேன். முதலில் கட்டில், சாப்பாட்டு மேஜை என்று அடுக்கினேன். இன்னும் ஏறினால் பரணில் ஏற்றிவிட யோசித்துக் கொண்டிருந்தேன். மற்றொரு காரணம், ரைட்டர். ரைட்டருக்கு ஜலம் என்றால் அலர்ஜி. தூக்கினோம் என்றால் கடித்துக் குதறி விடும். ரைட்டரை விட்டுவிட்டுச் செல்ல மனம் ஒப்பவில்லை. நீர் மட்டம் மேலும் உயர்ந்தால் ரைட்டரோடு மொட்டை மாடிக்குச் செல்லலாம்.

மழையை அடுத்து வந்தது, மழை நிவாரண நிதி. என் வீட்டுக்கு அருகிலிருக்கும் எம்ஜியார் நகர் அரசுப் பள்ளியில் நிவாரண நிதி வாங்க வந்த கூட்டத்தில் நெரிசல் ஏற்பட்டு 42 பேர் இறந்தனர்.

**அவர்களின் பட்டியல்:**

1. செல்வராஜ் (32)
2. கபூர்கான் (31)
3. கனகசபை (32)
4. சக்திவேல் (28)
5. ராஜேந்திரன் (40)
6. சந்திரசேகர் (45)
7. சாமந்தி (40)
8. முனியம்மாள் (50)
9. பச்சையம்மாள் (62)
10. பொன்னம்மாள் (45)
11. மேரி (41)
12. ஜெயராணி (40)
13. கஸ்தூரி (45)
14. லீலாவதி (51)
15. சுப்பிரமணியம் (45)
16. மலர்க்கொடி (50)
17. உமாதேவி (25)
18. போத்தம்மாள் (42)
19. தெய்வ சகாயம்மாள் (65)

20. உமா (42)
21. முத்து (45)
22. ஏழுமலை (34)
23. பூங்கொடி (25)
24. சந்திரா (54)
25. ராமன் (45)
26. மோகனா (42)
27. திலகவதி (38)
28. ராமதாஸ் (53)
29. ராமு (எ) ராமலிங்கம் (27)
30. லட்சுமி (47)
31. மல்லிகா (60)
32. மாரியம்மாள் (72)
33. குணசேகரன் (26)
34. நடராஜன் (48)
35. குப்பம்மாள் (45)
36. வெங்கடேசன் (45)
37. ஆனந்தன் (35)
38. செல்லப்பன் (55)
39. வெங்கடேசன் (70)
40. லத்தீப் உன்னிஸா (44)
41. சரோஜா (50)
42. சாமிநாதன் (65)

**குறிஞ்சி முதல் பாலை வரை!**

எம்.ஜி.ஆர். நகர் மாநகராட்சி மேல்நிலைப் பள்ளியில் நிவாரண டோக்கன் வாங்க சுற்று வட்டாரப் பகுதிகளில் உள்ள அனைத்துத் தெரு மக்களும், மற்றும் அங்கு வரிசையாக உள்ள குறிஞ்சித் தெரு, முல்லைத் தெரு, மருதம் தெரு, நெய்தல் தெரு, பாலைத் தெரு மக்களும் நள்ளிரவிலேயே குவிந்தனர். இதில் பெரும்பாலானோர் பெண்கள். அப்பகுதியில் மார்க்கெட்டும் பிராய்லர் கடைகளும் உள்ளதால் எப்போதும் மக்கள் கூட்டம் மிகுந்து காணப்படும். தெருக்கள் அனைத்தும் குறுகலாகக் காணப்படுவதால் ஒருவருக்கு மேல் ஒருவர் விழுந்து மிதிபட்டு, மூச்சுத்திணறி இறந்தனர்.

**எந்த 'ஸ்பாட்?**

வெள்ள நிவாரணச் சாவு சம்பவம் நடந்த எம்.ஜி.ஆர். நகர் மாநகராட்சி

உயர்நிலைப் பள்ளி நெசப்பாக்கம் 131வது வார்டு 9வது மண்டலத்தில் உள்ளது. இந்தப் பகுதியில் தரமான சாலை வசதிகளோ, தெரு விளக்குகளோ, மின்சார வசதியோ இல்லை. இங்குள்ள தெருக்களில் உள்ள வீடுகள் அனைத்தும் சிறு சிறு குடிசைகளாகவும் காரை வீடுகளாகவும் மிக நெருக்கமாக அமைந்துள்ளன. எந்த வீட்டு வாசலிலும் வாகனங்களை நிறுத்த வசதி கிடையாது. அவ்வளவு நெரிசல் மிக்க பகுதி எம்.ஜி.ஆர். நகர் பகுதி.

**போலிசாருக்கு ஆட்டோ மூலம் உணவு சப்ளை!**

வெள்ள நிவாரண நெரிசல் சம்பவம் ஒரு பக்கம் எம்.ஜி.ஆர். நகரையே புரட்டிப் போட்டுக்கொண்டிருக்க, இன்னொரு பக்கம் போலீஸாருக்கு காலை டிஃபன் ஆட்டோவில் வந்திறங்கியது. சென்னை மாநகர போலீஸார், விரைவு அதிரடிப்படை போலீஸார் அனைவருக்கும் பொட்டலம் பொட்டலமாகக் காலை டிஃபன் வழங்கப்பட்டது. பொதுமக்கள் பதற்றத்துடன் கூடியிருக்கும் பகுதிகளில் உணவு சப்ளை செய்யப்படுவதைப் பார்த்த உயர் போலீஸ் அதிகாரி உடனடியாக ஆட்டோவை மாநகராட்சிப் பள்ளிக்கு உள்ளே எடுத்துச் செல்லும்படி உத்தரவிட்டார்.

வங்கக் கடலில் குறைந்த காற்றழுத்தத் தாழ்வு மண்டலம் நான்கு நாட்களாக நிலைகொண்டிருந்தது. இது அரசுக்கும் தெரியும். அவ்வாறு தெரிந்தும் மழை காரணமாக மின் கசிவு உள்ளிட்ட வேறு பிரச்னைகள் எதுவும் ஏற்படக் கூடாத வகையில் அரசு நிவாரண பொருட்கள் வழங்கும் பணிகளை நிறுத்தி வைத்திருக்கலாம். விடிய விடிய மழை கொட்டிக்கொண்டிருந்த காரணத்தால் நிவாரணம் வாங்க வந்திருந்த பொதுமக்கள் பலர் குடை பிடித்தபடியே பல மணி நேரம் காத்திருந்து, நனைந்து, மிதிபட்டு, மூச்சுத்திணறி உயிரை விட்டுள்ளனர்.

**பா.ம.க. பிரமுகர் தந்தையும் பலி!**

நெரிசலில் சிக்கி இறந்தவர்களில் பா.ம.க. பிரமுகரின் தந்தையும் ஒருவர். ஜாஃபர்கான்பேட்டை பச்சையப்பன் தெருவில் வசிப்பவர் வெங்கடேசன். பா.ம.க. வட்டச் செயலர். இவரது தந்தை செல்லப்பா (58). பொதுப்பணித் துறையில் குமாஸ்தாவாகப் பணிபுரிந்தார். வெள்ள நிவாரணம் பெறச் சென்ற செல்லப்பா நெரிசலில் சிக்கி பலியானார். இவருக்கு கனகவல்லி என்ற மனைவியும், விஜயலட்சுமி என்ற மகளும் உள்ளனர்.

**வீட்டு வேலை செய்த பெண் நெரிசலில் சிக்கி பலி!**

வீட்டு வேலை செய்து பிழைத்து வந்த நடுத்தர வயது பெண்மணியும் கூட்ட நெரிசலில் சிக்கி பரிதாபமாக இறந்தார். சென்னை மேற்கு ஜாஃபர்கான்பேட்டையைச் சேர்ந்தவர் மூர்த்தி. இவரது மனைவி நீலாவதி (40). இவர்களுக்கு மகா என்ற மகனும், பத்மாவதி என்ற மகளும் உள்ளனர். வீட்டு வேலை செய்து பிழைத்து வந்த நீலாவதியும் வெள்ள நிவாரண உதவி வாங்குவதற்காக வந்து நெரிசலில் சிக்கி பரிதாபமாக இறந்தார்.

**‘இரவில் பார்த்தோம், காலையில் பிணமாக இருந்தார்!’**

ராத்திரி தூங்கும்போது அம்மாவைப் பார்த்தோம். காலையில் பிணமாகவே பார்க்க முடிந்தது என்று தாயை இழந்த கல்லூரி மாணவர் கதறினார்.

சென்னை ஜாஃபர்கான்பேட்டை தங்கவேல் நகரில் வசிப்பவர் மைக்கேல். இவரது மனைவி ஜெயராணி (40). இவர்களின் சொந்த ஊர் தூத்துக்குடி பாண்டியபுரம். மைக்கேல் கே.கே.நகரில் இரும்பு வாங்கி விற்கும் தொழில் செய்து வந்தார். நேற்று முன்தினம் நள்ளிரவு 1 மணிக்கு வீட்டின் அருகில் வசிக்கும் பெண் ஒருவர் ஜெயராணியை வெள்ள நிவாரண உதவி வாங்க அழைத்துச் சென்றார். ஆனால், ஜெயராணி கூட்ட நெரிசலில் சிக்கினார். கீழே விழுந்த அவர் மீது கூட்டத்தினர் மிதித்து ஓடினர். அதில் மூச்சுத்திணறி அதே இடத்தில் ஜெயராணி பலியானார். இவர்களுக்கு கிப்சன், ரபே என இரு மகன்கள் உள்ளனர். கல்லூரி மாணவர் கிப்சன் கூறுகையில், ‘எங்க அம்மாவை ராத்திரி தூங்கும்போது பார்த்தோம். நள்ளிரவு ஒரு மணிக்குப் போனாங்க. அதிகாலையில் அம்மா பிணத்தைத்தான் பார்க்க முடிந்தது’ என்று கண்ணீருடன் தெரிவித்தார்.

எம்.ஜி.ஆர். நகர் சம்பவர் குறித்து கே.கே.நகர் மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வரும் முகமது பரூக் (55) கூறியதாவது:

நான் கூலி வேலை செய்துவருகிறேன். நேற்று முன்தினம் டோக்கன் வழங்கும்போது நாங்கள் பெறவில்லை. இதனால் இன்று அதிகாலை 3 மணிக்கே வரிசையில் நிற்கத் தொடங்கினேன். உடன் எனது மருமகன் கபூர் கானும் (25) நின்றார். வரிசையில் இரண்டாயிரத்துக்கும் மேற்பட்டோர் இருந்தனர். எனது மருமகன் தள்ளுவண்டியில் கொய்யாப் பழ வியாபாரம் செய்துவருகிறார். நெரிசலில் எனது மருமகனும் சிக்கி இறந்துவிட்டார். எனக்கு வயதாகிவிட்டது. இனி என் குடும்பத்தை யார் காப்பாற்றப்போகிறார்கள் என்று தெரியவில்லை.

நவம்பர் மாதம் 6ஆம் தேதி வட சென்னையில் இதே போன்று வெள்ள நிவாரண டோக்கன் வழங்கும்போது நெரிசல் ஏற்பட்டு ஆறு பேர் இறந்தனர். அந்தச் சம்பவம் நடந்த 44வது நாளில் நேற்று அதே போன்ற கொடூரமான சம்பவம் நடந்துவிட்டது.

நெரிசலில் 42 பேர் உயிரிழந்த மாநகராட்சிப் பள்ளிக்கு பெயர் ‘அண்ணாதுரை.’ பள்ளிக் கட்டடத்தின் மேல் முகப்பில் நன்றாக கொட்டை எழுத்தில், ‘சிந்தித்து செயல்படு, ஒற்றுமையில் உண்டு வாழ்வு, அறிவொளி நாட்டின் கண்ணொளி’ என்றெல்லாம் பல வாசகங்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

சென்னை எம்.ஜி.ஆர். நகர் மாநகராட்சி உயர்நிலைப் பள்ளியில் ஏற்பட்ட நெரிசலில் ஜாஃபர்கான்பேட்டை உமா(30), மணிமேகலை, மல்லிகா, பச்சையப்பன் தெரு செல்லப்பன்(60), செல்வராஜ்(28), மேரி(40), மல்லிகா(50) ஆகியோர் உயிரிழந்தனர்.

இதில் உமா, மணிமேகலையைத் தவிர மற்ற நான்கு பேரின் வீடுகளும் ஜாஃபர்கான்பேட்டை பச்சையப்பன் தெருவில் அடுத்தடுத்து உள்ளன. நான்கு வீடுகளிலும் குடும்பத்தினர், உறவினர் அனைவரும் கதறினர். அந்தத் தெரு முழுவதும் ஒரே மரண ஓலமாக இருந்தது.

செல்லப்பன் மருமகள் அமுதா கூறுகையில், ‘அதிகாலையில் மூன்று மணிக்கே எழுந்து சென்றார். ஐந்து மணிக்கெல்லாம் அவர் இறந்து விட்டதாகத் தகவல் வந்தது’ என்றார்.

நெரிசலில் உயிரிழந்தவர்களில் மேரி (42) ஒருவர். இவரது கணவர்

ராயப்பன். இவர் நடந்த சம்பவம் குறித்து கூறியதாவது:

வெள்ள நிவாரணப் பணி வழங்குவது தெரிந்ததும் டோக்கன் வாங்கச் செல்வதாக எனது மனைவி தெரிவித்தாள். மளிகைக் கடை வைத்துள்ள எனது தம்பி ‘வேண்டாம். ஏற்கெனவே வியாசர்பாடியில் நெரிசலில் சிக்கி ஆறு பேர் இறந்துவிட்டனர். நீங்களும் போய் கூட்டத்தில் சிக்க வேண்டாம். வேண்டுமானால் நான் 2000 ரூபாய் கொடுத்து விடுகிறேன்’ என்றார்.

அதை என் மனைவி கேட்காமல் இரவு 12 மணிக்கு எழுந்து நிவாரணம் வாங்கச் சென்றுவிட்டாள். விஷயம் தெரிந்ததும் நான் சென்று அவளை வீட்டுக்குப் போகச் சொன்னேன். ‘கூட்டம் அதிகமாக இருக்கிறது. நான் வாங்கி வருகிறேன். நீ வீட்டுக்குப் போ’ என்றேன். அவள் வீட்டிற்குப் போயிருப்பாள் என்று நினைத்தேன்.

சிறிது நேரத்தில் கேட்டைத் திறந்து விட்டதும் கூட்ட நெரிசல் ஏற்பட்டது. ஒருவரை ஒருவர் முண்டியடித்துக்கொண்டு உள்ளே ஓடினர். அதில் நிறைய பேர் கீழே விழுந்துவிட்டனர். பின்னால் நின்றவர்கள் அவர்களை மிதித்தபடி ஓடினர். கீழே கிடந்தவர்கள் 15 பேரை நான் ஓரமாக இழுத்து காப்பாற்றினேன். கடைசியில் பார்த்தபோது என் மனைவி பிணமாகிவிட்டாள். 15 பேரைக் காப்பாற்றிய என்னால் என் மனைவியைக் காப்பாற்ற முடியவில்லை.’

**42 உயிர்களை காவு வாங்கிய பள்ளம்!**

வெள்ள நிவாரணம் வாங்கச் சென்று நெரிசலில் சிக்கி கீழே விழுந்தவர்கள் உடனே எழுந்து ஓட முடியாத அளவிற்கு விழுந்த இடம் மிகவும் பள்ளமாக இருந்திருக்கிறது. சாலை மட்டத்தில் இருந்து பள்ளமாக இருந்ததால் ஒருவர் மேல் ஒருவராக மள மளவென்று சரிந்ததில் மூச்சு விடக்கூட நேரமின்றி பரிதாபமாக மாண்டு போயுள்ளனர்.

எம்.ஜி.ஆர். நகரில் மார்க்கெட் அருகில் அமைந்துள்ளது மாநகராட்சி உயர்நிலைப் பள்ளி. மார்க்கெட் சாலை மட்டத்தில் இருந்து பள்ளியின்

விளையாட்டுத் திடல் அமைந்துள்ள இடம் பள்ளமாக இருக்கிறது. பள்ளியின் நுழைவாயில் கேட் அகலமும் பத்து அடிக்கும் குறைவே.

அதிகாலையில் திடீரென்று கேட் திறக்கப்பட்டபோது ஒரே நேரத்தில் ஐந்தாயிரத்திற்கும் மேற்பட்டோர் திபுதிபுவென காலை எடுத்து வைத்தபோது ‘தொப்... தொப்...’ என்று விழுந்துள்ளனர். அங்கே பள்ளமாக இருப்பதை இருட்டு நேரத்தில் அவர்களால் அறிய முடியவில்லை. கீழே விழுந்ததும் எழுந்திருக்க முயற்சி செய்வதற்கு நினைக்கும் போதே அவர்கள் மீது பின்னால் படையாகத் திரண்டு வந்தவர்களும் விழுந்தனர். இதில் மூச்சுத்திணறி பலரும் அங்கேயே பரிதாபமாக உயிரை விட்டுள்ளனர்.

பள்ளியின் நுழைவாயில் பள்ளமாக இல்லாமல் இருந்திருந்தால் வேகமாக ஓடியவர்கள் சிறிது தூரம் வரை ஓடியிருக்கலாம். அப்போது கூட்டம் பரவலாகச் சென்றிருக்கும். ஏனெனில் பள்ளி மைதானம் மிகப் பெரிய அளவில் இருக்கிறது. அதனால் உயிரிழப்பும் குறைந்திருக்கும். ஆனால், பள்ளத்தின் காரணமாகவே விழுந்தவர்கள் அடுத்த வினாடியில் எழுந்திருக்கக்கூட நேரமில்லாமல் இறந்துள்ளனர்.

மேற்கண்ட சம்பவங்கள் நடந்துகொண்டிருந்த வேளையில் நான் பைபாஸ் சர்ஜரிக்காக மருத்துவமனையில் படுத்துக் கிடந்ததால், இதையெல்லாம் நேரடியாகப் பார்த்து கள ஆய்வு மேற்கொள்ள முடியாமல் தினசரிகளில் வந்த செய்திகளையே மேலே தொகுத்து வழங்கியிருக்கிறேன். இச்சம்பவம் குறித்து அப்போதைய முதலமைச்சர் மக்களுக்கு விடுத்த வேண்டுகோளின் சில பகுதிகள் கீழே:

மக்களின் முழு ஒத்துழைப்போடு நிவாரண உதவி அளிக்கின்ற இந்த அசாதாரணமானதும், மிகப் பெரிய அளவிலானதும் ஆன பணி, மிகத் துரிதமாக நடைபெற்று வருகின்ற இந்த வேளையில், வெள்ள நிவாரணப் பணிகளில் அபார சாதனை படைத்து வரும் என்னுடைய அரசுக்கு அவப் பெயரையும், களங்கத்தையும் ஏற்படுத்த வேண்டுமென்ற நோக்கத்தில், என்னுடைய அரசின் மீது கடும் பகைமை கொண்டுள்ள எதிரிகளின் ஆதரவோடு, சில தீய, சமூக விரோத விஷமிகள் திட்டமிட்டு, கொடிய முறையில் செயல்பட்டுள்ளது கண்டிக்கத்தக்கதும், அருவருக்கத்தக்கதும் ஆகும். வெள்ள நிவாரணத் தொகுப்பு உதவிகள் வழங்குவதில் என்னுடைய அரசுக்குக் கிடைத்து வருகின்ற நற்பெயரைக் கண்டு பொறுக்க மாட்டாமல், பொறாமைத் தீயில் புழுங்கித் தவித்து, ஈவு இரக்கமற்ற முறையில், தீய நோக்கத்துடன், திட்டமிட்டு வீண் வதந்திகளைப் பரப்பும் கெடுமதியாளர்கள், மனித உயிர்களை பலி கொள்கிற அளவுக்குத் தரம் தாழ்ந்து செயல்பட்டிருப்பது எனக்கு மிகுந்த அதிர்ச்சியை அளிக்கிறது.

எனது அரசுக்கு எதிராகச் செயல்படுகின்ற - எத்தகைய குறுக்கு வழியைக் கையாண்டேனும் அதிகாரத்தைக் கைப்பற்றத் துடிக்கின்ற அமைப்புகளின் ஆதரவைப் பெற்ற, இத்தகைய வஞ்சக, பழி வாங்கும் நோக்கம் கொண்ட நச்சு சக்திகள், பீதியைப் பரப்பி, நெரிசலை ஏற்படுத்திய கோரச் செயலின் மூலம், என்னுடைய அரசு மேற்கொண்டு வருகின்ற சீரிய பணிக்குக் களங்கம் ஏற்படுத்த முனைந்துள்ளார்கள். சீராக நடைபெற்று வருகின்ற நிவாரணத் தொகுப்பு உதவி விநியோகப் பணிகளைச் சீர்குலைத்து, அதன் மூலம், என்னுடைய அரசின் நற்பெயருக்குக் களங்கம் ஏற்படுத்தும் நோக்கத்தோடு, இத்தகைய பொய் வதந்திகள் சுயநல சக்திகளால் திட்டமிட்டுப் பரப்பப்பட்டு வருகின்றன. இப்படியாக, ஒரு சிலருக்கு மட்டுமே நிவாரண உதவி அளிக்கப்படும் என்றும், இதற்கான அரசு நிதி குறைவாகவே இருக்கிறது என்றும், விரைவில் அது தீர்ந்துவிடும் என்றும் வதந்திகள் பரப்பப்பட்டுள்ளன. பாதிக்கப்பட்ட ஒவ்வொரு குடும்பத்தினருக்கும் நிவாரண உதவிகள் வழங்கப்படும் என்று நான் திரும்பத் திரும்ப மக்களுக்குத் தெளிவுபடுத்திய நிலையில், இவை முற்றிலும் ஆதாரமற்ற வீண் வதந்திகளே ஆகும். முதலில் வரும் ஒரு சிலருக்கு மட்டுமே, அதாவது, சுமார் 200 பேர் என்ற அளவுக்கு மட்டுமே, நிவாரண உதவி கிடைக்கும் என்றும், நிவாரண உதவி வழங்கும் பணி அன்றோடு முடிந்துவிடும் என்றும், அதற்கும் மேல் தொடராது என்றும், இவர்கள் ஒரு புரளியைப் பரப்பி இருக்கிறார்கள். உண்மையில், இவை அறவே ஆதாரமற்றவை ஆகும். பாதிக்கப்பட்ட ஒவ்வொரு குடும்பத்திற்கும் நிவாரணத் தொகுப்பு உதவி கிடைக்கின்றவரை, திட்டவட்ட இறுதி நாள் எதுவும் நிர்ணயிக்கப்படாமல், இவ்வரசு தொடர்ந்து நிவாரணத் தொகுப்பு உதவியை வழங்கும்.

மக்கள் நலன் காக்கும் என்னுடைய நல்லாட்சிக்கு எதிரான சில சுயநல, தீய

சக்திகள், வேண்டுமென்றே பரப்பி வருகின்ற இத்தகைய பொய்யான, தீய வதந்திகளை நம்ப வேண்டாம் என நான் ஒவ்வொருவரையும் வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன். பாதிக்கப்பட்ட ஒவ்வொரு குடும்பத்திற்கும் நிவாரண உதவி கிடைப்பதை நான் நிச்சயமாக உறுதி செய்வேன். நான் ஏற்கெனவே இந்த உறுதிமொழியை அளித்திருக்கிறேன். அதை நிறைவேற்றியே தீருவேன். இந்த உறுதிமொழியை அளித்திருப்பது நானே என்பதால், எவரும் தங்களுக்கு நிவாரண உதவிகள் கிடைக்காமல் போய்விடுமோ என்று அஞ்சத்தேவையில்லை.

இந்த உறுதிமொழியை நிறைவேற்றுவதே என்னுடைய குறிக்கோள். பாதிக்கப்பட்ட ஒவ்வொரு குடும்பத்திற்கும் நிவாரணத் தொகுப்பு உதவியை வழங்குவதற்குத் தேவையான நிதியை என்னுடைய அரசு ஒதுக்கியுள்ளது. பாதிக்கப்பட்ட ஒவ்வொரு குடும்பத்திற்கும் உதவி அளிப்பதான இந்த நோக்கத்தை நிறைவேற்றுகின்ற வரையில் நான் ஓய மாட்டேன். எனவே, நிவாரணத் தொகுப்பு உதவி கிடைக்காமல் போய்விடுமோ என்று எவரும் அச்சம் கொள்ளத் தேவையில்லை. அரசியல் சந்தர்ப்பவாதிகள் தூண்டுதலின் பேரில், சில சுயநல சக்திகளும், விஷமிகளும் திட்டமிட்டுச் செய்து வருகின்ற பொய்ப் பிரச்சாரங்களையும், வதந்திகளையும் நம்ப வேண்டாம் என நான் உங்களைக் கேட்டுக்கொள்கிறேன். அரசு நிர்வாகம் கூறுவதை மட்டுமே பின்பற்ற வேண்டும் என நான் உங்களை வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

மழை வெள்ளத்தால் ஏற்பட்டுள்ள இச்சவால்களை தீரத்தோடும், உறுதியோடும் எதிர்கொண்டு தமிழகம், சுயநல சக்திகளின் தீய நோக்கங்களைத் தோற்கடிக்க வேண்டும். வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட தமிழக மக்கள், தங்களது வாழ்க்கையை விரைந்து புனரமைத்து, வளமையை நோக்கிய பாதையில் முன்னேறுவதை உறுதிசெய்வதே என்னுடைய லட்சியம் ஆகும். உள்ளபடியே ஏழை எளிய மக்களின் நலனுக்கு எதிராகத்தான் தாங்கள் செயல்படுகிறோம் என்பதைப் பற்றி கிஞ்சித்தும் கவலைப்படாமல், எனக்கு அவப்பெயரை ஏற்படுத்துவதற்காக எந்த அளவுக்கும் செல்லக்கூடிய என்னுடைய எதிரிகள், காழ்ப்புணர்ச்சியோடு செய்து வரும் பொய்ப் பிரச்சாரங்களுக்கு செவி சாய்க்க வேண்டாம் என பாதிக்கப்பட்ட ஒவ்வொரு குடும்பத்தினரையும் நான் மீண்டும் ஒரு முறை வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன். ஏழை எளியோரின் நலனுக்கு எதிராகச் செயல்பட்டு, வெள்ள நிவாரண விநியோகப் பணி திறமையாக நடைபெறுவதைக் கெடுக்கின்ற காழ்ப்புணர்ச்சி கொண்ட கெடுமதியாளர்களின் தீய நோக்கங்களையும், திட்டங்களையும் நான் முறியடிப்பேன். இம்மாநிலத்தில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட ஒவ்வொரு குடும்பத்திற்கும் எனது அரசு அறிவித்துள்ள நிவாரணத் தொகுப்பு உதவி கிடைப்பதை உறுதிப்படுத்தும் என்னுடைய குறிக்கோள் நிறைவேறும்வரை நான் ஓய மாட்டேன்.

தமிழக முதலமைச்சர்

23.12.2005.

எம்ஜியார் நகர் சம்பவம் பற்றி அப்போதைய முதலமைச்சர் பொது மக்களுக்கு விடுத்த வேண்டுகோள் பற்றி அப்போதைய எதிர்க்கட்சித்

தலைவர் (இப்போதைய முதலமைச்சர்) ஒரு கண்டனக் கூட்டத்தில் பேசிய பேச்சின் சில பகுதிகள்:

நிவாரண உதவி பெறச் சென்று 50 பேர் பலியான சம்பவத்திற்கு வருத்தத்தை தெரிவிக்கவும், பலியாகக் காரணமாக இருந்தவர்களைக் கண்டித்தும் நமது உணர்வினை வெளிப்படுத்த போராட்டம் நடத்துவது குறித்து உங்களிடம் ஆலோசனை பெற இந்தக் கூட்டம் நடத்தப்படுகிறது. இழந்த உயிர்கள் எத்தனை, உடமைகள் எவ்வளவு என்பதை மேடையில் பேசிய கூட்டணித் தலைவர்கள் நேரடியாகச் சென்று பார்த்து அறிந்திருக்கிறார்கள். விமானத்தில், ஆகாயத்தில் சென்று பார்த்தவர்கள் இல்லை. பரிதாபம் காட்டுகிறோம் என்று பாமர மக்களைக் கட்டிப்பிடித்து நீலிக் கண்ணீர் வடித்தவர்கள் அல்ல... வலியுறுத்தினோம். அதன் பிறகாவது அனைத்துக் கட்சிக் கூட்டத்தைக் கூட்டி நிவாரண உதவிகளை மக்களுக்கு வழங்க எங்களைப் பயன்படுத்தி இருக்கலாம். ஆனால், அப்படிச் செய்யாமல் நாங்கள்தான் வதந்திகளைப் பரப்பினோம்; 42 பேர் பலியாக நாங்கள் தான் காரணம் என்று பழி போடுகிறார்... ரனை கைது செய்திருக்கின்றனர். அவருக்கு தண்டனை வழங்கப் பட்டால், எங்கு செல்ல வேண்டுமோ, அங்கே சென்று, எத்தனை படிக்கட்டு ஏற வேண்டுமோ அத்தனை படிக்கட்டும் ஏறி நியாயம் பெற முயல்வோம். சுப்ரீம் கோர்ட், ஐகோர்ட் நீதிபதிகளைவிட நாங்கள் நம்புகின்ற நீதிபதி நீங்கள்தான். மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு.

## 48. புறநகர்

திருமணத்தின்போது 500 சவரன், தலைத் தீபாவளிக்கு 100 சவரன், தலைப் பொங்கலுக்கு 100 சவரன், மகளின் பிறந்த நாளுக்கு 100 சவரன், மருமகனின் பிறந்த நாளுக்கு 100 சவரன் என்று வரதட்சணை கொடுத்தும், தற்கொலை செய்து கொண்ட தன் மகள் மதுதேவியின் மரணம் பற்றி அவரது தாயார் கொடுத்த கண்ணீர்ப் பேட்டியிலிருந்து ஒரு பகுதி:

அவள் பட்டப் படிப்பு முடித்ததும், மேலே படிக்க ஆசைப்பட்டாள். ரொம்பப் படித்த பெரிய மனிதர்கள் வீட்டில் இருந்து வரன் வந்ததால், மகள் அந்த வீட்டில் நன்றாக வாழ்வாள் என்று ஆசைப்பட்டு உடனடியாகத் திருமணம் முடித்தோம். அதே அவசரத்தில் அவள் வாழ்க்கையும் முடிந்து விட்டது.

திருமணமான நாளில் இருந்தே பிரச்னைதான். மாப்பிள்ளையும், பெண்ணும் தேனிலவுக்குச் சென்றனர். நானும் கணவரும் ஊருக்குத் திரும்பினோம். திடீரென ஒரு நாள் மனோகரன் ஃபோன் செய்தார். ‘என்ன நீங்க, வீடியோகிராஃபருக்கு ஏழாயிரம் ரூபாய் கொடுக்காம போயிட்டீங்க. உடனே கொடுத்தனுப்புங்க...’ என்றார். எங்களுக்கு அதிர்ச்சியாக இருந்தது. எவ்வளவோ படித்தவர்கள் இவ்வளவு அல்பமாகப் பேசுவார்களா என்று ஆச்சரியப்பட்டோம். பிரச்னை வேண்டாம் என்று பணம் அனுப்பினோம்.

மது கல்யாணம் முடிந்த நான்காவது மாதம் நாத்தனார் உமா கணவனுடன் சண்டை போட்டுவிட்டு தாய் வீட்டுக்கு வந்தார். அதன்பின் மதுவுக்கு பிரச்னை அதிகமாகி விட்டது. மகளும்

மாப்பிள்ளையும் அறையில் தனியாக இருக்கும்போது, உமா அங்கே போய் ஏதாவது சொல்லி மாப்பிள்ளையை வெளியில் அழைத்துச் சென்றுவிடுவார். அதையும் மீறி மாப்பிள்ளை அறையிலேயே இருந்தால், மாமியாரும் வந்து வெளியே அழைப்பார். இருவரும் சேர்ந்து என் மகள் சந்தோஷத்தைக் கெடுத்தார்கள்.

ஐந்து பேர் வசிக்கும் வீட்டில் ஏழு வேலைக்காரர்கள் இருக்கிறார்கள். ஆனால், 'வீட்டு வேலை எல்லாம் நீதான் செய்யணும்' என்று மதுவைக் கட்டாயப்படுத்தினார்கள். டாய்லெட் கழுவும் வேலையும் அவள் தலையில் விழுந்தது. கேட்டதெல்லாம் வாங்கிக் கொடுத்து நாங்கள் ஆசையாக வளர்த்த மதுவுக்கு, அந்த வீட்டில் சாப்பாடுகூட போடாமல் பட்டினி போட்டார்கள். நினைத்தால் வயிறு எரியுது. அதையெல்லாம் சொல்லி என் மகள் அழுதபோது, கிளியை வளர்த்து குரங்கு கையில் கொடுத்துவிட்டோமே என்று வேதனைப்பட்டோம். அவர்களுடைய சித்ரவதை தாங்காமல் மது எங்கள் வீட்டுக்கு வந்துவிட்டாள். அந்த நேரத்தில், மாமியார் கனகவள்ளி ஃபோன் செய்து என் மகளைத் திட்டினார். சமரசம் பேச ஒரு நண்பர் வீட்டில் சந்தித்தோம்.

உங்களோடு வேறு யாரும் வரக்கூடாது என்று நிபந்தனை விதித்தனர். ஆனால் அவர்கள் ஐந்து அடியாட்களுடன் வந்தனர். சமரசம் பேசியபோது, மனோகரன் காலில் விழுந்த மது, 'மாமா, நான் தெரியாமல் ஏதாவது தவறு செய்திருந்தாலும் மன்னித்து என்னை வாழ விடுங்கள், மாமா...' என்று மடிப்பிச்சை கேட்டாள்.

ஆனால், அவர் என்ன சொன்னார் தெரியுமா? 'நான் ஒரு துணை வேந்தர். என்னைப் பார்த்தால் தலைவர்களே எழுந்து நிற்பார்கள். போலீஸ்காரர்கள் சல்யூட் அடிப்பார்கள். என் பேச்சைக் கேட்காவிட்டால் அவ்வளவுதான்...' என்று மிரட்டினார்.

அவர்கள் கேட்டபோதெல்லாம் பணமும் நகையும் அள்ளி அள்ளிக் கொடுத்தோம். மகள் சந்தோஷமாக வாழ வேண்டும் என்பதற்காக, அவர்கள் சொன்னதை எல்லாம் கேட்டோம்.

ஒரு கட்டத்தில் 'உனக்கு வேறு நல்ல வாழ்க்கை அமைத்துத் தருகிறோம், வந்துவிடு' என்று மதுவிடம் சொன்னோம். அதற்கு மது, 'அவர் மீது நான் உயிரையே வைத்திருக்கிறேன். அவர் தெரியாமல் தவறு செய்கிறார். அவரைத் திருத்தி நல்ல மனிதராக்கி, அவரோடு நல்லபடியாக வாழ்வேன்' என்று நம்பிக்கையோடு சொன்னாள். ஆனால் நவீன் ஒரு நடிகையை வைத்திருக்கிறான் என்பது தெரிந்ததும் மனமுடைந்து போனாள். ஆனால், தற்கொலை செய்துகொள்ளும் அளவுக்கு மது ஒரு கோழை கிடையாது. அதனால்தான் மது தற்கொலை செய்துகொண்டாள் என்பதை எங்களால் நம்ப முடியவில்லை.

-தினகரன் நாளிதழ் : 22.07.2006

'அடுக்குமாடி வீடு வேண்டாம். புறநகரில் மனை வாங்கி வீடு கட்டினால் நிறைய இடம் கிடைக்கும்; தோட்டம் போடலாம்' என்றாள் மீரா. ராயப்பேட்டை அரசுப் பொது மருத்துவமனையிலுள்ள பிணவறையில்

இடம் பிடிப்பதற்கு மிக எளிய வழி. ஆம். புறநகரிலுள்ள வீடுகளில் வாரம் ஒரு முறை கொள்ளை நடந்து வருகிறது. கொள்ளை மட்டும் என்றால் பரவாயில்லை. கொள்ளைக்காரர்கள் வீட்டிலுள்ளவர்களை கொடூரமாகக் கொன்றுவிட்டுச் சென்றுவிடுகிறார்கள். எம்மெல்லே வீடு கூடத் தப்பவில்லை. ஜன்னல் கம்பிகளைப் பெயர்த்து எடுத்துவிட்டு உள்ளே நுழைகிறார்கள். கையில் கடப்பாரை போன்ற ஆயுதங்கள். வீட்டில் இருப்பவர்கள் அத்தனை பேரையும் அடித்துக் கொன்றுவிட்டு சாவகாசமாகக் கொள்ளை அடித்துக்கொண்டு செல்கிறார்கள். ஒரு ரெய்டுக்கு 200 பவுன், 300 பவுன் என்று கிடைக்கிறது. மிகச் சாதாரண நடுத்தர குடும்பமாக இருந்தால் கூட 50 பவுனுக்குக் குறையாத அறுவடை என்றால் சும்மாவா? ஹாலில் படுத்திருப்பவர்களைக் கொன்றுவிட்டு, மூடப்பட்டிருக்கும் ஏசி அறையைத் தட்டுவார்கள். தூக்கக் கலக்கத்தில் நாம் அறையைத் தட்டுவது கொள்ளைக்காரன் என்றா கண்டோம்? திறந்தால் கடப்பாரையால் ஒரே போடு. கபாலம் உடைந்து மூளை சிதறிவிடும். இப்படித்தான் செத்தார் அந்த எம்மெல்லே. ஒரு பெண். பதினைந்து வயது. எலிக்குஞ்சு மாதிரி இருந்திருக்கிறாள். கொள்ளையர்களைப் பார்த்துவிட்டு கத்த முயற்சித்திருக்கிறாள். கொள்ளையன் அவள் கழுத்தைப் பிடித்து சுவரோடு வைத்து அழுத்த 'மளுக்'கென்று முறிந்துவிட்டது உயிர். பிணம்பிணமாகப் புகைப்படங்கள், மறுநாள் தினசரிகளில்.

எம்மெல்லே போன்ற பெரிய இடங்களே மாட்டிக் கொண்டதால் இந்தப் புறநகர் கொள்ளையர் பற்றி கூடுதல் கவனம் தரப்பட்டது. சென்னை போலீஸில் நானு ராம் என்ற ராஜஸ்தானைச் சேர்ந்த அதிகாரிக்குப் பொறி தட்டியது - இது தனது மாநிலத்தைச் சேர்ந்த ஷெகாவாட்டி மாவட்டத்தின் பவாரியா இனக் கொள்ளையர்களாகத்தான் இருக்க வேண்டும் என்று. அங்கே அந்தக் கொள்ளையர்களின் கொடூரங்கள் பற்றித் தனிப் பாடல்களே உண்டு.

நான் தில்லியில் இருந்தபோது இந்த பவாரியா இன மக்களைப் பற்றி கள ஆய்வு செய்திருக்கிறேன். ஷெகாவாட்டி மாவட்டம் ராஜஸ்தானின் வடகிழக்குப் பகுதியில் உள்ளது. மழையே இல்லாத பாலைவனப் பிரதேசம்; குளிர்காலத்தில் குளிர் பூஜ்யத்துக்கும் கீழே போய்விடும். கோடையில் வெப்பம் 50 டிகிரி செல்ஷியஸைத் தாண்டிவிடும். இந்தியாவின் மிக மோசமான பஞ்சமும், பட்டினிச் சாவுகளும் நடக்கும் பிரதேசம். 1899ஆம் ஆண்டு இங்கு நிலவிய பஞ்சத்தைப் பற்றிய ஆய்வுக் கட்டுரை ஒன்று ரணஜீத் குஹான் தொகுத்த Subaltern History of India மூன்றாம் தொகுதியில் உள்ளது. இந்தியப் பொருளாதாரத்தில் பெரும் பங்கு வகிக்கும் மார்வாடிகள் இந்த மாவட்டத்திலிருந்துதான் பெரும் எண்ணிக்கையில் வருகிறார்கள். அதேபோல் இந்திய ராணுவத்தில் அதிக எண்ணிக்கையில் இருப்பவர்களும் இந்த மாவட்டத்தைச் சேர்ந்தவர்களே.

இங்குள்ள கல் குவாரிகளில் கொத்தடிமையாய் வேலை செய்பவர்களே பவாரிய இன மக்கள். காலையில் ஆறு மணியிலிருந்து சூரியன் அஸ்தமனமாகும்வரை கல் உடைக்க வேண்டும். கருங்கல் ஜல்லிகள். 14 மணிநேரம் தொடர்ந்து உடைத்தால் அரை ட்ராக்டர் நிறையும். கூலி 50 ரூபாய்.

ஹஜாரி மீனா என்ற ஒருவரிடம் பேசினேன். பத்து ஆண்டுகளுக்கு

முன்னால் 2000 ரூபாய் கடன் வாங்கினாராம். அதைத் திருப்பிக் கொடுப்பதற்காக பத்தாண்டுகளாக கல் உடைத்துக்கொண்டிருக்கிறார். மாதாந்திரக் கூலி 50 ரூபாயும் வட்டிக்குப் போய்விடுகிறது. இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு இங்கிருந்து தப்பிக்க முயன்றபோது மாட்டிக்கொண்டார். காலில் இரும்புச் சங்கிலியை மாட்டிவிட்டார்கள். 20 கிலோ இருக்கும். நகரத்துக்கு வெல்டரிடம் சென்று வந்தது, இரும்புச் சங்கிலியின் விலை எல்லாம் கூட அந்த 2000 ரூபாய் கடனோடு சேர்க்கப்பட்டுவிட்டது. இதுபோல் இரண்டு டஜன் பேருக்கு அங்கே சங்கிலி மாட்டப்பட்டிருந்தது. இதைத் தூக்கிக்கொண்டு நடப்பதுகூட பிரச்னை இல்லை; ஜட்டி போட முடியாதது தான் பெரிய பிரச்னையாக இருப்பதாகச் சொன்னார் ஹஜாரி மீனா. கௌபீனம் அணிந்து பழக்கம் இல்லையாம். பெண்களாக இருந்தால் வன்கலவி சர்வ சாதாரணம். அவமானம் தாங்காமல் அவ்வப்போது பெண்கள் தீக்குளித்து இறந்துபோகிறார்கள்.

இந்தக் கல் குவாரிகளிலிருந்து தப்பிக்க முடிந்த ஒரு சிலரே தமிழகத்திற்கு கொள்ளையர்களாக வருகை புரிகிறார்கள். ஆல் இண்டியா பர்மிட் லாரிகளில் கூலிகளைப்போல் வந்துபோகும் இவர்களில் ஒருவரைப் பிடித்துவிட்டார் போலீஸ் ஐ.ஜி. நானுராம். இருந்தாலும் புறநகர் கொலை, கொள்ளை தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறது.

ஷெகாவாட்டி கள ஆய்வுக்குப் பிறகு, என்னுடன் வந்திருந்த நிர்மல் ஃபெரோஸாபாதுக்குச் செல்லலாம் என்றான். ஜவஹர்லால் நேரு பல்கலைக்கழகத்தில் குழந்தைத் தொழிலாளர்கள் பற்றி ஆய்வு செய்துகொண்டிருந்த அவன் இப்போது சிகாகோ பல்கலைக்கழகத்தில் இருப்பதாகக் கேள்விப்படுகிறேன்.

ஆக்ராவுக்குப் பக்கத்திலுள்ள ஃபெரோஸாபாதை ‘இந்தியாவின் கண்ணாடி பூமி’ என்று அழைக்கிறார்கள். இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான பெண்களுக்கு கண்ணாடி வளையல் சப்ளை செய்யும் ஊர் இது. ஒரு ஆண்டில் இங்கே 500 கோடி ரூபாய்க்கு கண்ணாடி வளையல்கள் தயாராகின்றன. பத்து வயதிலிருந்து பதினைந்து வயது வரையிலான 20,000 குழந்தைகள். 1400 டிகிரி செல்ஷியஸ் முதல் 1700 டிகிரி செல்ஷியஸ் வரை வெப்பமுள்ள நெருப்பு உலைகளில் கண்ணாடியை உள்ளே போட்டு அது உருகியதும் வெளியே எடுக்கிறார்கள் சிறுவர்கள். உடம்பில் தீக்காயம் இல்லாத சிறுவர்களையே பார்க்க முடியவில்லை. 12 வயதுக்கும் குறைவான சிறுவர்கள் பத்துக்குப் பன்னிரண்டு அறையில் வளையல் செய்து கொண்டிருக்கிறார்கள். ஒரே ஒரு மண்ணெண்ணெய் விளக்கு மட்டுமே இருக்கிறது. ‘ஏன் இந்த அறைக்கு ஜன்னல் இல்லை?’ என்று என்னுடன் வந்த மேலாளரைக் கேட்டேன். ‘ஜன்னல் வைத்தால் காற்றில் விளக்கு அலையும். சரியாக வளையல் உருட்ட முடியாது’ என்றார். வளையல் உருட்டும் சிறுவர்கள் தினமும் 16 மணி நேரம் உருட்டுகிறார்கள். தினக் கூலி 30 ரூபாய். ‘தேவடியாப் பசங்க. குளிப்பதுகூட கிடையாது. அந்த நேரத்திலும் வளையல் உருட்டி காசு சம்பாதிக்கலாம் என்று பார்க்கிறார்கள்’ என்றார் மேலாளர்.

## 49. Happy Valentine's Day!

what matters most is

how well you

walk through the

fire

Charles Bukowski

அவள் பெயர் ரஞ்சனி. சிங்கப்பூர்வாசி. திவ்யாவுக்கு சீனியர். இரண்டு வருடங்களில் சுமார் 1000 மணி நேரம் என்னுடன் கணினியில் கடலை போட்டவள். கடலையைவிட ரஞ்சனியின் விசேஷ அம்சம், ஈமெயில். ஒவ்வொரு நாளும் பக்கம்பக்கமாக அனுப்புவாள். மிக அருமையான ஆங்கிலத்தில் ஷேக்ஸ்பியரையும் இன்ன பிறரையும் மேற்கோள் காட்டி பின்னி விளையாடுவாள். திவ்யாவினுடையதைப் போல் அசட்டு மெயில்களாக இருக்காது. மொத்தம் 500 மெயில்கள் இருக்கும். ஆனால் நான் சிங்கப்பூர் போனபோது அவள் என்னைத் தொடர்பு கொள்ளவேயில்லை.

ஆச்சரியமாக இருந்தது. காரணம், மெயிலோடு மட்டுமின்றி, சிங்கப்பூரிலிருந்து அடிக்கடி என்னோடு தொலைபேசியிலும் பேசுவாள் ரஞ்சனி. சிங்கப்பூர் வந்து நான்கு தினங்கள் ஆகியிருந்தன. நண்பர்கள் செலின் மற்றும் ஸ்ரீகணேஷ் இருவரையும்கூட ரஞ்சனிக்கு அறிமுகப்படுத்தி வைத்திருக்கிறேன். ஆனால் ‘செலினிடம் நான் பேசுவதில்லை. பேசியே ஒரு வருடம் இருக்கும். எப்போது பேசினாலும் ஒரே தத்துவமாகப் பேசி அறுத்துத் தள்ளிவிடுகிறார்’ என்று சொல்லியிருந்தாள் ரஞ்சனி. சிங்கப்பூர் வந்தால் செலின் வீட்டில்தான் தங்குவேன் என்பதும் ரஞ்சனிக்குத் தெரியும். எனவே செலின் மூலமாகக்கூட நம்மைத் தொடர்பு கொள்ளவில்லையே என சற்று ஆச்சரியம் கூடியது. ஒருவேளை செலினின் தத்துவத்துக்கு பயந்து பேசவில்லையோ என்றும் ஒரு சம்சயம். இருந்தாலும் ஸ்ரீகணேஷிடம் கேட்டு இருக்கலாமே? இப்படியெல்லாம் யோசித்து பிறகு இந்த விஷயத்தை மனதிலிருந்து ஒதுக்கிவிட்டேன்.

அப்போது ஒரு நாள் கணினியில் வேலையாக இருந்தபோது ரஞ்சனியிடமிருந்து ‘ஹாய்’ வந்தது. ‘சிங்கப்பூர் வந்தும் நீங்கள் என்னைத் தொடர்பு கொள்ளவில்லை, அதனால்தான் நானும் உங்களைத் தொடர்பு கொள்ளவில்லை’ என்றாள். ‘என் பழைய டைரியைக் கொண்டுவரவில்லை, புது டைரியில் உன் தொலைபேசி எண் இல்லை. அதுதான் காரணம்’ என்றேன்.

‘ஏன் செலினிடம் கேட்க வேண்டியதுதானே?’

‘சே, இந்த நல்ல யோசனை ஏன் நமக்குத் தோன்றாமல் போயிற்று?’ என்று யோசித்துக்கொண்டிருக்கும்போதே ‘ஓ.கே. பை’ என்று சொல்லி என் பதிலுக்குக்கூட காத்திராமல் அரட்டையை முடித்தாள் ரஞ்சனி.

அன்று மதியம் என் நண்பன் சித்தார்த்துடன் ஒரு ஓட்டலில் உணவருந்திக்கொண்டிருந்தபோது அவனுக்கு ஒரு தொலைபேசி அழைப்பு. அந்த உரையாடலில் சித்தார்த்தனின் பகுதி:

‘ஹலோ சொல்லுங்க... நான் சித்தார்த்தன்தான் பேசுறேன்.’

‘அப்படீங்களா? நான் கவிதை எழுதறதில்லீங்க...’

‘என்ன? ஓ... அது நான் இல்லிங்க. அது வேற சித்தார்த்தன். நான் கவிதை எழுதறதில்லைங்க.’

‘ஓ... வேலண்டைன்ஸ் டே கவிதையா? நமக்கு அதெல்லாம் தெரியாதுங்க...’

‘என்ன, என்னைப் பார்த்து இருக்கீங்களா? ஓ...’

‘என் நம்பர் உங்களுக்கு எப்படித் தெரியும்?’

‘ஓ, சொல்ல மாட்டீங்களா? சரிங்க.’

‘ம்ஹூம். நிச்சயமாக நான் கவிதை எழுதறதில்லீங்க...’

சுமார் 10 நிமிட நேரம் சித்தார்த்தன் இதையே திரும்பத் திரும்ப சொல்லிக்கொண்டிருந்தான்.

பேசுவது யார் என்று எனக்குத் தெரிந்து போயிற்று. ‘காதலர் தினத்துக்கு கவிதை கொடு’ என்று ஒருவரை சாட்டையால் அடித்தால் எப்படியிருக்கும்? அந்தக் காட்சிதான் என் மனக்கண் முன்னே வந்து போயிற்று.

சித்தார்த்தனின் உணவு ஆறியே போய்விட்டது. அவனும் விட்டால் போதுமென்ற களைப்பு தோன்ற ‘கொடுமை பெருமாள், கொடுமை... யார் இந்தப் பெண் ரஞ்சனி? இவரை எனக்கு முன்னே பின்னே தெரியாது. யார் என் நம்பரை இவருக்குக் கொடுத்தது? சாப்பிட விடாமல் இப்படி அறுத்துத் தள்ளிவிட்டாரே? நான் கவிதை எழுத மாட்டேன் என்று சொல்லியும் விட மாட்டேன் என்கிறாரே? அதுவும் தவிர, உன்னதம் பத்திரிகையில் எழுதும் சித்தார்த்தன்கூட சிறுகதைதானே எழுதுகிறார்? கவிதை எழுதுவதில்லையே? ‘உன்னதத்தில் உங்கள் கவிதைகளைப் படித்திருக்கிறேன். எனக்கு ரொம்பப் பிடிக்கும்’ என்று சொல்கிறார்! ம்... அதுவும் முன்பின் தெரியாத ஒருவரிடம் இப்படியா கொஞ்சிக் கொஞ்சிப் பேசுவார்கள்? எனக்கு இப்படிக் கொஞ்சிப் பேசினாலே பிடிக்காது பெருமாள்’ என்று பலவாறாகப் புலம்பித் தள்ளினான் சித்தார்த்தன்.

சிறிது நேரம் கழித்து நானும் சித்தார்த்தனும் வேறொரு நண்பரைச் சந்திக்கக் கிளம்பினோம்.

அந்த நண்பரிடம் சித்தார்த்தன் ரஞ்சனி பற்றிய விபரம் கேட்டு, தான் மதிய உணவு சாப்பிட முடியாமல் போன கதையை சிரிக்கச் சிரிக்கச் சொல்லிக்கொண்டு வந்தான். அந்த நண்பருக்கும் ரஞ்சனியைத் தெரிந்திருக்கிறது. அவர் சித்தார்த்தனிடம் கூறிய இரண்டு தகவல்கள் என்னைத் திடுக்கிடச் செய்தன.

1. ‘அரை மணி நேரத்துக்குக் குறையாமல் பேசியிருப்பாங்களே?’

‘இல்லை. பத்து நிமிஷம்தான்.’

‘அப்படியானால் ரஞ்சனியிடம் பத்து நிமிஷம் மட்டுமே பேசிய முதல் ஆள் நீங்கள்தான்.’

2. ‘கொஞ்சிக் கொஞ்சிப் பேசியிருப்பாங்களே?’

பிறகு சித்தார்த்தனும், நானும், அந்த நண்பரும் காஃபி அருந்துவதற்காக

வுட்லண்ட்ஸ் நூலகத்துக்கு வெளியேயுள்ள ஒரு உணவகத்துக்குச் சென்றோம்.

கா∴பி அருந்திக்கொண்டிருந்தபோது அந்த நண்பருக்கும் ரஞ்சனியிடமிருந்து தொலைபேசி அழைப்பு. பேச்சு என்னைப் பற்றி இருந்ததால் நண்பர் சற்றுத் தள்ளிப்போய் நின்று பேசிவிட்டு அரை மணி நேரம் கழித்து வந்தார். வரும்போதே 'என்ன பெருமாள், ரஞ்சனி உங்கள் எழுத்தை இப்படித் திட்டுறாங்க?' என்று சொல்லிக்கொண்டு வந்தார்.

அதுவரை ரஞ்சனியைத் தெரிந்தது போலவே காட்டிக்கொள்ளாமலிருந்த நான் அதற்குமேல் பொறுக்க முடியாமல் வெடித்து விட்டேன்.

'அந்தப் பெண் இதுவரை எனக்கு 500 மெயில்கள் எழுதியிருப்பார்.'

மறுநாள் ரஞ்சனியிடமிருந்து எனக்கு ∴போன் வந்தது.

'என் சிங்கப்பூர் நம்பர் உனக்கு எப்படித் தெரிந்தது?' என்று கேட்டேன்.

'நான் என்ன சாதாரண ஆளா? நானே கண்டுபிடித்தேன். ஆனால் செலினிடம் கேட்கவில்லை.'

பிறகுதான் என்னைத் தொடர்பு கொள்ளாததன் காரணம் நான் சமீப காலமாகப் பெண் கவிஞர்களை மிகவும் தாக்கி எழுதுவதால்தான் என்றாள். அதற்கு நான் பதில் கூற விரும்பவில்லை. அவளிடம் பேசுவதே வீண் என்று தோன்றியது.

ரஞ்சனி அதோடு என்னை விடவில்லை. மேலும் கூறினாள்:

'நீங்கள் சித்தார்த்தன் பக்கத்தில் இருந்தது எனக்குத் தெரியும். உங்களிடம் பேசுவதற்காகத்தான் அவரிடம் பேசி அப்படி அவமானப்பட்டேன். உங்களுக்காகக் கண்டவனிடமெல்லாம் அவமானப்பட வேண்டியிருந்தது பாருங்கள்.'

இதோடு முடிக்கவில்லை. மூன்று நிமிடங்கள் சித்தார்த்தனை அவன் இவன் என்று குறிப்பிட்டு திட்டித் தீர்த்தாள். அடுத்து, ஸ்ரீகணேஷ் படலம். ஸ்ரீகணேஷின் மகனும், மகளும் ஒரு பேச்சுப் போட்டியில் கலந்துகொண்டார்களாம். அதற்கு நடுவர், ரஞ்சனி. பெண் குழந்தைகளுக்கான போட்டியில் ஸ்ரீகணேஷின் புதல்வி ஜெயித்துவிட்டாள். ஆனால் மகன் தோற்றுவிட்டான். மகனுக்குப் பரிசு கொடுக்காததன் காரணமாக ரஞ்சனியின் மீது ஸ்ரீகணேஷ் பகைமை பாராட்டுகிறார். 'நான் என்ன செய்யட்டும் பெருமாள்? அந்தப் பையன் சரியாகப் பேசவில்லையே? அது மட்டுமல்ல. போட்டி நடக்கும்போது அந்தப் பையன் ஸ்ரீகணேஷின் மகன் என்றும் எனக்குத் தெரியாதே? தெரிந்திருந்தாலாவது முதல் பரிசை அவனுக்குக் கொடுத்திருப்பேன்...'

SHIT SHIT SHIT SHIT SHIT SHIT SHIT SHIT SHIT

SHIT SHIT SHIT SHIT SHIT SHIT SHIT SHIT SHIT

SHIT SHIT SHIT SHIT SHIT SHIT SHIT SHIT SHIT

ரஞ்சனி ஒருமுறை சென்னை வந்திருந்தபோது என்னைச் சந்திக்க விரும்பினாள். நான் அதைத் தவிர்த்துவிட்டேன். காரணம்? பில்லி சூன்யம், செய்வினை போன்ற விஷயங்கள் மீது எனக்குள்ள பயம். அதாவது ரஞ்சனி

தன்மீது யாரோ செய்வினை செய்திருக்கிறார்கள் என்றும், அதனால் ஏகப்பட்ட பிரச்னைகள் என்றும் அடிக்கடி சொல்லிக் கொண்டிருப்பாள். என்னிடமா இதைச் சொல்லித் தொலைப்பது? நான் பில்லி சூன்ய விவகாரங்களை 'மெட்ராஸ் அய்'யைப் போல் ஒட்டுவாரொட்டியாக நினைப்பவன். Exorcist படம் பார்த்துவிட்டு ஒரு வார காலம் தூங்க முடியாமல் அவஸ்தைப்பட்டவன். இன்றளவும் ட்ராகுலா படம் ஏதாவது பார்த்தால் தனியாக இருக்க பயப்படுவேன். அதிலும் இரவு என்றால் கேட்கவே வேண்டாம். என்னுடைய கெட்ட நேரம் - அப்போது பார்த்துத்தான் ஏதாவது அமானுஷ்யமான சத்தம் கேட்டுத் தொலைக்கும். பாருங்கள். இதை எழுதும் இந்த வேளையில்கூட என் அறைக் கதவு தானாகத் திறந்துகொண்டு ஒரு கணம் எனக்குக் குலைநடுங்கிவிட்டது. போய் செலினின் அறையில் படுத்துக்கொள்ளலாமா என்றுகூட நினைத்து விட்டேன். (இதை நான் சிங்கப்பூரில் செலின் வீட்டிலிருந்து எழுதிக்கொண்டிருக்கிறேன்.) எழுந்து பார்த்தபோதுதான் கதவை நான் சரியாகத் தாளிடவில்லை என்று தெரிந்தது. இப்படித்தான் கடைசியில் அந்த அமானுஷ்ய சத்தம் எலி ஓடியதால் ஏற்பட்டதென்று தெரியும். தெரிந்துகொண்டு என்ன பயன்? பயம்தான் கூடிவிடும். ட்ராகுலா வரும்போது எலிகளும் கூட வருமாமே? Werner Herzogஇன் Nosferatu படத்தைப் பாருங்கள் தெரியும்.

பில்லி சூன்யமெல்லாம் கட்டுக்கதை என்பீர்கள். மேற்கத்தியக் கல்வி கொடுத்த அறிவின் வழி யோசித்தால் அப்படித்தான் தெரியும். ஆனால் இந்திய தாந்த்ரீகம், மாந்த்ரீகம் பற்றி அறிந்தவர்களுக்கு நான் எழுதுவது புரியும்.

சமீபத்தில் சென்னையில் சாமியார் ஒருத்தர் போலீஸில் மாட்டினார் அல்லவா? அவரால் எப்படி அத்தனை பெண்களை ஏமாற்ற முடிந்தது? அந்தப் பெண்களின் புகார்களைப் படித்துப் பார்த்தபோது ஒரு விஷயம் தெளிவாகத் தெரிந்தது. 'அந்தச் சாமியார் என்னை உற்றுப் பார்க்கும்போது மயக்கம் வருவதுபோல் இருந்தது. பிறகு மயக்கம் தெளிந்து எழுந்து பார்க்கும்போது உடம்பெல்லாம் புண்ணாக வலித்தது.' இதை அவரிடம் சிக்கிய அத்தனை பெண்களும் கூறியிருந்தனர். எப்படி? இது ஒரு சிறிய வித்தை. இதன் உச்சபட்சமாக கூடு விட்டுக் கூடு பாய்வதைக் கூறலாம். திருமூலர், அருணகிரிநாதர், பட்டினத்தார், வள்ளலார் போன்ற சித்தர்கள் இது பற்றிக் குறிப்பிட்டுள்ளனர். வள்ளலாரின் கட்டுரைகளிலும் இது பற்றிய குறிப்புகள் உண்டு. 'எண்ணெய்க்கு பதிலாக தண்ணீரை விட்டு விளக்கேற்றுவார்' என்று வள்ளலாருடன் கூட இருந்தவர்கள் எழுதியுள்ளனர்.

இதேபோல் வேறொரு சித்து உண்டு. வயிற்றிலுள்ள குடலை வெளியே எடுத்து சுத்தம் செய்து, திரும்பவும் வயிற்றுக்குள் போட்டுக் கொள்வதை யோகத்தில் நௌலி என்று சொல்வார்கள். இதன் இறுதி நிலை தன் உடல் உறுப்புகளையே தனித்தனியாகப் பிய்த்துப் போட்டு பிறகு ஒன்றாகச் சேர்த்துக்கொள்வது. இது பற்றி இமயமலையில் நான் சுற்றித் திரிந்தபோது துறவிகள் சொல்லிக் கேள்விப்பட்டிருக்கிறேன். பிறகு சமீபத்தில் ஷீர்டி பாபாவின் வாழ்க்கைச் சரிதத்தைப் படித்துக்கொண்டிருந்தபோது அதிலும் இப்படி ஓர் சம்பவம் வருவதைக் கண்டேன். பாபாவைக் காண அவரது நெருங்கிய சீடர் ஒருவர் அவர் தங்கியிருக்கும் மசூதிக்கு வருகிறார்.

பொதுவாக அந்த நேரத்தில் பாபா யாரையும் காண்பதில்லை. சீடர் வந்து பார்த்தபோது பாபாவைக் காணவில்லை. அதற்குப் பதிலாக, அவரது உடல் உறுப்புகள் வெட்டப்பட்டதுபோல் ஆங்காங்கே சிதறிக் கிடந்துள்ளன. பதறிப்போன சீடர் உடனே ஷீர்டி கிராம மக்களிடம் சென்று 'நம் பாபாவை யாரோ வெட்டிக்கொன்றுவிட்டார்கள்' என்று சொல்ல, அவர்கள் ஓடிவந்து பார்த்தால் பாபா வழக்கம்போல் தன் வலது காலை இடது காலின் மேல் போட்டபடி பீடி புகைத்துக் கொண்டிருந்தாராம்.

ஆதி சங்கராச்சாரியாரும் இவ்வித்தைகளில் கைதேர்ந்தவர் என்பது அவரது பாடல்களிலிருந்து தெரிகிறது. அதை வைத்துத்தான் மன்னர்களின் மனதில் இடம் பிடித்து அவர்களை மதம் மாற்றி புத்த மதத்தை இந்தியாவிலிருந்து விரட்டியடித்தார்.

இவ்வளவு ஏன்? மீராவின் அம்மாவை எடுத்துக்கொள்ளுங்கள். அவர் கல்லூரிப் படிப்பு முடித்து திருவல்லிக்கேணியிலுள்ள ஒரு உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியையாகப் பணியாற்றி வந்தபோது - 30 வயதில் - திடீரென்று ஒரு நாள் முழுமையான மனச் சிதைவுக்கு உள்ளாகி, பிறகு 50 ஆண்டுகள் அந்தப் பைத்திய நிலையிலேயே வாழ்ந்து, சமீபத்தில் தனது 80ஆவது வயதை நெருங்கும்போது இறந்துபோனார். நினைக்கும்போதே நெஞ்சம் பதறுகிறது. 50 ஆண்டுகள் ஒரு பெண் சித்த சுவாதீனமின்றி, அந்த நிலையிலும் குழந்தைகள் பெற்று வாழ்வது என்றால் அது எவ்வளவு பெரிய குரூரம்? அவர் இறந்த அதிர்ச்சியில் மீரா நான்கு மாதங்களாக உடல் நிலை சரியில்லாமல் படுத்த படுக்கையாகக் கிடந்தாள். அந்த நிலையில்தான் நான் சிங்கப்பூர் கிளம்பினேன். இன்னமும் அவள் முழுமையாக குணமடையவில்லை. அவளுடைய அம்மா இறந்து போனதை நினைத்து, அவருடைய துயரமான வாழ்வை நினைத்து மீராவின் உடல் அதிரும் வேளைகளில் என் கண்களில் நீர் மல்க 'அழாதேம்மா.. அந்த மரணம் உன் அம்மாவுக்குக் கிடைத்த விடுதலை' என்று சொல்வேன்.

மீராவின் அம்மா வைர வைடூரியங்களிலும் சுகபோகத்திலும் வாழ்ந்த ஒரு பெண். எந்த முகாந்திரமும் இல்லாமல், எந்தப் பின்னணியும் இல்லாமல், திடீரென்று ஒரு நாள் சித்தம் கலங்கிப்போனதன் காரணம், அவரது உறவினர்கள் அவருக்கு வைத்த செய்வினைதான் என்று அறிந்தேன்.

ஆசிரியையாக இருந்தபோது எடுத்த அவரது இளவயது புகைப்படத்தைப் பார்த்தேன். பிரமிக்க வைக்கும் அழகு. இந்தி, ஆங்கிலம், சமஸ்கிருதம், தமிழ் எல்லாவற்றிலும் தேர்ந்த புலமை. 'வீட்டில் டிக்ஷனரியே தேவையில்லை; வைதேகியிடம் கேட்டால் போதும்' என்று பேசிக்கொள்வார் களாம்.

அவருக்கு செய்வினை வைத்த பெண்மணி உடலெங்கும் புழுப் புழுவாய் நெளிய செத்துப்போனார் என்று சொன்னார் கள். இந்த வேலைக்கு உதவிய இரண்டு பேருக்குக் குஷ்டம். இருவரில் ஒருவரின் பெண் விபத்தில் இறந்துபோனாள். ஒரு பெண் யாரோ ஒருவனை இழுத்துக்கொண்டு ஓடிவிட்டாள். இரண்டாவது நபரின் இரண்டு குழந்தைகளுக்கும் பைத்தியம். இன்னும் மோசமான, படு பயங்கரமான விளைவுகள். அந்த இரண்டு பேரையும் சவ காரியங்களின்போது பார்த்தேன். குஷ்டத்தில் அழுகிய கால்களுக்கு கட்டுப் போட்டபடியே, பிதுரார்ஜிதமாகக்

கிடைத்திருக்கும் ஒரு பெரிய சொத்து சம்பந்தமாக மீராவின் தந்தை கையெழுத்துப்போட வர வேண்டும் என்று அவரை வற்புறுத்திக்கொண்டிருந்தார்கள் அந்த இருவரும். வைதேகி அம்மாளின் உடல் அப்போது தகனத்துக்காகக் காத்துக்கொண்டிருந்தது.

செய்வினை செய்தால் செய்தவரையும் அது பழி வாங்கும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனாலும் என்ன? நமக்கு இரண்டு கண் போனாலும் எதிரிக்கு ஒரு கண் போயிற்றா? அந்த வரை லாபம்...

இந்தப் பின்னணியின் காரணமாகவே ரஞ்சனி செய்வினை, சூன்யம் என்றெல்லாம் சொன்னதும் என் கைகால்கள் நடுங்க ஆரம்பித்துவிட்டன. ‘வணக்கம் அம்மணி, ஆளைவிடு... நீ சந்திக்க வேண்டியது ஒரு நல்ல மாந்த்ரீகவாதியையே தவிர என்னை அல்ல’ என்று சொல்லி தப்பித்துக்கொண்டேன்.

ரஞ்சனி நல்ல புத்திசாலி. ‘மலேஷியா பத்மினி பற்றி அவ்வளவு எழுதியிருக்கிறீர்கள்... நான் சென்னை வந்தபோது உங்களை சந்திக்கக் கேட்டதற்கு நீங்கள்தானே தவிர்த்து விட்டீர்கள்? அதை வைத்து உங்களைக் கன்னாபின்னா வென்று திட்டி நான் ஒரு கட்டுரை எழுதினால் உங்களுக்கு எப்படி இருக்கும்?‘

மரியோ பர்கஸ் யோசா Aunt Julia and the Scriptwriter-இல் தனக்கும் தன் சித்திக்கும் இருந்த பாலியல் உறவைப் பற்றி எழுதினார். இந்த நாவல் தன்னைப் பற்றி மிக மோசமான அவதூறு என்று கருதிய யோசாவின் சித்தி இதற்கும் எதிர்வினையாக ஒரு நாவல் எழுதினார். ஆனால் இன்று உலக இலக்கியத்தில் நிற்பது, யோசாவின் Aunt Juliaவே தவிர அவரது சித்தி எழுதிய நாவல் அல்லவே?

செலின் வீட்டில் ஜோ என்று ஒரு நண்பர் தங்கியிருந்தார். ஜோ சமையல் கலையில் வல்லுநர். ரஞ்சனி எனக்கு ஃபோன் செய்து ஹௌகாங்க் மாலுக்கு வர முடியுமா என்று கேட்டாள். முடியவே முடியாது என்று பதிலிறுத்தேன். காரணம், எனக்கு வயிற்றுப் போக்கு. இதற்கு மூல காரணம் மணி என்றுதான் சொல்ல வேண்டும். மணியின் மூலமாக எனக்குக் கிடைத்த நற்பயன்கள் இரண்டு. 1. ஸ்காட்ச் விஸ்கியைத் தவிர வேறு எதைக் குடித்தாலும் மறுநாள் காலை உயிர் போகும் தலைவலி வந்துவிடுகிறது. 2. பார்க் ஷெரட்டன் சாப்பாட்டைத் தவிர - அல்லது, மீராவின் சமையலைத் தவிர - வேறு எதைச் சாப்பிட்டாலும் வயிறு ஏற்றுக்கொள்ளமாட்டேன் என்கிறது. இது தமிழ்ச் சாப்பாட்டைப் பொறுத்தவரை மட்டும்தான். மற்றபடி, சீன உணவு, தாய் உணவு, மலாய் உணவு என்று எதைச் சாப்பிட்டாலும் அது ஒத்துப்போகிறது. இந்த முக்கியமான விஷயத்தை மறந்துவிட்டு சிங்கப்பூர் வந்ததும் தமிழ் உணவகம் ஒன்றில் மீன் தலையைச் சாப்பிட்டதும் ஆரம்பித்தது வயிற்றுப்போக்கு. நிற்கவே இல்லை. அந்த நேரத்தில்தான் ரஞ்சனி ஹௌகாங்க் மாலுக்கு என்னை அழைத்தாள். ‘சாத்தியமேயில்லை’ என்றேன். உடனே அவள் கூறிய வாசகம்: ‘நான் செலின் வீட்டுக்கு வர முடியும். ஆனால் அங்கே ஜோ இருப்பார். ஜோவுக்கு ஆண் - பெண் நட்பு என்றால் அதைப் படுக்கையறை உறவாக மட்டுமே பார்க்க முடியும்; அதனால்தான் அங்கே போவதில்லை. போன வருடம் ஒருமுறை போனேன். அதோடு சரி.’

பிறகு ரஞ்சனியே என்னைப் பார்க்க செலின் வீட்டுக்கு வந்தாள்.

‘ரஞ்சனி வருகிறாராம். அவருக்கு இந்த வீடு தெரியுமா?’ என்று ஜோவிடம் கேட்டேன்.

‘ஏன், தெரியுமே... பல தடவை வந்திருக்கிறாரே...’

‘என்னது, பல தடவையா?’

‘ஆமாம். போன வாரம்கூட வந்தாரே? இன்னிக்குக்கூட எனக்கு வேலண்டைன்ஸ் டே வாழ்த்துச் சொன்னார். ஆனா என்ன பிரச்னைன்னா, ஃபோனை எடுத்தா வைக்கவே மாட்டார்...’

இதற்குப் பிறகு சித்தார்த்தனும் இதே வார்த்தைகளைச் சொன்னான்.

‘பெருமாள், அந்தப் பெண் ரஞ்சனி மீண்டும் இன்று என்னுடன் பேசினார். வேலண்டைன்ஸ் டே வாழ்த்து வேறு சொன்னார்.’

நான் வயிறு சரியில்லாமல் அறைக்குள்ளேயே முடங்கிக் கிடந்தேன். உறங்கிவிடக்கூடாது; ரஞ்சனி வந்தால் கதவைத் திறக்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டிருந்தபோது கீழே சத்தம் கேட்டது. மாடிப்படி இறங்கி வந்து பார்த்தால், வீட்டுக்குள் ரஞ்சனி. ஆச்சரியத்துடன் ‘எப்படி, நீ வீட்டைத் திறந்தாய்?’ என்று கேட்டேன். ‘திறந்தேதான் இருந்தது’ என்றாள். என்னால் அதை நம்பவே முடியவில்லை. அவ்வளவு அஜாக்கிரதையான ஆள் அல்ல நான்.

தனக்கு இப்போது கேன்சர் என்றாள். இரண்டு ஆண்டுகளாக இப்படிப் புதுப் புது வியாதிகளின் பெயர்களாகக் கேட்டுக் கேட்டு அலுத்துப்போய்விட்டதால் ‘ஓ, அப்படியா?’ என்று மட்டும் கேட்டு வைத்தேன். தேவையான அளவுக்கு நடிக்க முடியவில்லை.

ஜோ வந்ததும் விஷயத்தைச் சொன்னேன். வீட்டின் சாவி ஒன்று ரஞ்சனியிடம் இருப்பதாகக் கூறினார் ஜோ.

## 50. கணினி வாழ்வு

"Do you know what they call the fat stuff around the vagina? No? The woman..."

Michel Houellebecq: The Possibility of an Island.

பொன் குலாம் பயலை பூத்தன மென் தோள்;
பொரு கயல் துயில் மறந்தாள்;
அன்பினால் உன்மேல் அதரம் பெரிது; இவ்
அணங்கினுக்கு உற்ற நோய் அறியேன்;
மின் குலாம் மருங்குல் சுருங்க, மேல் நெருங்கி
வீங்கிய வன முலையாளுக்கு
என்கொல் ஆம்? குறிப்பில் என் நினைந்து இருந்தாய்?

இடவெந்தை எந்தை பிரானே!

-பெரிய திருமொழி : திருமங்கை ஆழ்வார்.

‘உன் முலைக் காம்புகளை என் நாவினால் வருட வேண்டும் போல் இருக்கிறது.’

‘Oh, My God’

‘ஏய், இடியட் இதற்கெல்லாம் கடவுளைக் கூப்பிடக்கூடாது.’

‘அய்யோ!’

‘உன் முலைகளைச் சுவைக்கும்போது அதன் மனம் என்னைக் கிறங்க அடிக்கிறது.’

‘ம்... இன்று உனக்கு வேலை இல்லையா?’

‘உன் முடி மீது என் முகம் வைக்க வேண்டும்.’

‘ம்...’

‘என்ன ‘ம்...?’

‘ம் என்றால் கேட்டுக்கொண்டிருக்கிறேன் என்று அர்த்தம்.’

‘எப்போதும் உன்னை முத்தமிட்டபடியே இருக்க வேண்டும்.’

‘ம்...’

‘உன் நாக்கு என் வாய்க்குள் இருக்க வேண்டும்.’

‘ஏய், நீ நாக்கால் மூக்கைத் தொடுவாயா?’

‘நம் இரண்டு பேருடைய நாக்குகளும் பாம்புகளைப் போல் சுருண்டு புரள வேண்டும்.’

‘ஏய், நான் கேட்டதற்கு பதில் சொல்.’

‘உன் கீழ் உதடு என் வாய்க்குள் இருக்க வேண்டும்.’

‘ஹலோ?’

‘ம்... தொடுவேன்.’

‘ஏய்... என் மூக்கை அல்ல. உன் மூக்கை... திருடா.’

‘நீ தொடும்போது அந்த நாக்கை அப்படியே கவ்விக் கொள்வேன்.’

‘அய்யோ...’

‘நோ டியர். தொட முடியாது.’

‘ஓ... நான் தொடுவேன்.’

‘அடப்பாவி!’

‘ஏய், நீ முயற்சி செய்து பார்.’

‘உன் clitorisகூட மூக்கு மாதிரிதானே இருக்கும்?’

‘ஏய்... நான் எப்படிப் பேசுகிறேன். நீ எப்படிப் பேசுகிறாய்? ச்சே போ... கருமம்

பிடித்தவனே...'

'நானும் நன்றாகத்தானே பேசுகிறேன்?'

'இடியட்.'

'உன்னிடம் பேசாமல் வேறு எவளிடம் பேசுவது?'

'நல்ல கேள்வி. ஆனால் பதில் சொல்ல மாட்டேன்.'

'அன்றைக்கு மேட்சில் நீ செம cooperation. தாங்க்ஸ்.'

'மாட்ச்?'

'நீதானேடீ சொன்னாய்... நாம் கலவி செய்வதைப் பற்றி நான் எழுதுவது கூட க்ரிக்கெட் கமெண்ட்ரி மாதிரி அவ்வளவு துல்லியமாக இருக்கிறதென்று?'

'ச்சீ... Stop man'

'முடியாது.'

'செயினைக் கடிக்கிறாயே... அது என் உதடாக இருந்தால்?'

'இடியட். வெப்கேமை நிறுத்திவிடுவேன்.'

'நிறுத்திப் பார், பார்ப்போம்.'

'இந்த வாரக் கடைசியில்... I felt... oh God... நிஜமாகவே ரொம்ப ரொம்ப... கஷ்டமாக இருந்தது...'

'ஏன், உடம்பு சரியில்லையா?'

'ம்... உன் தலை.'

'என்ன சொல்கிறாய்?'

'சொல்லத் தெரியவில்லை. ஒரு மாதிரி இருந்தது. முன்பு எப்போதுமே இப்படி இருந்ததில்லை. ச்சே... ரொம்ப ரொம்ப கஷ்டமாப் போச்சு.'

'ஏன், ரொம்ப வேலையா?'

'வேலை இல்லை. வேறு ஒன்று. I love you. கொஞ்சம் இதைக் குறைத்துக்கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் பைத்தியம் பிடித்துவிடும். You know... I was crying.. Oh God!'

'அப்படியெல்லாம் அழக் கூடாது.'

'தெரிகிறது. ஆனால் கட்டுப்படுத்த முடியவில்லை.'

'நான் எங்கே ஓடியா போய்விட்டேன்? உன்னோடு பேசிக் கொண்டேதானே இருக்கிறேன்?'

'அது சரி... ஆனால் என் திருமணத்துக்குப் பிறகு நான் என்ன ஆகப்போகிறேன் என்று தெரியவில்லை.'

'ம்...'

'என்ன 'ம்?'

'எப்போது திருமணம்?'

‘GOK’ (God only knows)

‘ம்...’

‘தினமும் நான் இரவில் அழுகிறேன் தெரியுமா? அமெரிக்கா வந்து நான் நிறையவே மாறிவிட்டேன். முன்பெல்லாம் நான் ரொம்ப கோபக்காரி. அந்த திவ்யா இப்போது இல்லை. சின்ன வயதில் நான் விளையாடியதே இல்லை. நான்காவதும் பெண்ணாகப் பிறந்து விட்டதால் எல்லோரும் என் அம்மாவைத் திட்ட ஆரம்பித்து விட்டார்கள். ஏய்... எங்கே போய்விட்டாய்?’

‘கேட்டுக்கொண்டிருக்கிறேன்.’

‘ஆனால் என் அப்பா அப்படியில்லை. இருந்தும் அம்மாவிடம் நன்றாகப் பேச மாட்டார். அம்மாவுக்கும் எனக்கும் - நான்தான் முதல் பெண் - ஆதரவாக யாருமே இல்லை. எல்லோரும் எங்களை அவமானப்படுத்துவார்கள். அதனால் முழு குடும்பப் பொறுப்பே என் தலையில் விழுந்துவிட்டது. அம்மா தற்கொலை செய்துகொள்ள முடிவெடுத்தார்கள். நான்கு குழந்தைகளுக்கும் விஷத்தைக் கொடுத்துவிட்டு தானும் செத்துவிடப்போகிறேன் என்று சொன்னபோது நான்தான் அதைத் தடுத்தேன். இதெல்லாம் அப்பாவுக்குத் தெரியாது. நான்தான் குழந்தைகளை கவனித்துக்கொண்டு, அம்மாவுக்கும் உதவி செய்துகொண்டிருந்தேன். அப்போது அப்பாவுக்கு உடம்பு சரியில்லாமல் போனது. எனக்கு பத்து வயது.’

‘ஏய், Put on the web cam...’

‘Got disconnected. அப்பாவை ஆஸ்பத்திரியில் அட்மிட் செய்திருந்தார்கள். முழுக் குடும்பத்தையும் கவனித்துக் கொண்டிருந்தது நான்தான். அம்மா எப்போதும் அப்பாவை கவனித்துக்கொண்டு ஆஸ்பத்திரியில் இருப்பார்கள். கடைக் குட்டி கலாவுக்கு இரண்டு வயது. அது கூட்டுக் குடும்பம் என்பதால் எல்லா உறவினர்களும் இருப்பார்கள். ஆனால் யாரும் எனக்கு உதவுவது கிடையாது. அப்பாவின் உடைகளையும் பெட்ஷீட்டுகளையும் நான்தான் துவைப்பேன். ஒரே ரத்தமாக இருக்கும். சித்தி இருப்பார்கள். ஆனால் ஒரு வேலை செய்ய மாட்டார்கள். கலாவையும் கவனித்துக்கொள்ள வேண்டும். அம்மா, அப்பாவைப் பார்க்க வேண்டும் என்று எப்போதும் கத்திக் கொண்டிருப்பாள். அம்மா மதியம் பன்னிரண்டு மணிக்குத்தான் வீட்டுக்கு வருவார்கள். சமைத்து வைத்துவிட்டு ஆஸ்பத்திரிக்குக் கிளம்பிவிடுவார்கள். மீதி நேரமெல்லாம் நான்தான் வேலை. பத்து வயதிலேயே எல்லாவற்றையும் கற்றுக்கொண்டு விட்டேன். அப்பா பிழைக்கமாட்டார் என்று சொல்லி விட்டார்கள். எங்கள் பிரார்த்தனைதான் அவரைக் காப்பாற்றியது. பிழைத்தது பெரிய அதிசயம். பிறகுதான் உறவினர்களைப் பற்றி அவருக்குப் புரிந்தது. எங்கள் அப்பா ஒரு தங்கம். எந்தக் கெட்ட பழக்கமும் இல்லாதவர். விவசாயி. படிக்காதவர். நிலத்தையெல்லாம் குத்தகைக்குக் கொடுப்பார். குத்தகை நெல்லும் வராது. நிலமும் வராது. அப்படியே போய்விடும். இப்படியே சொத்து எல்லாம் போயிற்று. பிடுங்கிக்கொண்டதெல்லாம் உறவினர்கள்தான்.

அப்பாவுக்கு உடம்பு சரியில்லை என்று பார்ப்பதற்காக கூட்டம் கூட்டமாக உறவினர் படை வரும். எல்லோருக்கும் காஃபி போட்டுக் கொடுக்க வேண்டும். பாத்திரங்கள் தேய்க்க வேண்டும். தங்கைகளின் துணிகள் வேறு.

பன்னிரண்டாம் வகுப்பு படிக்கும்போதும் இதேபோல் பிரச்னை. அப்பாவுக்கு ஹார்ட் அட்டாக். என் வாழ்க்கையில் நடந்த மிகப்பெரிய அதிர்ச்சி அது. திரும்பவும் என்னுடைய நர்ஸ் வாழ்க்கை தொடங்கியது. அதற்குள் எனக்கு ஆஸ்பத்திரி சமாச்சாரங்கள் அத்தனையும் அத்துப்படியாகியிருந்தது. எங்கள் அப்பா பார்ப்பதற்கு மிகவும் இளமையாக இருப்பார். உழைத்து உழைத்து உருக்கேறிய உடம்பு.

(இந்த இடத்தில் ஓர் இடைச் செருகல். எனக்கும் திவ்யாவுக்கும் இடையே தினம் ஆறு மணி நேரத்திலிருந்து பன்னிரண்டு மணி நேரம் வரை தொடர்ந்து நடந்த அரட்டைக்கு இது ஒரு உதாரணம். திவ்யா பேசுவது பொதுவாக இப்படிப்பட்ட சோகக் கதைகளாகவே இருக்கும். Not always. பொதுவாக. நான் வெறுமனே 'ம்' கொட்டிக்கொண்டிருப்பேன். அதனால்தான் மேற்கண்ட உரையாடலில் 'ம்' அவ்வளவையும் நீக்கிவிட்டேன். நான் பேசும்போது - பொதுவாக கணினி உரையாடல் மூலம் - அவளோடு கலவி கொள்வது வழக்கம். நேரடிக் கலவிக்கு ஒரு மணி நேரம் என்றால் - முன் விளையாட்டுக்களைச் சேர்த்து அவரவர் விருப்பப்படி, அவரவர் திறமைப்படி ஒரு மணி இரண்டு மணி என்று மேற்கண்ட ஒரு மணியோடு கூட்டிக்கொள்ளலாம்; ஆனால் இதையே ஒவ்வொரு எழுத்தாக கணினியில் டைப் செய்தால் - இதிலுள்ள அபத்தம் இருக்கட்டும். நாம் இப்போது இதன் கால அளவு பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறோம் - தொப்புளுக்கு இறங்குவதற்கே இரண்டு மணி நேரம் ஆகிவிடும் என்பதை நினைவில் கொள்க.)

'ஏய்... இப்போது உன் யோனிப் பிளவில் நிற்கிறது என் நாக்கு.'

'Oh... Stop man... stop!'

'No. I Won't stop. இப்போது அதன் நடுவில் தெரியும் கிளிமூக்கில் என் நாக்கு மிக வேகமாக இயங்குகிறது.

'ஐயோ... My God!!!!!!!!!!'

'யெஸ்... நீ இப்படித்தான் 'ஐயோ, My God' என்றும், இன்னும் பலவாறாகவும் கதறுகிறாய்.

'Oh... stop... stop...'

'யெஸ். கலவியின்போது நிறுத்து என்றால் 'இன்னும் இன்னும்' என்று அர்த்தம். எனவே கிளிமூக்கில் நீண்ட நேரம் நின்று விளையாடிய என் நாக்கு இப்போது யோனிக்குள் சென்றுவிட்டது. நாலா புறமும் சுழன்று சுழன்று விளையாடுகிறது. நீ கத்துகிறாய். கதறுகிறாய். யெஸ். இப்படித்தான். Stop...Stop... என்று சொல்லிக்கொண்டே என் தலையை உன் யோனியோடு வைத்து அழுத்துகிறாய். எனக்கு மூச்சு முட்டுகிறது. தண்ணீருக்குள் மூழ்கியிருக்கும்போது முட்டுவதைப் போல் மூச்சு முட்டினாலும் உன் இறுக்கமான பிடியை உதறிக்கொண்டு மேலே வந்து சுவாசத்தை இழுத்துக்கொள்ள என்னைத் தடுக்கிறது உன் யோனியின் மாந்த்ரீக ஈர்ப்பு. ஒரு கட்டத்தில் - ஒரே ஒரு க்ஷணம் - மேலெழுந்து சுவாசத்தை வாங்கிக்கொண்டு மீண்டும் அந்த மந்திர நதிக்குள் நுழைகிறேன். வட்டச் சுழற்சியுடன் நாக்கு புகுந்து புறப்படுகிறது. ஜல்லிக்கட்டு மைதானத்தில் சுழன்று சுழன்று வரும் காளையைப்போல் உன் யோனிக்குள் வெறி கொண்டு துழாவுகிறது என் நாக்கு. எவ்வளவு

நேரம் கடந்ததென்றே தெரியவில்லை. திடீரென்று அணை உடைந்த வெள்ளமாய்ப் பாய்கிறது உன் மதனநீர். ஏய், Are you wet now?'

'ம்?'

'பேண்ட்டீஸ் நனைந்துவிட்டதா என்று கேட்டேன்.'

'நீயே நேரில் வந்து பார்த்துக்கொள். ஆமாம், நீ என்ன மனிதனா, மிருகமா?'

'மனிதன் பாதி, மிருகம் பாதி என்று ஏற்கெனவே சினிமாவில் வந்துவிட்டது. வேறு எப்படிச் சொல்ல?'

'நீ என்ன நர மாமிசப் பிரியனா, இப்படித் தின்கிறாயே என்னை?'

'ஆமாம். அப்படித்தான் வைத்துக்கொள். உடல் பசி என்னை அப்படி ஆக்கிவிட்டது. மாமிசப் பிரியர்கள் மான்கறிக்கு ஆசைப்படுவதைப் போல் எனக்கு உன் கறி வேண்டும். உன் தொடைக்கறியைப் புசிக்க வேண்டும். தொடைக்கு நடுவேயுள்ள நிதம்பக் கறி அதிருசியானது. பிருஷ்டக் கறியைக் கடித்து உண்ண வேண்டும். விரல் கறியைச் சூப்ப வேண்டும். முலைக்கறி, கன்னக்கறி, உதட்டுக்கறி எல்லாமே சுவைக்க வேண்டும். I am the butcher. You are the meat. I am the hunter. You are the prey. I want to eat your plumage too. Once you told me it is hairy, remember?'

'என்ன? Oh God!எப்போது சொன்னேன்?'

'Listen, idiot. சார்லஸ் ப்யூகோவ்ஸ்கி தன்னுடைய 'பெண்கள்' நாவலை இப்படி ஆரம்பிக்கிறான்: I was 50 years old and hadn't been to bed with a woman for four years. அவனுக்காவது துல்லியமாக நான்கு வருடங்கள் என்ற கணக்கு இருக்கிறது. எனக்கு? நான் இருபது வயதிலிருந்து பட்டினி...'

'ஏய், என்ன ரீல் விடுகிறாய். முதலில் ஒரு திருமணம்... அப்புறம் ஒரு திருமணம்... போதாக்குறைக்கு இப்போது நான் வேறு.'

'நிறுத்து முட்டாள், நிறுத்து. எனக்கு மாதம் 20 முறை படுக்க வேண்டும். இது ஒன்றும் அதிகபட்சமல்ல என்றே நினைக்கிறேன். ஒரு சராசரி மனித ஜீவனுக்குத் தேவையான எண்ணிக்கைதான் இது. மாதம் 20 என்றால், ஒரு ஆண்டுக்கு 20 x12 = 240. 20 வயதிலிருந்து 50 வரை = 240 x 30 = 7,200. ஆகக் கம்மியான, பிச்சைக்காரத்தனமான கணக்கு இது. இதையே கோபால கிருஷ்ணனிடமோ, நரேனிடமோ, மணியிடமோ கேட்டால் 21,000 என்று சொல்வார்கள். சரி. இந்தப் பிச்சைக்காரத்தனமான 7,200இல் - ஓக்கே. உனக்காக அந்த 200ஐக் கூட கொசுறாக விட்டுவிடுவோம் - ரவுண்டாக 7000. இதில் உறவுக்கார பெண்கள் மற்றும் தோழிகளோடு ஒரு 100. பிறகு, எக்ஸுடன் மாதம் 2 வீதம் - யெஸ், மாதம் 2 - 10 ஆண்டுகள். 12 x 2 = 24 x 10 = 240. எக்ஸைப் பிரிந்த பின் 7 ஆண்டுகள் முழுப்பட்டினி. பிறகு, மீராவுடன் சந்திப்பு. மீராவுடன் முதல் இரண்டு ஆண்டுகள் மட்டுமே கலவி சாத்தியமானது. மாதம் 20. சமயங்களில் மாத விலக்கு நாட்களில் கூட.'

'ச்சீ... அசிங்கம் பிடித்தவனே.'

'ஏய், முட்டாள். கேள். இந்த மாத விலக்கு நாட்களில் கலவி கொண்டதால் எனக்கு ஒரு பிரச்னை. என்னவென்றால், கலவி முடிந்து ஸ்கலிதமான பிறகும் என் ஆண்குறி துவண்ட நிலைக்கு வராமல் கத்தியைப் போல் நீட்டிக்கொண்டேயிருக்கும்.'

‘Oh God... You are the dirtiest man in the world... please stop’

‘முடியாது, கேள். கேட்க விருப்பமில்லையானால் ஸிஸ்டத்தை ஆஃப் பண்ணு. அந்த மாதிரி நேரத்தில் பார்க்கும்போது என் குறி யாரையோ குத்திவிட்டு உருவிய கத்தியைப் போலவேயிருக்கும். ரத்தம் சொட்டியபடி...’

உரையாடலின் இந்தக் கட்டத்தில் அய்யோ, அய்யோ என அலறியபடி மேஜையின் மீது தலையைக் கவிழ்த்துவிட்டாள் திவ்யா. இருந்தாலும், நாம் இப்போது இந்த நாவலையும் அப்படியே விட்டு விட்டு அவளைப் போல் மேஜையின் மீது தலையைக் கவிழ்த்துக்கொள்ள முடியாது என்பதால் நாவலைத் தொடருவோம். இப்படியே பல முறை நடந்துவிட்டதாலோ என்னவோ, எனக்கு எப்போது கத்தியைப் பார்த்தாலும் அதன் மூலம் மீராவைக் குத்தி விட்டதுபோல் ஒரு பிரமை வந்து சேரும். எந்த நேரத்தில், எந்த இடத்தில் கத்தியைப் பார்த்தாலும் என்னை இந்த எண்ணம் வந்து தொற்றிக்கொள்ளும். உடனே அதன் விளைவை எண்ணிப் பதற்றமடைவேன். உயிருக்கு உயிராய் நேசிக்கும் ஒரு உயிரைக் கத்தியால் குத்துவதுபோல் தோன்றுவது - அதுவும் கத்தி என்ற வஸ்துவைப் பார்க்கும்போதெல்லாம் - எனக்குள் ஒருவித கிலியை ஏற்படுத்திக்கொண்டிருந்தது. எல்லாம் இந்த மாதவிடாய்க் காலத்தில் கலவி கொண்டதால் வந்த வினை. அல்லது, அந்த ஆண்குறியாவது ஸ்கலிதத்துக்குப் பிறகு பதவிசாகப் பதுங்கியிருந்தால் இந்த நிலைமை ஏற்பட்டிருக்காது. அது என்ன சிருஷ்டி விசித்திரமோ தெரியவில்லை. ஸ்கலிதமான பிறகும் சொட்டச் சொட்ட ரத்தத்துடன் நீட்டிக்கொண்டிருக்கும். மனித உடலுக்குள் சொருகியெடுத்த கத்தியைப் போல. சே.

கத்தியைப் பார்க்கும்போதெல்லாம் ஏற்படும் அந்தப் பிராந்தியிலிருந்து எப்படி விடுபடுவதென்று எனக்குப் புரியவில்லை. கத்தியையே பார்க்காமலிருந்தால் உத்தமம். அதற்கு சமையலறையிலிருந்து விடுதலை வேண்டும். அதெல்லாம்... அதிர்ச்சி தெளிந்து எழுந்துவிட்டாள் திவ்யா.

‘கேள்.’

‘ம்...’

‘மீராவுடன் முதல் இரண்டு வருடங்களில் மாதம் 20 என்று சொன்னேன். 20 x 24 = 480. ஆக மொத்தம் 340+480 = 820.’

‘சரி, சொல்.’

‘ஆக, ஆகக் குறைந்த தேவையென்று பார்த்தாலே 7000 கலவிகள் என்று வருகிறது. ஆனால் எனக்குக் கிடைத்ததோ வெறும் 820. என் நிலைமையை யோசித்துப் பார்.’

‘ஏன் நீ இப்படியெல்லாம் யோசிக்கிறாய்? என்னைப் பார். என் வயது முப்பதை நெருங்குகிறது. இதுவரை ஒரு ஆண் என்னைத் தீண்டியதில்லை. நான் இப்படியெல்லாம் யோசித்ததும் இல்லை. நீ ஏன் என்னைப்போல் இருக்கக்கூடாது?’

‘உன்னைப் போல் இருந்தால் தற்கொலைதான் செய்துகொள்ள வேண்டும்.

உனக்கு உன்னுடைய சரீரத்தின் வேட்கை புரியவில்லை. எனக்குப் புரிகிறது. மேலும், நான் இல்லாவிட்டால் நீ தற்கொலைதானே செய்துகொண்டிருப் பாய்?'

'சந்தேகமே இல்லை.'

'அதேதான்.'

'சரி, ஒன்று கேட்க வேண்டும். உனக்குத்தான் ஏகப்பட்ட தோழிகளாயிற்றே?'

'அதற்கெல்லாம் பணம் வேண்டுமம்மா... பணம் வேண்டும். உதாரணமாக, ஒரே ஒரு சம்பவம் சொல்கிறேன் கேள். அப்போது நாங்கள் பீச்சில் நின்று தண்ணியடித்துக் கொண்டிருந்தோம். பாலுவிடம் என் ஆற்றாமையைப் புலம்பிக்கொண்டிருந்தேன்.'

'என்னவென்று?'

'எனக்கு அவனைப் போல் ஏகப்பட்ட தோழிகள் வேண்டாம். ஒரே ஒருத்தி இருந்தால்கூடப் போதும் என்று. சரி, இப்போதே அறிமுகப்படுத்துகிறேன் என்று ஒரு பெண்ணிடம் பேசினான். அவள் பெயர் வினிதா. ஒரு நட்சத்திர ஓட்டலில் வேலை செய்கிறாள். டிவோர்ஸி. ஒரு முறை பார்த்திருக்கிறேன். 28 வயது இருக்கும். வெகு அழகாக இருப்பாள். அவளிடம் பேசிவிட்டு 'என் நண்பர் பெருமாள் உன்னிடம் பேச வேண்டும் என்கிறார்' என்று சொல்லி, கைத்தொலைபேசியை என்னிடம் கொடுத்தான். நலம் விசாரித்துவிட்டு 'உங்களைச் சந்திக்க வேண்டுமே?' என்றேன்.

'ம்... சந்தித்து அப்படியே டூயட் பாடியிருப்பாயே?'

'ஏய், இடியட், மூடிக்கொண்டு கேள். அவளும் உடனே தயங்காமல் 'ஓ... சந்திக்கலாமே' என்றாள். 'எங்கே, எப்போது?' என்று கேட்டேன். 'இப்போதுகூட சந்திக்கலாம். எனக்கு வேலை முடிந்துவிட்டது' என்றாள். 'இப்போது 9 மணி ஆகிறதே... முடியுமா?' 'ஓ... அது ஒன்றும் பிரச்னையில்லை. நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்?' ஒன்பதரை மணிக்கு பீச்சுக்கு வந்தாள். பீச்சில் எங்களுக்கு உதவி செய்வதற்காக சேகர் என்று ஒரு பையன் உண்டு. ஆறு வயதிலிருந்து இருக்கிறான். சரக்கு, ப்ளாஸ்டிக் டம்ளர், தீனி, தண்ணீர் எல்லாம் வாங்கி வருவது அவன் பொறுப்பு. நல்ல வருமானம். இப்போது அவனுக்கு 15 வயதிருக்கும். செல்ஃபோனெல்லாம் வைத்திருக்கிறான். என்னிடம் வந்து ஒரு அக்கா கூப்பிடுவதாகச் சொன்னான். எங்கள் காருக்கு ஐந்தாறு கார் தாண்டி ஒரு காரில் இருந்தாள். கை கொடுத்தாள். பூ மாதிரி இருந்தது.'

'இருக்கும். இருக்கும்.'

'ஏய், அதெல்லாம் பழைய கதை. விஷயத்தைக் கேள்.'

'ம்...'

'அரை மணி நேரம் பேசிக்கொண்டிருந்தோம்... பரஸ்பரம் தொலைபேசி எண்ணைக் குறித்துக்கொண்டோம். மறுநாள் மாலை ஏழு மணிக்கு ஃபோன் செய்தாள். பாஷாவுக்குப் போகலாமா என்றாள். வேலை இருக்கிறது என்று சொல்லி நழுவிட்டேன்.'

‘ஏன், அவளோடு போய் கூத்தடிக்க வேண்டியதுதானே?’

‘ஏய், உளறாதே. கூத்தடிக்க குறைந்தபட்சம் 4000 ரூபாய் தேவை. 4000க்கு நான் எங்கே போவது? நான்தான் பிச்சைக்காரன் ஆயிற்றே?’

‘பிறகு அந்த வினிதா என்ன ஆனாள்?’

‘யாருக்குத் தெரியும்?’

‘பாவம்தான் நீ. சரி, மீராவுடன் நீ சந்தோஷமாக இருக்கலாமே?’

‘சந்தோஷமாகத்தானே இருக்கிறேன்?’

‘ஏய், நான் அதைச் சொல்லவில்லை. இப்படி பட்டினி பட்டினி என்கிறாயே... ஏதோ கணக்கெல்லாம் சொன்னாயே?’

‘ஓ, அதுவா? என் செக்ஸ் வாழ்வில் மகா ஜாலியான காலகட்டம் என்றால் அது அந்த முதல் இரண்டு ஆண்டுகள்தான். ஆனால் அந்த அளவுக்கு என் உடல் பசிக்கு ஈடு கொடுத்ததனாலோ என்னவோ மீரா சாமியாராகி விட்டாள்.’

‘ஓ... பாவம்தான் நீ...’

‘செக்ஸ் மட்டுமல்ல, என் வயிறு விஷயமும் அப்படித்தான். இந்திக்காரர்கள் சொல்லுவார்கள். பேட் அவர் பேட் கே நீச்சே என்று. வயிறு மற்றும் வயிற்றுக்குக் கீழே. இரண்டும் எனக்கு முக்கியம். அது மட்டுமல்ல. நான் ஒரு மல்யுத்தக்காரனைப் போல் சாப்பிடுவேன். இட்லி என்றால் 20. தோசை என்றாலும் 20. அடை என்றால் ஒரு டஜன். கோழி என்றால் முழுக்கோழி. அதோடு, அவ்வப்போது சத்யமங்கலம் காட்டுப் பக்கம் போய் அங்குள்ள ஆதிவாசிகளோடு தங்கி நான் சாப்பிடும் அய்ட்டங்கள் என்னென்ன தெரியுமா? கேள்:

ஊர்வன: புள்ளிமான், காட்டுப் பன்றி, கூராம் பன்றி, முள்ளம் பன்றி, கடமான், கோழை ஆடு, மந்தி, அலுங்கு, உடும்பு, முயல், கீரி, புனுகுப் பூனை, கருவெறுகு பூனை, அணில், கீரி, வெள்ளெலி, கூடெலி.’

‘ஏன் சிங்கம் புலி கரடியை விட்டுவிட்டாய்?’

‘அதற்கு நான் ஆஃப்ரிக்கக் காடுகளுக்குச் செல்லவேண்டும். நிச்சயம் போவேன். போய் யானைக் கறி எப்படியிருக்கிறது என்று சாப்பிட்டுப் பார்க்க வேண்டும். சரி, பறவைகளில் என்னென்ன என்று கேள்:

மயில், காட்டுக் கோழி, சுண்டாங்கோழி, நீர்க்கோழி, கரும்புறா, பச்சைப்புறா, மணிப்புறா, செம்போத்து, காடை, கவுதாரி, பச்சைக் கிளி, பஞ்சவர்ணக் கிளி, மஞ்சக்குருவி.

சைவ உணவு என்றால் என்ன மெனு தெரியுமா?

பருப்பு உருண்டைக் குழம்பு, முருங்கைக் கீரை பொரியல், கோங்குரா சட்னி, எண்ணெய்க் கத்திரிக்காய் வறுவல், மாங்காய் பச்சடி, மோர் சாத்தமுது, சுண்டைக்காய் கொத்சு, இஞ்சித் துவையல், ஆமை வடை, வேப்பிலைக் கட்டி, பால் பாயசம். இதில் மோர் சாத்தமுது என்றால் உனக்குப் புரியாது. மோருக்குப் பக்கத்தில் கமா தட்ட விட்டுவிட்டேன் என்று நினைத்துவிடாதே. மோர் சாத்தமுது ஒரு அய்யங்கார் டிஷ். சாத்தமுது என்றால் ரசம். ரசம் மாதிரி நீர்த்த மோர்க் குழம்புதான் மோர்

சாத்தமுது.

வேப்பிலைக் கட்டி பற்றி வயதான பிராமணர்களைத் தவிர வேறு யாருக்கும் தெரிந்திருக்க வாய்ப்பில்லை. வேப்பிலைக் கட்டியின் பெயரில்தான் வேப்பிலை உண்டே தவிர வேப்பிலைக்கும் அதற்கும் சம்பந்தமில்லை. நாரத்தை இலையை எடுத்து நன்கு கழுவி நரம்பு நீக்கி பொடிப்பொடியாக நறுக்கி வைத்துக்கொள். காய்ந்த மிளகாயையும், கொஞ்சம் ஓமத்தையும் தனித்தனியே வறுத்து இரண்டையும் உரலில் போட்டு பாதி மசியும்படி இடி. பிறகு இதில் நாரத்தை இலையையும், அளவான உப்பையும், கொஞ்சம் வறுத்த பெருங்காயத்தையும் போட்டு இடி. துகையலுக்கு முன்பு வரும் பதத்தோடு எடுத்து உருண்டையாக உருட்டி வைத்துக்கொள். இதை சுடுசோற்றில் போட்டு நல்லெண்ணெய் விட்டு சாப்பிட்டால் பித்தம், வாந்தி, அஜீர்ணம் எல்லாம் நீங்கும்.'

திவ்யாவுடன் நான் நிகழ்த்தும் கணினி அரட்டை எப்படியிருக்கும் என்பதற்கான உதாரணம் முற்றிற்று. இனி திவ்யாவின் அழுகைக் கதைக்கு வருவோம்.

'அதோடு, வீட்டில் ஒரு மென்ட்டல் வேறு இருந்தது. அதற்கு சரியாக டாய்லட் போகத் தெரியாது. அது டாய்லட் போனால் நான்தான் க்ளீன் பண்ண வேண்டும். வாந்தி வரும். கலாவை பள்ளிக்குக் (இதற்கு மேல் ஒரு பக்கத்தைக் காணவில்லை.) இதற்கிடையில் நிறைய நாய்கள் லவ் லெட்டர்ஸ் கொடுக்கும். இதெல்லாம் எனக்கு ரொம்பப் பயம்.'

'இதை ஏன் நீ என்னிடம் முன்பே சொல்லவில்லை?'

'அதுதான் இப்போது சொல்கிறேனே? கேள். காலையில் சாப்பிட எதுவும் இருக்காது. பன்னிரண்டாம் வகுப்பு வேறு. நிறைய ஸ்பெஷல் க்ளாஸஸ். மாலை வீட்டுக்கு வந்தால் சமையலறையைச் சுத்தம் செய்து இரவுச் சாப்பாடு தயாரிக்க வேண்டும். இரவு 12 மணிக்குத்தான் அம்மா ஆஸ்பத்திரியிலிருந்து வருவார்கள். மறுநாள் அப்பாவுக்கு வேண்டிய துணிகளை அயன் பண்ணி எடுத்து வைக்க வேண்டும். அம்மா கொண்டுவரும் அழுக்குத் துணிகளைத் துவைக்க வேண்டும். இதற்கெல்லாம் வேண்டிய மன வலிமை எனக்குக் கிடையாது. ஒரு பொறுக்கிப் பயலின் டார்ச்சர் வேறு. பின்னாலேயே வருவான். ஊர் பூராவும் 'இவள் என் ஆள்' என்று சொல்லுவான். ஒருநாள் மற்ற பசங்கள் முன்னிலையில் செருப்பாலேயே அடித்தேன். அப்போதும் திருந்தவில்லை. ஆனால் இந்த விஷயம் அம்மாவுக்குத் தெரிந்து எனக்கு ஒரே திட்டு. அவன் என்னை ஏதாவது செய்துவிடுவானாம். லவ் லெட்டருக்கு பதில் கொடுக்கவில்லையென்றால் ஆஸிடை ஊற்றிவிடுவான்கள். அந்த மாதிரி இரண்டு மூன்று கேஸ் நடந்திருக்கிறது. அப்பாவுக்குத் தெரிந்தால் அவர் அவனைக் கொலை கிலை செய்துவிட்டால் என்ன செய்வது என்று வேறு திட்டிக் கொண்டிருந்தார்கள் அம்மா. ஆனால் நான் என்ன செய்வது இதற்கெல்லாம்? என்னை ஏன் ஆண்டவன் அழகாகப் படைத்தான் என்று இரவெல்லாம் அழுவேன். ஜுரம் வந்துவிட்டது. மறுநாள் ஃபிஸிக்ஸ் டெஸ்ட். சும்மா ஏதோ ரிவிஷன் டெஸ்ட். நான் ஃபெயில்... எல்லாவற்றிலும் முதல் மதிப்பெண் வாங்கும் நான் முதல் முறையாக ஃபெயில். உடனே தற்கொலைக்கு முயற்சி செய்தேன். ஏதோ ஒரு விஷ மருந்தை எடுத்துக் குடித்தேன். பூச்சி மருந்து.

ஆனால் காலையில் பார்த்தால், உயிரோடு எழுந்துவிட்டேன். மிகவும் அதிர்ச்சியாகி விட்டது. அவசரம் அவசரமாக ஸ்கூலுக்குக் கிளம்பினேன். இந்த பாய்ஸ் டார்ச்சரால் மறுபடியும் ஒரு தற்கொலை முயற்சி.'

'என்ன, விஷமா? தூக்கா?'

'விஷம்தான். முன்னைவிட அதிகமாகக் குடித்தேன். ஆனால் மறுபடியும் ஒன்றுமே ஆகவில்லை. இதெல்லாம் யாருக்கும் தெரியாது.'

'உன் அப்பா என்ன, விஷ மருந்துக் கடை வைத்திருந்தாரா?'

'பாவம் அப்பா... இது தெரிந்திருந்தால் உயிரையே விட்டிருப்பார். பிறகு கல்லூரியில் சேர்ந்தேன். எங்கள் ஃபிஸிக்ஸ் மேடத்துக்கு என்னை மிகவும் பிடிக்கும். அதே சமயம் என் மீது பொறாமையும் கூட. நான் புடவை கட்டினால் ரொம்ப அழகாக இருக்கும். அதுதான் காரணம். அப்போதெல்லாம் எனக்கு நான்-வெஜ்தான் பிடிக்கும். ஆனால் அந்த ஹாஸ்டலில் வெஜ்தான். அதனால் மிகவும் இளைத்துவிட்டேன். மார்பில் வலி வேறு அடிக்கடி வரும். டாக்டரிடம் காட்டினோம். இதயம் பலவீனமாக இருக்கிறது என்றார் டாக்டர். அதனால் பெரிய பெரிய மாத்திரைகளை விழுங்க வேண்டியதாயிற்று. வயிறெல்லாம் புண்ணாகி விட்டது. மாத்திரைகளை நிறுத்தினேன். பிறகு மற்றொரு டாக்டரிடம் சென்றோம். அவரோ இதயம் சரியாக இருப்பதாகக் கூறி பழைய டாக்டரைத் திட்டினார். பொதுவாக உடல் பலவீனம்தான் என்பதால் இரும்புச் சத்துள்ள மாத்திரைகளைச் சாப்பிடச் சொன்னார்.

ஒரு நாள் ஃபிஸிக்ஸ் லெபாரட்ரியில் மேடம் எனக்கு ஸீரோ போட்டுவிட்டாள். (அன்று நான் புடவை கட்டி தலை நிறைய மல்லிகைப் பூ வைத்திருந்தேன்.) அதோடு விடாமல் என் நோட்டையும் தூக்கி வீசியடித்துவிட்டாள். நேராக ஹாஸ்டல் போனேன்.'

'என்ன, தற்கொலையா?'

'கிட்டத்தட்ட நான் வைத்திருந்த அத்தனை அயன் மாத்திரை களையும் எடுத்து விழுங்கினேன். ஆனால் அப்போதும் பலிக்கவில்லை. இந்தத் தற்கொலை விஷயத்தில் இன்னொரு பிரச்னையும் இருந்தது. நான் தற்கொலை செய்துகொண்டால் ஏதோ காதல் தோல்வியால்தான் தற்கொலை செய்துகொண்டேன் என்று வேறு புரளி கிளம்பிவிடும். ம்... பார். ஒரு பெண்ணுக்குத் தற்கொலை செய்துகொள்ளக்கூட உரிமையில்லை. அந்த வருட முடிவில் நான் ஹாஸ்டலிலிருந்து ஊருக்குத் திரும்பியபோது என் உறவினர்களில் பத்து பேர் இறந்திருந்தனர். சிலர் தற்கொலை. சிலர் இயற்கை மரணம். அப்போதெல்லாம் நான் மரணத்தைப் பற்றியே யோசித்துக் கொண்டிருப்பேன். ஒரு நாள் குளக்கரையில் நின்றுகொண்டிருந்தேன். அந்தக் குளத்தில் தண்ணீர் கம்மியாகத்தான் இருக்கும். எல்லோரும் அதில் குளிப்பார்கள்.'

'என்ன, மீண்டும் தற்கொலை முயற்சியா?'

'சீ... கேள். குளத்தில் தண்ணீர் அதிகம் இல்லை. சிரிக்காதே பெருமாள். இது உண்மையாக நடந்த சம்பவம். அந்தத் தண்ணீரிலிருந்து யாரோ என்னைக் கூப்பிடுகிறாற்போன்ற ஒரு உணர்வு. எனக்கு நீ வேண்டும் என்று. நான் பயந்துபோய் வீட்டுக்கு வந்துவிட்டேன். அப்போது மாலை ஆறு மணி இருக்கும். பிறகு மறுநாள் ஒரு சின்னப் பையன் அதில் குளிக்கும்போது

நீரில் மூழ்கி இறந்துவிட்டான். நான்கு வயதுப் பையன். இப்போது நினைத்தாலும் ஈரக்குலை நடுங்குகிறது. இப்படி ஒன்றல்ல இரண்டல்ல, பல சம்பவங்கள். எதிர்காலத்தில் நடப்பது எனக்கு முன்கூட்டியே தெரிந்துபோய் விடுகிறது.

இப்போதும் நான் ஒரு மனக் கஷ்டத்தில் இருக்கிறேன். அது என் தூக்கத்தையும் கெடுத்துக்கொண்டிருக்கிறது. என்னவென்றால், I love you so much. ஆனால் நீ மீராவின் கணவன், அதனால் மற்றொருவரின் சொத்தை நான் அபகரித்துக்கொண்டதுபோல் தவிக்கிறேன்.'

'உதை வாங்குவாய் திவ்யா.'

'நன்றி. ஆனால் பெருமாள்... I miss you a lot. உன்னோடு பேச முடியாதபோதெல்லாம் அழுதுகொண்டேயிருக்கிறேன். பெருமாள், do you love me?'

(இதைத் தொடர்ந்து ஒரு மணி நேரத்திற்கு நீ என் உயிர், நீ என் செல்லம் என்று இருவரும் மாறி மாறிக் கொஞ்சிக்கொள்கிறோம். அதெல்லாம் நாம் பைங்கிளி நாவல்களில் படித்ததுதான் என்பதால் அவற்றை அப்படியே delete செய்கிறேன். கொஞ்சலுக்குப் பிறகு உரையாடல் தொடர்கிறது...)

'ஏய், இப்போதே உன்னை புணர வேண்டும் நான்.'

'ஐயோ... கருமம்.'

'என்னது, புணர்ச்சி கருமமா?'

'அப்படியே உன் ஆடைகள் ஒவ்வொன்றையும் களைந்து...'

'சே... stop man.'

'உன் முலைகளைச் சுவைக்க வேண்டும்.'

'உனக்கு நிறைய வேலை இருக்கிறதென்று நினைக்கிறேன்?'

'எனக்கு இப்போதே உன் முலைகள் வேண்டும். அந்த முலைக் காம்புகள்...'

'சே...'

'மணமாக இருக்கும் என்று வேறு சொல்லிவிட்டாய்.'

'ஓ... நோ...'

'எனக்கு என்ன வேண்டுமோ அதை நீ தர வேண்டும். இப்போது எனக்கு உன் முலை வேண்டும்.'

'கடவுளே...'

'நான் உன்னை அணைக்கும்போதே என் குறி உன் யோனிக்குள் போய்விடும் போலிருக்கிறதே...'

'என்ன இது? ஆஆஆஆஆ... இவ்வளவு அவசரம் கூடாது என்று அதனிடம் சொல்.'

'உன் தொடையை விரித்து யோனிப் பருப்பில் என் நுனி நாக்கால் வருடி...'

'சே... ஐயோ... அசிங்கம் பிடித்தவனே... வெட்கமாக இல்லை உனக்கு?'

'காதலியிடம் என்ன வெட்கம்? என் வாய் வேலை முடிந்ததும் நீ என்

குறியைச் சுவைக்க வேண்டும்.'

'கடவுளே... அங்கே என்ன நேரம்?'

'நீ இப்படி ஒத்துழைக்காமல் பேசுவதால் எனக்கு அடங்கிவிட்டது. போடி...'

'ஏய்... கவலைப்படாதே. உன்னை எப்படிச் சூடேற்றுவதென்று எனக்குத் தெரியும். புலம்பாதே. ஐ லவ் யூ டியர்.'

'வெப்கேமில் உன் முகத்தைப் பார்க்கும்போதே சூடு ஏறுதுடி... உன் முகபாவத்திலேயே எனக்கு போதை ஏறுகிறது. நீ இன்று மிக மிக செக்ஸியாக இருக்கிறாய். உன் தலைமுடி... உன்னை இப்போது பார்த்தால் கிழவனுக்குக் கூட சாமான் எழுந்துகொண்டுவிடும்.'

'நீயும் உன் ரசனையும்...'

'பாம்பு படம் எடுத்து ஆடுது... புற்றுக்குள் நுழைய வேண்டும் அதற்கு...'

'ஏய்ய்ய்ய்ய்ய்...'

'உன் யோனி முடிக்குள் விரலால் அளைய வேண்டும். முடி இருக்கிறதா?'

'ம்...'

'ஒரு அழகான போக நிலை உண்டு. நான் நாற்காலியில் அமர்ந்திருக்கிறேன். நீ என் மீது முகத்துக்கு நேராக அமர்ந்திருக்கிறாய். என் குறி உன் யோனிக்குள்...'

'ம்...'

'பசு நிலை என்று ஒன்று இருக்கிறது'

'ஓ...'

(இங்கு பசு நிலை பற்றி மிக விரிவான ஒரு விளக்கத்தைத் தருகிறேன்.)

'ஏய்... கொஞ்ச நேரம் எனக்காகக் காத்திருக்கிறாயா?'

'ஏன்?'

'ட்ரெஸ் மாற்றிக்கொண்டு வந்துவிடுகிறேன்.'

'ஏன், ஈரமாகிவிட்டதா?'

'இடியட்.'

'ஏய்... ஒருவேளை நான் உன்னை நெருங்கும்போது எனக்கு எரெக்ஷன் ஆகவில்லையானால் நீ என்ன செய்வாய்?'

'என்ன நீ, கேள்வியெல்லாம் கேட்கிறாய்? போ...'

'ஏய் மக்கு... உன்னைப் பார்த்தாலே போறுண்டீ... எரெக்ஷன்தான். உன்னைக் கொஞ்சம் நக்கல் பண்ணினேன்.'

'ஓ காட்! நான் பயந்துவிட்டேன்.'

'அடடா, எரெக்ஷன் ஆகாவிட்டால் என்ன செய்வதென்று பயந்து விட்டாயா?'

'சீ... போ... சரி, நான் உன்னை ஒன்று கேட்க வேண்டும்.'

‘என்னை முதல்முதலில் பார்த்தபோது - ஃபோட்டோவில் தான் - நீ என்ன நினைத்தாய்?’

‘சொன்னால் தப்பாக நினைக்கக் கூடாது?’

‘ஏன், பயந்துவிட்டாயா?’

‘சும்மா சொன்னேன். உன்னிடம் ஒருவித வசீகரம் இருந்தது. உன் புகைப்படத்தைப் பார்த்தபோது உன்னை ஒரு குழந்தையைப்போல் தூக்கிக்கொள்ள வேண்டும் போல் இருந்தது...’

‘உண்மையாகவா?’

‘ஆமாம். அதுதான் எனக்கு ஏற்பட்ட முதல் எண்ணம். பிறகு உன் முகம் என்னை வசியப்படுத்திவிட்டது. நீ இவ்வளவு அழகாக இருப்பாய் என்று நான் எதிர்ப்பார்க்கவில்லை. நீதான் நீ அவ்வளவு அழகாக இருக்க மாட்டாய் என்று சொன்னாயா, நான் அதை அப்படியே நம்பிவிட்டேன். அதனால் புகைப்படத்தைப் பார்த்தபோது அசந்துபோனேன். என்ன இது, இப்படி ஒரு தேவதையாய் இருந்து கொண்டு என்னை ஏமாற்றிவிட்டாளே என்று நினைத்தேன்.’

‘ஏன் நீ என்னுடைய ஃபோட்டோவைக் கேட்டாய்?’

‘எனக்கு என்னை அறியாமலேயே உன் மேல் காதல் வந்துவிட்டது. ஆனால் அதைச் சொல்ல முடியவில்லை. காரணம், சில கசப்பான அனுபவங்கள்.’

‘ஓ... அதனால்தான் எப்படி இருக்கிறேன் என்று பார்ப்பதற்காக ஃபோட்டோ கேட்டாயா?’

‘சே சே... அப்படியில்லை. ஆள் பார்த்து மடக்குகிற டைப் இல்லை நான்.’

‘ஐ மிஸ் யூ டா பெருமாள்.’

‘ஏய்... நீ நிர்வாணமாக வந்து என் மீது உட்கார்ந்து கொள்கிறாய்.’

‘ம்...’

‘நான் உன்னைக் கொஞ்சுகிறேன்.’

‘ஏய்... என்ன, திரும்பவும் ஆரம்பமாகிவிட்டதா?’

‘அழுக்குப் போக குளித்தவனும் இல்லை. ஆசை தீர ஓத்தவனும் இல்லை என்று ஒரு பழமொழி உண்டுடி.’

‘ஓ...’

‘நாம் எதிரெதிரே அமர்ந்திருக்கிறோம். உன் யோனி என் வயிற்றில் படுகிறது.’

‘ம்...’

‘உன்னைக் கொஞ்சம் கீழே இறக்கி என் குறியை அதற்குள் விடுகிறேன். ஈரமாக இருப்பதால் மழை பெய்த களிமண் பூமியில் கால் பாய்வது போல் லகுவாக உள்ளே செல்கிறது குறி.’

‘ம்...’

‘உன் பிருஷ்டத்தை என் இரண்டு கைகளாலும் தூக்கித் தூக்கி விட்டுப் புணர்கிறேன்.’

‘ஓ...’

‘பெருமாள்... Fuck me... Fuck me... என்று கதறுகிறாய்.’

‘ஆஆஆஆஆஆஆ...’

‘பிறகு, எல்லாம் முடிந்து... உன் கண்களில் கண்ணீர். அப்புறம் கொஞ்சிப் பேச ஆரம்பிக்கிறோம். உன்னை முத்தமிட்டு ‘என்னடீ, வெட்கமாக இல்லையா?’ என்று கேட்கிறேன். என் லவ்வரிடம் எனக்கு என்ன வெட்கமென்கிறாய். பிறகு என்னவோ என்னை சாமியார் சாமியாரென்று திட்டினாயே, இப்போது பார்த்தாயா?’ என்கிறாய். நான் கீழே படுத்துக்கொண்டு ‘ஏய் ஃபக்கர். கம் அண் ஃபக் மீ’ என்கிறேன்.’

(இப்படியே உரையாடல் தொடர்ந்துகொண்டு போகிறது. இது ஒரு நாள் இரவு இந்திய நேரம் பதினோரு மணியிலிருந்து மறுநாள் மதியம் இரண்டு மணிவரை நடந்த இடைவெளியற்ற உரையாடல். பாத்ரூம் சென்று வர மட்டும் ஐந்தைந்து நிமிட இடைவெளி. மற்றபடி குளியல் இல்லை. சாப்பாடு இல்லை. chat, chat, chat.)

சுமார் இரண்டு ஆண்டுகள் வாரம் நான்கு தினங்கள் என்ற கணக்கில் தொடர்ந்தது இந்தக் கணினி அரட்டை. இது தவிர தினம் ஒரு நீண்ட மெயில். என்றைக்காவது வெளியே போகும் வேலையிருந்து அரட்டைக்குச் செல்லாவிட்டால் அவளிடமிருந்து வரும் இப்படி ஒரு ஆஃப்லைன் மெஸேஜ்: ஏய், திமிர் பிடித்தவனே... எவ்வளவு தைரியம் இருந்தால் நான் ஆன்லைனில் வந்தவுடன் நீ ஆஃப்லைனில் போயிருப்பாய்? எப்படி நீ ஆன்லைனில் வந்தது எனக்குத் தெரியும் என்று முழிக்காதே. I know you!

## 51. KILL

> ‘I am beastly tired of mankind and the world that nothing can interest me unless it contains a couple of murders on each page or deals with the horrors unnameable and unaccountable that leer down from the external universes.’
>
> Michel Houellebecq

தேவையற்ற பக்கங்களையும், செய்திகளையும் நிராகரிப்பதற்கு பத்திரிகைக்காரர்கள் KILL என்ற வார்த்தையைப் பயன்படுத்துவார்கள். Kill the story என்று பொருள். அதற்கென்று சிவப்பு மையில் KILL என்று விழும் ரப்பர் ஸ்டாம்ப் வைத்திருப்பார்கள். அதுபோன்ற ரப்பர் ஸ்டாம்ப் என்னிடம் இல்லை என்றபோதிலும் திவ்யா, ஃபௌஸியா, லயா, ஸ்வப்னா, சில்ஸ் மரியா, பத்மினி, ம்யூஸ் மற்றும் இன்னோரன்ன பெண் பாத்திரங்கள் இந்த நாவலிலிருந்து மறைந்துபோனார்கள். ஒன்று தற்கொலை, அல்லது திடீர் மறைவு. அல்லது கொலை... ஏதோ ஒன்று. திவ்யா... திவ்யா... தி... வ்... யா... திவ்யா வெறும் பெயர். வேறு எந்த அர்த்தமும் இல்லை. வெறும் பெயர். புல்ஷிட், வெறும் பெயர். அவளை நான் பார்த்ததுகூட இல்லை. நிறைய புகைப்படங்கள் அனுப்பியிருக்கிறாள். ஈமெயிலில். தபாலில். ஈமெயிலில்

உள்ளவற்றை delete செய்துவிட்டேன். தபாலில் வந்ததைக் கிழித்தெறிந்துவிட்டேன். நினைவுகள்? என் மனம் ஒரு ப்ளாட்டிங் பேப்பர். கவலையில்லை. இதேபோல் சில ஆண் பாத்திரங்களும் காணாமல் போனார்கள். முக்கியமாக, ரஞ்சன். இவனைப் பற்றி நான் இந்த நாவலில் எழுதியிருக்கிறேனா இல்லையா என்று ஞாபகமில்லை. ஒரு பெரிய நோட்டுப் புத்தகம் போட்டு ஒவ்வொரு அத்தியாயத்திலும் வரும் போகும் கதாபாத்திரங்களின் பெயர்களைக் குறித்து வைத்திருக்கிறேன். இல்லாவிட்டால் பெயர்க் குழப்பம் ஏற்பட்டுவிடும். இந்த நாவலில் 200 பெயர்கள் வருகிறது என்றால் அது உண்மையில் 400 பெயர்கள். ஒவ்வொரு பெயருக்கும் பின்னே அதன் உண்மையான பெயர் வேறு இருக்கிறதே? நானோ பெரும் ஞாபக மறதிக்காரன். மேலும், ரஞ்சன் என்ற பெயர் இந்த நாவலில் இதற்கு முன்னே வந்திருக்கிறதா என்பதை அறிந்துகொள்வதற்காக இத்தனை பக்கங்களையும் மீண்டும் படிப்பது சாத்தியமில்லை. எனவே, அந்த நோட்டுப் புத்தகத்தில் ரஞ்சனின் பெயரைத் தேடினேன். காணவில்லை. ஆனால் என் வாழ்வில் ஐந்து ஆண்டுகளை அவன் சாப்பிட்டிருக்கிறான். அல்லது, அவனுடைய ஐந்து ஆண்டுகளை நான் சாப்பிட்டிருக்கிறேன். ஏதோ ஒன்று. அல்லது, இரண்டுமே. அவனைப் பற்றி நான் எழுத விரும்பவில்லை. அந்த ஐந்து ஆண்டுகளும் என் வாழ்வின் முக்கியமான காலகட்டம். வசந்த காலம் என்று சொல்வது க்ளீஷே. ஆனால், இப்போது நினைத்துப் பார்த்தால் நாக்கில் கரிப்பே மிஞ்சுகிறது. ஒரு கட்டத்தில் அமிர்தமாக இருந்தது இப்போது நஞ்சு.

திடீரென்று காணாமல் போனான். மாமா என்றுதான் அழைப்பான். என் உடன் இருந்தபோது அவன் அடைந்த சந்தோஷம் நிஜம். அதில் பொய்யே இல்லை. பல சமயங்களில் பல தினங்கள் சேர்ந்தாற்போல் தொடர்ந்து ஒன்றாக இருந்திருக்கிறோம். ஓரினச் சேர்க்கையாளர்களுக்குக் கூட அது சாத்தியமில்லை. அந்த அளவுக்கு இருவரும் ஒன்றாக இருந்திருக்கிறோம். தேக சம்பந்தம் இல்லாமலேயே.

நான் எக்காரணம் கொண்டும் ஞாயிற்றுக்கிழமையன்று வெளியே செல்ல மாட்டேன். அந்த நாள் மீராவுக்கு. மார்க்கெட் சென்று விரால் மீன் வாங்கி வந்து அருமையாக சமைத்து வைத்திருப்பாள். சாப்பிடக் கை கழுவி இருப்பேன். ரஞ்சனிடமிருந்து ஃபோன் வரும். ‘மாமா, உடனே வா.’ உடனே போக வேண்டும். இல்லாவிட்டால் கோபித்துக் கொள்வான். ஒரு வாரம் பேச மாட்டான். தட்டில் போட்ட சாப்பாட்டை அப்படியே போட்டுவிட்டுக் கிளம்புவேன். மறுநாள் இரவு ஒன்பது மணிக்குத்தான் வருவேன். ரஞ்சன் கூப்பிட்டுக் கிளம்பினாலே மீரா என்னை நாள் கணக்கில் எதிர்பார்க்க மாட்டாள்.

பலமுறை ரஞ்சனிடம் சொன்னேன். ‘இதோ பார், நாம் இப்போது எவ்வளவு நெருக்கமாக இருந்தாலும் சரி. பிரிந்தால் அதற்கான காரணம் தெரியவேண்டும். காரணம் சொல்லாமல் நட்பை முறித்துக் கொண்டால் உன்னை நான் சும்மா விடமாட்டேன்.’ ‘அடப்போ, மாமா. நான் உன்னுடைய வாழ்க்கை வரலாற்றையே எழுதுவதாக இருக்கிறேன். நீ வேறு என்னென்னவோ உளறுகிறாய்...’

பிறகு அவனிடம் நான் இந்த விஷயத்தை விரிவாக எடுத்துச் சொன்னேன்:

நான் அப்போது அஞ்சல் பொருள் கிடங்கில் வேலை பார்த்த சமயம்.

கமாண்டர் இன் சீஃப் ரோட்டில் உள்ள தொலைபேசி அலுவலகத்தில் வேலை பார்த்தான் ராகவன். அவனும் நானும் பத்து வருடப் பழக்கம். சகோதரர்களைப்போல. திருச்சியிலிருந்த ராகவன் சென்னைக்கு மாற்றலாகி வந்தபோது, சென்னை பழகும் வரை அவன் என்னுடன் தங்கியிருக்க விரும்பினான். அப்போது நானும் எக்ஸும் விவாகரத்து செய்துகொள்ளலாம் என்று முடிவு செய்து, எக்ஸின் வீட்டில் நானே ஒரு வேண்டாத ஆளாக இருந்து கொண்டிருந்த சமயம். அப்படிப்பட்ட ஒரு சூழ்நிலையில் எக்ஸுடன் சண்டை போட்டு ராகவனை என்னுடனேயே தங்க வைத்துக் கொண்டேன். மூன்று மாதம் தங்கியிருந்தான். இதுபோல் நூற்றுக்கணக்கான சம்பவங்கள்.

வாரம் ஒருமுறை அவனைப் பார்ப்பதற்காக பூந்தமல்லி நெடுஞ்சாலையிலுள்ள அஞ்சல் பொருள் கிடங்கிலிருந்து கமாண்டர் இன் சீஃப் சாலை வரை ஆட்டோ எடுத்துக் கொண்டுபோய் பார்ப்பேன். இரண்டு மூன்று மணிநேரம் பேசுவோம்.

மிகவும் சந்தோஷத்துடன் என்னை வரவேற்றுப் பேசிக் கொண்டிருப்பான். மூன்று ஆண்டுகள் இப்படிப் பார்த்துக்கொண்டிருந்தேன். பிறகு ஒரு நாள் எனக்குத் தோன்றியது. நாம் மட்டும்தானே அவனைப் பார்க்கப்போய்க் கொண்டிருக்கிறோம்; அவனாக ஒரு முறைகூட நம்மைப் பார்க்க வருவதில்லையே; ஃபோனும் செய்வதில்லையே என்று.

ஒருநாள் அவனைப் பார்க்கச்செல்வதை நிறுத்தினேன். அதோடு அவனுடைய நட்பு நின்றுபோனது. எங்காவது இலக்கியக் கூட்டங்களில் பார்த்தால் அதே பிரியத்துடனும், உற்சாகத்துடனும் பேசுவான். ‘இது ஏதடா வம்பாகப் போயிற்று? எப்படி இந்த மாதிரியெல்லாம் பழக முடிகிறது?’ என்று நினைத்துகொள்வேன். ‘ஏன் இப்போதெல்லாம் வருவதில்லை?’ என்றுகூட அவன் கேட்கவில்லை.

இந்த நிலையில் ஒரு நாள் பாரிஸிலிருந்து எட்வின் வந்திருந்தான். ராகவன் வீட்டில் தங்கியிருந்தான். வந்த அன்றே எனக்கு ஃபோன் செய்து உடனே வந்து பார்க்கச் சொன்னான். ‘ராகவன் வீடு என்றால் வேண்டாம்; வெளியே பார்ப்போம்’ என்றேன். ‘நான் தங்கியிருப்பதால் இப்போது இது என் வீடு. நான்தானே உன்னைக் கூப்பிடுகிறேன்? சும்மா வா’ என்று வற்புறுத்தினான்.

நிறைய நண்பர்கள் கூட்டம். அதில் ஒரு பெண் வெகு அழகாக இருந்தாள். அவளிடம் ராகவன் என்னைச் சுட்டிக்காட்டி சொன்னான். ‘இந்த ஆளிடம் ஜாக்கிரதையாக இரு. ஏமாந்தால் ஆளைத் தூக்கிக் கொண்டு போய்விடுவார்.’ ‘வாட் டூ யு மீன்?’ என்றாள் அவள்.

‘எ க்ரேட் செட்யூஸர்.’

உடனே அங்கிருந்து கிளம்பலாம் என்று நினைத்தேன். கிளம்பியிருந்தால் அன்றைய தினம் நடந்த மற்ற அசம்பாவிதங்களைத் தவிர்த்திருக்கலாம்.

பேசிமுடித்து இரவு இரண்டு மணியளவில் கிளம்பும்போது ராகவன் அத்தனை பேர் முன்னிலையிலும் என்னிடம் சொன்னான். ‘இனிமேல் என் வீட்டுக்கு வராதீர்கள் பெருமாள்.’

‘இதை நீ முன்னாலேயே சொல்லியிருக்கலாமே?’

‘நீங்களாக புரிந்துகொள்வீர்கள் என்று நினைத்தேன். யோசித்துப் பாருங்கள். மூன்று வருடங்களாக நீங்களாகத்தான் என்னைத் தேடி வந்துகொண்டிருந்தீர்களே தவிர நான் ஒருமுறை கூட வந்ததில்லையே?’

அடித்துவிட்டேன். நண்பர்கள் வந்து விலக்கிவிட்டார்கள்.

பிறகு அன்றைய தினம் அவனுடைய வீட்டிலிருந்த தெரிதாவின் Diffierance புத்தகத்தை நான் திருடிக்கொண்டு சென்றுவிட்டதாக பலரிடமும் புகார் செய்திருக்கிறான். அன்றைய தினம் அந்தப் புத்தகம் அவன் வீட்டிலிருந்து திருடுபோனது உண்மைதான் என்றும் தெரிந்தது.

அந்தப் புத்தகத்தைக் காலையில்கூட படித்துக்கொண்டிருந்தானாம். நான் வந்துவிட்டுப் போனதும் காணோம். மேலும், அன்றைய தினம் அங்கிருந்த நண்பர்களிடையே அந்தப் புத்தகம் பற்றி அறிந்த ஒரே ஆள் நான்தான்.

என்னைத் தவிர அந்தப் புத்தகம் அந்தக் கூட்டத்தில் யாருக்கும் தேவைப்படாது. உண்மைதான். நான் சில காலம் வயிற்றுப் பசியின் காரணமாகப் பிக்பாக்கெட்டாக இருந்ததும் உண்மை தான். ஆனால் அதற்காக, காலம் பூராவும் திருடிக்கொண்டிருப்பேன் என்று ஒருவன் எப்படி நினைக்கலாம்? பசிக்காகத் திருடுவதும், நண்பனின் வீட்டில் புத்தகம் திருடுவதும் ஒன்றா? ஒரு திருடன் திருந்தி வாழவே முடியாதா? வாழ்நாள் பூராவும் திருடன் என்ற பழியைச் சுமந்து கொண்டேதான் வாழ வேண்டுமா?

எனக்கு திருடன் என்ற பட்டத்தைவிட கொலைகாரன் என்ற பட்டம் கௌரவமாகத் தோன்றுகிறது. அதற்காகவே ஒரு கொலை செய்யலாம் என்றும் தோன்றுகிறது. ஆனால் தைரியம்தான் வரமாட்டேன் என்கிறது.

‘திருடிய ஆள் யாரென்று எனக்குத் தெரியும். ஆனால் காட்டிக் கொடுக்க மாட்டேன்’ என்றான் எட்வின்.

என்மீது இப்படி ஒரு வீண்பழி ஏற்படலாம்; ஆனால் ‘திருடிய ஆளைக் காட்டிக்கொடுக்க மாட்டேன்’ என்கிற எட்வினின் லாஜிக் புரியவில்லை. கடைசியில் ஒரு வருடம் கழித்துத்தான் அந்த உண்மையை என்னிடம் சொன்னான் எட்வின். அன்றைய சந்திப்பில் எங்களுடன் உத்தமத் தமிழ் எழுத்தாளன், நிர்-9ம் உடனிருந்தான். அன்று நடந்த சச்சரவையெல்லாம் பார்த்து எரிச்சலடைந்த அவன்தான் அந்தப் புத்தகத்தை சுட்டுக்கொண்டுபோய் பக்கத்திலிருந்த கூவத்தில் போட்டிருக்கிறான்.

உத்தமத் தமிழ் எழுத்தாளன், நிர்-4உடனும் இதே போல்தான் நடந்தது எனக்கு. மூன்று வருடம். என்னை ஒரு கதாபாத்திரமாக அவனும், அவனை ஒரு பாத்திரமாக நானும் எழுதி அந்த நட்பை இருவருமாகக் கொண்டாடினோம். இதற்கிடையில் இருவரும் சேர்ந்து குடித்ததேயில்லை. எழும்பூர் வுஸ் மையத்துக்கு அருகிலுள்ள பூங்காவில் புத்தகம் படித்துக் கொண்டு அமர்ந்திருப்பேன். மதியம் பன்னிரண்டுக்கே போய் விடுவேன். மதிய உணவை ஒன்றாகத்தான் சாப்பிடுவோம்.

அவன் வுஸ் மையத்திலிருந்த ஸ்டேட் பேங்கில் பணிபுரிந்து கொண்டிருந்தான். நேரம் கிடைக்கும்போதெல்லாம் பூங்காவுக்கு வந்து பேசிக்கொண்டிருப்பான். பிறகு மூன்று மணிக்கு ஒரேயடியாக வந்துவிடுவான். ஐந்து மணி வரை பூங்காவில் பேசுவோம். பிறகு அங்கிருந்து நடந்து வந்து சேத்துப்பட்டு ரயில் நிலையத்தில் மின்சார ரயில்

பிடித்து கோடம்பாக்கம் வந்து இறங்கி, அந்த ரயில் நிலைய மேம்பாலப் படிக்கட்டுகளில் அமர்ந்து இரவு ஏழு மணி வரை பேசுவோம். அவனுக்குத் தாம்பரம் போக வேண்டும். ஏழு மணிக்கு தாம்பரம் ரயிலை பிடிப்பான். நான் சின்மயா நகருக்கு ஆட்டோவில் வந்துவிடுவேன். ஒவ்வொரு நாளும் வீட்டுக்குக் கிளம்ப வேண்டியிருக்கிறதே என்று வேண்டா வெறுப்புடன் பிரியா விடை பெற்றுத்தான் பிரிவோம். மூன்று வருடம்.

ஒரு நாவலைக் கொடுத்தான். அவன் எழுதிய நாவலின் கையெழுத்துப் படி. படித்துவிட்டு பீஸ்பீஸாகக் கிழித்து விட்டேன். ஒரே வார்த்தையில் சொல்வதானால், குப்பை. இலக்கியத்துக்கும் அதுக்கும் வெகுதூரம் இருந்தது. ஒரு டப்பா நாவலை இலக்கியத்தரமான வார்த்தைகளைப் போட்டு நிரவிவிட்டதால் அது இலக்கியமாகிவிடுமா?

மிகவும் காயப்பட்டுவிட்டான் போலிருக்கிறது.. நண்பன் என்பதால் பாராட்ட வேண்டுமா என்ன?

பிறகு நாங்கள் சந்திப்பதில்லை. அவனும் என்னைத் தொடர்பு கொள்வதில்லை.

சமீபத்தில் சுதேசமித்திரனைச் சந்தித்தபோது ‘இப்போதெல்லாம் உத்தமத் தமிழ் எழுத்தாளன், நிர்-4ஐ சந்திப்பதில்லையா?’ என்று கேட்டான். சாதாரணமாக ‘இல்லையே’ என்றேன். ‘இதே கேள்வியை உ.த.எ., நிர்-4இடம் கேட்டபோது அவர் என்ன சொன்னார் தெரியுமா? ‘பெருமாள்தான் என்னை வந்து பார்ப்பார். இப்போது அவர் வருவதில்லை’ என்றார்’

இதற்கு நான் விளக்கவுரையெல்லாம் எழுத விரும்ப வில்லை.

இந்த இரண்டு சம்பவத்தையும் ரஞ்சனிடம் கூறி ‘இதே மாதிரி நீயும் பண்ணினால் உன்னை என்ன செய்வேன் என்று தெரியாது. குறைந்த பட்சம், நாம் எதற்காகப் பிரிகிறோம் என்ற காரணமாவது எனக்குத் தெரிய வேண்டும்’ என்றேன்.

‘சே, வா மாமா... சரக்கு அடிக்கலாம்’ என்று கூறி பாருக்கு அழைத்துக்கொண்டு போனான் ரஞ்சன்.

ஆனால் அதே விதமாகத்தான் அவனுடனும் நடந்தது. குமாரசாமியை அவனுக்கு அறிமுகப்படுத்தினேன். குமாரசாமியும் ரஞ்சனும் ஒரே வீட்டுக்குக் குடியேறினார்கள். அதிலிருந்து ரஞ்சன் என்னோடு பேசுவதை நிறுத்திக் கொண்டான். காரணம் தெரியாது.

## 52. ஆவணப்படம்

‘இது வரைக்கும் பாய் ஃபிரண்ட்ஸ் இல்லை. இந்த வருஷமாவது கிடைக்கணும்னு சாமிகிட்ட வேண்டிட்டு இருக்கேன். சாமி வரம் கொடுக்கிறாரா பார்ப்போம்’ என்று சொல்லும் பூஜாவின் காலேஜ் ஹேண்ட்பேக்கில் இருப்பவை முகம் துடைக்க டிஷ்யூ பேப்பர், மாய்ச்சுரைஸர், லிப்ஸ்டிக், ஹேர் பிரஷ், பாக்கெட் மணி. புக்ஸ்...? அதைக் காணோமே!

டபிள்யூசிசி. பெண்கள் கல்லூரியில் மூன்றாம் ஆண்டு விஸ்காம்

படிக்கிறார், நிலா மியூசிக் தொகுப்பாளினி ஷோனாலி. ‘எனக்கு காலேஜ்னாலே குஷி. புதுப்புது டிரெஸ் போட்டுட்டுப் போலாம். ஒரு தடவை போட்ட டிரெஸ்ஸை ஆறு மாசம் கழிச்சுதான் திருப்பிப் போடுவேன். காலேஜ்ல கஷ்டமான விஷயம் கிளாஸ்ல கவனிக்கிறது. மத்தபடி எனக்கு காலேஜ்தான் ஜாலி’ என்று சொல்லும் ஷோனாலியின் கைப்பையில் இருப்பவை ஒரு சூர்யா படம். சீப்பு, லிப்ஸ்டிக்குடன் ஒரே ஒரு நோட்புக்.

-5.7.2006 தேதியிட்ட ஒரு வாரப் பத்திரிகையில்

‘உப்பு புளி மிளகாய்க்காக’ என்று 37வது அத்தியாத்தில் சொன்னாள் அல்லவா டெய்ஸி? அப்படிப்பட்டவள் எப்படி இரண்டே ஆண்டுகளில் கோடீஸ்வரி ஆனாள்?

அவள் எடுத்த ஒரு ஆவணப்படம்தான் காரணம் என்றார்கள்.

‘அது என்ன, அப்படி ஒரு ஆவணப்படம்?’ என்று கேட்டால் அவளும், இயக்குனர் ராஜ் கிஷோரும் ‘நட்பாக’ இருந்ததைத் தன் அசிஸ்டெண்ட் மூலமாகப் படம் எடுத்துவிட்டாளாம். ராஜ் கிஷோர் தன் மனைவிக்கு பயந்தவர் என்பது இன்டஸ்ட்ரி முழுவதும் தெரிந்த விஷயம். நாற்பது லகரத்தைக் கொடுத்து அந்த ஆவணப்படத்தை முடக்கினாராம்.

டெய்ஸி தினமும் தன் செக்ரட்டரியைத் தொடர்பு கொண்டு தன்னுடன் பேச விரும்புவதாகச் சொன்னான் மணி.

‘பேசிவிடாதே’ என்றேன் நான்.

## 53. எலி ஜென்மம்

முக்தே விதே? மயி நிர்தயதந்த்தம்ஷ -
தோர்வல்லி பந்த நிபிடஸ்த்தன்பீடனானி
சண்டி த்வமேவ முதமஞ்ச்ச ந பஞ்ச்சபான -
சண்டாலக்காண்ட் தலநாதஸவ? ப்ரயாந்த்தூ
எனக்குத் தண்டனை கொடு, என்னருமை முட்டாளே!
உனது கொடும் பற்களினால் என்னைக் கடி!
கொடி போல் படரும் உனது கரங்களால் என்னைக் கட்டிப்போடு!
உனது மதர்ந்த கொங்கைகளால் என்னை நசுக்கு!
உக்ர தேவீ, பரவசத்தில் நொய்ந்துவிடாதே!
காதலின் தீய அம்புகள்
என்னைத் துளைத்து என் ஜீவசக்தியை உறிஞ்சட்டும்!

-ஜெயதேவர்: கீத கோவிந்தம்: ஸர்க்கம் 10, பாடல் : 11

வயதுக்கு வந்த விலங்கினங்களில் ஹார்மோன்களின் பங்கு முக்கியமானது. உதாரணமாக, மாத விலக்கான ஐந்தாவது நாள் பெண்

எலியின் நடவடிக்கைகளில் மாற்றம் ஏற்படுகிறது. அச்சமயங்களில் ஆண் எலியின் பாலியல் செய்கைகளை (பெண்குறியை முகர்தல், நக்குதல், இத்யாதி) விருப்பமுடன் வரவேற்கிறது.

பெண்ணெலியின் இந்த வரவேற்பு 'கவர்ச்சித் தாக்குதல்' (enticing) என்று அழைக்கப்படும். உதாரணமாக, பெண்ணெலி ஆணெலியைச் சீண்டிவிட்டுத் துள்ளிக் குதித்து ஓடி சற்று தூரத்தில் நின்று பார்க்கும்; காதுகளை விடைக்கும். அதைத் தொடர்ந்து வரும் ஆணெலி பெண்ணெலியின் குறியை முகரும்போது மறுபடியும் துள்ளிக் குதித்து சற்று தூரம் செல்லும். ஆணெலி தொடர்ந்து விரட்டிக்கொண்டே வந்தால் ஒரு கட்டத்தில் பெண்ணெலி காதுகளை விடைப்பதை நிறுத்திவிட்டு, வாலைத் தூக்கிக்கொண்டு தன் பின்புறத்தை வாகாகக் காட்டும். இந்த நிலை lordosis என்று அழைக்கப் படுகிறது. அதாவது, பெண்ணெலி கலவிக்குத் தயார் என்று பொருள். இந்த நிலையில்தான் ஆணெலி பெண்ணெலியின் யோனிக்குள் தன் குறியை நுழைத்து ஆட்டுகிறது. உள்ளே விட்டு விரைவாக ஆட்டுவதும், பிறகு வெளியே எடுத்து, சிறிது நேரத்துக்குப் பிறகு மீண்டும், உள்ளே விட்டு ஆட்டுவதுமாக ஸ்கலிதமாகும் வரை இச்செயல் தொடர்கிறது. பின்னர், சில நொடிகள் அல்லது நிமிடங்கள் வரை இடைவெளி (intercopulatory interval) ஏற்பட்டு, மீண்டும் கலவியில் ஈடுபடுகிறது ஆணெலி. இவ்வாறு, நான்கிலிருந்து பத்து முறை ஆணெலிக்கு ஸ்கதலிதமாகிறது. இச்சமயத்தில் ஒரு ஆணெலி அல்லாது பல ஆணெலிகளையும் பெண்ணெலி ஏற்றுக் கொள்கிறது.

ஒரு சுழற்சி முறையில் நிகழும் பெண்ணெலிகளின் இந்தப் பாலியல் வரவேற்பு estrus என்று அழைக்கப்படுகிறது.

-Psychology as a Biological Scienceஎன்ற புத்தகத்தில்

Harmones, Sexuality, and Behaviour என்ற அத்தியாத்தில்.

## 54. Dadaism!

சென்னைக்குச் சென்ற ராஜா, பதவி ஏற்பு விழா ஏற்பாடுகளைக் கண்டு களித்துவிட்டு, ரயில் மூலம் திருப்பதிக்குப் புறப்பட்டுப் போனார். திருப்பதியில் மொட்டையடித்து நேர்த்திக் கடன் செலுத்தியவர், திடீரென்று 'அம்மா வாழ்க' என்று கோஷமிட்டபடி கைப்பைக்குள்ளிருந்த ஆக்ஸா பிளேடை எடுத்தார். கோவிந்தா கோஷத்தை மட்டுமே கேட்டுப் பழகிப் போன திருப்பதி போலீஸார் அம்மா கோஷத்தை கேட்டுத் திரும்பினர். அதற்குள் ராஜா கையால் நாக்கை இழுத்துப் பிடித்துக்கொண்டு இன்னொரு கையில் இருந்த ஆக்ஸா பிளேடால் ரத்தம் சொட்டச் சொட்ட நாக்கை அறுக்கத் தொடங்கினார். வாயிலிருந்து ரத்தம் வழிந்து சட்டையை நனைக்க, உடன் திருப்பதி போலீஸார் அதனைத் தடுக்கும் முயற்சியில் ஈடுபட்டனர். ஆனால், ராஜாவோ அறுத்து தொங்கிய நாக்கை வெடுக்கெனப் பிடுங்கி திருப்பதி உண்டியலுக்குள் போட்டுவிட்டார். அதிக ரத்தப்போக்கால் மயங்கி விழுந்த ராஜாவை அள்ளிக்கொண்டு போய் திருப்பதி போலீஸார் பக்கத்திலிருந்த மருத்துவமனையில்

சேர்த்தனர். ரத்தத்தை நிறுத்த டாக்டர்கள் படாத பாடு பட்டு சிகிச்சை அளித்துள்ளனர். பின்னர் திருப்பதி போலீஸார் ராஜாவை ரயில் மூலம் சீர்காழிக்கு அனுப்பி வைத்தனர்.

சீர்காழிக்கு வந்த ராஜா ஓசைப்படாமல் வீட்டுக்குள் நுழைந்து சாமிப்படங்கள் மாட்டப்பட்டிருந்த இடத்திற்குச் சென்றதை அவரது குடும்பத்தினர் பார்த்து, அவர் கையிலிருந்த துணிப்பையை வாங்கியுள்ளனர். பைக்குள் திருப்பதி லட்டு, பிரசாதத்தைத் தேடியவர்களுக்கு அதிர்ச்சியே மிஞ்சியது. துணிப்பை நிறைய ரத்தம் தோய்ந்த ஆடைகள் இருந்ததைக் கண்டு விவரம் கேட்டபோது, சைகையால் ஜெயலலிதா படத்தைச் சுட்டிக்காட்டி நேர்த்திக் கடனுக்காக நாக்கை அறுத்து உண்டியலில் போட்டுவிட்டதாகத் தெரிவிக்க, ஒட்டு மொத்த குடும்பமே அவரைக் கட்டிப்பிடித்துக்கொண்டு அழத்தொடங்கியது. இத்தகவலை அறிந்து ஒட்டுமொத்த சீர்காழியும் ராஜாவின் வீட்டு முன்பாக திரண்டது. பின்னர் ராஜாவுக்கு சிகிச்சை அளிக்க உள்ளூர் டாக்டர் ஒருவரை அவரது மனைவி மாரியம்மாள் அழைத்து வந்தார். தொடர்ந்து அவருக்கு சிகிச்சை அளிக்கப்பட்டு வருகிறது.

ஜெயலலிதா முதல்வரானதற்காக நாக்கை அறுத்து நேர்த்திக் கடன் செய்ததாக சைகை மூலம் நமது நிருபரிடம் தெரிவித்த ராஜா நாக்கை அறுக்கும்போது தனக்கு வலிக்கவில்லை என்றும், ஜெயலலிதா கண் முன்னே நிற்பது போல் தோன்றியதால் தனக்கு வலி தெரியவில்லை என்றும் கைகூப்பி ஜாடை காட்டினார். சாதாரண டீக்கடை வருமானத்தைக் கொண்டு ஜீவனம் செய்து வரும் ராஜாவின் வயது அதிகமில்லை. 60 தான். இவருக்கு மாரியம்மாள், தங்கமணி என்ற இரு மனைவிகளும், 4 மகன்கள், 7 மகள்களும் உள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

- ஒரு தினசரிச் செய்தி

இந்திராணி கொலை வழக்கில் முக்கியக் குற்றவாளியான பெண் தாதா காந்தா (55) போலீஸில் அளித்த வாக்குமூலம் வருமாறு:

‘எனக்கு பாளையம், கற்பகம் என்ற மகள்களும், நாகேந்தரன், முருகன், பிர்லா, ரமேஷ் என்ற மகன்களும் உள்ளனர். நாகேந்தரன், பல்வேறு வழக்குகளில் சிக்கி பாளையங்கோட்டை சிறையில் உள்ளான். நான் கடந்த 98ஆம் ஆண்டு போதை வழக்கில் கைதாகி வேலூர் சிறையில் இருந்தபோது, ஜோலார்ப்பேட்டையைச் சேர்ந்த இந்திராணியுடன் பழக்கம் ஏற்பட்டது. சிறையில் இருந்து வெளியே வந்ததும் அவரை சாராயத் தொழிலுக்குப் பயன்படுத்திக்கொண்டேன். எங்களைப் போலீஸில் காட்டிக் கொடுப்பதாக இந்திராணி மிரட்டியதாக என்னுடைய மகன்கள் கூறினர்.

இந்திராணி, போலீஸில் எங்களைக் காட்டிக்கொடுப்பதற்கு முன்பு அவளைத் தீர்த்துக் கட்டுவதற்குத் திட்டமிட்டோம். வியாசர்பாடி எஸ்.எம்.நகரைச் சேர்ந்த ரவி(எ) ரவிக்குமார் (25), சாமந்திப்பூ காலனியைச் சேர்ந்த புஷ்பாகரன் (25) ஆகிய இருவரிடம் இந்திராணியை எஸ்.எம்.நகர் சுடுகாட்டிற்கு அழைத்து வரச்

சொன்னோம்.

அங்கே நானும், என்னுடைய மகன்கள் முருகன், ரமேஷ் ஆகியோரும் நின்று கொண்டிருந்தோம். வலுக்கட்டாயமாக அழைத்து வரப்பட்ட இந்திராணி அந்த இடத்தில் எங்களைக் கண்டதும் அதிர்ச்சியடைந்தாள். ‘ஊரே எங்களைப் பார்த்து பயப்படுது. போலீஸ்ல மகன்களைக் காட்டிக்கொடுக்கறேன்னு சொன்னியாமே... உன்னை விட்டாத்தானே அவளைப் போட்டுத் தள்ளுங்கடா’ என்று கூறினேன். ரமேஷ் கத்தியால் இந்திராணியின் இடது பக்கமும், முருகன் தலையிலும் வெட்டினர். பின்னர் மறைத்து வைத்திருந்த கத்தியால் ரவி அவள் கழுத்தில் குத்தினான். இந்திராணி அப்படியே சரிந்து விழுந்தாள்.

‘இவளை இப்படியே விடக் கூடாது, விட்டால் போலீஸுக்கு அடையாளம் தெரிந்துவிடும்’ என்று பாட்டிலில் இருந்த பெட்ரோலை இந்திராணியின் உடல் மீது ஊற்றி ரமேஷ் தீக்குச்சியைக் கொளுத்திப் போட்டான். பாதி எரிந்தும் எரியாமலும் இருந்த இந்திராணியின் உடலைத் தூக்கி கால்வாயில் வீசினோம். ரத்தம் எங்கள் துணிகள் மீது படிந்திருந்தது.

அனைவரின் துணிகளையும் கூட்ஷெட்டில் எரித்துவிட்டோம். கத்திகளை மறைத்துவிடும்படி கூறினேன். சில நாட்கள் கழித்து இந்திராணியின் பிணத்தைப் போலீஸார் மீட்டு விசாரணை செய்தனர். அடையாளம் தெரிந்ததும், போலீஸ் பிடித்துவிடும் என்பதால் கடந்த 25ஆம் தேதி ரவிக்குமார், புஷ்பாகரன் ஆகியோர் கோர்ட்டில் சரணடைந்தனர். இதைத் தொடர்ந்து என்னைப் போலீஸார் கைது செய்தனர். ஏற்கெனவே, என்னுடைய மகன்கள் தலைமறைவாகிவிட்டனர்.‘

-18.7.2006 தேதியிட்ட ஒரு தினசரியில் வந்த செய்தி

இந்த நாவலை நான் உடனடியாக முடித்தாக வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறேன். ஏனென்றால், ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு அத்தியாயமாக விரிவடைந்துகொண்டே போகிறது. நான் சந்திக்கும் ஒவ்வொரு நபரும் ஒவ்வொரு கதாபாத்திரமாக மாறிக்கொண்டே போகிறார்கள். அதற்காக யாரையும் சந்திக்காமல் இருந்துவிட முடியுமா என்ன? அது மட்டுமல்லாமல், ஒவ்வொரு பாத்திரமும் தன்னைத் தானே மாற்றி மாற்றி எழுதிக்கொண்டு போகிறது. இப்படி முடிவேயில்லாத சுழற்சியாகப் போய்க்கொண்டிருந்தால் நாவல் என்னாவது?

ஒரு இடத்தில், ஹெலன் ஒன்றும் கொலைகாரி அல்ல என்று எழுதியிருந்தேன். இப்போது ஹெலன் அதை மாற்றி எழுதுகிறாள். திருநெல்வேலிக்குப் பக்கத்திலுள்ள ஹஜ்ரத் காதர் ஒலி ஔலியாவின் மசூதிக்கு வெள்ளையடித்து விட்டாளாம். இந்த மசூதிக்கு வேண்டுதல் வைத்து வெள்ளையடித்தால் எதிரி ஒழிந்தான் என்று பொருள். ஹெலனின் எதிரி அலெக்ஸ். அலெக்ஸை ஒழித்துக் கட்டத்தான் இந்த ஏற்பாடு. அந்த மசூதியில் இந்து, முஸ்லீம், கிறிஸ்தவர் என்ற பாகுபாடில்லாமல் சகல மதத்தினரும் வந்து வெள்ளை யடித்துக்கொண்டிருக்கிறார்கள் என்று கேள்வி.

தமிழ் சினிமாவை எத்தனையோ காலமாகத் திட்டிக் கொண்டிருந்தேன். கடைசியில் பார்த்தால் என் கதாபாத்திரங் களே தமிழ் சினிமா பாணியில்தான் வாழ்ந்துகொண்டிருக் கின்றன.

ஹெலன் வெள்ளையடித்த விஷயத்தை வயலன்ஸில் சேர்க்க வேண்டும் என்பதுதான் என் கருத்து. ஆனால் மணியோ அதை காமெடி டிராக் என்கிறான். ஏனென்றால், ஒரு மசூதிக்கு வெள்ளையடித்து ஒருவனை அழிக்கலாம் என்றால் அமெரிக்க அதிபர் புஷ்ஷை அழிப்பதற்கு ஒஸாமா பின் லாடன் ஏன் இவ்வளவு சிரமப்பட வேண்டும்? இந்த மசூதிக்கு வெள்ளையடித்தால் தீர்ந்ததே கதை? பாலஸ்தீனம், ஈராக், மற்றும் ஏராளமான லத்தின் அமெரிக்க தேசங்களெல்லாம் நிம்மதியாக வாழலாமே? - இது மணியின் வாதம்.

ஆனால் எனக்கு என்னவோ அது அவ்வளவு எளிதாகக் கேலிப் பேசிப் புறந்தள்ளிவிடக்கூடிய சமாச்சாரமாகத் தெரியவில்லை.

அமெரிக்காவில் ஒரு புஷ் போனால் இன்னொரு புஷ் வருவார் என்பது ஒரு பக்கம் இருக்க, இந்த ஏவல், பில்லி சூனிய விவகாரங்களெல்லாம் ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்புக்குள் மட்டும்தான் வேலை செய்கிறதோ என்று ஐயமாக இருக்கிறது. இல்லாவிட்டால் ரஸ்புடினை எப்படிப் புரிந்து கொள்வது? எப்படியோ என் நண்பன் அலெக்ஸுக்கு ஒன்றுமாகாமல் இருந்தால் சரி.

இத்துடன் இந்த நாவலில் ஹெலன் என்ற கதாபாத்திரம் முடிவுக்கு வருகிறது. முடிவதற்கு முன்னால் அவளைப் பற்றிய ஒரு சுவாரசியமான செய்தி:

அவள் மந்திரியாக வருவாள் என்று தேர்தலுக்கு முன்பே எழுதியிருந்தேன். அது கிட்டத்தட்ட பலிக்கும் அளவுக்குச் சென்றுவிட்டது.

ஹெலனுக்குத் தேர்தலில் டிக்கட் கிடைத்தது. கட்சியில் முப்பது ஆண்டுகள் மாடாய் உழைத்தவர்களுக்கே டிக்கெட் கிடைக்காதபோது இவளுக்கு எப்படிக் கிடைத்தது என்ற காரணத்தை ஹேஷ்யமாகச் சொன்ன ஒருவரை இவள் திட்டிய திட்டில் அவருக்கு மாரடைப்பே வந்துவிட்டது என்பதால் அதை மட்டும் ரொம்ப ஆராய்ச்சி பண்ணாமல் விட்டு விடுவோம். சொல்லப் போனால் கட்சித் தலைவருடைய புதல்வரே மந்திரி ஆவதற்கு முப்பது ஆண்டுகள் ஆகியிருக்கிறது. ஆனால் ஹெலனுக்கு ஆனது மூன்றே மாதங்கள். இல்லாவிட்டால் எவ்வளவு தைரியம் இருந்தால் அவள் அப்படி ஒரு கேள்வியைக் கேட்டிருப்பாள்? தேர்தல் நடக்க இருப்பதற்கு முன்பே, ‘க்ரீன்வேஸ் ரோட்டில் எந்த பங்களாவில் கொசுத் தொல்லை இல்லாமல் இருக்கும்?’ என்று கட்சித் தொண்டர் ஒருவரிடம் விசாரித்து இருக்கிறாள் ஹெலன். (க்ரீன்வேஸ் ரோட், சென்னையில் மந்திரிகள் வசிக்கும் சாலை.) இந்த விஷயம் காட்டுத்தீயைப்போல் பரவி இலக்கிய வட்டாரம் வரை வந்துவிட்டது.

வெறும் 500 வாக்குகள் வித்தியாசத்தில் தோற்றுப்போனாள் ஹெலன். எல்லாம் அந்த 35 ‘எல்’லையும் ஒருசேரப் பார்த்ததன் விளைவு. தேர்தல் செலவுக்கு கட்சியிலிருந்து ஒவ்வொரு வேட்பாளருக்கும் 35 ‘எல்’ கொடுக்கப்பட்டது. ஒரு காலத்தில் 35 ரூபாய்க்கே சிங்கியடித்துக் கொண்டிருந்த ஒரு பெண் 35 ‘எல்’லை ஒருசேரப் பார்த்தால் என்ன

ஆவாள்? இந்த 35 ‘எல்’ வெறும் பிஸாத்து; ஐந்து ஆண்டுகளில் 35 ‘சீ’யையே சேர்த்துவிடலாம். ஹெலன் அப்படி ‘ரிஸ்க்’ எடுக்க விரும்பவில்லை. போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து.

தேர்தலில் தோற்ற பிறகு தலைவரை வந்து பார்த்திருக்கிறாள் ஹெலன். ‘பார்க்கலாம். எம்மெல்லே ஆகாவிட்டால் என்ன? எம்மெல்ஸி ஆக்கிவிடலாம்’ என்று ஆறுதலாக கூறியிருக்கிறார் தலைவர்.

அதற்கு ஹெலன் கண்ணீரைத் துடைத்தபடி கூறிய பதில்: ‘நம்ம ஊர்ல கட்சிக்காரங்க அதுக்கு ஒத்துக்க மாட்டாங்க பெரியப்பா. ஒரு எம்ப்பியாவது ஆனாத்தான் அவுங்கல்லாம் சமாதானமாவாங்க...’

## 55. வேட்கையின் கனவுகள்

> There is a kingdom of neurosis and madness. The head is sick and the heart is diseased. From the sole of the foot to the top of the head, there is nothing but injuries, failures, and unbandaged wounds.
>
> Saadallah Wonnous: "Rape' என்ற நாடகத்தில்.

சில்ஸ் மரியாவை அவள் கணவன் கொன்றுவிட்டான் என்றும், இந்தக் கொலை பாரிஸ் நகரில் பரபரப்பாகப் பேசிக்கொள்ளப்படுவதாகவும் ஸ்வப்னா எழுதியிருந்தாள். இதனால் பரபரப்படைந்த நானும் பாரிஸ் நகர செய்தித்தாள்களை வரவழைத்துப் பார்த்தேன்.

விபரம் கீழே:

மரியாவை அவள் கணவன் கிறிஸ்தோ.்.பர் ஏற்கெனவே ஒரு முறை வயிற்றில் கத்தியால் குத்திக் கொல்ல முயன்றிருக் கிறார். பிறகு கிறிஸ்தோ.்.பர் ஒரு ஆண்டு காலம் மனநல மருத்துவமனையில் தங்கி சிகிச்சை பெற்றிருக்கிறார். அப்போது ‘இதுபோன்ற மாதர்களைக் கொலை செய்வதே சிறந்தது’ என்று தனக்குத் தோன்றியதாகக் கூறியிருக்கிறார். அவர் மேலும் கூறியது: ‘ஆனால் அந்தக் கொலையை எப்படிச் செய்வது என்றுதான் புரியவில்லை. நான் பிணையில் விடுவிக்கப்பட்டால் இது பற்றி யோசிக்க வேண்டும்.’ ஆனால் 10,000 யூரோ பிணைப் பணத்தில் அவர் விடுவிக்கப்பட்டபோது தன் மனைவியைக் கொலை செய்யும் எண்ணம் தனக்கு இல்லை என்று அவர் கூறியிருக்கிறார். குற்றம் சாட்டப்பட்டவர் சென்ற ஆண்டு மே மாதம் 8ஆம் தேதி தன் மனைவியை அவர் வேலை பார்த்து வந்த அலுவலகத்தில் காலை எட்டு மணி முதல் ஒன்பது வரையில் தொடர்புகொள்ள முயன்றபோது அன்று அவருக்கு ஓய்வு நாள் என்ற பதில்தான் கிடைத்தது. அதற்குப் பிறகு அன்று இரவு 10 மணிக்குத் தன் மைத்துனரை அவர் தொடர்பு கொண்டபோது தன் மனைவி இரவு வேலைக்குச் செல்வதாகக் கூறிச் சென்ற விஷயம் தெரிந்தது.

மேலும் கிறிஸ்தோ.்.பர் தனது வாக்குமூலத்தில் கூறியது: ‘நான் என் மனைவியின் அலுவலகத்திற்குத் தொடர்புகொண்டதை என் மைத்துனரிடம் கூறவில்லை. ஆனால் என் மனைவி ஏதோ ‘தில்லு முல்லு’ வேலைகள் செய்வதாக எனக்குத் தோன்றியது. அதன் பிறகே நான் என் மனைவியைக் கைத் தொலைபேசியில் தொடர்பு கொண்டேன். என்

மனைவி பேசினார்.

அந்த இடத்தில் இசை ஒலித்துக்கொண்டிருந்தது என் காதில் கேட்டது. அவர் ஓர் இரவு விடுதியில் இருக்கிறார் என்று புரிந்தது கொண்டேன்.

ஆதித்தனின் கைத்தொலைபேசி எண்ணும் எனக்குத் தெரிந்திருந்தது. அந்த எண்ணைத் தொடர்புகொண்டபோது ஆதித்தன் பேசினார். அப்போதும் அதே இசையின் ஒலிதான் கேட்டது. அதனால் இருவரும் ஒரே இடத்தில்தான் இருக்க வேண்டும் என்று முடிவு செய்தேன். கஃபேவுக்குச் சென்று பியர் அருந்தினேன்.

அதற்குப் பிறகு என் மனைவியின் கைத்தொலைபேசியும், ஆதித்தனின் கைத்தொலைபேசியும் ஒரே நேரத்தில் அணைந்துவிட்டது. இதனால் எனக்கு மேலும் கோபம் அதிகரித்தது.

இருவரும் உடலுறவில் ஈடுபட்டுக்கொண்டிருக்கிறார்களோ என்ற எண்ணமே எனக்கு மேலோங்கி இருந்ததால் என்னால் அந்த இரவு முழுவதும் தூங்கவே முடியவில்லை. அடுத்த நாள் காலை இருவரின் கைத்தொலைபேசிகளும் 6.00 மணிக்கு ஒரே நேரத்தில் இயங்கத் தொடங்கின.

மரியா வேலை பார்க்கும் அலுவலக வாசலிலேயே வைத்து சக ஊழியர்கள் பார்க்க அவருடைய கழுத்தை அரிவாளால் வெட்டிக் கொன்ற கிறிஸ்தோஃபர் ‘என் மனைவி இறந்தது குறித்து நான் மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறேன். இதற்கு மேல் எதையும் கூற விரும்பவில்லை. நான் சாக விரும்புகிறேன். தூக்கு மேடைக்குப் போக விரும்புகிறேன்’ என்று கூறியிருக்கிறார்.

இச்சம்பவம் பற்றி மரியாவின் சகோதரி கூறியிருப்பதாவது:

‘என் தங்கை மரியா கொலை செய்யப்பட்ட அன்று பிற்பகல் 3 மணிக்கு நான் என் அம்மாவின் வீட்டில் இருந்தேன். அப்போது என் கைத்தொலைபேசியில் ஓர் அழைப்பு வந்தது.

கைத்தொலைபேசியில் அழைத்தவர் தான் யார் என்று கூறவில்லை. ஆனால் அழைத்தவரின் குரலை வைத்து அது மரியாவின் கணவர் என்று அடையாளம் கண்டுகொண்டேன்.

அழைத்தவர் என்னைத் தகாத வார்த்தைகளால் திட்டிவிட்டு ‘அடுத்து நீ’ என்று கூறினார். நான் உடனே பாதுகாப்பிற்காக என் அம்மா வீட்டில் இருந்த போலீஸ் அதிகாரியிடம் என் கைத்தொலைபேசியைக் கொடுத்துவிட்டேன்.

இப்போது கணவரை விட்டுப் பிரிந்து விவாகரத்து செய்திருக்கும் இந்த மாது, கொலை செய்யப்பட்ட மரியா, தனக்கும் தன் கணவருக்கும் பிரச்னைகள் இருந்ததைப் பற்றித் தன்னுடன் பேசியதுண்டு என்றும் கூறினார். மேலும், தான் காதலித்த ஆடவரைத் திருமணம் செய்துகொள்ள தன் அப்பா அனுமதி கொடுக்காததால், வீட்டை விட்டு வெளியேறி தன் காதலரைத் திருமணம் செய்துகொண்டதாகத் தெரிவித்தார். இதனால் தனக்கும், தன் பிறந்த வீட்டிற்கும் பேச்சு வார்த்தை இல்லாமல் போனது என்றும் கூறிய அவர், தன் தந்தை காலமான பிறகு தன் பிறந்த வீட்டுடன் உறவு நெருக்கமானது என்றார்.

‘என் குடும்பத்தில் நானும், கொலை செய்யப்பட்ட மரியாவும் மட்டுமே திருமணமானவர்கள் என்பதால், நானும் மரியாவும் சந்தித்துக்கொள்ளும்போது தன் கணவர் குடிகாரர் என்றும், சூதாடி என்றும், வேலை இல்லாதவர் என்றும் என்னிடம் கூறியதுண்டு. அப்போது நான் அவருக்கு அறிவுரைகள் கூறுவேன்’ என்றும் அந்த மாது கூறினார். ‘கொலை செய்யப்பட்ட மாது கை முறிந்து தேசியப் பல்கலைக்கழக மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டி ருந்தபோது நீங்கள் அவரைப் பார்த்தீர்களா?’ என்று கேட்டபோது, ‘ஆமாம்’ என்றார். மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டிருந்த மரியா, தன் கணவர் பணம் வேண்டும் என்று கேட்டதாகவும், இல்லை என்றதும் கையை முறித்துவிட்டார் என்றும் கூறினார். அவர் மிகவும் வேதனையுடன் இருந்ததால் தான் அவரிடம் வேறு கேள்விகள் ஏதும் கேட்கவில்லை என்று மரியாவின் சகோதரி கூறினார்.

மரியா பற்றி ஆதித்தன் கூறியதாவது:

மரியா அழகி... அவரை எனக்கு மிகவும் பிடித்திருந்தது. ‘செல்லக்குட்டி’ என்றுதான் அவர் என்னை அழைப்பார். நாங்கள் இருவரும் ஒரே வட்டாரத்தில் வசித்து வந்ததால் ஒரே பஸ்ஸில் அலுவலகம் செல்வோம். பஸ்ஸில் அருகருகேதான் அமர்வோம். அவர் விவாகரத்தானவர் என்று கூறியபடியால் அவரை நான் காதலிக்கத் துவங்கினேன். அவரை வீட்டிற்கு அழைத்துச் செல்லும்போது உதட்டில் முத்தமிட்டுக் கொள்ளுவோம். கொலை செய்யப்பட்ட மரியாவும் நானும் ஒருமுறை சுவிஸ் சென்று வந்தோம். அங்கே இரண்டு இரவுகள் ஒரே அறையில் தங்கினோம்; ஆனால் உடலுறவு கொள்ளவில்லை. அதைப் பற்றி மரியா என்னிடம் கேட்டார். எல்லாம் வீணாகிவிட்டது என்றும் கூறினார். அதற்கு ‘அப்போது நான் குடித்திருந்தேன்’ என்று கூறினேன். அதற்குப் பிறகு சென்ற ஆண்டு மீண்டும் அழைத்தேன். அவர் வர மறுத்துவிட்டார். சம்பவம் நடந்த தினத்தின் முதல் நாள் மரியா மிகவும் பதற்றத்துடன் காணப்பட்டார்.

கொலை பற்றி கிறிஸ்தோஃபர் மேற்கொண்டு அளித்த வாக்குமூலம்:

என் மனைவி மெல்ல நடந்து வந்துகொண்டிருந்தார். அவருடன் சுமார் எட்டு பேர் வந்துகொண்டிருந்தார்கள். என் மனைவிதான் கடைசியாக வந்துகொண்டிருந்தார். நான் மறைந்திருக்கும் இடத்திற்கு அருகே என் மனைவி வந்தபோது நான் அந்த இடத்தைவிட்டு வெளியே வந்தேன். ‘நான் உனக்குத் தொந்தரவு கொடுக்க வரவில்லை, நான் கொண்டுவந்திருக்கும் விவாகரத்துப் பத்திரங்களில் கையெழுத்து வாங்கவே வந்தேன்’ என்று கூறினேன். அவரும் சரி என்று கூறி நான் கையில் வைத்திருந்த பத்திரத்தையும், பேனாவையும் வாங்கினார். அப்போது நான் என் பின்னால் மறைத்து வைத்திருந்த அரிவாளை எடுத்து மேலே உயர்த்தி அவர் கழுத்தில் வெட்டினேன்.

என் மனைவி தன் கழுத்தைப் பிடித்தவாறே பின்னால் சென்று தரையில் விழுந்து அமர்ந்த நிலையில் இருந்தார். ரத்தம் வழிந்தோடியது. இரண்டாவது முறை நான் அவர் கழுத்தை வெட்டிய போதும் அவர் அமர்ந்த நிலையில்தான் இருந்தார். மூன்றாவது முறை நான் அவர் கழுத்தை வெட்டியபோது அவர் கழுத்தில் இருந்து ரத்தம் ஊற்று நீர் போல மேலே தெறித்தது. என் மனைவி தரையில் விழுந்தார். அவர்

'போய்விட்டார்' என்பதை அறிந்த நான் அரிவாளை அங்கேயே போட்டுவிட்டு அந்த இடத்தை விட்டு வெளியேறினேன்.

அப்போது அங்கே பாதுகாவலராக இருந்த ஒரு ஜப்பானிய முதியவர் 'என்னிடம் விவாகரத்துப் பத்திரத்தில் கையெழுத்து வாங்கவே வந்தேன் என்றாயே, இப்போது உன் மனைவியை வெட்டிவிட்டாயே?' என்று பதற்றத்துடன் கேட்டார். நான் அவர் பக்கம் திரும்பவில்லை. தொழிற்சாலையை விட்டு வெளியே வந்து டாக்ஸி ஒன்றை எடுத்து அந்த இடத்தை விட்டு வெளியேறினேன்.

திருமணமான இரண்டு ஆண்டில் என் மனைவி, முதலில் வேல்முருகன், அடுத்து என் மனைவியின் அலுவலகத்தில் ஒன்றாக வேலை செய்த கோவிந்தன் போன்றோருடன் தகாத உறவு வைத்திருப்பதைக் கண்டுபிடித்த நான், மூன்றாவதாக செந்தெனி (Saint Denis) வட்டாரத்தில் இரவு விடுதி ஒன்றில் வேலை பார்த்து வந்த ஒருவருடன் தொடர்பு இருப்பதைக் கண்டுபிடித்தேன். எங்களுக்குத் திருமணமாகி இரண்டாவது ஆண்டிலேயே என் மனைவிக்கும் ஆதித்தனுக்கும் தொடர்பு இருந்ததைக் கண்டுபிடித்துவிட்டேன்.

என் மனைவி அப்போது தனக்குப் பகல் வேலை என்று என்னிடம் கூறியிருந்ததால், அவர் வேலை நேரம் முடிந்ததும் அவரை அழைத்து வர அவர் வேலை செய்து வந்த அலுவலகத்திற்கு நான் சென்றிருந்தேன். அப்போது அவர் அங்கு இல்லை. அது குறித்து கேட்டபோது அவர் தனக்கும் ஆதித்தனுக்கும் கள்ள உறவு இருப்பதை ஒப்புக்கொண்டார்.

மறுமுறை 2000ஆம் ஆண்டு என் மனைவி சோனி தொழிற்சாலையில் வேலை செய்துகொண்டிருந்தபோது அவர் கைத்தொலைபேசியில் புதிதாக ஒரு எண் இருப்பதைப் பார்த்தேன். அந்த எண்ணைத் தொடர்பு கொண்டபோது இந்திய நாட்டவர் கோவிந்தன் பேசினார். அவர் என் மனைவி வேலை செய்யும் அலுவலகத்தில் வேலை செய்பவர். என் மனைவி வாரந்தோறும் இடைவிடாமல் என் வீட்டுப் பூஜை அறையில் இறைவனை வழிபாடு செய்து வருவதைப் பார்த்ததும் என் சந்தேகம் மேலும் வலுவடைந்தது.

மாதத்தில் ஒருமுறை வரும் மாதவிடாய் காலத்தில் இந்தியப் பெண்கள் பொதுவாகப் பூஜை அறைக்குள் செல்வதில்லை. அப்படியென்றால் என் மனைவி அவருடனான தகாத உறவு காரணமாகக் கர்ப்பமாக இருக்கிறாரோ என்று நான் சந்தேகித்தேன். அதை உறுதிப்படுத்திக்கொள்ள அவரை மருந்தகத்திற்கு அழைத்துச் சென்றேன். அவரைப் பரிசோதித்த மருத்துவர் அவர் எட்டு மாத கர்ப்பிணி என்று கூறினார். எனக்குக் கோபம் வந்துவிட்டது. என் மனைவி செந்தெனி சிவப்பு விளக்குப் பகுதியில் இருக்கும் மலிவுக் கட்டண விடுதிகளில் பல முறை கோவிந்தனுடன் தங்கியதாக அறிந்ததும் நான் என் மனைவியை அடித்தேன். அதற்காக நான் நீதிமன்றத்தில் குற்றம் சாட்டப்பட்டேன். எனக்கு மூன்று மாதச் சிறைத்தண்டனை கிடைத்தது. என் மனைவியும் அவருடைய தகாத உறவைப் பற்றி போலீஸாரிடம் ஒப்புக்கொண்டதால் என் மீதான குற்றச்சாட்டு 'பயங்கரத் தாக்குதல்' என்ற குற்றச்சாட்டிலிருந்து 'ஆத்திரத்தில் அடித்த குற்றச்சாட்டாக' மாற்றப்பட்டது.

நான் என் மனைவியைத் தனியார் மருந்தகம் ஒன்றுக்கு அழைத்துச்

சென்று அவருடைய கருவைக் கலைத்தேன். இதற்கு 200 யூரோ கட்டணமும் மருத்துவரிடம் செலுத்தினேன். என் மைத்துனரும் நானும் கோவிந்தனை என் வீட்டிற்கு அழைத்துவந்து அவரை அடித்தோம். என் மனைவியுடன் உறவு இருந்ததை கோவிந்தன் ஒப்புக்கொண்டார். இருவரும் பாலியல் உறவு கொள்ளும்போது கோவிந்தன் பாதுகாப்பு உறை அணியவில்லை என்றும் எங்களிடம் கூறினார்.

அடுத்தது, ஆதித்தனுக்கும் என் மனைவிக்கும் சென்ற ஆண்டு மார்ச் மாதம் 24ஆம் தேதி தொடர்பு ஏற்பட்டது. இதை என் மனைவி தூங்கிக்கொண்டிருந்தபோது அவருடைய கைத்தொலைபேசி குறுந்தகவலைப் படித்தபோது அறிந்தேன்.

ஆதித்தன் என் மனைவிக்கு ‘கவலைப்படாதே பெண்ணே! உன் கணவரால் உனக்குப் பிரச்னை ஏற்பட்டால் நான் கவனித்துக்கொள்கிறேன்’ என்ற குறுந்தகவலை அனுப்பி வைத்திருந்தார். அதற்கு, ‘நான் உன்னை நினைக்கிறேன்’ என்று உடனே பதில் அனுப்பி வைத்தேன். சிறிது நேரத்தில் ஆதித்தன், நான் உனக்காகவே வாழ்கிறேன் என்று பதில் தகவல் அனுப்பினார்.

## 56. காம சூத்திரம்

> நீ ஒரு பெண். நான் ஒரு ஆண். இதைத் தவிர வேறு எல்லாவற்றையும் இப்போது மறந்துவிடு. இது ஒன்றுதான் நிஜம். மற்றதெல்லாம் நம்மோடு ஒட்டிக்கொண்டிருக்கும் பிம்பத் தூசிகள். நீ என் மூலமாகவும் நான் உன் மூலமாகவும் நமது சரீரத்தின் ரகசியங்களையும் அற்புதங்களையும் அறிந்துகொள்வோம் வா. I want to eat you baby... என் உதடும் நாக்கும் பரபரக்கிறது. அருகில் வா. உன் நிதம்ப ரசத்தை நான் பருக வேண்டும்.

> பாரிஸில் ஒரு ஸானாவில் நானும் ஸ்வப்னாவும் நீராவிக் குளியல் எடுத்துக்கொண்டிருந்தபோது நான் அவளிடம் கூறியது.

என்னுடைய பெண் கதாபாத்திரங்களைப் பற்றி அலெக்ஸிடம் சொல்லிக்கொண்டே வந்ததில் ஒரு நாள் அவன் இப்படி ஒரு குறுந்தகவல் அனுப்பியிருந்தான்:

‘பெருமாள், சிவப்பு ரோஜாக்கள் கமல் மாதிரி ஒவ்வொருவராகக் கொல்லப்போகிறேன். அதில் வரும் கமலின் அப்பா கேரக்டர்தான் நீ.’

தேவையில்லை அலெக்ஸ். என் கதாபாத்திரங்கள் ஒவ்வொருவரும் அவர்களாகவே காணாமல் போய்க்கொண்டிருக்கிறார்கள். லயா காணவில்லை. ஸ்வப்னா ஆறு மாதத்திற்கு ஒரு முறை பேசுகிறாள். சில்ஸ் மரியாவை அவள் கணவன் கொன்றுவிட்டான். ராம்குமாரை மணந்துகொண்ட திவ்யா தற்கொலை செய்துகொண்டு விட்டாள். (இந்த முறை அவளுடைய தற்கொலை முயற்சியில் வென்றுவிட்டாள். வாழ்க!) ஃபௌஸியாவும் காணாமல் போய்விட்டாள். ஜாய்ஸ் இப்போது செந்தாமரை என்ற பெயரில் கவிதைகள் எழுதிக்கொண்டிருக்கிறாள். மலேஷியா பத்மினி 35 வயது வரை கன்னிமை காத்துவிட்டு இப்போது லெஸ்பியனாகி விட்டாள். மியூஸ்?

ம்யூஸ், வாழ்க்கை பூராவும் காய்களைத் தவறாகவே நகர்த்திக் கொண்டிருப்பாள் போலிருக்கிறது. மணியைப் பிடிப்பதற்கு நரேனைப் பிடித்தால் போதும் என்று தப்புக் கணக்கு போட்டாள். இதே தவறைத்தான் மலையாள இயக்குனர் கருணாகரனை நெருங்குவதற்கும் செய்தாள். ஒருவருடைய நட்பு கிடைக்க வேண்டுமானால் அவருடைய டிரைவரையா சிநேகம் செய்வார்கள்? இந்த ஆரம்ப அறிவு கூட இல்லாமலா இம்மாதிரி ஆட்டத்துக்கெல்லாம் வருவார்கள்? கருணாகரனின் டிரைவர் இவளை ஒரு மாத காலம் போடு போடு என்று போட்டுத்தள்ளிவிட்டு 'டாட்டா' காட்டிவிட்டான். மலையாள சினிமா உலகமே இவளை 'ஷடாங்' என்று சொல்லிப் பரிகசிக்கிறது. 'ஷடாங்' என்றால் என்ன என்று சன்னியிடமே கேட்டேன். அது மலையாள சினிமா துறையில் 'உடல் தொழில்' செய்யும் பெண்களைக் குறிக்கும் சொல் என்று சொன்னான். இது ஒரு காரணப் பெயர். உண்மையில் 'ஷடாங்' என்றால் இரண்டு ரயில் பெட்டிகளை ஒன்றோடொன்று கோர்ப்பது என்று பொருள்.

இவளை நரேனுக்கு அறிமுகப்படுத்தியதே நான். அறிமுகப் படுத்தி இரண்டே நாட்களில் அவனைக் கோர்த்துக்கொண்டு பாண்டிச்சேரி போய்விட்டாள். போகட்டும். அது அவள் விருப்பம். ஒரு ஆணும் பெண்ணும் இணைய காதலோ, காமமோ காரணமாக இருக்கலாம். அதைத் தவிர வேறு எதுவாக இருந்தாலும் அது மனித உறவைக் கொச்சைப்படுத்துவதாகும் என்பது என் கருத்து. நானும், மணியும், நரேனும் 'டீக்கடை'யில் அமர்ந்து சரக்கு சாப்பிட்டுக்கொண்டிருக்கிறோம். நரேனுடன் அவள் பாண்டிச்சேரி சென்று வந்ததற்கு அடுத்த வாரம். ம்யூஸிடமிருந்து நரேனுக்கு ஃபோன். 'பேசவா?' என்று என்னைக் கேட்கிறான். 'பேசு' என்கிறேன். ஸ்பீக்கரை ஆன் செய்துவிட்டுப் பேசுகிறான்.

'சொல்டி செல்லம்.'

'டேய் நரேன்... உன் நண்பர் மணி சோனி கம்பெனியை வாங்கி விட்டார் போலிருக்கிறதே?'

'என்னடி உளறுகிறாய்?''

'கேள்விப்பட்டேன்.'

'வாங்கவும் இல்லை. ஒன்றும் இல்லை. விஷயத்தைச் சொல்டி.'

'இல்லெ... வந்து... எனக்கு ஒரு சோனி எரிக்ஸன் ஃபோன் வேணும். நீ மணிகிட்டே சொல்லி வாங்கித் தாயேன்...'

இதற்குப் பிறகு தான் அவளிடம் நான் சொன்னேன். 'என் காதலை நீ ஏற்றுக்கொண்டுவிட்டதாகச் சொல்கிறாய். என்னை மிகவும் பிடித்திருப்பதாகச் சொல்லி, கிறங்க அடிக்கும் முத்தம் தருகிறாய். 'ஆனால் உடலோடு உடல் இணையலாம் வா' என்று அழைத்தால் 'இன்றைக்கு ரெட் ஃப்ளாக்' என்கிறாய். தொடர்ந்து ஆறு மாதம் கேட்டுப் பார்த்தேன். ஆறு தடவையும் ரெட் ஃப்ளாக். என்னைப் பிச்சைக்காரன் என்று நினைத்துத்தானே தவிர்க்கிறாய்? இல்லாவிட்டால் கேம்ரி அல்லது பென்ஸில் வரும் மணியின் கையைத் தொட்டதும் ஆர்கஸம் வந்துவிட்டவளைப் போல் குதித்தாயே, அது ஏன்?' - இப்படி வெளிப்படையாகக் கேட்கவில்லை. பூடகமாகக் கேட்டேன். ஆனால்

ஒன்றை மட்டும் தெளிவாகச் சொன்னேன். என்னோடு உறவு கொண்டால் நீ மாதம் ஒரு சோனி எரிக்ஸன் வாங்கலாம். அந்த அளவுக்கு உன்னுடைய பணக்கஷ்டம் தீர்ந்துவிடும்.

இதை அப்படியே வார்த்தைக்கு வார்த்தை சன்னியிடம் சொல்லியிருக்கிறாள். அதுவும் எப்போது? முதல் சந்திப்பிலேயே.

‘பெருமாள் என் வீட்டில்தான் எப்போதும் கிடப்பான். ஆனால் என்ன பிரச்னை என்றால் முதல் சந்திப்பிலேயே படுத்துக்கொள்ள வா என்றான். அதில்கூடத் தப்பில்லை. ஆனால், என்னோடு படுத்துக்கொண்டால் உனக்கு நிறைய வசதி கிடைக்கும் என்று ஆண் - பெண் தேக சம்பந்தத்தை வியாபாரமாக்கிக் கொச்சைப்படுத்தி விட்டான். அதனால்தான் முடியாது என்று மறுத்துவிட்டேன்.’

இதையெல்லாம் ஒரு முதல் சந்திப்பிலா சொல்வார்கள்? சன்னி என்னிடம் நொந்து போய் சொன்னான்.

நரேனுக்கு என்னை மாமா ஆக்கினாள். பொறுத்துக்கொண்டேன். பிறகு மணிக்கும் மாமா ஆக்க முயன்றபோதுதான் ‘டோண்ட் மேக் மீ எ பிம்ப்’ என்று குறுந்தகவல் அனுப்பினேன். உடனே நான் அவளைத் தேவடியாள் என்று சொல்லிவிட்டதாக ஊர் பூராவும் தம்பட்டம் அடித்துவிட்டாள்.

என்ன காரணம் என்று தெரியவில்லை. ஒருவேளை என்னை எய்ட்ஸ் நோயாளி என்று நினைத்துவிட்டாளோ? ஒரு ex-புரட்சிக்காரி உத்தமத் தமிழ் எழுத்தாளன், நிர்-9ஐ ‘நீ எய்ட்ஸ் சோதனை செய்துகொண்டாயா?’ என்று கேட்டாளாம். ஏன், இவளும் இளவயதில் பாலியல் புரட்சி பேசியவள்தானே? இவள் போய் எய்ட்ஸ் சோதனை செய்து கொள்ளலாமே?

என் மீது அப்படி ஒரு சந்தேகம் இருந்திருந்தால் அதை வெளிப்படையாகச் சொல்லித் தொலைத்திருக்கலாம். அதை விட்டுவிட்டு, காம சூத்திரம் மலையாள மொழிபெயர்ப்பை வைத்துக்கொண்டு ஒவ்வொரு நிலையாக எடுத்து, எந்தெந்த நிலைகள் சாத்தியமில்லை, எந்தெந்த நிலைகளில் தனக்கு அனுபவம் உண்டு, எந்தெந்த நிலைகள் பிடித்தமானது என்று என்னிடம் நான்கு மணி நேரம் விளக்கி கொண்டிருப்பாள்.

ஏன் இப்படி என்னுள் உறங்கிக்கொண்டிருக்கும் மிருகத்தைச் சீண்டுகிறாய்? காமத்தீயை கொழுந்துவிட்டு எரியச் செய்துவிட்டு அதற்குரிய ஆகுதியை ஏன் மறுதலிக்கிறாய்?

ஒருநாள் எஸ்.ஜே.சூர்யா நடித்த படம் ஒன்றைப் பார்த்துக்கொண்டிருந்தோம். ‘நல்ல வேளை, படம் பார்த்தோம். பிரச்னை தீர்ந்தது’ என்றாள்.

‘ஏன்டி?’

‘நேற்று சூர்யா ஃபோன் பண்ணிக் கேட்டான். இன்னும் பார்க்கவில்லை என்றதும் செம டோஸ் விட்டான்.’

அநேகமாக இவள் ‘அவன், இவன்’ என்று சொல்லாதது ஈ.எம்.எஸ். நம்பூதிரிபாடை மட்டும்தான் என்று நினைக்கிறேன்.

‘வேண்டாம் இவள் வம்பு’ என்று ஒதுங்கினேன். உடனே தன்னுடைய

சாபத்தினால்தான் எனக்கு ஹார்ட் அட்டாக் வந்ததாக ஊர் பூராவும் பறை. வாஸ்தவம்தான். அவளுக்கு அந்தக் குறுந்தகவலை அனுப்பிய மறுநாள்தான் நான் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டேன்.

அதற்குப் பிறகு நான் அவளை முற்றாகத் தவிர்த்தேன். ஒருநாள் திடீரென்று வீட்டுக்கே வந்துவிட்ட அவள், பேச்சினிடையே படுசாதாரணமாக ‘அதுதான் மணிகூட சோனி எரிக்ஸன் கம்பெனியை வாங்கி நடத்த முடியாமல் நஷ்டப்பட்டு விற்றுவிட்டாரே...’ என்றாள். இவளுக்கு ஒரு சோனி எரிக்ஸன் ஃபோன் வாங்கித் தரவில்லை என்பதற்காக மணி சோனி கம்பெனியையே விலைக்கு வாங்கி அதை நடத்த முடியாமல் விற்றுவிட்டான்!

இவளுக்கு என்ன பைத்தியமா என்றுதான் நினைக்கத் தோன்றியது. முக்கால் மணி நேரம் மூச்சு விடாமல் பேசிய அவளிடம் ‘இன்னும் கொஞ்ச நேரம் இப்படியே அமர்ந்திருந்தால் மயங்கி விழுந்து விடுவேன். பிறகு பார்க்கலாம்’ என்று சொல்லி எழுந்தேன். சர்ஜரி முடிந்து ஒரு மாதம்தான் ஆகியிருந்தது.

‘சரி, கிளம்புகிறேன்’ என்று சொல்லி வாசல் வரை சென்றவள் அங்கேயே நின்றபடி அரை மணி நேரம் ராமகிருஷ்ணனை வசைபாடினாள். தலைவிரிகோலமாய் நின்ற அவளை அப்போது பார்ப்பதற்கு கலிகாலக் கண்ணகி போலவே இருந்தது.

பார்ப்பவர்களுக்கு அவள் என்னைத்தான் சபிப்பதாகத் தோன்றியிருக்கும்.

ராமகிருஷ்ணன் ஒவ்வொரு பத்திரிகைக்கும் ஃபோன் போட்டு இவளைப் பற்றி இல்லாததும் பொல்லாததும் சொல்கிறாராம். அவன் கையை வெட்டுவேன், காலை வெட்டுவேன் என்று ஒவ்வொரு உறுப்பாக வெட்டிக்கொண்டிருந்தாள்.

முழுப் பைத்தியம் பிடித்துவிட்டது என்றே நினைத்தேன். ஏனென்றால் ராமகிருஷ்ணனுக்கு இவளை யார் என்றே தெரியாது. அது மட்டுமல்ல. பத்திரிகைக்காரர்களுக்கும் இவளை யார் என்றே தெரியாது.

விஷயம் என்னவென்றால், இவளுக்கு ராமகிருஷ்ணன் என் எழுத்தை மொழிபெயர்ப்பு செய்வது பிடிக்கவில்லை. ‘சரி, நீயே செய்’ என்று சொல்லி ஒரு கதையைக் கொடுத்தேன். ஒரு வருடம் ஆகிறது கொடுத்து.

இப்போது வந்து ‘நாம் இருவரும் பழையபடி நண்பர்களாகி விடுவோம்; மணியிடம் சொல்லி ஒரு வேலை வாங்கித் தா’ என்கிறாள்.

இதைத்தானே நான் ஆரம்பத்தில் சொன்னேன்? இப்போது இந்த ஒரு வருட கால கலாட்டாவையெல்லாம் பார்த்த பிறகும் இவளுக்கு வேலை கொடுக்க மணி என்ன மடையனா?

## 57. நாய் ஜென்மம்

61 வயதான பால் மக்கார்ட்னி திரும்பவும் தந்தையாகியிருக்கிறார்.

-‘இந்து’ நாளிதழ் : 31.10.2003.

ரைட்டரைப் பற்றி மட்டுமே 40 கதைகள் இருக்கிறதே. என்ன செய்ய?

லாப்ரடார் இனத்தைச் சேர்ந்த பெண் நாய் அது. உங்களுக்குப் புரிவதற்காகத்தான் நாய் என்று குறிப்பிடுகிறேன். மற்றபடி ரைட்டரை நாய் என்று சொன்னால் அது கோபித்துக்கொள்ளும். மூன்று நாட்களுக்குப் பேசாமல் மூஞ்சியைத் தூக்கிவைத்துக்கொள்ளும்.

ரைட்டரை வளர்க்கும்போதுதான் யாரும் பெண் நாயை வீட்டில் வளர்க்காததன் காரணம் புரிந்தது. இனச்சேர்க்கைக்கு வழியில்லாததால் வீட்டில் வளர்க்கப்படும் பெண் நாய்கள் ஒருவித சீற்றத்துடனேயே காணப்படுகின்றன; அந்நியர் களைக் கண்டால் கடித்துக் குதறி விடும் தன்மை கொண்டவைகளாகிவிடுகின்றன. சமயங்களில் நம்மையே கடித்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

எதையெல்லாம் செய்தால் ரைட்டர் நம்மையே கடிக்கும் என்று இத்தனை காலத்தில் நான் அவதானித்து வைத்திருக்கிறேன்.

1. உறங்குபவர்களை எழுப்பினால் கடிக்கும்.
2. முத்தம் கொடுத்தால் கடிக்கும்.
3. தூங்கும்போது தொட்டால் கடிக்கும். (மற்றவர்கள் தூங்கும்போது தொட்டு எழுப்பினாலும் கடிக்கும்.)
4. வீட்டுக்கு வெளியே நின்றுகொண்டு ஜன்னல் வழியாகப் பரிவர்த்தனை செய்தால் கடிக்கும்.
5. அதன் கண்ணில் உள்ள பீளையைத் துடைத்தால் கடிக்கும்.
6. மற்றபடி அதற்கு எப்போது ‘மூட்’ சரியில்லையோ அப்போதெல்லாம் கடிக்கும்.

நானும் மீராவும் அதற்குப் பிரியமானவர்கள் என்பதால் வெறித்தனமாகக் குலைத்துக்கொண்டு பாய்ந்தாலும், கடிக்கும்போது மென்மையாகத்தான் கடிக்கும். பல் பதியுமே தவிர மாமிசம் வந்துவிடாது. ஒரே ஒரு முறைதான் மீராவை ரத்தம் வருவதுபோல் கடித்துவிட்டது. அந்த வருத்தத்தில் இரண்டு நாட்கள் சாப்பிடாமலேயே துக்கம் காத்தது. (நான் வேறு கோபத்தில் அதைச் செருப்பால் அடித்துவிட்டேன்.)

எனக்கு நேரம் இல்லாததாலும், ஒரு நாயை வளர்ப்பதே சிரமமாக இருக்கும்போது அதன் பிரசவம், பிள்ளைக் குட்டிகள் என்று நாய்த்தொகை அதிகரித்தால் அதையெல் லாம் மீராவினால் சமாளிக்க முடியாது என்பதாலும், மேலும் எனக்கே இனச்சேர்க்கை இல்லாமல் செத்து சுண்ணாம்பாகிக் கொண்டிருக்கும்போது மற்ற ஜீவன்களின் இனச்சேர்க்கை பற்றியா கவலைப்படமுடியும் என்ற சுய இரக்கத்தின் காரணமாகவும் ரைட்டரை நான் இனச்சேர்க்கைக்காக எங்கேயும் அழைத்துச் செல்லவில்லையாதலால் பிறவி யிலிருந்தே அது இன்றளவும் கன்னியாகவே காலம் கழித்து வருகிறது. தெருவில் பல காதலர்கள் அதன் மீது கண் வைத்திருந்தாலும் எல்லாம் கைக்கிளையாகவே இருந்து வருகிறது. ஆண் நாய்களிடம் இந்தப் பிரச்னை இல்லை. அவைகளை மலடாக்குவதற்கென்று ஒரு ஊசி இருக்கிறது. அதைப் போட்டால் அவை ஆயுளுக்கும் காம உணர்வின்றி மலடாகிவிடும். மனிதர்களுக்கும் இப்படி ஒரு ஊசி இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்?

ஒரு நாள் ம்யூஸ் என்னிடம் சொன்னாள், ‘உங்கள் ரைட்டரும் உங்களைப்

போலவே செக்ஸ் இல்லாமல் வாழ்கிறது.'

'எல்லாம், வைத்துக்கொண்டே வஞ்சகம் செய்யும் உன்னைப் போன்ற கஞ்சப் பிசுநாறிகளால்தான்' என்றேன்.

ஏதோ நகைச்சுவையைக் கேட்டது போல் சிரித்தாள்.

மக்கள் பெண் நாயை வளர்க்காததற்கு மற்றொரு காரணம், மென்ஸஸ். மனித இனத்தைப் போல் நாய்களுக்கு மாதம் ஒரு முறையல்ல. ஆறு மாதத்திற்கு ஒரு முறை. ஆனால் ரத்த ஒழுக்கு சுமார் மூன்று வார காலம் நீடிக்கும். ரைட்டரின் ஜனன ஸ்தானத்திலிருந்து நாள் பூராவும் ரத்தம் ஒழுகிக்கொண்டேயிருக்கும். வீடு பூராவும் ரத்தமாகிவிடும். ரத்தம் சொட்டச் சொட்ட துடைத்துக்கொண்டேயிருக்க வேண்டும். மட்டுமல்லாமல், அந்த நேரத்தில் ரைட்டரின் உடல் உபாதையும் கண்கொண்டு பார்க்க முடியாதபடி இருக்கும். அவ்வளவு வலியும், வேதனையும் அதன் கண்களிலே தெரியும்.

அப்போதெல்லாம் நாய் வாழ்க்கை என்பது மனித வாழ்வைவிட மிகவும் கேவலமானது என்று நினைத்துக் கொள்வேன். நாய்களுக்கு மனிதர்களைப்போல் எழுதவோ பேசவோ தெரியவில்லை. தெரிந்திருந்தால் வியாசன், ஷேக்ஸ்பியர் போன்றவர்களையெல்லாம் விட பெரும் படைப்பாளிகள் நாய் சமூகத்தில் உருவாகியிருப்பார்கள் என்பதில் எனக்குச் சந்தேகமேயில்லை.

நாய்களின் துயர வாழ்க்கை அப்படிப்பட்டது. பெரும் மழையோ வெள்ளமோ வரும்போது அவைகளின் கதி என்ன என்பதை யோசித்துப் பாருங்கள். சென்னை நகரில் வெள்ளம் வந்து வீடுகளுக்குள்ளெல்லாம் தண்ணீர் புகுந்துவிட்டபோது அலெக்ஸுக்கு ஃபோன் போட்டு கவலையுடன் விசாரித்தேன், தெரு நாய்கள் எங்கே போகுமென்று. ஆனால் அவனோ கொஞ்சமும் நாயபிமானம் இல்லாமல் 'நாய்களெல்லாம் நம்மைவிட புத்திசாலிகள்; மழைக்கு முன்பே எங்காவது இடம் பெயர்ந்து பதுங்கியிருக்கும்' என்றான். அறிவு கெட்டவன். எத்தனை நாய்கள் பிணமாக வெள்ளத்தில் மிதந்து வந்தன என்று அவனுக்குத் தெரியுமா? இந்த ஒரு காரணத்துக்காகவே அவனுடனான நட்பை முறித்துக்கொள்ளலாமா என்றுகூட ஒரு கணம் யோசித்து விட்டேன்.

வெள்ளமாவது அடிக்கடி வராது. ஆனால் இந்த முனிசிபாலிட்டியைச் சேர்ந்த நாய் பிடிப்பவர்கள் இருக்கிறார்களே... தினந்தோறும் வந்து பிடித்துக்கொண்டு போய் அடித்தே கொல்கிறார்கள். ஒரு நாய்க்குப் பத்து ரூபாய்.

ஆனால் நாய்களைப்போல் மனித இனத்தோடு ஒட்டி உறவாடும் விலங்கினம் வேறு எதுவுமில்லை என்பது ஏனிந்த மனித ஜீவன்களுக்குத் தெரிவதே இல்லை?

எனக்கு பைபாஸ் அறுவை முடிந்து வீட்டில் நடமாட முடியாமல் ஒரு மாதம் படுக்கையில் கிடந்தபோது ரைட்டரும் எவ்வித பேச்சு வார்த்தையும் இல்லாமல் ஒரு மூலையிலேயே முடங்கிக் கிடந்தது. நான் நடமாட ஆரம்பித்ததும்தான் அதனிடமும் நடமாட்டத்தைப் பார்க்க முடிந்தது.

இந்த இடத்தில் ஒன்றே ஒன்றை உங்களுக்கு நான் ஞாபகப்படுத்த விரும்புகிறேன். சீத்தாரம் கேசரி என்று ஒருவர் காங்கிரஸ் கட்சியில்

தலைவராக இருந்தார் அல்லவா? அவர் செத்ததும் அவர் வளர்த்த நாயும் செத்துப்போயிற்று.

அவ்வளவுதான். இதற்குமேல் எழுதுவதற்கு என்ன இருக்கிறது சொல்லுங்கள்.

## 58. குடியும் கூத்தும்

> ரித்விக்குகளே! இந்திரனுக்காக சோமனைப் பொழியுங்கள்! சலத்தைச் சேருங்கள்! இந்திரன் எனது அழைப்பையும் துதி செய்பவர்களது மொழிகளையும் செவி கொடுப்பான்.
>
> -அதர்வ வேதம் : காண்டம் 6 : இந்திரன்

> விருஷபா, பிழியுங்கால் சோமனை நீ பருக, நான் பொழிகிறேன்; இனியதில் இன்பமாகி அனுபவி. வனமிருகம் ஏரியின் சலத்தைப் பருகுவதுபோல் பருகு.
>
> -அதர்வ வேதம் : காண்டம் 20 : இந்திரன்.

கஸான்ஸாகிஸின் நாவலில் ஒரு இடம். Crete தீவில் ஸோர்பாவும் அவனிடம் கதை கேட்கும் எழுத்தாளனும் இரவு முழுவதையும் மது அருந்தியபடி பேசிக் கழிப்பார்கள். அவர்களுக்குப் பக்கத்தில் ஒரு முழு ஆடு நெருப்பில் வெந்துகொண்டிருக்கும். கீழே தீக்கங்குகளைப் போட்டு எரியூட்டி ஆட்டை ஒரு கம்பியில் மாட்டித் தொங்கவிட்டு சுழற்றிக்கொண்டிருப்பான் ஸோர்பா.

அதிகாலைக்குள் இருவரும் அந்த ஆடு முழுவதையும் தின்று முடித்திருப்பார்கள்.

இப்படிப்பட்ட ஒரு கலாச்சாரத்தையே நானும் ரஞ்சனும் கொண்டாடிக்கொண்டிருந்தோம்.

எம்ஜியார் நகர் மீன் மார்க்கெட்டுக்குப் புறப்படுவதிலிருந்து எங்கள் கொண்டாட்டம் ஆரம்பிக்கும். அவன் ஒரு டிவோர்ஸி என்பதால் பெண் தொல்லை இல்லை. நானோ ஒரு தறுதலை. கேள்வி கேட்பார் கிடையாது. காலை ஒன்பது மணிக்கு மார்க்கெட் கிளம்புவோம்; வழியிலேயே எம்ஜியார் மார்க்கெட்டுக்கு எதிரிலுள்ள டாஸ்மாக் பாரைக் கடக்கும்போது, ‘மாமா, ஒரு பியர்?’ என்பான் ரஞ்சன். ‘ம்... சரி, ஒரு பியர்’ என்று சுட்டு விரலால் ஒன்று என்று காட்டிவிட்டு உள்ளே நுழைவேன். ஆளுக்கு மூன்று பியர் வரை போகும். வேறென்ன, நீட்ஷேவை ஆரம்பித்தால் ஒரு பியரோடு முடியுமா? அதற்கே கொஞ்சம் ஃபூக்கோவை ஒதுக்கி வைத்து விட்டுத்தான் அரை மனதுடன் கிளம்புவோம். ஃபூக்கோவையும் தொட்டால் அப்படியே இரவாகிவிடும்.

ஒவ்வொரு வகை மீனும் ஒவ்வொரு விதக் கொண்டாட்டம். நகரவாசிகளுக்கு வஞ்சிரமே ஆகச் சிறந்தது. ஆனால் எங்களுக்கு விரால் மீன். அதிலும் விரால் தலைக்கு ஈடு இணை கிடையாது.

விரால் ரகத்தைச் சேர்ந்த, ஆனால் விலை குறைவான ஒரு மீன் உள்ளது.

தேளி ஏழைகளின் விரால். விரால் 3000 ரூ. என்றால் தேளி 50 ரூ. இருக்கும். தேளியில் இனப்பெருக்கம் அதிகம் என்பதால் விலை மலிவு.

எம்ஜியார் நகரில் விரால் மீன் இல்லையென்றால் சைதாப்பேட்டை மார்க்கெட் செல்வோம்.

ஒரு நாள் லாய்ட்ஸ் ரோட் மார்க்கெட். சென்னையின் பணக்காரர்கள் மீன் வாங்கும் இடம். ஆனால் என்ன புதிர் என்று தெரியவில்லை. சென்னையிலேயே மிகவும் மலிவான விலையில் மீன் கிடைக்கும் இடம் இது. நன்கு தேர்ந்தெடுத்த ஏற்றுமதி ரக மீன்களை இங்கே பிடிக்கலாம். ஒரு நாள் லாப்ஸ்டர்கூட வாங்கி வந்தோம்.

திடீரென்று வாத்துக்கறியின் மீது ஆசை ஏற்பட்டது. வாத்துக்கறி சமைப்பது எப்படி? ஏன் கோழி சாப்பிடும் மக்கள் வாத்து சாப்பிடுவதில்லை?

மணிக்கு ஃபோன் போட்டேன். கேட்டுச் சொல்கிறேன் என்றான். அன்றைய தினம் எங்கள் நண்பர்கள் அத்தனை பேரும் வாத்துக்கறி சமைப்பது பற்றியே ஆராய்ச்சி செய்திருக்கிறார்கள் என்று பிறகு தெரிந்தது. செய்முறை கேட்டு கேரளாவுக்கெல்லாம் ஃபோன் போயிருக்கிறது.

வாத்து விற்பவனே வாத்து சாப்பிட்டதில்லை என்றான். அதோடு, 'வாத்துக் கறியா? ஒரே கவுச்சியடிக்குமே?' என்று சொல்லி demoralise செய்வதற்கென்று ஒரு கூட்டம். கடைசியாக வினிதாவிடம் கேட்டோம். அவளிடமிருந்து தெரிந்துகொண்டது: வாத்து வாங்கும்போது ஆண் வாத்தாகப் பார்த்து வாங்க வேண்டும். பெண் வாத்தில் அவ்வளவு ருசி இருக்காது. கறியைச் சிறிது நேரம் வினிகரில் ஊற வைக்க வேண்டும். வாத்துக்கறி சற்று கடினமானது என்பதால் குக்கரில் நன்கு வேக வைத்த பிறகே சாப்பிட வேண்டும்.

இப்படியெல்லாம் செய்து ரஞ்சன் சமைத்ததில் வாத்துக்கறி கவுச்சியடிக்கவில்லை. மணந்தது.

ஒரு நாள் வாத்து என்றால் மற்றொரு நாள் நாட்டுக்கோழி. அடுத்தவாரம் முயல். பிறகு ஆடு. ஆடு என்றால் ஆட்டுக்கறி மட்டுமல்ல. நுரையீரல், ரத்தம், மூளை, குடல், கிட்னி, தலைக்கறி, இப்படி.

இதற்கிடையில் ரஞ்சனிடம் மிக்ஸி கிடையாது. ஒரு கருங்கல் குழவிகூட இல்லை. அதனால் இஞ்சியை 'அப்ளாக்'கட்டையில் போட்டு நசுக்க வேண்டும். நசுக்கும்போது இஞ்சி தெறித்து அங்கேயும் இங்கேயும் சிதறித் தெறித்துவிடாமல் வாகாக நசுக்க வேண்டும்.

ஒரு நாள் இந்தியக் கிரிக்கெட் அணி பாகிஸ்தானில் விளையாடிக்கொண்டிருந்த நேரம். சச்சின் டபுள் செஞ்சுரியை நோக்கி விளாசிக் கொண்டிருந்தார். நான் வெங்காயம் நறுக்கிக்கொண்டிருந்தேன். நான் நறுக்குவதையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார் பக்கத்திலிருந்த ஒரு நண்பர். ரஞ்சன் சைகையினாலேயே 'என்ன விஷயம்?' என்று கேட்க, நண்பர் சொன்னார்: 'பெருமாள் வெங்காயம் நறுக்குவது சச்சினின் பவுண்டரியைவிட அழகாக இருக்கிறது.'

சே, what a shame! வாழ்வின் கொண்டாட்டமான காலகட்டங்கள் ஒவ்வொன்றும் இப்படி ஒவ்வொரு அத்தியாயமாகச் சுருங்கிவிட்டதே!

## 59. கழுதை தேய்ந்து...

"The contribution of stress in precipitating diabetes in a short span of time is increased when people go through traumatic experiences.'

Dr. A.Ramachandran, M.V.Hospital for Diabetes, Chennai

சி மேட்டர் நண்பர்கள் கிண்டலடித்தபடியே தான் ஆயிற்று. பெருமாள் ஜி என்று அழைத்துக்கொண்டிருந்த பீச் நண்பர்கள் பெருமாள் சி என்று அழைக்க ஆரம்பித்தார்கள்.

இந்த விவகாரத்தில் பெரிய பெரிய ஆட்களெல்லாம்கூட விழுந்ததுதான் ஆச்சரியம். எல்லாமே சட்டரீதியாக நடக்கவிருப்பதால் அல்லது நடந்துகொண்டிருப்பதால் இதற்கு ஒரு சட்ட நிபுணரின் ஆலோசனையும் தேவைப்பட்டது. மணியிடம் சொல்லி அவனுடைய வக்கீலையே பயன்படுத்திக்கொள்ளலாம் என்று முடிவு செய்யப்பட்டது. அவர் பெயர் மைக்கேல். சென்னையின் நம்பர் ஒன் அட்வொகேட். தில்லியின் ராம் ஜெத்மலானி மாதிரி.

கோப்புகள் அவ்வளவையும் படித்துப் பார்த்தார் மைக்கேல். சுதிரிடம் பேசினார். சுதிரிடமிருந்த கோப்புகள், மத்திய நிதி அமைச்சரின் ஒப்புதல் கடிதம் எல்லாவற்றையும் ஆராய்ந்தார். அவருக்குப் பூரண திருப்தி ஏற்பட்டது.

நானும் குமாரசாமியும் மைக்கேலுக்கு எவ்வளவு ஃபீஸ் கொடுக்கலாம் என்பது பற்றி விவாதித்தோம். ஆனால் அவர் பேசுவதைப் பார்த்தால் ஃபீஸுக்கெல்லாம் ஒப்புக்கொள்ள மாட்டார் என்று தோன்றியது. அவரும் ஒரு பங்குதாரரைப் போலவே பேசினார். 'சரி' என்று ஒப்புக்கொண்டோம். இந்த இடம்தான் சி மேட்டரில் மிக மிக முக்கியமானது. பங்குப்போட்டுக்கொள்வதில் தகராறு ஏற்படுவதால்தான் இம்மாதிரி விஷயங்கள் சிக்கலாகிவிடுகின்றன. அதில் மட்டும் வெகு கவனமாக இருக்க வேண்டும். கொஞ்சம் பேராசைப்பட்டாலும் பெரு நஷ்டமாகிவிடும். அது மட்டுமல்லாமல், நம்பிக்கை ஒரு மூலதனம். அவநம்பிக்கை ஏற்பட்டால் அது கொலையில்கூட முடியலாம். யாருக்குத் தெரியும், மணியின் பங்கு என்ற ஒன்றைக் கற்பனையாகப் போட்டு அதையும் சேர்த்து லவட்டிக்கொள்ளலாம் என்று நான் திட்டமிட்டிருப்பதைப்போல், என்னைத் தீர்த்துக் கட்டிவிட்டு என் பங்கு மற்றும் மணியின் பங்கு இரண்டையும் ஸ்வாஹா பண்ணிவிடலாம் என்று குமாரசாமி திட்டம் தீட்டிக் கொண்டிருக்கலாம். ஏகப்பட்ட பிரச்னைகள் உள்ள இடம் இது. சி என்பது ஒன்றும் சும்மா வந்து விடவில்லை. உங்கள் உயிரைப் பணயம் வைக்கத் துணிந்தால்தான் சீயைப் பார்க்க முடியும்.

ஆக, மைக்கேலும் ஒரு பங்குதாரர். குமாரசாமி, நான், மணி மூவரும் பெரும் பங்குதாரர்கள். லெனி, நாதமுனி, பகவான், மைக்கேல் நால்வரும் சிறு பங்குதாரர்கள். MOU தயாரிக்கப்பட்டு கையொப்பம் ஆகியது. பண வரவு வங்கி மூலமாகத்தான் நடக்கவிருக்கிறது என்பதால் குமாரசாமியும் நானும் கே.கே.நகரிலுள்ள ஒரு வங்கியில் ஜாயிண்ட் அக்கவுண்ட் திறந்தோம். அங்குள்ள ஒரு வங்கியில்தான் என் நண்பன் அருண்குமார் வேலையில் இருந்தான். அதனால் அந்தக் காரியம் சுலபமாக முடிந்தது.

அதற்காக ரப்பர் ஸ்டாம்ப் செய்வதற்காக அலைந்த கதையெல்லாம் இப்போது நேரமில்லாததால் எழுதவில்லை. (இன்னும் மூன்று தினங்களுக்குள் இதை நான் எழுதி முடித்தாக வேண்டும்) அப்படி என்ன அவசரம் என்று கேட்டால், ஒவ்வொரு நாளும் புதுப்புது கதாபாத்திரங்களாக வந்து சேர்ந்து தங்களின் கதையை இதில் அத்தியாயம் அத்தியாயமாக எழுதிக் கொண்டிருக்கிறார்கள். ‘வேண்டாம்; நாவலின் பக்கங்கள் கூடிவிட்டன. இனிமேல் நான் யாரையும் சந்திப்பதாக இல்லை’ என்றா கூற முடியும்?

மொத்தம் 1000 சி. கமிஷன் 400 சி. பின்வருமாறு பிரிக்கலாம் என்று நீண்ட ஆலோசனைக்குப் பிறகு முடிவாயிற்று: நான், குமாரசாமி, மணி - மூவருக்கும் ஆளுக்கு தலா 100 சி. அதாவது, எனக்கு 200 சி. மீதி 100 சீயில் நான்கு பேருக்கும் தலா 25 சி.

‘நீங்களாகப் பார்த்து எவ்வளவு கொடுத்தாலும் சரிங்கண்ணே’ என்றார் டாக்டர் நாதமுனி, இரண்டு கைகளையும் கூப்பியபடி. விட்டால் காலிலேயே விழுந்துவிடுவார் போலிருந்தது. லெனி என்ன நினைக்கிறார் என்பதை யாராலும் யூகிக்க முடியவில்லை. பகவானின் பங்கைக் குமாரசாமியிடம் கொடுத்துவிடலாம். இந்தத் திட்டத்தில மைக்கேலுக்கு ஆட்சேபணையில்லை.

ஆனால் எனக்கு மட்டும் ஒரே ஒரு ஆட்சேபணை இருந்தது. அதைக் குமாரசாமியிடம் அடிக்கடி சொல்லிக்கொண்டிருந்தேன். அவன் கேட்கிற வழியாக இல்லை. அதாவது, பேசும்போது மைக்கேலை ‘யார்’ போட்டுப் பேசினான். குமாரசாமிக்கு 30 வயது இருக்கும். மைக்கேல் 55ஐத் தாண்டியவர். ‘No yaar, get the copy signed by the company, yaar'’ என்கிறபடியாகப் பேசிக்கொண்டிருந்தான். ‘யார்’ என்ற இந்தி வார்த்தைக்கு ‘டா’ என்று பொருள். தென்னிந்தியர்கள் ஆங்கிலத்தில் பேசும்போது ‘டா’ என்ற அர்த்தத்தில்தான் இந்த ‘யார்’ஐப் பிரயோகிக்கிறார்கள் என்ற விஷயம் குமாரசாமிக்கு எப்படித் தெரியாமல் போகும்? ஆனால் மைக்கேல் எதுவும் கண்டு கொள்ளவில்லை என்பதால் நானும் சொல்லிச் சொல்லிப் பார்த்து விட்டுவிட்டேன்.

இடையில் சில காமெடியன்களும் வந்து சென்றனர். அவர்களில் ஒருவர் டாக்டர் சின்னசாமி. சேலத்தில் வசிக்கும் ஒரு சீனியர் சர்ஜன். பார்ப்பதற்கு தாலுகா ஆ◌ஃபீஸ் பியூனைப் போன்ற தோற்றம். மூன்று நாள் தாடி. அழுக்கு பேண்ட். அழுக்குச் சட்டை. காலரில் கர்ச்சீ◌ஃப். பெரிய தொப்பை. சட்டையை உள்ளே விட்டு மேலே பெல்ட். ஓல்ட் மாங்க்தான் குடிப்பார். இதெல்லாம் பரவாயில்லை. பிரியும்போது ஒரு நூறு ரூபாய் கேட்பார். ‘கையில் கேஷ் இல்லையே, கார்டாகத்தான் இருக்கிறது’ என்று பொய் சொன்னால் ஐம்பதுக்கு இறங்கிவிடுவார். சேலத்தில் வேலையை விட்டுவிட்டு இங்கே ‘சீ’க்காக சென்ட்ரல் பக்கத்தில் ஒரு மலிவான லாட்ஜில் தங்கியிருக்கிறார். ஏதோ ப்ராத்தல் ஹவுஸ் மாதிரி இருந்தது அந்த லாட்ஜ். உண்மையான சர்ஜன்தானா என்று விசாரித்துப் பார்த்ததில் உண்மைதான் என்று தெரிந்தது. சேலத்தில் இவருக்கு 200 ஏக்கர் சொத்து இருப்பதும் தெரியவந்தது. பிதுரார்ஜித சொத்தா அல்லது மனைவி வழியில் கிடைத்ததா என்று விசாரிக்கச் சொல்லலாமா என்று நினைத்தேன். பிறகு இந்த சி மேட்டர் அவசரத்தில் அதை மறந்து போனேன்.

அந்த லாட்ஜில் டாக்டர் சின்னசாமியோடு ஒரு சாமியாரும் இருந்தார். நெருப்பில் சுட்ட இரும்புத் தகட்டைப் போன்ற தக தக உடம்பு. அதில் சிவப்பு சிறப் பட்டு வேஷ்டி. நெற்றியில் திருநீறு, குங்குமம். சட்டையில்லாத உடம்பில் ருத்ராட்சக் கொட்டை. கொட்டைகள் தங்கத்தால் கோர்க்கப் பட்டிருந்தன. உடம்பு முழுவதும் திருநீறு. ஆனால் சாமி நம்மைப் போலத்தான் பேசிக்கொண்டிருந்தார். ‘சாமி இல்லை. ஜோசியர்’ என்றான் குமாரசாமி.

மாலை ஏழு மணி ஆனதும் ஒரு நடுத்தர வயதுப் பெண் வருவாள். வா செல்லம் என்றுதான் பேசுவாள். டாக்டரோடு சேர்ந்து குடிப்பாள். ஜி.நாகராஜனாக இருந்தால் இன்னும் இவளைப் பற்றி நிறைய எழுதியிருப்பார். ஆனால் எனக்கு என்னவோ அவளைப் பிடிக்கவில்லை. மொத்தத்தில் அந்தச் சூழலே ஒரு பொதுக் கழிப்பறையைப்போல் இருந்தது.

இந்த சி மேட்டர் விஷயமாகப் பாரிமுனையிலுள்ள ஒரு டப்பா லாட்ஜில் தங்கியிருந்த இரண்டு பேரைப் பார்த்தபோதுதான் ‘இது ஒரு பைத்தியகாரத்தனமான விஷச் சூழல்’ என்று எனக்கு சந்தேகம் தட்ட ஆரம்பித்தது. காரணம், அந்த ஆட்கள் இருவரும் காலில் அணிந்திருந்த செருப்பு. ஒரு பிச்சைக்காரன்கூட அம்மாதிரி செருப்பை அணிய மாட்டான். வேர்ல்ட் பேங்க் சுதிரைச் சந்திப்பதற்காக இருவரும் என்னோடு கிளம்பியபோது அவர்களில் ஒருத்தன் தன் கிழிந்துபோன ரப்பர் செருப்பின் ஒரு பக்க ரப்பரை ஊக்கினால் ரப்பர் பட்டையோடு சேர்த்து ஒரு அறுவை சிகிச்சையே செய்துகொண்டிருந்தான். ஒரு கக்கூஸைவிட சற்று பெரிதாக இருந்த அந்த அறையில்தான் இருவரும் தங்கியிருந்தான்கள். ஆனால் பேச்செல்லாம் சீசீயென்று ஒரே ‘சீ’மயமாயிருந்தது. அவன்களுக்கு சுதிரை நன்றாகத் தெரிந்திருந்தது. அப்போதுதான் இது விஷயத்தில் எனக்கு சந்தேகம் தட்டியது.

முழுசாக இரண்டு வருஷம். ஒரு வார்த்தை படிக்கவில்லை. எழுதவில்லை. காலையிலிருந்து இருட்டும்வரை சி மேட்டருக்காக அலைச்சல். இருட்டியதும் குமாரசாமியுடன் குடி. ம்... ரஞ்சனுடன் குடித்ததற்கும் இதற்கும்தான் எத்தனை வித்தியாசம்! ரஞ்சனுடன் குடி கொண்டாட்டமாக இருந்தது. குமாரசாமியுடன் அது ஒரு ஆசுவாசம். அவ்வளவுதான். மேலும், ரஞ்சனுடன் குடிக்கும்போது எம்ஜியார் நகர் முடுக்கிலிருந்த ரோம் ஒயின்ஸில் கும்பலோடு கும்பலாக குடிக்க வேண்டும். இருப்பதிலேயே ஆக மட்டமான சரக்கைத்தான் வாங்குவான் ரஞ்சன். அவ்வளவுதான் அவனால் முடியும். அதற்கே நாம் ஷேர் வேறு கொடுக்க வேண்டும். ஆனால் குமாரசாமியுடன் இந்த லௌகீகப் பிரச்னையெல்லாம் இல்லை. சூழல் நன்றாக இருக்கும். லெதர் பார், பைக் அண்ட் பேரல், டப்ளின் என்று நைட் க்ளப்புகளும், Pubகளுமாய் போய்க் குடிக்கலாம்.

வாழ்க்கையையே புரட்டிப் போட்டதுபோல் ஆயிற்று. திடீரென்று இரவு 11 மணிக்கு ஃபோன் செய்து ‘உடனே கிளம்பி பீச்சுக்கு வாருங்கள்’ என்பான் குமாரசாமி. அங்கே லெனியின் நண்பருக்கு ஒரு Go cart இருந்தது. அந்த இடத்தில் நடு இரவு 12 மணிக்கு சந்திப்பு. வேர்ல்ட் பேங்க், 1000 சி, மெமோ ஆஃப் அன்டர்ஸ்டாண்டிங், கமிஷன், ஷேர் என்று பேச்சு ஓடும். காலை 4 மணிக்கு வீடு திரும்புவேன். ஒரு நாள் காலையில் 6 மணிக்கு எழுப்பி

‘சென்னையில் நல்ல சலூன் எங்கே இருக்கிறது? மணி எங்கே முடி வெட்டிக் கொள்கிறார்; கேட்டுச் சொல்ல முடியுமா?’ என்று கேட்டான். குமாரசாமிதான். வேறு யார்?

உடனே மணியைத் தொடர்புகொண்டேன். ‘திருவல்லிக்கேணி பிக் ஸ்ட்ரீட் பக்கத்தில் சந்து ஒன்றில் மரத்தடியில் வைத்து ரோட்டிலேயே ஒருவர் முடி வெட்டுகிறார். அங்கேதான் வெட்டிக் கொள்கிறேன்’ என்றான் மணி.

‘ஏய், அங்கேயெல்லாம் வெட்டினால் எய்ட்ஸ் வரும். அங்கே வெட்டிக்கொள்ளாதே.’‘

‘சே, சே... சும்மா சொன்னேன். ரஜினிக்கு முடி வெட்டுபவர்தான் எனக்கும் வெட்டுகிறார். வீட்டுக்கே வந்துவிடுவார்...’

வீட்டுக்கு வந்து முடி வெட்டுவது என்றால் அதற்குப் பெரிய இடம் வேண்டும். குமாரசாமிக்கு அவ்வளவு பெரிய இடமெல்லாம் இல்லாததால் (கொஞ்ச நாள் பொறுங்கள் பெருமாள், ரேஸ் விடுவதற்கே இடம் காட்டுகிறேன் - குமாரசாமி) அவனுக்கேற்ற ஒரு நல்ல இடத்தைக் கண்டுபிடித்துச் சொன்னேன்.

இப்படி ஓராயிரம் சம்பவங்கள். எல்லாவற்றையும்விட மறக்க முடியாத தமாஷ், நான் பாத்ரூமுக்குப் போகும்போதுகூட கைத்தொலைபேசியை எடுத்துக்கொண்டு போக ஆரம்பித்ததுதான்.

விடுங்கள்.

எப்படி இந்த நாடகம் முடிவுக்கு வந்தது என்று ஞாபகமில்லை. எல்லாமே ஒருவித பிக்பாக்கெட் வேலை என்று ஒரு நாள் தெரிந்து போனது. அந்த மத்திய நிதி மந்திரி கையெழுத்துகூட ஃபோர்ஜரியாகத்தான் இருக்க வேண்டும். கடன் வாங்கித் தருகிறோம் என்று சொல்லி சில பல லட்சங்களை அடித்துக்கொண்டு வெளி மாநிலத்துக்கு ஓடிவிடுவது. ரயிலில் மயக்க மருந்து தடவிய பிஸ்கட்டைக் கொடுத்து கொள்ளையடிப்பது மாதிரி இது ஒருவித கொள்ளை. ஆனால் இதில் ஃபாண்ட்டஸி அதிகம்.

இதுபற்றி எதையும் பத்திரிகையில் எழுத வேண்டாம் என்று கேட்டுக்கொண்டான் குமாரசாமி. தன் வேலைக்கு ஆபத்து வரும் என்று சொன்னதால் நானும் எழுதாமல் விட்டு விட்டேன். ஆனால் மொத்தமாக நண்பர்களிடையே என் பெயர் கெட்டுப்போனது. இனிமேல் நான் எதைச் சொன்னாலும் அவர்கள் நம்பப் போவதில்லை. மணி மட்டும்தான் எதுவுமே நடக்காததுபோல் இருந்தான்.

இன்னொரு முக்கியமான விஷயம். இவ்விஷயம் பற்றி ஆரம்பத்திலிருந்தே நாங்கள் அனைவரும் உஷாராக இருந்தோம். அதாவது, கடன் வாங்கும் கம்பெனி ஆட்கள் சுதிரின் தொலைபேசி எண்ணைக் கேட்டால் கொடுப்பதில்லை. ஏனென்று உங்களுக்குப் புரியாது. சொல்கிறேன். சுதிருடன் கம்பெனிக்காரர்கள் நேரடியாகப் பேசி காரியத்தை முடித்துக்கொண்டு நம்மைக் கழற்றி விட்டுவிட்டால் அவர்களுக்கு 400 சி லாபமாயிற்றே? அதனால் இந்த விவகாரத்தில் எல்லாமே கமுக்கமாகத்தான் இருக்க வேண்டும். அவரை இவருக்குத் தெரியக் கூடாது. இவரை அவருக்குத் தெரியக்கூடாது. எல்லாம் ராணுவ ரகசியத்தைவிட சீக்ரெட்.

ஆனால் அந்த மாதிரியும் எதுவும் நடந்த மாதிரி தெரியவில்லை. கம்பெனிக்காரர்களுடன் மைக்கேலுக்கு நேரடித் தொடர்பு இருந்தது.

திடீரென்று குமாரசாமியின் போக்கில் மாறுதல் தெரிந்தது. மிகச் சரியாக ரஞ்சனின் வீட்டுக்குக் குமாரசாமி குடிபெயர்ந்ததும்தான் அந்த மாற்றம் நிகழ்ந்தது. சொல்லாமல் கொள்ளாமல் திடீரென்று ரஞ்சன் என்னோடு பேசுவதை நிறுத்தினான். அதே சமயத்தில் எனக்கு முன்னொரு சமயம் கைமாற்றாகக் கொடுத்திருந்த 20,000 ரூபாயைத் திருப்பிக் கேட்டான் குமாரசாமி.

எத்தனையோ தினங்கள் டப்ளினிலும், லெதர் பாரிலும் 5000, 10,000 என்று செலவு செய்திருக்கிறான் குமாரசாமி. மேலும், என்னுடைய நேரம்?

பத்மினியுடன் கணினியில் அரட்டையடித்துக்கொண்டிருந்த சமயம். ஒருநாள் ஒரு உதவி கேட்டாள்.

‘ஸாரிடான் போன்ற வலி நிவாரணி மாத்திரைகள் கொஞ்சம் வாங்கி அனுப்ப வேண்டும். முடியுமா?’

மலேஷியாவில் அவள் தங்கியிருக்கும் தீவில் இம்மாதிரி வலி நிவாரணிகள் கிடைப்பது அரிதாம்.

ஆனால், மாத்திரை என்றதும் நான் பயந்துபோனேன். ஏனென்றால் இந்தியாவிலிருந்துதான் மலேஷியாவுக்கு அதிக அளவில் போதை மாத்திரைகள் கடத்தப்பட்டு வருகின்றன. அப்போது பத்மினி கூறினாள்:

‘பெருமாள், அதிக பணம் ஆகாது. இருபது ரூபாய்தான் இருக்கும்.’

‘என்னது, இருபது ரூபாயா? நான் உன்னோடு பேசிக்கொண் டிருக்கிறேனே, இந்த நேரத்தின் மதிப்பு என்ன தெரியுமா உனக்கு?’

பணம் கேட்டு குமாரசாமியிடமிருந்து தொடர்ந்து ஃபோன் வந்த வண்ணமாக இருந்தது. ஒரு மணிக்கு ஒரு ஃபோன். திட்டமிட்டுத் துன்புறுத்துவது போலிருந்தது. என்னிடமோ பணமில்லை. இந்த சி மேட்டருக்கு அலைந்ததிலேயே ஆட்டோவுக்கும், ஃபோனுக்குமென்று இரண்டு எல்-சீ புல்ஷிட், எல் என்ன எல்? - இரண்டு லட்சம் செலவாகிவிட்டது.

குமாரசாமி கார் வாங்கிவிட்டானாம். அதனால் அந்த 20,000 ரூ. அவசரமாகத் தேவைப்படுகிறதாம். அது மட்டுமல்லாமல், ஒவ்வொரு தடவையும் மாற்றி மாற்றி அரை மணி நேரம் பேசினான்.

விஷயம் இப்போது 20,000 ரூபாயாக இல்லை. மணிக்கு ஒரு தடவை ஃபோன் செய்து என்னை அரை மணி நேரம் மூளைக் குடைச்சல் செய்தான் குமாரசாமி. அந்த அரை மணி நேரமும், பிறகு அதைப் பற்றி நினைக்கும்போதும் மூளைக்குள் ஆயிரம் பூச்சிகள் பறந்தன. ஆயிரம் தேள்கள் கடித்தன. தொலைபேசி மணி அடித்தாலே அவன்தானோ என்று மனம் பதற்றமடைந்தது. நான் வெளியூரில் இருக்கும்போது கூப்பிடுவான். கொடுத்த பணத்தைக் கேட்டு அரை மணி நேரம் பேசுவான். பேசி முடித்ததும் தொலைபேசியிலிருந்த 300 ரூபாய் கணக்கும் காலியாகியிருக்கும். ‘இன்கமிங்’ அழைப்புகளுக்கு எக்கச்சக்கமான கட்டணம் உண்டு என்பதை மறந்து தொலைத்திருப்பேன்.

பணம் சம்பந்தமாக ஒரு நாள் அரை மணி நேரம் நடந்த உரையாடலின் இறுதிப் பகுதி:

‘சரி, பெருமாள்... இப்ப அந்தப் பணத்துக்கு என்ன பண்ணலாம்னு இருக்கீங்க?’

‘என்ன பண்றதுன்னே தெரியலே குமாரசாமி... யோசிச்சு யோசிச்சு மண்டை காஞ்சதுதான் மிச்சம்.’

‘அப்போ நான் என்ன பண்றது?’

‘ஒன்னு பண்ணு. நேரா வந்து என்னைக் கொலை பண்ணிடு. இல்லேன்னா நான் தற்கொலை பண்ணிக்கிறேன்.’

பெரிய நகைச்சுவை ஒன்றைக் கேட்டது போல் சிரித்தான். பிறகு ஃபோன் மூலம் எதுவும் நடக்காதது கண்டு நேரில் வர ஆரம்பித்தான். பல சமயங்களில் மீரா ‘பெருமாள் இல்லை’ என்று சொல்லி என்னைக் காப்பாற்றியிருக்கிறாள். ஒரு நாள் கக்கூஸில் சென்று ஒளிந்துகொள்ள வேண்டியதாயிற்று.

மற்றொரு நாள். கைத்தொலைபேசியில் கூப்பிட்டான். நான் எடுக்கவில்லை. பிறகு வீட்டுத் தொலைபேசியில் மாற்றி அடித்தான். எடுக்கவேயில்லை. வாசலில் அவனுடைய குரலும் இன்னும் சிலருடைய குரல்களும் கேட்டன. முன்பு ஒரு நாள் ஒளிந்தது போல் கக்கூஸில் போய் ஒளிந்துகொண்டு தாளிட்டுக்கொண்டேன்.

எதிர் வீட்டுப் பணிப்பெண்ணிடம் கேட்கும் குரல் கேட்டது. அவள் நான் உள்ளே இருக்கிறேன் என்று சொல்லிவிட்டாள் போலும். அவனும் மற்றவர்களும் வீட்டைச் சுற்றி வருவது தெரிந்தது. ஃபோன் விடாமல் ஒலித்தது. அரை மணி நேரம் ஆகியிருக்கும். எவ்வளவு நேரம் கக்கூஸிலேயே உட்கார்ந்திருப்பது? வெளியே வந்து கதவைத் திறந்தேன்.

இரண்டு அடியாட்களுடன் உள்ளே நுழைந்தான் குமாரசாமி. அடிக்கவில்லை. மிரட்டினான். ஒரு மணி நேரம் மிரட்டினான். அந்த அடியாட்களில் ஒருவனும் மிரட்டினான்; உடனே கையோடு தங்களுடன் கிளம்பச் சொன்னான். கே.கே.நகர் சென்று அருண்குமாரைப் பார்த்து ஜாயிண்ட் அக்கவுண்ட் தொடங்கியதற்காகச் செலுத்திய 3000 ரூபாயை வாங்கித்தரச் சொன்னான். பணம் செலுத்தியதற்கான ரசீதும், அக்கவுண்ட் புத்தகமும் தொலைந்து விட்டதாம். அது இல்லாமல் எப்படி ஒரு வங்கியில் பணத்தைத் திருப்பிக் கொடுப்பான். அதற்கு ஒரு அரை மணிநேரம் விவாதம். உருட்டல் மிரட்டல். எனக்கு நெஞ்சு படபடவென்று அடித்துக் கொள்ள ஆரம்பித்தது. உடம்பெல்லாம் என்றுமில்லாதபடி அதிகபட்சமாய் வியர்த்துக் கொட்டியது.

கடந்த 2005ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் முதல் வாரத்தில் இந்தச் சம்பவம் நடந்தது. இரண்டு வாரத்தில் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டேன். பைபாஸ் சர்ஜரிக்காக. இந்தச் சம்பவம் பற்றி நினைவு கூர்கையில் ஒரு சின்ன வருத்தம்தான். 25 வயதில் இது நடந்திருக்கலாம். ஆனால் இது நடந்தபோது என் வயது 52.

## 60. A Life with didlo

> சிந்துவெளி நாகரிகக் காலகட்டத்திலும் didlo பயன்பாட்டில் இருந்ததாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.
>
> - ஒரு செய்தி

பெருமாள்,

என்ன அப்படி ஒரு கோபம்? எல்லாம் எப்படி போகிறது? பதில் எழுதுங்கள் செல்லம்.

பத்மினி.

செப்டம்பர் 12, 2005.

என்ன, மெயிலே இல்லை?

செப்.14.

எல்லாவற்றுக்கும் வருத்தப்படுகிறேன். என்னை மன்னித்து விடுங்கள். ஐ லவ் யூ ஸோ மச். இதை எனக்கு வார்த்தைகளால் வெளிப்படுத்த தெரியவில்லை.

செப். 16

தேங்க் யூ செல்லம். புகைப்படங்களில் நீங்கள் பிரமாதமாக இருக்கிறீர்கள். அப்படியே கடித்துத் தின்றுவிட வேண்டும் போலிருக்கிறது.

செப்.21.

அப்படியா, என்ன ஜூஸ்?

செப்.22.

நீங்கள் ரொம்ப மோசம். அய்யோ... நான் டிசம்பரில் வருகிறேன். என் கனவுக் கண்ணனுக்கு எந்த ஜூஸையும் குடிக்க உரிமை இருக்கிறது. நான் அங்கே வந்ததும் எங்கே சென்று தங்கலாம் என்று முடிவு செய்வோம்.

செப்.23.

ஏன் மெயிலே இல்லை? ஆர் யூ பிஸி? Very eager for the day to suck you da chellam...

அக்.5.

துடிக்கும், துடிக்கும். வேறு என்னவெல்லாம் துடிக்குது? நான் இந்தியா வந்தபோது உங்களைப் பார்க்காமல் காலத்தை வீணடித்து விட்டேன். sex... sex... something amazing in sex. I love you daaaaaaaaa... 10,000.

அக், 6.

என்ன பெருமாள் இது, என்னால் வேலையே செய்ய முடியவில்லை. அய்யோ, மெயிலே இப்படி இருந்தால் நேரில் என்னென்ன செய்வீர்களோ என்று பயமாக இருக்கிறது. நீங்கள் சொல்வது ரொம்பவும் அதிகபட்சம். ஆனாலும் எனக்கு அது பிடித்திருக்கிறது. யோனி என்றால் என்ன செல்லம்? என்னால் என்னைக் கட்டுப்படுத்தவே முடியவில்லை.

அக்.7.

ரொம்ப அநியாயம். எனக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை.

இதெல்லாம் தப்பு இல்லையா பெருமாள்? இப்படியெல்லாம் நான் பேசுவது இதுதான் முதல் முறை. இதில் கேள்வி வேறு... முடி உண்டா, இல்லையா என்று. அதை உங்கள் கற்பனைக்கே விட்டுவிடுகிறேன். ஆனால் முடி இருந்தால் உணர்ச்சிகள் அதிகம். உங்களுக்குப் போய் நான் சொல்லித்தருகிறேன் பாருங்கள். என் வளையத்தை உடைத்துக்கொண்டு நான் வெளியே வந்துவிட்டேன். என் இளமையை நான் வீணடித்தது போதும். இனிமேலும் வீணடிக்க விரும்பவில்லை. இந்த உலகிலுள்ள எல்லா இன்பங்களையும் அனுபவிக்க விரும்புகிறேன். நான் உங்களுக்குக் கிடைத்தது உங்கள் அதிர்ஷ்டம்தானே? எனக்கு உங்களோடு குடிக்க வேண்டும். டான்ஸ் ஆட வேண்டும். ஆடைகளே இல்லாமல். பொட்டுத் துணிகூட இல்லாமல். இரண்டு பேரும். ஸாரி பெருமாள், ஒரு பெண் இப்படிப் பேசக்கூடாது. நீங்கள் இவ்வளவு பேசும்போது நானும் பேசினால்தான் முழுமையடையும். உங்கள் மன்மத லிங்கத்தின் மீது முகம் வைத்துத் தூங்கத் துடிக்கும் ஒரு அபலை.

அக்.10.

என்ன பெருமாள், மெயிலே இல்லை? ரொம்ப பிஸியா? ஆயுதத்துக்கு பூஜை போட்டீர்களா?

அக்.17.

நான் எப்போது பயந்து ஓடினேன்? நேற்று உங்களுடைய தாய்லாந்துக் கதைகள் எல்லாவற்றையும் படித்தேன். அப்பப்பா... ஒரே யோனிமயம். ஆனால் சுவாரசியமாக இருந்தது. நான் டிசம்பரில் அங்கே வரத் திட்டமிட்டிருக்கிறேன். நீங்கள் ஏன் அதற்குள் இங்கே ஒரு முறை வந்து போகக் கூடாது? எனக்கு என்னவோ நான் செய்வது சரியாகப் படவில்லை பெருமாள். நான் உங்களிடம் ஒரு பெண்ணைப் பற்றி சொன்னேன் அல்லவா? அவளுடைய நாய்தான் அவளுடைய செக்ஷுவல் பார்ட்னர். sucking, licking எல்லாம். இரண்டு நாட்களுக்கு முன் அவளிடம் இது பற்றிக் கேட்டேன். அதிலென்ன தவறு இருக்கிறது. நாம் இரண்டு பேரும்கூட அதில் ஈடுபடலாம் என்கிறாள். நம்முடைய பசியையும், தாகத்தையும் தீர்த்துக்கொள்வது போலவாம். அய்யோ... எனக்கு ஒரு மாதிரியாக இருந்தது. மறுநாள் இரவு என்னை அவளுடைய அறைக்கு அழைத்தாள். குத்துவதற்கு ஏகப்பட்ட சாதனங்கள் வைத்திருந்தாள். நான் சற்றும் எதிர்பாராத விதத்தில் கண்ணிமைக்கும் நேரத்தில் அவள் விரலை என் உறுப்பில் நுழைத்து விட்டாள். நான் அடைந்த அதிர்ச்சியை வார்த்தைகளால் விளக்க முடியாது. முதலில் ஆட்சேபித்தேன். ஆனால் பிறகு அமைதியானேன். அது ஒரு இனம்புரியாத அனுபவமாக இருந்தது.

எனக்கு பயமாக இருக்கிறது பெருமாள். அதனால் நேற்று இரவு என் அறையை விட்டே வெளியில் வரவில்லை.

அக்.18.

பெருமாள், என்னை நினைவிருக்கிறதா

ஃபெப். 25, 2006.

ஏய் குண்டூஸ்... இப்போதுதான் மெயில் அனுப்ப முடிந்ததா? எப்படி இருக்கிறீர்கள்? ஐ மிஸ் யூ செல்லம். ஏப்ரல் இறுதியில் நான் அங்கே இருப்பேன் என்று நினைக்கிறேன். கடவுள் விட்ட வழி. பெருமாள் தரிசனம்

கிடைக்குமா, பார்க்கலாம்.

ஒரு மனித ஜீவன்கூட இல்லாமல் இங்கே நான் செத்துக் கொண்டிருக்கிறேன் பெருமாள். என் அழகும், காமமும் வீணே பாழாகிக்கொண்டிருக்கிறது. இளமையைத் தாண்டி முதுமையை நோக்கிச் சென்றுகொண்டிருப்பதாக ஒரு பயம் ஏற்படுகிறது.

முடிந்தால் இங்கே ஒரு முறை வந்துவிட்டுச் செல்லவும். சென்ற முறை நீங்கள் மலேஷியா வந்தபோது என்னைச் சந்திக்கவில்லை. எப்போதுமே நான் உங்கள் நினைவாகவே இருக்கிறேன். உங்கள் எழுத்துக்களையே படித்துக் கொண்டிருக்கிறேன். உங்கள் புகைப்படத்தைப் பார்க்கும் போது என்னை என்னாலேயே கட்டுப்படுத்த முடியவில்லை.

பெருமாள், நான் உங்களிடம் உண்மையைச் சொல்லிவிடுகிறேன். அந்த சீனப் பெண் எனக்கு முதல் முறையாகச் செய்துவிட்டபோது நான் ஆட்சேபித்தேன். ஆனால் சில தினங்களில் அதில் எனக்கு ஒரு இன்பம் கிடைக்க ஆரம்பித்துவிட்டது. ஒரு நாள் இரவு ஒரு மணியளவில் நானே அவளுடைய அறைக்குச் சென்றேன். அவளுக்கு ஒரே சந்தோஷம். அவளுடைய கணினியில் சில நீலப் படங்களைப் பார்த்தோம். ஒரே ஆள், இரண்டு, மூன்று பெண்கள். அய்யோ... நான் செத்தே போய்விட்டேன். என்னால் என்னைக் கட்டுப்படுத்தவே முடியவில்லை. உடனடியாக என் ஆடைகளைக் கழற்றினேன். பெருமாள், உங்களால் நம்ப முடியாது... அவளுக்கும் வயதாகி விட்டிருந்தாலும், அவள் ஒரு தேவதையைப் போலிருந்தாள். என்ன மென்மையான சருமம்...

ஒரு மஸாஜ் ஆயிலை எடுத்து என் உடம்பு புராவும் தடவி மஸாஜ் செய்துவிட்டாள். ஏய்... என் தேகத்தினுள் அவள் பயணம் செய்தாள்... விரல்களாலும்... நாக்கினாலும்... ஓ, மை காட்... அது ஒரு பேரின்பம்... அந்த நேரம் நான் உங்களைத்தான் நினைத்துக் கொண்டிருந்தேன்.

இப்போது திங்கட்கிழமை காலை... எப்படியிருக்கிறேன் பாருங்கள்... இப்போதுகூட என்னால் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. இருவரும் அதிகாலை நான்கு மணிக்குத்தான் தூங்கினோம்.

எங்கே போய் முடியப்போகிறதோ...

என் குருவுக்கு வணக்கங்களுடன்...

மார்ச் 20.

ஏய் பெருமாள், என்னைக் கொலை செய்கிறாயடா குண்டா... இன்று என்ன நடந்தது தெரியுமா? உனக்கு மெயில் அனுப்பிவிட்டு உன் இணையதளத்தைத் திறந்து பார்த்தேன். அப்போது அந்தப் பெண் காலை உணவுக்கு என்னைக் கூப்பிட வந்தாள். வந்தவள் இணையதளத்திலிருந்த உங்கள் புகைப்படத்தைப் பார்த்தாள். உங்களைப் பற்றி கேட்டாள். சொன்னேன். எல்லாவற்றையும் சொன்னேன். அதோடு உங்கள் மெயிலில் இருந்த சமாச்சாரங்களையும் சொன்னேன். அப்போதுதான் அந்த அதிசயம் நடந்தது. அவள் சொன்னாள். ஏய் பத்மினி. நேற்றிரவு நடந்ததை நினைத்தால் பைத்தியமே பிடித்துவிடும் போலிருக்கிறது. Shall we go and fuck and lick our orgasms...?

ஏய், நீ நம்ப மாட்டாய். நானும் அதே நிலைமையில்தான் இருந்தேன். நான்

சரியென்று தலையசைத்தேன். கல்லூரியிலிருந்து இரண்டு மணி நேரம் முன்னதாகவே கிளம்பிவிட்டோம். அவள் ஒரு சிவப்பு ஒயினும், தேன் பாட்டிலும் வாங்கி வந்தாள். அவள் அறைக்குச் சென்றோம். ஆடைகளைக் கழற்றினோம். ஷவரைத் திறந்தோம். பத்து நிமிடம் கழித்து அறைக்கு வந்தோம். அவள் தேனை என் உறுப்பில் ஊற்றி, நாக்கை உள்ளே விட்டு நக்கினாள்டா... பெருமாள்... நான் அப்படியே ஆகாயத்தில் பறந்தேன்... சொர்க்கம்... சொர்க்கம்... என்னையும் அவளுக்குச் செய்யச் சொன்னாள். ஆனால் எனக்கு அது பிடிக்காது. ஏனென்று தெரியவில்லை. ஏதோ கடமைக்காகச் செய்தேன். அவளுக்குத் திருப்தியில்லை. நோய் வந்துவிடுமோ என்று எனக்குள்ளிருக்கும் பயம்தான் காரணம் என்று நினைக்கிறேன்.

பிறகு கல்லூரிக்குத் திரும்பினோம். இதோ இப்போது உனக்கு மெயில் தட்டிக்கொண்டிருக்கிறேன். இவ்வளவு விளக்கமான மெயில் போதுமா? அல்லது, இதைவிட விளக்கம் தேவையா?

பெருமாள், இது தவிர செக்ஸை அனுபவிக்க வேறு ஏதேனும் வழிகள் உண்டா? அவள்தான் உங்களிடம் கேட்கச் சொன்னாள். முடியாது என்றுதான் சொன்னேன். ஆனால் கேட்காமல் இருக்க முடியவில்லை.

My Sweet kisses and hugs to my master.

மார்ச் 20.

பெருமாள், தேங்க் யூ ஸோ மச்... உன் பதிலுக்கு மிக மிக நன்றி. நான் ஏப்ரலில் நிச்சயம் வருகிறேன். செக்ஸ் ஏக்கத்துடனேயே செத்துவிடுவேன் என்று பயமாக இருக்குடா. உன் மூலமாக சில போக நிலைகளைத் தெரிந்துகொள்ள முடிந்தது. அந்த நிலைகளை அந்தப் பெண்ணுடன் நான் சோதித்துப் பார்க்க முடியுமா? நாம் செய்வோம் பெருமாள். நாம் மூன்று பேரும்... ஆனால் எனக்கு என்ன பயமென்றால் அவளை நீ பார்த்துவிட்டால் என்னை உனக்குப் பிடிக்காமல் போய்விடுமோ என்பதுதான். அவள் மிகப் பெரிய அழகி. பெரிய, அசாதாரணமான முலைகள். என் ஒரு கரத்தால் அதை என்னால் கையாள முடியவில்லை தெரியுமா? நீ அவளைப் பார்த்துவிட்டால் இந்த ஊரிலிருந்து இந்தியா திரும்ப மாட்டாய். வாழ்நாள் பூராவும் அவளுடன் மட்டுமே படுக்க வேண்டும் என்றுதான் நினைப்பாய். இதுவரை சீனப் பெண்ணுடன் செக்ஸ் வைத்துக்கொண்டிருக்கிறாயா பெருமாள்? ஓ.கே. ஒரு முறைதான் அதற்கு அனுமதிப்பேன். அதற்குமேல் என்னை மட்டுமே நீ புணர வேண்டும். இது பற்றி நீ என்னைக் கோபிக்காதே.

பசு நிலையை நான் கற்பனை செய்து பார்க்கிறேன். அய்யோ... கடவுளே...

ஓ.கே. வகுப்புக்குச் செல்ல வேண்டும்.

மார்ச் 20.

ஹாய் பெருமாள்... உங்கள் செல்லக்குட்டி எழுதுகிறேன். நேற்று இரவும் செக்ஸ். அவள் என்னை விட மாட்டேன் என்கிறாள். இரவு 2 மணி வரை போயிற்று. பெருமாள். நான் எனது நற்பண்புகளை இழந்துகொண்டிருக்கிறேன் என்று தோன்றுகிறது. ஆமாம். அப்படித்தான் நினைக்கிறேன். நேற்று இரவு நான் காய்கறிச் சோறு செய்தேன். குசினியில் நின்றுகொண்டிருந்தேன். அப்போது அங்கே வந்தவள் சடாரென்று என் ஆடையை உயர்த்தி என் உறுப்பை நாவினால் சுவைக்கத்

துவங்கிவிட்டாள். எல்லா நேரத்திலும் இப்படியிருந்தால் எனக்குப் பிடிக்கவில்லை. அவளுக்கு நான் அளவுக்கு மீறி இடம் கொடுத்துவிட்டேன் என்று நினைக்கிறேன். என்னையும் புணரச் சொல்லி அழைத்தாள். எனக்குப் பிடிக்கவில்லை பெருமாள். அதைப் பற்றி நினைத்தாலே ஒரு மாதிரி இருக்கிறது.

பெரிய தப்பு செய்துவிட்டேனோ என்று தோன்றுகிறது பெருமாள். அவள் என் அனுமதிகூட கேட்பதில்லை... ஆனால் அந்த நேரத்தில் இன்பமாகத்தான் இருக்கிறது, என் உறுப்பில் ஒரு ஈரப்பசை வருகிறது. அதில் அவள் தன் முகத்தைத் தேய்க்கிறாள். என்னால் அது எப்படி முடியும் பெருமாள்? Say something and guide me da. தப்போ சரியோ, நான் சற்று பதற்றமாக இருக்கிறேன்.

உன் செல்லம்.

மார்ச் 21.

ஏய், பெருமாள், என்னடா பதிலே இல்லை, குண்டா... நான் உன்னை அப்படிக் கூப்பிடலாமா? நீ என்னை 'டீ' என்று சொன்னதற்கு நான் அப்போது என்ன சண்டை போட்டேன்? ஆனால் நீதான் ஜெயித்தாய். க்ரேட். உன் செல்லம் உனக்கு மட்டுமேதான் பெருமாள்.

அந்த சீனப் பெண்ணின் உறவைத் துண்டித்துக்கொள்ள விரும்புகிறேன். நான் செய்துகொண்டிருக்கும் காரியம் விபச்சாரம் என்றே நினைக்கத் தோன்றுகிறது. என் உள் மனம் என்னைக் குத்துகிறது. அவள் நல்ல பெண் அல்ல. அவளுக்குப் பல ஆண்கள் உள்ளனர். இதுவரை நான் செய்து வந்த காரியத்திற்காக மிகவும் வருந்துகிறேன். நேற்று இரவு முழுவதும் என்னால் தூங்க முடியவில்லை. பெருமாள், எனக்கு உதவி செய். எது சரி? எது தவறு? தயவு செய்து சொல்.

மார்ச் 22.

ஹலோ பெருமாள், என்னடா பதிலே இல்லை? மறந்து விட்டாயா? தயவுசெய்து பதில் அனுப்பு. ப்ளீஸ்டா செல்லம். உன்னையேதான் நினைத்துக்கொண்டிருக்கிறேன். ப்ளீஸ்...

உன் செல்லக் குட்டி.

மார்ச் 25.

வாவ்... பெருமாள்... நீ நாவல் எழுதுவதில் மூழ்கிவிட்டாய் என்பதைக் கேட்க சந்தோஷமாக இருக்கிறது. ஓ.கே... Carry on. எப்போது உனக்கு நேரம் கிடைக்கிறதோ அப்போது எழுது. நன்றி கண்ணே...

மார்ச் 27.

பெருமாள், உங்கள் விரிவான கடிதம் பார்த்தேன். வகுப்புகள் முடிந்து மாலையில் பதில் அனுப்புகிறேன்.

Sweet kisses to my MASTER.

மார்ச் 30.

வகுப்புகள் முடிந்துவிட்டன. என் கடந்த காலம் பற்றித் தெரிய வேண்டுமா? அதில் சுவாரசியமான பகுதி எதுவுமேயில்லை. அம்மா இல்லாமல் மிகவும்

கஷ்டப்பட்டேன். இளமைக் காலம் முழுவதும் ஹாஸ்டலில் வாழ்ந்தேன். நிறைய பிரச்னைகள். ஒரு காதல் தோல்வி. இன்று வரை கன்னி. வயது 36. அந்த சீனத்துப் பெண்ணுடன் உறவு கொண்டதால் கன்னிமை கழிந்துவிட்டது என்று சொல்ல முடியாது என்றே நினைக்கிறேன். ஆணின் ஸ்பரிசம் படும்வரை நான் கன்னிதான். இது தவிர மற்ற பிரச்னைகள். நினைத்தாலே தற்கொலை செய்துகொள்ளத் தூண்டுமளவு பயங்கரமானவை. பிறகு எழுதுகிறேன்.

அப்புறம், எப்படியிருக்கிறீர்கள்? நான் அங்கே வரும்போது நிச்சயம் சந்திப்போம். உங்களுக்கு என்னவெல்லாம் விருப்பமோ அதையெல்லாம் செய்துகொள்ளலாம். இப்போது என் கூச்சம், வெட்கம் எல்லாம் போய்விட்டது. நீங்கள் சொன்னது சரிதான். காமம் என்பது உணவு மாதிரிதான். என் தந்தை என் திருமணத்துக்கு ஏற்பாடு செய்து வருகிறார். வாழ்க்கையை அடுத்து எப்படித் திட்டமிடுவது என்ற குழப்பத்தில் இருக்கிறேன். அந்த சீனப் பெண் லியனுடன் இன்னும் நடந்துகொண்டிருக்கிறது. உறவை முறித்துக் கொள்ள வேண்டும் என்றுதான் நினைக்கிறேன். முடியவில்லை. ஓ.கே. இதில் ஒன்றும் தவறில்லை என்று நானே தேற்றிக் கொண்டுவிட்டேன்.

பாகிஸ்தானிலிருந்து ஒரு மாணவன்... மிகவும் அழகாக இருக்கிறான். அடிக்கடி என் வீட்டுக்கு வருவான். இதுவரை அவனுடன் சற்று தூரத்திலேயே இருந்து பழகி வருகிறேன். ஆனால் இப்போது அவனுடன் உறவு கொள்ளலாமா என்று யோசிக்கிறேன். ஆனால் பயமாக இருக்கிறது. இதனால் எதுவும் பிரச்னை வந்துவிடக்கூடாது. எப்படியோ, உங்கள் மெயில் பார்த்து முடிவு செய்துவிட்டேன்.

மார்ச் 30.

பெருமாள், இங்கு இந்தப் பல்கலைக்கழகத்தில் என்னுடைய ஒப்பந்தம் இன்னும் ஒரு வருடம் நீட்டிக்கப்பட்டிருக்கிறது. மார்ச் 2007 வரை. சந்தோஷமான விஷயம். ஆனால் அந்த பாகிஸ்தானி பற்றி இன்னும் பயமாகத்தான் இருக்கிறது. லியனுக்கு ஒரு விஷயத்தில் மிகவும் மகிழ்ச்சி. அவளுக்குத் துணையாக நான் கிடைத்தது. இருவரும் நிறைய நீலப் படங்கள் பார்க்கிறோம். போகத்தின் பல நிலைகள். அவள் என் உறுப்பைச் சுவைக்கும்போது ஆர்கஸம் வரத்தான் செய்கிறது. நாக்கை உள்ளே விட்டு கடித்து இழுக்கிறாள். கொஞ்சம் வலித்தாலும் இன்பமாகத்தான் இருக்கிறது. What is there to do then... getting bored of that... donno... whats going to hapn... god is great... I am reading your books.

மார்ச் 31.

என்ன செல்லம், பதிலே இல்லை? பதில் எழுதுடா ப்ளீஸ்...

ஏப்ரல் 5.

ஏய் பெருமாள், என்ன ஆயிற்று? உன்னிடமிருந்து மெயிலே இல்லை. அங்கே வரத் திட்டமிட்டுக்கொண்டிருக்கிறேன். So excited you know.

ஏப்ரல் 20.

ஹாய் பெருமாள், பெரிய இடைவெளிக்குப் பிறகு மெயில் அனுப்பியிருக்கிறாய். ஸாரி டா. என் இந்தியப் பயணம் ரத்தாகிவிட்டது.

இனிமேல் டிசம்பரில்தான் வர முடியும். அடுத்த வாரம் என் தோழி ஒருத்தியுடன் தாய்லாந்து போகிறேன். நீ ஒரு முறை இங்கே வா. ப்ளீஸ் டா.

உனக்கு ஓராயிரம் முத்தங்கள்.

ஏப்ரல் 27.

ஹலோ பெருமாள், நீண்ட நாள் மெயில் அனுப்பாததற்கு வருந்துகிறேன். எக்கச்சக்கமான வேலை. நிறைய கான்ஃப்ரன்ஸஸ். செக்ஸ் வாழ்க்கை நல்லபடியாகச் சென்றுகொண்டிருக்கிறது. அந்தப் பாகிஸ்தானி. ஆனால் என்றைக்கும் நான் உனக்குத்தான்.

உன் நினைவுடன்.

ஜூன் 5.

என்னடா, ஒரே ரொமான்ஸ் மூட் போல. ரொம்ப நல்ல கதைகள். இம்மாதிரி கதைகளைப் படிப்பது இதுவே முதல் முறை. இங்கே என் வாழ்க்கை பிரமாதமாகச் சென்றுகொண்டிருக்கிறது. ஆனால் உன்னைப் பார்க்க முடியாமல் இருப்பதுதான் ஒரே வேதனை.

என் செக்ஸ் பார்ட்னருக்கு அவ்வளவு திறமையில்லை. He is unable to pump, you know. But still he is entertaining me like anything. இரவு வந்துவிட்டு காலையில் போகிறான். அவனுடைய உறுப்பைப் பிடித்தபடிதான் நான் உறங்குகிறேன். அவனுக்கும் இது புதிது. எனக்கும் புதிது. எனக்குத் தெரிந்ததெல்லாம் உன் மூலமாகத்தான்.

அவனுக்கு ஓரல் செக்ஸ் பிடிக்கவில்லை. To some extent I force him to do. That Chinese girl is best to suck. என் உறுப்பில் நாக்கை விட்டு பிரமாதமாகச் சுழற்றுவாள்.

என்ன செய்வது, இருக்கும்போது அருமை தெரியாது. என் வாழ்க்கை முழுவதும் எனக்கு நீ நண்பனாக இருக்க வேண்டும்.

ஜூன் 10.

பெருமாள், மீண்டும் தனிமை. அந்த பாகிஸ்தானிப் பையன் ஒரு விபத்தில் மாட்டி மருத்துவமனையில் கிடக்கிறான். எனக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. எனக்கு அப்படியே உன்னைக் கடித்துத் தின்ன வேண்டும் போலிருக்கிறது.

அந்த சீனப் பெண் கடந்த வாரம் என்னைக் கூப்பிட்டாள். நான் மறுத்துவிட்டேன். ஆனால் நேற்று இரவு நானே அவளுடைய அறைக்குச் சென்றேன். எவ்வளவு காலம் கட்டுபடுத்துவது? அவளும் காய்ந்துபோய்தான் இருந்தாள் என்று நினைக்கிறேன். இரவு ஒரு மணி அளவில் சென்றேன். அரைத் தூக்கத்தில் இருந்தாள். விளக்கைக்கூட அணைக்க வில்லை. அப்படியே கீழே குனிந்து நான் நின்று கொண்டிருக்கும்போதே வாயை வைத்துவிட்டாள். படு பயங்கரமாக என்னைப் புணர்ந்தாள். I am also very eager.

நேற்றுதான் முதல்முதலாக அவளை நான் ஒரு நாயைப் போல் புணர்ந்தேன்.

இன்று என்ன நடக்கும் என்று தெரியவில்லை. இவ்வளவு காலத்தை நான் எப்படித் தனியாகக் கழித்தேன் என்று நினைத்தாலே ஆச்சரியமாக இருக்கிறது.

இது எங்கே போய் முடியும் என்று தெரியவில்லை. அம்மன்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும்.

ஜூன் 27.

இதற்கு மேல் இந்த நாவல் அச்சுக்குப் போகும்வரை பத்மினியிடமிருந்து எந்த மெயிலும் இல்லை.

## 61. மிருகக்காட்சிசாலை

நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லர்கண் பட்ட திரு.

-திருக்குறள் : அதிகாரம் : கல்லாமை : குறள் 408.

இவ்வளவுக்குப் பிறகாவது புத்தி வந்திருக்க வேண்டும். வரவில்லை. ஆஸ்பத்திரியிலிருந்து வந்து ஒரு மாதம் ஓய்வு எடுத்தவுடனேயே மீண்டும் கிளம்பிவிட்டேன் - அடுத்த குமார்சாமியிடம் மாட்டிக்கொள்ள. அவன்தான் நந்தா. சர்ஜரி நடப்பதற்கு இரண்டு வாரம் முன்புதான் அறிமுகமானான். அவ்வளவு குறுகிய காலப் பழக்கத்திலேயே என் சர்ஜரி செலவுக்கென்று 25,000 ரூபாயைத் தூக்கிக் கொடுத்தான்.

ஆனால் ஓரிரண்டு மாதங்களிலேயே அவனுடைய நட்பு சித்ரவதையாக மாறியது. அவனுடைய உளறலுக்கெல்லாம் ஆமாம் போட வேண்டும் என்று எதிர்பார்த்தான். இலக்கியத்துக்குச் சம்பந்தமில்லாத பொது நீரோட்டத்திலிருந்து வருபவர்கள் எல்லாருமே இப்படித்தான் இருந்தார்கள்.

ஒரு நாள் அலெக்ஸின் பிறந்த நாளுக்கு நானும் நந்தாவும் அலெக்ஸ் வீட்டுக்குச் சென்றோம். நான் எதிர்பார்த்தபடியே கையை வீசிக்கொண்டு வந்தான் நந்தா. என்னதான் நடக்கிறதென்று நானும் அமைதியாகச் சென்றேன். அலெக்ஸின் வீடு வரை வந்துவிட்டோம். நந்தா வாயையே திறக்கவில்லை. ஒரு பூங்கொத்துகூட வாங்காமல் ஸ்கார்ப்பியோ காரில் பிறந்த நாள் விழாவுக்குப் போய்க்கொண்டிருக்கும் பிரஜைகளை என்னவென்று அழைப்பது? ஏதாவது பூங்கொத்து விற்கும் கடையில் காரை நிறுத்தச் சொன்னேன்.

கதையைக் கடைசியிலிருந்து சொன்னால் உங்களுக்கு என்ன புரியும்? சி மேட்டரில் நன்கு சூடு பட்ட பிறகும் வெறொரு விஷயத்தில் என்னை மாட்டிவிட்டான் நந்தா.

‘ஒரு மாதமிரு முறை வெகுஜனப் பத்திரிகை ஆரம்பிக்கலாம் பெருமாள்’ என்றான் நந்தா.

அதிலுள்ள சாதக பாதகங்கள், நட்டக் கணக்கு எல்லாவற்றையும் நானும் அலெக்ஸும் அவனிடம் விளக்கினோம். எல்லா சந்திப்பும் அலெக்ஸ் வீட்டிலேயே நடந்தது. மதுபானச் செலவெல்லாம் அலெக்ஸ் தலையில்.

இதுபோல் பல தடவை நடந்தது. நான் குடிப்பதை நிறுத்தித் தொலைத்து விட்டதால் நந்தா குடித்துவிட்டு உளறுவதையும் சகித்துக் கொள்ள வேண்டியதாயிற்று. ஏற்கெனவே எழுதிவிட்டேன். ஒரு நாள்கூட வெளியிடத்தில் சந்திப்பதாக நந்தா பிரஸ்தாபிக்கவில்லை. ஆனால் வருஷத்துக்கு சுமார் 20 'எல்' - சே, இனிமேல் 'எல்' என்று எழுதினால் இந்த நாவலைக் கிழித்து கூவத்தில் எறியுங்கள், சொல்கிறேன் - சுமார் 20 லட்சம் ரூபாய் இழக்கத் தயாராக இருந்தான்.

நூறு தடவையாவது கேட்டிருப்பேன். ஒவ்வொரு தடவையும் 'நான் 20 கோடிக்குச் சொந்தக்காரன் பெருமாள். இரண்டு வருடம் நட்டப்படுவதற்குத் தயாராக இருக்கிறேன்' என்றான்.

அலைந்தோம். நாய் அலை பேய் அலை அலைந்தோம். நந்தா, நான், அலெக்ஸ் மூவரும் கூட்டு.

எனக்கும் அலெக்ஸுக்கும் சம்பளம் என்றால் மிகக் குறைவான ஒரு கணக்கைப் போட்டால் கூட 50,000 ரூ. வரும். எனவே செலவைக் குறைப்பதற்காக இருவரும் சம்பளம் இல்லாமல் வேலை செய்வதாக முடிவு செய்தோம். ஆனால், போக்குவரத்துச் செலவு, தொலைபேசிக் கட்டணம் என்றெல்லாம் மறுபடியும் லட்சக்கணக்கில் இழக்க முடியுமா? அதனால் அதற்காக மட்டும் இருவருக்கும் தலா ஒரு 5,000 ரூ. கொடுத்துவிட வேண்டும் என்று சொன்னால் ஏதோ பாம்பை மிதித்துவிட்டதைப் போல் பதறினான் நந்தா. 'அதெல்லாம் பிறகு பார்த்துக்கொள்ளலாம்' என்று வழிந்தான். அப்போதே முழித்துக்கொண்டிருக்க வேண்டும்.

சி மேட்டரைப் போலவே ஓடிக்கொண்டிருந்தது 'சிந்துபாத்' மேட்டர். அதுதான் பத்திரிகையின் பெயர். இந்த நிலையில்தான் வெறுங்கையை வீசிக்கொண்டு அலெக்ஸின் பிறந்த நாள் விழாவுக்காக அலெக்ஸ் வீட்டுக்குப் போனது.

'ஏன் பூங்கொத்து? புத்தகம் வாங்கிப் பரிசளிக்கலாமே?' என்று சொல்லி பக்கத்திலிருந்த ஒரு புத்தகக் கடையின் பெயரைக் குறிப்பிட்டான் நந்தா. 'அதைவிட அலெக்ஸை எரிச்சலடையச் செய்யக்கூடிய விஷயம் வேறு எதுவும் இருக்காது' என்றேன். அந்தக் கடையிலுள்ள முக்கால்வாசிப் புத்தகங்களைப் பதிப்பித்தவனே அலெக்ஸ்தான். அவன் பதிப்பித்த ஒரு புத்தகத்தையே வாங்கிக் கொண்டுபோய் அவனுக்குப் பரிசாகக் கொடுப்பது முட்டாள்தனமா அயோக்கியத்தனமா என்று மனசுக்குள் ஒரு யோசனை ஓடியது. ஏன் இவனால் ஒரு 2000 ரூ. செலவு செய்து ஒரு ஸ்காட்ச் போத்தலை வாங்கிக்கொண்டு வர முடியவில்லை? வாராவாரம் சனிக்கிழமை காலையில் ஆரம்பித்து ஞாயிறு இரவு வரை இவனுடைய கெஸ்ட் ஹவுஸில் ஸ்காட்ச் ஆறாய் ஓடுகிறது. ஆனால் எழுத்தாளன்கள் மட்டும் புத்தகங்களையே வைத்து நக்கிக்கொண்டு கிடக்க வேண்டும்?

பிறகு நூறு ரூபாய்க்கு ஒரு பூங்கொத்தை வாங்கிக்கொண்டு போனோம். கையில் பணம் இல்லாமல் பிச்சைக்காரனாக வாழ்வதில் உள்ள அன்றாடச் சிக்கல்களை உணர்ந்த ஒரு தருணம் அது. அப்படி வாழ்வதில்கூட அவ்வளவு பிரச்னை இல்லை. ஆனால் நந்தா மாதிரி பணக்காரப் பிச்சைக்காரன்களுடன் வாழ்வது தான் பெரிய பிரச்னையாக இருந்தது.

பிறந்த நாள் அன்று வந்தவன்கள் அத்தனை பேரும் நந்தா மாதிரிதான் கை வீசிக்கொண்டு வந்திருந்தான்கள். இதை எதிர்பார்த்தோ என்னவோ அலெக்ஸே ஒரு போத்தல் செக்காவ் வோட்கா வாங்கி வைத்திருந்தான். 95 சதவிகிதம் பேர் நிஜப் பிச்சைக்காரன்களும், 4 சதவிகிதம் பேர் பணக்காரப் பிச்சைக்காரன்களும் வாழும் இந்திய தேசத்தில் தண்ணியடிக்காதவனாக வாழ்வதிலுள்ள பெரும் சுகத்தை அன்றுதான் நான் அனுபவித்தேன். (பணத்தைத் தண்ணீர் மாதிரி செலவு செய்யும் அந்த மீதி ஒரு சதவிகிதம் பேர் எங்கே இருக்கிறார்கள் என்று எனக்குத் தெரியாது.)

செக்காவைப் படித்தால் உங்கள் ஆயுளில் ஒரு பத்தாண்டுகள் கூடும். அப்பேர்ப்பட்ட இலக்கியவாதி அவன். ஆனால் அலெக்ஸ் வாங்கி வைத்திருந்த செக்காவைக் குடித்தால் உங்கள் ஆயுளில் பத்தாண்டுகள் குறையும். மூன்று பெக் அடித்தாலே மறுநாள் முழுவதும் உடம்பு ரணமாய் வலிக்கும். கள்ளச் சாராயம் அடித்து கண்பார்வை போயிற்று என்று தினசரிகளில் படிக்கிறோமே அந்த வகை மதுபானம் அது. அதை ஏன் அலெக்ஸ் வாங்கி வைத்திருக்கிறான் என்ற நியாயமான கேள்வி உங்களுக்குத் தோன்றும். தோன்றினால் உங்களைக் கட்டி வைத்து தோலை உரிப்பதைத் தவிர வேறு வழியில்லை. ஆமாம். வேறென்ன? தமிழ்நாட்டின் ஆறு கோடி ஜனங்களுக்கும் தெரிந்த ஒரு எழுத்தாளனின் புத்தகத்தைப் பதிப்பித்தால் அது குறைந்தபட்சம் ஒரு லட்சம் பிரதிகள் விற்க வேண்டாமா? முக்கி முக்கி 1000 பிரதிகள் போகும். இந்த நிலையில் செக்காவை வாங்கி வைக்காமல் பக்கார்டியையா வாங்கி வைக்க முடியும்.

அதுவும் அங்கிருந்த ஒரு டஜன் பேருக்கு ஒரு போத்தல் எப்படி போதும்? ஒரே ரவுண்டில் தீர்ந்துவிட்டது. அலெக்ஸின் வேறொரு நண்பன் ஒரு போத்தலுடன் வந்துகொண்டிருப்பதாக ஏழு மணியிலிருந்து ஃபோனில் தெரிவித்துக் கொண்டிருந்தான். மணி ஒன்பது ஆகியிருந்தது. ஏதோ ஒலிம்பிக் டார்ச் தேசம் தேசமாகக் கடந்து வந்துகொண்டிருப்பதைப் போலிருந்தது அந்த போத்தலின் வருகை. எல்லாவற்றையும் நான் ஒரு sadist மன நிலையுடன் கவனித்துக்கொண்டிருந்தேன். நொந்து நூலாகிப்போன நந்தா சின்ன சங்கரை அழைத்துக்கொண்டு சரக்கு வாங்கிவர தன் காரில் கிளம்பினான்.

இதற்குத்தான் நாவலை சீக்கிரம் முடித்துவிட வேண்டும் என்று நினைக்கிறேன். பாருங்கள், சின்ன சங்கரின் என்ட்ரி வருகிறது. இந்த நாவலுக்கு முன்பாகவே தமிழ் இலக்கியத்தில் தனக்கென ஒரு இடம் பிடித்துவிட்டவன் அவன். உத்தமத் தமிழ் எழுத்தாளன், நிர்-9 சின்ன சங்கரைப் பற்றி ஒரு கவிதையில் அவன் முகம் ஒரு வேசியின் முகத்தைப் போலிருப்பதாக எழுதியிருக்கிறான். எனக்கும் சின்ன சங்கரின் முகத்தைப் பார்த்தால் அப்படித்தான் தோன்றியது. தாய்லாந்தில் வேசிகளின் முகம் அப்படியில்லை. அலுவலகம் செல்லும் பெண்ணுக்கும் ஒரு வேசியின் முகத்துக்கும் அங்கே வித்தியாசம் தெரியவில்லை. எல்லோருக்குமே பால் வடியும் குழந்தை முகம்தான். ஆனால் பட்பாங்கிலுள்ள hardcore வேசிகளின் முகம் மட்டும் இதற்கு விதிவிலக்கு. பார்த்தவுடனேயே தொழிலைச் சொல்லி விடலாம்.

'ஏன் இப்படி வேசிகளின் முகம் மட்டும் அவர்களின் தொழிலைக் காட்டிக் கொடுப்பது போல் அமைந்திருக்கிறது?' என்று ராமகிருஷ்ணனைக் கேட்டேன். வேசிகளைப் பற்றி எந்த நேரடி அனுபவமும் இல்லாதவர் அவர்

என்பது என் அனுமானம். ஆனால் அவர்தான் என்னுடைய நீண்ட நாள் சந்தேகத்தைத் தீர்த்துவைத்தார்.

செக்ஸ் என்பது உடலும் உடலும் இணைவது மட்டுமல்ல; மனமும் மனமும் இணைய வேண்டும். ஆனால் வேசிகள் விஷயத்தில் முதலாவது மட்டும்தான் நடக்கிறது; அதனால்தான் முகம் அந்த மாதிரி ஆகிவிடுகிறது.

ராமகிருஷ்ணனின் இந்த விளக்கத்தைக் கேட்ட பிறகுதான் தாய்லாந்து வேசிகளின் முகத்தில் மட்டும் ஏன் அப்படி ஒரு தெய்வீகக் களை வீசுகிறது என்ற சந்தேகமும் தீர்ந்தது.

ம்யூஸின் முகம்கூட சின்ன சங்கர் முகம் மாதிரியே இருக்கும் என்பதை இங்கே வருத்தத்துடன் பதிவு செய்கிறேன். சரி, முகத்தை விடுங்கள். சின்ன சங்கர் மேல் எனக்கு என்ன கோபம் என்றால் அவன் மிலன் குந்தேராவையும் இன்னும் சில ஐரோப்பிய எழுத்தாளர்களையும் மிக மோசமாக அவமானப்படுத்தியிருக்கிறான்.

தமிழ் எழுத்துச் சூழலில் சிருஷ்டிகர வேலையில் ஈடுபட முடியாத பலர் மொழிபெயர்ப்பு மற்றும் விமர்சனம் செய்வதன் மூலமாக உத்தமத் தமிழ் எழுத்தாளராக ஆகிவிடலாம் என்று முயற்சிக்கிறார்கள். கே.ப்ரதாப் என்ற விமர்சகர் ஒரு பத்திரிகையில் எழுதியிருந்தார், ‘என்னுடைய 25 ஆண்டுக் கால கலையுலகப் பயணத்தில்...’ என்று.

அவருக்கு இப்போது என் வயது என்பதால் ‘25 ஆண்டு’ என்ற வார்த்தை உண்மை. ஆனால் கலையுலகப் பயணம்? 25 ஆண்டுகளாக இவர் செய்த கலையுலகப் பயணம் என்ன? மாதம் 25 நாள் தண்ணி, இரண்டு வருடத்திற்கு ஒரு முறை முக்கால் பக்கத்துக்கு ஒரு கட்டுரை. அந்தக் கட்டுரை எப்படியிருக்கும் என்பதற்கு ஒரு உதாரணம்: ‘வாழ்வின் காட்சிகளையும் மனவெளிப் படிமங்களையும் வண்ணங்களின் மூலமாகத் தோய்த்துக் கொடுக்கும் இவர், தொடர்ந்து கொசுக்களையே தனது வெளிப்பாட்டுப் பொருளாகக் கொண்டிருக்கிறார். இவரது கலைப் படைப்புகளில் கொசு காலாதீதத்தின் படிமமாகவே தியானிக்கிறது...’

35 ஆண்டுகளாக கொசுக்களை மட்டுமே வரைந்து ‘கொசு’ பாண்டியன் என்று பெயர் பெற்றிருக்கும் பாண்டியன் என்ற ஓவியரைப் பற்றிய கட்டுரையில் கே.ப்ரதாப். இதுதான் கே.ப்ரதாபின் 25 ஆண்டு காலக் கலையுலகப் பயணம்...

இன்னும் சிலர் உண்டு. கே.ப்ரதாப் மாதிரி இப்படி இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முக்கால் பக்கக் கட்டுரைகூட எழுதுவதில்லை. ஆனாலும் சிறு பத்திரிகையுலகின் தாதாக்களாக உலவி வருகிறார்கள். எப்படியெனில், சிறு பத்திரிகையுலகப் பிரஜைகளையும், உத்தமத் தமிழ் எழுத்தாளர்களையும் அடிக்கடி சந்தித்து அவர்களுடன் தண்ணியடிப்பதன் மூலமாக.

இந்த இரண்டு ரகம் தவிர, மூன்றாவதொரு ரகமும் உண்டு. அவர்கள் மொழிப்பெயர்ப்பாளர்கள். சின்ன சங்கர் அந்தக் கூட்டத்தைச் சேர்ந்தவன். சின்ன சங்கரின் மொழிபெயர்ப் புக்கு ஒரு சீரிய உதாரணம் இது:

நீதிமன்றங்களில் ‘கனம் நீதிபதி அவர்களே’ என்று சொல்வதுண்டு அல்லவா? அந்த My Lord என்ற வார்த்தையை சின்ன சங்கர் ‘என் கடவுளே’ என்று மொழிபெயர்த்திருந்தான்.

செக்கோஸ்லாவாக்கியாவின் தலைநகர் Prague 'ப்ரேக்' என்று மாறியிருந்தது.

சின்ன சங்கர் ஒரு பிரபலமான பதிப்பகத்தில் வேலை பார்க்கிறான். வேறொரு சிறு பதிப்பகத்தில் வெளிவந்த தனது மொழிபெயர்ப்புப் புத்தகத்தை தன் மேலாளரிடம் கொண்டுபோய் காண்பித்திருக்கிறான். அந்த மேலாளரோ வெகுஜனப் பத்திரிகைகளில் எழுதும் ஒரு வணிக எழுத்தாளன். வணிக எழுத்தாளர்களுக்கு சிறு பத்திரிகை எழுத்தாளர்களின் மீது ஒரு தீவிர வன்மம் உண்டு, 'இந்தப் பிச்சைக்காரப் பயல்களுக்கு என்ன திமிர்' என்று. 'நீங்க இங்க சம்பளம் வாங்க மட்டும்தான் வர்றீங்க. மத்தபடி ஒரு வேலையும் செய்யிறதில்லெ. இந்த மாதிரி உங்க சிறு பத்திரிகை வேலைக்குத்தான் உங்க நேரம் சரியா இருக்குது' என்று கத்தியபடி சின்ன சங்கர் கொடுத்த புத்தகத்தைத் தூக்கி விசிறியடித்திருக்கிறான் அந்த மேலாளர்.

கேள்விப்பட்டபோது முதலில் கோபம் வந்தது. ஆனால் மிலன் குந்தேராவை அவமானப்படுத்திய சின்ன சங்கருக்கு இது தேவைதான் என்று நினைத்துக்கொண்டேன்.

சரக்கு வாங்கக் கிளம்பிய நந்தாவும் சின்ன சங்கரும் மற்றொரு செக்காவுடன் பத்து நிமிடத்தில் திரும்பிவிட்டார்கள். ஆனால் நந்தா சின்ன சங்கரை 'வாடா போடா' என்று அழைத்துக் கொண்டு வந்தான். சின்ன சங்கர் நந்தாவை 'வாரும், போரும்' என்றான்.

முடிந்தது கதை என்று நினைத்துக்கொண்டேன். இப்போது என்னையறியாமலேயே நந்தாவுக்கு மாமா வேலை செய்து விட்டேன் என்று தோன்றியது. அதாவது, நான் யாருக்கு என் நண்பரையோ, தோழியையோ அறிமுகம் செய்து வைத்தாலும் அறிமுகம் செய்து வைத்த கையோடு இரண்டு பேரும் எனக்கு டாட்டா காண்பித்து விடுவார்கள்.

செலினுக்கும் ரஞ்சனிக்குமான உறவு இப்போது சிங்கப்பூர் முழுக்கவும் பிரசித்தம். ஆனால் ரஞ்சனியைத் திட்டி எழுதி விட்டதால் செலின் என்னுடைய நட்பை முறித்துக் கொண்டான். என்னுடைய 'சூன்ய வெளியில்...' நாவலை ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பதற்காக ஒரு லாரி புத்தகங் களை விலை கொடுத்து வாங்கி, இரண்டு ஆண்டுகளாக அதையெல்லாம் ராப்பகலாகப் படித்து, மேலும் இரண்டு ஆண்டுகள் ராப்பகலாய் கண் விழித்து அந்த நாவலின் பெரும்பகுதியை மொழிபெயர்த்தவன், ஒரே ஒரு ஓட்டை கிடைத்ததும் எல்லாவற்றையும் மூட்டை கட்டிவிட்டான். இந்த மாதிரி ஆட்கள் என்னிடமிருந்து என்ன எதிர்பார்க்கிறார்கள்? இவர்களுக்கு நான் அடிமையாக இருக்க வேண்டுமென்றா? நான் ரஞ்சனியை விமர்சித்தால் இவனுக்கென்ன?

சாலிகிராமத்திலிருந்து நந்தாவின் வீட்டுக்குக் குடிவந்தான் சின்ன சங்கர். அதில்கூட எவ்வளவு தில்லுமுல்லு பாருங்கள். அந்த வீட்டைத் தன்னுடைய வீடு என்று சொல்லாமல் என் நண்பர் ஒருவருடைய வீடு என்று சொல்லி சின்ன சங்கரிடம் வாடகைக்கு விட்டிருக்கிறான் நந்தா. இந்த மாதிரி சின்ன புத்தியெல்லாம் சிறு பத்திரிகைக்காரன்களுக்கு சுட்டுப் போட்டாலும் வராது. இதெல்லாம் இலக்கியத்துக்கு வெளியேயுள்ள சராசரி மனிதர்களான குமாரவேலு, நந்தா, செலின் போன்றவர்களுக்கு மட்டுமே உரித்தானது. முன்பெல்லாம் இலக்கியத்தில் இம்மாதிரி ஆட்களின்

ஊடுருவல் இருந்ததில்லை. இப்போது கணினி மூலம் இந்த வைரஸ் ஊடுருவல் எளிதாகிவிட்டது. மேலும், இம்மாதிரி சராசரிகள் அனைவரும் சாஃப்ட்வேர் துறையைச் சேர்ந்தவர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது.

***

பத்திரிகைக்கான ஏற்பாடுகள் ஜரூராக நடந்துகொண்டிருந்தன. அலெக்ஸ் தன்னுடைய பதிப்பக அலுவலகத்தையே 'சிந்துபாத்' வேலைகளுக்குப் பயன்படுத்திக்கொள்ளலாம் என்று சொல்லிவிட்டான். இதற்கிடையில் நந்தாவின் தினசரி லொள்ளு தாங்க முடியாதபடி அதிகரித்துக்கொண்டிருந்தது.

மாதிரிக்கு ஒன்று:

ஒரு நாள் நந்தாவிடமிருந்து அவசர அழைப்பு. ஒரு பிரபலமான கோவிலுக்கு ஒரு நவரத்தின மாலையை வேண்டுதலாகக் கொடுக்கச் சென்றிருக்கிறான். அங்கிருந்த குருக்கள் அதை உண்டியலில் போடச் சொல்லியிருக்கிறார். அது சுவாமி கழுத்துக்குப் போகாது; தேவஸ்தானம் அதை விற்றுவிட்டு அந்தப் பணத்தை கோவில் சொத்தில் சேர்த்து விடும்.

'இதில் உனக்கென்ன பிரச்னை?'

இவனுடைய மாலை சுவாமி கழுத்தில் ஏற வேண்டுமாம். தேவஸ்தான அதிகாரியுடன் வாக்குவாதம். பிறகு நவரத்தின மாலையுடன் சென்னை திரும்பி தமிழ்நாடு அறநிலையத்துறை ஆணையருக்கு ஒரு நீண்ட கடிதம் (அக்கடிதத்தை முழுமையாகப் படித்துக் காண்பித்தான்.) மூன்று மாதமாகியும் பதில் வரவில்லை. பல நினைவூட்டல் கடிதங்கள். பதில் இல்லை. நேரில் போய் அறநிலையத்துறை ஆணையரோடு சண்டை.

இந்தப் பிரச்னையை மணியிடம் சொல்லி நான் தீர்த்து வைக்க வேண்டுமாம்.

என்னை செருப்பாலேயே அடிப்பான் மணி.

நான்கு நாட்கள் இது சம்பந்தமாக என்னைப் பாடாய் படுத்தி விட்டு, நான் அசைந்து கொடுக்கவில்லை என்றதும்தான் விட்டான். எங்கிருந்து வந்து என்னைச் சேர்கிறான்கள் இந்த மாதிரி ஆட்கள் என்று எனக்கு ஒரே குழப்பமாக இருந்தது. ஒரு நாள் ஒரு அமெரிக்க நிறுவனம் 'பத்திரிகை நடத்துவது எப்படி?' என்று வெளியிட்டிருந்த ஒரு கேள்விப் பட்டியலை 'ட்வுன்லோட்' செய்து எனக்கும் அலெக்ஸுக்கும் அனுப்பியிருந்தான். 50 பக்கம் இருந்தது அந்தக் கேள்விப் பட்டியல். இதெல்லாம் 'பாரத் டைம்ஸ்' மாதிரி பத்திரிகையாக இருந்து எனக்கும் அலெக்ஸுக்குமான சம்பளம் தலா 50,000 ரூபாயாக இருந்தால் சரிவரும். இப்படி ஓசியில் ஓக்கும் வேலைக்கெல்லாம் சரிப்பட்டு வருமா?

நந்தாவின் பேச்சை நம்பி இதை மணியிடம் வேறு சொல்லியிருந்தேன். அவனும் உற்சாகமாகி, பத்திரிகையை அவன் வைத்திருக்கும் அச்சகத்திலேயே இலவசமாக அடித்துத் தருவதாகச் சொன்னான். இதனால் பத்திரிகையின் தயாரிப்புச் செலவில் நந்தாவுக்கு மாதம் 50,000 ரூ. மிச்சமாகும்.

ஆனால் மணியிடம் ஒரு ஆச்சர்யகரமான மோப்ப சக்தி இருந்தது. போன

ஜென்மத்தில் அவன் நாயாகத்தான் பிறந்திருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். பிரச்னைக்குரிய ஆட்களை மிக எளிதில் இனம் கண்டுகொண்டுவிடுகிறான் மணி.

குமாரசாமி, மணியை ஒருமுறை சந்தித்துவிடுவதற்காக பிரம்மப் பிரயத்தனம் செய்து பார்த்தான். கடைசி வரை மணி அதற்குப் பிடி கொடுக்கவேயில்லை. ஒரு நாள் நான் மணியைப் பார்க்க அவனுடைய அலுவலகம் சென்றபோது குமாரசாமியும் கூடவே வந்தான். வெளியே உட்காரச் சொல்லிவிட்டு உள்ளே போய் மணியிடம் சொன்னேன். அப்போதுகூட குமாரசாமியை மணி சந்திக்கவில்லை.

இதேதான் நந்தாவுக்கும் நடந்தது.

ஆனால் எல்லாவற்றுக்கும் காரணம் நான்தான். நந்தா எதற்காகப் பத்திரிகை ஆரம்பிக்கப்போகிறான் என்பது பற்றிச் சொன்னவுடனேயே நான் உஷாராகியிருக்க வேண்டும்.

பத்திரிகை ஆரம்பித்தால் ஒரு ப்ரெஸ் கார்டு கிடைக்கும். இரவு நேரத்தில் ஒரு விபச்சாரியுடன் பேசிக்கொண்டிருக்கிறோம். 'மேட்டருக்காக' அல்ல. ஒரு பத்திரிகையாளன் என்ற முறையில் அவளுடைய அனுபவத்தைக் கேட்பதற் காக. அப்போது போலீஸ் வந்து கேள்வி கேட்டால் நம்முடைய ப்ரெஸ் கார்டைக் காண்பிக்கலாம் அல்லவா? உலகில் எந்த ஒரு பத்திரிகையும் இப்படி ஒரு உன்னத நோக்கத்துடன் ஆரம்பிக்கப்பட்டிருக்காது என்றே நினைக்கிறேன்.

இப்போது புரிகிறதா நான் ஏன் இப்படி லோல்படுகிறேன் என்று?

***

நான் மீண்டும் மீராவின் நகைகளை அடகு வைத்து சில புத்தகங்கள் வாங்கினேன். எடுத்தவுடனேயே சிந்துபாதில் ஒரு சுவாரசியமான பத்தி ஒன்றைத் துவங்குவதற்கு அப்புத்தகங்கள் தேவைப்பட்டன. திருமந்திரம் தொகுப்பு, சங்க இலக்கியம் தொகுப்பு என்று இப்படி. அப்போதுகூட என் உடன் வந்தது நந்தாதான். நான் கொஞ்ச காலத்திற்கு சுமை தூக்கக்கூடாது என்று மருத்துவர்கள் சொல்லியிருந்தபடியால் அந்தப் புத்தகக் கட்டுகளை கடையிலிருந்து காருக்கு எடுத்து வந்தவன் நந்தாதான். அப்போதுதான் தோன்றியது, எதற்கு நாம் இப்படி ஒரு கோடீஸ்வரன் நடத்தும் பத்திரிகைக்காக நம் பெண்டாட்டி தாலியை அடகு வைத்து புத்தகம் வாங்க வேண்டுமென்று. அதனால், அடுத்த முறை புத்தகம் வாங்க வேண்டிவந்தபோது நந்தாவுக்கு ஃபோன் செய்து வாங்கித் தரச் சொன்னேன். பெரியாரின் எட்டுதொகுதிகள். விலை 800 ரூ. அதோடு முடிந்துபோனது நந்தாவின் நட்பு.

சுத்தமாக என்னோடும் அலெக்ஸோடும் தொடர்பை முறித்துக்கொண்டான் நந்தா. அது பெரியார் புத்தகங்களை வாங்கிக்கொடுக்கச் சொன்னதாலா அல்லது நந்தாவின் வீட்டுக்கு என்னையறியாமலேயே புரோக்கர் வேலை பார்த்ததாலா என்று நிச்சயமாகத் தெரியவில்லை.

## 62. உடல்

‘ஒழுக்கம்’ என்பதை ஒரு நிறுவனத்துடனோ ஒரு கருவியுடனோ இணைத்து அடையாளம் காண்பதென்பது இயலாதது. அது, ஏராளமான துணைக் கருவிகளின் சேர்க்கை, செயல்வகைகள், செயல்முறைகள், நிறைவேற்றப்படும் தன்மைகளின் வேறுபட்ட படிநிலைகள், குறிக்கோள்கள் என அதைச் செயல்படுத்துவதற்கான பலவகை மாதிரிகளைத் தன்னுள் கொண்ட ஒரு விதமான அதிகாரம். அந்த அதிகாரத்தின், அந்தத் தொழில் நுட்பத்தின் ‘இயற்பியல்’ அல்லது ‘வடிவக்கூற்று’. அத்தகைய வேலை பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த ‘சீர்திருத்தப் பணிமனைகள்’ அல்லது ‘திருத்தியல் இல்லங்கள்’ போன்ற ஏதாவதொரு ‘அனுபவம்’ வாய்ந்த நிறுவனத்தினால் செய்யப்படும் அல்லது குறிப்பிட்ட நிலையை அடைய அதை முக்கிய கருவியாகப் பயன்படுத்தும் ஏதாவதொரு நிறுவனத்தினாலோ (பள்ளிகள், மருத்துவமனைகள்) தங்களுடைய சக்தியை வலியுறுத்தவோ மீளமைக்கவோ அதை ஒரு வழியாகக் காணும் ஏற்கெனவே உள்ள அதிகார மையங்களினாலோ அது செயல்படுத்தப்படும். பண்டைக்காலம் தொட்டு முதலில் கல்வி மற்றும் ராணுவம், பிறகு மருத்துவம், அப்புறம் மனநோய், உளவியல் ஆகியவற்றின் புறக் காரணிகளின் சுருக்கமான புனைவுருவுப் படிவமாகி சாதாரண, அசாதாரண ஒழுக்கம் எனும் விஷயத்துக்குத் தோற்றுவாயாகி அல்லது தங்களுடைய உள்ளார்ந்த செயல்பாட்டுக்குரிய கொள்கையான ஒழுக்கத்தையே ஒரு கருவியாக்கும் நிறுவனங்களினாலோ (நெப்போலியன் காலத்திலிருந்து பின்பற்றப்படும் நிர்வாக இயந்திரத்தின் ஒழுங்குமுறை) அல்லது இறுதியாக அது ஒன்றே வேலை என்றில்லா விட்டாலும் சமூகம் முழுவதும் ஒழுங்கை நிலைப்படுத்தும் அரசு இயந்திரத்தின் மூலமாகவோ (காவல்துறை) குடும்பங்களுக்குள் நிலவும் உறவு முறைகள், முக்கியமாக ்பற்றோர் - குழந்தைகள் உறவு முறை எவ்வாறு ‘ஒழுங்கு’ள்ளதாக ஆக்கப்பட்டுள்ளது என்பதை ஒரு நாள் நாம் சுட்டிக்காட்டியாக வேண்டும்.

ஒழுங்குப்படுத்துதல், தண்டனை அளித்தல் :

சிறையின் தோற்றம் : மிஷெல் ஃபூக்கோ.

இரண்டாவதாக, சித்ரவதை என்பது ஒரு அரசியல் கலந்த சடங்கு. குற்றங்கள், சமூகத்தின் மேல்தளத்தில் இருப்பவர்களுக்கு எதிரான தவறுகள் என்றும், மன்னர்களுக்கு விரோதமான தனிப்பட்ட தாக்குதல்கள் என்றும் கருதப்பட்டன. அதீத தண்டனைகள், அத்தகைய தாக்குதல்களுக்கு எதிரான எதிர்வினை புரியவும் பழிதீர்த்துக்கொள்வதற்குமான மன்னரின் உரிமைக்கு அடையாளங்களாக இருந்தன. அது போர் புரிவதற்கான அவருடைய உரிமையின் ஒரு பகுதியைப் போன்றது. வெற்றி ஊர்வலங்கள், போர்ப்பரணிகள், முடிசூட்டு விழாக்கள் போலவே தமது வீழ்ந்துபடாதத் தன்மையைக் குறிக்கும் செயல்களாகவே பொதுக்காட்சியாக்கப்பட்ட தண்டனைகளும் வடிவமைக்கப்பட்டன. ஒருவரின் மீதான தாக்குதலைப் புரிந்தவனுக்கு எதிராகப் பழிதீர்க்கும் விதமாக அவனுக்கு உடல் வேதனை ஏற்படுத்தக்கூடிய தண்டனைகள்

வழங்கப்பட்டன. மக்களை 'அச்சுறுத்தும் ஆயுத'மாகவும் தண்டனைகள் வடிவமைக்கப்பட்டன. ஆகவே, இன்று நிலவும் அமைப்பில் தண்டனைக்கு ஒரு பங்கு இருக்கிறது. அதனை ஒரு நாகரீகமற்ற கடந்த காலத்தின் எச்சம் என்று கொண்டுவிட முடியாது.

தண்டனை நிறைவேற்றச் சடங்கு நுணுக்கமான முறைகளை அனுசரிப்பதற்காகவும் அவ்வப்போது ராணுவத்தையும் தொடர்பு படுத்தியதாகவும் இருப்பது மக்கள் கூட்டத்தைக் கட்டுப்படுத்துவதற்காக மட்டுமல்லாமல், குற்றவாளியால் தொடுக்கப்பட்ட அடையாளப்போர் அடக்கப்பட்டுவிட்டதை அறிவிப்பதற்காகவும்தான். குற்றவாளிக்கு இழைக்கப்படும் தண்டனை சில சமயங்களில் அவன் மரணத்துக்கு அப்பாலும் நீட்டிக்கப்படுவதுண்டு.

-மிஷெல் ஃபூக்கோ பற்றிய குறிப்புகள்:

ஒழுங்குபடுத்துதல்: தண்டனை அளித்தல்: சிறையின் தோற்றம்.

தமிழாக்கம் : திலகவதி

லெனியின் உதவியோடு சில வதைக் கொட்டடிகளைப் பற்றிய தகவல்களைத் திரட்டினேன். அவை:

1. சிகரெட்: சிகரெட்டால் உடல் முழுவதும் சுடுவது. இது ஒரு பொதுவான, சராசரி வதையாகக் கடைபிடிக்கப்படுகிறது. வதையாளர்களுக்கு இஷ்டமான இடங்கள்: ஜனனேந்திரியம், முலை, உதடு, காது.

2. இஸ்திரி: சூடான இஸ்திரிப் பெட்டியால் புட்டம், முதுகு, மார்பு போன்ற பகுதிகளில் இஸ்திரி போடுவது தோலும், சதையும் பிய்ந்து வரும். சதை பொசுங்கி நாறும். காயத்தில் உப்பு மற்றும் மிளகாய்ப் பொடி தூவப்படுகிறது. கொதிக்கும் எண்ணெயும் ஊற்றப்படுகிறது.

3. சூடு: பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கோல்களால் உடலின் பல இடங்களில் போடுவது. தோலும், சதையும் பிய்ந்து வரும். சதை பொசுங்கி நாறும். காயத்தில் உப்பு மற்றும் மிளகாய்ப் பொடி தூவப்படுகிறது. கொதிக்கும் எண்ணெயும் ஊற்றப்படுகிறது.

4. ஷாக்: 300 முதல் 400 வாட் வரை செல்லும் மின் கம்பிகளை உடலில் செலுத்துவது. வதையாளர்களுக்கு இஷ்டமான இடங்கள்: ஜனனேந்திரியம், முலை, உதடு, காது. விட்டு விட்டு ஆறு அல்லது ஏழு மணி நேரத்துக்கு ஷாக் கொடுக்கப்படுகிறது. கைதிகளிடமிருந்து உண்மையை வரவழைப்பதற்காகப் பயன்படுத்தப்படும் பிரபலமான வதை முறை இது. ஷாக் கொடுக்கும்போது உடல் துள்ளும் என்பதால் கைதி செவ்வனே கட்டிப்போடப்படுகிறார். கத்தினால் வாயில் ஷாக் கொடுக்கிறார்கள்.

ஆந்திர முதலமைச்சர் மீது வெடிகுண்டு வீச முயன்று போலீஸிடம் மாட்டிக்கொண்ட நக்ஸல்பாரி பெண் ஒருத்திக்கு ஷாக் கொடுத்த போது தானும் அந்தக் குழுவில் இருந்ததாகக் கூறினார் லெனி. நக்ஸல்பாரியின் ஜனனேந்திரியத்தில் ஷாக் கொடுத்துக்கொண்டிருந்தபோது லெனியின்

அதிகாரிக்கு அவர் வீட்டிலிருந்து தொலைபேசி அழைப்பு வருகிறது. அப்போது அதிகாரி 'ஓகே, டியர். ஓ... சீக்கிரமே வந்துவிடுகிறேன் குஜ்ஜூ. நிச்சயம் வாங்கி வருகிறேன். ஆனால் அதற்கு உன் கால் சைஸ் தெரிய வேண்டுமே? ஓ... ஆறு இஞ்ச்... ஓகே பேபி... சத்தமா? அது ஒன்றுமில்லை... பஸ்ஸில் வெடிகுண்டு வைத்த ஒரு டெரரிஸ்ட் மாட்டிக்கொண்டு விட்டாள். கத்தி ரகளை செய்கிறாள். ஓ... நோ... ஐ யாம் ஃபைன் டார்லிங்...' என்று தொலைபேசியில் பேசிவிட்டு கையிலிருந்த மின்சார ஒயரை அந்த நக்ஸல்பாரியின் ஜனனேந்திரியத்தில் வைக்கிறார். அதிகாரியுடன் பேசிய அவர் மகளுக்கும் அந்த நக்ஸல்பாரியின் வயதுதான் இருக்கும்.

கத்தினால் ஒயரை வாயில் வைக்கிறார்கள் என்று கத்தாமல் இருப்பதற்காக வாயைக் கடித்துக் கடித்து கைதிகளின் வாயிலிருந்து ரத்தம் வருவதுண்டு. ஷாக் உடல் முழுதும் பரவுவதற்காக உடலில் தண்ணீர் கொட்டப்படுகிறது...

5. ப்ரஷ்: டாய்லட் ப்ரஷ்ஷை யோனியில் செருகுவது.

6. மிளகு: மிளகுத் தூளை கண்களிலும், யோனியிலும் தூவுவது.

7. லத்தி: லத்தியை யோனியில் நுழைப்பது.

8. தண்ணீர்: உறைய வைக்கும் குளிர்ந்த நீரை மிகுந்த வேகத்தில் தொடர்ந்து அடிப்பது. மூச்சு விட முடியாமலும், குளிரில் விறைத்தும் பலர் செத்திருப்பார்கள். உடலுறுப்புகள் மரத்துப்போய் அந்த உறுப்பை அகற்றினால்தான் உயிர் பிழைக்க முடியும் என்று ஆனவர்களும் உண்டு.

9. ஐஸ் பெட்டி: ஐஸ் கட்டியின் மேல் படுக்க வைத்தல், மற்றவை நிர். 8இல் உள்ளபடி.

10. சுத்தியல்: சுத்தியலால் பற்களைத் தட்டி உடைத்தல்.

11. கிடுக்கி: கிடுக்கியால் பற்களைப் பிடுங்குதல், சிறு கிடுக்கியால் நகங்களைப் பிடுங்குதல், விரைக் கொட்டைகளை கிடுக்கியால் நசுக்குதல், முலைக் காம்புகளில் கிடுக்கி போடுதல்.

12. ப்ளேடு: துருப்பிடித்த ப்ளேடால் முலைக்காம்பு, யோனிக் கிளிமூக்கு போன்ற பகுதிகளை அறுத்தல்.

13. சூடு: பழுக்கக் காய்ச்சிய இரும்புத் தடியை யோனியில் நுழைத்தல்.

14. ஊசி: உடல் முழுக்கவும் ஊசியால் குத்துதல்.

15. ஆணி நாற்காலி: ஆயிரம் ஆணிகள் பதித்த நாற்காலியில் அமரச் செய்தல்.

16. மெழுகுவர்த்தி: 5 கிலோ எடையுள்ள மெழுகுவர்த்தியை தலையில் வைத்து எரிய விடுதல்

17. ஸ்டேப்ளர்: இது லெனியைப் போன்ற சோனி போலீஸ்காரர்கள் பிரயோகிப்பது. குற்றவாளியின் மென்மையான உறுப்புகளில் ஸ்டேப்பிள் போடுதல்.

18. ஸ்ட்டிச்சிங்: மெல்லிய ஊசி நூலால் கண்ணின் ரெப்பைகளைத் தைப்பது. பெண் கைதியெனில் யோனியையும் இதே போல் தைப்பது. சக தோழர்களின் பெயர்களை வெளியிட மறுக்கும் குற்றவாளியின் வாயைக்

கோணி ஊசியால் தைப்பது.

19. லத்தி: போலீஸ் லத்தியை யோனியில் நுழைத்து பெண் கைதி தானே சுயபோகம் செய்துகொள்ள வேண்டும். மறுத்தால் பத்துப் பன்னிரண்டு பேர் வன்கலவி செய்வர். கைதியைப் படுக்கவைத்து நான்கைந்து பேர் லத்தியால் தொடர்ந்து அடித்தல்.

20. யூரின்: படுக்க வைத்து முகத்தில் பல பேர் மூத்திரம் அடித்தல்.

21. டட்டி: மலத்தைத் தின்னச் செய்தல். இது வட இந்தியாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டது என்பதால் இந்தப் பெயர். இந்தியில் டட்டி என்றால் பீ.

22. சாட்டை: தொடர்ந்து பல பேர் சாட்டையால் விளாசுதல். ஒரு ஆள் சாவதற்கு 500 சாட்டை அடிகள் தேவை.

23. ட்யூப்: விசாரணையில் இருக்கும்போது ஒரு கைதி உண்ணாவிரதம் இருந்தால் கிடுக்கியால் வாய் பிளக்கப்பட்டு ட்யூப் மூலமாக மலக்கரைசல், மிளகாய்க் கரைசல், உப்புக் கரைசல், சோப்பு நீர், மூத்திரம் போன்றவை வாயில் ஊற்றப்படும்; இதே கரைசல்கள் மூக்கின் வழியாக ஊற்றப்படுவதும் உண்டு.

24. கட்டு: மலஜலம் கழிக்கச் செல்ல வழியில்லாமல் இரண்டு வார காலம் ஒரே இடத்தில் கட்டிப்போடுதல்.

25. பலகை: கைதியைப் படுக்கச் செய்து அவர் மேல் நீண்ட பலகையைப் போட்டு பலகையின் இரண்டு பக்கமும் ஆட்கள் ஏறி நிற்பது; அல்லது, ஏற்றத்தின் மூலம் நீர் இறைப்பதுபோல் முன்னும் பின்னுமாக நான்கைந்து பேர் நடப்பது. உடம்பில் எந்த இடத்தை நசுக்க வேண்டுமோ அந்த இடத்தில் பலகை போடப்படும். பொதுவாக மத்தியப் பகுதியில் போடுவது வழக்கம்.

26. தொங்கல் அல்லது பாலஸ்தீனம் அல்லது Strappado: இரண்டு மணிக்கட்டுகளையும் பின்புறமாகக் கட்டி அதில் கயிற்றைக் கட்டி ஆளைத் தொங்கவிடுதல், காலிலும் எடையைக் கட்டித் தொங்கவிடுவதன் மூலம் வலியை அதிகரிக்கலாம். இதனால் தோள் எலும்புகளில் முறிவு ஏற்பட்டு நிரந்தர ஊனம் உண்டாகும். இந்த முறை யூதர்களை வதைப்பதற்கு நாஜிகள் கடைப்பிடித்தது. இப்போது இந்த முறையை பாலஸ்தீன முஸ்லீம்களை வதைப்பதற்கு இஸ்ரேலிய யூதர்கள் கடைப்பிடிக்கிறார்கள். அதனால்தான் இதற்கு பாலஸ்தீனம் என்ற பட்டப்பெயர் கொடுக்கப்பட்டுள்ளது.

27. Butcher: உடல் உறுப்புகளைக் கொஞ்சம் கொஞ்சமாக வெட்டி எடுத்தல்.

28. கயிறு: இரண்டு கால்களிலும் கயிறு கட்டி எதிரெதிர் திசையில் நான்கைந்து பேராக நின்று இழுத்தல்.

29. Dog: நாய்களை விட்டுக் கடிக்கச் செய்தல். இது மற்ற கைதிகளை பயமுறுத்தி அவர்களிடமிருந்து உண்மையை வரவழைப்பதற்காகப் பயன்படுத்தப்படுவது.

30. Drug: மிகத் தீவிரமான கொள்கைப் பிடிப்பாளர்களைப் பைத்தியமாக ஆக்குவதற்கு சில ஊசிகளைத் தொடர்ந்து போடுவது. இந்த வதையின் முடிவில் ஒரு ஆள் முழுப் பைத்தியமாகிவிடுவது நிச்சயம். உலகில் பல

நாடுகளில் ராணுவங்களில் இந்த வதைமுறை பயன்பாட்டில் உள்ளது.

போலீஸ், ராணுவம் மற்றும் சில தனிநபர்களால் கையாளப்படும் மேற்கண்ட வதைமுறைகள் தவிர வேறு வகை வதைமுறைகளும் நடைமுறையில் உள்ளன. அவ்வதை முறைகள் மதக் கலவரங்களின்போது பல்வேறுபட்ட மக்கள் திரளாலும் கையாளப்படுகிறது. உதாரணமாக, கர்ப்பிணிப் பெண்ணின் வயிற்றை அரிவாளால் வெட்டி வயிற்றுக்குள் இருக்கும் சிசுவைத் தீயில் போட்டுக் கொளுத்துவது; இம்மாதிரி வதைமுறைகளை ஃபூக்கோ 'Torture as public spectacle' என்கிறார். சினிமா, தொலைக்காட்சி போன்ற ஊடகங்களில் அமெரிக்கா, இஸ்ரேல் போன்ற நாடுகள் இவ்வகை வதையை உலக மக்களுக்குக் காட்சிப் பொருளாக்கி வருகின்றன. தற்போதைய காட்சியின் பெயர்: லெபனான்.

## 63. Notes from the underground

> என்னைத் தவிர இந்தக் கணம் வேறு எந்த மனித ஜீவியும் இந்தப் பூமியில் இல்லை.
>
> -சில்வியா ப்ளாத்

எப்போது கேட்டாலும் 'இதோ முடித்துவிட்டேன்' என்று ஒரு 'ரெடிமேட்' பதிலை கடந்த ஒரு ஆண்டு காலமாக நான் சொல்லி வருவதால் சலிப்படைந்த அலெக்ஸ், ராஸ லீலாவின் வெளியீட்டு விழா அக்டோபர் 2006 முதல் ஞாயிற்றுக்கிழமை நடக்குமென அறிவித்துவிட்டபடியால் இன்னும் நான் எழுத வேண்டுமெனத் திட்டமிட்டிருந்த விஷயங்களைப் பற்றிய குறிப்புகளை மட்டும் இங்கே தருகிறேன். இதில் கண்ணாயிரம் பெருமாளின் நாற்பது கதைகளும், இத்யாதி என்ற பகுதியில் சாரு நிவேதிதா தனது கவனக்குறைவினால் விட்டுவிட்ட விஷயங்களும் அடங்கும்.

1. ரங்கராஜன் வெறும் ரங்கராஜன் அல்ல. டாக்டர் ரங்கராஜன். பொருளாதாரத்தில் டாக்டர் பட்டம் பெற்றவர். நல்ல மேடைப் பேச்சாளர். ஆழ்வார்கள் பற்றி பல ரசமான புத்தகங்கள் எழுதியிருக்கிறார். அவர் சென்னை ஸர்க்கிள் ஆஃபீஸில் ப்பீயெம்ஜியாக இருந்து சில ஆண்டுகளுக்குப் பிறகு திரும்பவும் சீஃப் ப்பீயெம்ஜியாக அங்கே வந்து சேர்ந்தார். வரதன் அவருடைய ஸ்டெனோ.

ஒரு நாள் ஸர்க்கிள் ஆஃபீஸில் ஏதோ ஒரு மீட்டிங். மாலை ஐந்து மணிக்கு மீட்டிங் முடிகிறது. வரதனுக்கு டிக்டேஷன் கொடுக்க ஆரம்பித்த ரங்கராஜன் ஐந்து மணியிலிருந்து எட்டு மணி வரை ஒரு நிமிடம் கூட விடாமல் தொடர்ந்து நிமிடத்திற்கு 140 அல்லது 150 வார்த்தைகள் வேகத்தில் பொழிந்து தள்ளியிருக்கிறார். ஒரு முழு நோட்டுப்புத்தகமே தீர்ந்துவிட்டது. வியர்த்து விறுவிறுத்துப்போயிருக்கிறான் வரதன்.

'ஒன்பது மணிக்கு வரவேண்டும்' என்று கேட்கிறார் ரங்கராஜன்.

மூன்று மணி நேரம் பேய் வேகத்தில் கொடுத்த டிக்டேஷனை எப்படி ஒரு மணி நேரத்தில் டைப் செய்ய முடியும்? இந்தப் பொது அறிவுகூட

இல்லாதவன்களெல்லாம் எப்படி அதிகாரிகளாக வந்து உட்கார்ந்துகொண்டிருக்கிறான்கள்? ‘11 மணி ஆகும் சார்’ என்று முணுமுணுக்கிறான் வரதன். ‘அதெல்லாம் எனக்குத் தெரியாது. ஒன்பது மணிக்கு வீட்டுக்கு வந்துவிட வேண்டும்.’

சொல்லிவிட்டுக் கிளம்பிவிட்டார் ரங்கராஜன். பிரமை பிடித்தது போல் உட்கார்ந்திருந்த வரதனை, அந்த மீட்டிங்குக்கு வந்திருந்த கல்கத்தா ப்பீயெம்ஜிதான் முதுகில் தட்டிக்கொடுத்து ‘அவர் அப்படித்தான் சொல்வார்; நீங்கள் டிஃபன், காப்பியெல்லாம் சாப்பிட்டு விட்டு சாவகாசமாக டைப் பண்ணுங்கள்’ என்று சொல்லியிருக்கிறார்.

வரதனுக்கு பசியில் மயக்கமே வந்துவிடும் போலிருக்கிறது. வலது கை இற்றுவிடும்போல் வலித்தது. நரம்புகள் துடித்தன. ஒரு டீயை வாங்கிவரச் சொல்லி ஊற்றிக்கொண்டு டைப் செய்ய அமர்கிறான். எவ்வளவு அதிகபட்ச வேகத்தில் அடித்தாலும் எப்படியும் மூன்று மணி நேரம் எடுக்கும் என்று தோன்றியது.

அவன் நினைத்ததைவிட இன்னும் ஒரு மணி நேரம் அதிகம் எடுத்தது.

அதுவரை ரங்கராஜனின் ட்ரைவர் ஏழுமலை அந்த அறையிலேயே அமர்ந்திருந்தார். டைப் செய்த காகிதங்களை கமாண்டர் இன் சீஃப் ரோட்டிலுள்ள சீஃபின் வீட்டில் கொடுத்துவிட்டு பிறகுதான் வீட்டுக்குக் கிளம்ப வேண்டும்.

ஏழுமலையும், வரதனும் ரங்கராஜனின் பங்களாவுக்கு வந்தபோது இரவு மணி 12.30.

அழைப்பு மணியை அழுத்தப் போன வரதனை ஓடி வந்து தடுத்தார் ஏழுமலை. இரவு எட்டு மணிக்கு மேல் வந்தால் அழைப்பு மணியை அழுத்தக்கூடாது என்று உத்தரவு. கதவில் லேசாக விரல் நகத்தால் தட்டினார் ஏழுமலை. இரண்டு முறை அப்படித் தட்டிய பிறகு, பக்கவாட்டு ஜன்னலைத் திறந்து இரும்புக் கம்பிகளின் வழியே முகத்தைக் காட்டினார் ப்பீயெம்ஜி. குறைந்த சத்தத்தில் BBC சேனல் ஓடிக்கொண்டிருந்தது ஜன்னல் வழியே தெரிந்தது. காகிதக் கற்றையை வாங்கிக்கொண்ட ரங்கராஜன் மிகவும் இறுகிய முகத்துடன் ‘சரி, நீங்கள் போகலாம்’ என்ற பாவனையில் தலையாட்டினார். வரதனுக்கு அடையாறிலுள்ள தன் வீட்டுக்கு எப்படித் திரும்புவது என்ற குழப்பம். இவ்வளவு நள்ளிரவில் இரு சக்கர வாகனத்தில் செல்வதெல்லாம் அவனுக்குப் பழக்கமில்லை. சீஃப் தனது அலுவலக காரில் விட்டுவிடும்படிச் சொல்லுவார் என்று எதிர்பார்த்தான். அவரோ ஜன்னலை மூடிக்கொண்டிருந்தார். ஏழுமலையின் வீடு ராயப்பேட்டையில் இருக்கிறது. சீஃபின் காரில் அலுவலகம் சென்று காரை அங்கேயே விட்டுவிட்டு தன் சைக்கிளை எடுத்துக்கொண்டு வீட்டுக்குச் செல்வார். அதுதான் தினசரி வழக்கம். என்ன செய்வதென்று புரியாமல் வரதன் திரும்ப எத்தனித்தபோது ‘சார், ஒரு நிமிஷம்’ என்று சீஃபை அழைத்தார் ஏழுமலை. ‘என்னப்பா?’ ‘சார், இவ்வளவு நேரத்துக்கப்புறம் வரதன் சார் டூவீலர்ல போக மாட்டார். நான் காரிலேயே கொண்டுபோய் அவர் வீட்டில் விட்டுவிடுகிறேன்.’ இதைச் சற்றும் எதிர்பாக்காத சீஃப் ப்பீயெம்ஜி ஒருகணம் யோசித்து ‘அதெல்லாம் பழக்கமில்லையே? சரி, என்னமோ பண்ணு’ என்று சொல்லிவிட்டு ஜன்னலை அடைத்தார். வரதனுக்கு அழுகை வந்துவிட்டது. வாழ்க்கையில் முதல்முதலாக ஒரு

அந்நிய மனிதருக்கு எதிரில் அழுதான். ‘அழாதீங்க சாமி... ஒவ்வொரு ஆஃபீசர் ஒவ்வொரு மாதிரி... வாங்க போகலாம்’ என்றார் ஏழுமலை. அன்றைக்கு ரங்கராஜனை மிக மோசமாக சபித்துவிட்டான் வரதன். ஏனென்றால் அய்யய்ட்டீயில் படிக்கும் ரங்கராஜன் மகளுக்காகக் கத்தைகத்தையாக ப்ராஜக்ட் ரிப்போர்ட்டுகளை டைப் செய்து கொடுத்திருக்கிறான் அவன். மகளின் ஐநூறு பக்க ப்ராஜக்ட்டைக் கொடுத்து இரண்டே நாளில் வேண்டும் என்பார் ரங்கராஜன். காலை ஏழு மணிக்கு ஆஃபீஸ் வந்து இரவு பத்து வரை டைப் செய்து மூன்று நாட்களில் முடித்துக் கொடுப்பான் வரதன். இப்படி ஒன்றா இரண்டா? ஓராயிரம் வேலைகள். இன்னமும் ரங்கராஜன் வீட்டுப் பெண்களின் பேண்ட்டீஸைத்தான் துவைத்துப்போடவில்லை. அதைத் தவிர மற்ற அத்தனை வேலைகளையும் பார்த்தாயிற்று. இன்று இத்தனை ராத்திரியில் டூ வீலரில் போ என்கிறான். இவனைப் போன்ற ஆசாமிகளுக்கெல்லாம் சீக்கிரம் சாவு வராதா? இதேபோல் ஸர்க்கிள் ஆஃபீசில் பல பேர் ரங்கராஜனின் அகால மரணத்துக்காக கடவுளிடம் பிரார்த்தனை செய்து வந்தார்கள்.

தமிழ்ச் செல்வி என்று குமாஸ்தா. பார்க் டவுன் போஸ்ட்டாஃபீஸில் வேலை. அந்தப் பெண் ஊழியர் மீது ரங்கராஜனுக்கு என்ன கோபம் என்று தெரியவில்லை. ஜோலார்பேட்டை ஆரெம்மெஸ்ஸுக்கு அதுவும் நைட் ஷிஃப்டுக்கு மாற்றினார். மாற்றியது மட்டுமில்லை. அன்றைய தினமே அந்தப் பெண் ஜோலார்பேட்டையில் போய் ஜாய்ன் பண்ண வேண்டும் என்று வாய்மொழி உத்தரவும் போட்டார். அது மட்டுமல்ல, மாலை நான்கு மணிக்கு ஃபோன் செய்தும் கேட்டார். அதற்கு மேலும் அந்தப் பெண்ணால் ஒன்றும் செய்ய முடியவில்லை. ஜோலார்பேட்டையில் போய் ஜாய்ன் பண்ணிவிட்டு மூன்று மாதம் விடுப்பில் போய்விட்டார் தமிழ்ச்செல்வி. விடுப்பை அனுமதிக்காதீர்கள்; அனுமதியின்றி விடுப்பில் சென்றதற்காக சஸ்பெண்ட் செய்யுங்கள் என்று வாய்மொழி உத்தரவிட்டார் சீஃப் ப்பீயெம்ஜி. ஒரு சீஃப் ப்பீயெம்ஜி என்பவர் தமிழ்நாடு அஞ்சல்துறை முழுவதற்கும் பொறுப்பானவர். எத்தனையோ வேலைகள் இருக்கும். அவ்வளவு வேலையையும் விட்டுவிட்டு தமிழ்ச்செல்வியைத் துரத்திக்கொண்டிருந்தார் சீஃப். அப்போதுதான் அதில் குறுக்கிட்டார் மகாதேவன் என்ற யூனியன் தலைவர். யூனியன் தலைவர்களுக்கு இந்தியாவில் அவ்வளவு நல்ல பெயர் இல்லை. ஆனாலும் மகாதேவன் மிகவும் வித்தியாசமானவர். தைரியமானவர். ஊழலின் நிழல்கூட படாதவர். ஒருமுறை கருணை அடிப்படையிலான நியமனங்கள் பற்றிய ஒரு கூட்டம் நடந்துகொண்டிருந்தது. நியமன உத்தரவைப் போட வேண்டிய அஞ்சல் துறை மத்தியமந்திரியும் கூட்டத்தில் இருந்தார். நியமன உத்தரவு போடப்படாமல் வருடக்கணக்கில் இழுத்துக்கொண்டு போய்க்கொண்டிருந்தது. அப்போது மைக்கைப் பிடித்த மகாதேவன் மத்திய மந்திரியைப் பார்த்து ‘சார், Compassionate groundஇல் நீங்கள் ஒரே மாதத்தில் வேலை வாங்கிவிட்டீர்கள். அதேபோல் உங்கள் ஊழியர்கள் மீதும் கருணை காட்டுங்கள்’ என்றார். அதாவது அந்த மத்திய மந்திரியின் தந்தையும் மத்திய மந்திரியாக இருந்தவர். அவர் மரணமடையவே அந்தப் பதவி அவருடைய புதல்வரான இவருக்கு வழங்கப்பட்டது. அதைத்தான் சுட்டிக்காட்டினார் மகாதேவன். மற்றொரு சமயம் அருளானந்தம் என்று ஒரு ப்பீயெம்ஜி இருந்தார். அருளானந்தம் பெயருக்கேற்ற குணநலன்கள் கொண்டவர். இந்தியாவின் முக்கியமான பறவை ஆய்வாளர்களில்

ஒருவர். எல்லோருக்கும் நன்மையே நினைக்கும் அவருடைய தலைமையிலும் அஞ்சல் துறையில் ஏகப்பட்ட குழப்பங்கள். காரணம், அவர் தாமஸ் வர்கீஸ், பரமானந்த் போன்றவர்களை, அவர்கள் இளைஞர்கள் என்பதால் முழுமையாக நம்பினார். அப்போது அருளானந்தத்தை ஒரு மீட்டிங்கில் பிடித்த மகாதேவன் 'சார், நீங்கள் காக்காய் குருவி மீதெல்லாம் காட்டுகிற தயவை மனிதர்களாகிய எங்கள் மீதும் கொஞ்சம் காட்டுங்கள்' என்றார். அந்த மகாதேவன்தான் தமிழ்ச்செல்வி விஷயத்தில் ரங்கராஜனைப் பார்க்க ஸர்க்கிள் ஆ.ஃபீஸ் வந்தார். முதலில் அனுப்பிய துண்டுச் சீட்டில் பார்க்க முடியாது என்று எழுதி அனுப்பிய ரங்கராஜன், மகாதேவன் அனுப்பிய இரண்டாவது சீட்டைப் பார்த்துவிட்டு உடனடியாக அவரை உள்ளே கூப்பிட்டார். வெளியூர் போக்குவரத்துக்கு ஆகாய விமானம், தங்குவதற்கு பங்களா, ஆ.ஃபீஸ் வர கார், அதை ஓட்ட டிரைவர் இவ்வளவு கொடுத்தும் காஷ்மீரில் போஸ்டிங் போட்டபோது ஒரு நாள்கூட அங்கே வேலை செய்ய மாட்டேன் என்று மந்திரியின் காலைப்பிடித்து தமிழ்நாட்டுக்கு ஓடி வந்த நீங்கள் ஒருபெண் ஊழியரை சென்னையிலிருந்து ஜோலார் பேட்டைக்கு எப்படி மாற்றலாம் என்று மகாதேவன் மிரட்டிய பிறகே தமிழ்ச்செல்விக்கு மீண்டும் சென்னை போஸ்டிங் கிடைத்தது.

2. ஒருமுறை கிருஷ்ணமூர்த்தி என்ற ப்பீயெம்ஜியிடம் வேலை பார்த்தான் வரதன். கிருஷ்ணமூர்த்தி ஒரு ஹோமோ என்பதாக ஒரு வதந்தி ஸர்க்கிள் முழுவதும் பரவியிருந்தது. அதனால் ஒருவித கிலியுடனே அவரிடம் வேலை பார்த்து வந்தான் வரதன். முக்கியமாக, ஸ்டெனோ வேலையில் அதிகாரியுடனே இன்ஸ்பெக்ஷனுக்காக அடிக்கடி வெளியூர் செல்ல வேண்டி யிருக்கும். அதிகாரியுடனேயே ஒரே அறையில் தங்க வேண்டியிருக்கும். (பெண் ஸ்டெனோக்களை இப்படி வெளியூர் இன்ஸ்பெக்ஷனுக்கு உடன் அழைத்துச் செல்லும் வழக்கம் இன்னும் நடைமுறையில் வரவில்லை.) ஒருமுறை கிருஷ்ணமூர்த்தியுடன் வேலூருக்கு இன்ஸ்பெக்ஷன் சென்றிருந்தபோது அவருடனேயே வரதன் ஒரே அறையில் தங்க நேர்ந்தது. ஒன்றும் பிரச்சினையெல்லாம் பண்ணவில்லை. ஆனால் வரதன் படுக்கையில் படுத்த கணம் அவன் தூங்கிவிட்டானா இல்லையா என்பது பற்றிக்கூட கவலைப்படாமல் தன் ஆடைகளைக் கழற்றி நிர்வாணமான கிருஷ்ணமூர்த்தி சுய போகத்தில் ஈடுபட ஆரம்பித்தார்.

3. தபால்துறையில் பரமானந்த் அய்ப்பீயெஸ் அளவுக்கு என்னைச் சித்ரவதை செய்தது வேறு யாரும் இல்லை என்று தோன்றுகிறது. காரணம், அவர் அய்ப்பீயெஸ் பயிற்சி முடித்த கையோடு இங்கே வேலைக்கு வந்திருக்கிறார் என்பதுதான். இந்த இலாகாவில் முப்பது வருஷம் சர்வீஸ் போட்டவனைப் புரிந்துகொள்ளலாம்; இதோ ஒரு கல்லூரி மாணவனைப் போல் தோற்றம் தரும் இந்த மனநோயாளியை எப்படிப் புரிந்துகொள்வது? பரமானந்திடம் வரதனுக்கு ஏற்பட்ட அனுபவங்களில் மாதிரிக்கு ஒன்று:

பரமானந்த் பற்றி ஏற்கெனவே நான் சொல்லியிருந்ததால் வரதன் அவரிடம் கூடுதல் ஜாக்கிரதையாகவே இருந்திருக்கிறான். வரதன் சீ.ஃப் ப்பீயெம்ஜியின் ஸ்டெனோ. பரமானந்த் ஏப்பீயெம்ஜி (ஸ்டா.ஃப்). ஏப்பியெம்ஜி (ஸ்டா.ஃப்) என்றால் அத்தனை ஊழியர்களின் குடுமியும் அவர் கையில் என்று அர்த்தம். சம்பளம் போடுவது, லீவ் கொடுப்பது என்பது

தொடங்கி ஒரு அரசு ஊழியரின் அத்தனை விவகாரங்களையும் கவனிப்பது அவர்தான். ஆனால் அவர்கூட சீ∴ப் பபீயெம்ஜியின் ஸ்டெனோ என்றால் சற்று பயப்பட வேண்டும்தானே? அதுதான் பரமானந்திடம் நடக்காது. ஏனென்றால் சீ∴புக்கு அப்பேர்ப்பட்ட ஜால்ரா பரமானந்த். அதனால் சீ∴பின் ஸ்டெனோ பற்றி அவருக்குக் கவலையேயில்லை.

ஒருநாள் வரதன் தன் குடும்பத்துடன் திருவண்ணாமலை சென்றிருக்கிறான். முன்கூட்டியே பரமானந்தைப் பார்த்து மூன்று நாள் விடுப்புக்கான விண்ணப்பத்தையும் கொடுத்திருக்கிறான். அதோடு அந்த விஷயம் முடிந்தது. அந்த மாதம் சம்பள தினத்தன்று வழக்கம்போல் கேஷியரிடம் சென்றிருக்கிறான் வரதன். கேஷியர் வரதனுக்குச் சம்பளம் போடவில்லை என்று சொல்லியிருக்கிறார். ஒரு பத்து பேருக்கு முன்னால் இந்த அவமானம். யோசித்துப் பார்த்த வரதனுக்கு லேசாகப் புரிந்திருக்கிறது. அந்த மூன்று நாள் லீவில்தான் ஏதோ பிரச்னையென்று. ஸ்டா∴ப் பிரிவுக்குச் சென்று விசாரித்ததில் விடுப்பு அனுமதிக்கப்படவில்லை என்று தெரிந்தது. உடனே பரமானந்திடம் வந்து விஷயத்தைச் சொல்லி கேட்டிருக்கிறான்.

‘அலுவலக தஸ்தாவேஜூ ஒன்றை அந்த ஸ்டா∴ப் பிரிவு குமாஸ்தா உங்களிடம் எப்படிக் காண்பிக்கலாம்?’ என்று கேட்ட பரமானந்த் அந்த குமாஸ்தாவை உடனே வேறொரு கோட்டத்துக்கு ட்ரான்ஸ்∴பர் செய்தார். தாம்பரத்தில் வசிக்கும் ஒருவரைப் பெரம்பூருக்கு மாற்றினால் அந்த ஊழியரின் கதி என்ன என்பதை யோசித்துக்கொள்ளுங்கள்.

4. இந்திராணியாவது ஒரு ப்ரமோட்டி. குமாஸ்தாவாக இருந்து, இன்ஸ்பெக்டர் பரீட்சை தேறி, இன்ஸ்பெக்டராக பணியாற்றி, ஏயெஸ்ப்பியாகி பிறகு சூப்ரண்ட்டானவர். அவரே அந்த ஆட்டம் ஆடினால், ஒரு நேரடி பெண் அய்ப்பீயெஸ் - அதுவும் 30 வயதுவரை திருமணமாகாதவர் - என்ன ஆட்டம் ஆடுவார்? அவர் பெயர் வத்சலா. வந்து சூப்ரண்ட்டாகப் பதவியேற்ற முதல் நாளே சாந்திக்கு சஸ்பென்ஷன் உத்தரவை நீட்டினார் வத்சலா. சாந்தி ஏற்கெனவே தாம்பரத்திலிருந்து அரக்கோணம் கோட்டத்துக்கு மாற்றப்பட்டு, நான்காண்டு காலம் தினமும் தாம்பரத்திலிருந்து அரக்கோணம் வரை சென்று லோல்பட்டு இப்போதுதான் இந்த சென்னை நகரக் கோட்டத்துக்கு வந்திருக்கிறார். அவருடைய கணவரின் தாயார் இறந்து விட்டதால் திடீரென்று கும்பகோணம் செல்லும்படி ஆகியிருக்கிறது. அது ஒரு சனிக்கிழமை என்பதால் முன்கூட்டியே வத்சலாவிடம் விண்ணப்பம் எழுதிக் கொடுத்து அனுமதி வாங்க முடியவில்லை. ஆனால் தொலைபேசி மூலம் தொடர்புகொண்டு விஷயத்தைச் சொல்லியிருக்கிறார் சாந்தி. ‘அதெல்லாம் எனக்குத் தெரியாது. திங்கட்கிழமை நீங்கள் அலுவலகத்தில் இருக்க வேண்டும்’ என்று சொல்லிவிட்டு ∴போனை வைத்துவிட்டார் வத்சலா. வத்சலாவுக்கு பயந்துகொண்டு மாமியாரின் மரணத்துக்குப் போகாமல் இருக்க முடியுமா? சாந்தி வியாழக்கிழமையன்று அலுவலகம் வந்தபோது அவர் அலுவலகத்தில் அனுமதிக்கப்படவில்லை. கையில் சஸ்பென்ஷன் உத்தரவே தரப்பட்டது.

வத்சலாவின் சித்தி விஜயா. விஜயா தபால் துறையில் ஒரு குமாஸ்தா. அவருடைய போதாத காலம் அவர் வேலை பார்க்கும் போஸ்ட்டா∴பீஸ் வத்சலாவின் அதிகாரத்திற்குள் இருந்தது. வத்சலாவின் வீடும்,

விஜயாவின் வீடும் இருப்பது பல்லாவரத்தில், ஒரே தெருவில். ஒரு நாள் மின்சார ரயிலில் விஜயாவைக் காலை ஒன்பதே முக்கால் மணி அளவில் பார்த்துவிட்டார் வத்சலா. ஒன்பதே கால் ஆஃபீஸுக்கு ஒன்பதே முக்காலுக்கு ரயிலில் இருப்பதென்றால் பத்தரைக்குத்தான் போஸ்ட்டாஃபீஸ் போக முடியும் என்று கணக்குப் போட்டார். போஸ்ட்டாஃபீஸைக் கூப்பிட்டார் வத்சலா. விஜயா இல்லை. அன்றைக்கு விஜயா அரை மணி நேரம் தாமதம். Diasnon கொடுக்கப்பட்டது.

வத்சலாவின் தகப்பனாரே நேரடியாக வத்சலாவின் அலுவலகத்துக்கு வந்து தனது மைத்துனிக்காக வாதாடினார். ஆஃபீஸ் வேறு, வீடு வேறு என்று கூறித் துரத்திவிட்டதாகக் கேள்வி.

வத்சலாவுக்கு தினம் ஒரு டைஸ்-நான் அல்லது சஸ்பென்ஷன் உத்தரவில் கையெழுத்துப் போடவேண்டும். இல்லாவிட்டால் கை அரிக்கும். ஒரு நாள் அவருடைய பார்வை ஒரு போஸ்ட்மேனின் மீது விழுந்தது. அந்த ஆள் செய்த தவறு, வத்சலாவைப் பார்த்தபோது சல்யூட் அடிக்கவில்லை. (அதற்குக் காரணம், வத்சலா மிக இறுக்கமான சுடிதார் போட்டுக்கொண்டு கல்லூரி மாணவிபோல் தோற்றமளிப்பார். அதனால் அந்த போஸ்ட்மேனுக்கு முதலில் இது தன்னுடைய சூப்ரண்ட் என்றே தெரியவில்லை.)

ஒருநாள் வத்சலா தன்னுடைய காரில் எங்கோ சென்று கொண்டிருந்தபோது அந்த போஸ்ட்மேனைப் பார்த்துவிட்டார். சாலையின் இடதுபுறச் சந்தில் போஸ்ட்மேன் சைக்கிளில் திரும்பியது தன்னைப் பார்த்துவிட்டுத்தான் என்று தோன்றியது வத்சலாவுக்கு. மேலும், இந்தியா உருப்படாமல் போவது இந்த மாதிரி ஆட்களால்தான் என்ற எண்ணம் தோன்ற, காரை சாலையின் ஓரத்தில் நிறுத்திவிட்டு, அப்படியே சாலையை இரண்டாகப் பிரிக்கும் தடுப்புக் கம்பியை ஒரு எம்பு எம்பிக் குதித்துத் தாண்டி (இதற்கெல்லாம் சுடிதார்தான் எவ்வளவு வசதியாக இருக்கிறது; மேலும், இதுபோன்ற தாண்டல், குதித்தல் எல்லாம் அய்யேயெஸ் பயிற்சியில் உண்டு.) சாலையின் அந்தப் பக்கம் வந்து சந்துக்குள் நுழையச் சென்றவரைப் பிடித்து விட்டார் ட்ராஃபிக் கான்ஸ்டபிள்.

'நான் ஒரு அய்ப்பீயெஸ்' என்று வத்சலா சொல்ல, அதைக் கடுகளவு கூட நம்பவில்லை கான்ஸ்டபிள். அவரைப் பொறுத்த வரை அய்ப்பீயெஸ் என்றால் இண்டியன் போலீஸ் சர்வீஸ். இண்டியன் போஸ்டல் சர்வீஸுக்கும் அய்ப்பீயெஸ் என்றுதான் சொல்வர் என்பது அவருக்குத் தெரியாது. மேலும், ஒரு அய்ப்பீயெஸ் அதிகாரி இப்படியெல்லாம் தடுப்புக் கம்பியைத் தாண்டிக் குதிக்க மாட்டார். 'யார் கண்டது, இந்தப் பெண் டெரரிஸ்டாகவும் இருக்கலாம்' என்ற எண்ணத்தில் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துக்கொண்டு போய்விட்டார் ட்ராஃபிக் கான்ஸ்டபிள். பிறகு வத்சலா யாரை பிடிக்கச் சென்றாரோ அதே போஸ்ட்மேன்தான் வந்து ஸ்டேஷனில் 'இவர் எங்கள் அதிகாரி' என்று சொன்ன பிறகு விட்டிருக்கிறார்கள்.

5. இந்திராணி வாரம் ஒரு மீட்டிங் கூட்டுவார். ஹாலில் நடு நாயகமாக அமரும்போது அவர் தன்னை ஒரு பிரதம மந்திரியென்றே நினைத்துக்கொள்கிறார் என்று தோன்றும். குமாஸ்தாக்கள் ஒவ்வொருவராக எழுந்து நின்று அஞ்சல் பொருள் கிடங்கை இன்னும்

எப்படி மேம்படுத்துவது என்பதற்கான ஆலோசனைகளை வழங்க வேண்டும். இந்தியாவின் வறுமையை ஒழிப்பது பற்றி அரசியல்வாதிகள் தில்லியின் இந்தியா கேட் புல்வெளிகளில் அமர்ந்து ஆலோசிப்பதற்கும் இந்தக் கூட்டத்திற்கும் எந்த வித்தியாசமும் இருக்காது. குடியரசு தினம் வருவதை ஒட்டி அஞ்சல் பொருள் கிடங்கிலிருந்த கொடிக் கம்பத்தைச் சுற்றி ஒரு சிமெண்ட் மேடை கட்டப்பட்டது. அங்கே நின்றுதான் குடியரசு தின உரையை நிகழ்த்தினார் இந்திராணி. நான் போகவில்லை. வாராந்திரக் கூட்டத்தில் நான் மட்டும்தான் வாயையே திறக்காமல் அமர்ந்திருப்பேன். ‘என்ன பெருமாள், பேசுங்கள். First you stand up and say something. நீங்கள் ஒரு எழுத்தாளர். நீங்கள் பேசாவிட்டால் எப்படி?’ என்பார் இந்திராணி.

எழுந்து நின்று ‘எனக்கு சபையில் பேச வராது மேடம்’ என்று சொல்லிவிட்டு அமர்ந்துவிடுவேன். ‘போடி நாறக் கூதி, வல்லார ஓழி...’

இப்படி நடக்கும் மீட்டிங்குகளில் ஒவ்வொருவரும் பேசியதை நான் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து ‘மினிட்ஸ்’ தயார் செய்ய வேண்டும். இதுதான் ஒரு ஸ்டெனோவின் வேலை.

ஸர்க்கிள் ஆஃபீஸில் நடக்கும் சில மீட்டிங்குகள் குறிப்பிடத் தக்கவை.

பென்ஷன் அதாலத் மீட்டிங் என்ற ஒன்று. பென்ஷன் வாங்குபவர் களின் குறை தீர்க்கும் நாள். OLIC மீட்டிங். Official Language Improvement Committee மீட்டிங். கடந்த மூன்று மாதங்களாக இந்தி மொழி தபால் துறையில் எப்படியெல்லாம் முன்னேற்றப் பட்டிருக்கிறது என்பதை ஆராய்ந்து புள்ளி விபரங்களோடு தில்லிக்கு அனுப்பும் மீட்டிங்.

இப்படி வாரத்துக்கு ஒரு மீட்டிங் நடக்கும். இதற்கென்று மிகப் பெரிய மீட்டிங் ஹால் ஒன்று உண்டு. பார்ப்பதற்கு கிட்டத்தட்ட ஒரு வட்ட மேஜை மாநாட்டுக்குரிய பந்தா அவ்வளவும் அங்கே காணப்படும்.

ஒரு மீட்டிங் நடக்கிறபோதெல்லாம் அந்த மீட்டிங் எந்தத் துறை குறித்து நடக்கிறதோ அந்தத் துறையைச் சேர்ந்த sincere and dedicated குமாஸ்தாக்களின் குண்டி கிழிந்துவிடும் என்று பொருள். குறைந்த பட்சம் இரண்டு வாரத்திற்கு மீட்டிங்குக்கு வேண்டிய தகவல்களையும் புள்ளி விபரங்களையும் தேடித் தருவித்துச் சேகரிப்பதற்குள் சிலருக்கு மாரடைப்பே வந்திருக்கிறது. அதிகப்படுத்திச் சொல்லவில்லை. நீங்களே யோசித்துப் பார்க்கலாம். தமிழ்நாட்டில் எத்தனை தபால் நிலையங்கள் உள்ளன? அவையெல்லாவற்றிலிருந்தும் தகவல்கள் ஒவ்வொரு கோட்ட அலுவலகத்துக்கும் போய், ஒவ்வொரு கோட்ட அலுவலகமும் அத்தகவல்களை ஒருங்கிணைத்து சர்க்கிஸ் ஆஃபீஸுக்கு அனுப்ப வேண்டும். சம்பந்தப்பட்ட குமாஸ்தா பிரசவ விடுப்பிலோ அல்லது மருத்துவ விடுப்பிலோ சென்றிருப்பார். அதனால் ஹெட் க்ளார்க்கே அவருடைய கோப்புகளை எடுத்து ஆராய்ந்து புள்ளி விபரங்களை ஸர்க்கிள் ஆஃபீஸுக்கு அனுப்ப வேண்டும்.

இவ்வளவு தகவல்களையும் ஸர்க்கிள் குமாஸ்தா நுணுகி ஆராய்ந்து இறுதி அறிக்கையைத் தயாரிக்க வேண்டும்.

இதன் அடிப்படையிலேயே சம்பந்தப்பட்ட மீட்டிங் நடந்தேறும்.

இதற்குப் பிறகுதான் தொடங்கும் ஸ்டெனோவைக் காயடிக்கும் வேலை. சைக்கிள் ஓட்டிக்கொண்டிருப்பவனிடம் போய் F1 ரேஸ் காரைக் கொடுத்து

ஓட்டு என்றால் எப்படி ஓட்டுவான்? அந்த வேலைதான் நடக்கும். அங்கே, ஒரு நிமிடத்திற்கு 80 வார்த்தை என்ற டிக்டேஷன் தேர்வில் தேர்ச்சி பெற்று வேலைக்கு வந்த அந்த ஸ்டெனோக்கள் நிமிடத்திற்கு 240 வார்த்தைகள் என்ற டிக்டேஷனில் தேர்வாகி பாராளுமன்றத்தில் மந்திரிகளுக்கு அருகே அமர்ந்திருக்கும் ஸ்டெனோவுக்கு இணை யாகக் குறிப்பெடுக்க முடியுமா? அதிலும் அதிகாரி பீகாரைச் சேர்ந்தவராக இருந்தால் S வரும் இடங்களிலெல்லாம் J போட்டுப் பேசுவார். இட் வாஜ் டிஜைடட் பை மை ப்ரெடிஜெஜார் என்று அவர் ஆரம்பிக்கும்போதே எனக்குக் கைகால்கள் உதறலெடுக்க ஆரம்பித்துவிடும். பஞ்சாபைச் சேர்ந்தவராக இருந்தால் ‘ஷன்’ வரும் இடங்களையெல்லாம் ‘யன்’ என்று உச்சரிப்பார். இப்படி: ஆன் த லாஸ்ட் ஒக்கேயன்.

இதையெல்லாம் உதாரணத்திற்காகத்தான் ஒற்றை வரியில் சொல்கிறேன். மொத்தமாகப் பார்த்தால் அந்த இரண்டு மணி நேர மீட்டிங்கின் முடிவில் என்னுடைய நோட்டுப்புத்தகத்தில் ஒரு பக்கம் குறிப்பெடுக்கப்பட்டிருந்தாலே அதிகம். இதை வைத்துக் கொண்டு 20 பக்க ரிப்போர்ட்டைத் தயார் பண்ண வேண்டுமென்றால் என்ன செய்வது? மந்திரத்தால் மாங்காய் வரவழைக்க முடியுமா என்ன? 15 நாள் மருத்துவ விடுப்பு போட்டுவிட்டுத் தலைமறைவாகிவிடுவேன். மருத்துவ விடுப்பு இல்லாவிட்டால் இருக்கவே இருக்கிறது Loss of pay விடுப்பு. ஆனால் சில சம்ச்சாகிரி ஸ்டெனோக்கள் இருக்கிறார்கள். அவர்கள் அதிகாரிகளுடனேயே இழைந்துகொண்டு, அவர்களை நிழல் போல் தொடர்ந்து அவர்கள் காலால் இட்ட வேலையைத் தலையால் செய்து, அவர்கள் ஓய்வாக இருக்கும் நேரத்தில் அவர்களைக் கொண்டே Minutes of the meeting-ஐ டிக்டேஷன் எடுத்து டைப் செய்து கொடுத்துவிடுவார்கள். வேறு சில ‘கொட்டை போட்ட’ சீனியர் தலைகளாக இருந்தால், அவை இந்த மீட்டிங் என்ற கில்லட்டினில் ஜுனியர்களை பலி கொடுத்துவிட்டு தாங்கள் தப்பித்துக்கொண்டுவிடும். ஒருவேளை அது சாத்தியப்படாவிட்டால் தம் அனுபவ ஒளியின் துணை கொண்டு தாமாக அந்த Minutesஐத் தயாரித்துக் கொடுத்துவிடும்.

இன்னொரு கோஷ்டி இருக்கிறது. முந்திரிப் பருப்பு கோஷ்டி... மீட்டிங்கில் கொடுக்கப்படும் வறுத்த முந்திரிக்கு ஆசைப்பட்டு, மீட்டிங் என்று தெரிந்தவுடனேயே முன்னால் வந்து நிற்கும். அடப்பாவிகளா, தேவடியாள் வேலைக்கும் ஒரு கூலி இல்லையா, பத்து பேர் க்யூவில் நின்று புணர்ந்துவிட்டு கூலியாக சிங்கிள் டீ வாங்கித் தருகிறேன் என்று சொல்கிற கதையாக அல்லவா இருக்கிறது என்று நினைத்துக்கொள்வேன்.

ஆனால் கடைசியில் என்ன ஆகும் என்றால், இந்த மீட்டிங்குக்காகத் தயாரிக்கப்பட்ட அத்தனை நூறு காகிதங்களும் ஒரு கட்டாகக் கட்டப்பட்டு அந்த ஸர்க்கிள் ஆ.ஃபீஸிலுள்ள பல நூறு அலமாரிகளுக்குள் ஐக்கியமாகிவிடும். வேறோர் வகை மீட்டிங் உள்ளது. அதன் பெயர் Heads of Circle Conference. ஒவ்வொரு மாநிலத்திலும் உள்ள ஸர்க்கிள்களின் தலைமையதிகாரிகள் ஒரு மாநிலத் தலைநகரில் கூடுவர். இந்தத் தலைகள் அவ்வளவும் இன்னும் ஓரிரு மாதங்களில் பதவி ஓய்வு பெற இருப்பவையாக இருக்கும். பதவி ஓய்வு பெற்று வீட்டுக்குப் போவதற்கு முன் அரசாங்கத்தை எவ்வளவு தூரம் மொட்டையடிக்கலாம் என்பதுதான் இந்தச் சந்திப்பின் லட்சியம்.

அதிகாரிகள் ஐந்து நட்சத்திர விடுதிகளில்தான் தங்க வைக்கப்படுவர். வர போக எல்லாம் விமானம். ஒரு மத்திய மந்திரி தன்னுடைய 18 குழந்தைகளுடன் அரசாங்கச் செலவில் உல்லாசப் பயணம் செல்வதுபோல் இந்த அதிகாரிகளும் குடும்பத்தோடு வந்துவிடுவர்.

6. அஞ்சல் பொருள் கிடங்கு மேலாளர் சீனிவாசன் சகல குமாஸ்தாக்களையும், கடைநிலை ஊழியர்களையும் கண்ணில் விரலைவிட்டு ஆட்டிக்கொண்டிருந்த காலகட்டத்தில் அங்கே கிருஷ்ணவேணி என்று ஒரு பெண் வந்து சேர்ந்தார். வேலையில் கெட்டி. ஆனால் தினமும் பத்தரை மணிக்குத்தான் ஆஃபீஸ் வருவார். இதனால் சீனிவாசனுக்கும் கிருஷ்ணவேணிக்கும் தினப்படி வாக்குவாதம், சண்டை. ஒரு நாள் மாலையில் ஐந்தே முக்கால் மணி. ஆஃபீஸில் எல்லோரும் கிளம்பிவிட்டார்கள். சீனிவாசன், நான், கிருஷ்ணவேணி மூன்று பேர்தான் இருந்தோம். அப்போது கிருஷ்ணவேணி தன் கைப்பையை எடுத்துக்கொண்டு என்னிடம் சொல்லிவிட்டு சீனிவாசனின் மேஜையருகே வந்து அவர் முகத்துக்கு மிக அருகே சென்று, என்ன நடக்கிறது என்று நான் யூகிப்பதற்குள்ளாகவே, அவருடைய முகத்தில் காறி உமிழ்ந்துவிட்டுச் சென்றுவிட்டார்.

சீனிவாசனின் முகமெல்லாம் கோழையும், எச்சிலும். உடனே சீனிவாசன் டைனிங் ஹால் பக்கமிருந்த குழாய்க்கு ஓடினார்.

மறுநாள் சீனிவாசன் ஆஃபீஸ் வரவில்லை. ஒரு வாரம் கழித்துத்தான் வந்தார். ஒரு வாரமும் மடிப்பாக்கம் ஆஞ்சனேயர் கோவிலில் தான் அமர்ந்திருந்ததாகச் சொன்னார். அதற்கு மேல் அவர் கிருஷ்ணவேணியை எதுவும் கேட்பதில்லை. ஆனால் மற்றவர்களின் கண்ணில் விரலை விட்டு ஆட்டிக்கொண்டுதான் இருந்தார்.

7. அஞ்சல் பொருள் கிடங்கில் ஒருமுறை சுதா என்ற பெண் வந்து சேர்ந்தார். முதல் நாளே அவரைத் தேடி வந்த ஒருவர் காலை பதினோரு மணியிலிருந்து இரண்டு மணி வரை சுதாவின் சீட்டுக்குப் பக்கத்திலேயே அமர்ந்திருந்தார். இருவரும் ரகசியமாகப் பேசிக்கொண்டார்கள். அந்த ஆள் சுதாவைவிட வயதில் மிகவும் கம்மியாகத் தெரிந்தார். இரண்டு நாள் சென்றது. மூன்றாவது நாள், அந்த ஆள் இரண்டு மணிக்குக் கிளம்பியதும் சீனிவாசன் ஆஃபீஸில் இருந்த அத்தனைப் பேர் முன்னிலையிலும் சுதாவைப் பார்த்து சத்தமாகச் சொன்னார். ‘இது என்ன ஆஃபீஸா, இல்லை, காதலர் பூங்காவா சுதா மேடம்? இந்த மாதிரி நீங்கள் செய்ததால் தானே உங்களைப் பார்க் டவுன் போஸ்ட்டாஃபீஸிலிருந்து இங்கே பனிஷ்மெண்ட் போஸ்டிங் போட்டிருக்கிறார்கள்? அப்புறம் இங்கேயும் வந்து அதையே செய்தால் எப்படி? உங்கள் சந்திப்பையெல்லாம் ஆஃபீஸுக்கு வெளியே வைத்துக்கொள்ளுங்கள்.’

பிறகுதான் எனக்கு விஷயம் தெரிந்தது. அந்த ஆள் சுதாவின் காதலனாம். வயது 20. சமீபத்தில்தான் ஈடியாகச் சேர்ந்திருக்கிறார்.

ஆஃபீஸில் சந்திக்கக்கூடாது என்று தடை போட்டுவிட்டதால் மிகச் சரியாக மாலை ஐந்தரை மணிக்கு ஆஃபீஸ் வாசலில் அந்தக் காதலர் வந்து சுதாவுக்காகக் காத்திருப்பார். சுதாவும் அவரும் சேத்துப்பட்டு ரயில் நிலையத்தில் ஒரு மணி நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டுப் பிரிவர்.

மற்றபடி சுதாவுக்கு கணவரும், இரண்டு புத்திரர்களும் உண்டு. மூத்த புத்திரனுக்குப் பூணூல் கல்யாணம் என்று ஆஃபீஸில் எல்லோருக்கும் பத்திரிகைகூட வைத்தார் சுதா. சுதாவின் கணவர் ஏதோ ஒரு வங்கி மேனேஜராம்.

8. வைசம்பாயணர் தனது குரு பராசரரைப் பார்த்து பரிணாம வளர்ச்சி பற்றி கேட்டபோது அவர் கூறியதே விஷ்ணு புராணம்.

9. அரை மயக்க நிலையிலேயே - தூக்கத்தில் நடப்பவனைப் போலவே - அவன் அந்த அழுகிய பால், சீழ், ரத்தம் எல்லாம் கலந்த கலவையை உறிஞ்சிக்கொண்டிருந்தான். வலிக்காமல் உறிஞ்ச வேண்டும். பக்கத்தில் ஒரு சட்டியை வைத்துக்கொண்டு உறிஞ்சி உறிஞ்சித் துப்பினான். மணிக்குப் பதினைந்து நிமிடம் நடந்தது அந்த வேலை. சமயங்களில் அந்தப் பால், சீழ், ரத்த அழுகல் தொண்டைக்குள்ளேயும் போய்விடும். பிரசவ வலி ஒரு மணி நேரம். ஆனால் இந்த முலை வலி ஒரு வார காலம் தொடர்கிறது. அடிவயிற்றைப் புரட்டிக்கொண்டு வந்தது வாந்தி. வாந்தியெடுக்கும்போது குடலே வாய் வழியாக வந்து விழுந்துவிடும் போலிருந்தது. உறிஞ்சியெடுக்காவிட்டால் அந்தப் பெண் வலியிலேயே செத்துவிடுவாள் என்ற எண்ணம்தான் அவனை மீண்டும் மீண்டும் அந்த சீழ்க் கரைசலை உறிஞ்ச வைத்தது. மணல் கடிகையில் மணல் துகள்கள் விழுவது போல் அவன் உடல் கரைந்து கொண்டிருந்தது. மேகக் கூட்டத்தைப் போல் அவன் அவனிடமிருந்து பிரிந்து பஞ்சுப் பொதிகளாய் அலைந்துகொண்டிருந்தான். அப்பஞ்சுப் பொதிகளை அவன் கரங்களால் தொட முயல்கிறான். முடியவில்லை. கண்ணுக்குத் தெரியாத கரங்களால் ஸ்பர்ஸிக்க முடியவில்லை. கால்கள் தரையில் பரவாததுபோல் தன் திடத்தன்மையை இழந்து வாயு ரூபமாய் மாறிவிட்டதுபோல் தோன்றுகிறது. ங்கோத்தா என்று சொல்லியபடி கால்களைத் தூக்கி அவன் முகத்தின் மீது எட்டி உதைக்கிறாள் எக்ஸ். ஒரே அடியில் அவளைக் கீழே தள்ளி கழுத்தின் மீது கால்களை வைத்து நசுக்க எவ்வளவு நேரமாகும் என்று யோசிக்கிறான். முலைகள் கெட்டி தட்டிக் கிடக்கின்றன. சீழை உறிஞ்சுகிறான். களைப்பில் உறங்கிவிடுகிறான். மணிக் கணக்குத் தப்பிவிடுகிறது. வலியில் கதறித் துடிக்கிறாள். என் வலியை உறிஞ்சி எடு என்று ஒவ்வொரு முறையும் உன்னிடம் சொல்ல வேண்டுமா, நான் சாகப் போகிறேன். தூக்கு மாட்டிக்கொண்டு சாகப்போகிறேன். உன் தேகமே சீழாக அழுகி வழிகிறதா. மரண திரவமா. சிருஷ்டியிலிருந்து மரணம் ஜனிக்குமா. சிருஷ்டியும் மரணமும் ஒன்றா. அழுகிய உடல்கள். கடற்கரையில் ஒதுங்கிய உடல். கிணற்றில் மிதக்கும் உடல். கார் வெடிகுண்டில் சிதறிய உடல்கள். சாலை விபத்தில் சின்னாபின்னாமாகிய உடல்கள். விஷ வாயுவில் வீங்கி வெடித்த உடல்கள். இந்த சீழ்க் கரைசலைக் குடித்து வயிறு வீங்கி செத்துப்போகலாமென ஒரு நாள் எல்லாவற்றையும் குடித்து வைத்தான். ஆனால் ஒன்றும் நடக்கவில்லை. பல முறை வாந்தி எடுத்ததோடு சரி. சாலையோரத்தில் கிடக்கும் செத்த எலியின் நாற்றமடித்தது அந்தச் சீழ். மரணத்தையே உறிஞ்சிக்கொண்டிருப்பதுபோல் தோன்றியது. இது நிஜமா அல்லது அவ்வப்போது வரும் பீக்கனவைப் போன்றதொரு கொடுங்கனவா என்று தோன்றும். ஆனால் மூச்சுக்கூட விடமுடியாமல் குமட்டல் தொண்டையை அடைக்கும்போது நிஜம்தான் என்று புரியும்.

10. தினமும் ஊசிப்போன சாப்பாட்டைத்தான் எடுத்து வருவான் முத்து. அஞ்சல் பொருள் கிடங்கின் கடைநிலை ஊழியன். சம்பளப் பணம் அவ்வளவையும் அவன் வீட்டிலுள்ளவர்கள் வாங்கிக் கொள்வார்கள். மனைவி வந்துவிட்டால் அவனுடைய சம்பளப் பணம் கிடைக்காதே என்று 50 வயதாகியும் திருமணம் செய்து வைக்கவில்லை. பேசும்போது எச்சில் தெறிக்கும். நான்கரை அடி உயரம். ஆஃபீஸிலுள்ள அத்தனை பேரும் விரட்டுவார்கள். தொத்தா பித்தா என்று பேச்சு. கருணை அடிப்படையில் வேலை. பணியில் இருக்கும்போதே ஒரு ஊழியர் இறந்துவிட்டால் அவரது மகனுக்கோ, மகளுக்கோ, மனைவிக்கோ அளிக்கப்படும் வேலைதான் கருணை அடிப்படையிலான வேலை. அஞ்சல் பொருள் கிடங்கின் கடைநிலை ஊழியர் அனைவருமே இப்படி கருணை அடிப்படையில் வேலைக்கு வந்தவர்கள்தான். பார்சல் கட்டும் வேலை ஒரு நாளில் அரை மணி நேரம் இருக்கும். மற்ற நேரங்களில் என்ன செய்வது? சிகரெட், பீடி, அருந்ததியுடன் அரட்டை. சூப்ரண்ட் நல்லவராக இருந்தால் பக்கத்திலுள்ள ஒயின் ஷாப்பில் குவாட்டர் அடிக்கலாம். சீனிவாசன் மாதிரியான கிறுக்குப் பயல்கள் மேனேஜராக வந்தால் ஐந்தே முக்கால் வரை ஆஃபீஸிலேயே இரு என்று கழுத்தை அறுப்பான்கள். இவர்களின் கண்ணுக்குத் தெரியாத எதிரி, காலம். 40 ஆண்டுகளை - அதுவரை உயிரோடு இருந்தால் - எப்படிக் கடப்பது. ஒரே ஒருவர் மட்டும் தப்பினார். ஒரு நாகலிங்க மரத்தின் அடியில் லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து, அதை ஒரு கோவிலாக மாற்றி பூஜை, படையல் என்று போய்க்கொண்டிருந்தது. மரணத்தைத் தவிர அவர்களுக்கு அங்கிருந்து வேறுவித விடுதலையே இல்லை. யாரும் 60 வயது வரை உயிரோடு இருந்து ஓய்வு பெற்றதாகத் தெரியவில்லை. பதவி உயர்வும் இல்லை. அஞ்சல் பொருள் கிடங்கின் இந்தக் கடைநிலை ஊழியர்களுக்குக் கையெழுத்து மட்டுமே போடத் தெரியும். அதனால் குமாஸ்தா தேர்வும் எழுத முடியாது. ஆனால் குமாஸ்தாவாக ஆவதை விட போஸ்ட்மேனாகவே இருக்கலாம். வெறும் ஆயிரம் இரண்டாயிரத்துக்காக சுதந்திரத்தை இழப்பது முட்டாள்தனம். அய்ப்பீயெஸ்களுக்கு இப்படியில்லை. சிறிது காலம் சூப்ரண்ட். பிறகு டீப்பியெஸ். பிறகு ப்பீயெம்ஜி. பிறகு சீஃப். பிறகு மெம்பர். அஞ்சல் பொருள் கிடங்கின் கடைநிலை ஊழியர்களின் எதிர்காலம் மரணம். மரணத்திற்காகக் காத்திருத்தல். ர்ராஜசேகர் சர்க்கரை வியாதியால் 40 வயதில் செத்துப்போனான். அவன் பெயர் வருகைப் பதிவேட்டிலிருந்து அடிக்கப்பட்டுவிட்டது. நாகலிங்க மரத்தின் கீழே ஒரு சிமெண்ட் பெஞ்ச். ஒரு இழுப்பு இழுத்துப் பாக்குறீங்களா சார். முத்து லஞ்ச் டப்பாவைத் திறந்தால் அந்த அறையே நாறும். எல்லோரும் அவருக்கு ஒவ்வொரு வாய் சோறு கொடுப்பார்கள். அவ்வப்போது 10 ரூபாய் கொடுங்க சார் என்று கேட்பார். அந்தப் பத்து ரூபாய் சினிமா பார்க்க. முத்துவுக்கு சினிமாப் பைத்தியம். எல்லா சினிமாவையும் பார்த்துவிடுவார். எப்போது யாருக்கு ரெவின்யூ ஸ்டாம்ப் வேண்டுமானாலும் முத்துவிடம் கிடைக்கும். போஸ்ட்டாஃபீஸில் அவ்வப்போது ரெவின்யூ ஸ்டாம்ப் கிடைக்காமல் போய்விடும். ரெவின்யூ ஸ்டாம்ப் இல்லாவிட்டால் சம்பளம் வாங்க முடியாது.

11. பட்டாபி. சீனியர் ஸ்டெனோ. எப்போதும் ஓடிக்கொண்டே இருப்பார். நாளைக்கு ஒலிக் (OLIC) மீட்டிங் இருக்கு. ஓடிண்டே இருக்கேன். நாளைக்கு வரளோல்லியோ. நாளைக்குப் பார்க்கலாம். இல்லாவிட்டால் இப்படி:

ப்பீயெம்ஜி ஆத்துக்கு ஓடிண்டேயிருக்கேன். அவருக்கு மார்னிங் ஸிக்ஸோ க்ளாக் ஃப்ளைட். இப்போவே போய் அந்த ஃபைலை அவர்ட்ட குடுத்தாகணும். அந்த ஃபைல் இல்லாம அவர் டைரக்ட்ரேட்டே போக முடியாது.

ஒரு நாள் லஞ்ச் முடித்துவிட்டு கக்கூஸில் வைத்து டப்பாக்களை வைத்து கழுக்கொண்டிருந்தார் பட்டாபி. அவர் சாப்பிடுவதற்கு மற்றவர்களைப் போல் கேன்டீன் பக்கம் போக மாட்டார். அந்த நேரத்தில் ப்பீயெம்ஜி கூப்பிடலாம். அல்லது ஏதாவது ஃபோன் வரலாம். ஆக, அவர் அறையிலேயே சாப்பிட்டால் கக்கூஸில்தான் டப்பாவையும் கையையும் கழுவ வேண்டும். ஒரு நாள் வாஷ் பேசினில் தண்ணீர் வரவில்லை. அப்போது பட்டாபி சொன்னது: சே... வாட்டர் வர்லே. ப்பீயெம்ஜி ரூம்ல வர்றதோ இல்லியோ. உடனே போய் கவனிக்கணும்.

12. அவள் அவனுடைய உறுப்பைச் சுவைத்துக் கொண்டிருக்கும்போது அவன் அவளுடைய தலைமுடியைப் பிடித்துக் கைகளால் இறுக்குகிறான். உறுப்பு அவள் தொண்டைக்குள் செல்கிறது. திமிறுகிறாள். திமிறத் திமிற அவன் பிடி இறுகுகிறது. ஒரு கட்டத்தில் பிடியைத் தளத்துகிறான். பெருமூச்சு விட்டபடி மல்லாந்து சாய்பவளின் கண்கள் சிவந்து கண்ணீர் கசிகிறது. அவள் தலைக்கு இதமாகத் தன் விரல்களால் வருடுகிறான்.

13. பாரிஸ் நகரில் செந்தெனி பகுதியில் ஒரு செக்ஸ் க்ளப்பில் நீலப்படம் ஓடிக்கொண்டிருக்கிறது. மிக ஜாக்கிரதையாக நடக்கிறேன். தரையெல்லாம் கொழகொழவென்று வழுக்குகிறது. ஒரு பெண் தன் ஆடைகளை மாற்றிக்கொண்டிருக்கிறாள். ஒருவன் தன் கைகளை என் மீது வைக்கிறான். நான் எழுந்து செல்கிறேன். சில அறைகள் தென்படுகின்றன. ஆண்களும் ஆண்களும் கலவியில் ஈடுபட்டுக்கொண்டிருக்கிறார்கள். பெண்களும் இருக்கிறார்கள். ஆணுறுப்பைச் சுவைத்தபடி சிலர். குதப் புணர்ச்சியில் சிலர். யாருமே படுத்த நிலையில் கலவி கொண்டிருக்கவில்லை. எரிக்காவைப் பற்றி நினைக்கும் போது, சிருஷ்டியின் உச்சத்தை அடைய வேண்டுமென்று வாழும் உத்தமத் தமிழ் எழுத்தாளர்களின் ஞாபகம் வருகிறது. எரிக்கா ஒரு வர்ஜின். 40 வயது வரை. உலக இலக்கியத்தைப் படைப்பதற்காக ஒரு கூண்டுக்குள் அடைத்துக்கொண்டு, தன்னையே வருத்திக்கொள்ளும் உத்தமத் தமிழ் எழுத்தாளர் கூட்டம். உடலைத் திரஸ்கரித்துவிட்ட உனக்கு உன் தேகத்தின் ரகஸ்யத்தைக் காட்டுவேன். வெந்தயப் பொடியும், ஆவாரம் பூவும், குப்பைமேனியும் கலந்து போட்டு பராமரித்த இந்த சருமத்தை உன் உதடுகளால் தீண்டு. Are you wearing any chastity belt? Why are you locking up yourself? Why don't you open up for me?

14. உன் தேகத்தின் அண்மை எனக்குப் புல்லரிப்பை ஏற்படுத்துகிறது.

15. ம்யூஸோடு பீச்சில் உட்கார்ந்திருக்கும்போது ஏகப்பட்ட பிச்சைக்காரர்கள். கிட்டத்தட்ட க்யூவில் வருவது போல் வந்து கொண்டிருந்தார்கள்.

16. Irreversible: ரேப் காட்சி. நாயைப் போல் ஊளையிடுகிறாள். அவளது குதத்திலிருந்து குருதி வடிகிறது. S&M க்ளப்பில் நடக்கிறது இக்காட்சி. ஃப்ரெஞ்ச்சுக்காரி. அவன் அல்ஜீரியன். அவள் கதறுகிறாள். ஆனால் அவனை நிறுத்தச் சொல்லவில்லை. அவள் அதை அனுபவிக்கிறாள்.

போதும், போதும், விட்டுவிடு, விட்டுவிடு என்று கத்துகிறாள். ஆனால் அதை நம்பி அவன் நிறுத்திவிட்டால் அவன் வேலை போய்விடும்.

17. கனவுகளின் குரல்வளையை நெரித்துக் கொன்றுவிடாதே. எத்தனை நாட்களுக்கு இந்தக் கண்ணாமூச்சி விளையாட்டு. இரண்டில் ஒன்றைச் சொல்லிவிடு. சரீர உணர்வுகளை, அதன் இச்சையை வார்த்தைகளால் ஈடு செய்துவிடலாம் என்று நினைக்காதே. வரலாற்றில் வார்த்தைகளின் காலம் மிகக் குறைவு. ஆனால் காமம் ஒரு ஆதி உணர்வு இல்லையா?

18. நீ எதைச் சொன்னாலும் செய்கிறேன். நான் உன் அடிமை. தற்கொலை செய்துகொள்ள இருந்த என்னை நீதான் காப்பாற்றினாய். எனவே இந்த உயிர் உன்னுடையது. -திவ்யா

19. நீ யார்? உன் அப்பனின் ஒரு துளி விந்து. A single ejaculation. - எல்ஃப்ரீட் ஜெலினெக்.

20. பனிப்பாறைகள் வெடித்துச் சிதறுவது போல் இருந்தது அவள் காதல்.

21. I want to devour you.

22. நான் உன்னை வன்கலவி செய்ய முடியாது. ஏனென்றால், நான் முழுமையான ஆண் அல்ல. பாதி ஆண்; பாதி பெண். நீதான் இந்த சரீரத்தை இயக்க வேண்டும். அனுபவமற்ற சரீரத்துடன் இது உணர்ச்சியற்றுப் போய்விடுகிறது. ஜடமாகிவிடுகிறது. நீதான் இதை இசைக்க வேண்டும். உயிர்ப்பிக்க வேண்டும். உனது ஸ்பர்ஸத்தால், உனது முத்தத்தால், உனது சுவாசத்தால், உனது சரீரத்தின் ஒவ்வொரு அணுவினால்.

23. I want to suck all the juices of your body.

24. Hey bandyball.

25. நீ ஒரு புல்வெளி... அதன் மீது என் தேகத்தைக் கிடத்த வேண்டும். உன் ஈரமான புல்லின் இதழ்கள் என் தேகமெங்கும் ஏற்படுத்தும் சிலிர்ப்பை உனக்கு முத்தங்களாக மாற்றித் தருவேன் கண்ணே...

26. காமம் தனது அனுபவ ரேகைகளை விட்டுவைப்பதில்லை. கண்ணுக்குப் புலப்படாத ஒரு கரம் காமத்தின் ரேகைகளை அழித்துக் கொண்டே போகிறது. அதனால்தான் திரும்பிப் பார்க்கும்போது வெறுமையாய்த் தெரிகிறது. இதன் அனுகூலம் என்னவென்றால் ஒவ்வொரு அனுபவத்திலிருந்தும் நீ புதிதாகவே வெளிவருகிறாய்.

27. தில்லியின் வடமேற்கிலுள்ள மாயாபுரி என்ற பகுதியில் 23 வயதுப் பெண் ஒருத்தி கடத்தப்படுகிறாள். காலை 4.30க்கு திறந்த வெளிகளில் மலஜலம் கழிக்கச் சென்ற பெண்ணை காரில் வந்த மூன்று பேர் கடத்திக்கொண்டு போய் காரிலேயே வன்கலவி செய்து 6.30 மணியளவில் மாயாபுரியிலிருந்து 15 கி.மீ தூரத்திலுள்ள சரஸ்வதி விஹார் அருகே விட்டுவிட்டுச் சென்றனர்.

28. உடலுறவு கொண்டவுடன் பெண் சிலந்தி ஆண் சிலந்தியைக் கொன்றுவிடும். சிலந்திகள் உயிருடன் இருப்பவற்றையே தின்னும். Arachnology பற்றி 40 குட்டிக் கதைகளை இணைக்க வேண்டும்.

29. மந்தைவெளியில் ஓரல் செக்ஸ் செய்த 60 வயதுக் கிழவி. கிழவியின் மகளைப் பற்றிய வர்ணனை, மகள் தயாராக இல்லை.

30. ஜாதகக் கதை எண்: 1ஐ நாவலில் சேர்க்க வேண்டும்.

31. ஸ்வப்னா குழந்தையாக இருக்கும்போது கதக் நடனம் கற்றுக் கொண்டாள். ஜெர்மன் டான்ஸர் பீனா பாஷூடன் (Pina Bausch) பல முறை மேடையேற்றம். Learned martial arts Jujitsu, meditative techniques of Tai Chi.

32. பனகல் பார்க்கில் பட்டினியுடன் படுத்துக் கிடக்கிறேன். அங்கிருந்த புற்களைப் பறித்து சாப்பிட்டு வாந்தியெடுக்கிறேன். விந்து வங்கி சென்று வயதுச் சான்றிதழைக் காண்பித்து விந்தைக் கொடுத்து பணம் வாங்குகிறேன். வாரம் 2 முறை. ஒரு தடவைக்கு 200 ரூ. வயது 39 என்பதால் ஒரு ஆண்டுதான் விந்து விற்றுப் பசியாற முடிகிறது. 40 வயதாகிவிட்டால் விந்து விற்க முடியாது. டாக்டர் ராவிடம் சிலகாலம் Gay பார்ட்னராக இருக்கிறேன். சில நாட்களில் அது அலுத்துப்போய் அவரைத் தவிர்க்கிறேன்.

33. காமம் பொங்கும் ம்யூஸின் கண்கள்.

34. நரேன் அப்போது கல்லூரி மாணவன். அவனும் அவனுடைய நண்பனும் எட்வர்ட் எலியர்ட்ஸ் பீச்சில் இரவு பத்து மணிக்கு மேல் ஒரு வேசியைச் சந்திக்கிறார்கள். மூவரும் ஏற்கெனவே குடித்திருக்கிறார்கள். மீண்டும் நரேனிடமிருந்த அரை போத்தல் விஸ்கியையும் குடிக்கிறார்கள். மூவரும் மணலிலேயே கலவி கொள்கிறார்கள். போதையிலும் களைப்பிலும் அங்கேயே உறங்கிவிடுகிறார்கள். காலையில் எழுந்து பார்த்தால் உடம்பெல் லாம் ஒரே பீ. வேசி இன்னும் தூங்கிக்கொண்டிருக்கிறாள். இரண்டு நண்பர்களும் வாந்தியெடுத்துவிட்டு கடலில் குளிக்கிறார்கள்.

35. சிறுவனாக இருக்கும்போதே அவன் மடாலயத்துக்கு அனுப்பப்படுகிறான். பத்து வயதாகும்போது தந்தையின் மரணம். அம்மாவுக்கு உதவியாக வா என்று உறவினர்கள் அழைத்தபோது அவன் மறுத்து விடுகிறான். என் தந்தை கூறியதற்காக நான் மடாலயம் வரவில்லை; இந்த உலகின் அழுக்கிலிருந்தும் அசிங்கத்திலிருந்தும் தூரத்தில் இருக்க விரும்பியே நான் இங்கு வந்தேன் என்கிறான். வினய பீடகத்தின் தொகுதிகள் அவ்வளவையும் எடுத்துக்கொண்டு சீனாவிலிருந்து இந்தியா வருகிறான். மொழிபெயர்க்கிறான். 88 வயதில் மரணமடைகிறான்.

36. த்ரிபீடகம்: சூத்ரா, வினயா, அபிதர்மா, சூத்ரங்கன், நெறிமுறைகள், தர்ம சாஸ்திரங்கள். ஃபா ஹயான் வினயாவில் கவனம் செலுத்துகிறார்.

37. எனக்குப் பிடித்த ஐரிஷ் எழுத்தாளன் Flann O'Brien. அவனுடைய ஒரு நாவலில் வரும் ஹீரோ தலையணைகளை ஒன்றன் மீது ஒன்றாக அடுக்கி அதனிடையே உறுப்பை விட்டு சுயபோகம் செய்கிறான்.

38. பெண்ணியம் பெண்களைத் தனிமைப்படுத்திவிட்டது. இன்றைக்கும்கூட ஒரு பெண் என் ஸ்பர்ஸத்தையோ, முத்தத்தையோ மறுதலிக்கும்போது நான் தாங்க முடியாத வேதனையடைகிறேன். சாகும்வரை நான் ஒரு அனாதைச் சிறுவனாகவே இருக்கப் போகிறேன் என்றுதான் நினைக்கிறேன். மிஷல் வெல்பெக்தான் இப்படிச் சொல்லியிருக்கிறான். என்னைப் போலவே ஒரு எழுத்தாளன் ஃப்ரான்ஸில் வாழ்ந்து கொண்டிருப்பது எனக்கு ஆச்சரியத்தைத் தருகிறது.

39. மனிதர்களிடமிருந்து நான் ஒதுங்கி வாழ விரும்புகிறேன். ஷங்கர்

என்னை அவனுடைய நாட்டுப்புறவியல் மையத்துக்கு வரும்படி நீண்ட நாட்களாக அழைத்துக்கொண்டிருந்ததால் அங்கு சென்றேன். ‘வீணை செய்வதில் உள்ள பிரச்னைகள்’ பற்றி டாக்டர் முத்துராமலிங்கம் ஆற்றிய ஒரு நீண்ட சொற்பொழிவுக் குப் பிறகு ஷங்கரின் அறையில் கூடினோம். நடேஷ், ஷங்கர், நான் மற்றும் சதாசிவம். இந்த சதாசிவத்தை நான் முப்பது வருடங்களாக அறிவேன். இலக்கிய உலகில் என்னுடைய நெருங்கிய நண்பர்கள் அனைவரும் இவருக்கும் நெருங்கிய நண்பர்களாக இருப்பது எனக்குத் தெரியும். மற்றபடி அவரைப் பற்றிய விபரங்களேதும் எனக்குத் தெரியாது. ஆனால் வயதானவராக இருந்தாலும் இளைஞர்களுடன் சரிக்குச் சரி பழகிக் கொண்டிருப்பதை சற்று ஆச்சரியத்துடன் கவனித்து வந்திருக்கிறேன். மேலும், அந்த நண்பர்கள் சதாசிவத்தைப் பற்றி மிக்க அன்புடனும், நெகிழ்ச்சியுடனுமே எப்போதும் என்னிடம் குறிப்பிடுவர். ஆனால் அவரைப் பார்த்தாலே எனக்கு ரத்தக் கொதிப்பு ஏற்பட்டுவிடுகிறது. காரணம், கடந்த முப்பது ஆண்டுகளாக அவர் என்னை வெகு நுணுக்கமாகவும், என்னைத் தவிர வேறு யாருமே கவனிக்காதபடியும் என்னைப் புறக்கணித்து வருகிறார். இது அவருடைய தனிப்பட்ட சுதந்திரமாகத் தோன்றலாம். இருந்தாலும் அதில் ஒரு குரூரமான வன்முறை கலந்திருக்கிறது. நண்பர்கள் குழுமியுள்ள ஒரு இடத்தில் அவரும் இருப்பார். நானும் இருப்பேன். அந்தச் சந்திப்பு நான்கு மணி நேரம் கூட நீடிக்கும். ஆனால் அந்த இடத்தில் பெருமாள் என்ற பெயருள்ள ஒரு ஆள் இருக்கிறான் என்பதையே அவர் முற்றாக மறுதலிப்பார். இந்த முப்பது ஆண்டுகளாக அவர் என் கண்களையே சந்தித்ததில்லை. நான் ஏதாவது பேசினாலும் அவர் அதற்கு பதில் எதுவும் கூறியதில்லை; என் பேச்சைத் தொடர்ந்ததும் இல்லை. நான் ஒருவன் அங்கு இருப்பதையே கவனத்தில் கொள்ளாமல்தான் அவருடைய அந்த நான்கு மணி நேரமும் கழியும். அவரைப் பற்றி நான் எதுவும் எழுதியதில்லை. அவரைப் பற்றி எழுத என்ன இருக்கிறது என்பது கூட எனக்குத் தெரியாது. ம்... ஒரு விபரம் சொல்ல மறந்துவிட்டேன். அவர் மௌனியின் நண்பர். மற்றபடி மௌனி பற்றிக்கூட நான் எதுவும் எழுதியிருக்கவில்லை. எனவே ஒருவேளை அதன் காரணமாக அவர் மனம் புண்பட்டிருக்கலாமோ என்று நினைக்கவும் வழியில்லை. சதாசிவத்தின் இந்தப் புறக்கணிப்பை சதாசிவத்தின் நெருங்கிய நண்பர்களான கே.பிரதாப், ஷங்கர், நடேஷ் என்று யாருமே கவனித்திருக்கவில்லை என்பது மற்றொரு ஆச்சரியம். காரணம், பாதிக்கப்பட்டவனுக்குத்தானே அதன் வலி தெரியும்? இரண்டு பேர் மட்டுமே அமர்ந்து பேசக்கூடிய அந்தச் சிறிய அறையில் நாங்கள் நான்கு பேர் அமர்ந்திருக்கிறோம். ஒரு மணி நேரம் ஓடிக்கொண்டிருந்தது பேச்சு. முப்பது வருடங்களாக என்ன நடந்துகொண்டிருந்ததோ அதேதான் அன்றும் நடந்து கொண்டிருந்தது. ஆனால் ஒரே ஒரு சிறிய மாற்றம். நான் பழைய பெருமாள் அல்ல. நண்பர்களுக்காக மலத்தைத் தின்னத் தயாராக இருந்த பழைய பெருமாள் செத்துவிட்டான். இனிமேல் இந்த சதாசிவம் என்னும் நபர் இருக்கும் இடத்தில் நான் இருப்பதில்லை என்று முடிவு செய்துகொள்கிறேன். இடையில் சதாசிவத்தைத் தனது கணினியின் அருகே அழைத்த ஷங்கர் வெல்பெக் பற்றி ஏதோ சொல்கிறான். இருவரும் மிக சந்தோஷமாக உரையாடிக் கொள்கிறார்கள். வெல்பெக் பற்றி கடந்த ஒரு வருட காலமாக தமிழ்நாட்டில் ஒரு பிரச்சாரத்தையே செய்துகொண்டிருக்கிறேன் நான். என்னிடம் ஒரு ஹலோ

சொல்வதற்குக்கூட தயங்கும் ஒரு ஆள், வெல்பெக் பற்றி ஷங்கரிடம் அளவளாவிக் கொண்டிருக்கிறான். ஒரு வகையில் பார்த்தால் ஷங்கருக்கும் சதாசிவத்துக்கும்கூட எனக்கு வித்தியாசம் தெரியவில்லை. ஷங்கர் வார்த்தையால் அவமானப்படுத்துகிறான். சதாசிவம் அதைத் தனது மௌனத்தால் செய்கிறார். ஏதோ ஒரு பேச்சினிடையே நான் ஸ்பானிஷ் படிப்பது பற்றி ஷங்கரிடம் சொன்னேன். பிறகு ஒரு பேச்சினிடையே இதற்கு அடுத்த இரண்டாவது லெவலில் இன்னும் அதிக நேரம் செலவழிக்க வேண்டியிருக்கும் என்று சொன்னபோது, சட்டென்று இடைமறித்த ஷங்கர், முதல் லெவலில் தேறினால்தானே என்றான். சற்று முன்னர்தான் அவன் தன் மகன் முதல்முதலாக அப்பா என்று அழைத்தது பற்றிப் புளகாங்கிதம் அடைந்து பேசிக்கொண்டிருந்தான். குழலினிது யாழினிது என்ப தம் மக்கள் மழலைச் சொல் கேளாதார் என்று திருவள்ளுவரும் சொல்லியிருக்கிறார்தான். இல்லையென்று சொல்லவில்லை. ஆனால் ஷங்கரோ தன் வாழ்வின் குறிக்கோளையே அடைந்து விட்டது போலவும் எவரெஸ்ட் சிகரத்தைத் தொட்டுவிட்டது போலவும் பேசினான். எவரெஸ்ட் சிகரத்தைத் தொடுவது லட்சத்தில் ஒருத்தரால்தான் முடியும். ஆனால் இந்தியா போன்ற ஒரு உஷ்ண தேசத்தில் குழந்தைப் பெற்றுக்கொள்வதா ஒரு சாதனை. இங்கேதான் ஆணின் மூச்சுக் காற்று பெண் மீது பட்டாலே கர்ப்பம் தரித்து விடுகிறதே. ஆனால் எனக்கு என்னவோ ஷங்கர் மாதிரி ஆட்கள் தங்களுடைய biological குழந்தைகளல்லாத வளர்ப்புக் குழந்தைகள் அப்பா என்று அழைத்தால் இப்படி எவரெஸ்ட் சிகரத்தைத் தொட்டுவிட்டது போல் புளகாங்கிதம் அடைவான்களா என்று சந்தேகமாயிருக்கிறது. இதுதான் சமூகம், அரசியல் போன்ற வெளிகளில் நிலவும் ஃபாஸிஸக் கூறுகள் உற்பத்தியாகும் ஸ்தானம். ஒருவேளை தன் மனைவி வட இந்தியாவைச் சேர்ந்தவள் என்பதால் குழந்தை இந்தியில் அப்பா என்று அழைத்துவிடப்போகிறதோ என்று பயந்திருப்பானோ? அதற்கும் வாய்ப்பில்லையே? உலகின் எல்லா மொழிகளுமே அம்மா அப்பாவை அம்மா அப்பா என்றுதானே அழைக்கின்றன? மிக நிரம்பப் படித்தவனும் உலகம் சுற்றியவனுமான ஷங்கருக்கா இந்தச் இன்ன விஷயம் தெரிந்திராமல் இருக்க முடியும்? தன் ரத்தம், தன் விந்து, தன் குழந்தை என்று வந்துவிட்டால் எல்லாப் பயல்களுமே ஃபாஸிஸ்டுக்களாகிவிடுகிறான்கள். என்ன செய்ய? ஷங்கரின் குழந்தை முதல்முதலாக அவனை அப்பா என்று அழைத்தது பற்றி அவன் புளகாங்கிதம் அடைந்து கொண்டிருந்த வேளையில் நான் குறுக்கே புகுந்து ஏதாவது அபசகுனமாகச் சொல்லியிருந்தால் ஷங்கர் என்ன ஒரு பதற்றம் அடைந்திருப்பான்? அதற்குப் பிறகு என் முகத்தில் விழித்திருப்பானா? அதே போன்ற பதற்றத்தைத்தான் நான் ஆரம்ப லெவலில் தேர்ச்சியடைகிறேனா பார்ப்போம் என்று ஷங்கர் சொல்லியபோது நானும் அடைந்தேன். அவனுக்கு அவனுடைய biological குழந்தை எப்படியோ அப்படித்தான் எனக்கு ஸ்பானிஷ். முதல் லெவல் தேர்வுக்குப் படிக்கும்போது ஷங்கர் சொன்ன வார்த்தைகளின் பதற்றம் என்னைத் தொடர்ந்துகொண்டேயிருந்தது. இது பற்றி அலெக்ஸிடம் புலம்பிக்கொண்டிருந்தபோது அவன் சொன்னான். இதெல்லாம் ஒருவித மேட்டுக்குடி மனோபாவம் என்று. ஸ்பானிஷ், ஃப்ரெஞ்ச், இத்தாலியன் எல்லாம் எங்களுடைய இடம். நீயோ ஒரு அடிமட்டத்து ஆள். மலம் அள்ளுவதை விட்டுவிட்டு நீயெல்லாம் ஏன் ஸ்பானிஷ், ஃப்ரெஞ்ச் என்று

எங்களுடைய இடத்து வருகிறாய்? அந்த சதாசிவம் மேட்டரும் இதேதான். இல்லாவிட்டால் அந்தக் கிழவன் ஏன் முப்பது ஆண்டுகளாக என் மீது பகைமை பாராட்டுகிறான்? என் எழுத்து ஆபாசம் என்றால் என்னைவிட ஆபாசமாக எழுதும் வெல்பெக்கைப் பற்றி ஷங்கர் பேசும்போது மட்டும் ஏதோ தன் குதத்தில் குறி நுழைந்தது போன்ற பரவசத்துடன் பேசினானே அது ஏன்? இதனால் ஷங்கரின் நாட்டுப்புறவியல் மையத்துக்கு இனிமேல் செல்ல வேண்டாம் என்று முடிவு செய்தேன். இரண்டொரு கூட்டங்களுக்கு நான் வராததைப் பார்த்த ஷங்கர் எனக்கு ஃபோன் போட்டு விசாரித்தான். நான் சதாசிவத்துக்கும் எனக்குமான முப்பதாண்டு கால உறவு பற்றிச் சொன்னேன். மிகப் பெரிய நகைச்சுவையொன்றைக் கேட்டதுபோல் சிரித்துவிட்டு, வரும் கூட்டத்துக்கு வரச் சொன்னான். போனேன். கூட்டம் முடிந்து ஷங்கரின் அறையில் வழக்கம்போல் நான், நடேஷ், ஷங்கர், சதாசிவம் நால்வரும் கூடினோம். அப்போது ஷங்கர் என்னை சதாசிவத்திடம் இவர்தான் கண்ணாயிரம் பெருமாள் என்று அறிமுகப்படுத்தினான். அதைப் போன்றதொரு அபத்தமான தருணத்தை என் வாழ்வில் எதிர்கொண்டது மிகவும் அரிதாகவே இருக்கும். பிறகு பேச்சினிடையே என் மீது அக்கறை காட்டும் விதமாக என் உடல்நிலை எப்படியிருக்கிறதென்று விசாரித்தான். இப்பொது நான் தியானம் செய்வதாகவும் முன்பு போல எடுத்ததற்கெல்லாம் கோபம் வருவதில்லை என்றும் சொன்னேன். அதற்கு அவன் அப்போ தயிர்வடை ஆகிட்டேன்னு சொல்லு என்றான். ஷங்கர் B.K.S அய்யங்காரிடம் தியானம், யோகா எல்லாம் கற்றவன் என்பது இங்கே குறிப்பிடத்தக்கது.

ஒரு மூன்று தடவை நான் வசிக்கும் வீட்டை விட்டு வெளியே போய் ஒரு பழைய நண்பனைச் சந்திக்கச் சென்றதற்கு கண்ட பலன் இது. இது இப்படியென்றால் காலையில் அல்லது மாலையில் நடப்பதற்காகப் பூங்காவுக்குப் போனால் அங்கே ஒரு பிரச்னை. கே.ப்ரதாப் சின்மயா நகருக்குக் குடிபெயர்ந்து விட்டதால் அத்தனை சிறு பத்திரிகை அன்பர்களின் முகங்களும் அந்தப் பூங்காவில் தென்பட ஆரம்பித்துவிட்டன. எனக்கோ ஆரம்பத்திலிருந்தே சிறுபத்திரிகை கும்பலைப் பார்த்தால் அலர்ஜி. தேவையில்லாத பயம் என்று நீங்கள் நினைப்பீர்கள். இதோ ஒரு உதாரணம்: சிவப்பிரகாசம் என்று ஒருத்தன். பூங்காவில் நடந்து முடித்துவிட்டு ஒரு சிமெண்ட் பெஞ்சில் அமர்ந்தேன். அப்போது என்னெதிரே சிவப்பிரகாசம். சிரித்தேன். என்ன பெருமாள் ஹார்ட் ஆபரேஷனுக்குப் பிறகு எப்படியிருக்கிறீர்கள் என்று கேட்டபடி என் இடது பக்க மார்பில் அன்பாக ஒரு குத்து விட்டான் சிவப்பிரகாசம். ஒரு வார காலம் அந்த இடத்தில் வலித்துக்கொண்டிருந்தது. இது ஒரு நாவல் என்பதற்காக exaggerate செய்யவில்லை. முழு நிஜம். அப்படியானால் ஹெர்னியா ஆபரேஷன் செய்திருந்தால் என் கொட்டையைப் பிடித்து நசுக்கியிருப்பானா என்று மட்டுமே ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தேன் சற்று அதிர்ச்சியுடன். இப்படியாக இந்தப் பூங்கா அனுபவங்களே ஒரு ஐம்பது அறுபது தேறும். இந்த கே.ப்ரதாபின் தினசரி தரிசனம் வேறு ரத்த அழுத்தத்தை அதிகப்படுத்திக்கொண்டிருக்கிறது. இதைப் படிக்கும் சிறுபத்திரிகை அன்பர்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். ஏனென்றால் கே.பிரதாப் அந்த அளவுக்கு சக சிறு பத்திரிகைப் பிரஜைகளால் விரும்பப்படுவன். சகலரையும் வசீகரிக்கும் ஏதோ ஒரு வசிய சக்தி கொண்டவன். ஆனால் என்னைப் பொறுத்தவரை அவன் ஒரு ட்ராகுலா

என்பது என் கணிப்பு. 20ஆண்டுகளுக்கு முன்பு ஒரு நண்பரின் திருமணத்துக்காக ராஜபாளையம் சென்றிருந்தேன். மறுநாள் திருமணம். முந்தின தின இரவில் நானும் கே.ப்ரதாபும் தான். மற்ற நண்பர்கள் இன்னும் வந்து சேர்ந்திருக்கவில்லை. நான்கு மணி நேரம் மதுவின் துணையுடன் நல்லபடியாகச் சென்று கொண்டிருந்த உரையாடல், நான் ஃபூக்கோ என்ற வார்த்தையை பிரயோகப்படுத்தியதும் தடம் புரண்டுவிட்டது. அந்த வார்த்தையைக் கேட்டதுமே அவனுடைய பற்கள் கோரைப் பற்களாக மாறி என் ரத்தத்தைக் குடிக்க ஆரம்பித்துவிட்டன. மறுநாள் நண்பனின் திருமணத்துக்குக்கூட செல்ல முடியாதபடி மன உளைச்சலுக்கு ஆளானேன். மற்றொரு முறை ஆனந்தனுடைய கல்லூரிச் செலவுக்காக கே.ப்ரதாபிடம் ஆயிரம் ரூபாய் கடன் வாங்கிக் கொடுத்திருந்தேன். சொன்ன தேதியில் கடனைத் திருப்ப முடியவில்லை. இரவு பதினோரு மணிக்கு மேல் கே.ப்ரதாபின் உதவியாளன் ஒருவன் என் வீட்டுக்கு வந்து கதவைத் தட்டி கே.ப்ரதாப் பணம் வாங்கி வரச் சொல்லி அனுப்பினார் என்றான். அப்போதுதான் எக்ஸ் என்னை ங்கோத்தா என்று சொல்லி கீழே தரையில் அமர்ந்திருந்த என்மீது தன்னுடைய ஒரு காலைத் தூக்கி உதைக்க வந்து, அவளை அப்படியே கீழே புரட்டிப் போட்டு அவள் கழுத்தில் காலை வைத்து மிதிக்கலாமா என்று யோசித்து, அதைச் செயல்படுத்தாமல் நான் ஒரு மூலையில் அமர்ந்திருந்த நேரம். கே.ப்ரதாப் அந்த நேரத்தில் பணம் வசூலிக்க ஆள் அனுப்பும் அளவுக்கு எப்போது கந்துவட்டிக்காரனாக மாறினார் என்று அந்த உதவியாளனிடம் கேட்டேன். அதை அவன் அப்படியே அட்சரம் பிசகாமல் கே.ப்ரதாபிடம் வந்து சொல்லியிருப்பான் போல. மறுநாள் கே.ப்ரதாபை சந்திக்க அவனுடைய அச்சகத்துக்குச் சென்ற என்னைப் பத்துப் பன்னிரண்டு பேர் முன்னிலையில் வெளியே போடா நாயே என்று கத்தினான் கே.ப்ரதாப். அப்போது அவன் கைகள் தடதடவென்று நடுங்கிக்கொண்டிருந்தன. இது நடந்து 25 ஆண்டுகள் ஆகியும் கே.ப்ரதாபைப் பார்க்கும்போதெல்லாம் அந்த வெளியே போடா நாயே என் காதில் ஒலிக்கிறது. என்ன செய்ய? போகட்டும். பழைய விஷயங்கள். ஆனால், சமீபத்தில் ஒருநாள் எவ்வளவு தூரம் நடக்கிறாய் பெருமாள் என்று கேட்டான் கே.ப்ரதாப். 6 கி.மீ என்றேன். அப்படியானால் உன் வீட்டிலிருந்து பூங்கா வரைக்குமே 1 கி.மீ இருக்குமே. ஆக 8 கி.மீ. பரவாயில்லையே என்றான் மிக ஆச்சரியத்துடன். மறுநாளிலிருந்து எனக்கு கடும் ஜுரம். 15 நாட்களுக்கு பூங்கா பக்கமே செல்ல முடியாமல் போயிற்று.

இந்தப் பிரச்சினையிலிருந்து தப்பிக்க ஒரே வழி ஜாகையை நகரின் கிழக்கே மாற்றுவதுதான் என்று தோன்றியது. ஆனால் எங்கே சென்றாலும் தப்பிக்க முடியாது என்றான் அலெக்ஸ். அவனுடைய ஜாகை பெஸண்ட் நகரில். காலையில் எட்வர்ட் எலியர்ட்ஸ் பீச்சில் வாக்கிங் போவது அவன் வழக்கம். ஒரு நாள் அங்கே ஒரு சிறு பத்திரிகைக்காரனைப் பார்த்திருக்கிறான் அலெக்ஸ். இயல்பாக சிரித்துக்கொண்டே முகமன் கூறிய அலெக்ஸைப் பார்த்து இருளடைந்திருக்கிறது சிறுபத்திரிகை அன்பனின் முகம். அவன் பெயர் அமுதன். அவன் ஒருமுறை அலெக்ஸை நபும்ஸகன் என்று திட்டி உத்தமத் தமிழ் எழுத்தாளன், நிர்-2 நடத்திய பத்திரிகையில் கதை ஒன்று எழுதியிருந்தான். அதாவது, ஆரோக்கியமான பாலியல் செயல்பாடு கொண்ட மனிதக் கூட்டம் அவ்வளவும் இரவில் ஆரோக்கியமான முறையில் தங்கள் பாலியல் வேட்கைகளைப் பூர்த்தி

செய்துகொண்டு மிகமிக ஆரோக்கியமான நிலையில் உறங்குவதாகவும் நபும்ஸகத்தினால் பாதிக்கப்பட்ட அலெக்ஸ் மட்டும் உறக்கம் வராமல் இரவில் கொட்டக் கொட்ட விழித்தபடி பாலியல் கவிதைகளை எழுதிக்கொண்டிருப்பதாகவும் மேற்படி கதையில் எழுதியிருந்தான் அமுதன்.

அலெக்ஸ் இதுபற்றி எதுவும் பொருட்படுத்தவில்லை. அது மட்டுமில்லாமல், அந்தக் கதையைத் தன் பத்திரிகையில் வெளியிட்ட உ.த.எ. நிர்-2ஐ கலைஞன் என்று வேறு ஒரு இடத்தில் குறிப்பிட்டிருந்தான். ஒரு சராசரி மனிதனின் சகல குணாம்சங்களையும் கொண்ட உ.த.எ. நிர்-2ஆ கலைஞன்? சரி. அதெல்லாம் அலெக்ஸின் பிரச்சினை. ஆனால் நபும்ஸகன் என்ற பழி என் மீதும் ஒருமுறை விழுந்திருந்தபடியால் நான் எனக்குள் சொல்லிக்கொண்டேன்: கண் பார்வையற்றவர்கள் தங்கள் அனுபவத்தை எழுதியதில்லை. காது கேளாதவர்கள் தங்கள் அனுபவத்தை எழுதியதில்லை. வாய் பேசாதோர் தங்கள் அனுபவத்தை எழுதியதில்லை. அப்படி எழுத அவர்களுக்கு எவ்வளவு உரிமை உண்டோ அதே உரிமை தன் ஆணுறுப்பு வேலை செய்யாத ஒரு நபும்ஸகனுக்கும் உண்டுதானே? அப்படியெனில் என் நபும்ஸக அனுபவங்களை எழுதினால் அதற்கு ஏன் என்னை நபும்ஸகன் என்று திட்ட வேண்டும்? இதெல்லாம் இருக்கட்டும். அன்றைய தினம் காலையில் எட்வர்ட் எலியர்ட்ஸ் பீச்சில் அமுதனைப் பார்த்தபோது அலெக்ஸுக்கு இது எதுவுமே ஞாபகத்தில் இல்லை. அதனால் அமுதன் ஏன் தன்னைப் பார்த்ததும் திருடனுக்குத் தேள் கொட்டிய விதமாகத் திருதிருவென முழிக்கிறான் என்றும் புரியவில்லை. முத்தாய்ப்பாக அமுதனிடம் 'வீட்டுக்கு வாருங்கள்' என்று வேறு சொல்லிவிட்டு வந்திருக்கிறான். அப்புறமாகத்தான் சாவகாசமாக அந்த ஆள்தானே இவர் என்று உறைத்திருக்கிறது. ஆக, சென்னையின் எந்தத் திசைக்குக் குடிபெயர்ந்தாலும் நமக்குப் பாதுகாப்பு இல்லை என்று முடிவாகியது.

40. ம்யூஸின் பெருத்த முலைகளில் - வலது முலையில் - ஒரு அழகிய மச்சம் உண்டு.

41. மலர்விழி, நரேன், நான் மூவரும் காரில் சென்றுகொண்டிருக்கிறோம். நரேன் காரோட்டிக்கொண்டிருக்க மலர் அவன் பக்கத்தில் அமர்ந்து அவன் உறுப்பைச் சுவைக்கிறாள். பிறகு பின் இருக்கைக்குத் தாவி வந்து என் உறுப்பைச் சுவைக்க எத்தனிக்கையில், 'இது என்ன, இவ்வளவு மச்சங்களுடனும், இவ்வளவு பெரிதாகவும் இருக்கிறது? இதை நான் எப்படிச் சுவைப்பேன்?' என மலைக்க, பின்னால் திரும்பிய நரேன், என் குறியைப் பார்த்து மலர்விழியிடம் 'ஒன்றும் பயப்படாதே; சில பேருக்கு இப்படித்தான் இருக்கும்' என்று தேறுதல் கூற, மனப்பிராந்தி அகன்றவளாய் மலர்விழி என் உறுப்பை எடுத்து வாயில் வைத்தாள். காரின் கண்ணாடிக்கு மறைப்பு இல்லாததால் கார் சிக்னலுக்காக நிற்கும்போது அசந்தர்ப்பவசமாக காருக்குள் எட்டிப்பார்த்த ஓரிருவர் திகைத்துப்போய் ஸ்தம்பிக்கும் வேளையில் பச்சை சிக்னல் விழுந்து கார் கிளம்பிவிடும். ஆண்டவா இவ்வளவு பெரிய சாமான் உள்ளே போனால் என் கதி என்ன ஆவது என்று அடிக்கடி கூறியவாறு பயம் காட்டினாள் மலர்விழி. அன்றைய தினம் வீடு திரும்ப ஆட்டோவுக்குப் காசு இல்லாதபோது மலர்விழிதான் 200ரூ கொடுத்து வழியனுப்பினாள். மலர்விழிதான்

எவ்வளவு நல்லவள் என்று நினைத்துக்கொண்டேன். மலர் என்னிடம் சொல்லியிருந்தாள். பெருமாள் உன்னை எனக்குப் பிடித்திருக்கிறது. உன்னோடு மட்டுமே நான் உறவுகொள்ள விரும்புகிறேன். நரேனுடன் பழகினால் எல்லோருடனும் படுக்க வேண்டியிருக்கிறது. அது எனக்குப் பிடிக்கவில்லை. நீயே என்னை வைத்துக் கொள். மாதம் 2000ரூ கொடு. போதும். அந்தச் சம்பவத்துக்குப் பிறகு அவள் என்னைத் தொடர்புகொண்ட போது நான் ஃபோனை எடுக்கவில்லை. பத்துப் பதினைந்து நாட்கள் தொடர்ந்து ஃபோன் செய்தாள். பிறகு அவளிடமிருந்து ஃபோன் இல்லை.

42. Ofcourse, life has no meaning. But neither does death - மிஷல் வெல்பெக்.

43. எனக்கு வாழ்க்கை பிடிக்கவில்லை. எனக்கு என்னையே பிடிக்கவில்லை. என்னிடம் ஏதோ தவறு இருக்கிறது. மூன்று வேளையும் சாப்பிடுகிறேன். தூங்குகிறேன். ஒரு கழுதையும் இதைத்தானே செய்கிறது? என்னிடம் ஏதோ ஒரு குறை இருக்கிறது. எனக்குத் தனியாக இருக்கப் பிடிக்கவில்லை. யாரையாவது பற்றிக்கொள்ள வேண்டும் போலிருக்கிறது. அப்பாதான். வேறு யார்? வேறு யாராக இருந்தாலும் படுக்கைக்குக் கூப்பிடுகிறார்கள். நான் செக்ஸை வெறுக்கிறேன். ஆண்கள் அத்தனை பேரையும் வெறுக்கிறேன் - அப்பாவைத் தவிர. அப்பா அப்பா அப்பா என்று ஞாபகம் அவரைச் சுற்றியே சுழன்றுகொண்டிருக்கிறது. நீ என்ன இன்னும் பச்சைக் குழந்தையா என்று கேட்கிறான் பெருமாள். ம்... ஆமாம். பச்சைக் குழந்தைதான். ஜுரம் வந்ததுபோல் உடம்பெல்லாம் கொதிக்கிறது. ஆனால் தொட்டுப்பார்த்தால் சில்லென்று இருக்கிறது. உள்ளேதான் சூடு. திரும்பத் திரும்ப குளிக்கிறேன். நாள் பூராவும் ஷவருக்கு அடியில் அமர்ந்திருந்தாலும் இந்தச் சூடு தணியாது போலிருக்கிறது. ஒரேயடியாகச் செத்துப்போய்விட வேண்டும். சாவு சாவு சாவு என்று கூக்குரலிடுகிறது மனப்பேய். தற்கொலை செய்துகொள்வதில்லையென்று அப்பாவிடம் வாக்குக் கொடுத்திருக்கிறேன். இல்லாவிட்டால் இந்த வேதனையிலிருந்து விடுதலை கிடைத்திருக்கும்.

-திவ்யா அனுப்பிய ஒரு மெயிலில்.

44. அஞ்சல் பொருள் கிடங்கில் மத்திய தர வர்க்கத்தைச் சேர்ந்த குமாஸ்தாக்கள் நீங்கலாக மற்ற ஊழியர்கள் அனைவரும் முத்துவைப் பார்க்கும்போது 'எப்போ முத்து கல்யாணம்?' என்று கேட்டு கிண்டலடிப்பார்கள். 'சீ அசிங்கமா பேசாதே' என்று பதிலுக்குத் திட்டுவார் முத்து.

45. ம்யூஸைப் பார்க்கும்போதெல்லாம் என் இச்சை தூண்டிவிடப்பட்டது போல் உணர்ந்தேன்.

46. He has a connoisseur's appreciation of female beauty in every age and category.

-எல்ஃப்ரீட் ஜெலினெக்

47. பாங்காக் நகரம். பட்பாங் ஒன்றையும் பட்பாங் இரண்டையும் இணைக்கும் ஒரு சிறிய தெருவில் உள்ளது Soi Crazy Horse என்ற செக்ஸ் க்ளப். அதன் மேடையில் நிர்வாணமாய் நிற்கும் ஒரு மாது தனது பெண்குறியால் கோக் போத்தலைத் திறக்கிறாள். திறப்பதற்கு முன்

பார்வையாளர்களிடம் கோக் போத்தல் சரியாக மூடப்பட்டிருக்கிறதா என்று பார்க்கச் சொல்லி சுற்றுக்கு விடப்படுகிறது. ஓப்பனர் அல்லது பற்களால் மட்டுமே திறக்கக்கூடிய அந்த போத்தலைப் பெண் குறியின் உதடுகளால் திறக்கும் அந்த மாது, போத்தலின் உள்ளேயிருக்கும் கோக் அவ்வளவையும் பெண்ணுறுப்பால் உறிஞ்சியெடுக்கிறாள். போத்தல் காலியாகிறது. பின்னர் ஒரு சில நிமிடங்களுக்குப் பிறகு தன் பெண்ணுறுப்பால் உறிஞ்சியெடுத்த அவ்வளவு கோக்கையும் அதே போத்தலில் நிரப்புகிறாள். தான் நிரப்பியது மூத்திரமல்ல, கோக்தான் என்பதை சோதித்துப் பார்க்கும்படி பார்வையாளர்களிடம் போத்தலைக் கொடுக்கிறாள்; பார்வையாளர்கள் யாரும் தயாராக இல்லை. நான் வாங்கிக் குடித்துப் பார்க்கிறேன். கலப்படமில்லாத கோக். சந்தேகமேயில்லை. மேடைக்கு வந்த மற்றொரு மாது தனது பெண்ணுறுப்பில் சிகரெட் பற்ற வைத்து அந்த சிகரெட் முழுவதையும் புகைக்கிறாள், வாயால் புகைப்பதுபோல.

48. லத்தீன் அமெரிக்காவில் இயற்கை வளங்களில் முதன்மையாக இருக்கும் பொலிவியா வறுமையிலும் முதலிடம் வகிக்கிறது. பெரும்பான்மையான மக்கள் பசியிலிருந்து தப்பிக்க கொக்கெய்ன் இலைகளைத் தின்று உயிர் வாழ்கிறார்கள். அறுபதுகளில் சே கெபாரா பொலிவியாவுக்குச் சென்றபோது இருந்த நிலைமைக்கும் இன்றைய நிலைமைக்கும் எந்த வித்தியாசமும் இல்லை. தங்கம், வெள்ளி, தகரச் சுரங்கங்கள் அனைத்தையும் அமெரிக்கா தனது ஆதிக்கத்தின் கீழ் வைத்துள்ளது. எதிர்ப்பவர்களை கம்யூனிஸ்ட் தீவிரவாதிகள் என்று கூறி சுட்டுக் கொன்றுவிடுகிறது ராணுவம். Gonzalo Sanchez de Lozadaவின் கொலைகார ஆட்சி பற்றி ஒரு அத்தியாயம். நான் பிறந்த ஊர் கொச்சபாம்பா என்று திரும்பத் திரும்பச் சொல்லியபடி ஒரு நாள் பகல் முழுவதும் ரஞ்சனுடன் ரோம் ஒயின்ஸில் மது அருந்தினேன்.

49. உலக வங்கி சி மேட்டர் முடிந்து 100 சி கையில் கிடைத்தால் ஆர்சி கோல்டிலிருந்து Chateau d'Yquem ஒய்னுக்கு மாறிவிட வேண்டும் என்று திட்டமிட்டிருந்தேன். ஷத்தோ தெக்கேம்தான் உலகிலேயே சிறந்த ஒய்ன். இரண்டாம் எலிஸபெத் அரசிக்கு விருப்பமான இது வாதுமைப்பழம் மற்றும் தேன் கலந்து தயாரிக்கப்படுகிறது.

50. கடந்த காலம்தான் என்னை இப்படிக் கிழித்துப் போட்டிருக்கிறது. கடந்த காலம் என்பதை என் நினைவிலிருந்து தூக்கியெறிய முடிந்தால்? -திவ்யா.

51. தற்கொலை செய்துகொண்டுவிடலாம். மாத்திரைகளும் வேண்டிய தைரியமும் கைவசம் உள்ளன. அப்பாவிடம் கொடுத்த வாக்கு மட்டும்தான் தடுக்கிறது. விடிகாலை மூன்று மணி. இன்னும் தூக்கம் வரவில்லை. குழந்தையாகவே இருந்திருக்கலாம். ம்... அதுவும் தவறு. நான் எப்போது குழந்தையாக இருந்திருக்கிறேன்? நினைவு தெரிந்த நாளிலிருந்து அம்மாவின் சமையல் துணையாக இருந்ததைத் தவிர குழந்தைப் பருவத்தில் நான் கண்டது என்ன? எனக்கு இந்த ஆண்களே வேண்டாம். Sex starved brutes... யெஸ். அது இந்தியாவாக இருக்கட்டும். அமெரிக்காவாக இருக்கட்டும். ஆண்களெல்லாம் ஒரே மாதிரிதான். Sex starved animals. பெண்களை வெறும் இறைச்சியாகத்தான் அவர்களால் பார்க்க முடிகிறது. இந்தப் பெண்கள் மட்டுமென்ன ஒழுங்கா? கசாப்புக்கடைக்காரனுக்காக வளர்க்கப்படும் ஆடுகள். மூளையற்ற ஜென்மங்கள். சமைப்பதையும்,

குழந்தை பெற்றுக்கொள்வதையும், கணவனை வீடு கட்டச் சொல்லி நச்சரிப்பதையும் தவிர இதுகளுக்கு வேறு என்ன தெரியும்? இதில் சந்தேகமிருப்பவர்கள் இங்குள்ள தமிழ்ச் சங்கத்திற்கு வந்து பார்த்தால் விளங்கும். மனிதர்கள் இல்லாத ஒரு இடத்துக்கு ஓடிவிட வேண்டும். அதற்கு மரணத்தைத் தவிர வேறு என்ன வழியிருக்கிறது? -திவ்யா

52. எதற்காக நான் இந்த வாழ்க்கையை வாழ வேண்டும்? எதற்காக இந்த உடம்பு? எதற்காகக் கூந்தல்? 17 வருடம் படித்த படிப்பெல்லாம் வீண். ஏதோ நான்தான் வேலைக்குப் போகப் பிரியமில்லாமல் வீட்டில் உட்கார்ந்திருப்பதுபோல் பேசுகிறார் மாமா. நேர்காணல் வரை போகிறது. ஆனால் வேலைக்கான உத்தரவு மட்டும் வந்ததில்லை. என்ன காரனம் என்று யாருக்குத் தெரியும்? இதில் இந்தக் கூந்தல் இல்லையென்று யார் அழுதது? இன்று ரோட்டில் நடந்து கொண்டிருந்தபோது ஒரு அமெரிக்கன் இந்தக் கூந்தலைப் பார்த்து பாராட்டிவிட்டுப் போனான். நம் ஊரில் இது சாத்தியமில்லை. பாராட்டுவதோடு விடுவான்களா? அடுத்த நிமிடமே பாக்கெட்டிலிருந்து ஒரு லவ் லெட்டரை எடுத்து நீட்டுவான்கள். ஏதாவது சொன்னால் முகத்தில் ஆஸிட் வீசுவான்கள். கொலையே நடந்திருக்கிறது. நான் எம்.எஸ்ஸி படித்துக்கொண்டிருந்தபோது என் தோழி ஒருத்தி ஒரு பையனோடு நெருக்கமாகப் பழகிக்கொண்டிருந்தாள். நட்பா காதலா என்றெல்லாம் எனக்குத் தெரியாது. நான் யார் விஷயத்திலும் தலையிடுவதில்லை. பிறகு கொஞ்ச நாட்களில் அவர்களுக்கிடையில் என்ன நடந்ததோ? அவள் அவனைத் தவிர்க்க ஆரம்பித்தாள். ஒரு நாள் வகுப்பு விட்டு நாங்கள் வெளியே வந்து கொண்டிருந்தபோது அந்தப் பையன் திடீரென்று அவள் மீது பாய்ந்து தன் கையில் வைத்திருந்த கத்தியால் குத்தித் தீர்த்துவிட்டான். தரையெங்கும் ஒரே ரத்த வெள்ளம். பிறகு போஸ்ட் மார்ட்டத்தில் தெரிந்தது - மொத்தம் 16 இடங்களில் குத்து விழுந்திருந்ததாம்.

இரண்டு பேருடைய வாழ்க்கையும் பாழ். அவளுக்கு உயிர் போயிற்று. அவனுக்கு வாழ்க்கை போயிற்று. இப்போது எந்த ஜெயிலில் இருக்கிறானோ! படித்த கைதிகளிடம் மற்ற படிக்காத கைதிகள் எப்படி நடந்துகொள்வார்கள்? கற்றவனுக்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு என்கிறார்களே? -திவ்யா.

53. தனிமை ஒரு நோய். அது எந்தக் கிருமியின் மூலமாகப் பரவுகிறது என்று தெரியவில்லை. மாமா, அத்தை, குழந்தைகள் எல்லாம் இருக்கிறார்கள். ஆனாலும் நான் தனியாயிருக்கிறேன். நோய் கிருமிகள் என் உடம்பு பூராவும் பரவிவிட்டன. பெருமாள் என்னை வந்து காப்பாற்று. -திவ்யா.

54. எனது தேகமும் உயிரும் நெருப்பாய் தகிக்கிறது. உனது யோனிப் புழையில் நுழைந்து நான் காணாமல் போய்விட வேண்டும்.

55. என் உடம்பைக் கொடுப்பதற்கு முன்னால், என் எண்ணங்களையும், என் மனத்தையும், என் கனவுகளையும் கொடுக்க வேண்டும். -சில்வியா ப்ளாத்

## 64. ‘அண்டம் பெறினும் அது வேண்டேன்’

Cambridge, Sept. 7: The first detailed analysis from a US mission that smashed a hole in a comet suggests these wanderers are fragile agglomerations of dust, laced with carbon molecules that some theorists say sowed the seeds for life on Earth.

Chemical analysis from the plume of dust and gas that spewed from the impact showed largely predicted volumes of silicartes, including organic (carbonbased) molecules. Chief scientist Michael A'Hearne said this discovery buttressed a contested theory about the origins of life on Earth. Under the "panspermia' idea, comets pounded the early earth billions of years ago, bringing the planet organic molecules that reacted with light and heat from the sun, eventually providing the rich chemical soup from which all life began.

Comets are considered to be the leftovers from the massive cloud of gas and dust that condensed and then coagulated to form the sun, the planets and other parts of the solar system about 4.6 billion years ago. Scientists say understanding the substance and structure of comets provides clues of how earth came into being.

Special Report by Richard Ingham : Deccan Chronicle

ஒரு நாள் ஹஜ்ரத் நிஜாமுதீன் ஔலியா கவ்வாலிப் பாடல்களைக் கேட்டுக்கொண்டிருந்தபோது ஒருவித பரவச நிலையில் தன் சீடர்களிடம் ‘என்ன இருந்தாலும் நாம் அந்த சலவைக்காரன் மகனுக்கு ஈடாக மாட்டோம்’ என்றார். சீடர்களுக்கு ஒன்றும் புரியாவிட்டாலும் ஹஜ்ரத்தின் அந்தப் பரவச நிலையில் குறுக்கிட விரும்பாமல் சும்மா இருந்துவிட்டனர். பிறகு சில தினங்கள் சென்று அமீர் குஸ்ரோ ஹஜ்ரத்திடம் அதன் அர்த்தத்தைக் கேட்டார். அதற்கு ஹஜ்ரத் நிஜாமுதீன் ஔலியா கூறினார்: அரசனின் சலவைக்காரனுக்கு ஒரு மகன் இருந்தான். அவன் அரசனின் மகளைப் பார்க்காமலேயே அவள் மீது காதல் கொண்டிருந்தான். அவளுடைய ஆடைகளை மட்டும் விசேஷ கவனத்துடன் துவைப்பான்; சலவை செய்வான். இளவரசியின் நினைவிலேயே பித்துப் பிடித்தவன் போலிருந்தான். மகனின் இந்த நிலை அவன் பெற்றோருக்கு கவலையைத் தந்தது. ‘நாமோ சாதாரண சலவைக்காரர்கள். அவளோ இளவரசி. மண்ணில் கிடக்கும் புழுதி எப்படி ஆகாசத்து நிலவை அடைய நினைக்கலாம்?’ என்றெல்லாம் அவனுக்கு புத்திமதி சொன்னார்கள். அவனோ இது எதையும் கேட்கும் மனோநிலையில் இல்லை. அதனால் ஒரு தந்திரம் செய்த அவன் தாய் ஒரு நாள் மிக வருத்தத்துடன் வீட்டுக்கு வந்தாள். ‘என்ன காரணம்?’ என்று கேட்டான் மகன். ‘இளவரசி செத்துவிட்டாள்’ என்றாள் தாய். ‘நிஜமாகவே செத்துவிட்டாளா?’ - திரும்பத் திரும்ப இதே கேள்வியை மூன்று முறை கேட்ட மகன் அலறியபடி சாய்ந்தான். அக்கணமே அவன் உயிர் பிரிந்தது. மறுநாள் அவன் தாய் இளவரசியின் துணிகளைத் துவைத்து சலவை செய்து அரண்மனைக்கு எடுத்துக்கொண்டு போனாள். ‘இன்றைக்கு துணிகளை வேறு யாரோ துவைத்தது போல் இருக்கிறது; இதுவரை துவைத்து வந்த துணியோடு காதலும் சேர்ந்து வந்தது. இன்று அப்படி இல்லை. யார் துவைத்தது?’ என்று கேட்கிறாள் இளவரசி. அதற்குப் பிறகும் உண்மையை மறைக்க முடியாமல் நடந்த விஷயத்தை இளவரசியிடம் கூறுகிறாள் தாய். ‘அவன் சமாதிக்கு என்னை அழைத்துச் செல்லுங்கள்’ என்கிறாள் இளவரசி. இளவரசி சமாதியை நெருங்கியதுமே அதில் ஒரு பிளவு ஏற்படுகிறது. ‘அவன் ஆன்மா இன்னமும் என்னை நினைத்துத்தான் வேதனைப்பட்டுக்

கொண்டிருக்கிறது' என்று சொன்ன இளவரசியின் உயிர் அந்தக் கணமே பிரிகிறது.

> TazkaraeGhousiya என்ற புத்தகத்திலிருந்து ஹஜ்ரத் நவாப் குத்ரி ஷா பாபா எழுதிய 'ஹஜ்ரத் நிஜாமுத்தீன் ஔலியா' புத்தகத்தில் மேற்கோள் காட்டப்பட்டது.

மீராவைத் தவிர எல்லா பெண்களுக்கும் KILL முத்திரை குத்தியாகிவிட்டது. மீராவின் கதை மட்டும் காரைக்கால் புனிதவதியின் கதையைப்போல் ஆகிவிடும் போலிருக்கிறது. அதனால்தான் அவள் கதையை எழுதத் தயங்குகிறேன். யதார்த்தத் தளத்தில் நிதானமாகச் சென்றுகொண்டிருந்த இந்த நாவல், திடீரென்று மாயாஜாலக் கதையாக முடிவதில் எனக்கு விருப்பமில்லை. ஆனாலும் இந்தக் கதையை என்னைவிட இதன் பாத்திரங்களும், மற்றும் இன்னோரன்ன விஷயங்களுமே எழுதி நகர்த்திக்கொண்டு செல்வதால் சமயங்களில் நான் ஒரு பிரதியெடுப்பவன் என்ற நிலைக்குத் தள்ளப்பட்டுவிடுகிறேன்.

என் தயக்கத்துக்கு மற்றொரு காரணம், தமிழ்நாட்டு அரசியல் தொண்டர்கள் தங்கள் தலைவனையும், தலைவியையும் தீர்க்கதரிசிகளோடும் கடவுளர்களோடும் ஒப்பிட்டு சுவரொட்டிகளும் கட்அவுட்டுகளும் வைத்துக்கொண்டிருக்கின்றனர். அதேபோல் தங்கள் மனைவிமார்களிடம் செருப்படிபடும் எழுத்தாளன்களும் அந்த மனைவிமார்களை அதே அரசியல் தொண்டன் பாணியில் போற்றிப் பாடி எழுதி வருகின்றனர். இதில் அடங்கியிருக்கும் தந்திரமெல்லாம் என் சிற்றறிவுக்கு எட்டாத விஷயம். சரி, என் கதையைப் பார்ப்போம்.

என் நிலை பரமதத்தனின் நிலையைப்போல் ஆகிவிட்டது. 1600 ஆண்டுகளுக்கு முன்னால் புனிதவதி சிவனிடமிருந்து மாம்பழத்தை வரவழைத்ததுபோல் சில காரியங்களைச் செய்துகொண்டிருக்கிறாள் மீரா. மின்சாரம் கண்டுபிடிக்கப்பட்ட பிறகு என்று நினைக்கிறேன் - உலக வாழ்வில் அமானுஷ்யத் தன்மை குறைந்துவிட்டது. மர்மங்களும், புதிர்களும் அமானுஷ்யமும் தட்டையான பகுத்தறிவு வாதத்தால் அடித்து விரட்டப்பட்டுவிட்டன. அற்புதங்களின் இடத்தை மேஜிக் பிடித்துக்கொண்டுவிட்டது. சித்துவேலை, பெண்களை வசியம் செய்யும் வெறும் வித்தையாகிவிட்டது. புரட்சி, காதல், கலை போன்ற வார்த்தைகள் அர்த்தமிழந்து கேலிக்கு ஆளாகி, மொழியானது தனது அழிவை நோக்கிச் சென்றுகொண்டிருப்பதைப்போல் அமானுஷ்யமும், ஆன்மீகமும் செத்தொழிந்துபோயின. அதனால் மாம்பழ அதிசயங்களை இங்கு நான் தணிக்கை செய்கிறேன். 'என் கணவருக்காக வனப்பு மிக்க இத்தசைப் பொதியைச் சுமந்து நின்றேன். இனி இது வேண்டேன். உன் மலர்தாள் போற்றும் பேய்வடிவு அடியேனுக்கு வேண்டும்' என்று வேண்டி புனிதவதி பேய் வடிவம் கொண்டது எப்படி? கைலாச மலையின் மேல் காலால் நடத்தல் தகாது என்றெண்ணித் தலையாலே நடந்து சென்றது எப்படி? 'நம்பன் திருமலை நான் மிதியேன் என்று தாளிரண்டும் உம்பர்மிசைத் தலையால் நடந்தேறியதாக' நம்பியாண்டார் நம்பி வேறு சொல்லியிருக்கிறாரே? சரி. ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்க வேண்டாம் என்று ஞானசம்பந்தர் சொல்லிவிட்டார். விட்டுவிடுகிறேன்.

சமீபத்தில் ஒரு நாள் ஸர்க்கிள் ஆ∴பீஸ் சென்றிருந்தபோது என் பழைய நண்பர் பீட்டரைச் சந்தித்தேன். அப்போது அவர் தன் மகளைப் பற்றிச் சொன்னார்.

அவள் ஒரு கல்லூரியில் விரிவுரையாளராகப் பணியாற்றினாள். திடீரென்று ஒரு நாள் தன் வேலையை விட்டுவிட்டு வீட்டுக்கு வந்துவிட்டாள். எதுவும் சாப்பிடுவதில்லை. வெறும் நீராகாரம் பாலாகாரம் மட்டும்தான். எப்போதும் கர்த்தரை ஸ்தோத்திரம் செய்தபடி அமர்ந்துகொண்டிருக்கிறாள். ஏழைகளின் வசிப்பிடங்களுக்குச் சென்று அவர்களுக்கு வேண்டிய உதவியைச் செய்கிறாள். தனவந்தர்கள் அவளை நாடி வந்தால் ஏழைகளை நோக்கிக் கை காண்பிக்கிறாள். இன்ன பிற.

அவளைச் சந்தித்தேன். அவள் என்னிடம் எதுவும் பேசவில்லை. விவிலியத்தின் கீழ்க்கண்ட வசனங்களைக் காண்பித்தாள்.

> 25) ஆகையால் என்னத்தை உண்போம், என்னத்தைக் குடிப்போம் என்று உங்கள் ஜீவனுக்காகவும்; என்னத்தை உடுப்போம் என்று உங்கள் சரீரத்துக்காகவும் கவலைப்படாதிருங்கள் என்று, உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆகாரத்தைப் பார்க்கிலும் ஜீவனும், உடையைப் பார்க்கிலும் சரீரமும் விசேஷித்தவைகள் அல்லவா?
>
> 26) ஆகாயத்து பட்சிகளை கவனித்துப் பாருங்கள்: அவைகள் விதைக்கிறதுமில்லை, அறுக்கிறதுமில்லை, களஞ்சியங்களில் சேர்த்து வைக்கிறதுமில்லை; அவைகளையும் உங்கள் பரமபிதா பிழைப்பூட்டுகிறார்; அவைகளைப் பார்க்கிலும் நீங்கள் விசேஷித்தவர்களல்லவா?
>
> 27) கவலைப்படுகிறதினாலே உங்களில் எவன் தன் சரீர அளவோடு ஒரு முழத்தைக் கூட்டுவான்?
>
> 28) உடைக்காகவும் நீங்கள் கவலைப்படுகிறதென்ன? காட்டுப் புஷ்பங்கள் எப்படி வளருகிறதென்று கவனித்துப் பாருங்கள்; அவைகள் உழைக்கிறதுமில்லை, நூற்கிறதுமில்லை.
>
> 29) என்றாலும் சாலொமோன் முதலாய் தன் சர்வ மகிமையிலும் அவைகளில் ஒன்றைப் போலாகிலும் உடுத்தியிருந்ததில்லை என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.
>
> 30) ஆகையால் என்னத்தை உண்போம், என்னத்தைக் குடிப்போம், என்னத்தை உடுப்போம் என்று கவலைப்படாதிருங்கள்.
>
> (மத்தேயு எழுதின சுவிசேஷம், அதிகாரம் : 6)

படித்துவிட்டு அவளை நிமிர்ந்து பார்த்த என் கண்களை ஊடுருவிப் பார்த்தாள். என் ஞாபகமும், மொழியும், பிரக்ஞையும் என்னை விட்டு அகன்றன...

***

# பின்குறிப்புகள்

1. Two freshly slaughtered lambs, hanging by their feet, were still slowly leaking blood; on the chopping block were some brains and large bones whose pearly white protuberances had an aggressive sort of nudity.

2. கதையின் நம்பகத்தன்மை கருதி நரேனிடம் ஃபோன் போட்டுத் தெரிந்துகொண்ட தகவல் இது. அவன்தான் இது போன்ற விஷயங்களில் எக்ஸ்பெர்ட்.

3. I must go unsung, unhonoured and unwept: யு.ஜி.கிருஷ்ணமூர்த்தி.

4. ஹர்பன்ஸ் கௌர்.

5. ஹர்பஜன் கௌர்.

6. சுரீந்தர் கௌர். (1984 சீக்கியர் படுகொலையின்போது பாதிக்கப்பட்ட பெண்களின் பத்திரிகைப் பேட்டியிலிருந்து)

7. Bataille speaks about man's condition, not his nature: Jean Paul Sartre

8. Paulo Coelho.

9. 'I cannot write with a crystal brush. For me, writing is a protest, not a parade.'

10. முகமத் ஷுக்ரியின் முதல் நாவல். பால் பௌல்ஸால் For Bread Alone என்ற தலைப்பில் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டது.

11. யாசின் அத்னானுக்கு முகம்மது ஷுக்ரி அளித்த பேட்டியில் Al Jadid, Vol.9, No.44.

1. Body of a woman, white hills, white thights
you look like a world, lying in surrender.
My rough peasant's body digs in you
and makes the son leap from the depth of the earth.
from Twenty Love Poems and A Song of Despair: Pablo Neruda.
Translated by W.S.Mervi

1. இபேரியாவின் பெண்களே
வெளிச்சத்தைத் தனது கர்ப்பத்தில் தாங்கியிருக்கும்
அந்தத் தொடுவானத்தை நோக்கி
பற்றியெறியும் பாதைகளில்
நிலத்தில் கால்கள் பதிய
நீல வானத்துக்கு நேராக
முஷ்டிகளை உயர்த்தியபடி
நடந்து செல்லுங்கள்.
வாழ்வின் மீதான நம்பிக்கையில்

நாம் நமது மரபை மறுதலிக்கிறோம்
நமது வலிகளிலிருந்து புதியதோர் உலகை
சிருஷ்டிக்கிறோம்.
கடந்த காலம் காணாமல் போகட்டும்!
நமக்கெதற்கு நேற்றைப் பற்றிய கவலை?
பெண் என்ற வார்த்தையை நாம்
புதிதாய் எழுதுவோம்.
இந்தப் பூவுலகின் பெண்களே
வெளிச்சத்தைத் தனது கர்ப்பத்தில் தாங்கியிருக்கும்
தொடுவானத்தை நோக்கி
பற்றியெரியும் பாதைகளில்
முஷ்டிகளை உயர்த்தியபடி
முன்னேறுங்கள்,
முன்னேறுங்கள்.

2. பாப்லோ நெரூதாவின் Alberto Rojas Jimenes Comes Flying என்ற கவிதையிலிருந்து ஒரு வரி. ஆல்பெர்த்தோ ரோஹாஸ், நெரூதாவின் பள்ளிப் பருவத்திலிருந்து அவரது தோழர். கவிஞர். நீரில் மூழ்கி இறந்த அந்த நண்பனின் நினைவாக நெரூதா எழுதிய கவிதை இது.

1. சிறு வயதில் என்னோடு சேர்ந்து மலம் அள்ளிய தொம்பச்சேரி வரதனை சமீபத்தில் ஒரு மருத்துவமனையில் சந்திக்க நேர்ந்தது. ஆள் அடையாளமே தெரியாமல் கிழவனாகியிருந்தான். மருத்துவமனையில் துப்புரவுப் பணியாளனாக இருக்கிறானாம். 'எப்படி வேலை?' என்று கேட்டேன். 'நம்மூரில் இருந்ததைவிட மோசம்' என்றான்.
எனிமா கொடுக்கப்பட்ட நோயாளிகளின் மலத்தைப் பரிசோதிக்க வேண்டும். நோயாளிகள் மலங்கழித்த பிறகு தண்ணீர் விடக்கூடாது. வரதனின் பரிசோதனைக்குப் பிறகே அது நடக்கும். இப்படி அவன் ஒரு நாளில் 15இலிருந்து 20 நோயாளிகளின் மலத்தைப் பரிசோதிக்க வேண்டும்.

2. 'மக்கள் யாக்கை உணவின் பிண்டம்
இப்பெரு மந்திரம் இரும்பசி யறுக்கும்.'
-மணிமேகலை, மந்திரம் கொடுத்த காதை, 90-91.

1. உலகம்

2. எங்கும் வியாபகனாள்

